ITHIHASA MANJARI SERIES.

ஸ்ரீ

ஸ்ரீராமமயம்.

ஸ்ரீமத்

# கம்பராமாயண வசனம்.

பாலகாண்டம், அயோத்தியாகாண்டம்,
ஆரணியகாண்டம், கிட்கிந்தாகாண்டம்,
சுந்தரகாண்டம்.






இவை

ப. மு. செல்வராஜமுதலியாரவர்களால்

தமது

அமரிக்கன் அச்சுக்கூடத்தில்

பதிப்பித்துப்பிரசுரிக்கப்பட்டது.

சென்னை.

1891.

Copyright Reserved.

18-1

# ஸ்ரீமத்கம்பராமாயணவசனம்

## முதல் ஐந்துகாண்டங்களின்

# அட்டவணை.

ஸ்ரீ ராமஜயம்.

# ஸ்ரீமத்
# கம்ப ராமாயண வசனம்.

## காப்புகள்.

### கலிவிருத்தம்.

தருகை நீண்ட தயரதன் குன்றரும்
இருகை வேழத் திராகவன் றன்கதை
திருகை வேலைத் தமிழிசைச் செப்பிடக்
குருகை நாதன் குரைகழல் காப்பதே.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அஞ்சிலே யொன்று பெற்ரு னஞ்சிலே யொன்றைத் தாவி
அஞ்சிலே யொன்று ருக வாரியர்க் காக வேகி
அஞ்சிலே யொன்று பெற்ற வணங்கைக்கண் டயலா ரூரில்
அஞ்சிலே யொன்றை வைத்தா னவனெம்மை யளித்துக் காப்பான்.

பொத்தகம் படிக மாலை குண்டிகை பொருள்சேர் ஞான
வித்தகந் தரித்த செங்கை விமலையை யமலை தன்னை
மொய்த்தகொந் தளக பார முகிண்முலைத் தவள மேனி
மைத்தகு கருங்கட் செவ்வா யணங்கினை வணங்கல் செய்வாம்.

## பயன்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நாடிய பொருள்கை கூடும் ஞானமும் புகழு முண்டாம்
வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையி ராமன் தோள்வலி கூறு வோர்க்கே,

### கலிவிருத்தம்.

நன்மையுஞ் செல்வமு நாளு நல்குமே
தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே
சென்மமு மரணமு மின்றித் தீருமே
இம்மையே ராமவென் றிரண்டெ ழுத்தினுல்.

வடகலை தென்கலை வடுகு கன்னடம்
இடமுள பாடையா தொன்றி லாயினுந்
திடமுள ரகுகுலத் திராமன் றன்கதை
அடைவுடன் கேட்பவ ரமர ராவரோ,

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம.

வென்றிசே ரிலங்கை யானை வென்றமால் வீர மோத
நின்றரா மாய ணத்தி னிகழ்ந்திடு கதைக டம்மில்
ஒன்றினைப் படித்தோர் தாமு முரைத்திடக் கேட்டோர் தாமும்
நன்றிது வென்றோர் தாமு நரகம தெய்தி டாரே.

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

இராகவன் கதையி லொருகவி தன்னி லேகபா தத்தினை யுரைப்போர்
பாரவரு மலரோ னுலகினி லவனும் பன்முறை வழுத்தவீற் றிருந்து
புராதன மறையு மண்டர்பொற் பதமும் பொன்றுநா ளதனினும் பொன்று
அராவணை யமல னுலகெனும் பரம பதத்தினை யணுகுவ ரன்றே.

## கலிவிருத்தம்.

இறுவ ரம்பி னிராமவென் றோரும்பர்
நிறுவ ரென்பது நிச்சய மாதலான்
மறுவின் மாக்கதை கேட்பவர் வைகுந்தம்
பெறுவ ரென்பது பேசவும் வேண்டுமோ.

அன்ன தான மகிலநற் றானங்கள்
கன்னி தானங் கபிலையின் றானமே
சொன்ன தானப் பலமெனச் சொல்லுவர்
மன்னி ராம கதைமற வார்க்கரோ.

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஆதியரி யோநமந ராயணர்தி ருக்கதை யறிந்தனுதி னம்ப ரவுவோர்
நீதியனு போகநெறி நின்றுநெடு நாளதி னிறந்துசெக தண்ட முழுதுக்
காதிபர்க ளாயரசு செய்துளநி னைத்ததுகி டைத்தருள் பொறுத்து முடிவிற்
சோதிவடி வாயழிவின் முத்திபெறு வாரெனவு ரைத்தசுரு தித்தொகைகளே.

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

இனையநற் காதை முற்று மெழுதினோர் வியந்தோர் கற்றோர்
அனையது தன்னைச் சொல்வோர்க் கரும்பொருள் கொடுத்துக் கேட்போர்
கனைகடற் புடவி மீதே காவலர்க் கரசாய் வாழ்ந்து
வினையம தறுத்து மேலாம் விண்ணவன் பதத்திற் சேர்வார்.

## தெய்வவணக்கம்.

## கலிவிருத்தம்.

உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா
அலகி லாவிளை யட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசர ணாங்களே.

சிற்கு ணத்தர் தெரிவரு நன்னிலை
எற்கு ணர்த்தரி தெண்ணிய மூன்றனுண்
முற்கு ணத்தவ ரேமுத லோரவர்
நற்கு ணக்கட லாடுத னன்றரோ.

ஆதி யந்த மரியென யாவையும்
ஓதி னாரல கில்லன வுள்ளன
வேத மென்பன மெய்ந்நெறி நன்மையன்
பாத மல்லது பற்றிலர் பற்றிலார்.

---

ஸ்ரீராமஜயம்.

முதலாவது,

# பாலகாண்டம்.

——:0:——

## ஆற்றுப்படலம்.

திருவயோத்தியில் தசரத சக்கரவர்த்தியானவர் அரசாட்சி செய்யுங்காலத்தில், மேகங்கள் திருமேனிமுழுதும் விபூதியை உத்தூளனஞ் செய்திருக்கின்ற உருத்திரமூர்த்திபோல வெண்ணிறமாய் ஆகாயத்திற் பரவிச்சென்று, கடலினீரைக்குடித்து, திருமகள் கொழுநனாகிய திருமால்போலக் கருநிறமாய் மீண்டன. அப்படி மீண்ட மேகங்கள் ஆகாயத்திற்பரவி யெழுந்தது எப்படியிருந்ததெனின், சிவபிரான் மாமனாகிய மலையரையன் சூரியகிரணத்தால் வெதுப்பப்பட்டு வருந்துகின்றனன் ஆதலால் அவ்வெப்பத்தை நம்மிடத்துள்ள நீரைக்கொண்டு தணிப்போமென்றுநினைத்து சமுத்திரராஜன் எழுந்ததையொத்திருந்தது. மேலும், அம்மலையின்மேல் மழைத்தாரைகளைப் பொழிந்தது எப்படி யிருந்ததெனின், தியாகிகள் தம்மிடத்துள்ள பொருள்களை யெல்லாம் செல்வநிலையாமையை நினைத்து நாளைக்கு வேண்டுமென்று வைத்துக் கொள்ளாமல் எப்படி வரையாது வழங்குவார்களோ அப்படியே இருந்தது. அம்மழைத்தாரையினாலுண்டாகிய வெள்ளமானது பெருமையைமேற்கொண்டு தர்மத்தை நோக்கி மநுநீதியின்படி செங்கோல் செலுத்திய அரசனுடைய கீர்த்தியைப்போலவும், ஞானத்தையுடைய பெரியோர்கள் கையில்வழங்கியதானப்பயனைப்போலவும் பெருகிற்று. அவ்வெள்ளமானது அம்மலையிலுள்ள எல்லாப்பொருள்களையும் கிரகித்துக்கொண்டு வருவதனால் விலைமாதனைப் போலவும், முத்து, பொன், இரத்தினங்கள், மயிலிறகு, யானைக்கொம்பு, அகிற்கட்டை, சந்தனக்கட்டை முதலிய பலவகையான பொருள்களையும், ஏந்திக்கொண்டு வருவதனால் வியாபாரிகளைப் போலவும், பலவகையான மலர்களையும், மகரந்தத்தையும், தேனையும், யானைமதத்தையும், பொற்பொடியையும், பொருந்தி வருவதனால் ஆகாயத்தில் காணப்படுகின்ற இந்திர வில்லைப்போலவும், மலைகளையும், மரங்களையும் பறித்துக்கொண்டும், இலைமுதலாகிய பொருள்களை ஏந்திக்கொண்டும், வருவதனால் முற்காலத்திற் கடலில் திருவணை கட்டுதற்குப்புறப்பட்ட மனோதைரியமுள்ள வானர சமூகத்தைப்போலவும், ஈக்களும், வண்டுகளும், மொய்க்கும்படி எல்லைகடந்து உற்சாகம் மிகுந்து தெளிவில்லாமல் கலங்கி, தேங்கிவருவதனால் கட்குடியர்களைப் போலவும், யானையையும், பல மனிதர்களையும், கொடிகளையும் இழுத்துக்கொண்டு பேரொலியுடன் வந்து ஊன்றிச் செல்வதனால் சமுத்திரராஜன்மேல் சண்டை செய்யப் போகின்றது போலவும் இருந்தது.

இவ்விதமாகப் பெருகியோடுகின்ற வெள்ளமானது சூரியகுலத்திற்பிறந்த அளவற்ற அரசர்களுடைய நல்லொழுக்கத்தின்படி சகல சீவராசிகளுக்கும்

தாயகமாயிருக்கின்ற சாயுநதியில் அதிகமான கோஷத்தோடுவந்து பிரவேசித்து குறிஞ்சி நிலப்பெண்கள் இடித்த குங்குமம், ஏலம், சந்தனம், கஸ்தூரிமுதலிய வாசனைப் பொடிகளின் பரிமளத்தோடு வேடர்கள் வாசம்பண்ணும் பாலைநில த்திற்பாவி, அந்நிலத்துப்பெண்கள் அஞ்சி வயிற்றி லறைந்துகொண்டு ஓடும் படி அவ்வேடர்களுடைய வில், அம்பு முதலியவற்றை வாரிக்கொண்டு வரு கின்ற தன்மையினால் குறுநில மன்னரைப்போலவும், ஆயர்வாசம்பண்ணுகின்ற முல்லைநிலத்திற்பாவி அவ்விடத்திலிருக்கின்ற பால், தயிர், வெண்ணெய், நெய், உறிமுதலியவற்றையும், இடைப்பெண்களுடைய ஆடைகளையும் வாரிக்கொ ண்டு வருதலால் காளியமர்த்தனஞ்செய்த கண்ணபிரானைப்போலவும், கதவு களை முட்டி மள்ளர்கள் கைதூக்கி ஆரவாரிக்கும்படிபோய் முன்னணி ஓடை கள் பொங்கவும், அவற்றிலுள்ள பூந்தேனை உண்ணவந்த வண்டுகள் குடைய வும், நெருங்கிய மணிகள் சிந்தவும், உந்தித்தறிகள் முறியவும், தடக்கையைச் சாய்த்து வருவதனால், மதமழையையுடைய யானையைப் போலவும் போய், மருதநிலத்தைச் சேர்ந்தது. மேலும், அவ்வெள்ளமானது முல்லைநிலத்தைக் குறிஞ்சிநிலமாக்கியும், மருதநிலத்தை முல்லைநிலமாக்கியும், நெய்தல் நிலத் தை மருதநிலமாக்கியும், அளவற்ற பொருள்களை அந்தந்த நிலங்களில் இராமல் கலக்கும்படி செய்தும் செல்லுகின்ற தன்மையினால் உயிர்களைத் தேவகதி, மக்கட்கதி, நாககதி, விலங்கின்கதி என்கின்ற நாற்கதிகளிலும் செலுத்துகின்ற வினைபோலவும் இருந்தது. முதலில் ஒன்றாயிருந்து பிறகு அநேகமான வாய்க் கால்கள் முதலியவாகப் பிரிந்து செல்வதனால் ஒருவனது வமிசம்போலவும் இருந்தது. அன்றியும், முதலில் ஒன்றாயிருந்து பிறகு துறைகள்தோறும் பர விச்செல்வதனால் அளவற்ற வேதங்களாலும் சொல்லுதற்கரிய பரம்பொருள் அநேகமான சமயத்துறைகளில் வியாபித்து விளங்குவதுபோலவும் இருந் தது. இவ்வாறாகப்பெருகி, சோலைகள்தோறும், சண்பகவனங்கள்தோறும், பூந் தடாகங்கள்தோறும், அழகாகிய மணற்றடங்கள் தோறும், கமுகஞ்சோலைகள் தோறும், வயல்கள்தோறும், சரீரங்களெல்லாவற்றிலும் வியாபித்திருக்கின்ற உயிரைப்போல வியாபித்து விளங்கிற்று.

இரண்டாவது.

## நாட்டுப்படலம்.

---

இவ்வண்ணமாக வெள்ளத்தினால் நிறைவை யடைந்த சரயுநதியினால் சூழப்பட்ட கோசலதேசத்திலுள்ள மள்ளர்கள் பலவாறாக அந்நதியின் நீரைக் கட்டிக்கொண்டு வயல்கள் தோறும் உழுது விதையை விதைத்து, நாறு நட்டு, அது பயன்படுதற்கு முன்னே, மஞ்சள் இஞ்சி முதலிய ரசகந்தாயப்பயிர்களைச் செய்துகொண்டு, தங்கள் தங்கள் வீடுகளில் சேர்த்துக்கொள்வ தல்லாமல், நதியின் மேற்பலனையும் போர்கட்டி, வண்டிகளில் ஏற்றிக்கொண்டுபோய்க் களஞ்சியங்களில் சேகரப்படுத்தி வைத்துக்கொண்டு, தேவாலயம், பிராமணர், அதிதிகள், வித்வான்கள், யாசகர்கள் முதலிய பலருக்கும் உபயோகித்துக்

கொண்டும், விருந்தினர் முதலியோரை உபசரித்துக்கொண்டும், தங்கள் தங்களுடைய பந்துவர்க்கங்களுடன் வாழ்ந்து கொண்டிருப்பார்கள். ஆதலால் அந்நாட்டில் வறுமை, பகைவர், பொய்யுரை இவைகளுக் கிடமேயில்லை. அந்நாட்டில் மாதர்களுடைய கற்பினலும் மறையோர்களுடைய வைதிகமார்க்க ஒழுக்கத்தினுலும், காலமழையும் அதனுல் சகலமான தானதருமமும் தேவதாராதன விசேஷ உற்சவாதிகளும் குறைவில்லாமல் நடந்துவந்தன,

மூன்ருவது,

## நகரப்படலம்.

இப்படிப்பட்ட சிறப்போடுகூடிய கோசலநாட்டிலுள்ள அயோத்தியாநகரமானது, நிலமகளுக்குத் திருமுக மண்டலம் போலவும், அத் திருமுகத்தினிலிட்ட திலகம்போலவும், அத்திருமுகத்துக்கு இன்றியமையாத கண்போலவும், அவளது மங்கலசூத்திரம்போலவும், மார்பில் அசையாநின்ற முத்துமாலைபோலவும், இதயஸ்தானம் போலவும், திருமகள் வாசம்பண்ணுகின்ற பொற்ருமரை மலர்போலவும், இறைவனுடைய கௌஸ்துவாபரணத்தை வைத்திருக்கின்றபொற்பெட்டிபோலவும், எல்லாவுலகங்களுக்கும்மேலாகியவைகுண்டலோகம்போலவும், சர்வ சங்காரகாலத்தில் ஜீவராசிகளெல்லாம் வந்து சேர்ந்திருப்பதற்குப் போதுமான ஒருவீடுபோலவும் பிரகாசித்துக் கொண்டிருந்தது.

இந்நகரமானதுமிகவுமுயர்ந்து விஸ்தீரணத்தையுங்கொண்டிருக்கின்றகோட்டையும், அக்கோட்டையின் மதிலைச்சூழ்ந்து பாதாளம்வரைக்கும் ஆழ்ந்திருக்கின்ற அகழும், அவ்வகழுக்குப்புறத்தில் குறுங்காடும், அதற்குப் புறத்தில் மலைகளும் ஆகிய மதிலரண், நீரரண்,காட்டரண், மலையரண் என்கிற நால்வகையரண்களையுமுடையதும், அநேகமாடமாளிகை கூடகோபுரங்களுடன் கோடிசூரியப் பிரகாசமாய்விளங்கி, எல்லாப்பொருள்களும் நிறைந்திருக்குந் தன்மையால் ஊழிகாலத்தில் திருமால்வயிற்றைப்போலப் பிரகாசிக்கின்ற கடைவீதிகளும், சகலவேதாகம புராணஇதிஹாஸஸ்மிருதிகளில் நிபுணரும், பிரமஞானமுள்ளவருமான பிராமணர்வீதிகளும்,தேகபலம்,மனோபலம் அவற்ருற் செலுத்தப்படுகின்ற வீரம்,இவற்றிற்சிறந்த அரசர்வீதிகளும், குபேரனுக்குச் சமானமானவைசியர்வீதிகளும்,உழவுமுதலிய தொழில்களில் வல்லவரான சூத்திரர்வீதிகளும், வித்யாசாலை,யானைச்சாலை, குதிரைச்சாலை,நாடகசாலை முதலானவைகளால்நிறைக்கப்பெற்று,நான்குவேதம்போன்றநான்குவாயில்களும் உள்ளதாய், தேவேந்திரனுடைய பட்டணமாகிய அமராவதியும், குபேரனுடைய பட்டணமாகிய அளகாபுரியும் இந்நகரத்தின் அழகுக்குத் தோற்றுப்போயின வென்ருல் வேறெந்தப் பட்டணத்தை இதற்கு நிகராகச் சொல்லலாம். மாளிகைதோறும் பலநிறமான கொடிகளும், பூரணகும்பங்களும், மகரதோரணங்களும், நிறைந்திருக்கும். வீடுகள்தோறும் மங்கலகீதங்களும், பேரிகைமுதலான வாத்தியவிசேஷங்களும் நிறைந்திருக்கும்.பரம்பொருளாகிய அருட்பெருங்கடல் திருமகளுடனே கூடி அநேககாலம் இராச்சியபண்ணின தலம் இதுவானுல் இத

ற்கு வேறொரு மகிமையும் கற்பித்துச் சொல்லவேண்டுமோ? சுவர்க்க மத்திய
பாதாளங்களாகிய மூன்றுலோகத்திலும் இந்நகரத்திற்குச் சமானமான நகர
மே இல்லை. இந்த நகரத்துக்கரசன் அரசர்க்கரசனாகிய தசரதசக்கரவர்த்தி.
அவன் தன் செங்கோலினது பெருமிதம் ஏழுலோகங்களிலும் செல்லும்
படியான கீர்த்தியையுடையவன். இக்காவியத்துக்குத் தலைவனாகிய சிராமபிரா
னைப் புத்திரனாகப் பெற்ற பெரும்பாக்கிய முள்ளவன். கல்வி, அறிவு, ஒழு
க்கம், பொறுமை, பலம், சௌரியம், உதாரத்துவம், கிருபை, தருமம் இவை
முதலிய உத்தமகுணங்கள் எல்லாவற்றையு முடையவன். யாகாதி கிரியைக
ளெல்லாம் செய்து முடித்தவன். உலகத்திலுள்ள உயிர்களுக்கெல்லாம் அன்
பில் தாயைப்போலவும், நல்வழியிற் செலுத்துதலில் தந்தையைப்போலவும்,
பயன்கொடுப்பதில் தவத்தைப்போலவும், நற்கதியிற் செலுத்துதலில் புத்திர
னைப்போலவும், நுட்பமாகிய கேள்விகளைக் கேட்குங்கால் அவரவர்களுடைய
அறிவுபோலவும் இருந்தான். தரித்திரர்கள் என்கின்ற சமுத்திரத்தை திரவியம்
கொடுத்தே கடந்தான். அளவில்லாத நுட்பமாகிய நூல்களை ஆராய்ந்த அறி
வென்னும் கடலைக்கடைந்தான். பகைவராகிய சகாரத்தை வாளினால் கோபி
த்தே கடந்தான். சம்பத்தென்கின்ற சமுத்திரத்தை அநுபவித்தே கடந்தான்.
வெள்ளமும், பறவைகளும், மிருகங்களும், வேசையருடைய மனமும் ஒரு
வழியிற் செல்லும்படி சக்கரம் செலுத்துவோன். சீவராசிகளுக் கெல்லாம்
தான் ஒரு சரீரம்போல இருந்து பாதுகாத்துக்கொண்டு நிகர்வசிரோமணியாய்
இருப்பவன். வேறுதேசத்தரசர்கள் திறைகொண்டுவந்து காணும்போது அவ
ரவர்கள் சாஷ்டாங்கமாகத் தண்டனிட அவர்களுடைய கிரீடசிகரங்கள் படுத
லால் மாசற்று விளங்குகின்ற விரக்கழலை அணிந்திருக்கின்ற பாததாமரைகளை
யுடைய மகாநுபாவன். இவன்பேர் என்னவென்றால் தசரதசக்கரவர்த்தி என்
னுசொல்லுவார்கள்.

இத்தசரதசக்கரவர்த்தியானவன் ஒருநாள் தன்னுடைய குலகுருவான
வசிஷ்டமுனிவனைச்சாஷ்டாங்கமாகச்சேவித்து, சுவாமீ, அடியேன் ஒருவிண்ண
ப்பஞ்செய்கின்றேன், அதைக்கேட்டருளவேண்டுமென்று பயபக்தியுடனேசொ
ல்லுகின்றான். சுவாமீ, என்னுடைய குலத்துக்குத் தாயும் தந்தையும் தவமும்
தெய்வமும் சகலமும் நீரே. எங்களுடைய பெரியோர்கள் சூரியனுடைய பிர
காசத்துக்குச்சமானமான கீர்த்தியோடு இராச்சியபரிபாலநம் பண்ணிக்கொண்டு
வந்தார்கள். அடியேனும்உம்முடைய கிருபையினால்இதுவரைக்கும் அப்படியே
அறுபதினாயிரவருஷம் இராச்சியபரிபாலநம்செய்து கொண்டுவந்தேன்! மஹாரு
ஷிகளும், பிராமணர்களும் துன்பமில்லாமல் சுகமாய்த்தங்களுடைய தவத்தை
யும், அக்கினிகாரிய முதலானவைகளையும் வழுவாமல் நடத்திவந்தார்கள். எனக்
குப் பிறகு இவர்கள் துன்பப்படுவார்களே யென்கின்ற கிலேசம் என்மனத்தில்
மிகவும் உண்டாயிருக்கின்றதென்று சொல்ல; பிரமபுத்திரனாகிய வசிஷ்டபக
வான் தனது இதயத்தில் முன்னே நடந்த ஒரு தேவரகசியத்தை நினைத்
தார். அது என்னவென்றால், முற்காலத்தில் தேவேந்திரன் முதலான தேவர்
கள் இராக்கதராலே மிக்கதுன்பமடைந்து, அந்தத்துன்பம் பொறுக்கமாட்டா

மல்காளகண்டனை பரமசிவனிடத்தில் முறையிட்டுக்கொண்டார்கள். அதைப் பரமசிவன்கேட்டு, அவ்விராக்கதனைச் சங்கரிப்பதில்லை யென்று சொல்லி, தம்மிடத்திற்கு வந்த தேவர்களை அழைத்துக்கொண்டு, பிரமதேவனிடத்திற்குப்போய், தண்டம் ஸமர்ப்பித்து, இராக்கதரால் தேவர்களுக்கு நேரிட்டிருக்கின்ற துன்பத்தைச்சொல்ல, அவரும் இவருக்கு உபசாரம் செய்து, தானுங் கூடப்புறப்பட்டு,மேருபர்வதத்தின் சிகரத்திலிருக்கின்ற நவரத்ந கசித மான சுவர்ணமண்டபத்திற்போய்ச் சேர்ந்த மாத்திரத்தில், தேவேந்திரன், தன்னை முன்னொருகாலத்தில் இந்திரசித்து நாகபாசத்தால் கட்டி, இலங்கைக்குக் கொண்டுபோனபோது, பிரமதேவன் தன்னை மீட்டுக்கொண்டுவந்த சங்கதியைப் பார்வதீ மனோஹரனாகிய பரமசிவனுடைய திருவுள்ளத்தில் படும்படியாக விவரித்துச் சொன்னான். அதற்கு இருபது கைகளையும் பத்துத்தலைகளையுமுடைய இராவணனுடைய பலத்தை யடக்குவதற்கு எங்களால் முடியாது. திருப்பாற்கடலில் நீலமேகம்போலப் பள்ளிகொண்டிருக்கின்ற கருணாசாகரமான ஸ்ரீமந்நாராயணன் அந்த இராக்கதர்களை அதம்பண்ணி நம்முடைய துன்பங்களை நீக்கவேண்டுமே யல்லாமல் வேறே உபாயமில்லை யென்று பிரமதேவனும் சிவனும் சொல்ல, அப்படியே திருப்பாற்கடலிலே யோக நித்திரை செய்கின்ற மரகதவண்ணனை தேவாதிதேவனை மனத்தில் நினைந்து அநேகவித மாகத் தோத்திரம்பண்ண, அப்போது பரகதியை விரும்பினவர்களுக்கு அருள் செய்கின்ற திருமகள்நாயகன் அறிந்து, எழுந்திருந்து, பொன்மலைபோலப் பிரகாசிக்கின்றகருடவாகனத்தின்மேலேறி, நீலமேகசாமளரூபமான திருமேனியையுடையவனாய், மார்பிலே மின்னற் கொடிபோலப் பெரியபிராட்டி விளங்காநிற்க, செந்தாமரைக் காடுபூத்தாற்போலக் கரசரணாதி அவயவங்கள் பிரகாசிக்க, சூரியசந்திரர்களுக்குச் சமானமான திருவாழி திருச்சங்குகளைக் கையிலேந்திக்கொண்டு, கைகூப்பித் தம்மைவணங்கிக் கொண்டிருக்கின்ற பிரமருத்திரேந்திராதியருக்குப் பிரத்யக்ஷமானார். அப்போது அவர்கள் எழுந்து எதிர்கொண்டுபோய்த் திருவடிகளைச் சேவித்து, அநேகவிதமாகத் தோத்திரஞ்செய்து, சந்தோஷமென்கின்ற பெருங்கடலில் மூழ்கினவர்களாய், வணங்குந்தோறும் ஆநந்தக்களிப்பை யடைந்து நடனஞ்செய்து, அந்தப்பகவானுடைய மகிமைகளைப் பலவிதமாக எடுத்துப் புகழ்ந்து சொல்லி நிற்கும்போது, ஆனந்தமென்கின்ற தேனையுண்டு,சகிக்கமாட்டாமல்இராக்கதர்கள் இறந்தார்கள் என்கின்றசந்தோஷத்தினால், திருத்துழாய் பரிமளிக்கின்ற திருவடிகளைக் கிரமப்படிக்குத் தங்கள்தங்கள் சிரத்தில் தரித்துக் கொண்டார்கள். அப்போது மேருமலையின் உச்சியிலிருந்து நீலமேகம் இறங்கி வருவதுபோல அந்தப்பரந்தாமன், கருடபகவானது தோள்மேலிருந்து இறங்கி, மணிமயமான சுவர்ணமண்டபத்தில் அமைக்கப்பட்டிருக்கின்ற நவரத்நகசிதமானசிங்காசநத்தில் எழுந்தருளியிருந்த பின்னர்,பிரமருத்ரேந்திராதி தேவர்களும் முனிவர்களும் சேர்ந்து அதிசயத்துடன் இருபுறத்திலுமிருந்து, பகவானைநோக்கி, மஹாபாவிகளாகிய இராக்கதர்கள் செய்கின்ற துன்பங்களைப் பலவாறாகச் சொல்லி, ஓ லக்ஷ்மீநாயகனே, இராவணன், அவன்தம்பி கும்பகர்ணன் முதலான இராக்கதரால்,மண்ணுலகத்

திலும் விண்ணுலகத்திலும் நடத்தப்பட்டுவருகின்றயாகாதி சற்கருமங்கள் தவறிவிட்டன, இனிப்பிழைக்குந்திறமும் இல்லையென்று பெருமூச்செறிந்துசொல்லுவதாவது, ஒ சுவாமீ, நாங்கள்கொடுத்த அநேகவரங்களின் பலத்தினால், அவ்விராக்கதர்கள் சுவர்க்க மத்திய பாதாளம் என்கின்ற மூன்று லோகங்களையும் நிர்மூலமாய் அழித்துப் போட்டார்கள். இந்தச்சமயத்தில் தேவரீருடைய கிருபையில்லாவிட்டால் ஒரு கணப்போதும் இவ்வுலகமுழுதும் அழிந்துபோகும். எங்களால் அக்கொடிய பாவிகளாகிய அரக்கரை நாசப்படுத்துதற்குக் கூடமானதாக இருக்க இல்லையென்று சிந்தாகுலராக இருந்தார்கள். அப்போது மிருந்த பரிமளங்கமழும் துளபமாலாதரனை ஸ்ரீவிஷ்ணுமூர்த்தி சிவப்பிரமாதிகள் முதலிய தேவர்களை நோக்கி நீங்கள் பயப்படவேண்டாம், அக்கபட வஞ்சகராகிய இராக்கதரைச் சங்கரித்து உங்களுடைய துன்பங்களைக்களைந்து ரக்ஷிக்கின்றோமென்று திருவாய்மலர்ந்தருளிய பின்னும் ஓர் வசனம் அநுக்கிரகம் செய்ததாவது, தேவர்கள் முதலிய நீங்களும் பூலோகத்திற்போய் வனங்களிலும், மலைகளிலும், தடாகங்களிடத்திலும் வானரங்களாகச் சேனையோடு பிறந்து சஞ்சரித்துக் கொண்டிருங்கள். கொதுகையொத்தவர்களுடைய வரத்தையும் அவ்வரத்தினால் கெர்வமடைந்த இராக்கதருடைய வாழ்வையும் பங்கஞ்செய்ய நாமும், சங்கு, சக்கரம், சேஷன், இவர்கள் தம்பியர்களாக ரதகஜ துரகபதாதிகளையுடைய அயோத்தியாபுரியையாளும் தசரதசக்கரவர்த்திதிருக்குமாரராகத் திருவவதாரஞ் செய்கின்றோமென்று திருவாய்மலர்ந்தருளிய கட்டளையைச் சிவப்பிரமாதிகள் முதலிய தேவர்கள்கேட்டு அதிகசந்தோஷக்கடலில் முழுகினவர்களாய் ஆனந்தக் கூத்தாடினர்கள்.

மங்கலகீதங்கள் பாடினர்கள். இன்றையதினம் நம்மை இரட்சித்தனனென்கின்றஅதிக சந்துஷ்டியால் சுராதிபனாகிய தேவேந்திரன் எனது மனக்கலக்கம் தீர்ந்ததென்றான். சிவப்பிரமாதி ருஷிகள் முதலிய தேவர்கள் எங்களுடைய சிரமம் இன்றே ஒழிந்த தென்றார்கள். அந்தச்சுவாமியும் ஸ்ரீகருடபகவான்மேலுளில் எழுந்தருளிப்போனபின்பு, பிரமதேவன் தேவர்களைப் பார்த்து பூலோகத்தில் நான் முன்னமே சாம்புவந்தனாகப் பிறந்திருக்கின்றேன். ஆதலால் நீங்களும்போய் அவ்வாறாக உதித்திருங்களென்று சொன்ன மாத்திரத்தில தேவேந்திரன் நான் சத்துருக்களுக்கு ஓர் இடிபோல் வாலியாகவும், அவன் மகனாகிய அங்கதனாகவும் பிறக்கின்றேனென்றான். சூரியன் அந்த வாலியினுடைய தம்பி சுக்கிரீவனாகப்பிறக்கின்றேனென்றான். அக்கினி எனது அமிசம நீலனென்றான். வாயுநான் அநுமானாகப் பிறக்கின்றேனென்றான். மற்றதேவர்களெல்லாம் நாங்கள் வானரங்களாய் பிறந்திடத் தீர்மானித்தோமென்றார்கள். திரிபுராந்தகனான பரமசிவன் நான் வாயுவின் மைந்தன் அநுமனென்றார். இவ்வாறாக இவர்களே அவதரிப்பார்களாகில் உலகோர்க்கு நாசமுண்டா? இராது. கிருபாநிதியான பாற்கடற் பரமன் நியமனப்படி பிரமதேவனும் காளகண்டனாகிய சிவனும் தேவர்களும் அந்தப்பிரகாரமாய் பூமியில் இருண்டவனத்தில் வானரராக அவதரித்தார்கள். இக்காரியங்களுக்கு கர்த்தா

வாயிருந்தவர்கள் அவாவரிடம்போய்ச் சேர்ந்தனரென்னும் தேவரகசியத்தைச் சிர்தூக்கி அறிந்த வசிஷ்டபகவான் தசாதசக்கரவர்த்தியைக் கருணைததும்புங் கண்ணால்நோக்கி ஒரு வசனம் கூறுகின்றார். அாசர்க்காசனே நீர்வருந்தேல், இவ்வீரேழு பதினான்குலகங்களையும் செங்கோல் செலுத்தி அாசுசெய்யும் புத் திராைப்பெறுவீர். ஆதலால்ஐயா? புத்திரகாமேஷ்டி என்னும் வேள்வி செய் வீராகில் உமது மனோவியாதிதீருமென்று சொன்னார். அதைக்கேட்டு அாசர்க் காசனாகிய தசாதமகாராசன்மிக்க ஆனந்தமெய்தி வசிஷ்டபகவானுடைய உப யசாமூா விந்தங்களையும் சேவித்துக்கொண்டு ஸ்வாமி உம்மையேசரணமடை ந்த வெனக்கும்துன்பமும்வருமா, வாவேமாட்டாது. ஆதலால்அவ்வேள்வியை நிறைவேற்றுதற்குவேண்டியகாரியங்களை அடியேனுக்குஅநுக்கிரகஞ்செய்தால் அப்படியே நடந்துகொள்ளுகின்றேனென்றான். அதற்குவசிஷ்டபகவான் குற்ற மற்றதேவர்களோடுமற்றவர்களையும்பெற்ற காசிபமுனிவனுடைய புத்திரர்,விபா ண்டகருடைய குமாரர், கங்காதரனாகிய ஈசனும் புகழ்தற்குரிய கலைக்கோ ட்டு மஹாரிஷியென்பவர், பின்னும்வேதசாஸ்திர பாண்டியத்துவத்தில் தன் பிதாவுக்கே ஒப்பானவர், மனுநீதிநெறி வாய்மை இவைகளில் பிரமதேவனுக் குச் சமானமானவர். மேலும் இவ்வுலகவாழ்க்கையின் தன்மை யறியாத உத் தமச்சிரேஷ்டர், கலைமான் முகமாய் ஓர் கொம்புடனே விளங்குகின்ற சிரமு டைய மகானுபாவர். ஆதிசேஷனால்தாங்கும் இவ்வுலகத்திலுள்ள மாதர்களை மிருகமென்றே தீர்மானித்தவர், மகாதவத்தை யுடையவர். பிரமதேவனும் சிவனும் புகழ்தற்குரிய சாந்தசீல குணமுடையவ ராதலால் அவரால் இவ் வேள்வி முடிவு பெறுமாயின் புத்திரருண்டாம் என்றனர்.

இதைக்கேட்ட அாசர்க்காசனாகிய தசாதசக்கரவர்த்தி முனிவர்பிரானாகிய வசிஷ்ட பகவானுடைய திருவடிகளில்சேவித்து ஸ்வாமி அக்குற்றமற்ற தவச்சி ரேஷ்டர் யாண்டிருக்கின்றனர். அவரீண்டுவருவதற்கு வேண்டி யான் செய் யுங் கருமம்யாது? தேவரீர் அருளவேண்டு மென்று கேட்கக் கூறுகின்றார். கொடிய துன்பமுதலிய எவையும் தலைக்காட்டாது ஒளிக்கும்படி இவ்வுலக த்தை ஆளும்படியான சத்தாகிய குணத்தையும் கருணையையு முடையானும், எச்சம்பந்தத்திலும் விலக்குதற்குக் கூடாதவனும்,மனுகுலத்தில் உதித்தவனு யும்இருந்த உத்தானபாதனென்னும் அரசனுடையகுமாரன், உரோமபதனென் பான் இவ்வுலகத்தில் ராச்சியபாரம் செய்துவரும் காலத்தில் அந்நாட்டில் அநேககாலம் மின்னலோடுகூடியமேகம் மழையில்லாமையால், சகலசீவராசிக ளும் வருத்தமடையும் துன்பத்தை அறிந்து உரோமபத னென்கின்ற மன் னவன் வேதசாஸ்திர பாண்டித்துவமுடைய அனேக முனிவர்களுக்கும், பிரா மணோத்தமருக்கும், அபரிமிதமான சகலவிததானங்களும் கொடுத்தும் மழை பெய்யாமையைக்கண்டு அரசன் மனத்தில் மிக்க கிலேசத்தைக் கொண்டு திரி காலங்களையும் உணர்ந்த மகாத்துமாக்களாகிய பெரியோர்களை தோத்திரம் புகன்று அர்க்கியமுதலிய சோடசோபசாரம் செய்து சேவித்து மழைபெய்யா திருப்பதற்கு யாது காரணமென்று வருந்திக் கேட்கையில், இப்போது நாம்

உமக்குச்சொன்ன பிருங்கியான கலைக்கோட்டு மஹாரிஷி யருவராயின் வேண்டிய மழைபெய்யுமென்று அப்பெரியோர்கள் சொன்னார்கள்.

அதைக்கேட்ட உரோமபத மகாராசன், எல்லாரையும் மிருகங்களாக எண்ணியிருக்கிற அம்மஹாரிஷி பாவரது பெருமையை யாரால் புகழத்தக்கது? அவரை இவ்விடத்திற்குக்கொண்டு வருவதற்கு உபாயம் என்னவென்று கவலையோடு சிந்தித்துக்கொண் டிருக்குங்காலையில், அச்சபையிலிருந்த நாடகப்பெண்டிர் ருவரெழுந்துநின்று அரசனை வணங்கி, சுவாமீ, அம் மஹாருஷியை நாங்களே இவ்விடத்திற்குக் கொண்டு வருகின்றோமென்று சொல்லக்கேட்ட உரோமபத மகாராசன் அளவில்லாத சந்தோஷ மடைந்து, அப்பெண்டிருக்குப்பல ஆடையாபரணங்களைப் பரிசாகக்கொடுத்து, அஷ்டமிச் சந்திரனைப் பழிக்கும்நெற்றியையும், இளமைபொருந்திய பசுமையாகிய மூங்கிலை நிந்திக்குந் தோள்களையும், உண்டோ இல்லையோவென்று ஐயப்படும் அதி நுட்பமாகிய இடையையும், வாரணிந்து விம்மிப்புடைத்து, இறுகி, இளகி, மார்பிடமெல்லாம் தமதெனக்கவர்ந்து, வட்டமிட்டு, அடிபார்த்து, நாள்தோறும விருத்தியடையாநின்று, வடமுதலியவை தாங்கி, இறுமாந்து, பட்டவர்த்தன யானையின் மத்தகத்தோடு எதிர்த்துப் போர்செய்துவெருட்டி, மல்லிகைப்பூச்செண்டுகளை யிகழ்ந்து, பொன்மலையை அவமதித்து இளைஞர்கள்மனத்தைச் சூறையாடி, புளகித்து வச்சிரச்செப்பினை கட்டுக்கொண்டு, சாம்புநதம் என்னும் உயர்ந்தபொன்னைப்பொடியாக அராவியேலே தூவினாற்போலத் தோன்றத்தேமல் படர்ந்து செம்பொற் சரிகைவேலை யமைந்து அலங்காரமான கச்சைக் கிழித்து வெளிப்பட்டு, பளபளத்து, தங்கக்கிண்ணங்களையொத்து, இளநீர், கிரீடம், பொற்குடம், இணைக்கலசம், சக்கரவாகம், தாமரையரும்பு, கோங்கரும்பு, கைத்தாளம், நீர்க்குமிழிமுதலியவற்றைஇகழ்கின்ற அழகியதனங்களையும், நீருண்டிருண்ட மேகம், பசுமையாகிய கொடிப்பாசி, கூந்தற்பனை, கொன்றையின் காய், இருள், சோலை, கருமணல், வண்டின்கூட்டம், ஆகிய இவைகளைத் திரஸ்கரிக்கின்ற கூந்தலையும், வண்டு, தாமரை, நீலோற்பலமலர், யமனது சூலம், மாவடுவின் பிளவு, வேல், கடல், விஷம், அமிர்தம், வாள், சேல்மீன், பெண்மானின் பார்வை இவைகளை வென்ற கண்களையும், செங்கிடை, இந்திரகோபம், பவளத் துண்டு, முருக்கம்பூ முதலியவற்றின் மேற்பட்டு விளங்குகின்ற இதழையும், உடையவர்களாகிய கணிகைகளே; அம் மகாருஷியை யெப்படியாயினும் உங்களுடைய லாவண்யாதி சயத்தாலும், சங்கீத சாமர்த்தியத்தாலும், திவ்யாக்ஷ பாதாதிகளை யுண்டிக்கையினாலும் வயப்படுத்தி அழைத்துக் கொண்டு விரைவாய் வாருங்களென்று உபசரித்து அனுப்ப, அவர்களும் அப்படியேயாகட்டுமென்று அரசனைச் சேவித்து விடை பெற்றுக்கொண்டு தேர்மேலேறிச் சென்றார்கள்.

அப்படிச்சென்றவர்கள் அநேகயோசனை தூரம்சென்று, இன்னும் ஒரு யோசனைதூரத்தி லிருக்கிற கலைக்கோட்டு முனிவரது ஆச்சிரமந் தெரியக் கண்டு, தேரைவிட்டிறிங்கி, அவ்விடத்திலொரு திவ்யமான பர்ணசாலை யுண்ட

க்கிக்கொண்டு, மகரிஷிகளைப்போல் வேடம் புனைந்து அவர் தந்தையாகிய விபாண்டகர் இல்லாத சமயம்பார்த்து, அம் மகாருஷி சமீபத்திற் சென்று அவரைக் காணவேண்டிய முறைப்படி கண்டனர். அம்முனிவரும் இவர்கள் பெரியோர்களென்றே நினைத்து,இன்முகம்,இன்சொல் முதலியவற்றால்முதலில் உபசரித்துப் பின்னர் அர்க்கியபாத்யாசமனங்களுங் கொடுத்து, அழகிய பீடத்திலிருத்தி, சற்றுநேரம் மதுராசம்பாஷணம் செய்துகொண் டிருக்கும்போது, திடீரென்றெழுந்து அம்மகாரிஷியைத் தொழுது விடைபெற்றுத் தமது பர்ண சாலையிற்போய்ச் சேர்ந்தனர்.

இப்பெண்கள் இவ்வாறாக சிலநாள் கழிந்தபின்னர், வாழை, மா, பலா, முதலிய பலவகைகளையும், வேறு பலவகையான சுவைமிகுந்த உணவுகளையும் அவருக்குக் கொடுத்து உண்பித்தனர். அவரும் உண்டு களித்திருந்தனர். இவ்வாறு சிலநாள் கழிந்தபின்னர் அம்மகாரிஷிக்குத் தங்கள்மேல் அன்புமிகுந்திருப்பதை யறிந்துகொண்டு, அவரைப்பார்த்து, சுவாமி, அடியேங்களிருக்கும் பர்ணசாலைக்கு எழுந்தருள வேண்டுமென்று பலவாறாகத் தோத்திரம் பண்ண, அத்தவவேடம்பூண்ட மாதர்களுடைய வேண்டுகோளுக்கு அம்முனிவரும் இசைந்து அவர்கள் முன்னே நடவாநிற்க, அவர்களுக்குப் பின்னே தானும் நிருமலசித்தராய் நடந்தனர். அக்கணிகைமாதரும் தாங்கள் எண்ணிய எண்ணம் நிறைவேறினதைப்பற்றி மிகவும் சந்தோஷமடைந்து அம்முனிவர் பெருமானை அழைத்துக்கொண்டு வரும்போது, அவர் அப்பெண்களைநோக்கி, உங்களுடைய ஆச்சிரமம் இன்னமெவ்வளவுதூர மிருக்கின்றதென்று கேட்க, அப்பெண்கள் இதோசமீபமாயிருக்கிறதென்று சொல்லிஅவரை மெல்ல அழைத்துக்கொண்டு தாங்கள் முன்னும் அவர் பின்னுமாகத்தங்களுடைய சுதேசத்துக்கு வரும்போது, அந்நகரம்வந்து சேர்வதற்குமுன்னரே, மேகங்கள் ஆகாயத்திற் பரமசிவனது கண்டத்தைப்போலக் கறுத்துமின்னலோடும் குமுறலோடும் கூடிக் கர்ச்சித்துக்கொண்டு சள சள வென்று மழைத் தாரைகளைப் பெய்தன.

அதனால் அந்நாட்டின்கண் நதிகள், குளங்கள், ஏரிகள், மடுக்கள் முதலானவைகளும் தாம் அடைந்திருந்த வறுமைநீங்கி அவைகளின் ஆரவாரத்தால் செந்நெல் கரும்பு முதலிய பயிர்களும் செழித்து ஓங்கி வருவதையும், ஆகாயத்தில் இடைவிடாமல் மேகங்கள் மழைபெய்வதையும், ரோமபத மகாராசன் அறிந்து ஆச்சரியமடைந்து அக்கலைக்கோட்டு முனிவர், கோவைப் பழம்போன்ற இதழையும், தாமரை மலர்போன்ற முகத்தையும், முத்துப்போலப் பளபளப்பையுடைய பல்வரிசையும், அகில், சந்தனம்முதலியவற்றின் பரிமளப்புகையூட்டிய அளகபாரத்தையும் உடைய அக்கணிகை மாதர்களுடைய உபாயத்தால் எனது எல்லைக்குள் வந்துவிட்டனரோ, இப்படி மழைபெய்து நமது நகரம் செழித்தோங்கி யிருப்பதற்குக் காரணம் யாது என்று பேரானந்தமடைந்து, தன் அவையிலிருந்த வேதபாராயணத்திற் சிறந்த முனிவர், பிராமணர், மந்திரிகள், பிரதானிகள், சாமந்தர்கள், ரதகஜதுரகபதாதிகளாகிய

நால்வகைச்சேனைகள் ஆகிய எல்லாம் தன்னைச் சூழ்வர, தனது நகரத்தைவிட்டு இரண்டுயோசனை தூரத்தில் எதிர்கொண்டுபோய், அம்மாதர்களுக்கு நடுவில்வருகின்ற முனிவரைக் கண்ணாரக்கண்டு களித்து, அவருடைய உபய சரணாரவிந்தங்களுக்குத் தீர்க்கதண்டம் சமர்ப்பித்து, கண்களில் ஆனந்தபாஷ்பம் பெருகும்படி நின்றான்.

அவ்வண்ணம்நிற்கின்ற உரோமபதனென்னும் அரசனை, அம்மாதர்கள் அதிகபயபக்தியுடன்சேவித்து நின்றார்கள். அப்படிச் சேவித்து நிற்கின்ற அக்கணிகைமாதர்களை அரசன்பார்த்து, நீங்கள்போய் இம்மகானுபாவராகிய முனிபுங்கவரை இவ்விடத்திற்குக் கொண்டுவந்தது நான்படுந் துயரத்தைக்கண்டன்றோவென்று அவர்களை உபசாரவார்த்தைகளால் திருப்திசெய்து நிற்பதையும், ரிஷிகள் முதலானவர்கள் இருக்கின்ற நிலையையும் கலைக்கோட்டு முனிவர் பார்த்து, நம்மைக் கபடத்தினால் இவ்விடத்திற்கு அழைத்துவந்தார்களென்று நினைத்து நிதானிப்பதைக்கண்டு; சுவர்க்கலோக வாசிகளாகிய இந்திரன், தேவர்கள் முதலானவர்கள் மிகவும் பயந்து, இம்முனிச்சிரேஷ்டருக்குக் கோபம் நேரிட்டால் உலகங்கள் என்ன பாடுபடுமோ, இது என்னவிபரீதம், இதற்குநம்மால் செய்யலாவதொன்றுமில்லையே, நமக்கு யார்துணையென்று பலவாறாக அச்சங்கொண்டு நடுநடுங்கிக் கலங்கியிருக்கும்போது, உரோமபத மகாராசன் விரைவாய்வந்து அம்முனிவரைவணங்கித் துதித்து, சுவாமி, அடியேனை மன்னித்துக்காக்கவேண்டுமென்று தான் அடைந்திருந்த துன்பமெல்லாம் விண்ணப்பம் செய்து, முறையிட்டு, ஐயனே, கருணைசெய்தருளவேண்டுமென்று பலவகையாகப் பிரார்த்தித்து நின்றதின்மேல், அக்கலைக்கோட்டு முனிவர் தாம்கொண்டிருந்த சினத்தை ஒருவாறு தணித்துக்கொண்டு, அலையற்றகடல்போல அமைந்து இவ்வரசன் யாவரையும் காப்பாற்றும்பொருட்டு இப்படிச் செய்தனனென்று தெரிந்துகொண்டு பயந்திருந்த அரசனுக்கு ஆசிகூறி, சந்தோஷமடைந்தார். அப்போதரசன் அம்முனிபுங்கவரை இரத்நமயமான தேர்மேலேற்றிக்கொண்டு, தன் பட்டணமேபோய்ச்சேர்ந்து, அநேகமுனிவரும் பிராமணசிரேஷ்டரும் சூழும்படி தன் அரண்மனையிற் பிரவேசித்துநவரத்தின கசிதமான சுவர்ண சிங்காதனத்தின்மீது அவரை எழுந்தருளப்பண்ணி அர்க்கிய முதலான கடன்மைகள் யாவுஞ்செய்து அடியேன் முறையிட்டுக் கொள்ளவேண்டியதொன்றுமில்லையேயென்று சொல்லி, பேரழகும், சாந்தமும், கற்புடைத்தல், அன்பு நாண் மெய்ப்பூசல் முதலிய பதிவிரதா லட்சணங்களமைந்த தன்புத்திரியாகிய சாந்தையென்பாளை வேதவிதிப்படி அவருக்குப் பாணிக்கிரகணஞ்செய்வித்தான். அந்நாளில் வறுமைப்பிணி அந்நாட்டைவிட்டகலுமாறு மேகங்கள் காலமழைபெய்துகொண்டு வருதலால் அந்நாட்டிலிருந்த க்ஷாமம் முதலிய துன்பங்கள் நீங்கி சகல சீவராசிகளும் க்ஷேமமடைந்த பின்னர் அப்பெரியபட்டணத்தில், கற்பிற்சிறந்தாளாகிய சாந்தையினால் ஏவல்முதலான யாவும் நடக்கத்தக்கதாய் அக்கலைக்கோட்டுமுனிவர் எழுந்தருளி இருக்கின்றாரென்று வசிட்டபகவான் கூறினார்.

இதைக் கேட்டமாத்திரத்தில், அரசர்க்கரசனாகிய தசரதச்சக்கரவர்த்தி வசிஷ்டபகவானுடைய திருவடித்தாமரைகளை வணங்கி, சுவாமீ, இப்பொழுதே அம்மஹாத்துமாவாகிய கலைக்கோட்டுமுனிவரை இவ்விடத்திற்கு அழைத்துக்கொண்டுவருகின்றேனென்று சொல்லி, தன் பிரதானமந்திரியாகிய சுமந்திரன் முதலிய அமைச்சர்களுடன் அழகானதேர்மேலேறினமாத்திரத்தில், தேவர்கள்முதலான யாவரும் இப்பொழுதே எங்களுடைய துயரம் தீர்ந்துவிட்டதென்று பூமழையை இடைவிடாமற்பெய்ய, பலவகையான வாத்திய விசேஷங்கள் முழங்க, கடல்போல வேதாத்யயன வொலிமுழங்க, பிராமணோத்தமர்கள் வாழ்த்த, மதுரவசனத்தையுடைய மாதர்கள் பல்லாண்டுகூற, கடல் வளைந்தாற்போலத் தன் பரிசனங்கள் தன்னைச்சூழ்ந்துவர, சூரியனைப்போல நெடுந்தூரங்கடந்து உரோமபத மகாராஜனுடைய நகரத்தைப்பார்த்த அளவில், ஒற்றர்கள் செழித்தோங்கிப் படர்ந்த கீர்த்தியையுடைய சக்கரவர்த்தி வரவையுணர்ந்த, அந்த ரோமபதமகாராசன் கடல்போன்ற சேனைகள் தன்னைப் புடைசூழ்ந்துவரவும், ஆடவர்களும் மாதர்களும் அணிந்திருக்கின்ற ஆபரணங்களின் ஒளிவீசவும், மாகதர்கள் கிண்டுபாடவும், மிகுந்த சந்தோஷத்துடன் புறப்பட்டு சக்கரவர்த்தியை எதிர்கொள்ளும்பொருட்டு ஒருயோசனை தூரம் வரக்கண்டு, சக்கரவர்த்தி மேகமுழக்கமும் பின்னிடும்படி யொலிக்கின்ற பொற்றேரினின்றிழிந்து ரோமபத மகாராசனைச் சேவித்தார். அப்போது அவரையெடுத்துமார்பினிலழுந்தத்தழுவிக்கொண்டுமிகவுங்களித்துச் சக்கரவர்த்தியைநோக்கி, தாங்கள் இவ்வளவுதூரம் விசயஞ்செய்ததற்குக் காரணம் நான் செய்த பெருந்தவமோ! அல்லது இவ்வுலகத்தார் நோற்ற நோன்போ! அறிந்திலேன் என்று இன்சொற்கூறி அவர் மனமகிழும்படி தனது ரத்நகசித மான தேரின்மேல் அவரை யேற்றிக்கொண்டு, பலவளங்களும் நிறைந்த தன் நகரத்திற்கு அழைத்துக்கொண்டுபோனான். அப்படிப்போய்த் தன் திருமாளிகையில் ஒரு ரத்னமண்டபத்தில் பொற்பீடத்தின்மேல் இருத்தி, பாடகமணிந்த செந்தாமரை மலரையொத்த பாதங்களுடைய மாதர்கள் பல்லாண்டு பாட, அர்க்கியமுதலிய கடன்மைகளெல்லாஞ் செய்து, விருந்துசெய்ய, இனிதாக ஏற்றுக்கொண்டார். அவர் யாரென்றால், தேவர்களுக்கு அவர்களுடைய லோகங்களை அசுரபாதையினின்று நீக்கியளித்த தசரத சக்கரவர்த்தி. அப்படி விருந்துண்ட பின்னர், மிக்க பரிமளமுள்ள சந்தநாதிகளைக் கொடுத்து, அவரைநோக்கி, தாங்கள் இவ்விடத்திற்கு எழுந்தருளினதற்குக் காரணம் யாதென்று கேட்க, சக்கரவர்த்தி நடந்த வர்த்தமானங்களையெல்லாம் சொன்னபின் பொறுமையைநீக்கி மேன்மையை யடைந்திருக்கின்ற மனத்தையுடைய அரிய தவத்தோனாகிய கலைக்கோட்டுமுனிவரைத் தங்களுடைய நகரத்திற்கு அழைத்துக்கொண்டு வந்துவிடுகின்றேனென்று சொல்ல, சக்கரவர்த்தி தேறி, சேனையோடு திருவயோத்தியைச் சேர்ந்தார்.

அரசர்க்கரசனாகிய சக்கரவர்த்தி திருவயோத்திக்குச் சென்றபின்னர் வெற்றிவேந்தனாகிய ரோமபதமகாராஜன் அருமையான வேதசாஸ்திரங்களே உருவுகொண்டாற்போன்ற கலைக்கோட்டு முனிவருடையஇருப்பிடத்தையடைந்து

அவருடைய இரண்டு திருவடித்தாமரை மலர்களைத் தன்திருமுடிமேலணிந்துகொண்டு மேலும் தான் செய்யவேண்டிய கடன்மைகளெல்லாம்செய்துமுடித்தவளவில், முனிசிரேஷ்டர் அரசனை நோக்கி, நீர் இவ்விடத்திற்கு வரவேண்டிய காரியம் யாதென்றுகேட்க, அரசன் சுவாமீ, அடியேனுக் கொருவரங்கொடுக்கவேண்டுமென்றுசொல்ல, முனிவர் அக்காரியமென்னவென்று வினவினார். அப்போது ஒரு புறாவின் உயிரைக்காப்பாற்றும் பொருட்டுத் தன்னுடம்பின் தசையை யரிந்து அதன் எடையளவாகத் தராசிலிட்டு அத்தசை பற்றாதிருந்ததைக்கண்டு, தானே அத்தராசேறின பெரும்புகழாளனாகிய சிபிச்சக்கரவர்த்தி வமிசத்திற்பிறந்தானும், தருமம் நிலைத்திருக்கின்ற மனத்தை யுடையானும், தேவர்களுக்குத் தீங்குசெய்கின்ற அசுரர் வலிகெடவென்று அத்தேவர்களுக்குச் சுகங்கொடுத்த வடிவேலையுடையானும் ஆகிய செங்கோல் வேந்தனெனக் கீர்த்திமிக்க தசரதச் சக்கரவர்த்தி மணிமாளிகைகள் சூழ்ந்த அயோத்தியா நகரத்துக்குப்போய் மீண்டு எழுந்தருள்வீராக வென்று பிரார்த்தித்துச் சொன்னான்.

அதைக்கேட்ட கலைக்கோட்டுமுனிவர் அப்படியே அவ்வரத்தைக்கொடுத்தோம். இனித்தேரைக் கொண்டுவாருமென்று சொன்னவுடன், அரசன் அரியதவத்தினையுடைய முனிவரது பாதங்களைத்தொழுது, சக்கரவர்த்தி துயர்தீர்ந்து பிழைத்தானென்று மிகவுஞ் சந்தோஷித்து, அதிர்கின்ற பேரொலியையுடையதேரைக்கொணர்ந்து, அதில் தேவரீர்தேவியுடன் எழுந்தருளவேண்டும் என்ன அவ்வாறே ஏறினார். அப்போது வளைந்த வில்லையுடைய அரசனும் கைகூப்பித்தொழவும், பிறவிபச்சம் நீங்கப்பெற்ற முனிபுங்கவர் தொடர்ந்து சுற்றிவரவும், ரோமபதமஹாராஜனுடையபெண்ணும் அரியவேதரூபமேயென்றுசொல்லும்படியான கலைக்கோட்டுமஹாரிஷியும் வழிக்கொண்டு நடந்தனர். வெப்பமாய் உயிர்களை வருத்துகின்ற கொடியவினைகளை யழித்துச் சுகத்தைக்கொடுக்கின்ற சத்தியதேவதையாகிய ஸ்ரீமகாவிஷ்ணுவந்து திருவவதாரம் செய்யும்படியாக இம்முனிவர்கருணைசெய்வாரென்று நினைத்து, தருமதேவதையும் தேவர்களும் ஆகாய துந்துமியை முழக்கி, ஆராய்ந்தெடுத்த மலர்களைச்சொரிந்து களிப்படைந்தனர். அவ்விடத்திலிருந்த தூதர் திருவயோத்திக்குப்போய், மலையையொத்த புயங்களையுடைய சக்கரவர்த்திக் கெதிரில்நின்று, கலைக்கோட்டுமுனிவரது வரவைச்சொல்ல, சக்கரவர்த்தியும் அவரைச் சேவிக்கவேண்டுமென்கின்ற ஆசையாகியகடலில் மூழ்கிவிட்டனர். ஆயினும்தேவர்கள் செய்த தபோமகிமையினால் விரைவாய் எழுந்து அவரை எதிர்கொள்ளநினைத்துத் தேர்மேலேறினார்.

அப்போது தேவர்கள் முதலானோர்களால் புஷ்பமாரி பொழியப்பட்டன. மங்களாசாசநங்கள் உண்டாயின. மங்கலவாத்தியங்கள் ஒலித்தன. பேரிகைகள் முழங்கின. அச்சமயத்தில் அதிர்கின்ற குரலையுடைய முரசவாத்தியங்கள் தன்முன்னாகமுழங்கப்பெற்றசக்கரவர்த்திதீமைகள்வேரோடுஅற்றொழிந்தன, எமது மனோதுக்கமாகிய மலைபொடியாய்விட்டதுஎன்றுசொல்லிக்கொண்டு, முதிர்ந்த

பெரியதவத்தையுடைய முனிவரும், நல்லதவங்களெல்லாம் ஒருகுற்றமற்ற வடிவத்தைப்பெற்று இவ்வுலகில் வந்ததென்றுசொல்ல விளங்குகின்றவரும், மாவுரியை இடையிற்சுற்றினவரும், மானினது காட்சியை யுடையவரும், பொலிகின்ற திருமேனியையுடையவரும், தேவர்களுடைய துக்கமும் அரக்கருடைய வண்மையும் ஒழியும்படியாக விளங்குகின்ற தவத்தொழிலை மேற்கொண்டவரும், கமண்டலம், குடை, விளங்காநின்ற பூணூல்,யோகதண்டம்ஆகிய இவைகள் விளங்கப்பெற்ற பெரிய கைகளையுடையவரும் ஆகியகலைக்கோட்டு முனிவரை மூன்றுயோசனைதூரத்தில் கண்ணாரக்கண்டுகளித்து, தேரிலிருந்து இழிந்துபோய், அம்முனிவருடைய இரண்டு திருவடித்தாமரை மலர்களின் மேல் விழுந்து சேவித்துக்கொண்டனர். அப்பொழுது பழைய நான்குவேதங்களாகிய கொடிகள்மேலேபடர்தற்குரிய கொள்கொம்பையொத்தவராகிய முனிவரும் சத்தியபுத்தியோடு அரசனுக்கு மங்களா சாசநம்பண்ணினார். அவருக்குப்பக்கத்திலிருந்த முனிவர்களும் ஆசீர்வாதம்பண்ணினார்கள். பிறகு அரசன் மேகத்தைப்போலக் கைமாறு கருதாது இரவலர் முதலானோர்க்குப் பொன்மாரிபொழிகின்ற பெரியகைகளால் அவரைத்தொழுது,ஆழ்ந்தநீரிலுள்ள சேல்மீனையொத்த கண்களையுடைய சாந்தையுடன் கலைவல்லானாகிய முனிவனையும் தேர்மேலேற்றி மெல்ல அழைத்துக்கொண்டுவந்தான். அப்படியழைத்துவந்த சக்கரவர்த்தி ஒருகடிகைப்பொழுதில், தாமரைமலர்போன்ற ஒளியுள்ள முகத்தையுடைய மாதர்கள் பல்லாண்டுபாடி வாழ்த்தாநிற்க, பேரிகைமுழக்கம் இடையறாது முழங்குகின்ற அயோத்திமாநகரத்தை அம்முனிவருடன் அடைந்தார். பிறவித்துன்பத்துக் கேதுவாகிய தீத்தொழிலைச் செய்கின்ற அசுடர்களாகிய ஐவரையும் அற்றவராகச்செய்த வசிட்டமுனிவரும் அரியவேதவடிவையொத்து விளங்குகின்ற மேலோராகிய கலைக்கோட்டுமுனிவரும் அத்தாணிமண்டபம் விளங்க இனிதாக வீற்றிருந்தார்கள். அப்போது சக்கரவர்த்தி பெரிய ரத்நமண்டபத்தையடைந்து குற்றமற்ற ரத்நபீடத்தின்மேல் அம்முனிசிரேஷ்டராகியவேதமூர்த்தியை எழுந்தருளப்பண்ணி, அவருக்குத்தான் செய்யவேண்டியகடன்மைகளாகிய அர்க்கியபாத்யாதி உபசாரங்களும்செய்து வேறுசிலவார்த்தைகளைச் சொல்லுவார்.

மேலோர்க்கு மேலோனே, தருமத்தையும் பெரியதவத்தையுமொத்துவிளங்குகின்ற பரிசுத்தனே, கீர்த்தியால் போகங்களெல்லாம் பரவப்பெற்ற எனதுபழையவமிசமானது தேவரீருடைய கருணையினால் இனி யாதோரிடையூறில்லாமல் அரசாட்சி செய்துகொண்டு சுகித்திருக்கும். அடியேனது தவப்பயனும் உண்மையாகும் என்று உபசாரவார்த்தைகள் சொன்னார். சொல்லிய அளவில் அம்முனிவரர் சக்கரவர்த்தியைப்பார்த்து, மன்னர்மன்னனாகிய தசரதசக்கரவர்த்தியே, வசிட்டபகவான் என்று எல்லாராலும் மதிக்கப்பெற்ற பெருந்தவத்தோனை இம்மைமறுமைகளுக்குத் துணையாகப்பெற்ற குற்றமற்ற செய்கையையுடையதனுயிருக்கின்றனையாதலால், இவ்வுலகத்தில்உன்னைப்போன்ற அரசர்கள் இருக்கிறார்களா, இல்லை. என்றுபலவகையான இன்சொற்களைச்

சொல்லி, மேலும், சிறந்தமலைபோன்ற கட்டமைந்தவில்லைத் தாங்கிய திரண்ட தோள்களையுடையனே, இன்று என்னையழைப்பித்தது நன்மையைத் தருகின்றயாகத்தைச்செய்ய நினைத்தோ, இவ்விடத்திலொளிக்காமல் சொல்லவேண்டுமென்றார். அதைக்கேட்ட சக்கரவர்த்தி மாதவசிகாமணியைநோக்கி, அளவில்லாதகாலம் இடையூறு இல்லாமல் பூபாரம் வகித்துச் சுகித்திருந்தேன். ஆயினும் புத்திரர் உண்டாகவில்லை. ஆகையால் ஒலிக்கின்றகடல்சூழ்ந்த உலகத்தைப் பாதுகாத்தற்குரிய புத்திரனை நன்மையாகிய புகழ்பெறும்படி அடியேனுக்குக்கருணை செய்யவேண்டும் என்றுசொன்னமாத்திரல் முனிசிரேஷ்டர் சக்கரவர்த்தியைநோக்கி, ராஜாதிராஜனே, நீ யிரங்கவேண்டியதில்லை. இவ்வுலகமொன்றை மாத்திரமோ அன்று, பதினான்குலகங்களையும் காப்பாற்றும் வல்லமையுள்ளபுத்திரனைக் கொடுக்கத்தக்கதாகிய புத்திரகாமேஷ்டி என்னும் யாகத்தைச் செய்யப் பிரயத்தனப்படுமென்று நியமித்தார். உடனே அரசனுடையபரிசாரகர்கள் அவ்வேள்விக்குரியனவாகிய பொருள்களெல்லாஞ் சேகரித்துக்கொண்டுவந்து அரசனுக்கெதிரில் வைத்தனர். அப்போது அரசர்கரசனாகிய தசரதச்சக்கரவர்த்தியும் பரிசுத்தமான புண்ணியதீர்த்தத்தில் நீராடி வேதவிதிக்கு விரோதமில்லாமல் திருத்தமாகச் சமைக்கப்பட்ட யாகசாலையிற் பிரவேசித்தனர். அங்கு ஒலிக்கின்ற ஆகவனீயம், தக்ஷணாக்கினி, காருகபத்தியம் என்னும் மூன்று அக்கினியையும் வளர்த்து அவைகளில் கலைக்கோட்டு முனிவரும் வசிஷ்டமுனிவருமிருந்துகொண்டு அநேக பிராமணோத்தமரும் ரிஷிகளும் சூழ்ந்திருக்க, பன்னிரண்டு மாதம்வரையில் ஆகுதிகொடுத்து யாகத்தை நடத்திவந்தனர். இவ்வாறு பன்னிரண்டுமாதம் நிறைந்தவுடன், தேவதுந்துமி முழங்கின, தேவர்கள் ஆகாயத்தில் இடமில்லையென்னும்படி மூடிக்கொண்டனர். இவ்வாறு தேவர்கள் முககமலம் ஒளிவிட நெருங்கி உள்ளிடம்வாசனை நிறைந்த புஷ்பங்களைச்சொரிந்து, ஆரவாரித்துநிற்க, தபோமகிமை யென்கின்ற தகுதியையுடைய கலைக்கோட்டுமுனிவர் அவ்வக்கினியில் புத்திரருண்டாவதற்கேதுவாகிய மந்திரோச்சாரணத்துடன் ஆகுதிகொடுத்தார். அச்சமயத்தில், அவ்வக்கினியிலிருந்து, நெருப்புப்போற் சிவந்திருக்கின்ற செம்பட்டமயிரையும், சிவந்த கண்களையுமுடைய ஒரு பூதமானது, அழகிய பொற்றட்டில், பரிசுத்தமாகிய தேவாமுதத்துக் கொப்பானதிவ்யாந்நத்தை யேந்திக்கொண்டு புறப்பட்டது. அவ்வாறு புறப்பட்ட பூதம் அத் திவ்யாந்நத்தைப் பூமிமேல்வைத்துவிட்டு மறுபடியும் தான் வந்தவழியாகவே சென்று மறைந்துவிட்டது. அம்முனிவரும் சக்கரவர்த்தியை நோக்கி, பூதத்தினால் கொண்டுவரப்பட்ட இத் திவ்யான்னத்தை உன் மனைக்கிழத்திகளாகிய பெண்களுக்கு அவரவர்கட் குரிய முறைப்படி கொடுப்பாயாகவெனக் கட்டளையிட்டனர். அதைக்கேட்ட சக்கரவர்த்தியும் முனிவர் நியமனத்தின்படி, அகில்சந்தன முதலியவற்றின் பரிமளப்புகையூட்டப்பெற்ற சுருண்ட கூந்தலையும் கொவ்வைக்கனிபோன்ற இதழையுமுடைய அழகிற்சிறந்தாளாகிய கௌசலாதேவிகையில், மங்கலசங்கங்கள் முழங்காநிற்க ஒரு பாகத்தைக்கொடுத்தான். பொய்கைகளிலும் நதிகளிலும்

சோலைகளிலும் அன்னங்கள்வசிக்கின்ற கோசலைநாட்டிற் காசனாகிய தசரத சக்கரவர்த்தி கைகேசினையிலும் தேவர்களாரவாரிக்க அவ்வாறேயளித்தான். பகைவர் நடுங்கும் இயல்பினையுடைய புயவலியையுடையானும், கிமிமாபினுதித் தவனுமாகிய சக்கரவர்த்தி இந்திரன் என்பகை இன்றேயொழிந்ததென்று தன் பரிவாரங்களோடு ஆரவாரிக்க சுமித்திரைக்குங்கொடுத்துப் பின்னும் பிதிர்ந்து விழ்ந்ததையும் அச்சுமித்திரைக்குச் சத்துருக்கனுக்கிடமும், வேறாகிய உலக த்திலுள்ள தேவர்கள் முதலானோர்க்கு வலமுந்துடிக்கக் கொடுத்துவிட்டு, அசுவமேதமும், புத்திரகாமேட்டியுஞ் செய்து தேவர்கட்கு அவிர்ப்பாகமுங் கொடுத்து கலைக்கோட்டுமுனிவன் வேள்விச்சாலையினின்றும் எழுந்தபின்னர், தன்னை யாரும்வணங்க பலவாத்தியங்களு முழங்க, வேள்விக்குரிய கடன் மைகளெல்லாஞ் செய்துமுடித்த அரசர்பெருமான் அத்தாணிமண்டபமேவந்து சேர்ந்து, அழகிய சாந்தகுணமுடைய பிராமணர்கட்கெல்லாம் சொர்ணவருஷ மாகப் பலதானம்வழங்கி, பின்னரும் முடிமன்னர்கட்கெல்லாம் அவர்கள் வெறுக்கவெறுக்கையும், தேரும், பரியும், ஆடையாபரணங்களும், அவர்கள் வரிசைகட்குத்தக்கபடியுதவி, பலவாத்தியமுழங்கிடச் சரயுநதியையடைந்து நீராடி முரசமார்ப்ப, முத்துக்குடைநிழற்ற மன்னர் தம்மைப்புடைசூழப்பின் னும்அத்தாணிமண்டபமடைந்து,பரமனுநாணுக்கொள்ளவேதவேதாங்கமுணர் ந்த முனிவர்பாதங்களை வணங்கினன். அருமையாகியதவமுடைய வசிட்ட முனிவர் ஆணையால் அக்கலைக்கோட்டுமுனிவர் பாதங்களைத்தொழுது உப சாரமொழிபலபுகன்று இறைவனேயானுய்ந்தேன், இனிப்பெறக்கடவ செல்வம் பிறிதில்லை, நின்னருளால் இடரினின்றுநீங்கினேன் என்று கூறக்கேட்டுக் கலை க்கோட்டுமுனிவரும், அரசர்பெருமானுக்குப் பல ஆசிகள்கூறி தம்மோடுவந்த மாதவருடன்வழிக்கொண்டு தேர்மிசை யேறிப்போயினர்.

இராசமகிஷிமார் மூவரும் சிறிதுநாள் சென்றபின்னர் கருப்பவேதனையும் வருத்தமுந்தோன்ற முகமதியேயன்றி அழகே யொருபடிவங்கொண்டதென் னும் உடன்முழுதுமதிபோலும் விளர்த்தது. இவ்வாறுபருவநேரவே, நிலமகள் வாழ்வடையவும், புனர்ப்பூசமும், தேவர்களும், கடகமும் எழுந்துதுள்ளவும், சித்தரும், இயக்கரும், அரமகளிரும், மெய்யுணர்ச்சியையுடைய முனிவரும், அயர்வறு மமரர்களாகிய வித்தருமுத்தரு நெருங்கியார்க்கவும்;

ஒருபக லுலகெலா முதரத் துட்பொதிந்
தருமறைக் குணர்வரு மவனை யஞ்சனக்
கருமுகிற் கொழுந்தெழில் காட்டுஞ் சோதியைத்
திருவுறப் பயந்தன டிறங்கொள் கோசலை.

இதன்பொருள். ஒருகாலத்தில் உலகமனைத்தும் தன்வயிற்றிற்பொதிய அருமை யாகியவேதங்களா னுணர்தற் கரியானும், அஞ்சன நிறமுள்ள பெரியமுகிற் கொழுந் தின் சோதியுமாகிய இறைவனைச் செவ்வேபயந்தனள் கற்பின்வரலாற்றினையுடைய கோசலை. எ-று.

இறைவன் ஒருபாலகனாகப் பாற்கடனவெண் அறிதுயில்செய்வான்கற்பாந்தத்து எவ்வுயிரையும் தன்னகட்டிற் பெய்துகிடத்தலின் 'ஒருபகலுலகெலா முதரத்துட்

பொதிந்து' என்றும், இங்ஙனம் தோன்றியமைகூறலின் 'அருமறை' என்றும், அவற்று றுங் காண்டற் கரியனாகலின் 'உணர்வருமவனை' என்றும், கார்முகில் தற்பயன் கருதாது பிறர்பயன்கருதியே உபகரித்தலுடைமைதோன்ற 'கருமுகிற்கொழுந்தெழில் காட்டுஞ்சோதி' என்றும், அன்னோனை மகவாகப் பெறுவதனுலெய்தும் செல்வம் பிறி தில்லை யென்பார் 'திருவுறப்பயந்தனள்' என்றும், அவரின்னரென்பார் 'கோசலை' என் றுங்கூறினர். ஒருபகலென்றது கற்பாந்தகாலத்தை, கருமுகிற்கொழுந்தெழில்காட்டுஞ் சோதியென்புழித் தொழிலுவமமும்வண்ணவுவமமும் விரவிவந்தன. உயர்வு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. மாதர்க்குக் கற்பினுஞ்சிறந்தது பிறிதின்மையின் 'திறங்கொள் கோசலை' என்றடைகொடுத்துக்கூறினர். பொதிய என்றது திரிந்துநின்றது.

ஆசையும் விசும்புநின் றமர ரார்த்தெழ
வாசவன் முதலினர் வணங்கி வாழ்த்துறப்
பூசமு மீனமும் பொலிய நல்கினாள்
மாசறு கேகயன் மாது மைந்தனை.

இ-ள். திசையினும் விண்ணினு நின்று அமரரார்த்தெழவும், இந்திரன் முதலிய இறைவருமவ வணங்கிவாழ்த் தெடுப்பவும், பூசநாளு மீனலக்கினமும் பொலிவெய்தவும், மாசகன்ற கேகயன் மகளாகிய கைகேசி மைந்தனை யீன்றாள். எ-று.

புனர்ப்பூச நான்காம்பாதமும், பூசம் ஆயிலிய மிவற்றின்நாற்பாதங்களும்,கடகலக் கினமாகலிற் சந்திரனும், மீனத்திற்குரு நிற்றலானும் பூசமு மீனமும் பொலிய வென் றும், இவள்போன்றவுருவினு நலனிலும் பிறரின்மையின் 'மாசறு கேகயன்மாது' என் றுங்கூறினர். கற்பாந்தத்தழியுந் தேவரை 'அமரர்' என்றது உபசாரவழக்கு.

தளையவிழ் தருவுடைச் சயில கோபனும்
இளையுமந் தரமிசை கெழுமி யார்ப்புற
அளைபுகு மரவினோ டலவன் வாழ்வுற
இளையவற் பயந்தன ளினைய மென்கொடி.

இ-ள். மலர்முருக் கவிழ்கின்றகற்பகத்தருநிழலில்வதியும்இந்திரனும், அமரர்களும் அந்தரத்திற் சேர்ந்தார்ப்பவும், ஆயிலியமும் கடக லக்கினமும் வாழ்வெய்தவும், இளைய வனைப்பெற்றனள் இளையவளாகிய கொடிபோல்கின்ற சுமித்திரை. எ-று.

இளை ஆகுபெயர். மலைகளின் சிறகை வயிரப்படையோச்சி யரிந்தானாகலின் 'சயிலகோபன்' என்றதென்க. மேற்கூறிப்போந்தவாறே ஆயிலிய நாற்பாதங்களுங் கடக லக்கினமாகலின் 'அளைபுகு மரவினோடு' என்றார். அங்ஙனங் கூறிப்போந்தமை இவரும்அரவரசாகிய பெருந்தகையின் அமிசாவதாரமாகலின் அந்நாளி லவதரித்தமை தோன்றற்கென்க.இவர்அவ்வமிசாவதாரமென்பதனைப்பின்னுமிவ்வாசிரியரும்'ஆதி மூர்த்தியொத்தான்' என்பதனானுமுணர்க. மென்கொடி அன்மொழித்தொகை. தளை யவிழ்தரு வென்பதன்முன் மலரென்றொருசொல்வருவித்துரைக்க. அவிழ்தருஎன்பது வினைத்தொகை, ஈண்டெல்லைப் பொருட்டாகநின்றது. இதனைச் சேனாவரைய ருரை யானுமுணர்க. தனக்குப் பகையாகிய மேகநாதனைப்பொருதுவென்று அவற்குமீட்டும் அப்பதநல்குபவன் ஆகலின் அக்குறிப்புத்தோன்ற 'தளையவிழ்தருவுடைச் சயிலகோப னும் இளையுமந்தரமிசை யார்ப்புற' என்றும், இதுகாறும் வெளிப்படாதுநின்ற அவ் விந்திரன் அவனைக்கொல்லுங் கூற்றுவன்றோன்றலின் இனியஞ்சாது வெளிப்பட்டா னென்பது தோன்ற 'கெழுமி' என்றுங்கூறினர்.

படங்கிளர் பஃறலைப் பாந்த ளேந்துபார்
நடங்கிளர் தாமறை நவில நாடகம்
மடங்கலு மகமுமே வாழ்வி னோங்கிட
விடங்கிளர் விழியினுண் மீட்டு மீன்றனள்.

இ-ள். படம் விளங்கும் பலதலைகளையுடைய அரவாசால் தாங்கப்படுகின்ற நிலமகளும், வேதங்களு நடிக்கவும், சிங்கலக்கினமு மகநாளும் வாழ்வெய்தவும், விடந்தங்கிய கண்ணுளாகிய சுமுத்திரை மீட்டும் பெற்றனள். எ-று.

மறை என்புழி இறந்ததுதழீஇய எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. மகம் பூச நாட்களின் நாற்பாதமும் அத்தநாண் முதற்பாதமுஞ் சிங்கல்க்கினமாகலின் 'மடங்கலு மகமுமேவாழ்வினோங்கிட' என்றார். இவ்விலக்கினங் கருதியே யிவரைச் சத்துருக்க னென்றார்போலும். மீட்டென்பது பிறிதுமொன்றுண் டென்பதுபட வினைமாற்றாய் நிற்பதோ ரிடைச்சொல். இதனைப் 'பேச்சின்மை மீட்டதன்றேல்' என்புழி மீட்டென்ப தற்குப் பேராசிரியர்கூறுதலானுமுணர்க. நடமென்றது நாட்டியத்தையன்று. கூத்தின் பொதுமையை. பஃறலையென்றது பண்புத்தொகைச் சந்திமுடிபு வேறுபாடென்று உணர்க. ஒரு நோக்கு நோய்நோக்காகலின் 'விடங்கிளர்விழி' என்றதென்க.

இவ்வாறு திருவவதரிக்கவே அந்தரத்தில் அரமகளிர் நடித்தனர், அமுதமயமானவேழிசைப்பாட்டினைக்கின்னரர்பாடினர், தேவதுந்துபிமுதலியவாத்தியமுழங்கின; அமரர்முழுதும் அரக்கர்மாண்டனரென்ற பெருமகிழ்ச்சியால் தலைதெரியாமல் அங்குமிங்குந்திரிந்தனர். சூதிகாகிருகத்திலிருந்த சிலதியர் மிக்கமகிழ்ச்சியுடையராய் அரசர்பெருமானுக் கோடோடியும்வந்து மக்களுதயஞ்செய்தமையைத் தெரிவிக்கவே; அந்தணாளர் நாளுங்கோளுநின்றமை சீர்தூக்கி உலகினை உய்விக்குந்திறலினையுடையார்தோன்றினரெனக் கூறிநின்றனர்.

மேடமா மதிதிதி நவமி மீன்கழை
நீடுறு மாலைகர்க் கடக நீதிசேர்
ஓடைமா களிறனை னுதய ராசிகோள்
நாடினே காதசர் நால்வ ருச்சரோ.

இ-ள். சிறந்த சித்திரைமாதம், நவமிதிதி, புனர்ப்பூசநாள், மிக்க மாலைப்போது, கடக லக்கினம், கூடிய இச்சுபதினத்தில் நெற்றிப்பட்டமணிந்து நீதிசேர்கின்ற பெருங்களிறுபோல்பவனாகிய சீராமபிரான் திருவவதாரஞ்செய்தனன். கோள்கள்இராசிகளிலேறி நின்றமை கணிதமாக்கள் ஆராயுங்கால் நான்கேகாதசர்உச்சமாகநின்றனர். எ-று.

ஏகாதசர் நால்வரென்றது நான்கேகாதசரென மாற்றியுரைக்கப்பட்டது. இவன் சன்மலக்கினத்துக்குப் பதினொன்றாமிடமாகிய இடபத்துச் சுக்கிரனும், அதன் பதினொன்றாமிடமாகிய மீனத்துக் குருவும், அதன் பதினொன்றாமிடமாகிய மகரத்துச் சனியும், அதன் பதினொன்றாமிடமாகிய விருச்சிகத்துச் செவ்வாயும், மேடமாமதி என்றதனாற் சூரியனு முச்சக்கிரகங்களாய் நின்றன ரென்பதூஉம்; மாலையென உடம்பொடு புணர்த்தினமையான் சூரியனோடு புதனும், குருலக்கினத்தும், நான்கிற் சனியு மிருப்பதனான் இராகுவும், புனர்ப்பூசநாளாகலின் இலக்கினத்திற்சந்திரனும், இராகு நின்ற நிலைமையானே கேதுநின்ற நிலைமையும், மீன்கழை யென்றமையானே இவன் மரகதப் படிவமுடையானென்பதூஉம், ஏனையானைகள் போல்பவன் அல்லனாகலின் நீதிசேர் என்பதூஉம், உச்சக்கிரகம் உச்சனைநோக்கிற் பிச்சையேற்றிடினுங் கிடைக்கப்பெறுமற் கானின்கண் ணூனின்றி யிருந்தானென்பதூஉம், ஏழிற் செவ்வாய்நின்றமைபாற் களத்திரதோடமும், சுக்கிரன் ஒன்பதாமிடத் துச்சமாகலின் ஏகபத்தினி

விரதமுடையானென்பதூஉம், பிறவும் பெறப்பட்டன. மேடமதியென்றது மேடமாமதியென்றமையான் மாதங்களுள் அரசமாதமெனப்பட்டு அஃதுஇறைவன்தோன்றுவதற்கு ஏற்புடைத்தாயினமை தோன்றக்கிடந்தது. இதுநிற்க, பங்குனிமாதமன்றோ திருவவதார மனுட்டிப்பதெனின் சாந்திரமானமே விரதமனுட்டிப்பதிற் சிறந்தமையானும், அது சாந்திரமான மேடமாத மாதலானும் குற்றமின்மை தெளிக. இங்ஙனங் கூறாது வேறுகூறிச் சொற்குணம் வாளாபோயினருமுளர்.

என்று உலகமுண்டபெருவாயனும் உலப்பில்சீர்த்தியம்மானும், ஆராவமுதனும், அயர்வறு மமரர்கட்கிறையும், கரியகோலத் திருவுருப்பெருந்தகையுமாகிய அறவாழியந்தணனுக்குச் சாதகம் கூறியபின்பு, மற்றைமூவருக்கும் அவ்வாறே தக்காங்கு பொன்னேலையில்வளர்ந்து சுரகுருவாகிய வியாழபகவானும் வாழ்த்தெடுப்புக் கூறிநின்றனர். அரசர்பெருமான் வசிஷ்டமுனிவரோடு நீராடிவித்தினொடு பொருளும்தானமாகவழங்கிச்சங்கத்தொனிமுழங்கத் தமது மழவுருப்பெருந்தகையார் திருவுருக்காண்பான்சென்று, பூமிமுழுதும் ஏழாண்டு இறைப்பொருள் கொடா தொழிக, நிதிச்சாலை தாணிக்கிவிட்டு வழியார்வார், தாம்வெறுக்க வெறுக்கையைமுகந்துசெல்கஎன்று வள்ளுவருக்குக் கட்டளையிட்டுப் பறையறைவித்து அரசர்படையொழிக; அவர் தம்பதிகட்குச்செல்ல விடைபெறுக என்றும்; அந்தணர் நியமமும், குறையின்றியோங்குக, யாண்டும் கடவுளர்க்குக்குற்றமற்றசிறப்பொடு பூசனையும்நடத்துக, சிவாலயம், விஷ்ணுவாலயம், பிரமாலயம் என்பனகளிற் பழுதாயின சீர்ணோத்தாரணஞ் செய்க, பிராமணர்வசிக்கும் அக்கிராரங்கள், நாற்சந்தியும், முச்சந்தியுமான இடங்கள்சமைக்க, காலைமாலை, உச்சிமுதலிய அறுகாலங்களிலும் கடவுளர்க்கு மாலை, அணிமுதலியவைதிருந்தச்செய்க, என்று கட்டளையிடவே நகரமாந்தரும், மின்னையொத்த மாதரும்கேட்டு, இன்பக்கடலிலழுந்தலின்முறை முறையன்பினால் உடன்முழுதும்புளகரும்ப, கண்களிற்றொடுமணற்கேணியின் ஆனந்தக்கண்ணீர்வார, அவசமாய்த்தீர்த்தனாகிய ஆதிபகவன்திருவவதரித்தானென்றுகருதியோ சொல்லினர்க்கெல்லாம் நிதிக்குவையையீந்தனர். இங்ஙனமாக மாதர்கூட்டமும், மாந்தர்கூட்டமும், பாங்கியர்கூட்டமும், பாங்கர்க்கூட்டமும் இடமகன்ற நகரமுழுதும் பச்சைப்பந்தலிட்டு, பூமாலைதூக்கிக் கமுகு வாழைமுதலிய நட்டு அலங்கரித்துக் களபமும், நானமும், சுண்ணமும், வீதிதோறுந்தூவி, செய்விழவயர்ந்துடன்னிருநாளும் களிப்புடன்ஆனந்தங்கொண்டாடி பத்துநாளுங்கடந்த இரண்டாநாளில் உத்தாபனஞ்செய்து மெய்மறந்திருப்ப, வசிஷ்டபகவான் அம்மக்களுக்கு நாமகரணஞ்செய்வானாயினன்.

காமலை யத்தளர் கைக்கரி யெய்த்தே
அராவணை யிற்றுயில் வோயென வந்நாள்
விராவி யழைத்தருண் மெய்ப்பொரு ளுக்கே
யிராம னெனப்பெய ரீந்தன னன்றே.

இ-ள். முதலை வருத்த வருந்திய துதிக்கையையுடைய யானை அரவணையிற்றுயில் வோனேயென்று அஞ்ஞான்று உள்ளங்கனிந்து கூவிய மெய்ப்பொருட்கு இராமனென்று நாமகரணஞ்செய்தனன் வசிட்டமுனிவன். எ-று.

முதலே வருத்த வருந்திய கைக்களிற்றைக்காத்தோன் வியூகநான்கனுள் பாற்க டற் பரமனாகலின் அங்ஙனந்தோன்ற இங்ஙனங்கூறியதென்க. இப்பெற்றிநோக்கியன்றே இவ்வாசிரியரும் பிருண்டும் "மெய்ந்நெறிகண்ட வரதன்" என்றதென்க. ஐம்புலனவி த்த அருந்தவரும் இவன் காடுபுக்க ஞான்று இவன் படிவத்தின் விழைந்தமைநோக்கி யன்றே 'இராமன்' என்றார். இங்ஙனநிகழ்ந்தமை பின்னரன்றே முன்னரே கருதி யிட்டமை எப்பெற்றிநோக்கி யெனின், அவர் முக்காலமு மொருங்குணர்ந்த முனி வராகலிற் குற்றமின்மைதெளிக. ஏனையர்க்கு மிப்பெற்றியறிந் தோர்ந்துணர்க. அந் நாளென்றது அக்கரா ஈர்ப்பக் கடகளிறோலிட்ட காலத்தினை. முனிவர்விழைந்த மையை இவ்வாசிரியரும் கோசிகர் கூற்றாக "ஆடவர் பெண்மையை யவாவுந் தோளி னாய்" என்றும், "கண்டாரை யழகாற்றுவக்குண்ணவல்லான்" என்றும் பெரியாரும் பணி த்தமையானு முணர்க. தெய்வயாண்டி லாயிரயாண்டு முதலே நீரிலிழுப்ப யானை கரையிலிழுப்ப அலைப்புண்டு அதற்குத் தன்னிலமாகையானும் அபிமத சித்தியாகையா னும், ஆற்றன் மிகுதியாகையானும்; தனக்குத்தன்னிலமாகையானும், அபிமதவாதாயத் தானும், ஆற்றல்குறைவானும், புழைக்கையமிழ்த்துந் தன்மை விளைவதனானே இதனி னாங்கிலதென்னுந் தாழ்வெய்தி இஞ்ஞான்று தான் புகலிடமெய்துவது இறைவன் பாலாகலின் 'கராமலே யத்தளர் கைக்கரி யெய்த்தே - யாரவனை யிற்றுயில்வோய்' எனக்கூறினர். அன்றீற்றே-தேற்றப்பொருட்டு. அசைநிலை யென்பாருமுளர்.

> கரதல முற்றொளிர் நெல்லி கடுப்ப
> விரத மறைப்பொருண் மெய்ந்நெறி கண்ட
> வரத னுதித்திட மற்றைய வொளியைப்
> பரத னெனப்பெயர் பன்னினர் நாமம்.

இ-ள். அங்கைநெல்லிக் கனிபோல மெய்ம்மைகூறுதலேவிரதமாகவுடைய மறை யின்பொருளுணர்த்தும் இறைவன் தோன்ற மற்றை நித்தனைப்பரதனென்று நாமகர ணஞ் செய்தனன். எ-று.

கரதலமுற்றொளிர் நெல்லியென்பதனை வடநூலாரும் அத்தாமலகமென்ப. மெய் ம்மை கூறுதலே விரதமாகவுடைமையின் 'விரதமறை, என்றும், அன்னவடிவாயதனை அயனுக்கோதலின் 'மெய்ந்நெறிகண்டவரதன்' என்றும், அவன்போலும் மரகதப்படிவ முடையானாகலின் "மற்றைய" என்றும், நித்தருளொருவராகிய சுதரிசனமென்னும் ஆழியங்கடவுள் அமிசமாகலின் "ஒளியை" என்றும், அவனைப் பரதனென்றாராகலின் 'பரதன்' என்றுங் கூறினர்.

பரதனென்றமை:—இறைமக னேவலான் அயர்வறு மமரர்கட்கிறைவன் கான்பு கலும், இறையும் உனையகலகில்லேனென்று இளையோன் பின்படரலும், இத்துணை நிகழ்ச்சியைக்கேட்டு இறைமகன் வான்புகலும், சத்துருக்கன்நின்னையல்லது அறியே னென்றுங் கூறியவமையத்தும், தன்முன்னோன் ஆணைக்கஞ்சிப் புவிப்பொறை பொறு த்தலின் என்க.

> உலக்குநர் வஞ்சக ரும்பரு முய்ந்தார்
> நிலக்கொடி யுந்துயர் நீத்தன் ளிந்த
> விலக்கரு மொய்ம்பின் விளங்கொளி நாமம்
> இலக்குவ னென்ன விசைத்தன னன்றே.

இ-ள். வஞ்சகராகிய அரக்கர் கெடுவாராயினர்; அமரரும் பிழைத்தனர்; நிலமக ளும் துன்புறுதல் ஒழிந்தனள்; அவ்விலங்கற்கரிய ஆற்றலையுடைய விளங்குநித்தனை இலக்குமணனென்று நாமகரணஞ் செய்தனன். எ-று.

உலக்குறனென்புழி நகரமெய் நிகழ்காலங்காட்டிற்று. உம்மையிரண்டு முறையே இறைந்ததுதழீஇயது மெதிரதுதழீஇயதுமாம். கனிதவவில்லின் பேராற்றலுடையானாகலின் 'விலக்கருமொய்ம்பு' என்றும், பொன்னிறமுடையானாகலின் 'விளங்கு' என்றும், அரவரசாகிய பெருந்தகையமிசமாகலின் 'ஒளி' என்றும், அவன் தன் சுடிகையின் இவ்வுலகைப்பொறுத்த ஆற்றலோன்ற 'இகரச்சுட்டை' விரித்தும், அவனே 'இலக்குமணன்' என்றாராகலின் 'இலக்குவன்' என்றுங் கூறினார். இலக்குமணனென்பது திரிந்துநின்றது. அங்ஙனங்கூறினார் இவன் அயர்வறுமமரர்கட் கிறைவனொடு கான்படர்ந்து அவன்குற்றேவல்செய்தமையாய பெருந்திருவுடைமைநோக்கி. இவன் பொன்னிறமுடையா னென்பதனைப் பிறண்டு மிவ்வாசிரியர் கூறலானுமுணர்க.

முத்துருக் கொண்டுசெம் முளரி யலர்ந்தால்
ஒத்திருக் கும்மெழி லுடையவிவ் வொளியால்
எத்திருக் குங்கெடு மென்பதை யுன்னாச்
சத்துருக் கன்னெனச் சாற்றினர் நாமம்.

இ-ள். முத்தம் படிவங்கொண்டு செந்தாமரைமலர்ந்தா லொத்திருக்கும் அழகமைந்த இந்நித்தபால் எக்குற்றமும் ஒழியுமென்று உய்த்துணர்ந்து சத்துருக்கனென்று நாமகரணஞ் செய்தனன். எ-று

இவன் வெண்ணிறமுடைமையின் 'முத்துருக்கொண்டு' என்றும், கண் கை கால் முதலியன செந்தாமரைபோல் தோன்றலின் 'செம்முளரி யலர்ந்தாலொத்து' என்றும், பாஞ்சசன்னியமென்னும் சங்கத்தின் அமிசமாகலின் 'ஒளி' என்றும், இறைவன்பால் அன்புடையார்க்கு எண்மையனாகலின் 'இகரச்சுட்டை' விரித்தும், இன்னோர்க்கு எத்துணைக்குற்றமு மொழியுமாகலின் 'எத்திருக்குங்கெடும்' என்றுங் கூறினார். சத்துருக்கனென்றமை: இவனைக்கண்டவழி மாற்றலர் மண்ணுண்ணும்படி கிடப்பதுகருதியென்க. இனிப்புறத்தேயுள்ள மாற்றலரன்றி அகத்தேயுள்ள ஐம்புலக்கள்வரையும் களைசெறுத்தானென்பார் அங்ஙனங் கூறினாரெனினு மமையும். எழில்நலமென்னும் துணையாய் நின்றது. இவன் இறைவன்பால் அன்புடையார்க்கு எண்மையான் என்பதனை 'அவனையல்ல தறியாத பரதனை யல்லது வேறொன்றறியாத படியானான்' என்பர் பெரியாரும். இது இல் பொருளுவமையணி. சத்துருக்குநன் என்பது திரிந்துநின்றது.

மெய்யொழுக்கமுடைய முனிவர்பெருமான் வேதோக்தமாக அந்நான்கு மக்களுக்கும் நாமகரணஞ்செய்யச் சந்தோஷித்துத் தமதுகையாற்கொடுத்த நிதியாகிய நதியால் வேதவேதாந்தமுணர்ந்த அந்தணரொன்னுங்கடலைநிறையச் செய்து, நீலோற்பலமலரும்தாமரைமலருமென்றுசொல்லும் ஓவியவுருவத்தொருவனையல்லது தனக்காவியும் உடலமும் இன்றெனத்துணிந்து உலகமுழுதுமுடைய அரசர்பெருமானிருந்தனன். இவ்வாறு நிகழ அமிர்தஞ்சொரியும்குதலைச் சொற்பேசிக் குறுநடையிட்டுநடந்து இருளைக்கீண்டதினகரன் எனவும், உதாத்தம் அனுதாத்தம், சுவரிதமென்னும் சத்தரூபமமைந்தசதுமறையெனவும், குமரர்கள் நால்வரும் குறைவற நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாகவளர்ந்து காதிணைதொளைத்து அரசன் செய்யவேண்டியகருமங்கள்எல்லாஞ்செய்துமுடித்துச் செங்கீரையாடி, தாலாட்டப்பெற்றுச், சப்பாணிகொட்டி, முத்தமளிக்கப்பெற்று, சிலதியர் வருக வருக, கண்மணியேவருக, ஐயவருக,

அமுதேவருக வருகவென விளிக்கின்று சாம,தான,பேத, தண்டமுறைப்படி மதியைக்கூவி அம்புலியைவருகவென அழைக்கக்கண்டு சிறுமியரிழைத்தசிற் றில்சிதைத்துச் சிறுபறைமுழக்கிச் சிறுதேருருட்டுவாராய் ஐந்துவயதுவா வித் தியாப்பியாசஞ்செய்யப்பெற்றுஏழாம்வயதில் அரசர்மரபின்முறைமையால் உப நயனஞ்செய்விக்க வேதம், வேதாங்கம், வில்வித்தை, யானையேற்றம், தேரே ற்றம், குதிரையேற்றம், முதலியபழகித் தேவர்கள் தனிநாயகனாகிய மைவண் ணப்பெருமான் இவ்வண்ணம் தன்சகோதரர் மூவருடன் வளர்ந்துவருநாளில் அருமறைமுனிவரும்,அமரரும்,நிலமடந்தையும், அந்நகரமாந்தரும் இருவினை துமிக்கும்மைவண்ணனாகிய இவனைவிட்டு ஒருபொழுது நீங்கலர்காதென 'இறையுமக லகில்லேன்' என்றவாறுநெருங்கியிருப்ப ஆதிபகவனும், இளவலும், நிலமகள் செய்தபெருந்தவமென்று சொல்லச்சிறந்தநதிகளிலும், மேகந்தவழுஞ் சோலை களிலும், வாவிகளிலும், சென்றடைந்து நெய்குழலுறுமிழைபோல ஒருவனை யொருவர் பிரியாது திரிவாராயினர். இவ்வாறே பரதாழ்வானும், சத்துருக்க னாழ்வானும்ஒருகணமேனுமெக்காலத்தினும்பிரியாராகிஎம்மையாளுடைய அற வாழியந்தணனும் இளையாழ்வானும்போலப் பிரியாதுட னுறைவாராயினர். இளவீரர் நால்வரும் முனிவர்கள் வசிக்கும் சோலைகளிற்சென்று அவரிடை அக்காலத்தில் நல்லனகேட்டுஇன்புற்று மாலைக்காலமாகமீண்டு எதிர்கின்றவர் கார்காலமேகம்வர அலர்கின்றபயிர்போலக் களிப்படைந்துநிற்ப அயோத்திநகர மே யடைவர். ஆபாலபண்டிதரனைவரும் இவர்கள் நீடூழிவாழியென்று பல்லா ண்டுகூறி தமதுமனத்தில் சக்கரவர்த்தியும், அவர் பட்டமஹிஷிமாரும்போலக் கடவுள் தியானம்செய்து களிப்பாராயினர்.

கடலும் கார்மேகமும் விளங்குகின்ற கமலமலர்மலர்ந்து வடவரையாகிய மேருவரையுடன்வருஞ்செயலேயென வேதங்களும் எட்டுதற்கரிய தனிமுத லாகிய ஆதிபகவனும், இளையாழ்வானும் வருவதுகண்டு நகரமாந்தர்கூறவும், எதிர்வருவாரைக்கண்டு இறைவன் முதிர்கின்றகருணையால் முகமலரநோக்கி யாதுகாரியமாகவந்தீர் ! உமதுமாளிகையில் யாவரும் சுகமாயிருக்கின்றனரோ! குமரர்வலியரோவெனஉரையாடியும்,குடிகளும் அகதிகட்குத்தந்தை யன்னுய் உம்மையாம் அசாகவுடையேமாகலின் எமக்கு யாதுகுறை ஓர்குறையுமேயின் று;உலகமுழுது மொருகுடைநிழலில் இப்பிரமகற்பம் வருந்துணையும் ஆள்க வென்று கூறிநிற்பவும். இவ்வாறு நகரமாந்தர்யாவரும் மெய்ம்மையான புகழ் மேவ இளையவீரர் மூவரும் குற்றமறத் தன்னடி நிழலைவிட்டு நீங்காதிருக்க சிரு ட்டி, திதி, சங்காரமென்னு முத்தொழிற்கும் காரணராகிய பிரத்தியுமனன், அநிருத்தன், சங்கருஷணன் என்னும் வியூகருக்கு முதல்வராகிய வாசுதேவ ரது திருவவதாரமாகிய பரம்பொருள் எழுந்தருளியிருக்க அரசர்பெருமான் உலகமுழுதும் தன்வெண்கொற்றக் குடைநிழலொதுங்க, தன்கடைவாயிலின் கண் வெற்றிமுரசறைய முனிவர்கள் வாழ்த்தெடுப்பக் கடையிடற்கரிய பெரு மகிழ்ச்சி என்னும் கடலில் அமிழ்ந்தி அரசுசெய்துவந்தான். இதுநிற்க,

## கையடைப்படலம்.

தனிநிலையுடைய கற்பகநாட்டு அமரர்கள் அடைந்தயிர்க்குஞ் சிந்தையராய் நினைத்தற்கரியதும்விசும்பினும்நீண்டதுமான சுதர்மனென்னுஞ்சபைபோல விளங்கும் தனது அத்தாணிமண்டபத்தில் சிங்கஞ்சுமக்கப்பெற்ற தோராசனத்தில் எழுந்தருளியிருக்கையில் வானில் உலாவித்திரியும் சாரணர்கள் தயரதசக்கரவர்த்தி கொலுவீற்றிருப்பதனால் இவன் நமது அரசனாகிய இந்திரனேயாமென முன்னமெண்ணிவந்தடைந்து பின் இவனுக்கு ஆயிரங்கண்ணில்லாமையால் அவ்வையநீங்கிச்செல்லவும் ஆண்சிங்கம்போன்ற பேராற்றலையுடைய இச்சக்கரவர்த்திமுன்பு நிலைத்திணை, இயங்குதிணையாகிய இருதிணையையும் தேவரோடு பிரமனையும் வேறுவிதிப்பேனென்று தொடங்கிய சினமிக்க பெருந்தவத்து விசுவாமித்திரனென்னும் கோசிகமுனிவர் அவ்வத்தாணிமண்டபமே நோக்கிவரக்கண்டு தன்மார்பிலணிந்த ஆரமுதலிய அணிகள் ஆகாயத்தில்தோன்றிய பரிதியங்கடவுளும் நமக்கு இத்துணையொளியின்றே யென்று அஞ்ச, ஒளிகொண்டுவிளங்க, தாமரைப்பூவில் எழுந்தருளியிருக்கும் நான்முகக்கடவுள்வரவுகண்டுஓடோடியும்சென்றுவணங்கும் இந்திரன்போலவிரைவினெழுந்துசென்று அவரது பாத தாமரைகளில் அடியற்றபனைபோல் விழுந்து வணங்கினான். அவ்வாறு அவரை வணங்கிச் சிறந்ததோர்பீடத்தி லெழுந்தருளச்செய்து அவர்பாதங்களுக் கர்ச்சனைசெய்துகைகட்டி வாய்புதைத்து நின்று தேவரீர் எழுந்தருள யான் என்னமாதவஞ்செய்தேனோ, இன்றுயான் செய்த தீவினையனைத்தும் பாழினவென்றுபேசிநிற்கக் கோசிகமுனிவர் கூறுகின்றார்.

பகைவரைக்கடந்த ஊன்மிசைந்த நெடியவேலைக்கைக்கொண்ட புரவலர்பெருமானே! எம்போன்றமுனிவரும், அமரரும் இடையூறு நேர்ந்தவழி வெள்ளிமலையையுடைய இறைவனிடத்தும், பாற்கடற் பரமனிடத்தும், பதுமபீடப்பெருந்தகையிடத்தும், கற்பகநாட்டுத் தலைவனிடத்தும், அழகியமணிமாடங்களையுடைய அயோத்தியர் பெருமானாகிய நின்னிடத்துமல்லாமல் வேறிடம்யாங்கள் புகலடையத்தக்கதன்று. மேலும் இனிமையான சற்பகத்தரு தேனை இடையேதுளித்து நிழல்செய்யு மிருக்கையைவிட்டு இழிந்துவந்து என்றுபழியாமல் அடைந்தாரைக்காக்குநின் வெண்கொற்றக்குடைநிழலிலொதுங்கிக் குறைதீர்ந்து நிற்பதைக்கண்டு குன்றுபோலுயர்ந்த குவவுத்தோளையுடைய சம்பரனை நின்மனைவியாகிய கைகேசி தேரின்பரிகளைத்தூண்டிச் செலுத்தப்பொருது அவன் குலத்தொடும்வென்று நீ கொண்டளிக்கப்பெற்ற வாழ்வையன்றோ இன்றும் இந்திரனைச் சகலதேவரும் சாருவபௌமனெனத் துதிக்கஅவன்அரசெய்திவாழும்வாழ்க்கை! என்றுகூறவே, அரசர்பெருமானும் அவரது திருமுகத்தை யேறவெடுத்துநோக்கி ஒருவராலும் கரையிட்டுத்தடுப்பதற்கரிய சந்தோஷசாகரத்திலழுந்தி இருகைகளையுந் தலைமேற்குவித்து அரசெய்தி யிருந்தபயனை யின்றுதான் அடையப்பெற்றேனென்றுசொல்லி இனித்

தேவரீர் இங்கு எழுந்தருளியகாரியம் அருளிச்செய்யவேண்டுமென்று இரந்து சொல்லக்கண்டு விசுவாமித்திரமுனிவர் கூறலாயினர்.

தாருவனத்தில் யான்செய்யும் தவங்களுக்கும் வேள்விகளுக்கும் இடையூறுசெய்வாராகத் தவஞ்செய்வோரை வருத்துகின்ற காமம், வெகுளி, மயக்கமென்னும் முப்பகைபோல நின்ற அரக்கர் இடையேவிலக்காதவண்ணம் யுத்தஞ்செய்து காக்கவேண்டும். அவ்வாறுகாப்பதற்கு நின்மக்கள் நால்வருள்மயர்வறமதிநலநல்கும் உயர்வற வுயர்நலமுடைய அயர்வறுமமரர்கட்கிறைவனெனப்படுங் கரியகோலத் திருவுருப்பிரானையே தருதியென்று உயிரைவருத்துங் கூற்றுவனுமெனக்கூறினர். தவக்கடலாகிய விசுவாமித்திரமுனிவர் இவ்வாறு கூறக் காலனையொத்த வேலையுடைய சக்கரவர்த்திக்கு மார்பிலெறிந்தவேலாலுண்டாகிய விழுப்புண்ணில் அனல்நுழைந்தாற்போலச் செவித்தொளை சார்தலும், உள்ளத்திலே பொருந்தியதுயரம் பிடர்பிடித்துத் தள்ளுவதனால் ஆருயிர் நின்றூசலாடாநிற்க, கண்ணிழந்தவொருவன் கண்பெற்றிழந்ததுபோலக்கொடுந்துயர்க்கடலின்மூழ்கி மாலைபோலுமிழிகின்ற தேன்சொரியும் நறிய மலர்மாலையணிந்த அரசர்பெருமான் ஒருவாறுதுயரநீங்கி ஐயனே என்மகனோ படைபொருதுஅறியான், பசுந்தாமரைக்கட்குருந்து, அரக்கரோ இரவிற்றிரியும் வாழ்க்கையர்; அவர்மேற்செல்லும் போருக்கு யானேதகுதி! கங்கையைச் சடையிற்கரந்த சிவபிரானேனும், நான்முகக்கடவுளேனும், இந்திரனேனும்புகுந்து அவர்க்குத்துணைசெய்யவரும் இடையூற்றுக்கிடையூறாக யானெ காப்பேனென்றுகூறினன்.

அதற்கு விசுவாமித்திரமுனிவர் கோபத்தோடெழுந்துநின்றதனால் மண்படைத்தபிரமனது காலமுடிவு அன்றுதானென இமையாநாட்டமுடையதேவர்கள் சந்தேகிக்கவும் சூரிய சந்திரரொளிக்கவும் அங்குமிங்குந்திரிந்தனவும்நின்றனவுமாகிய இயங்குதிணை நிலைத்திணையென்னு மிருவகையுயிர்களேங்கவும், மேலோங்கிய கொழுங்கடைப்புருவநெற்றிமுற்றவும், கண்சிவந்து பத்துத்திசையும்போ யிருள்மூடவும் ஒருமொழிகூறுகின்றார். புரவலர்க்கரசே! ஆதியஞ்சோதியுருவை யங்குவைத் திங்குப்பிறந்த கரியகோலத்திருவுருப்பெருந்தகையை ஞானக்கண்ணாற்பாராது ஊனக்கண்ணாற்காணுநீ அவனையோ சிறியனென்று இகழ்ந்துகூறினாய்; அவனது பெருந்தகைமையோ நீ யெம்மாத்திரமுமறியாய், ஞானக்கண்ணுளரே அறிவர்; நாட்டார் சேவிக்கின்ற நீயறியப்படாதுகாண் காட்டிற்றவஞ்செய்வாரறியு மவனதுசிறப்பினை; வில்லுங்கையுமாயிருக்கின்ற நீயோ அறிவை புல்லுங்கையுமாயிருக்கின்றநானேயறிவேன், தலையுஞ்சடையுமாயிருக்கிற நானறியுமத்தனையும் தலையுமுடிமாயிருக்கிற நீ யறியமாட்டாய், சிங்கம்சுமந்த ஆசனத்திலிருக்கின்றநீ பதுமாசனத்திலிருக்கின்ற நானறியுமளவறியாய்; நேதிநேதியென்று அருமறைநான்குமேயறிந்தனவோ என்று அவ்விராசசபையில் கோபித்துநின்றகோசிகமுனிவன் கருத்தினையறிந்த வசிட்டபகவான் நீ பொருத்தருளென்று கூறிப் பின்பு உன்மகனாகிய சிராமபிரானுக்குப் பொருந்துதலரிய உறுதியெய்துங் காலம்நேர்ந்தது அதனைத் தடுத்தலையேயென்று பின்னும் கூறுகின்றான்.

பெய்யுமாரியினால் பெருகுகின்ற வெள்ளஞ்சென்று பெருங்கடலிற் புகுதல்போல இறைவன்பாற் கல்விப்பெருக்கம்பெற்றுள்ள முனிவர் அவனிடத்தேயே கொடுக்கின்றனர் ஆகையால் உன்மகன்பால் அளவில்லாத கல்வியும் பெருமிதமு நேருங்காலநெருங்கியது என்றுசொல்லிய குருவாக்கியங்கொண்டு அரசர்பெருமான் திருமகள்கேள்வனைச்சென்று கொணருங்கோளென்று ஒற்றரைவிடுப்பக் கற்றவர்பரவும் கருங்கடல்வண்ணன் தம்பியொடும்வந்து முற்றத்துறந்தமுனிவர் இருவரையும்பணிந்து பெற்றெடுத்ததந்தையையும்வணங்கினின்றனன். அதுகண்டுதந்தையாகிய தசரதசக்கரவர்த்தி நான்மறையுணர்ந்தமுனிவர்பிரானுக்குக்கையடையாகக்கொடுத்து இவனுக்குத்தந்தையுநீயே, தாயுநீயே இவனே உம்மடைக்கலமென்றுவிடுத்து உமக்கினியந்த பணியை இவரிடம் பெறலாமென்று கூறினன்.

அங்ஙனம்பெருமானையும் இளையபெருமானையும் கொடுக்கப்பெற்றதனால் சிந்தையின்கண் கோபந்தவிர்ந்து இனிமையானசொற்களாற் புரவலர்பெருமானைவாழ்த்தி மேலடுத்தவேள்வியை இனிச்செய்துமுடிப்பேனென்றுகாமம் வெகுளி மயக்கமென்னுமுக்குற்றந்தீர்ந்த முனிவர்பெருமானாகிய விசுவாமித்திரர் அத்தாணிமண்டபம்விட்டு நடந்தனர். இளையபெருமாளுடன் உலகந்தாங்கு மொருவன் வெற்றிவாளை மருங்கிற்கட்டிக்கொண்டு என்றும் மெய்ம்மைபோலும் அழியாத அக்ஷயதூணிகொண்டு இரண்டுமலைபோலோங்கிப் பரந்துணைத்தோளில் ஒப்பில்லாதவில்லொன்றுதாங்கி அரசர்பெருமான் இன்னுயிர் வழிக்கொண்டுநடந்ததென்னச்சிறப்பினையுடையமுனிவர்பிரானை அவனிழலேபோலத்தொடர்ந்து பொன்மயமான அந்நகரின்மதிலைக்கடந்து வரங்கள்பெற மாசறத்தவங்கள்செய்தார் வாழப்பெற்றமுத்திக்ஷேத்திரங்களில்முதன்மையாக எடுத்துக்கூறப்படும் அந்நகரினைக்கடந்து நாடகசாலையில் ஆடுவார் காற்சிலம்பேபோல ஒலிக்கு நீரொழுக்கினையுடைய சரயுநதியைத்தாண்டிக் கரும்பு காற்றூன்மோதக் கமுகினின்றும் பெருக்கெடுத் தோடுகின்ற தேன்வரம்பை மீறிடுமருதநிலங்கடந்து அரும்பன்ன கொங்கை யாயிழையார்மென்குழலேபோலச் செறிந்தவண்டுகள்வாழுஞ் சோலையிற்றங்கிச் சற்றுவிடாய்தீர்ந்து பின்னேபுறப்பட்டு ஆகாயத்தையளாவிய கார்மேகம்தவழுநெற்றியில்நால்கின்ற பட்டத்தினையணிந்த யானையைப்போலவிளங்கும் அத்தமானகிரியின் வலிய முகட்டில்சூரியனது சப்தாவென்னும்பொருளுடைய பச்சைக்குதிரையேழேறயாறுமேறி யப்பாற்சென்று; திருவுக்குத் திருவாகியசெல்வனும், தெய்வத்துக்கரசும், செய்யதாமரைக்கண்ணனும்,உருவச்செழுஞ்சுடராழிவல்லானும், உலகமுண்ட செவ்வாயனும், திருமறுமார்பனுமாகிய அறவாழியந்தணனைத்தொழுது தேவர்கட்குத் தன்னுவின் அவியையளிக்கும் எழுநாவாகிய அக்கினிகாரியமென்னும்வேள்வியில் தவழுங்கரும்புகையைக்கண்டு இதையாதென்று தன்னையடைந்தார்க்குத் தன்னடிச்சோதிநல்கும் தாரகப்பிரமமாய் எவர்க்குமேனின்ற ஆதிபகவன்கேட்டருள அதுகேட்டு விசுவாமித்திர முனிவர் கூறுவாராயினர்.

## தாடகைவதைப்படலம்.

திங்கள்தங்கிய சடாமகுடத்தையுடைய பரமசிவத்தின்மேல் மன்மதன் தன்பெண்சேனையுடன் சென்று பின் கரும்பாகிய வில்லைவளைத்துவண்டாகிய நாணேற்றி மலராகிய அம்புதொடுத்துவிட அவ்விறைவன் தன் நெற்றியிலுள்ள தீவிழியாலெரிக்க அக்கோபத்தீக்கு ஆற்றாமல் பூளைப்பூப்போல அவனங்கம் வெந்து சாம்பராய்விழ அக்காரணத்தால் அவன் அனங்கனானான். அவன் அங்கம் விழுந்துசிந்திய இடமாகையால் இதற்கு அங்கநாடென்றுபெயர். அக்காரணக் குறியையுடைய காமனாச்சிரமுமாகும். பற்றுகின்ற அவாவும், வேருடன்பசையற்றுப் பிறவிக்கிழிந்துபோக யேலாகிய மெய்யுணர்ச்சியையுடையவர்கள் அறிவுசென்றெய்திய சிவபிரான் யோகஞ்செய்திருந்த தானமெனின், இத்தானத்தின் சிறப்பினையெடுத்து விரித்துரைக்கப்படுமோ என்று சொல்லிக்கொண்டே விசுவாமித்திரமுனிவர் போகையில் தம்மை எதிர்கொண்டழைத்த முனிவர்களுக்குப் பெருமாளுடனும், இளையவனுடனும் விருந்தினராகி அங்குத்தங்கியிருந்து சூரியன் உதயமாக ஒருசுடுகின்ற பாலைவனமடைந்தனர். மேலும் அந்நில மெப்படிப்பட்டதெனின், சூரியன் நிலத்தின் பசையறவுண்டு களிக்கும்படி விருதுமேற்கொண்டு உலாவருகின்ற வேனிலே யல்லாமல் வேறொரு இருது இல்லாமையால் அக்கினிதேவனுக்கும் நினைக்குங் காலத்தில் நெஞ்சமும் வெந்துநீறாகும். அப்பாலை வனத்தைக் கண்ணாரப் பார்க்கக் கண்ணும்வெந்துபோம். பின்னும் பூமியினிடத்து அதன்வெப்பத்தை யெடுத்துச்சொன்னால் அப்படி யெடுத்துச்சொல்லும் நாவுமே நீறாய்விடும். இருளும், வான்முகடும் வெந்துபோம், விடியுமெனிற் சூரியனும் வெந்துபோம். மேகமும் கரிந்துபொரிந்துபோய்விடும். மின்னலோடிடியும்வெந்துவிடும் என்று சொல்லுமிடத்துப் பூமியில்வெந்து நீறாகாப்பொருள்களெவைகள்.

அப்பாலைவனமோ மேகம்போற் சரமாரிபெய்து வேலாற்றொளைப்புண்டு போர்முகத்தில் வருந்திய கொடியோர்மானமாகிய மணியையிழந்து அஞ்சிசிற்பவர்நெஞ்சேபோற்சுடுகைஎன்றுமாறாமலிருக்கும். அப்பாலைவனத்திலெல்லாம் பேய்பிளந்தாற்போல நின்று உலர்கின்ற பெரிய கள்ளிவிருக்ஷத்தின் அடிப்பாகமானது சிந்தியவயிரங்கொண்ட அகிற்கட்டைகளும், தழைகளில்லாத மூங்கில்கள் பிளந்துசிந்தியவெண்மையான முத்தினங்களும் விடத்தையுடைய பாம்புகளின் வாயினின்றுஞ் சிந்திய மணிகளுமே பரந்திருக்கும். நிலம் கடினத்தன்மையுடையதன்றி நெகழுந் தன்மையில்லாமையால் அந்நிலமிருந்த வண்ணமிருத்தலேயல்லாமல் அப்புறமோடாமலும்,அந்நிலத்துக்குத் தேவதையாகிய காளியும் ஓடாமலும், ஆகாயத்தில் செல்லும் சூரியன் தேர்நேரோ போகாமலும், மேகமும், காற்றும்செல்லாமலுமிருக்கச்செய்யும். மேகத்தைக் கிழித்துக்கொண்டு பிரகாசிக்கும் மின்னலைப்போலக் கண்ணைத்திறந்து விடஞ் சொரியும் நாகராசனது அந்நிலவெடிப்பிற்பிரகாசிக்கு மாணிக்கராசிகளின் ஒளிகள் பூமிதேவியின் உடம்பினுள்ள புண்கிழித்திட அதினின்று பெருகிய

உதிரம்போலவிளங்கும். இதுவுமல்லாமல் சூரியகிரணங்கள் சுடுவதனால் அந்த
வெப்பம் பொறுக்காமல் மறைவுதேடி மதயானைகள் மிகுந்தபசியோடு புரளு
கின்ற பெரியமலைப்பாம்புகள் வாய்திறந்துக்கொண்டிருக்க அவைகளின்வாயிலே
நிழலுக்கொதுங்கி இரையாகும். மேலும் அக்கினிதேவனுக்கு அரசிருக்கை
என்று சொல்லும்படியான அக்காட்டில்; காகங்களும் யானைகளும் பொரிந்து
கரிந்துபோவன எப்படியிருக்கின்றனதெனில் அக்கினியாகியவடவாமுகாக்கினி
சுட மேகமும்கரிந்துஇடையிலேவிழுந்தனபோலத்தோன்றும். அன்றியும்பேய்த்
தேர்க்கூட்டம் தன்னிடத்திலே தோன்றுவதனால் அவ்விடமெங்கும் பரந்து
ஓடிப்போய் மேலேயோங்குமாயின்விண்ணுலகமழியுமென்று எண்ணித் தேவர்
களுக்காக இரக்கங்கொண்டு நீர்வளைந்ததுபோல விளங்கும். மேலும் அது
அப்பாலைவனத்தைக் காக்கும் வேனிலஞ்செல்வனுக்கு ! அரசுவிற்றிருக்கச்
செய்த பொன்னாற்செய்யப்பட்ட கால்களையுடைய பளிங்குப்பீடம்போலவும்
தோன்றுவதுமல்லாமல் நல்வினை தீவினை என்னும் இருவினைகளையுங் கெடுத்
துக் காமம் வெகுளி மயக்கமென்னும் முப்பகையாகிய அரணைக்கடந்து முத்
திநெறியாகிய வழியிற் போகமுயல்கின்ற ஞானிகள் மனமும், தன்னைச்சேர
விரும்புகின்ற ஒருவன் இன்பத்தை விரும்பாமல் அவன் கைப்பொருளையே
விரும்புகின்ற வேசிகள் மனம்போலவும்ஈரம்நீங்கியிருக்கும். பொரிகின்ற பருக்
கைக்கற் படர்ந்த அந்தப்பாலைவனமோ வெடித்துப் பாதலம்வரையிலும் குழி
ந்து வழியாகிவிட்டதனால் மாணிக்கங்கள்பொருந்திய படங்களையுடைய நாக
ராசர்கள் வாழும் பாதாளலோகத்திலும் சூரியகிரணம்போய்ப் பிரகாசிக்கும்
படியிருக்கும். இப்படிப்பட்ட கொடிய பாலைவனத்தை விசுவாமித்திரரோடு
ஸ்ரீராமபிரானும், இளையவனும் கடந்துசெல்கையில் விசுவாமித்திரமுனிவரோ
இவ்விராம லக்குமணர்கள் அளவில்லாத வல்லமையுடையவர்களாயிருந்தா
லும் மலரினும் மென்மையானவர் சிறிது வருந்துவரென்று எண்ணி அவ்
விருவர் முகத்தையும் நோக்கித் தான் பிரமதேவனிடத்தில் பெற்றிருந்த பலை
அதிபலை என்னும் மந்திரமிரண்டையும் உபதேசித்தார்.

அவர்கள் அம்மந்திரங்களை உச்சரித்தமாத்திரம் ஊழிகாலத்துத் தீயைப்
பழிக்கும் அப்பாலைவனமானது தெளிந்தநீரையுடைய தடாகத்திற்போவதை
யொத்திருந்தது. அப்போது ஸ்ரீராமபிரான் விசுவாமித்திரமுனிவரைநோக்கிச்,
இது கங்காதரராகிய உமையொருபாகத்திறைவன் நெற்றிக்கண்ணா லெரிக்க
வெந்ததோ? இதுவல்லாமலும் வேறுகாரணமுண்டோ? பழியில்லாதமன்னவர்
பெருமான் அரசுசெய்யு மிவ்வுலகத்தில் இக்காடழிவதற் கென்னகாரணஞ்
சொல்லவேண்டுமென்றான். அதற்கு விசுவாமித்திரமுனிவர் ஸ்ரீராமபிரானைப்
பார்த்து உயிரையெல்லாங் கொன்றுதின்பதே சீவனமாகவுடையவளும், எம
னைப்போலும் தோற்றமுடையவளும், ஆயிரம் யானைப்பலமுடையவளும், சகல
அண்டங்களையும் வேரோடுபிடுங்கியெடுக்கவும், கடனீரையெல்லாம் தன்கையி
னாலே யள்ளிக்குடிக்கவும், ஆகாயத்தை இடித்துப் போடவேண்டுமென்றாலும்
இடித்துத் தகர்த்துப்போடவும் வல்லமையுடையவளும் ஆகிய அரக்கி

யொருத்திபுண்டு. மேலும் கொங்கைகளாகிய இரண்டுமலைகளும், ஆலகால விஷம்போன்ற கண்களும், இடியைவெல்லும் ஆரவாரக்கூச்சலும், வடவா முகாக்கினிபோலச் செம்பட்டமயிரும் இரண்டு பிறைகளைப்போல வக்கிர தந்தங்களுமுடைய ஒருகடல் நடந்துபோவதானல் அவளையொத்திருக்கலாம். பாம்புக்கங்கணமணிந்தகையில் சூலாயுதமுடையவளா யிருப்பாள், காடே வாழுமிடமாகக் கொண்டுதிரிவாள், ஆடவர் தங்கண்களால் பார்ப்பாரேல் அவர்பெண்பிறப் பெடுக்காமற் போனோமேயென்று எண்ணத்தக்கதோர் அழகையுடைய சிராமபிரானே தாடகையென்று சொல்லப்படுவது அக்கொடிய அரக்கி பெயரென்றறி.

மலையைப்போலுந் தோளையுடையானே! பிரமன் படைத்த நால்வகை யோனி, எழுவகைத்தோற்றம், எண்பத்துநான்குலட்சம் சீவபேதங்களையும் தன்வாயிற்போட்டுக்கொண்டு தன்னுடலைவளர்க்கும் எமனென்றே இவளைச் சொல்லவேண்டும். அவள் வரலாற்றைச்சொல்லுகின்றேன். இயக்கர்குலத்தில் உலகமெல்லாம்மதிக்கும் பலமுடையவனும், அக்கினிபோலும் வெம்மையுடையவனுமாகிய மயக்கில்லாத சற்சாரனென்னும் பெயரையுடையவன் தளர்ச்சியில்லாத சுகேது என்னும் பரிசுத்தனைப்பெற்றான். அவனே 'மக்கட் பேற்றிற் பெறும்பேறில்லை' என்றபடி பிள்ளையில்லாமல் வெகுநாளாகவருந்தித் தாமரைமலரில்வசிக்கும் பிரமனைக்குறித்துத் தவஞ்செய்ய அக்கடவுள் பிரசன்னமாய் நின்கருத்து யாதொன்றுகேட்டனர். அதற்குச் சுகேதுவும் நான் பிள்ளையில்லாமல் வருந்தப்படுகின்றேனென்றுசொல்ல, பிரமதேவனும் நுட்பமாகிய கேள்வியையுடையானே உனக்கோ புத்திரனென்பதுகிடையாது, ஆனாலும் உனக்குப்பிள்ளைகலிதீர்க்கப் பெண்ணொருத்தி யுண்டாவாள். அவளோ தாமரைப்பூவிலிருக்கும் திருமகளைப்போல அழகும்,மதமயக்கமுடையஆயிரம் யானைப்பலமுமுடையவளாய்ப் பிறப்பாள். நீ உன்னிருப்பிடஞ் செல்லென்று கட்டளையிட்டுத் தானும் சத்தியலோகம்போய்ச்சேர்ந்தான்.

இப்படி பிரமதேவன் போனபிறகு அவர்கொடுத்த வரத்தின்படி திருமகளைப்போல அழகுடையவளாய் வளர்ந்து மங்கைப்பருவமடையவே இவளுக்குத் தகுந்த கணவன்யாரென்று துணிந்து தன்சுற்றத்தாருக்குத் தலைவனாகிய சுந்தனென்பவனுக்கு மணஞ்செய்வித்தான். அவ்விருவரும் மன்மதனும் இரதியும்போல் பலகாலும் இன்பமனுபவித்துவர அவர்களுக்குஉலகம்நடுநடுங்க மலைபோலும் தோளையுடைய மாரீசனும், மற்போருக்குச் சிறந்த சுவாகுவும் பிறந்தனர். அவ்விரண்டுகுமாரர்களும், வஞ்சனையும் அளவில்லாதவல்லமையும் தாயைப்பார்க்கிலும் உடையவராய் அவர்கள் வளரும்போது மிக்க கோபமுள்ள சுந்தனென்னும் இயக்கர்தலைவன் களிப்பின் மிகுதியினால் தீமையையுடைய விருத்திரன்முதலிய அரக்கர்கள்தீமையழியும்படி அலையெறிகின்ற சமுத்திரத்தை யொருகையால் ஆசமனஞ்செய்த பெருந்தவத்தையுடைய அகத்தியமுனிவர் எழுந்தருளியிருக்கும் ஆச்சிரமத்தையடைந்து அங்கிருக்கும் சுரபுன்னைமுதலிய மரங்களையெல்லாம் வேரோடும்பிடுங்கி வீசியெறிந்து

நல்லதவசிகளால் ஆதரிக்கப்படும் கலைமான்களையும், பெண்மான்களையும் கொன்று பாழாக்குவதை அகத்தியமுனிவர்கண்டு கோபங்கொண்டு விழித்துப் பார்க்க அச்சுந்தனென்பவன் சாம்பரா யெரிந்துபோனான்.

இவ்வாறு சுந்தனென்னும் இயக்கர்பெருமான்மடிந்ததைக்கேள்விப்பட்டுத் தாடகை தன்மக்களோடும் புறப்பட்டு வடவாமுகாக்கினிபோற் கொதித்து அவ்வகத்தியமுனிவனை முழுதுமுடிக்கின்றேனென்று அவரெழுந்தருளியிருக்கும் இடம் அடைந்து, இடியும்சிங்கமும்பிரசண்டவாயுவும்நமதுசத்தம்எம்மாத்திரமென்றேங்கவும், தேவர்கள் தங்கள்காவல்கெடவும், சந்திரசூரியர்கள் அஞ்சவும், மின்னலோடுகூடிய மேகக்கூட்டங்கள் சலிக்கவும், அண்டங்களெல்லாம் உடையவும், ஆரவாரித்து எதிரிலேகூவிக்கொண்டு நின்றாள். தமிழ் என்னும் அளவிடப்படாத சமுத்திரத்திற்கு முதனூலாக இலக்கணமருளிச்செய்த அகத்தியமுனிவர் கோபக்கனல் கண்வழியொழுக உங்காரஞ்செய்து அழியத்தக்ககாரியங்களைச்செய்தமையால்நீங்கள் அரக்கர்களாகிஇழிவையடையக்கடவீரென்று இடியும் குறைவுபடச்சாபமிட்டார். அவ்வாறுமுனிவர்பிரான் சாபங்கொடுத்தவுடனே அவர்கள் சொர்க்கமத்திய பாதாளமென்னும் மூன்று லோகத்தாரையும் கொன்றுழல்கின்ற வாழ்க்கையையுடையவரும் செம்பையுருக்கிவார்த்ததுபோலுங் கண்ணையுடையவருமாகிய அரக்கர்களானார்கள்.

அச்சாபமேற்று எதிர்த்துநின்றுசெய்யும் வலியில்லாதவராய்ச் சுமாலியையடைந்து உமக்குப்பெரியமக்களென்று உறவுகொண்டவராய் அவனோடுவெகுநாள் பாதாளத்தில் வாசஞ்செய்து தவவலிமையுள்ள இராவணனுக்கு மாமன் மாரொன அப்பாதகி மக்கள் எல்லாவுலகையும் அழித்துப் பிரசண்டவாயுபோல எல்லாவுலகத்திலுஞ் சஞ்சரித்துக்கொண்டிருக்கத்தாடகையோவடவாமுகாக்கினிபோலக் கொதிக்கின்ற மனமுள்ள தன்மக்களைவேறாகவிட்டு மிக்கதவத்தினையுடைய அகத்தியமுனிவர் கோபத்தை எண்ணிக்கொண்டு, வழியில் அக்கினிபொருந்தியதுபோல இவ்வனத்தில் வாசஞ்செய்துவருவாள். உள்ளத்தில் மிகுந்தபக்தமாய்ப்பொருந்திய உலோபகுணமொன்றே அளவில்லாதநற்குணங்களை யழிப்பதுபோலச் சொல்லுதற்கரிய கொடுமையையுடைய அரக்கியாகிய தாடகை அழிவில்லாத வளப்பமுடைய மருதநிலத்தையெல்லாம் பாலைவனமாக அழித்து மாற்றினாள்.

மேலும் அவளோ இலங்காதிபத்தியத்தையுடைய இராவணனுடைய ஏவலில் அமைந்து இடையூறுகமலைபோலும்வல்லமையடைந்து என்னுடைய யாகத்தையழித்துவருகின்றதுமல்லாமல்மலர்மாலையணிந்தமேகம்போலும் திருமேனியையுடைய சிராமா இவ்வங்கதேசமுழுதும உள்ள உயிர்களையெல்லாம் மிகவும் கொன்றுதிரிகின்றனள். இனிச்சிலநாளைக்குள்ளாக இவ்வுலகத்தில் உள்ள எல்லாவுயிர்களையும் தனக்குணவாகத் தன்வயிற்றிற் போட்டுக்கொள்வாளென்பதிற் சந்தேகமேகிடையாது. மன்னுயிரனைத்தையும் தன்னுயிரென்றெண்ணும் தயரதமகாராசன் மகனே என்று விசுவாமித்திரர்சொல்ல

அச்சொல்லைக்கேட்டுப் பூமாலையணிந்த தன்றலையையசைத்து இக்கொடுந் தொழிலைச்செய்கின்றவள் எங்கே வசிப்பதென்று தேவர்கள்பொருட்டுச் சங்க மேந்திய கையில் ஒப்பில்லாத கோதண்டமேந்திய ஸ்ரீராமபிரான்கேட்க, அவள் இம்மலையில் வாசஞ்செய்கின்றாளென்றுசொல்லி வாய்மூடாமுன்னமே ஓர் நீல மலை நெருப்பெரிந்துகொண்டு வருவதுபோல மலைகள் பருக்கைக்கல்லாகப் பொருந்தியசிலம்புகள் அணிந்தகால்களும் பூமியிலமுழுந்தும்படி மிதித்து அப்படி மிதித்தகுழியில் சமுத்திரம்புகவும், தீயையொத்தகொடுமையையுடைய எமனு மஞ்சிப் பிலத்திற்புகவும், வடவாமுகாக்கினி இரண்டாய் கடலில் தோன்றி னதுபோல இரண்டுகண்களையு முருட்டிப்பார்த்து மதஜலம்பொழியும் பெரிய யானையின் துதிக்கைகள் ஒன்றோடொன்று சேர்த்து வடம்போலணிந்து கொண்டிருப்பதனால் அசைகின்ற இடையையுடைய தாடகைதேவலோகமும் மற்றையுலகங்களும், எட்டுத்திசைகளும் அடங்கலும் நடுங்கவும் இடியுமஞ்சும் படி யாரவாரித்தாள்.

அவ்வாறு ஆரவாரித்துக்கொண்டுவந்து அவர்களைப்பார்த்து நகைத்து யாவருமஞ்சக் கூர்மையான நுனியையுடைய சூலப்படையாகிய எமனைப்பார்த் துப் பற்களை நெறு நெறென்றுகடித்துக்கொண்டு பிளவாகிய வாயைத்திறந்து இடிக்கின்றமேகம்போல ஒருவார்த்தைசொல்லுகின்றாள். கடப்பதற்கருமை யான வல்லபத்தையுடைய என்காவலையுடையது இக்காடு. இதிலுள்ள எல்லா உயிர்களையுங் கருவறுத்துவிட்டேன். இனிச்சுவையோடுகூடிய மாமிசவுணவு கிடைப்பது அருமை யென்றெண்ணியோ, அல்லது விதியானது தள்ளிக் கொண்டுவர இறப்பதை எண்ணியோ நீங்கள்வந்தவிதமென்றுகூறி, மேகங்கள் தொடக்கற்றுவிழும்படி பார்த்து மனங்கொதித்து ஆகாயமளாவிய மலைகள் வேரோடு அழியும்படி நிலத்தையுதைத்து, பிறைபோலும்விளங்கும் கோரப் பற்களை வாயிற்கவ்விக்கொண்டு ஸ்ரீராமபிரான்மார்பில் சூலம்எறிவதாக உத்தே சித்து எதிரிலே கோபங்கொண்டுநிற்கையில், விசுவாமித்திரமுனிவருக்கு அவ ளைக்கொல்விக்கஎண்ணமேயானாலும்ஸ்ரீராமபிரானே அவளைக்கொல்லப்பாணப் பிரயோகஞ்செய்யாமல் தான் பெருந்தன்மையானகுணமுடையவனாகையால், உலகமெல்லாம் அஞ்சும்படியான கொடுந்தொழில் செய்பவள் என்றறிந்தும் பெண்ணென்றெண்ணிச் சும்மா இருந்தான். வெறித்த செம்பட்டமயிரையும், கோரப்பற்களையுமுடைய தாடகை சூலமெறிந்துகொல்வேனென்று அச்சூலப் படையைக் கையிலேந்தி யெதிர்நின்றுசொல்லிக்கொண்டிருக்கவும், அதைச் சற்றும் எண்ணாமல்நெருங்கிய பூக்களாற் றொடுக்கப்பட்ட மாலையையுடைய ஸ்ரீராமபிரான்கொண்ட எண்ணத்தையறிந்து விசுவாமித்திரமுனிவர் சொல்லு கின்றார். 'பொல்லாங்கென்பவை யெல்லாந்தவிர்' என்பதற்குமாறாக, பொல் லாங்கென்பவைகளையெல்லாம் செய்தும் என்னைக்கோதென்றெண்ணியேவிட் டிருக்கின்றாள். இதுதான்குறை. என்னென்றெண்ணுவது,இக்கொடியவளையும் மணியாரமணிந்தஸ்ரீராமபிரானே பெண்ணென்றெண்ணுவதோ ! இவளிடத்தில் போர்செய்து நாணமுடையவரானவரோ உயிர்பிழைத்தவர். பிரகாசிக்கும்

வாளாற்செய்யும்போரில் வெற்றிகொள்ளத்தக்க சுத்தவீரர்கள் தங்கள் புயவலி
மையை இவள் பெயரைக்கேட்டமாத்திரத்தில் இழந்துபோவாராயின், ஆண்மை
யென்பதுயாரிடத்திலிருக்கும் ஒன்றோவென்றெண்ணப்பார், இந்திரனேஒருகாலத்தில
இவளோடும்போரசெய்துதோற்று ஓடிப்போனான். தேவர்களும் தானவர்களும
தம்படைகள் இவளால் மன்றோடு ஒன்றாய்ப்படி கிடக்கக்கண்டு தோல்வியடைந்து
போயினர். பெண்ணைக்கொல்லக்கூடாதென்பது தருமநூல்முறையாகையால
சக்கரவர்த்தித்திருக்குமாரனே மற்றுமொன்று சொல்லுகின்றேன்கேள் என்று
முடிவில்லாததவத்தினையுடைய விசுவாமித்திரர் சொல்லுகின்றார். பிரமகுமார
ராகிய பிருகுவென்று முனிவரொருவருண்டு. அவருக்குக் கயற்கண்போலுங்
கியாதியென்பவள் வாழ்க்கைத்துணைவியாயினாள். அவளிடத்தில் திருமாலால
போர்க்குடைந்தோடிய அசுரர்கள் அனைவரும்சென்று அடைக்கலம்புகுந்தனர்.
அபயதானங்கொடுத்த அவ்வம்மையைச் சக்கரப்படையையுடைய திருமாலே
உயிர்கவர்ந்துசென்றனன். அதுமாத்திரமோ விண்ணிலும்,மண்ணிலும், மற்றும்
பாதலத்திலுமுள்ள உயிர்களையெல்லாம தனக்கு ஆகாரமாகக்கொள்ளு மியல்
பினையுடைய குமதியென்பவளைத் தன்வச்சிராயுதத்தினால் கொன்று உயிர்
வாங்கினான் திரிலோகாதிபத்தியமுடைய இந்திரனென்றறி. இவ்வாறு பெண்
கொலைசெய்த உபேந்திரனுக்கும், இந்திரனுக்கும் புகழுண்டாயினவே யன்றி
அவர்கள் பெண்கொலைசெய்தமையால் பழியுண்டாயினவோ மகரந்தந் தங்கி
யிருக்கின்ற மலர்மாலையுடைய இராகவனே! என்றனர்.

பின்னும் விசுவாமித்திரர் ஆக்கினை சக்காம் உலகமுழுதும்செல்ல இவ்
வுலகமுழுதும் அரசாண்டுவரும் சூரியகுலத்து அரசர்களுக்குத் திருத்தோன்ற
லாகத்தோன்றிய இரகுநாயகனே! இவ்வுலகத்தில் உயிரையெல்லாம்
கொன்றுதின்று தருமத்தைக்கெடுத்த மாபாவிக்குத் தருமமெண்ணப்படுமோ!
உலகத்தில் பிரமனால்விதிக்கப்பட்ட காலமுடிவாக அதையறிந்து அவ்வுயிர்
பண்ணிய பாவபுண்ணியங்களுக் கேற்றபடி உயிர்கொண்டுபோவதேயன்றி,
இக்கொடிய தாடகைபோல உயிரைக்கண்டவழி மோப்பம்பிடித்துக் கொல்லு
மியல்பினையுடைய எமனுமுண்டோ! உலகத்தில் நிலைபெற்ற உயிரையெல்
லாம் வாரித்தின்று வாயிற்போட்டுக்கொள்ளும் தீமையைப்பார்க்கிலும் தீமை
யென்பது வேறுண்டோ! இவளை நீபெண்ணென்று எண்ணி நிற்கும் தன்மை
யறியாமையின்பாலதேயாகும். இதுமுடிவில்லாத தருமநூலின் முறைமையை
நோக்கிச் சொன்னதன்றி இவள் கோபித்துநின்றதைக்குறித்துச் சொன்னதே
யல்லவென்றுதுணி நீபொறுக்கும்முள்ளமுடையவனாயிருப்பது தகுதியல்லவே
யென்று விசுவாமித்திரமுனிவர் சொல்ல, அதைச்சிராமபிரான்கேட்டுத் தரும
மல்லாதகாரியங்களைச்செய்ய நீர் கட்டளையிட்டால் உமதுசொல்லையே வேத
வாக்கியமென்றெண்ணிச்செய்வதல்லவா தருமநூல் துணிபென்ற கங்கையாறு
சூழப்பட்ட கோசலநாட்டுக் கதிபதியாகிய இறைவன் சொல்லைக் கொடிய
தாடகைகேட்டுத் தன்சிவந்தகையிற் பிடித்த வெப்பமுடைய சூலப்படை
யை தன் கோபத்தியோடு பொருந்த மேலேசெல்லச் சுழற்றி யெறிந்தாள்.

அப்புதிய யமன்போன்ற தாடகை அவ்வாறெறிந்த சூலப்படை விசுவா மித்திரமுனிவரது கட்டளையினின்ற சீராமபிரான்மேல் பூரணசந்திரனைத் தொடர்ந்த இராகுவைப்போலத்தொடர்ந்து வருவதைக்கண்டு தான் வில்லை வளைத்து நாணேறிட்டு பாணப்பிரயோகஞ்செய்தது ஒருவருமறியாதவிதமா யிருக்கவே அவளெவிய சூலப்படைமாத்திரம் இரண்டுதுண்டுகளாய்விட்டமை யைப் பலருங்கண்டார்கள். இராக்கால மேகத்தினும் மிக்ககருமைநிறமுடைய தாடகைசொல்லிய சொல்முடியுமாத்திரத்தில்கடலையுந்தூர்த்துவிடத்தக்கதாய் சரங்களை மழையாகப்பொழிய அவைகளையெல்லாம் சீராமபிரான் தன்வில்லி னின்றும் விடப்பட்ட பாணவருஷங்களால் தடுத்துப் பின்னும் அவளுடைய மார்புருவ முனிவர்களிட்டசாபமொழிபோலத் தடுப்பதற்கரிய ஒருபாணத்தை இலக்குவைத்து விடுதலும் அப்பாணம் மார்பில்தங்காமல் அப்புறமுங்கழன்று போய் மூடர்களுக்கு நல்லோர் அறிவுறுத்திய உபதேசமொழிபோலப்பயன் படாமல் ஊடுருவிச்சென்றது. பொன்மலைபோலும் சீராமபிரான் ஏவிய புகர்நிறமுள்ள பாணமாகிய கொடியபிரசண்ட வாயுமோதியவளவில் ஆகா யத்தில் கல்மழைபெய்து இடித்துக்கடையுகத்தில் எழுந்தமேகம் மின்னலும் இடியும் வீழ்வனபோல் வீழ்ந்தாள்.

அப்படிவிழுந்ததுஎப்படியிருந்ததெனில்அடர்ந்த அக்காட்டில்எம்மருங்கும் உதிரவெள்ளம் பொங்கும்பவிழுந்தமாமிசம் பொருந்தியபற்களமைந்தபிளந்தடி வாயையுடைய அத்தாடகைவிழ்ந்தது பத்துத்தலைகளிலு முடிகளையுடைய இராவணனுக்கு மரணகாலம் வருகின்றதென்று முந்தித்தோன்றும் உற்பாதம் போலவும் பூமியிலறுந்துவிழுந்த வெற்றிக்கொடிபோலவும் காடுமுழுதுந்திரிந்து, அக்காடு இரத்த சமுத்திரமாகும்படி அத் தாடகையின் மார்பிலூன்றிய பாணத்தின்வழியே புறப்பட்ட இரத்தவெள்ளம் மாலைக்காலத்திற்றோன்றிய செவ்வானம்பற்றற்றுப்பூமியில்விழுந்ததுபோலவுமிருந்தது. இதுநிற்க,தாமரையி லெழுந்தருளிய பிரமதேவனுக்குச் சமானமான விசுவாமித்திரமுனிவன் ஆக்கினை கடவாமல் பசும்பொன்னாலாகிய ஆபரணமணிந்த காகுஸ்தவமி சோத்தரனாகிய சீராமபிரான் முதற்போரில் வாட்படையையுடைய அரக்கர் கூட்டத்தார் உயிரைக்குடிக்க இம்மட்டும் பயந்திருந்தயமன் அன்று நடந்த முதற்போரிலே தான்சிறிது உருசியறிந்தானென்றுசொல்லவேண்டும். இவ்வா றிருக்கத் தேவர்களெல்லாம் விசுவாமுத்திரமுனிவனைப் பார்த்து நாங்கள் எங்களுக்குரிய இருப்பிடம்பெற்றோம், இனிஉமக்குஇடையூறுண்டாகவேமாட் டாது. நமது தாசரதியாகிய சீராமபிரானுக்கு வேண்டிய தெய்வப்படைகளை யெல்லாம் அவற்றின்மந்திரங்களுடன்கொடுமெனக்கட்டளையிட்டுவிற்கொண்ட மேகம்போன்றஇரகுகுலதிலகன்மேல் பூமழைபொழிந்துபோயினர்.

---

## வேள்விப்படலம்.

---

இவ்வாறு தேவர்கள்போனபின்பு, அவ்விடமெங்கும்படர்ந்த புஷ்ப வருஷத்தால் குளிர்ச்சியுடையதாகிய காட்டினை விட்டகன்று தாங்குதற்கருமையானதவத்தின்மிகுந்த விசுவாமித்திரமுனிவன் மண்ணுலகத்தார் வறுமை நோய்க்கு மருந்தையொத்த வெண்ணெய் நல்லூர்ச் சடையப்பமுதலியார் மெய்ம்மைபோன்ற தெய்வப்படைகளை அளிக்கச் சிராமபிரான் பெற்றான்; அப்படிப்பெறவே அப்படைகள்தெளிந்த மனமுடைய ஒருவன் முற்சனனத்திற்செய்த நல்வினைப்பயன் மறுசனனத்தில் அவனைத்தேடிவந்து நெருங்குவது அப்பெருமானைவிடாது நெருங்கியிருந்தன. அவ்வாறுவந்து சேர்ந்த தெய்வப்படைகள் இராகவனைப்பார்த்து நாங்கள் உம்மைவந்தடைந்தோம்; நீரேவிய குற்றேவல்களை உமது தம்பியாகிய இளையபெருமாளைப்போலச்செய்து நிற்போமென்றுசொல்ல, அதனைப்பெருமாள்கேட்டு அவ்வாறேயிசைய அன்று முதல் அத்தெய்வப்படைகள் அவனுக்குப் புறத்தொழில்செய்திருந்தன; இத்தன்மையானகாரியங்கள் நடந்தபின்பு இரண்டுகாததூரஞ் சென்றனர்; இவர்களுக்கு அங்கோர் பேரோசைசெவியிற்படச் சிராமபிரான் இப்படிப்பட்ட ஓசை செவியிற்படக் காரணமென்னவென்று விசுவாமித்திரமுனிவனை வினவ, அவர்சொல்லுகின்றார். அப்பா! இராகவா! மானசமடுவிற் பிறந்து வருவதனால் சரயுநதியென்று தேவர்கள் துதிக்கும் சிறந்தநதியுடன் கோமதியென்னும்நதி சங்கமமாகு மிடமென்றுசொல்ல, அப்பாற்சென்று அப்பரிசுத்த நதியையடைந்தனர். இப்படி அந்நதியையடைந்தபின்பு அந்நதியின் வரலாற்றைச் சொல்லவேண்டுமென்று முற்றத்துறந்த முனிவர்பெருமானாகிய விசுவாமித்திர முனிவனைச் சிராமபிரான்கேட்க அதற்கு அவருஞ்சொல்வாராயினர்.

முற்காலத்தில் தாமரைப்பீடத்திலிருக்கும் பிரமதேவன் குசனென்னும் பெயரையுடைய அரசர்பெருமானைத் தந்தான். அவ்வரசன் தன்மனைவியினிடமாக நான்குமக்களைப்பெற்றான். அவர்கள்குசன், குசநாபன், ஆதூர்த்தன், வசு என்றுசொல்லப்படுவர். அவருள்கௌசாம்பிநகரத்தைக் குசனும், மகோதய நகரத்தைக் குசநாபனும், வசந்தமாரணிய நகரத்தை ஆதூர்த்தனும், கிரிவிரசத்தை வசுவும்பெற்று அரசாண்டுவந்தனர். அவருள் குசநாபனென்னும் அரசனுக்கு நூறுமாதர் தோன்றினர். அவர்கள் இன்சொலுடையவராயும், பவளம்போலும் வாயையுடையவராயும் இருக்கக்கண்டு அவர்கள் தோழிமாருடன் சென்று ஒருபூஞ்சோலையில் விளையாடிக்கொண்டிருக்கும் சமையத்தில் வாயுதேவன் அவர்களைக்கிட்டி அவர்களுடைய அழகிற்கிச்சைகொண்டு அம்மாதரைப்பார்த்து நானோ மன்மதபாணத்தால் மிகவாடினேன்; அதனால் இன்று உம்மைநாடினேன், என்னைக்கூடி என்துயரமோடி ஒளிக்கச் செய்யுங்கோளென்ன, அதற்கவர்கள்எல்லாமறிந்த உமக்குநாங்கள்சொல்வதென்னை; வேதங்கள்வகுத்த மணநன்னெறியில் எங்கள் பிதாவைக்கேட்டு தெய்வமணஞ்செய்து கொள்ளுமெனமறுக்க, அவ்வாயுதேவன் கோபங்கொண்டு அவர்கள் முது

கொடியச்செய்தான்; அவ்வாறே முதுகொடிந்து வருந்தினர். இவ்வாறுசெய்து விட்டு வாயுதேவன் போனபின்பு அவர்கள் தவழ்ந்துகொண்டேபோய் இதைத் தங்கள் பிதாவாகிய குசநாபனுக்குச்சொல்ல, அவ்வரசனும் அம்மக்களைத் தேற்றி நிறைந்ததவமுடைய சூளியென்னும் முனிவர்பிரான்பெற்ற பிரமதத்த னென்னு முனிவனுக்கு மணஞ்செய்வித்தான். அப்பிரமதத்தன் அவர்களைக் கையாலதீண்டப் பழையபடியே கூனிமிர்ந்து பேரழகுடையவராய் விளங்கி னார்கள். அரசன் பிரமதத்தன் மகட்கொடைநேர்ந்தபின்பு தனக்கு அரசாளத் தக்க புத்திரரில்லாமையால் வருந்தி சிறந்தமுனிவரை வருவித்துப் புத்திர காமேட்டியென்னும் யாகஞ்செய்ய அவ்வக்கினிமத்தியில் மிக்கவேகமுள்ள குதிரைவீரனாகிய காதிமகாராசன் அவதரித்தான். அக்காதிமகாராசன் தக்க பருவமடைந்தபோது அவனைப்பெற்றகுசநாபனென்னுமகாராசன் தன் அரசையு முடியையும் கொடுக்கப்பெற்று மகோதயநகரில் அரசாண்டுவந்தான். அக்காதி மகாராசனுக்குக்கௌசிகனென்னும்பெயருடையயானும்எனக்குமுன்கௌசிகி என்னும்பெண்ணும்பிறந்துவளர்ந்துவருகையில்காதிமகாராசன்பிருகுமுனிவரு டைய குமாரராகிய இரிசிகமுனிவருக்கு எனக்குமுன்றோன்றிய கௌசிகியை மணஞ்செய்வித்தான். அம்முனிவன்என்னுடன்பிறந்தவளோடுசிலநாள்இல்லற நடத்தி அறம்பொருளின்ப மனுபவித்துப் பின்புவீட்டுநெறியடையக் காதன் மேற்கொண்டு இல்லறநீங்கி நல்லதவஞ்செய்து பிரமனிடஞ் சென்றனன். அவ்வாறு முனிவன் செல்வதுகண்டு மனம்பொறாது தானதிவடிவங்கொண்டு தன்கணவனுடன் விண்படர்வதனால் அம்முனிவனும் இனி இந்நதிவடிவங் கொண்டே உலகத்திலிருப்பவருக்குத் துன்பத்தையொழித்துவருவையென்று கட்டளையிட்டுப் பிரமலோகஞ்சென்றான். அன்றுமுதல் என்னுடன்பிறந்த கௌசிகி இந்நதியா யிருக்கின்றனளென்று சொல்ல அதைக்கேட்டு மகிழ்ந்து அப்பாற்சிறிதுதூரஞ்சென்றனர், மேகந்தவழ்கின்ற சோலையொன்று அவர்களுக் குத்தோன்றக்கண்டு இச்சோலையின் வரலாறு யாதென்று இராகவபிரான் கேட்க விசுவாமித்திரமுனிவர் கூறலாயினர்.

இச்சோலையோ தங்கணவனையே யல்லது வேறொரு தெய்வத்தையும் நாடாத கற்பினையுடையமாதர்கள்சிந்தைபோலப் பரிசுத்தமுடையது; எங்கள் வேதங்கட்கும், தேவர்களறிவிற்கும் எட்டுதற்கரிய திருமால் நாராயண ரிஷி யாகவும், நரனாகவும் தாமேதிருவுருவங்கொண்டு தவஞ்செய்துள்ளது; இவ் வுலகத்தவரும், தெய்வலோகவாசிகளும், அகப்பற்று, புறப்பற்று என்னும் இருவகைப்பற்றையுமொழித்து சிந்தையுமொழியுஞ் செல்லாநிலைமையதாகிய அந்தமிலின்பத்தழிவில் வீட்டையடையவிரும்பி உச்சரிப்பது அவன்திருநாம மென்றே சொல்லும்படியிருப்பவன். இப்படிப்பட்டவனத்தில் தவஞ்செய்வது யாதுபற்றியென்று அவனது விசித்திரசத்தியை ஒருவராலும் சொல்லவும்போ மோ; யாருமிலரென்றுசொல்லும்படியிருக்கின்றதேயாகும்; அவன் எதுகுறித் துத்தவஞ்செய்தானோ அவன் குறித்ததையறியேன்; அவன் நூறுவருஷம் இச் சோலையில் தவஞ்செய்திருந்தான். இதற்கு வதரிகாச்சிரம மென்றுபெயர். இவ்வாறு அவன் தவஞ்செய்வார்போல இங்கே தவஞ்செய்துகொண்டிருந்த

காலத்தில் ஆதிவராகம்போலும் இவ்வுலகைத் தாங்கத்தக்க ஆற்றலையுடைய மாபலியென்னும் பெயருள்ள தானவராசன் விண்ணும் மண்ணும் பாதலமும் தன்வசப்படுத்திக்கொண்டு தேவரும், முனிவரும் செய்தற்கருமையானதாய் செய்சொரிபத்தக்க வேள்வியை முடிக்க ஐயமகன்ற மனமுடையவனுய்த் துணிந்து அழகிய சாந்தகுணமுள்ள பிராமணர்களுக்குப் பூதானம், கோதான முதலிய சோடச மகாதானங்களையும் வழங்க உடன்பட்டிருப்பதைத் தேவர்கள் அறிந்து உலகமுண்ட மாயனையடைந்து வணங்கிநின்று இறைவனே கொடியோனுகிய மாபலிசெய்யுந் தீயதொழிலைத் தீர்த்தருளுமென்றுவேண்ட அப்படியேயாகட்டுமென்று அவர்களுக்குச் சொல்லியனுப்பிவிட்டு திரிகால முணர்ந்த காசிபமுனிவருக்கும், அவருடைய மனைவியாகிய அதிதிக்கும் புத்திரனுக ஆலமரம் அடங்கிய சிறியவிதையைப்போல் ஒரு சிறிய குறளுருவாகிய வாமன ரூபமானுர்.

இவ்வாறு தோன்றி முப்புரிநூலணிந்து,முஞ்சியும் புற்கயிறும் அரையிலே விளங்கச்சாத்தி, வேதமோதுகின்றநாவினையுடையாராய்நித்தியாக்கினியேந்திய கையினராய்; மெய்ஞ்ஞான நிலையையுடையார் அறிகின்ற தனது சுத்த ஞானமேபோன்ற ஒரு திருவுருவங்கொண்டுசென்று, மாவலி யாகஞ்செய்யும் யாகசாலையை யடைய அதைத் திரிளோகங்களையும் ஜெயங்கொண்ட மாபலி யறிந்துஎதிர்கொண்டுவணங்கித் தவத்தாற்பெரியோரே! உம்மைப்பார்க்கிலும் பெருந்தவமுடையாரைக்காணேன், இப்படிப்பட்ட தேவரீரைத் தெரிசிக்கப் பெற்றநினுற் பெற்றபெரும்பேறுயார்பெற்றிருக்கின்றனரென்று மாவலிசொல்ல வாமனவடிவாக வந்த மாயப்பிரானும் உன்னைவிரும்பி வந்தடைந்தவருக்கு அவர்கள் விருப்பத்தினு மதிகமாகக்கொடுக்கும் புகழால் நீண்ட கையையுடையானே உன்னையடைந்தவரே மாட்சிமையுடையவராவார், அடையாதவரோமாட்சிமை யுடையவரல்லாதார் என்றுசொல்லினர். அதற்குமாபலி மனமகிழ்ந்து யான்செய்யத்தக்கதுயாதென்றுகேட்க, அந்தணர்பெருமானுகிய வாமனமூர்த்தியும்எனக்கு மூவடிமண் தானமாகக்கொடுப்பதாயிருந்தால்கொடுமென்றுகேட்க,அவர்கேட்பதற்குமுன்னமேயான்கொடுத்தேனென்றுன்; அந்த மாபலிசொன்னசொல்லைக்கேட்டுமனம்பொருது அருகிலிருந்த சுக்கிராசாரியும் தடுத்து அரசனே! இப்போதுகண்டவுருவமோவஞ்சனையாகக்கொண்டுவந்ததே யல்லது வேறல்ல; மேகம்போலுங்கரியதிருநிறமுடையவாமனமூர்த்தியென்று மனத்திலெண்ணவேண்டாம். அண்டாண்டசராசரமாகிய எல்லாப்பொருள்களையும் தன்வயிற்றிற்பெய்து ஆலிலையிலறிதுயில் கிடக்கும் கள்ளமாயப்பிரானென்றே அறிந்துகொள் என்றுசொல்ல, அதற்குமாபலியும் என்கைவுயரவுந் தனக்கியலாதவிதம் என்றுந் தாழாததன்மையையுடைய கரியகோலத்திருவுருவுடையஇறைவன்கையேதாழுமென்றுல் எனக்கு இதைப்பார்க்கிலும் சிறந்த நன்மையாது! நன்னெறியிற்செல்லுஞ் சிந்தையுடையோர்தங்களிடத்தில்வந்து உயர்ந்தார்களே யேற்கவேண்டுமென்றுநினைப்பர். அன்றி இவர்நட்டார், இவர் பகைவரென்பதனையே கொள்ளமாட்டார்கள் என்றுல் இவனைப்போலும் சிறந்தவர் யார் உலகத்திலிருக்கின்றனர்; நீயோ வெள்ளியென்னும் பெயருள்ளவ

ணுகையாலும், அது வெள்ளறிவுடையானெனப் பொருள்படுவதனுலும் இவ்வளவு துணிந்துசொன்னுய், மேலோர்கள் கொடையாளிகளாகும்பொருட்டு இரப்பவர்களுக்குக் கொடுப்பதேயன்றி சிலசொல்லி யிகழ்வதென்னபயன்? உலகத்தில் ஒருவன் தனக்குத் தித்திப்பாக நினைக்குமுயிரைப்பெறயாசிப்பது என்பதே கெட்டகாரியம்; அதை யிரப்பவருக்குக்கொடுப்பதே நல்லது, மேலும் இறந்தவரென்றுசொல்லப்படுவோர் இறந்தவரேயாகார். வேறியார் இறந்தவர்கள்என்றால் பிறரிடத்திற்கையேந்தி யிரப்பவர்களென்றேயென்னும். இதனாலே 'ஏற்பதிகழ்ச்சி' என்று பெரியோர்கள் சொல்லியிருக்கின்றனர். இறந்தவரென்போர் இறந்தவரென்றே சொல்லப்படாமலும் இரந்தவர்களுக்குக் கொடுத்தவரோ யல்லாமல் இருந்தாரைக் காணேன்; அடுக்கும்படி அரும் பழிப்பான காரியங்களை ஒருவனுக்குச் செய்கின்றவரும், அவனுக்கு பகையாளிகளல்ல, இரப்பவர்களுக்குக் கொடுப்பவர்கள் எதிரிலிருந்து கொடுக்க வேண்டாமென்றுதடுக்கின்றவர்களேபகைவர்களாவார்கள். அவர்கள்தம்மைத் தாமேகெடுத்துக்கொள்ளுகின்றவருமாகும்; அதற்குச்சரியானகெடுதிவேறில்லை மேலும் வேதங்களில் தம்மிடத்துப் பொருள்கிடைத்தகாலத்தில் அதை இரப்பவர்களுக்குக் கொடுத்துப்புகழ்பெற்றுத்தருமமடைய முயல்பவர்களுக்கு உள்ளத்தைக் கெடுக்கும்பகையோ உலோபகுணமென்று சொல்லப்படும். அதனால் பெரியோர்களும் அக்குணத்தைவிடவேண்டுமென்று விலக்கினார்கள். தேவரும் 'பற்றுள்ளமென்னு மிவறன்மையெற்றுள்ளு-மெண்ணப்படுவதொன் றன்று' என்றுஞ் சொல்லியிருக்கின்றனர். ஆகையால் ஒருவருக்கெடுத்துக் கொடுப்பதற்கு முன்பேதடுப்பதுஉனக்கழகாகுமா. வெள்ளியென்னும்பெயர் கொண்ட தகுதியற்றவனே கொடையைத்தடுக்குங் கொடியோனே! நீயும் உன்சுற்றத்தாரும் உண்ணச்சோரும், உடுக்க ஆடையுமில்லாமற் போய்விடுவார்கள். இதனாலே தெய்வப்புலவரும் 'கொடுப்பதழுக்கறுப்பான் சுற்றமுடுப்பதூஉ-முண்பதூஉமின்றிக்கெடும்'. எனவும்கூறியிருக்கின்றனர் என்றுதகுந்த நீதிமொழிகளை யெடுத்துச்சொல்லி மந்திரிகொடியவனென்று அவன்சொல்லைப் பொருளாகக்கொள்ளாமல் உமது காலளவாக மூன்றடிநிலம் அளந்துகொள்ளுமென்று வாமனமூர்த்தியின் குறுகியகையில் தடாகத்திலுண்டாகிய நீரைத் தாரைவார்த்துக்கொடுத்தலும், அந்நீரைப்பரிசித்தமாத்திரத்தில் பெற்றமாதா பிதாக்களும் அருவருக்கத்தக்க வாமனமூர்த்திகண்டு எதிரோபார்த்தவர்கள் பயப்பட உயர்ந்தோர்க்குதவிய உதவிபோல மிகவுமுயர்ந்தோங்கினர். பூமியினிடத்தில் நின்ற திருவடியோ பூமிமுழுதும் பரந்து அதுசிறிதென்று சொல்லும்படி அப்பால்சென்று பரந்ததில்லை. வானத்திற்போயளந்த மற்றொரு திருவடியோ தன்னிலடக்கிக்கொண்டு விண்ணுலகையும்வென்ற கால்மேலே செல்ல வெளிபெறுமையினால் திரும்பிற்று. இவ்வாறிருக்க வில்லையேந்திய தோளையுடைய சீராமனேஇலையோடுகூடிய துளவமாலையையணிந்த முடியையுடைய ஆதிபகவன் உயிர்களுக்கிடையூறு உண்டாகாவண்ணம் உள்ளடியிலடக்கிக்கொண்டு மற்றொருதிருவடிக்கு அளவில்லாமையால் அதற்குவழி யென்னவென்றுகேட்க, அடியேன் முடிதானென்றுசொல்ல அவன்முடிமேல்

தன்பாதத்தைவைத்து அவனைப் பாதாளலோகத்திலிருக்க அழுத்திவிட்டு, தேவேந்திரனுக்கு இவ்வுலகத்தையெல்லாங் கொடுத்தருளி அவ்வாறு உலகமெல்லாங்கடந்த இரண்டு திருவடிகளையும் திருமகள்வருடத் தான்திருப்பாற்கடலில யோகநித்திரை செய்தருளினான். இதுநிற்க ;

தீவினைதீர்த்தற்குரிய இராகவனே! இச்சோலை இத்தன்மையுடையதாதலால் இதனை அன்பாகக்கண்டவர்கள் பிறவியென்பதைக் காணமாட்டார்கள். வேதநூல்வரம்பினால் யாகஞ்செய்யத்தொடங்கிய எனக்கிதுவல்லது இடம் வேறுதகுதியானதல்ல. இங்கேயிருந்து யாகத்தைச்செய்து முடிப்பேனென்று நீண்ட மலர்ச்சோலையினையுடைய அவ்வனத்தை முறைமையாக அடைந்து பின்பு யாகத்திற்குவேண்டிய சாதனப்பொருள்களைச் சேகரித்துக்கொண்டு மிக்க அழகுள்ள இராமலக்ஷ்மணர்களைக்காவலமைத்துத்தான் யாகசாலையிற் சேர்ந்தான். அவர்களோ * கண்ணைக்காக்கின்ற இமைபோல அந்தயாகசாலையைக் காத்திருந்தனர்.

---

* என்றுதற் காக்கரி திரண்டு மூன்றுநாள்
விண்ணவர்க் காக்கிய முனிவன் வேள்வியை
மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக் காக்கின்ற விமையிற்காத்தனர்.

இ-ள். நினைப்பதற்கும் ஆக்குதற்கும் அரிதாய ஐந்துநாள்வரையும் விண்ணவர் பொருட்டுச் செய்த விசுவாமித்திரமுனிவன் யாகத்தை, மண்ணுலகத்தைக் காக்கும் மன்னவர் மன்னன் மக்கள் கண்ணினை இமைகாப்பதுபோற் காத்துநின்றனர். எ-று.

இனி வடநூலார் மதம்பற்றி இரண்டு மூன்றுநாள் என்பதனை ஐந்துநாளெனப் பொருள்கொள்ளப்பட்டது, இதுவேகருத்தென்பதனை வடநூலார்வாய்க்கேட்டுணர்க. மண்ணினைக்காக்கின்ற மன்னன் என்றது தசரதனை. கண்ணினைக்காக்கின்ற இமையிற் காத்தனர் எனக் கூறிய உவமைமுகத்தால் அவ்வேள்விச்சாலையே கண்ணாகவும், அவ்வேள்வியே அக்கண்மணியாகவும், அதனைக்காக்கும் இளையவன் நின்றுங் கிருப்பதனால் இழிமையாகவும், அவ்வேள்வியைத் தீமைசெய்யு மரக்கர்வாராதவழி காக்கும் இறைவனை மேலிமையாகவும், அதனை யிடையூறுசெய்யும் அரக்கரே அவ்விழியையெதிர்ந்த துரும்பாகவும், கீழிமையை மேலிமைதொடுதல் அவ்வினையோனை இறைவன்பரிசிப்பதுபோலும் கூறினமைகாண்க.

இனி ஒருசாரா. நினைத்தற்கும் செய்தற்கு மரிதாகிய ஐந்துநாள் மீன்களையும் விண்ணவர்க்கு மாறாகப்படைத்த விசுவாமித்திரன் வேள்வியை என முதலிரண்டு அடிகட்கிவ்வாறு பொருள்கூறுவது மொன்று.

இதுகாறும் எவ்வகைப்பட்ட தவஞ்செய்தாரும் நாண்மீன்களைத்தனையும் தத்தங் கதிமாறிவருவனவாகச் செய்தாரில்லையாகலின் என்றுதற் காக்கரி திரண்டு மூன்றுநாளென்றும், அது திரிசங்கு என்னும் அரசர்பெருமான்புலையனாகச் சபிக்கப்பட்டமையால் அவன் துறக்கமெய்தாமை தடுப்பதற்கியைந்த அமரர்கட்கு மாறாகச் செய்தலின் விண்ணவர்க்காக்கிய என்றுங் கூறினார். என்றுதற்காக்கரி தென்புழிஎண்ணும்மையும் இரண்டுமூன்றுநாளென இனைத்தெனவறியும்செவ்வெண்ணின்முன்னர் முற்றும்மையும் விகாரத்தாற் றொக்கன. நாண்மீனைந்தாவன அநுடம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம் என்பனவாம்.

மண்ணினைக்காக்கின்ற மன்னனென்றார் தசரதன் பொதுக்கடிந்து அரசு ஆளுந் தன்மையைநோக்கி என்க.

இவ்வாறு இளையவனும் பெருமானும் யாகசாலையைக்காத்து வருகையிலும், அவ்விருவீரரினும் மூத்தவனாகிய ஸ்ரீராமபிரான் முழுதுமுணர்ந்த விசுவாமித்திர முனிவனை நோக்கி, தேவரீர் கொடுந்தொழில் செய்பவர் என்ற கொடியவர்கள் வருவதுஎன்று அருளிச்செய்யவேண்டுமே யாவராலும்புகழ்ந்து சொல்லுதற்கரிய பெருமானே என்றுகேட்க, அவ்வாறுகேட்டதற்கு விடையொன்றுங்கூறாமல் முனிவர்பெருமான் மௌனமாயிருத்தலும், போர்த்தொழிலில்வல்லநாருத்தவமிசோத்தான் கார்காலத்து மேகம்போலச்சூழ்ந்து இடியுமஞ்ச ஆரவாரித்து அதட்டிக்கொண்டு ஆகாயமார்க்கத்தில் வருவதைக் கண்டான். அவர்கள் பாணங்களைப் பிரயோகிக்கவும், வேற்படைமுதலியவற்றை யெறியவும், எரியுநீரும்பெய்யவும், பெரியமலைகளை வேருடன்பிடுங்கி வீசவும், மழுவாயுதங்களை யெறியவும் நிறைந்தார்கள். அவர்கள்செய்த கொடியசெயல்களை யளவிடலுமாகமாட்டா, அவ்வாறுஅரக்கர்மாமிசந்தங்கிய படைகளை விட்டெறிந்து மேகம்போல் அக்காட்டைவளைத்தனர். அவ்வேள்விச்சாலையைவளைத்தசேனை மீன்கள்வசிக்கும் அலைகடல் ஆகாயத்திலெழுந்து மறைந்தாற்போல் அவ்வாகாயமுழுது மறைந்தன. விரிவாயமைந்த பற்களையுடையாரும், கடித்த வுதட்டினையுடையாரும், *செம்பட்ட மயிரினையுடையாரும், சுழல்கின்ற கண்ணில் தீப்பொறி யுடையாருமாகிய இவர்களே நெருங்கிய சடைமுடியையுடைய விசுவாமித்திர முனிவர் கட்டளையிட்ட கொடியவரென்று தம்பியாகிய இளையபெருமானுக்குக்காட்ட, அவரும்கண்டு கடைக்கண்ணில் தீப்பொறிபறக்க ஆகாயத்தைநோக்கிப்பின் தன்னுடைய வில்லையுநோக்கித்தேவர்கட்கிறைவனே இனிப்பார்த்துக்கொண்டிரும், என்னால் இவர்கள் உடல்வேறு தலைவேறாகத் துண்டிக்கப்பட்டு வீழுந்தன்மையென்று தொழுதுசொல்லவும், செந்தாமரை மலர்போலுங் கண்களையுடைய ஸ்ரீராமபிரானும் புகையுள்ளவேலேந்திய அரக்கருடைய பிணமும், குருதியும் அவ்வேள்விக்குண்டத்தில் விழாவண்ணம் நினைந்து தமதுவில்லினின்றும் விடப்பட்டபாணங்களால் சரக்கூடங்கட்டியபோது, முன்னாளில் ஆலவிடம் திருப்பாற்கடலி லெழுந்ததுகண்டு சந்திரசேகரனாகிய அனாதிமலமுத்தனைச் சரணமடைந்த தேவர்களைப்போல வஞ்சனையுள்ள அரக்கருக் கஞ்சிப் பெருந்தவத்தினையுடைய முனிவர்கள்எல்லாம் கரியகோலத் திருவுருவப்பெருந்தகையாகிய ஸ்ரீராமபிரானே யாங்கள் நின்னடைக்கலமென்றனர். அவ்வாறடைந்த முனிவர்களை அஞ்சவேண்டாமென்று அபயாஸ்தமளித்து வில்லைவளைத்து நாணேற்றி அதனைத் தன்காதளவுநிறுத்தி பூமியின்கண் இரத்தவெள்ளமோடும்படி அவ்வரக்கர்களுடைய தலைகளை வாயுவாஸ்திரத்தால் மலைகளாகக் குவித்துப் பின்பு தாடகைபெற்ற மக்களில் மாரீசனைக் காந்தர்வாஸ்திரத்தால் தென்கடலிற் போய்விழச்செய்து, சுவாகுவை ஆக்கினேயாஸ்திரத்தால் தென்றிசைக் கனுப்பிவிட்டுநிற்க, எஞ்சிநின்ற அரக்கரெல்லாம் ஆகாயமளாவி நின்ற பிணக்குவியலின்மேல் நடந்துசென்று நம்மைப்பிடிப்பவரிவ்விடத்தினும் வருவரென்று சொல்லிக்கொண்டே ஒருவர்போனவழி ஒருவர்போகாமல்ஓடிப் போயினர். அவ்வாறோடிய சில அரக்கரா இடிபோன்ற சிலபாணங்கள்

விடாமற் பின்பற்றின, கவந்தம் கூத்தாடின, பேய்களும் இறைவன்புகழினைப் பாடிகடித்தன,பறவைகள்பந்தரிட்டன. இவ்வாறுயுத்தமுடிந்தபின்பு தேவர்கள் எல்லாம் பறவைக்கூட்டங்களின் பந்தரைக்கிழித்துக்கொண்டு போகப்பூமழை பொழிந்தனர். மேகத்தின் குமுறலும் நாணும்படி அந்தாதுந்துமி யதிர்ந்தன, இந்திரன்முதலிய தேவர்களெல்லாம் நெருங்கினர். கோதண்டமேந்திய சிராம பிரானைவாழ்த்தினர். முனிவர்களோ ஆசிர்வசனமாகியபுட்பவருஷஞ் சொரிந்தனர். அக்காட்டில் உள்ள பூமரங்களும் பூமழைசொரிந்தன. இவ்வாறு நிகழ்கையில் விசுவாமித்திரமுனிவரும் தாம் வேள்வியை நிறைவேற்றிச் சிராம பிரானைநோக்கி இந்தக் காரியத்தைச் செய்துமுடித்ததை யோசிக்குமிடத்தில் எனக்குப் பாக்கியவசமென்றே நினைப்பதல்லாமல் இப்பஞ்சாசத்கோடி பூமண்டலத்தினையும் திருவயிற்றி லடக்கிக்காக்கும் நீஇவ்வொருவேள்வியைக் காத்தாயென்று சொல்லுதல் உனக்குப் பெருமிதமான காரிய மல்லவென்று சொல்லிவிட்டு அன்று அவ்வழகிய மலர்ச்சோலையில் தங்கிய முனிவர்களுடன் எழுந்தருளி யிருக்கின்ற குணமலைபோன்றவராகிய விசுவாமித்திர முனிவரை நோக்கிக் கோசலைநாட்டுக் கதிபராகிய சிராமபிரான் இன்று அடியேன் செய்யும் குற்றேவல் யாது கட்டளையிடுமென்று 'மூத்தோர் சொல் வார்த்தையமிர்தம்' என்ற முதுமொழியை உலகத்தாருக்கு அனுஷ்டித்துக் காட்டவந்தமையால் கேட்டருள, இது அருமையான காரியமென்று சொன்ன போதும், அதனை அருமையல்லவென்றே செய்துமுடிக்கவல்ல உனக்கு யாது தான் அருமையான காரியம், நீ பெருங் காரியங்களெல்லாம் முடிக்கவேண்டும், அவைகள் பின்னேயிருக்கின்றன; ஆனாலும் பாய்ந்த நீரவளமுள்ள மருத நிலம் சூழ்ந்த மிதிலைநாட்டிற் கரசனாகிய சனகமகாராசன் செய்யும் யாகத்தைப் போய் பார்த்துவருவோம் வாருமென்று சொல்லச் சிராமபிரானும் இளையபெருமாள் நிழல்போல்தன்னைப் பின்பற்ற விசுவாமித்திர முனிவருடன் சென்றான்.

## அகலிகைப்படலம்.

---

அலைகின்ற பெருமணிகளுடனும்,சந்தனத்துடனும, அகிற்கட்டை பொருந்திய மணற்குன்றமாகிய இன்பந்தரும் முலையினையும், மிக இளமைவாய்ந்த பூங்கொடிபோலும் இடையினையும், புதுமலரணிந்த கருமணலாகிய கூந்தலையும் சிலம்புசூழுங் காலையுமுடைய பெண்ணுருவமைந்த சோணைநதியை சிராம பிரானும, இளையபெருமாளும், விசுவாமித்திரமுனிவருடன் அடையவே, சாரதியாகிய அருணனுடைய கண்ணோட்டத்திற்கு முந்திச்செல்லும் வேகத்தையுடைய சப்தா என்னும் பச்சைப்புரவிபூண்ட ஒற்றையுருளைத் தேரையுடைய சூரியன் உதிக்கும் காலத்தில் இவர்களுக்குக் குளிர்ச்சிசெய்யத் தன் உருவத்தினிடத்தில் கொதிக்கின்றவெப்பத்தை மாற்றுகின்றவன்போல மேற்றிசைக் கடலில்மறையவே, தாமரைகளின் இதழாகிய கதவுகள் மூடப்பட்டமையால் அத்தாமரைக் காட்டைவிட்டுப்பெண்வண்டுகளும் ஆண்வண்டுகளும் நித்திரா

செய்கின்ற சோலையிற்சென்றுதங்க, ஸ்ரீராமபிரானும்விசுவாமித்திரமுனிவனைப் பார்த்து இச்சோலையின் வரலாறென்ன சொல்லுமையாவென்றுகேட்கவிசுவாமித்திரமுனிவரும், இச்சோலையிலே முற்காலத்தில் புத்திரர்களுக்காக ஆறாத் துயரங்கொண்டு காசிபமுனிவருடைய மனைவிமார்களில் திதியென்பவள் அருந்தவஞ்செய்தாள். அன்றியும் அண்டகோளகைப்புறத்ததாய் எம்மையாளாகவுடைய மேகநிறமுள்ளபகவான் எழுந்தருளியிருக்கும் வைகுந்தத்தையடைந்து ஒரு வித்தியாதரஸ்திரீ செந்தாமரை மலர்போன்ற திருவடிகளையுடைய திருமகளைப்புகழ்ந்துபாட அதற்குமனமகிழ்ந்து வண்டுகள் நீங்காத பூமாலையையளிக்க அப்பெண் அதை வீணையிற்கட்டிமீண்டுவரும்போது,காமம் வெகுளி மயக்கமென்னும் முக்குற்றங்களுமில்லாத தூர்வாசமுனிவர் எதிரில் வரக்கண்டு அவருக்கு உலகமுண்ட பெருவாயனாகிய ஆதிபகவனுடையமார்பிலிருக்கின்ற பிராட்டி அளகபாரத்திற்சூடுகின்ற பூமாலை;இது,நீர் இதனைபெற்றுக் கொள்ளுமென்றுகொடுக்க வாங்கிக்கொண்டு தலையிற்சூடி இந்திரலோகத்தையடைந்தான். மழைபெய்யு மேகம்வெள்ளிமலைமேல் ஆயிரஞ்செந்தாமரைமலர்களை யலர்த்துகொண்டும் சூரியனுடையநெருங்கியகதிர்களையணிந்துகொண்டும் தோன்றுமுறைமைபோல விளங்கு முருவத்துடன் இந்திரன்,ஐராவதமென்னும் வெள்ளையானையின்மேல் எழுந்தருளி அரம்பை, மேனகை, திலோத்தமை, ஊர்வசியென்று சொல்லப்படும் மன்மதனது பாணம்பெய்ததூணிரம்போன்ற கணைக்காலினும், தளிர்போன்றபாதங்களினுஞ்சிலம்புசத்திக்கவும்,கரும்பையும் சுவைகைப்பித்த சொல்லையுடையமாதர்கள் விளரியென்னும் பண்ணமைந்த பாடலோடு நடனஞ்செய்துவரவும், பெரிய நீலமலையி னிருபுறத்தும் பூரணசந்திரனுடைய கதிர்க்கற்றை தவழ்வதுபோலத் தன்னிருபுறத்தும் சாமரைபுரளவும் அழகமைந்த சந்திரன் குறைவறநிறைந்து ஒளிவிளங்கும்படி அம்மலையிலோங்கி யிருக்கின்றதுபோல அழகிய ஒப்பில்லாத வெண்கொற்றைக்குடை நிழல்செய்யவும், அடிபடுகின்ற பேரிகை, குறடு,. பாண்டில்முதலிய வாத்தியவோசை மங்கலகீதத்தை மறைக்கவும், உதாத்தம், அனுதாத்தம், சுவரிதமென்னுமூவகை இசையினையுடைய வேதங்களினோசை சமுத்திரகோஷ்டம் பின்னிட்டு உலகத்தை விழுங்குவதுபோலவும்பவனிவருவதையும் தூருவாசமுனிவர்கண்டு பேரானந்தங்கொண்டு அத்தேவேந்திரன் கையில் தாமணிந்திருந்த தெய்வமலர்மாலையைக்கொடுக்க, அவன் தன்கையிலிருந்த தோட்டியால் அதனைவாங்கி மிக்கவலிமையுள்ள அயிராவதத்தின் பிடரில்வைக்க அது தன் பனைபோன்ற துதிக்கையினால் வாங்கி முன்னங்காலிற்போட்டுப் பாழ்படுத்தியது.

அதைக்கண்டமுனிவர் தங்கண்களினின்று மொழுகுகின்ற தீப்பொறிகளால் அண்டம் சாம்பராயெரிந்துபோமென்று தேவர்கள் தங்கள் கதிகளை விட்டோட, சூரியசந்திரர்கள் திசைமாற, அட்டதிசைகளு மிருண்டுபோக, எவ்வுலகமும் சுழல, அம்முனிவன் சுவாசம்விடுகையில் புகையெழ, திரிபுர தகனஞ்செய்த பரமசிவனைப்போல நகையுண்டாக, நல்லநெற்றி வளையும் புருவங்களேறிட, இப்படிநிகழ்வதன்றித்தீப்பொறியெழுகின்றகண்களையுடைய

வாராய் இடியுமாறுபடகின்று மிக்க ஆடம்பரமாய் வருகின்ற இந்திரனைப்பார்த்துச் சொல்லுகின்றார். எல்லாவுயிர்களுக்குமிறைவனும், பூமிதேவிக்கு மணவாளனும், ஒப்பில்லாதவேதங்களுக்கு மூலபுருடனுமாகிய பகவானுடையமார்பிலிருக்கின்ற திருமகள்விரும்புகின்ற மலர்மாலையை முன்னைப்பிறவியிற்செய்த முதுதவத்தினால் பின்னையிப்பிறவியில் ஒருவித்யாதரமாதளிக்கப் பெற்றுக்கொண்டு, நீ இன்றுவருங்கோலாகலத்தைக்கண்டுமகிழ்ந்துஉன்கையிற்கொடுக்க அதனைவாங்கிடப்பெறாமல் உன் செல்வக்களிப்பால தோட்டியின் வாங்கி ஐராவதத்தின் பிடர்மேல்வைக்க அது காலால்மிதித்துப் பாழாக்கச்செய்ததனையல்லது உன்முடியில் சூட்டிக்கொள்ளாமல்இகழ்ந்துவிட்டாய்; ஆகையால் உன் பெருஞ்செல்வமும் சங்கநிதி, பதுமநிதி பென்னும் நிதிகளும் கடலிற்போயொளிக்க, நீயொளிகுறைந்து துயரமடையக்கடவாயென்று கொடுஞ்சாபமிட்டார். அவ்வாறு சாபமிடவே அரமடந்தையரும், கற்பகமுதலிய பஞ்சதருக்களும், நவநிதிகளும், தேவாமிர்தமும், காமதேனுவும், உச்சைசிரவமும், ஐராவதம் முதலிய எல்லாப்பொருளும் கடலிற்போயொளித்ததனால் தன்னுடைய பொன்னுலகத்தில் ஒரு பொருளுமில்லாமல் தேவர்கள் கண்டு கண்ணப்பமுதலியார் சத்துருக்களைப்போல வோடியொளிக்கத் தலைப்பட்டனர். இவ்வாறு தூருவாசமுனிவர் சாபத்தால் விண் மண் பாதலமென்னும் மூன்றுலகமும் வறுமையென்னும் தீப்பிணியால்மெலிந்து துயரமடைவதனால் பிரமாதி தேவர்களும்கூடித்திருமகளைமார்பிலேயுடைய விஷ்ணுவினிடத்திற்சென்றனர்.

அவ்வாறு சென்றடைந்தவர்கள் தூருவாசமுனிவருடையகொடியசாபத்தால் வந்துநேர்ந்த தீமையைச்சொல்லி நின்னையல்லது ஆதரவொன்றில்லையென்று அடைந்தோம் என அஞ்சவேண்டாமென்று உலகமளந்ததிருமால் அபயஸ்தங்கொடுத்து மந்தரகிரியே மத்தாகவும், வாசுகியே மத்திடுகயிறாகவும் சந்திரனே தூணாகவும் கொண்டு, தேவர்களும் அசுரர்களும்இருபுறத்தேயிருந்து ஓஷதிகொடுத்துத் திருப்பாற்கடலை அமிர்தமுண்டாகக் கடைவீராயின்யாமும் அவ்விடத்திலேவருவோம், நீங்கள் விரைவிற்செல்லுங்களென்று சொல்ல, அவரைத்தோத்திரம் செய்துபுகழ்ந்து நமக்குவறுமையென்னும் நோய்நீங்கியதென்று சந்தோஷத்தால் நடித்துப் பெருமகிழ்ச்சியென்னுங் கடலிலாழ்ந்து மந்தரமலையைப்பிடுங்கி மத்தாக்கி அதற்கு வாசுகியைத்தாம்பாகப்பிணித்துச் சந்திரனை தூணாகட்டு ஓஷதிகளைப்போட்டு அலைததும்பப் பூமியுநிலைகலங்க ஆதிசேடனும் பாதலத்தில்சென்று உடல்நெளியக் கடைந்தனர். அவர்கள் இப்படிகடையவே மந்தரமலைசுழல ஆமையாய் ஆயிரங்கைகளாலும் தாங்கி வலிக்க தருமமார்க்கத்தில் நடப்பவர் சிந்தையில் எழுந்தருளியிருக்கும்பகவானும் அமைத்ததனால், ஓடிஒளித்த நவநிதி, காமதேனு, பஞ்சதருமுதலிய எல்லாச் செல்வப்பொருள்களும்மீண்டும் தோன்றக்கண்டு தேவர்களும் அசுரர்களும்தம்முட்பிணக்கமடைந்தனர். அத்தருணத்தில் மோகினியுருக்கொண்டு அசுரர்கள் தாம்கொண்ட கருத்தையொழிந்து மரணபடையவே தேவர்கள் அமிர்தம்பகிர்ந்துண்டனர்; திருமகள் நாயகன் யாவரும் கண்டஞ்சியோடிய ஆலகாலவிடத்தை இடபவாகனத்தையுடையபரவசிவனுக்களித்து, பஞ்சதரு,

சுரபி, உச்சைசிரவம், அரமடக்தையர், ஐராவதம், நவநிதிமுதலியபொருள்களை யெல்லாம் இந்திரனுக்குவழங்கி தாம் கவுஸ்துவமணியையும், திருமகளையும் கைக்கொண்டான். அப்போது தன் மக்களாகிய அசுரர்கள் இந்திரன்முதலிய தேவர்கள் தந்திரத்தால் மாண்டதையறிந்து மிக்கதுயரமுடையவளாய் காசிபரையடைந்து அவர்பாதங்களைவணங்கி என்மைந்தர்களை மடித்த அத்தேவர்கள்மடிய ஒருபுத்திரனை யளிக்கவேண்டுமென்றுவரங்கேட்க, அவர் அவ்வாறே உனக்கொரு மகனையளித்தோம், இனிநீபூமியிலேசென்று ஆயிரவருஷம் பெருந்தவஞ்செய்யென்று கட்டளையிட அவளும் அவ்வாறே பெருந்தவஞ்செய்வாளாயினள். அதனைக்கேள்விப்பட்ட இந்திரன் வேற்றுருக்கொண்டு அவளுக்குக்குற்றேவல் செய்பவனாயிருந்து அவள்செய்கின்ற தவத்தில் சோர்வுநேரிடுஞ் சமயமறிந்து அவள் வயிற்றிற்கிடக்கின்ற மைந்தனைக்கீழேவிழச்செய்து ஏழுகூறுக்கினன். அவ்வளவில் அக்கூறுகளேழும் அழுதகண்களிலிருந்தும் கண்ணீர்சிந்த அவைகட்கு மருத்துஎன்னும் பெயரைக்கொடுத்தான். அதுநிகழ்ந்தவிடம் இதுவென்று சொல்லிக்கொண்டிட பிறகு சந்திரனைச்சடையிற்புனைந்த அனாதிமலமுத்தனாகிய பரமசிவனுக்கு உமாதேவியிடமாகத்தோன்றி அக்கினியும், வாயும் கங்கையும் பொறுத்தற்கரிதாகிய வலிமைபடைத்த குமாரக்கடவுள் வளர்ந்த பதுமப்பாசடைச் சரவணப்பொய்கை இதுவென்று சுட்டிக்காட்டி, காலன்மேனிபோலுங் கருநிறங்கொண்ட இருளையொதுக்கும்படி நீலநிறக் கடலில்தோன்றி ஆயிரங்கதிர்பரப்பும் சூரியன் திருமறுமார்பனுடைய கௌத்துவம்புரளும் திருவுந்தியினிடத்துள்ள மூலதாமரையிற்பூத்த பிரமன் போல் உதயஞ்செய்ய, அங்குநின்றும் பிரமன்முதலிய இறைவர் மூவரையும் ஒப்பாராகிய அம்மூவரும் கோபக்கண்களையுடைய விடையுகந்தேறும் வித்தகனுடைய சடைக்கற்றையினின்றுஞ் செந்தேன்பெருக்கெடுத்தோடுங்கொன்றை மலர்மாலையையீர்த்துக்கொண்டொழுவதனால் காவிரியாற்றையொத்த கங்கையைக் கண்டனர்.

இந்தப்பெருமைவாய்ந்த நதிக்குள்ள பெருமையனைத்தும் ஒன்றுமொழியாமல் முனிவர்பெருமானே சொல்லவேண்டுமென்று இராகவபிரான்கேட்க, என்னைவேள்விச்செல்வமடையப்பாதுகாத்த காகுத்தவமிசோத்தமனே! உன்மரபில்தோன்றிய மூதாதையும், அயோத்நகரையாண்ட அரசர்பெருமானும் விசயலட்சுமிவாழ்கின்ற தோளையுடையவனுமாகிய சகரசக்கரவர்த்தி இவ்வுலகையாண்டுவந்தான். அவனுக்கிரண்டு மனைவியருண்டு; அவருள் மூத்த மனைவியாகிய விதர்ப்பையென்பவள் கருக்கொண்டு போஷணனென்னும் புத்திரனைப்பெற்றாள். இளையமனைவியும் கருடனுக்கிளையவளுமாகிய சுமதியென்பவள் தருமமார்க்கத்திற் செல்லாத அறுபதினாயிரம் பிள்ளைகளைப்பெற்றாள். போஷணனென்பவன் அஞ்சுமானென்பவனைப்பெற்றான். மிகவெற்றியுள்ள சகரராசன்தன்மக்களுடைய சௌகரியத்தைக்கண்டு அசுவமேதஞ்செய்யவுங் கோபித்துக்கொண்டு தேவர்கள் வண்டுகள் நெருங்கிய மலர்மாலையணிந்த இந்திரனுக்குச்சொல்லினர். அவன் கபிலமுனிவனுடைய ஆச்சிரமத்தில் அஸ்வமேதக் குதிரையைக்கட்டினன். அக்குதிரையின்பின்சென்ற அஞ்சுமான்மனங்

கலங்கி முன்னேசென்ற குதிரையைக்காணாதவனாய்ப் பின்புபூமியினிடத்தெங் குந்தேடியுங்காணாமல் இந்திரன் அக்குதிரையையொளித்தவிடம் இன்னதென் றும் அறியாமல் இப்பிரமைகொண்டு மறுபடியும் தன்பாட்டனாகிய சகரசக்கர வர்த்தியினிடத்துத் தெரிவித்தான். அஞ்சுமான் சொல்லிய வார்த்தையைக் கேட்டு வாட்டங்கொண்டு தன்மக்களுக்கு அக்குதிரை காணாதசெய்தியை யெடுத்துச்சொல்ல, அவர்களும் வடவாமுகாக்கினிபோற் கொதித்து மிகக் கோபத்தினால் கண்ணில் தீப்பொறிபறக்க மறுபடியும் பூமியிலெங்குந்தேடிக் காணாமல் பாதலம் நன்றாகத்தெரியும்படி அம்மண்ணை நூறுயோசனையகலமும், ஆழமுமாகத் தோண்டிக்கொண்டு சாப்பிட்டுக்கொண்டே தேடிப்போய் வட கிழக்குத் திசையில் கபில முனிவனுடைய ஆச்சிரமத்தில் அக்குதிரையைக் கண்டு அக்கினியைப்போல் சீறியெழுந்துவைதுஇமிசைசெய்யவே, அம்முனிவனுக்குக் கோபமுண்டாகிக் கொதித்துத் தீயெழநோக்கினன். அவ் வாறு நோக்கியமாத்திரத்தில் பூளைமலரையணிந்த பரமசிவனுடைய நெற்றிக் கண்ணால் திரிபுரம்வெந்த விதம்போல சகரசக்கரவர்த்தி குமாரர்கள் அறுபதினாயிரம்பேரும் வெந்து சாம்பராயினர். உடனே தூதுவரோடி நடந்த செய்தியை சகரராசனுக்குத் தெரிவிக்கக்கேட்டு, அவர் அப்பொழுதுண்டா கியதுயரத்திற் கொருமுடிவுகாணாமல் அறிவுசோர்ந்து தன் பவுத்திரனாகிய அஞ்சுமானைக்கூவி யழைத்து அவர்கள் இறந்தாராயினும் நாம்வேள்வியை விட்டு விடலாமோ என்றுசொல்ல அவன் திடீரென்றெழுந்து பெருந்தவ முடைய கபிலமுனிவனிருக்கும் பாதலத்தைச்சேர்ந்து இறந்தவருடையஉடல் சிந்திக்கிடக்கின்ற சாம்பல்மலையையுங்கண்டு நடுநடுங்கிய மனமுடையவனாய்க் கபிலமுனிவனுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளைவணங்கி இக்காரி யத்தைச்சொல்ல உன்குதிரையை நீ கொண்டுபோவென்று சொன்னதன்றி நடந்தவிருத்தாந்தத்தையும் விவரமாகச்சொல்லியனுப்பினான்.

அதைக்கேட்ட அஞ்சுமான் அக்கபிலமுனிவனைவணங்கி அக்குதிரை யைக்கொண்டுவந்து யாவராலும் எடுத்துக்கூறும் புகழையுடைய இரகு குலோத்தமனே! அந்தவேள்வியைநிறைவேற்றித்தேவர்களுக்கு அவிர்ப்பாகங் கொடுத்து, சகரராசனும்சுவர்க்கலோகம்போய்ச்சேர்ந்தான். இதுகிடக்க; சகர ராசன் மக்கள் அறுபதினாயிரம்பேர் தோண்டிச்சென்றமையால் அப்பள்ளத் திற்குச் சாகரமென்றுபேர் வழங்கிற்று. இவனதுமரபில் பகீரதமகாராசனென் னும் அரசன்தோன்றி உலகையன்பாயாண்டுவந்தான். இப்பகீரதமகாராசன் உலகமுழுதும் தன்குடைநிழலில்வைத்து அரசாண்டுவருகையில் அவ்வரசன் தன் மூதாதையாகிய சகரராசன் மக்களிறந்தமைகேள்விப்பட்டு வசிஷ்ட முனிவர்பாதங்களில்எட்டுறுப்பும்நிலமுறப்பணிந்துகபிலமுனிவன்கோபத்தால் இறந்த மூதாதைகள் முழுதும் நிரயத்துன்ப மனுபவியாதவிதம் யான் தவஞ் செய்ய எம்மிறைவனே யருளிச்செய்யவேண்டுமென்று வேண்ட அதற்கு வசிஷ்டமுனிவர் உலகமுழுதமாள்கின்ற அரசர்பெருமானே! அன்று கபில முனிவன்சாபத்தால் வெந்து சாம்பராய்ப்போன உன் மூதாதைகள் பிழைக் கும்படி பெருந்தவத்தைப் பிரமதேவனைநோக்கி பலகாலஞ்செய்வையாயின்

அக்காரியஞ் சித்திக்குமென்றனர். அதுகேட்டுப் பகீரதனும் சுமந்திரனென்னும் மந்திரியினிடத்துத்தன்னரசையொப்பித்துத்தான் தவக்கோலங்கொண்டு பிரமதேவனைநோக்கி அறுபதினாயிர வருஷம் இமயமலைச்சாரலில் அருந்தவஞ்செய்யப்பிரமதேவன் பிரசன்னமாய் நீசெய்த அருந்தவத்திற்குமிகவுமகிழ்ந்தேன். உன்மூதாதைகள் கபிலமுனிவன் சாபத்தினால் முன்னே இறந்தனராதலின் பூமியின்கண் ஆகாய கங்கைவிரைவாகவந்து அவர்கள் எலும்பிற் படியுமானால அவர்கள் அனைவரும்மோக்ஷலோக மடைவார்கள்; அவ்வாகாயகங்கை பூமியில்வந்தால்அதனைசெற்றியிலொற்றைநாட்டமுடையகின்மலனையல்லதுதாங்க வல்லவர் ஒருவருமில்லை, நீஇமாசலையையொருபாலுடைய விண்ணவனைநோக்கி அருந்தவஞ்செய்யென்றுசொல்லி மறைந்தான். பகீரதனும் மங்கைபங்குடைய மணிகண்டனைநோக்கி அவ்வாறே யறுபதினாயிர வருஷம் அருந்தவஞ்செய்தான், இவ்வாறு அவ்வரசன் தவஞ்செய்யச் செந்தீவண்ணராகிய சிவபெருமான் கங்கையைநோக்கித் தவஞ்செய், அவள்வருங்காலத்தில் நாம்தாங்குதற்குத் தடையொன்றுமில்லை யென்றுசொல்லி அம்மகாராசனிடத்தில் விடைகொண்டேக, அரசனும்கங்கையைநோக்கி ஐயாயிர வருஷம் அருந்தவஞ்செய்தான். கங்கையோஒருபெண்வடிவங்கொண்டு அரசனே நீசெய்யும் தவம்யாது! கங்கையோ அலைமோதும் நீருருவங்கொண்டுவருவாளாயின் அவள்வேகத்தைப் பொறுப்பவர்யார்? சிவபிரான் பொறுப்பேனென்றசொல்லும் விநோதமாகும்; அதைப்பற்றி யறிந்துகொள்ளென்று சொல்லிப்போக, மூதாதைகளைக்குறித்து வருந்தும் பகீரதன் கரந்தையும் மத்தமும் எருக்கும் வில்வமும் கொன்றையும் நிறைந்த அழகிய சடாமகுடத்தையுடையநின்மலக்கொழுந்தாகிய பரமசிவனை நோக்கிஇரண்டாயிரத்தைந்நூறுவருஷம்அருந்தவம்செய்தான். அவ்வாறுதவஞ்செய்கையில் மலைமகளையொருபாகமுடைய மணிகண்டத்திறைவன் அவ்வரசனுக்கெதிர்வந்து நீவேண்டியதுயாதென, அதுகேட்டு அருட்பெருங்கடலாகிய இறைவனைவணங்கி கங்கைசொன்ன வார்த்தையைச்சொல்ல இறைவனும் நீ ஒருசிறிதும் அஞ்சவேண்டாம்! கங்கையொருசிறிதும்பிதிர்ந்து போகாதவண்ணம காக்கின்றோம்! என்றுசொல்லிப்போக இரண்டாயிரவருஷம் மீண்டும் கங்கையைநோக்கித் தவஞ்செய்தான். இவ்வரசன் எவ்வாறு தவஞ்செய்தான் எனின்நீரையும், விபூதியையும், வாயுவையும், உலர்ந்தசருகையும், சூரியகிரணத்தையுமுண்டும், அவைகளையு முண்ணாமலும் முப்பதினாயிரவருஷம் அருந்தவஞ்செய்ததைநோக்கிப் பிரமன் வசிக்கும் சத்தியலோகமும், இந்திரலோக முதலியலோகங்களும் நடுநடுங்க இரைந்துவரக்கண்டு, மலைமகள்மணவாளனாகிய மகாதேவன்ஒருசிறிதும்பிதிர்ந்துபோகாதவண்ணம்ஒருசடைநுனியிற்கரந்தான் அக்கங்கை புன்னுனியிற்சொருகிய பனித்துளிபோலச் சுவறிப்போனதைக் கண்டுதிகைத்துநிற்க, நீவருந்தவேண்டாம், கங்கை நமதுசடைநுனியிலிருக்கின்றாள்என்று ஒரு சிறுதுளிவிட அவள் பூமியிலிழிந்தாள். இவ்வாறிழிந்த கங்கை முன் அரசன்விரைவாகச்செல்கையில் சாபத்தால் இறந்தவர்கள்கதியையடையச்செல்கின்ற வேகத்தால் மிக்கபெருந்தவத்தினையுடைய சன்னுமுனிவன் யாகத்தையழிக்கவே, அம்முனிவன் கொழுந்துவிட்டெரிகின்ற தீயைப்போற்

கொறித்து உள்ளங்கையிலேற்றுக்கொண்டு வேதமுணர்ந்த முனிவர்களின்
கூட்டங்கள்கண்டு சந்தோஷிக்க ஆசமனஞ் செய்துவிட்டான். அதுகண்டு
அரசன் நடந்தவற்றைச்சொல்லக் கேட்டிரங்கி நீகொண்டுபோவென்று காதின்
வழியாகவிடவே கங்கைகுதித்து இறந்துபோனவர்க ளுடம்பினின்றுமுதிர்ந்த
சாம்பலிற்படிந்தாள். அவ்வாறு கங்கை அவர்கள் சாம்பலிற்படிந்தவுடன் அம்
மூதாதைகளனைவரும் பரகதியடைந்தனர். தேவர்கள் கூட்டம் புஷ்பவரு
ஷம் பொழிந்தாக்கவும், பேரிகைமுதலிய வாத்தியங்கள் ஒலிக்கவும், பகீ
ரதனும் அழகியமதில்சூழ்ந்த அயோத்தியாநகரமடைந்தான். இரகுகுலோத்
தமனே! அண்டகோளகைக் கப்புறத்ததாய் அன்றுலகையளந்ததாமரைமலர்
போன்ற திருவடியிற்பிறந்து பிரமதேவனாற் கொளப்பட்ட தீர்த்தமாய்ப் பரம
சிவன் சடையிற்பெய்துகொள்ளப் பகீரதன் கொணர்ந்தமையால் பூமியின்கண்
வந்துசேர்ந்தது. மேலும் இந்நதி சகரர்பொருட்டு அருந்தவம்பலகாலஞ்செய்து
பகீரதன்கொண்டுவந்தமையால் பகீரதியென்னும் பெயர்பெற்று, பூமியின்கண
சன்னுமுனிவன் காதின்வழிவரலாற் சானவியென்னும் பெயரையும பெற்றிருக்
கின்றது என்றுசொல்லவே வியந்து அதிசயப்பட்டுவணங்க, அவர்களொடும்
கங்கையைநீங்கி விசாலைநகரத்தரசனாகிய மலைபோலுந்தோளையுடைய அரசர்
பெருமான்வந்து அடியிணையிறைஞ்சத் தங்கியிருந்து அவனுக்கு நல்லுரைகூறி,
அவ்விடத்தினின்றுநீங்கித்தாமரைப்பூத்தவயலிற்பள்ளியுணர்ந்தநாரைகள்களைந்
தெறியும் மாதர்களுடைய கள்ளமபயிலும் மான்போலு நெடுங்கண்களையே
நோக்கிக் கயற்கண்டை யென்றெண்ணி நாணங்கொள்ளும் அகன்ற வயலை
யுடைய மிதிலைநாட்டையடைந்தாகள். அந்நாடோ அளவில்லாத பெரிய
குளங்களினுடைய மதகுகள்முழவுபோலொலிக்கவும, அரும்பும் நறுமலரை
யுடைய செங்கமலப்பூவாலாகிய விளக்கெடுக்கவும், நரம்பைப்போலொழுகும்
தேன்துளிகளைக்கொண்டிருக்கும் நல்லமலரின்கண் வீணையைப்போல்வண்டு
கள் இசைபாடவும், சோலையில மயில்கள் நடனஞ்செய்யவும், அழகிய பட்ட
மணிந்த நெற்றியையுடைய மாதர்கள் தங்கள்பார்வையாகியதூதினால் அவர்
களையணைய இச்சித்து அங்குமிங்கும் திரியும் ஆடவருடைய மனமவெறுக்க,
வயலில உழவர்கள் களைபறித்தெறிந்த தாமரைமலரிற் படிந்திருந்து அந்த
மாதர்களைப் பழிக்கவும, பொய்கைகளிற் கூவும் மெல்லிய குயில்போன்ற
சொல்லையுடைய மாதர்கள் சிறகினையுடைய அன்னங்களைத் தம்மினமென்று
அவற்றின்நடையைக்கண்டு பின்றொடரப்போய் ஆடுகின்ற குளிர்ந்த நீரில நீங்
காத குங்குமப்பூச்சேர்ந்த கலவைக்குழம்பின்சுவடு உடம்பெங்குமபடிய, அந்
நீரிலிருக்கும்பறவைகள் சேவலும்பெடையுமாகத் பிணங்குவதனால் மலர்கள்
உறங்கினாலும் உறங்காமலிருக்கவும, ஆறுகளில் முறையாகநலமுதியஎருமை
கள்முலையினின்றும்ஒழுகும்பாலும், சோலைகளினின்றும் உயர்ந்தமாமரங்களில்
ஒழுகுமசாறும், கரும்புகளை யாலையிலிட்டதனாற் பெருகும் இரசமும், தேன்
கூட்டிலிருந்து பெருக்கெடுத்தோடும் தேனுமல்லாமல் வேறுபெருக்கென்ப
தில்லாதிருக்கவும், நூற்கும் நூலிழையைப்பார்க்கிலும் நுட்பமாகிய இடை
குழையமேலோங்கும் தனங்களும், குளிர்ந்த பார்வையுமுடைய மாதர்கள்

செய்யும் நாடகசாலையில் கூத்தர்கள் முழக்காநின்ற முழவின் ஓசைக்குப் பயந்து உயர்ந்த இளமையாகிய எருமைகள் ஓடைகளிற் குதித்துக்கலக்க அதிலுள்ள வாளைகள் தென்னம்பாளையிற்பாயவும், அந்நாட்டிலிருக்கும் மாதர்களுடையகண்ணாகிய வாள் உறைஎன்னும் இமையிற்புகும்படிபரந்திருக்குநீரில் மூழ்கிமுன்னேகடையத் திருப்பாற்கடலினின்றும்திருமகள்தோன்றிய தன்மையைக்காட்டி நெருங்கியவெள்ளிய கைவளைகளும், பறவைகளுடன் ஒலிக்குந் தடாகத்திலுள்ள வண்டின்கூட்டங்கள் வாசனையுள்ளமலர்களிற் குடையவும்; இவ்விதக் காட்சிகளையுடைய, மதில்சூழ்ந்தமிதிலைநகரத்தை அலங்கரிக்கும் நீண்டகொடிகளையுடைய மதிலின்புறத்தே இனிமையாகச்சென்றணையவே, அகலிகை மனையொழுக்கத்திற்குரிய மாட்சிமையை யழித்து இழிந்த கல்லாகக்கிடக்கும் ஒரு பெரிய மேட்டைக்கண்டு இப்படிதோன்றிய கல்லின் மேல் சீராமபிரானது திருவடித்துகள்படவும் தம்மைவிடாது என்றும்பற்றிக் கொண்டிருந்த அஞ்ஞானமாகிய இருளொழிய வேறுபட்ட உருவங்கொண்டு மெய்ஞ்ஞானங்கொண டறியத்தக்கபகவானது திருவடிகளையடைவதுபோல முன்னே தன்னுடையநாயகனாகிய கவுதமமுனிவன் இட்டசாபத்தினாலாகிய இழிந்த கல்லுருவம்நீங்கப்பெற்றுப் பழையபடியேபெண்ணுருவங்கொண்டுநின்றாள்; அதைக்கண்டு விசுவாமித்திரமுனிவன் இரகுநாயகனைப்பார்த்துக் கங்காநதியைப் பூமியிற்கொணர்ந்த பகீரதனுடைய கால்வழியிற்றோன்றிய சீராமபிரானே! மிக்ககளிப்புடன் மின்னலைப்போல இங்கே ஒதுங்கியிருக்கின்றவள் யாரெனில், தீவினையை விரும்பிச்செய்த இந்திரனுக்கு ஆயிரங்கண்ணளித்த கௌதமமுனிவன் மனைவியென்றான். அதைக்கேட்ட இராகவனும் இவ்வுலகிருந்ததன்மைமிக்கவியப்புடையதே! இச்செய்கை பழையஊழ்வினையால்வந்து நேர்ந்ததோ! இடையில் ஒருகாரணத்தால்வந்துசம்பவித்ததோ! தாயையொத்தவராகிய இவ்வன்னைக்கு நேரிட்டவிதம் யாதென்றுகேட்க, அதைக்கேட்ட விசுவாமித்திரனும் சீராமபிரானைநோக்கி மிக்கவொளியுள்ள வச்சிராயுதத்தையுடைய இந்திரனும் பஞ்சேந்திரிய நிக்கிரகஞ்செய்த கௌதமமுனிவன்நீங்கும் சமயம்என்றுவாய்க்குமோவென்று மான்போலுங்கண்களையுடைய அகலிகையினது அழகியமுலையையணைய ஆசைகொண்டு அகலிகையென்னும் இப்பெண்ணினது விழியாகியவேலும், மன்மதனாற்றொடுக்கப்படும் பாணங்களும், தன்மேல்படவேதான் அகலிகை மேற்கொண்டிருந்த காதலால் ஒருசிறிதுநேரம் பிழைக்கும் உறுதியைத்தேடி கௌதமமுனிவன் இல்லாத சமயம் அகப்படாமல் அறிவுகெட்டுப் அன்று கௌதமமுனிவனுக்குப் பிரிவையுண்டாக்கி அம்முனிவனுடைய வடிவங்கொண்டு அகலிகையிடத்திற் சென்றான். இப்படி சென்று நலமானகலவியின்பத்தின் இனியசுவையை இவ்வகலிகையுடன் அனுபவித்துக்கொண்டிருக்கையில், பின்னுமதுதகுதியல்லவென்பதும் இவள் அறியாமல் தாமசமாகக்கிடக்க, சோமசூரியாக்கினியென்னுங் கண்களையுடைய பரம்பொருளாகியசிவபெருமானையொத்த தபோவலிமையுள்ள கௌதமமுனிவனும் மிக்கவேகமாகப் பாணம் ஏவுதற்கு இசைவாகிய வில்லேயல்லது ஒருவராலும் தடுப்பதற்கரிய சாபமிடவல்லவராய்ச் சமீபத்தில்வரக்கண்டு பயந்து அறியாப்

பழிபூண்ட அகலிகையும்நின்றாள்.இந்திரனும் பூனைவடிவாகிப் பயந்தோடினான். தேவர்களுக்கெல்லாம் அரசனாயிருந்தும் செய்யத்தகாதகாரியஞ் செய்துவிட்டானேஎன்றுகண்ணில் தீப்பொறிபறக்க உன்கையிலிருக்கும் தீயபாணங்களையொத்த என்னுடைய சாபமொழியால் ஆயிரமாதர்களுக்குள்ள அறிகுறியுண்டாகக்கடவதென்று சாபமிட்டான். அவ்வாறு சாபமிடவும் அவைகளெல்லாம் இமைகோத்துக்குள்ளாக வந்துசேர்ந்தன. இந்திரனோ நாணவடைந்து பார்ப்பவர்கைக்கசேர்ந்தபழியுடன்போனபின்பு, அகலிகையைப்பார்த்துவேசையையொத்த நீயும் கல்லுருவாகக்கடவையென்று சாபமிட்டான்.இவ்வாறுநடக்கையில் இந்திரனைப்பார்த்த தேவர்கள் பிரமதேவன்முன்னிலையில் வந்து கௌதமனைக்கண்டு இந்திரனுக்கு ஆயிரமாதர்களுக்குள்ள வறிகுறிகளும் பிறர்க்குக் கண்ணாகத்தோன்றவும், அவனுக்கு அறிகுறிகளாகத் தோன்றவும் வேண்டிக்கொள்ள அவ்வாறேபெற்றுக்கொண்டு தங்கள்தங்கள் பதங்களிற்சென்று சேர்ந்தனர் இது முன்னடந்தமுறைமை. இனிஇந்தவுலகங்கட்கெல்லாம் உய்யும்விதமன்றிமற்றோர் துயரமென்னுந் தன்மையுண்டாகுமோ? கருமைநிறங்கொண்ட அரக்கியாகிய தாடகைபோரில்மழைபோலும்நிறமுடையஇராகவபிரானே உன் கையின்வல்லமையை அங்கேகண்டேன், பாதத்தின்பெருமையைஇங்கேகண்டேன், எனக்கீடில்லாத உதவிசெய்தசேவடியையுடைய ஸ்ரீராமபிரானேகுற்றமற்றகுணத்தையுடைய விசுவாமித்திரமுனிவன் சொன்னவற்றைக்கருத்திற்கொண்டு, உனக்குப்பெருந்தவமுடைய கௌதமர் கருணையேயுண்டானால் துன்பமென்பதொன்றுண்டாமோ! நீஅன்னையேயெங்களுடன்வா என்றுபொன்னடிவணங்கியழைத்துக்கொண்டுபோய்அருந்தவத்தையுடைய கௌதமமுனிவருடையஆச்சிரமத்தைஅடைந்தபோது விருந்தினைக்கண்டுபரிந்தமனமுடையவராகியஅம்முனிவர்எதிர்சென்றழைத்துச் செய்யவேண்டியஉபசாரங்களைச் செய்து நிற்கையில், விசுவாமித்திரமுனிவன் கௌதமமுனிவனைநோக்கி அஞ்சனவண்ணமுள்ள ஸ்ரீராமபிரானது திருவடித்துகள்படியாதமுன்பே கொடிபோலும் இடையையுடையஅகலிகையாகிய உமதுமனைவிமுன்போலும்பெண்ணுருக்கொண்டு நின்றாள். மனத்திற்குற்றமிலலாதவளாகிய உமதுமனைவியை நீரேயழையுமென்றுசொல்லப் பிரமனையொத்தகௌதமமுனிவருமதற்கிணங்கி நிற்கச் ஸ்ரீராமபிரானும் அம்முனிவருடைய பாதங்களை வலம்வந்துவணங்கிக் குற்றமற்ற கற்பிலுயர்ந்த அகலிகையை அவரிடத்தேயொப்பித்துத் தான் விடைபெற்றுக்கொண்டு, தம்பியும் விசுவாமித்திரமுனிவனும் தொடர்ந்துவர அச்சோலையைக்கடந்துசென்று அழகிய மதில்சூழ்ந்த அகழியைக்கண்டனர்.

அகலிகைப்படலம்

முற்றிற்று.

---

## மிதிலைக் காட்சிப்படலம்.

குற்றமற்ற தாமரைமலரினின்றுநீங்கி யான்செய்கின்ற பெருந்தவத்தினுல் திருமகள் வந்திருக்கின்ருள் என்று செழுமையான மணிகள் கட்டியகொடிக ளாகிய கைகளைநீட்டி அக்காவலையுடைய நகரமாகிய பெண் செந்தாமரைமலர் போன்றகைகளையுடைய ஸ்ரீராமபிரானை விரைவாகவருகவென் றழைப்பது போலிருந்தது. தக்கவரொருவருமில்லாமையால் தருமதேவதையேநாடிசென் றழைக்கஅளவில்லாத மிக்க அழகுள்ள சானகியாரைமணஞ்செய்யச் ஸ்ரீராம பிரான்வருகின்றனனென்று அரம்பைமாதர் ஆகாயத்தில் நடனஞ்செய்யும் நட னம்போல மாடமாளிகைகளின்மேல் கொடிகளாடக்கண்டும், தயிரைக்கடை யும் மத்தைப்போல மன்மதபாணம்பட வருந்திப்பிணங்கும்மாதர் ஆடவரைப் போல,ஒன்றை மற்றென்றுநீங்காதுகோபந்தங்கிய மனமுள்ளவைகளாய், தீப் பொறிகள் செவந்த கண்களிலிருந்தும் புறப்பட்டு வயிரம்பற்றிய தந்தங்களை யுடைய யானைகள்போர்செய்யப்பார்த்தும், சூரியகிரணம்மறையவும் ஆகா யம்பாற்கடல்போலவும், மிதிலாநகரத்துமாளிகைமேல் பெரியதுகிற்கொடிகள் நெருங்கிநிலைபெற்ற மேககூட்டத்தைத் தடவுந்தோறும் நனைந்து அம்மேக த்தைப்போலச் சூழ்ந்த அகிற்புகைபடியுந்தோறும் உலர்ந்தாடப்பார்த்தும்; விரும்பி அமிர்தத்தில் தூரியக்கோலைத்தோய்த்து அவயவங்களைஎப்படிசித்திரிக் கலாமென்று மயங்குவானேயல்லது மன்மதனுலும் எழுதிமுடியாத சானகி யாரைத்தந்தமையாலேதிருமகள் விளங்கியிருக்கின்ற செந்தாமரை மலர்போல விளங்கும் பொன்மதிலையுடைய நகரத்துக்குட்பிரவேசித்தார்கள்.

தமிழ்என்னும் அளப்பருங் கல்விக்கு இலக்கணமருளிச்செய்தசெந்தமிழ் ஆசிரியராகிய அகத்தியமுனிவர் உண்ட ஒளியுள்ளமணிகள்தங்கியகடலைப் போலநெருங்கி இரவிற்சேர்ந்து விளங்கும் பலநக்ஷத்திரங்கள் உண்டாயிருக் கின்ற ஆகாயம்போலவும், ஒளியுள்ள அட்டமச் சந்திரனையொத்த நெற்றியை யுடையமாதரும் ஆடவரும்வெறுத்துநீக்கியபொன்னுபரணங்கள் குப்பையாகக் கிடக்கின்ற நெடுந்தெருவாகிய இராசவீதிவழியே நடந்து, அங்குசத்தால் குத்தப்பட்டு அஞ்சாமையையுடையமலைபோன்ற யானைகள்மிகுந்தமதநீராகிய அருவியைப் பொழிவதனுல் கடிவாளம்பூண்ட குதிரைகளின் வாயினின்றும் ஒழுகாநின்றநுரையால் அவ்வாற்றினதுதன்மைமாறி, வேறோர்ஆறெனச்சொல் லக்கிடந்து உடனேசேருகியும், தேர்களோடுவதனுல் தூளாகியும், இவ்வாறு ஒன்றேடொன்று மாறுபடுவதாகிய வறிதேயிராத வீதிவழியேசென்று நீக்க மின்றி மாதராடவரென்னும் இருவரிடத்துந் தோன்றிய காமவின்பத்தை யனுபவித்தபின்பு அக்கலவிப்போரால் இளைத்தமெல்லிய மாதரைப்போல, இராகமொழிச்சியராகிய மாதர்கள் ஊடலிற்சிதறியபூமாலைகள் வண்டுகளுடன் இருந்து தேன்துளிக்க அவ்வீதியின்வழியே சென்றனர்.

நெய்திரளும்முறைமையாய்த்தந்தகுதலைச்சொல்லால்இயல்கின்ற இசைப் பாட்டைத்தழுவிய மகரவீணைமுழவோசையை ஒத்திருக்கவும், அபிநயங்

காட்டும் கையின்வழியே கண்பார்வைசெல்லவும், கண்ணின்வழியே மனஞ் செல்லவும், உண்டோ இல்லையோ என்று சொல்லப்படுகின்ற இடையையுடைய மாதர்கள் நடனஞ்செய்யும் நாடகசாலையையும், போர்செய்தெழுந்தவண்டுகள் மாதரிடைக்காக வருந்தியேங்கவும், குற்றமுடைத்தாகிய பிறவிபோல வரவு போக்குடையதாகிக் குற்றமற்றபவளம்போலும் செய்யவாயையுடைய மரகத மணிபோலும் கமுகமரங்களிற்பிணிக்கப்பட்ட ஊசலினிடத்து மாதர்கள் தங் கள்ளாயகருடைய கருத்தோடுலாவுவதையும்; அளவில்லாத இரத்தினங்களும், பொன்னும், முத்துகளும், கவரிவாலும், பாலைநிலத்தில் உண்டாகும் அகிற் கட்டைகளும், மயிலின்தோகைகளும், யானைத்தந்தங்களும், ஆகியஇவற்றை வரம்புகட்களையாக நிரம்பச்செய்த உழவர்கள் குவிக்கக் கரைகளெங்கும் பரம்பும் காவிரியாற்றைப்போன்ற ஆவணமபலவற்றையும்பார்த்தும், கொள்ளி வட்டம்போலும் வையாளிசெல்லும் கடிவாளம்பூண்ட குதிரைகள் குயவன் மட்கலம்வனையும் திகிரிபோலப் பலவிடங்களிலும் மேலோர் நட்பைப்போல இடையே நீங்காதவையாயும், மெய்யுணர்ச்சியுடையார் அறிவேபோல ஒன் றாயும், கட்புலனுக்கு இன்னதெனத் தெரியாமலுமிருப்பதாயும்; ஒவ்வொரு மணிமயமான மாளிகைகளின் சாளரங்களிலும் அரம்பொருத வேல்போலும மன்மதன்வில்லும் வண்டினங்களோடுபொருந்திய நீலோற்பலமலர்ச் சுருளும் செஞ்சடையுந் தன்னிடங்கொண்டு என்றுமழியாத களங்கத்தையோட்டிப்பல சந்திரோதயமானாற்போல மாதர்கள்காண்பதையும்; பளிங்குக் கிண்ணத்தில் வார்த்த தேனைக்குடித்துத் தோன்றுநகையையுடையவராய் வெறிகொண்டு பேசிமறைத்தாலும்மறைக்கப்படாத ஊடலைப்பிறர்க்குத் தெரிவிப்பதுபோலக் களிப்புணர்த்தும்செவ்வியபலதாமரைகளையும், காமசம்பந்தத்தாலாகியபோகத் தைத்தாமும் ஆடவருடன் அனுபவித்து விலையையும் கொள்ளும் மனமும், தன்னிடத்திற்காட்டிய வன்னம்பற்றும் பளிங்குபோல மையிட்டகண்ணின் பார்வையாற்கருகியும், கைபடச்செவந்துந்தோன்றும் பலபந்தாடுமிடங்களை யும், வளையலும், காதணியும், இரத்தினஹாரமும், நூலாற்செய்யப்பட்டவடமும் மகரவிளையும், பந்தயப்பொருளாக அமைத்து வாசனையுள்ள பூமாலைகள் சோரப் பளிங்குப் பாச்சிகையைச் சிவக்கப்பிடித்துருட்டி வேல்போலுங் கண்ணையுடைய மாதர்கள் சூதாடும் இடங்களையும், தாமரை, குவளை, ஆம்பல், பாகற்கொடிகள், வள்ளைச்செடிகள், நீலமலர்கள், செஞ்சடை, அலை, வரான் மீன் இவைகளெல்லாம்நிரம்பவேறோர் ஒப்பில்லாத தங்கள் அவயவங்களுடன் தழுவி மிகுந்த விருப்பமாய் மாதர்கள் நீராடும் பலதடாகங்களையும்; ஐம்புல விடயங்களிற் கொண்டுசெல்வதனால் அவைகளுடன்சென்று மயக்கமுற்று வசித்துநின்று கலக்கம்பெற்ற அறிவைப்போல் தோள்களில் கூட்டுவார்க்க மமைந்த சந்தனச்சேறும் தம்முளொத்த கொங்கைக்குறியும் நீங்காதவெற்றி யுள்ள இளங்குமரர் வாளைவீசிவிளையாடும் இடங்கள் பலவற்றையும்; கொடிய கோபத்தில் உருவிப்போனதென்றுசொல்லும் சரீரமும், தன்னைவந்தடுத்தால் ஒருபொருளை யில்லையென்னுமற் கொடுக்கும் இயல்புடைய மனமும், தோன் றுத்துணையாகிய பரமசிவனுடைய நெற்றிக்கண்ணிலழியாத மன்மதனொருவ

னுண்டாயின் அவனைப்போலப் பேரழகும், செங்கரும்புச்சிலையேந்திய கையை யுடைய தத்தம் மனைவியர் பிணக்கைத்தவிர்த்துச் சிவந்த சிகையுமுடையவ ராய்ச் சூழ்ந்துநிற்கும் வாலிபரையும்; பாகொத்த சொல்லையுடைய பசுங்கிளி யுடன் பலசொற்களைப்பேசிச் சுவர்க்கத்திலிருக்கும் அரம்பாஸ்திரிகள் நாணங் கொள்ளப் பூக்கொய்யும் மயிற்சாயலையுடைய பூங்கொம்பையொத்த மாதர் களுக்கு அன்னங்கள் நடையில் தோற்றுப்போகப்பார்த்து வண்டினம் ஆரவா ரிக்கின்ற சோலையையும்; தேவர்கள் இருக்கத்தக்கவாசஸ்தானமாகியமாளிகை களில் ஒழுங்காகிய சாயைபாய்வதனால் இவ்வுலகத்தில் தெரிகின்ற தேவர்கள் வசிக்கும் சுவர்க்கத்தின் அழகைக்காட்டி அலைமிகுந்துபொங்குங்கங்கையினும் ஆழமான நால்வகைச்சேனைப் பெருக்கமுடைய சனகராசனது அழகியபொற் கோயிலைச்சூழ்ந்த அகழியையும் பார்த்துக்கொண்டே போயினர்.

அதன்பிறகு பொன்னினொளிபோலவும், பூவின்மணம்போலவும், தேனிற் சுவைபோலவும், செஞ்சொல்லாற் றொடுக்கப்பட்ட கவியின் இன்பம்போலவும் கன்னிமாடத்தின் மேலிடத்தில் மிகுந்த அன்புள்ள பெண்ணன்னத்துடன் ஆணன்னம் கூடிக்கொண்டிருக்கும் முன்றுறையைக்கிட்டி ஒரு பக்கமாக அவ் விடத்தில்நின்று பார்த்துக்கொண்டே பின்னும்சொல்லுமிடத்துப்பிரமதேவன் முதலியதேவர்களெல்லாரும் எந்தப்பெண்ணினையும் உவமையெடுத்துச்சொல் லும் அப்பெண்ணே சானகியாரேல் வேறே எதை யெவ்விடத்தில் ஒப்பாக வெடுத்துச்சொல்லலாகாதோ அப்படிப்பட்ட சீதையையேகண்டனர். உமை யன்னையொத்த மாதரும் உச்சிமேற் கைகுவித்துவணங்கப்பொறுமையே ஒரு வடிவெடுத்து வந்ததென்று சொல்லத்தக்க அவ்வன்னையின் மேனியைக்கண் டனர். அவ்வழகின் கரைகாணமல் இந்திரன்தான் ஆயிரங்கண்ணிருந்தும் அவை களாற்காணும் பரிசினைப்பெற்றிலனேயென்றும், பிரமதேவன் என்னுடைய எட்டுக்கண்ணாலும் பார்க்கவுமமையாதேயென்றும், குமாரக்கடவுள் என் பன் னிருகண்ணும்போதாதே இவ்வன்னையின் பேரழகுகாணவென்றும், மற்றைத் தேவரும் யாங்கள் இமையாநாட்டம்பெற்றும் அவ்விரண்டுகண்களாலும்காணப் போதாதேயென்றும், சொல்லிக்கொண்டிருக்க, மண்ணுலகத்தவர் இமைக்குங் கண்ணைப்பெற்றதனால் அவ்வழகின்னதெனத் தெரியாமலிருக்கின்றது, நாங்கள் தேவர்களைப்போல இமைநாட்டம் பெற்றிலமே என்றுவாடவும், அழகிய மானைவென்றுவாகைகொண்டவேலும், கொலைத்தொழில்செய்யும்வாளும், பின் னிட்டோடியொளிக்கவும், சேற்கண்டை பயந்தோடவும், பிறழ்கின்றகண்களை யுடைய சானகியாரோ முன்னே மந்திரகிரி சுழல்வதனால் கூவிக்கொண்டு முன்னேகொடுத்ததிருப்பாற்கடலேயல்லாமல் இன்றுமந்தமாளிகையின் மேல் இடத்தில் வந்திருந்ததிருமகளேயென விளங்கியிருந்தாள்.

பெருந்தேர்த்தட்டினையொத்த அல்குலையுடையஇச்சானகியாரையொப்ப வளாகிய பெண்ணொருத்தியைப் பிரமன்படைப்பானென்றாலும் அவனாலுஞ் செய்பத்தர மாமோ, முன்னேதிருமகளைத்தந்த பாற்கடலானது தங்களிடத்தி லிருக்கும் அமுதத்தைச்சாப்பிட்டு இன்னும்வேண்டுமென்றபோது அத்தேவர்

களுக்கு அமுதத்தைக்கொடுக்குமேயல்லாமல் வேறெதைக்கொடுக்கும். தேவலோகத்திலிருக்கும் இந்திரனும், அவனுலாளப்பட்ட அமரரும், அவரால்விரும்பப்படும் மேனகைமுதலிய விளங்குகின்ற வேல்போல்கின்ற கண்ணையுடைய மாதர்கள்முகமாகிய சந்திரனுக்கு சீதாபிராட்டியின் முகமானது பகற்காலம் போலவிளங்கும். தாமரைமலரைநீங்கிஇச்சானகியார்இப்பூவுலகில் எழுந்தருளியிருக்கப் பலகாலம் வருந்தித்தவஞ்செய்தவர்கள் அளவில்லாத அழகிய தட்பமாகிய குணமுடையமுனிவரேயோ! நல்லதருமதேவதையேயோ! அல்லது இம்மண்ணுலகமோ! வானுலகமோ! தேவரோ இன்னதென்றறியோம், தமக்கொப்பாரில்லாத மாதர்கள்செந்தளிர்போன்ற கையையுடையயானே! தாயே! தேனே! அருமையான அமுதே! என்றுபுகழ்ந்து அடிவணங்கவும், அடிபெயர்த்துவைக்குந்தோறும் எதிரிலேசென்று அடிக்கடி மலரைப்பரப்பி அம்மலர்மேல்கால்வருந்தநடந்துசெல்வாள், அழகியபாதங்களிற்கிண்கிணியும், மார்பில் இரத்தினமாலைகளும், அல்குலில் மேகலாபரணமும் அணிந்தபெண்கள் தமக்குள்ள அலங்காரத்தைவியந்துபார்ப்பதனால்நூறுகோடிமின்னல் சேவித்துநிற்க மின்னாசென்னநின்று, கொலைத்தொழில்பழகிய வேலையும், யமனையும்வெல்லும் வெல்லுமென்றுசொல்லக் களிக்கும் பார்வையையுடையவளுடைய தன்மையை நாமேசொல்லுந் தன்மையுடையதல்ல.ஏனென்றால், மலைகளும், சுவர்களும், கற்களும், புற்களுமாகிய அசேதனப்பொருள்களும் பார்த்துருக மாதருக்குள் கனிபோல்பவளாகநின்றும், யாவரும்விரும்புகின்ற கண்களினிலக்கணத்தைபபார்க்கையில் மேலான விழவையும், உள்ளூன்றிப்பார்த்த அளவில் களிப்பைத்தருவதுமாகி யிருப்பதனால் மருந்துபோல்பவளவாயிருப்பவள் எங்கள் இறைவனுகிய ஸ்ரீராமபிரானுக்கு எவ்வகைப்பட்ட பொருளாவளோ! அழகிய ஆபரணங்களும், காதணிகளும், இவைபோல்வனவாக உருவங்கொண்டு முன்னுளில்மேகம்போலும் குளிர்ச்சியுள்ள இரண்டுகண்களையுடைய பெண்களுடன் பழகியிருந்தபோதிலும்இப்பதுமைபோலும் திருவுருவமுடையஇறைவி உதயஞ்செய்தலால் அழகென்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட அழகானது அழகுபெற்றுக்கொண்டதென்று சொல்லவும், இப்படிப்பட்டதென்றுசொல்லுதற்கருமையாய்அழகமைந்த சீதாதேவியோ இவ்வாறு அலங்காரங்களுடன்கூடியிருக்க இரகுநாயகனது பார்வையும் சானகியாரது கண்ணும்ஒன்றையொன்று பற்றிக்கொள்ள, 'கண்ணொடு கண்ணிணை நோக் கொக்கின்வாய்ச்சொற்கள், என்னபயனுமில' எனத்தேவர்கூறியதை விளக்க, இறைவனும்நோக்கினன், சானகியும் நோக்கினள். அவ்வாறுநோக்கிய சானகியாரது கூர்மையான வேற்கண்இரண்டும்மிக்கவெற்றியைபமைந்த ஸ்ரீராமபிரானதுதோளிலழுந்தின. ஒலிக்கும் வீரகண்டைகட்டிய சிபாதங்களையுடைய இரகுநாயகனது செந்தாமரைமலர்போன்ற கண்களும் திருமகளாகிய சானகியாரது தனபாரத்தில் அழுந்தின. கலந்தபார்வையாகிய கயிற்றினற்பிணித்து வரிந்துகட்டப்பட்டவில்லையேந்திய ஸ்ரீராமபிரானது உள்ளம்வாள்போலுங் கண்களையுடைய சானகியாரையும் அப்படியே இவர் எண்ணம் அவரையும் ஒருங்கு இழுப்பதனல் அவர் உள்ளத்தில் இவரும், இவருள்ளத்தில் அவருமாகப்போய்ப்பொருந்தி சானகி

யாரும் இரகுநாயகனும் இரண்டுடம்பிற் கோருயிராக விளங்கியிருந்தனர், என் எனின்பெரிதாகியதிருப்பாற்கடலில் கண்வளரும்இருவரும்சர்ப்பசயனத்தைத் துறந்துமறுபடியும்கூடினமையால் இவர்களுக்குண்டாகிய தொடர்பைவாயாற் சொல்லவும்வேண்டுமோ. இதுகிடக்க; சானகியாரோ சொல்லிமுடியாத பொழு கினையுடைய இரகுநாயகன் அணைதற்கியலாமையால் அவ்வனையோவித்திரப் பாவைபோல் அசைவற்றிருந்தனள். இரகுவீரனேவெனின் சானகிபிராட்டியி னது மனமும், நிறையும், மெய்ந்நலமும் பின்னேதொடர்ந்துசெல்ல விசுவா மித்திரமுனிவருடன் மறையச்சென்றனர். அவ்வாறு செல்லவே சானகியார் மனமாகியமதங்கொண்ட யானையினது கற்பென்னுமங்குசம்கிமிர்ந்துவிட்டது. ஆகையினல் பிறைபோலும் நெற்றியையுடைய சானகியாரது பெண்டன்மை யாதுபடுமோ! அவ்வாறு நிறையென்பதுகெடவேநாணம், மடம், அச்சம், பயிர்ப் பென்னும் மாதர்க்குள்ள குணங்களும் நிலைத்தடுமாறின. தன்னை ஆசையென் பது பொருந்துவதனுல் தனது நூலிழையையொத்த இடையானது மெலிவது போல மனமும் தேகமும் மெலியும் சானகியாரது நீர்க்காலொத்தகண்வழியே புகுந்த காமநோய்பாலையடைந்த பிரைபோல எங்கும்பரவிற்று. இவ்வாறு காம நோய்மிகுந்து வருந்துகின்ற சானகியார் தாமடைந்த விரகநோயை ஒருவருட னும் சொல்லாமல் ஊமைகள்போலத்தம்மனத்தில்தாமே நினைத்துக்கொண்டு விசனப்படுவாராயினர். இவ்வாறிருக்க வெந்துவருகின்றநெருப்பில விறகிட்டது போல மன்மதனும் தன் பாணங்களிலொன்றாகிய தாமரைமலரை அப்பிராட்டி யின் நெஞ்சிற் பொருந்த எய்வதனுல் அவர்க்குஆசைமிகுந்தது நெய்போலும் நெருப்பிற்காய்ச்சாமலும் கூர்மையுடையதாகிவிளங்கும்வேல்போன்றகண்ணை யுடைய சானகியார் முடித்திருக்கும் கூந்தலும், ஆடையும், நெகிழ நெருப்பி விட்ட பூங்கொடிபோலவாடி மேகலாபரணமும், வளையலும், வருந்தியமனமும், அறிவும், அழகும் இழந்த இவ்வன்னையைத் தோழிமார் தேவர்கள் எல்லாரும் முன் திருப்பாற்கடலைக்கடைந்தகாலத்தில்தன்னிடத்திலிருந்த அரும்பொருள் களை எல்லாம் அவர்களுக்குக்கொடுத்துவிட்டதிருப்பாற்கடலைப்போலவறியவ ளாக வருந்தவும், ஆபரணங்களெல்லாம் குழைந்துசிந்தவும், நாணமுதலியன மனத்தினின்றுமொழியவும், நன்மைவிட்டேகவும், தனத்தில் மன்மதபாணம் பொருந்தி வேடனுடைய அம்பினுல்வருந்தும்பெண்மான்போல உயிர்வருந்திச் சோரவும்கண்டு, அப்பொன்னுபரணம்புனைந்த மயில்போலும் சாயலையுடைய சானகியாரை அருமையாகக்கொண்டுசென்றனர். இவ்வாறுகொண்டுசென்றவர் காதோடும் குழையோடும் போர்செய்யும் சேல்போன்ற கண்களையுடைய சானகியாரைத் தன்பாதமும் கைகளும்போன்ற பசுந்தளிர்களும் மகரந்தப் பொடிகளும்பொருந்திய குளிர்ந்த நுண்ணிய பனிநீர்த்துளிகள் தெளித்தபூஞ் சேக்கையிற் கிடத்தினர்.

பூளைமலரைப்போன்ற பனிமேகத்திற்குவாடியகொடிகளையுடையதாமரை மலர்பூத்து நிரம்பிய தடாகம்போலவும், நீண்டபாம்பினுல் கவ்வப்பட்ட சந் திரன்போலவும், அன்றலர்ந்த நறுமணமுள்ள பூஞ்சேக்கையிற்படுத்திருந்து பலைமேல் சொரியும் மேகத்தினீர்த்துளிபோல் சானகியாரது தனபாரத்தில்

முத்தைப்போன்ற கண்ணீர்த்துளிகள் சிந்தின. வில்லைப்போன்ற புருவத்தின் கடையில் வியர்வைத்துளிகள் கொல்லன் உலைக்களத்தில் உண்டாகும் புகைபோல் எழுகின்ற சுவாசத்தினால் வறண்டன. கலக்கமில்லாத கொடிய மன்மதனாகிய வேடன் கையம்பினால் வருந்துகின்ற மயிலையொத்த சானகியாரோ வெதும்புகின்ற மனத்தில் காமானலம்வருத்த வருந்துவதனால் பூம்படுக்கையில் குழைந்துசாய்ந்தனர். புட்பசயனத்தில் பரப்பியமணமுள்ள மலர்கள் உடம்பில்சுறுக்கென்றுதைத்தன ; கலவைச்சந்தனம் பொரியாகப் பொரிந்து கரிந்துபோயின; உடம்பிற் காமானலத்தின்வேகத்தால் ஆபரணங்களிற் கோத்துள்ள நூல்கள் அற்றுப்போயின. படுக்கையிற்பரப்பியிருந்த தளிர்களுங்கரிந்துபோயின. தாதிமாரும் செவிலித்தாயரும் கைத்தாயரும் தமக்கையரும் மிக்கதுயரங்கொண்டுவிழுந்தழுதனர். இது யாதுகாரணமோ என அவர் கருத்தறியாதவராய் மலரும்சோறும் கலந்த ஆலத்திநீரைச்சுற்றித் திருஷ்டிதோஷத்தையுங் கழித்தனர்.

பின்னும் தோழிமார் சமீபத்தில்வந்து அசைக்கப்படுகின்ற ஆலவட்டக்காற்றானது காமானலத்தை யெழுப்புவதனால் ஆபரணங்களும், பூமாலைகளும், கருகுவனவாகவும், தீவனவாகவும், அழல்வனவாகவும், தோன்றுவதனால் சானகியாரோ பொற்பதுமையொத்துவிளங்கித்தனக்குள் தானே காகுத்தனது கேசமானது இருளைவகுத்ததோர்பூமாலைக்காடாகுமென்றும், புயமோவன்மையான தூணையல்லதுமலைமலையேயாமென்றும், இரண்டுகண்களும் செந்தாமரைமலரென்றும், இதுவுமன்றி வில்லுடனிழிந்ததோர் கார்மேகமென்றுஞ் சொல்வர்; அன்றிநெருங்கியென்னுள்ளத்தில் நுழைந்து அருமையாகியநிறையினையும் பெண்டன்மையினையும் உருக்கி யென்னுயிரொடுங்கவர்ந்துசென்றவனதுமலைபோன்ற தோளையிணையும் பாக்கியஞ்செய்தது கரும்புவில்லுமல்ல ஆதலால் அவனைமதனென்றுஞ்சொல்லுந்தரமல்லஎன்பர். பெண்டன்மைக்குரியநலமும் யான்பிறப்பெடுத்தபோதே யென்னுடன்பிறந்தநாணமும் எண்ணத்தக்க அறிவும் நான் எங்குங்காணாமலிருக்கின்றேன்; யான் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே மண்ணில்நடந்துகால்வருந்தப்போனவன் கண்ணின்வழியாகநுழைந்துபோகத்தக்கதொருகள்வனேபோலும் என்பர். இந்திரநீலத்தைப்போன்ற இருண்டகுஞ்சியும், பூரணசந்திரன்போன்ற முகமும், முழங்கால்வரையும்நீண்ட கைகளும், அழகிய நீலமலைபோன்றதோளுமேயல்லஇவைகள்உண்பதற்குமுன் என்னுயிரை அவரது புன்சிரிப்பே வவ்விக்கொண்டதென்றால் என்னவென்று சொல்லலாம் என்பர். மேலும்என்னுளத்தில் பொருந்தியவையாவையெனின் பரந்தொளிவிரிந்து என்னுயிரைவவ்வும் அவனுடையமார்பும் தடாகத்திற்பூத்த செந்தாமரை மலர்போன்ற அவனது சீர்பாதங்களுமேயல்ல; மதச்சுவட்டினின்றும் மதநீர்பெருக்கும் களிப்பினையுடைய யானைபோல நடந்ததே என்னுளத்திலிருக்கின்றதென்றும், அவனோ நினைக்குமிடத்துத்தேவருலகத்திலிருப்பவனுமல்லன், மணமமைந்த செந்தாமரைமலர்போன்று இமைக்கும் கண்களையுடையவன், வரிந்துகட்டியிருக்கின்ற வில்லேந்திய தடக்கையையுடையவன், என்றும் மார்பில் முப்புரிநூலினையுடையவன், அவன் இத்தன்மையன் ஆத

லால் அரசிளங்குமரனேயாகும் அல்லதுவேறல்ல என்பர். என்னுடன்தோன்றிய நலனும், நிறையுமாகிய பிணிக்கப்பட்ட எந்திரம்சுழன்றுதிரியும் என் கன்னித்தன்மையாகிய மதிலையழிக்க அவ்வரசிளங்குமாரனைக் கண்ணிற் கண்டபின்பு என்னுயிரிழக்கவுமாகுமோ எனவும், இவ்வகையானசொற்களை இத்தன்மையாகப்பேசுவதன்றி அவ்வரசிளங்குமரன் எதிரில்வந்து நிற்கின்றான் என்றுஞ்சொல்லுவர், மீட்டும்நீங்கினனென்பர், மிக்ககாமவேட்கையால்இப்படியொருவகையேயல்ல பலவகையாகமனங்குழைந்து அன்னம்போலு மெல்லிய நடையையுடைய சானகியாரை வருத்தும் காமத்தீதன்னையுஞ் சுடுமென்று அதைத்தரிக்காதவன்போலத் தன்கைகளை ஒடுக்கியோடிச்சென்று பழமையாகியவெவ்விய கிரணமுள்ள சூரியன் மேற்கடலில் அஸ்தமித்தான்.

மலர்ந்த பூவிற்படிந்துவரும் மந்தாநிலமாகிய வீசுகின்ற பாசக்கயிறும், தீயினிறத்தையுடைய செக்கர்வானமும் இருளுங்காட்டலால் அருமையான சானகியாருக்கு அந்திமலையாகிய கருநிறமும் செம்பட்டமயிருமுடைய யமன் தோன்றி மேலேயொலிக்கின்ற பறவைகளாகிய பறையும், சமுத்திரமாகிய சிலம்பும், உதிரமாகிய செக்கர்வானமும், பாதகவிருள்போன்ற சட்டையும் பற்றியிருத்தலால் பூதம்போலவும் தோன்றியது. குளங்களாகிய நெருப்பின் மூழ்கியும், வாசனையுள்ள மலராகிய விஷத்தைப்பூசியும், உலவும்தென்றலானது மன்மதனேவிய பஞ்சபாணத்தாலாகிய புண்ணில்நுழைவதனால் வருந்துகின்ற உணர்ச்சியும், நன்னலமும் உருகிச்சோர்பவராகியசானகியாருயிருண்ண, அந்திமாலையையுடைய ஆகாயத்தினைப்பார்த்து இதுவோ யமனதுவடிவமென்றார். பின்புகடலோ மழையோ பெரிதாகியநீலமலையோ காயாமலரோ நீலோற்பல மலரோகுவளைப்பூவோ கருநெய்தற்பூவோ இவற்றில் துன்பமிகுகின்ற மாதர் உயிரையுண்பதுயாதோவென்று தளர்கின்ற சிதையின் எதிரில் பூமடலமைந்த மலர்மாலையணிந்த சிராமபிரானது கரியமேனிபோலும் அந்திமாலைவந்தது. அதைப்பார்த்து ஆகாசமாகிய கருநிறமும், வான்மீனாகியபற்களும், கூதிர்காற்றாகியஉயிர்ப்பும், செக்கர்வானமாகிய படமுமுடைய அந்திமலையாகிய பாம்பே நீயாதுகாரணத்தால்நெருங்கிவந்துபாய்கின்றாய் ! பஞ்சபாணங்களையுடையமதவேடனே காசரவேகமொழிந்தானல்லன், எனக்கோ உயிரொன்றல்லது இரண்டில்லை, நான் எப்படி யாயினும் பிழைக்கவிருக்க நீ இப்பழிபூண்பதனால் உனக்கும்எனக்கும்எவ்வாறேனும்பகையென்பதுண்டோ? இல்லையேஎன்றுஞ் சொல்வர்; பின்னும்ஆலவிடமுலகிற்பரந்ததோ! கடலெங்கும்வியாபித்ததோ அவனது நீலநிறத்தையாவரும்நினைப்பதனால்அதுஇவ்வகையாய்எங்கும்நிரம்பியதோகூற்றுவனதுமேனியைமையிற்கூட்டிக்குழைத்து வானின்மேலும்நிலத்தின்மேலும் மெழுகப்பட்டதோ! துன்பத்தை விளைவிக்கும் இருளாக எங்கும்விளைந்தது; மேலும்வெளியே நின்றவரும்போய்மறைந்தார். அவ்வாறு அவர்போவதைத் தடுக்க ஒருவரையுங்காணாதிருக்கின்றேன்பெண்பாலோமிகவும்எளியவள்என்று இரங்காமல் அர்த்தயாமத்திருளில் ஒளித்துக்கொண்டிருந்து புட்பபாணங்களையெய்யும் மன்மதன் உனக்கிந்தமாயமுரைத்தானோ? நான்வெகுகாலஞ்செய்த தீவினையே அன்றிலுருவம் எடுத்துவந்தாயோ? என்றுஇவ்வாறு பலபலவகை

யாகச் சானகியார் எண்ணியெண்ணி வருந்திய துகண்டுஅப்பெரியமாளிகையில் சந்திரகாந்தக்கல்லினாற் சமைக்கப்பட்ட மேடையிலுள்ள மிக்கவொளியுள்ள நெய்விளக்குகள் மிகுந்த வெப்பமுள்ளனவென்று அவற்றை யெடுத்துவிட்டுத் தோழிமார் நூண்டாமணிவிளக்கிட்டுப் பகல்போலவிளங்கச்செய்தனர். அப்போது மந்தாகிரியை மத்தாகநட்டு அதிற்பிணித்த வாசுகியென்னும் பாம்பாகிய மணித்தாம்பினால் பாகதீர்த்துளியுடன் சிந்தியமணிகள் ஆகாயத்தில் பிரகாசிக்கின்ற விண்மீனினும்பிரகாசிக்க, தேவர்கள்யாவரும் தாங்கள் அமுதபானஞ்செய்யத் திருப்பாற்கடலை மதித்தகாலத்தில் அமுதநிறைந்த பொற்கலசம் மேலேவந்தெழுந்ததென்றுசொல்லக்கடலினிடத்து வெண்ணிறமுள்ள சந்திரோதயமாயிற்று. அது எப்படியிருந்ததென்றால், முன்னாளில் ஆலடைகிடந்து பாருநீரும்பசித்துண்ட பகவானதுநாபியாகியகடல்வண்டுபோலும் பிரமன் கான்மறைபாடவும்மலர்ந்தது. அதைக்கண்டு ஆலையுடன்தோன்றிய உவர்நீர்க்கடல் தானும் அப்பெருமாள்போல் கருநிறம் பெற்றுள்ளது ஆகையால் சந்திரனாகிய வெண்டாமரைமலரைப் பூத்ததென்று சொல்லக்கிடந்தது. புள்ளிக்குறியிட்டதுபோல பிரகாசமுள்ள விண்மீனும் ஆகாயத்தில் விளங்கும் உடுக்களிரவினும்சிறந்த இருட்கூட்டத்தையுண்டுமிழ்ந்தநிலாக்கற்றை சானகியாருக்கு யாதாமோ! கிழக்கின்கண் வெள்ளிக்கும்பத்தில்வைத்த கமுகின் இளம்பாளைபோல அச்சந்திரிகை பரவியது; இப்படிசந்திரோதயமாகவே மணமுள்ள தாமரைமலரைவிரும்பித் தன்னிடத்தில் வந்திருக்கும் திருமடந்தையும் வண்டினமும் இரியல்போக ஒடுங்கிப் பொலிவழிந்திருந்தது. செவ்வல்லிமலர் ஆக்கினைசக்கரத்தை யுருட்டி ஒப்பற்றசெங்கோல்செலுத்திவரும் நெடுமுடிமன்னவன் உலகையாண்டிருந்து நீங்கக்குறும்பொறைநாடன்தலையெடுத்ததுபோல விளங்கிற்று. அழகிய மாலைக்காலமாகிய கையைப்பரப்பி உலகத்தைவளைந்து கொண்ட இருளைச்செகுக்கும்படி குளிர்ந்தசந்திரோதயகாலத்தில் தோன்றிய நிலாக்கறறைவிண்ணும்மண்ணும் எட்டுத்திக்கும் ஆகியஇவைகளனைத்தையும் விழுங்கிக்கொண்டு எங்கும்படர்ந்திருப்பது நீர்வளமுள்ள வயல்சூழ்ந்த வெண்ணெய் நல்லூர்ச்சடையப்பமுதலியார் புகழேபோலத்தோன்றியது. இப்படி சந்திரகிரணம்பரந்தது எப்படியிருந்தது என்றால் நீருள்ளதாகியகடலில்மூழ்கித்தெழுந்த வெண்டிங்களென்னும் விசுவகர்மாமேலே தன் கிரணங்களாகிய கைகளை யுயரப்பரப்பி மிக்க வெண்ணிலவாகிய சுதையால் உலகத்தைக் காக்குந்தொழில்பூண்ட பகவானிதுகவுத்துவமணிக்த உந்திக்கமலத்தில் உண்டான காளத்தில் முன்னாள்தோன்றிய பிரமாண்டம் பழையதென்று புதுக்குவான் போலவிளங்கினான்; ஓங்கிய இருளாய்ப்பரந்து உலகத்தையெல்லாம் விழுங்கிக்கொண்டு மேலு மேலு மதிகப்படும் கருநிறங்கொண்ட நெருப்பில்தோன்றிய வெண்ணிறங்கொண்ட நெருப்பே! நீங்காதிருக்கும் மாயையுடைய அவருக்கு நிறத்தினாலே சமானமாகாமையால் புறம்பேசென்று வருந்திக்கொண்டேங்கின்ற அலைவீசுகின்ற கடலுக்கும் எனக்கும் நீரப்பகையாகி விளங்குகின்றாயே! நீயோகடலில் உதயஞ்செய்தனை, அப்படியிருந்தும் நீ கொடியையல்ல, அமுதத்தினோடும் உடன்பிறந்தனை! என்னைப்போலும்பெண்பிறப்பினையுடைய

மடவாரையெல்லாம் வருத்தமாட்டாயென்றிருந்தேன்; இப்போதுபார்த்தால் விஷத்தோடும் வந்ததுபோலும் தோன்றுகின்றது. இப்படியல்லாமல் முன் சொல்லியதுபோல வந்தாயென்றால் என்னைச்சுடுவையோ! என்றுசொல்லிக் கொண்டே மேலநெருங்கியெழுகின்ற வெள்ளியசந்திரிகையின்கதிர்கள் மோது கின்றசம்மட்டிபோல்மெல்லியமுலைகள்மேற்படவேபெண்ணன்னம் தீயிற்புரண் டதுபோலப் புட்பசயனத்திற் புரண்டுபுரண்டுவருந்தி, சிறிதும் இடைவிடாது எங்கும்பரந்திருக்கின்ற சந்திரிகை தன்தனத்தின்மேல் பின்னும் வீசுதலால் உடலவெந்து கரிந்து தளர்ந்து அடியற்றமரம்போல்சாய்ந்து இராக்காலத்தில் தாமரைகள் எவ்வாறுவாட்டமடையுமோ அவ்வாறு வாட்டமடைந்தாள். இவ் வாறு வருந்துவதைக்கண்ட பாங்கிமார்கள் மிக்கவாசனையுள்ள கூட்டுவர்க்க முள்ள சந்தனச்சாந்தைச் குழம்பாக்கி வாரிவாரி யிறைக்குந்தோறும் வெதும்பி யும், ஆலவட்டத்தால்வீசப் புழுங்கியும் வருத்தமடைந்தாள். உலகத்தில் சர் வத்திரசாதாரணமாய்ச் சொல்லுவதுபோல ஆசைநோய்க்குமருந்துமுண்டோ ஆதலால் இவைகள் சயித்தியோபசாரஞ் செய்யுமென்று பாங்கிமார் எண்ணிச் செய்தால் அதுசானகியாருக்குத் துன்பத்தையேவிளைத்தன. பின்னும் சானகி யார் படுந்துயரத்தைத் தாயினுமிகப்பரிவுடைய பாங்கிமார்கள் அவருடைய மேனியின்கணுண்டான விரகத்தீயால் புட்பசயனம் வெந்து கரிந்து பொரிந்து போவதனால் இரண்டாயிரந்தரம் மீளவும் மலர்களையும் பரப்பிக்கொண்டே யிருந்தார்கள். கன்னிகாமாடத்தில் சானகியார் இவ்வாறு விரகவேதனை யனுப வித்துக்கொண்டிருக்க, அவளது மின்னலைப்போன்ற திருமேனியைக்கண்டும் விசுவாமித்திரமுனிவர் பின்னே அவரது நிழலைப்போலத் தொடர்ந்து தம்பி யுடன் சென்ற சிராமபிரானுக்கு அடுத்ததை இனிச்சொல்லுகின்றேன்.

சிராமபிரான் முனிவருடன் தம்பிதொடர்ந்துவரச் சென்றனர். அவ் வாறுசென்று சனகராசனைக்கண்டு அவ்வரசன் மனக்களிப்புடன் எதிர்கொண் டழைக்கப்போய்ப் போகபூமியிலுள்ள பொன்னகரேயென்று எடுத்துச்சொல் லும் ஒருதிருமாளிகையில் தங்கினர். அவர்கள்தங்கிய காலத்தில தவமென்ப தனைத்தும் ஒருவடிவங்கொண்டதுபோலக் குற்றமற்ற பேராற்றலையுடைய சிராமபிரானது பாததாமரைகளால் கல்லுருவம்நீங்கி முன்னையுருவம்பெற்ற அகலிகையின் அரும்பெறுகிய புத்திரனென்று யாவராலுஞ் சொல்லப்படும் சதானந்தமுனிவர்எழுந்தருளினர். அவ்வாறுஎழுந்தருளியசதானந்தமுனிவரை ஸ்ரீரகுகுலோத்தமன் மனமாரவணங்கிநிற்க, அதைக்கண்ட அம்முனிவன் அவரை ஆசீர்வதித்துப் பின்பு விசுவாமித்திர முனிவரைப்பார்த்து நீர் எழுந் தருளுவதற்கு இச்சனகராசன் அரசாளும் மிதிலைநாடு என்னதவஞ்செய்தது என்றுதுதித்தார். அதைக்கண்ட விசுவாமித்திரமுனிவர் தாமரைமலரில்வசிக் கும் பிரமனையேயொத்த சதானந்தமுனிவரே! இங்குநிற்கின்றவள்ளற்றன்மை யுடைய இரகுநாயகனே இடிபோலுங் குரலையுடைய தாடகை யென் னும் கொடியபாவியினது உடலையும், இவனைத்துணையாகப்பெற்ற எனது யாகத்தையும், உன்னையருமையாகப்பெற்ற அகலிகையன்னையினது சாபத்தை யுந் தீர்த்தருளினனென்று சொல்லியருளச் சதானந்தமுனிவரும் உமது

பெருங்கருணையைப் பூரணமாகப் பெற்றிருக்கின்ற இச்செயவிராருக்கு உலகத்தில் ஆகாதகாரியமென்பதும் ஒன்றுண்டோ? என்றுசொல்லிவிட்டுப்பின்னும் காயாமலரும், இந்திரநீலரத்தினமும், கடலும், மேகபடலமும், நீலோற்பலமலரும் தாமே சாதிரிபெத்தை யளாவும் திருமேனியையுடைய தாசரதியைத் திருமுகநோக்கி, நறுமலரையணிந்த இரகுநாயகனே! நானுனக்குத் தெரிவிப்பதைக்கேள். இங்கே எழுந்தருளியிருக்கின்ற விசுவாமித்திரமுனிவர் கோசிகனென்னும் பெயருள்ள அரசர்பெருமானாய் மகோதயமென்னும் நகரையாதிலொரு கடன்மைகொண்டு அரசாண்டுவருநாளில் ஒருநாள் வேட்டையாடக் காட்டிற்சென்றார். அவர்வேட்டையாடிக் காட்டுமிருகங்களை யெல்லாம் தரையில் விழச்செய்து பிரமருஷியென்று யாவராலுஞ் சொல்லப்படும் பெருந்தவத்தையுடைய வசிட்டமுனிவரது ஆச்சிரமத்தைச்சேர்ந்தது கண்டு கற்பிற்குருவமாகிய அருந்ததி கணவராகிய வசிட்டமுனிவர் அரசனை உபசரித்து இருந்துபோமென்றுவேண்ட, கோசிகராசனும் வசிட்டமுனிவருடைய கருத்திற்கிசைந்து நிற்க, வசிட்டமுனிவர் அரசனைநோக்கி நீர் வெகுதூரஞ் சென்று உடம்புமெலிந்து இருக்கின்றீர். உமக்கும் உமது சேனைக்கும் இப்போதே விருந்தமைக்கின்றேனென்று, 'ஆவிற்கருமுனியா' எனச்சிறப்பித்துச்சொல்லப்பட்ட காமதேனுவைநோக்கி இவ்வரசனுக்கும், இவ்வரசனது சேனைக்கும் விருந்தமைக்கவேணடுமென்று கட்டளையிடவே, அக்காமதேனுவும் அன்று திருப்பாற்கடலிலேதோன்றிய அமிர்தமேயென்று சொல்லும்படி கார்த்தல், புளித்தல், கைத்தல், உவர்த்தல், துவர்த்தல், தித்தித்தல் என்னும் அறுவகையுண்டியை அரசனே நீயுன்சேனையோடும் உண்ணக்கடவாயென்று சொல்லிஅவர்கள் உண்டு பசிதீர்ந்தபின்பு புட்பசந்தனமுதலியவை பரிமாறப்பெற்று வேட்டையாடியதனால் உண்டான அயர்ச்சிநீங்கியகோசிகராசன்ஆராய்ந்துபார்த்து இருடிகளிற்சிறந்தவரென்றெண்ணப்படும் வசிட்டமுனிவரைநோக்கிப் பெருந்தவத்தையுடையமாதவனே! நீர்இருந்தஇடத்திலேயிருந்துகொண்டு என்னுடன்வந்த இரதகசதுரகபதாதிகளாகிய நால்வகைப்படைகட்கும் எனக்கும் வேண்டியமட்டும் உண்டு பசிதீரத்தேவர்களாலும் பெறுதற்கரிதாகிய அமிர்தமும் கைப்பவிருந்துதவினீர்! இதனால் குற்றமற்றகுணத்தால் உயர்ந்ததன்றி நான்கு வேதங்களையும் ஓதியுணர்ந்து அவற்றை வரம்புகண்டாரும் மேன்மையான எல்லாப்பொருள்களும் அரசர்களுக்கேயுரியனவென்று சொல்லுவர். மாதவஞ்செய்யும் உமக்கோ இக்காமதேனுவாகிய பசு தகுதியுடையதன்று. இத்தெய்வப்பசுவை எனக்கே கொடுக்கவேண்டுமென்று வருந்திக்கேட்க, அதற்கு ஒன்றுஞ்சொல்லாமல் மவுனமாயிருந்து பின்பு நானோ மரவுரிதரித்துக்காட்டில் தவஞ்செய்கின்றவன், யானோ கொடுக்கமாட்டேனென்று சொல்லுதற்குடன்படமாட்டேன், கொல்லனுலைக்களத்தில் அராவப்பட்ட கூரியவேலையுடைய அரசனே! இத்தெய்வப்பசு தானேவருமாயினும், அல்லது நீயே வலிதிற் கொண்டுபோக எண்ணங்கொண் டிருந்தாலும் தடையில்லாமற் கொண்டுபோகலாமென்று சொல்லியருளினார். அதைக்கேட்ட விசுவாமித்திரராகிய கோசிகராசனும்தேவரீர்பணித்ததைச்செய்வேனென்றுவிருப்பத்துடன்

சென்று அக்காமதேனுவைப்பிணித்துக்கட்டிப் புறப்படும்போது அது அக்கட்டுகளையெல்லாம் அறுத்துக்கொண்டு அழகியதோளையுடையகோசிகராசனுக்கு என்னைக்கொடுத்துவிட்டாயோ உள்ளபடிசொல்லென்று வேதங்களைமுற்றும் வரம்புகண்ட முனிவர்பெருமானுகியவசிஷ்டரைநோக்கிக் கேட்க, அவ்வசிஷ்டமுனிவரும்காமதேனுவே உன்னை அரசனுக்குக்கொடுத்தேனில்லை, வெண்கொற்றக்குடையையுடைய அரசனே உன்னைப்பிணித்துக் கட்டிக்கொண்டு போகவிருக்கின்றான், இதுதான்நடந்தசெய்தியென்றுசொல்ல உடனேகாமதேனுவும் மிக்ககோபாவேசமாய் ஆரவாரித்துஇரணபேரியையுடைய இக்கோசிகராசனது சேனையனைத்தும் ஒருநொடிப்போதிலே அதமாக்குகின்றேன் பாரென்றுசொல்லித்தன் உடம்பின்மயிரைச்சிலிர்த்தது. அப்படிசிலிர்த்தமாத்திரத்தில் அத்தெய்வச்சுரபியினது உடம்பினின்றும் பப்பரர், மறவர், சீனர், சோனகர்முதலிய பல கொடிய மிலேச்சர்கூட்டமாகத்தோன்றி கையில் முப்பத்திரண்டு ஆயுதமுடையாராய் வெளிப்பட்டு அரசர்பிரானுடைய] வலிமையுள்ள நால்வகைச்சேனையனைத்தையும் நாசப்படுத்தவே, அதைக்கண்டு கோசிகமகாராசன் புத்திரர்கள்மிக்ககோபாவேசமாய்இதுகாமதேனுவின் வல்லமையேயல்ல! இதுவோ ஒருபசு ! இதற்கு இவ்வளவு வல்லமையேது? இவ்வளவும் வசிஷ்டமுனிவருடைய வஞ்சனையேயல்லது வேறல்ல. அவர்தலையையரிந்துவிடுவதே தகுதியானகாரியமென்று துணிந்து எழுந்து அம்முனிவருடன் எதிர்த்தனர். 'குணமென்னுங்குன்றேறி நின்றார்வெகுளி - கணமேயுங் காத்தலரிது.' எனத் தேவரும் பணித்தமைபோல அம்முனிவருக்கு அக்கணமே தோன்றிய சினத்தீயால் அவரையெதிர்த்த அக்கோசிகராசனுடைய மக்களனைவரும் பஞ்சுப்பொதியிற்பட்ட சுடுகனலி போலும் சுருண்டு கரிந்து பொரிந்து மாய்ந்து போயினர்.

இவ்வாறு தமது மக்கள் நூற்றுவரும் மாண்டுபோயினமையைக் கண்டு கோசிகராசன் நெய்சொரிந்த நெருப்பேபோலக்கொதித்து நெடுங்கொடிகள் கட்டியிருக்குந்தேரைச்செலுத்திக்கையினின்றும் இடையறாதுபொழியும் அம்பினாலேதமதுவில்லைவளைத்துஎய்யவே வசிஷ்டமுனிவரும் தமதுகையிற்பிடித்திருந்த தண்டத்தைவிடுத்து அரசன்விடும் அஸ்திரசஸ்திரங்களைக் கவளீகரஞ் செய்யென்று கட்டளையிட்டருளினர். கோசிகராசனே தான் நன்றாகப்பயின்ற அஸ்திர சஸ்திரங்களையெல்லாம் உகாந்தகாலத்து மழைபோல்சொரிய அத்தனையும் பாலைநிலத்தில்பெய்த கடும்பெயல்போல காந்துகொண்டு மேலாக விளங்கக்கண்டு மிகச் சிந்தைநொந்து மேருமலையைத் திரிபுரசங்காரஞ்செய்ய வளைத்தருளிய பரமசிவனைவணங்கி நிற்க, அவ்விறைவன் ஒரு தெய்வப்படையளித்துப்போயினன். அப்படையினையும் கோசிகராசன் அவ்வசிஷ்டமுனிவர் கைத்தண்டின்மேற் பிரயோகஞ்செய்ய அது உலகத்தையெல்லாம் பஸ்மீகரப்படுத்திவருவதுகண்டு தேவர்களெல்லாம் நடுநடுங்கினர். வசிஷ்டமுனிவர் அப்படைக்கெதிர்வந்து தன்னைக் கிட்டிய அத்தெய்வப் படையை விழுங்கிவிட்டு மிகப்பொலிவுபெற்றுவிளங்கினர், அவரது பொலிவுபெற்ற திருமேனியெங்கும் போர்ப்படையானது வலிகெட்டு தீப்பொறிசிதறுவதைக் கோசிகராசன்கண்டு

உலகத்தின்கண் சகலகலா பாரங்கதரான முனிவர்களுக் கல்லாமல் திண்ணியதிறலையுடைய போராற்றலும் பிரமதேசசும்பிறர்க்குண்டென்பதுசிறந்ததேயன்று! உலகமுழுதுமொரு வெண்கொற்றக்குடைநிழலில் ஆளுஞ்செல்வச் செருக்கும அவர்கள் தவப்பெருக்கின்முன் வெயின்முன் பனிபோலாமென மதித்தறிந்து தவம்புரிவதே நமக்குநலமென்று துணிந்து இந்திரதிசையை நோக்கிச்சென்றனன். அரசர்பெருமானாகியகோசிகரும்வசிஷ்டமுனிவர் செய்து காட்டிய தவச்செருக்கையே மிகமதித்து மிக்கதவஞ்செய்யும் சங்கற்பமேற்கொண்டு தவஞ்செய்வதை இந்திரன்கண்டு உள்ளத்தில் அச்சமுடையானாய் தன்னிடத்திலுள்ள அரமகளிருள் திலோத்தமையைநாடி அவர் தவத்தையழித்துவரத் தூண்டினான். அத்திலோத்தமையின் அழகியவடிவைக்கண்டதனால் மன்மதபாணம் தன்மேற்பாயக்கண்டு தன்னறிவுகலங்கிக் காமக்கடலுள் அழுந்திக் கோசிகராசன் வெகுகாலம் தொலைத்துத்தெளியுடையாராய் ஆராய்ந்த நல்ல நூற்பொருளைத் தஞ்சிந்தையிற்றெளிந்து ஆலவிடம்போலக் கோபக்கனைகைத்தருளி இது விண்ணுலகமுழுது மாளும் இந்திரன்செய்தவஞ்சனைச் செய்கையேயென்று துணிந்து கண்மலர்சிவக்கவும், மனங்கன்றவும், கோபமேற்கொண்டு நீபோய் பூலோகத்துப் பெண்ணாகியெனச்சபித்து ஏவி விரைந்து சென்று திக்குப்பாலகருள் திண்டிறலையுடைய எமதிசையைச்சேர்ந்து செய்தற்கரிய தவஞ்செய்யுங்காலத்தில் உன்மரபின்கண் அயோத்தியா நகரத்தையரசாண்டுவந்த திரிசங்கு என்னும் அரசனொருவனுண்டு; அவன் உங்கள் குலகுருவாகிய வசிஷ்டமுனிவரைப்பணித்து தேகத்தொடுஞ்சுவர்க்கலோகமடைய வேண்டினான். அதற்கு அம்முனிவர் உனக்குவரையறுத்தநாளாகிய ஆயுண்முடிவில் சுவர்க்கலோகங் கிடைக்குமென்றனர். திரிசங்குமகாராசன் ஐயனே! எனக்குச்சுவர்க்கலோகம் தேகநீக்கத்திற் கிட்டுமாயின் இப்பஞ்சாசற்கோடி பூமண்டலத்தில் எவராயினும் என் மனத்திற்கியைந்தவரைக்குறித்து நாடி அச்சுவர்க்கலோகம்பெறும்படி யாகத்தைச்செய்வேனென்றுசொல்லச் சினத்தையும் கொடுமையையும் வலிமையையுமுடைய அரசனே முன்னே ஒரு குருவை விட்டு வேறொருகுருவை நாடுவதாகச்சொல்லிநின்றாயாகையால் நீபுலையனாகியெனச்சபித்தனர். இரகுகுலோத்தமனே பிரமகுமாரராகிய வசிஷ்டமுனிவர்சாபமானது உனது அம்பினுங்கொடித வேகமாய்ப்பற்ற அவ்வரசர்பெருமானுக்கு ஆயிரங்கிரணையுடைய சூரியனும் நாணமடையும் உடலொளிகருகியும் அன்றலர்ந்த செந்தாமரையினும் பொலிவையுடைய முகம்புலர்ந்தும் உலகிற்பலரும் அருவருக்கத்தக்க நீச வுருவம்வந்துநேர்ந்தது. தான் அணிந்த மணிமுடியும், ஆபரணங்களும் இரும்பையொக்கவும், ஆடையும், முப்புரிநூலும் தோலையொத்திருக்கவும், அழகொடு உடல்கறுத்து மன்னன்நிறம் ஒழியவும், ஊரிலுள்ளார் சி சி யென்று அருவருக்கவும் மனந்திகைத்துக் காடேகதியாகச் சேர்ந்து ஒருநாள் தெய்வகதியாக விசுவாமித்திரர் தவஞ்செய்யும் இடத்தையடைந்தான், அவன் அவ்வாறடையவே அவ்விசுவாமித்திரா நீசனாகிய நீயார்? இவ்விடத்தில் யாதுநிகழ்ந்தது? என்றுகேட்க அதைக்கேட்டு திரிசங்கு தன் விருத்தாந்தமுழுதும் ஒன்றுமொளியாம லெடுத்துச் சொல்லவே, உனக்கும்

இத்தன்மைசேர்ந்ததோ என்று சிரித்து நான்பெருவேள்விசெய்து நீவேண்டியபடியே சுவர்க்கலோகந்தருவேனென்றுசொல்லி அந்தயாகந்தைநிறைவேற்றும்படி பலமுனிவர்களும் வந்துசேர, அதற்கு வசிஷ்டமுனிவர் உலகத்தில் அரசனானவன் யாகத்திற்குரியனுதலும், புலையன் அதற்குரிய விதிகளுக்குரியனுதலும் இதுவரையிலும் கேட்டறியோம் ஆதலால், நாங்கள் அதற்குடன்படமாட்டோமென்றூர்கள். விசுவாமித்திரர் அதைக்கேட்டு மிகவுங்கோபித்து நீங்கள் என்சொல்லைத் தடுத்தமையால் வனசரராகப் போகக்கடவீரென்று சொன்ன அளவிலே அவர்களெல்லாரும் வேடர்களாகிக் காடுகள்தோறுந் திரிவாராயினர். பின்பு விசுவாமித்திரர் அந்தயாகத்தைத் தானேநின்று நிறைவேற்றித் தேவர்களைவரக் கூவியழைத்தார். தேவர்களோ இவருடைய தபோமகிமையால்வந்து அரசனுயிருந்து புலையவனுகச் சாபமடைந்தவனுக்கு என்ன காரணமாய் யாகஞ்செய்ய எங்களைவருவிப்பதென்று சிந்தித்து இது நன்ருயிருக்கின்றது! என்று நகைத்தனர்.

விசுவாமித்திரமுனிவரும் யானைப்படையையுடைய திரிசங்குமகாராசனை நீ சுவர்க்கம் புகக்கடவாயெனக் கட்டளையிட்டனர். அதுகண்டு தேவர்கள் இகழ்ந்தமையால் அவர்களுடைய மெருமையுள்ள பதவிகள் முதலாகத்துறக்க முதலியவற்றையும் வேறுபடைக்கின்றேனென்றும், சூரியன், சந்திரன், மற்றையகிரகங்கள், நட்சத்திரராசிகள் மாட்சிமைப்பட்ட ஒளிகெடாமல் தெற்கு வடக்காக வருகவென்றும் சகல சேதனசேதனப் பிரபஞ்சங்களையும் படைக்கின்றேனென்றும் எண்ணியகாலத்தில் தேன்சிந்துகின்ற கற்பகநறுமலர்மாலையணிந்த இந்திரனும் நான்குமுகங்களையுடைய பிரமனும், நீலகண்டத்தையுடைய உருத்திரனும், மற்றைக்கடவுளருமெல்லாருமொருங்குகூடிநீர்பொறுத்தருளவேண்டுகிறேம்; உம்மிடத்தில் அடைக்கலம் அடைந்த திரிசங்குவைப் பாதுகாக்கும்அறத்தின்செய்கையேமிகநன்று; அவன் தாராகணத்தோடுசேரக்கடவது, இன்றுமுதல் நீர் ராஜருஷியாவீர், உம்மால் பேதிக்கப்பட்ட ஐந்து நாண்மீன்களும் தென்றிசைக்குவந்து உன்னிருக்கைக்கு ஒளியாய் இருக்கக்கடவதென்றுசொல்லிப்போனபின்பு,விசுவாமித்திரமுனிவரும்வருணனதுதிசையாகிய மேற்றிசையையடைந்து தவஞ்செய்துவந்தார். அவர் மேற்றிசையில் வந்து தவஞ்செய்கையில் குதையையுடைய கட்டியவில்லும் வாளும் தாங்கிய சேனையையுடைய அம்பரீஷமகாராசன் அமுதம்போலும் மொழியையுடையானும் தன்னைப்போலும் மன்னுயிர் புரப்பவனும் அரசாண்டு புருஷமேதஞ் செய்ய வெண்ணங்கொண்டு அதற்கு ஓர் சிறுவனைவேண்டிப் பசும்பொற்றிரளைத் தன்தேர்மேற்கொண்டு உலகமுழுதுந்திரிந்தான். இவ்வாறு திரியுங்காலத்தில் பெற்றபிள்ளையைக் கொலைசெய்யக் கொடுப்பாரில்லாமையால் மனம் வருந்திவாடுகையில் தெய்வகதியாய் மிக்க தவத்தையுடைய இருசிகனென்னும் முனிவர்பெருமானிருக்கும் அரும்புகின்ற மலர்களையுடையகாட்டைச்சேர்ந்து கேட்க அதற்கிசைந்து தம்மக்களில் இளையானைத்தாய் எனக்குயானென்றுள். தந்தை மூத்தவனை எனக்குரியானென்றான்.மற்றையமகன் அவ்வரசனைப்பார்த்து என்னையன்பாகப்பெற்ற மாதாபிதாக்கள் 'வறுமையென்னுந்தொல்விடம்

பிழைத்தும்' என்றபடி வறுமையால் மிகவாட்டமடைந்தனர். அவ்வறுமைத் துன்பங்களும் அவர்கள் அவாக்கெடவும்செம்பொற்குவியலைக்கொடுத்து என்னைப்புருடமேதஞ்செய்யக்கொண்டுபோமெனத் தந்தைதாயரைவணங்கி அரசனுடைய தேரிலேறிக்கொண்டு ஆயிரங்கதிர்ப் பரியங்கடவுள் உச்சியில்வர அரசனொடு தானும் அக்காட்டைவிட்டுச் செய்யவேண்டுங் கடன்மைகளெல்லாம்செய்து முடித்து வெகுதூரஞ்சென்று பொறுமையொழிந்த சிந்தையையுடைய விசுவாமித்திரமுனிவரைக்கண்டு அவருடையபாதங்களை அவ்விருசிக முனிவன் மகன்வணங்கினன்.

தம்மைத்துன்பமிகுதியால்வணங்கிய அச்சிறுவனை விசுவாமித்திரர்கண்டு நீ வாட்டத்தொடும் வணங்கவேண்டியகாரணமென்ன? சொல்லென்றுகேட்க, அச்சிறுவன் அறநூற்பொருளையறிந்த முனிவர்பெருமானே! நானோ உமக்கு மூத்தாள்மகன்,பெற்றோர்பொருளைப் பெற்று என்னை அம்பரீஷனுக்குப் புருஷமேதஞ்செய்யக் கொடுத்துவிட்டனர். இதுதான் நடந்தவரலாறென்றான். இவ் விசுவாமித்திரரும் தன்மைத்துனனும் மூத்தாளுஞ்செய்த முறைமையைக் கண்டு மனம்பதைத்து நீ கலங்கவேண்டாம்; நானே உன்னுயிரைக்காப்பேன் என்றுஉறுதிமொழிசொல்லி, தன்மக்களைநோக்கி அரசனோடுசென்று இப்பணி செய்யினென அவர்கள் அப்பணியை மறுத்துவிட்டனர். தவத்தாற்சிறந்த வசிஷ்டமுனிவர் கோபக்கடுந்தீயால் இறவாத அம்மக்கள் நால்வரும்வேடராக வெனத் தான் சபித்துவிட்டு தன்னெதிரில் பணிவுடனின்ற சிறுவனை நோக்கி நீ துன்பமடையவேண்டாம்! இதோ நான் உபதேசிக்கும் இரண்டுமந்திரங்களையும் பெற்றுக்கொள்ளென்று தன்மூத்தாள்மகனுக்கு உபதேசித்து நீஅரசனோடு அடைந்து வேள்வித்தீயிற்சென்றுசேர்ந்து இம்மந்திரங்களைச்செபஞ்செய்வாயாயின் உந்திவந்தோனும், ஊழிமுதல்வனாகிய பரமசிவனும்வருவர். அவ்வேள்வி முற்றுப்பெறும், உன்னுயிர்க்கும் ஒருதீங்கில்லாமற்போமென்று சொல்ல அச்சிறுவனும் அவ்வாச்சிரமத்தைவிட்டு அரசனோடுபோனான். இதுநிற்க;

விசுவாமித்திரமுனிவரும் தாம் வடதிசையையடைந்து தமது தாமரை மலர்போன்ற கையை நாசிமேல்வைத்து இடகலைபிங்கலையிலடங்க இதயத்தில் எவற்றிற்குமூலமாகிய ஓரெழுத்தினை யுன்னிச்செபித்து அந்நிலையில் அசைவறப் பலநாள்சலியாமல் அனிலஞ்சேரா விளக்கேபோலவும், அலையிலாத கடல்போலவும், இருதட்டும் சரிப்படத் துலையொத்த தராசினுனிபோலவும் நிற்கவே, மூலமுகடுவிண்டு தடுக்கப்படாமல் இருட்பிழம்பு தாவிப்போர்த்துக் கொண்டமையால் உலகமுழுதும் நடுங்கின. அப்புகைமூடிக்கொண்டது திரிபுராந்தகனாகிய பரமசிவன் யானையையுரித்துப் போர்த்துக்கொண்டதுபோலவும்; மேகங்கள் பரந்தெழுந்தாற்போலவும் உலகமுழுதும் மூடிக்கொள்ளவே சூரியனுமொளிமழுங்கினன். திக்குப்பாலகருடைய கண்களும் திக்குயானைகளுடைய கண்களும் பார்வைமழுங்கின. மின்னுமுழக்கும் அவற்றின்தொகுதியுமுடைய மேகங்கள் நிறைந்த ஆகாயமாகிய வெளியிடமுழுதும் உருவிச் செல்வதனால் உலகிலுள்ள சேதனாசேதனப்பொருள்களும் அஞ்சிப்பயந்தன!

வெவ்வியசூரியனுமீண்டான். தேவர்களும்நடுநடுங்கினர். இவ்வாறாகவேதாமரை மலரிலிருக்கும் பிரமனும், கருடவாகனனாகிய திருமாலும், இடபவாகனத்தை யுடைய உருத்திரமூர்த்தியும், வயிரப்படையையுடைய இந்திரனும், மற்றைத் தேவர்களும் ஒருங்குசேர்ந்து முனிவர்கூட்டத்திற் சிறந்தவராகிய இவ்விசுவா மித்திரரைக்கிட்டி. உமக்கொப்பாகிய முனிவர் யாரிருக்கின்றனர் என்று எடுத் துச்சொன்னார்கள். இதுதான் முன்னேநடந்தவரலாறு; இவரைப்போலும் தவத்திற்சிறந்தார் ஒருவரும் உலகத்திலில்லை. இப்படிப்பட்ட பெருந்தவ னுடைய சகாயம்பெற்றிருக்கின்றீர்கள் உமக்கரியபொருளொன்று மில்லை யென்று சதானந்தமுனிவர்கூறினர். அதுகேட்டு இராமலட்சுமணரிருவரும் தங்களுக்கு விசுவாமித்திரமுனிவருடைய வரலாற்றைச்சொன்ன சதானந்த முனிவரைவணங்க, அவரும் அவ்விருவரையும் ஆசிர்வதித்துப் பின்பு விசுவா மித்திரமுனிவரிடத்தே விடைபெற்றுத் தமதிருக்கையைச் சென்றடைந்தனர்.

இரகுகுலதிலகனே விசுவாமித்திரமுனிவரும் தம்பியும் தமக்கினியசய னங்களிலே சென்றடைந்தபின்பு இரவும் திங்களும் தன்தனிமையும் சானகி யாரும் ஆகித்தன்னிருக்கையிலிருந்துசொல்கிறார்; மேகத்தினின்றுநீங்கிய மின் னல்இப்படிசகல இலக்கணங்களுமமைந்த பெண்ணுருவம் அடைந்ததுண்டோ என்று ஆராயின் இவ்வகையல்லவென் றறியேன். அந்தவடிவத்தையோ அகத் தும் புறத்தும் காணாநிற்கின்றேன். திருமால் எழுந்தருளியிருக்கும் திருப் பாற்கடலேபோலப் பிரகாசிக்கின்ற கண்ணையுடையாளாயிருக்கின்ற அப்பெண் ஒருபெண்ணுருவத்தையும் நினையாத என் மனத்தாமரையில் வசிக்க இடம் பெற்றுக்கொண்டாள். இதென்ன அதிசயம்! என்னிடத்திலே அவள் இரக்க மில்லாதவளாயிருந்தாலும் நான் அவளிடத்திலேகொண்ட தணியாக்காதலா லும் அச்சம்விளைவிக்கும் நோயைத்தரும் விடம்போன்ற கண்ணால் என்னை அவள்விழுங்குவதனாலும் உண்மையாகவேநின்றும் சென்றும் உலகில்வாழ் கின்ற எல்லாப்பொருள்களும் அவளுடைய பொன்னுருவமாகவே தோன்றா நின்றன. பொன்னாபரணமணிந்து பொற்கலசம் போலவிளங்கும் அவளுடைய தனங்கள் எனது பெருமையில்லாத மார்பிலே தடவுதலில்லனவாயினும் ஆக ட்டும் ஒளியமைந்த நகையினைப்பெற்றுக் கனிபோலும் வாயையுடைய முக மாகியசந்திரனைக்காணக்கூடியதோர் காலமு மினியுண்டாகுமோ யான்கண்ட மின்னுருவமாகிய யமனுக்கு எட்வேடமாகிய மேகலையணிந்த தேரொன்றும், வாளையொத்த கண்களிரண்டும், கதித்தமுலைகளிரண்டும், இதழுக்குள்ளுயர்ந்த முத்தமுறுவலும் உண்டாயிருக்குமெனின் என்னைக்கொல்ல இத்தனையும்வேண் டுமோ! பொன்னேவடிவங்கொண்ட அப்பெண்ணை யானெண்ணுந்தோறும் கரும்புவில்லையுடைய மன்மதன்புட்பபாணத்தால் என்னையெய்துதொலைப்பத னால் திண்மையென்று சொல்லப்படுவதுயாரிடத்திலே தானிருக்கும்! என்னுயி ரைக் கொள்ளைகொள்ளக் கோபித்தெழும்பாற்கடற் பள்ளத்தின் பெருக்கினைப் போலும் பரவுகின்றகிலாவோ! அப்பெண்ணை நினைக்குந்தோறும் என்னுடைய உயிரைக்கொள்ளைகொள்ளத்தேடுவதனால் வெள்ளைநிறத்தையுடைய விடமும் அக்கடலிலுண்டோ! இதுவரையிலும் நன்மார்க்கத்திலே சென்ற என்மனமா

னதுதீயவழியிற்செல்ல இசையுமோ இசையாதே! இப்போது அப்பெண்ணினிடத்திற்செலவதற்குக்காரணம் வெல்லப்பாகுபோலும் சொல்லையுடையாளும் பசும்பொன்னாற் செய்யப்பட்ட வளையலை யுடையாளுமாகிய அப்பெண் ஐயப்பாடில்லாமல் கன்னியேயாகுமென்றுஞ் சிந்தித்தான். இவ்வாறு நிகழ்கையில்நாள்முடிந்தஇரவாகிய அரசனது கிரணங்களையுடையவெண்கொற்றக்குடை வீழ்ந்தாற்போலவும் தன்கணவனாகியசூரியன் கீழ்த்திசையென்னும் பெண்ணை மணஞ்செய்யப் போகின்றானென்னுங் காரணத்தால் வெறுத்த மேற்றிசையென்னும் பெண்ணினது சுடர்க்கொழுந்துபோன்ற நெற்றியிலணிந்த குற்றமற்ற சுட்டியானது போயழிந்தாற்போலவும் சந்திரன்மேற்றிசையில் அஸ்தமானமடைந்தான். சந்திரனாகிய தன்கணவன்பிரிந்துபோகவே அந்தப்பிரிவின் சோகத்தினால் திசைகளாகிய பெண்கள் தமதுநாயகன்பூசிய அலங்காரத்திற்குரிய வெண்சந்தனக்கலவையை நீக்கினதுபோல எங்கும்படர்ந்திருந்த நிலாக்கிரணங்கள் அழிந்தன.

இவ்வாறு இரகுநாயகன் காமானலமாகிய விரகவேதனையால் வருந்துவதைக்கண்டுபிரிவினால்வருந்திய மனத்தில் இருந்தும் துன்பமுடைந்துபோகச் செந்தாமரைமலர்போன்ற முகங்கள்மலரச் சிவந்த கிரணங்களையுடைய சூரியன் அழுந்திய இருளென்னும் புகர்முகத்தையுடைய யானையினது உரியைப் போர்த்த உதயகிரியென்னும் பரமசிவனுடையநெற்றியிலைக்கிழித்தகண்போல உதயமானான். வேகமும் வெற்றியுமுள்ள சப்தாவென்னும் குதிரைகள் தம்முடைய காலிலுள்ள குளம்புகளினால் மிதிக்கவே உதயகிரியிலுண்டாகிப் படர்ந்த தூளிகளையும்படி அருமறைநான்கினையும் ஐயந்திரிபற அறிந்த அந்தணர் தமது கையினின்றுமொழுகுகின்றநீரும், பூவும்மலரும் பரவிப்பாய்தலினால் அசையாத நெடியமலைகளின் முகடுகடோறும் இளங்கதிர்சென்று படிய அம்முகடுகள் சூரியன் திக்குகளைச்சுமக்கின்ற மதயானைகளுக்குச் சிந்தூரம் அப்பியதுபோலச் சிவந்தன. பிரிவதற்குமுன்னே குறித்த தவணையைச்சொல்லிப்பாசறையிலும் பொருளிடத்திலும் விரும்பிப்போன தம் உயிர்போன்ற தலைவர் தேரிலேவர அதைக்கண்டு களிப்புமிகுந்து தேமல்படர்ந்து வருத்த நீங்கிய கற்புடையமாதரைப்போல அழகிய தடாகங்களெல்லாம் தாமரைமலராகிய முகங்கள் மலர உள்ளேமலர்ந்து பொலிவுற்றிருந்தன. அளவில்லாத வேதங்களினால் கின்னரர் இசைபாடவும, மேலோர் தோத்திரஞ் செய்யவும், தேவர்களும் முனிவர்களும் கைகூப்பிவணங்கவும், சமுத்திரமென்னும் முழவயா ஆகாயமாகிய நாடகசாலையில் நடிக்கும் ஒளியுள்ள சூரியனாகிய பரமசிவனது பொன்மயமாகிய சடைகள் விரிந்தாற்போல எங்கும் சூரியகிரணம் விளங்கின தன்னடியார்கட்குத் தீங்குசெய்வோர்களைக் கொல்லுஞ் சக்கரத்தை நீக்கிக் கோதண்டத்தை யேந்திய மேகம்போலுந் திருமேனியையுடையானும், ஆயிரவாய்ப் பாம்பணையின்மேல் பாற்கடலில் துயிலாமல் துன்பக்கடலில தூங்குகின்றவனுமாகிய பகவான் ஒற்றையாழியானாகிய சூரியனது இளங்கிரணங்களாகிய கைகளால் வருடி நித்திரைநீக்க இரவாகிய சமுத்திரக்கரையைக் கண்டான். ஊழிகாலம்போல இரவு தன்னிலையினின்றும் போதலால்நித்திரை

நீங்கிய பட்டத்துயானைபோலெழுந்து அனுஷ்டான முதலியவைமுடித்துக்கொண்டு விசுவாமித்திரனை வணங்கி தம்பியுடனே சனகராசன்யாகசாலைக்கு வந்தான். சனகராசனும் தன் அத்தாணிமண்டபத்திற்கு வந்திருக்க விசுவாமித்திரரும் தம்பியுந்தொடர அம்மண்டபத்தில் ஸ்ரீராமபிரானு மெழுந்தருளியிருந்தான். இங்கேவந்த காளையர்போழகினைத்தன்னிருகண்களாற்பருகி இக்காளையர்கள் யாவர்? என்று விசுவாமித்திரமுனிவனை வணங்கிச் சனகராசன் வினவ, அதற்கு விசுவாமித்திரரும் இவர்கள் உனக்குநேர்ந்த விருந்தினர், உன் யாகத்தைக்காணவந்தனர், திரியம்பகமென்னும் வில்லின்வலியையுங் காண்பர், பெருங்குணத்துத் தயரதன் மக்களாவாரென்று அவர்பெருமையைச்சொல்வாராயினர்.

மிதிலைக்காட்சிப் படலம்

முற்றிற்று.

---

## குலமுறை கிளத்துபடலம்.

---

சூரியகுலத்தின் முதலரசனாகிய சுவாயம்புவென்னும் மனுச்சக்கரவர்த்தியை யறியாதார் பூவுலகத்துண்டோ? பேதப்பட்ட வுயிர்களனைத்தும்பெரும்பசியடைந்து வருந்தாமல் ஒளியமைந்த தன்வரித்துகட்டிய வில்லினால் நிலமகள் முலைசுரப்பச்சாதித்த பெருந்தன்மையுள்ள பிருது சக்கரவர்த்தியும் இவர் குலத்தோராசனென்றேதுணி. பிணியால் வருந்தும் வினைநீங்க நெடுநாள் தவஞ்செய்வதுமேற்கொண்டு மணிகளழுத்திய நெடிய முடிமன்னனே! தாமரைமலரிலிருக்கும் பிரமதேவனைவழிபட்டு அவனாற் பூசிக்கப்படுகின்ற சருப்பப்பரியங்கமுடையஆயிரமோலி யருட்பெருங்கடலை யாமெல்லாங்காண அழகிய அரங்கவிமானத்தொடுங் கொணர்ந்தஇட்சுவாகுவை யறியாதார் அறியாதவரென்றே எண்ணவேண்டும். மேலும் இந்திரன் தன்னால் வெல்வதற்கரிதாகிய தானவனைத்தலைகொய்து சுவர்க்கலோகத்தைத் தரவேண்டுமென்று குறைநேர அதற்கிசைந்து அவ்வரக்கனோ டெதிர அவ்விந்திரனை விடையேறுகவா அவ்விடையின் முசுப்பின்மேல் ஆரோகணித்து அவ்வரக்கனைக்கொன்றுஅவ்விடையின் முசுப்பின்மேற்சென்று செயங்கொண்டமையால் ககுஎனப்பெயர்கொண்டவனு மிவன்குலத்தோ ராசனென்றெண்ணுவாய், அவ்வரசன்பின்வந்தாரை யித்தனையரென்றெண்ணலு மளவிட்டுரைப்பதற்கரிதாகும். நரைதிரை மூப்பு இவைகளால் உயிர்கள்கெடாமல்பெருங்கடலைநீண்டமலையால் கடைந்தமுதங்கொடுத்தவனு மிவன்குலத்தி னோராசனேயாம். மற்றோராசன் புலியும் பசுவும் ஓர்துறையிற்சென்று தெண்ணீரருந்த அரசுபுரிந்தான், அவனு மிவன்மரபேயாம். வேதங்களை நிலைபெறச்செய்யும் மணிகள்பதித்தமுடியும் ஆரகேயூரங்களும் பிரகாசிக்கப் பொறையினையுடைய தேவரும தானவரும் போர்செய்யத்தொடங்கியகாலத்தில் வெற்றியையுடைய அரசர்கள்பணிகின்ற கழலையணிந்த சனகராசனே! விற்பிடித்த தருமதேவதையேபோலத் திரிந்து

அமராபதிக்காத்துத் தேவர்கள் வெற்றிபெறச்செய்தவனும் இவன் மரபிற்பிறந்த அரசனேயாம். உயிர்க்குயிராய்நின்று இருளிலங்காததவிரென்று பொன்னாற் செய்யப்பட்ட கழலையணிந்த அரசர்களே யாமேபோபுகழ்வது, ஒளிசெய்கின்ற வேற்படையையுடைய சனகராசனே! மேலோரிவில ஒருபுறு அபயமென்று வேடனுக்குத் தப்பிவந்தடைய அதற்குமாருகத் தனதுயிர்கொடுத்த சிபி யென்னுமரசனும் இவன்குலத்தோராசனென்றே யெண்ணவேண்டும். இடறு கின்ற தெங்கங்காயின் ஓட்டைப்போல அக்குலாசலங்களையுமுருட்டி இவ் வுலகம் நிடருறிய பெடுபோலக் கிடப்பப் பகைவருயிரையுண்ணும் வேற்படை யுடைய சனகராசனே! இவன்மரபில்வந்த சகரராசன்மக்கள் அறுபதினாயிரம் பேர் கடலைத் தோண்டினரெனின் இவன்மரபின் புகழினையெடுத்துச்சொல்ல வேறுகட்டுரையும் வேண்டுமோ? ஊன்தங்கிய வேலையுடைய சனகராசனே! இவன்மரபின் புகழை அனந்தனாலும் அளவிடற்கரிதானால் யானே புகழ்ந் தேத்துவேன். இதுநிற்க, மலர்மாலையணிந்த சடாமகுடத்தையும் புகுந்தனை ந்த கங்கையினையும் வானின்றுங்கொணர்ந்த பகிரதராசனும் இவன்மரபினரா சருளொருவனேயாம். கயல்மீன்தாவுங் கடல்சூழ்ந்த உலகனைத்தும் கைநெல் லிக்கனிபோலாக்கி இயற்கைநெறிமுறைமைபால் இந்திரனுக்கும் இடரியற்றி முயற்கரையில்லாத சந்திரவட்டக்குடையுடைய சனகராசனே! பிறராற் செய் தற்கரிதாகிய பெருவேள்வி யொருநூறுஞ்செய்து கீர்த்திபெற்றவனும் இவன் மரபிற்பிறந்த அரசருளொருவனேயாம். சந்திரனைவென்று உருத்திரனைவெற்றி கொண்டகுவலயாசுவனும் துந்துவென்னுமரக்கனைக்கடுங்கணையாற் சிதைத்த துந்துமாரனும் தோன்றியமரபில் இரகுமகாராசன்பிறந்து இந்திரனை வில்லாற் புறங்கண்டு எட்டுத்திக்கினையுந் தன்வசமேயாக்கியாண்டுவந்தான். வில்லென் னும்மந்தரமலையால் அரசரென்னும் பெருங்கடல்கலக்கி ஒளிசெய்கின்றமுத்த குடைபடைத்தஇந்துமதியென்னும் திருமாமகள்போல்வாளை இருணிறம்படை த்ததிருமாலேபோல அயனென்னுமரசர்பெருமான்மற்போர்க்கே புரியதென்று சொல்லச்சிறந்த தன் திரண்டதோளுக் கணியாகவைத்தான். அப்படிப்பட்ட அயமகாராசன் மகனாகிய தயரதனையறியாதார்யாவருளர்? அவன்பெற்ற அரு மந்தமக்களிவர்கள். பலவாத்தியங்களு முழங்குகின்ற படைக்கடலையுடை யானே! இவர்கள் பெருஞ்சிறப்பையெடுத்துச் சொல்லப்பிரமனானு மாகாதென் ருல் என்னாற் சொல்லத்தகுமோ? ஆயினும் யான் அறிந்தவளாயினுஞ் சொல் கின்றேன்கேளென்று விசுவாமித்திரமுனிவர் சொல்லலாயினர்.

குற்றமின்றி யுயிர்வாழ ஆக்கினைசக்கரம் சூரியன்முன் பனிபோற்பகையை வென்று பூமியைக்காக்குந் திறமையுடையான், தன்வில்லையன்றி வேறுதுணை யறியாதான், தருமமாகிய கவசமுடையான், மனுநெறியினைத் தன்னீதியினால் வெற்றிகொண்டவன். அப்படிப்பட்ட அரசன் மக்களின்றி வருந்துவானாயி னன். அவ்வாறு வருந்தி வில்லைவென்ற நெற்றியினையும் ஆதொண்டங்கனி போலும் செவ்வாயினையும் கருநெடுங்கண்ணையும் வில்லைவருத்தும் கடிதடத் தினையும் மின்போலு மசையுமிடையினையுமுடைய மாதர்களைத் தனமாகிய கோட்டைப் படைத்த விலங்கென்றே யெண்ணி அவருடனணுகி முன்னே

நின்ற கலைக்கோட்டு முனிவரால் துயரம் நீங்கவெண்ணி மலர்மாலையணிந்த நறியகேசத்தையுடைய மக்களை வாரையணிந்த அழகிய தனம்படைத்த என் மனைவியர் தம்மணிவயிற்றில் வாய்க்கப் பெற்றிலர். யானோ இதுகாறும் நீராலமைந்த கடலசூழ்ந்த உலகத்தினைக் காவல்கொண்டேன், எனக்குப்பின்பு இப்பாரனைத்தும் காத்தற்குரியராய மக்களை என்பரிபவ நீங்கத்தரவேண்டுமென்று வேண்டியிரந்தான். அச்சொல்லைக்கேட்ட கலைக்கோட்டுமுனிவரும் இரக்கமுடையாராய் வகையாய் இவ்வுலகமேயல்லது எவ்வுலகினையு மினிது காக்கின்ற பெருங்குணத்தையுடைய மக்களைத் தருகின்றோம், தேவர்கள் விரும்பிப்பெறும் அவிக்குரிய பொருளனைத்தும்பெறப் புத்திரகாமேட்டி செய்தற்குரியவெல்லாம் கொணர்கவென்றார், புத்திரகாமேட்டி செய்தற்குரியபொருளனைத்தும் விரைவாயமைத்து அரசன்வேண்டி நிற்ப மாதவர்களிற் சிறந்த கலைக்கோட்டு முனிவரும் அவ்வியாகத்தைச்செய்து நிறைவேற்றினார். அவ்வியாகத்தினின்றும் ஒளிவீசுகின்ற மணிகளாலும் பொன்னாலுஞ் சமைக்கப்பட்ட கலத்தின்வெண்மையான அமுதமேபோன்ற வெண்சோற்றையேந்திப் பூதகணத்தரசுபுறப்பட்டது. அப்படி அப்பூதகணத்தரசு கொண்டுவந்த அமுதத்தை வேதாகமங்களின்பொருளை முழுதொருங்குணர்ந்த கலைக்கோட்டு முனிவருடைய இவ்வியாக்ஞையால தன்னையேநிகர்ந்த பெருங்குணத்தினையுடைய தசரதனும்தன்பட்டத்தரசிமார்மூவருக்கும் நான்குகூறிட்டளித்தான். அவ்வாறளிக்கவேதீவினைசெய்த பெருந்தீவினையாலும் முடிவில்லாதமறைகள் சொல்லிய வழியே நல்வினைசெய்த நல்வினையாலும் பெருங்கடக மணிந்தகைகளையுடையானாகி ஓவியராலும் எழுதுதற்கரிய திருவுருவத்தையுடைய இக்கருங்கடல்வண்ணனைச் செங்கனிபோலும் வாயினையுடைய கோசலைஎன்பவள் பெற்றெடுத்தாள். நீங்குதற்கரிய பெரிய நீதியென்னும் ஒப்பற்ற ஆறுபுகுதற்குப்பள்ளமே போல்பவனாகிய பரதனென்னும் பெயருடையானும் பெருங்குணத்தினும் அழகினும் இவ்விராமனையேபோல்பவனுமாகிய ஒரு மைந்தனைக் கைகேசி பெற்றெடுத்தாள். அருமையான வலிபடைத்தவராய் அறத்தைக் கெடுக்கும்வெற்றிபெற்ற அரக்கர்கள்வில்லேந்துவராயின்செம்பொன்மேருவையும் இரசிதமலையும்போல்கின்ற இவ்விலக்குமணனையும் சத்துருக்கனையும்சுமித்திரை பெற்றெடுத்தாள். தலைமையான பொருளுணர்ச்சியிற் கலைமகட்குத் தலைவராகி வில்வித்தையனைத்தும் பகைவரைப்போல் அடங்கிநின்று பணிசெய்துகிடப்பச் சோடசகலைகளும் நிறைந்த சந்திரோதயத்திற் கலித்தோங்கும் அலையொடுகூடிய கடலேபோல மறைநான்கினையும்போன்ற தசரதராசகுமாரர்கள் வளர்ந்துவருவாராயினர்.

இவ்வாறு வளர்கையில் திறைகொணர்ந்து அரசரெல்லாம் தன் கடைவாயிலில் அளந்துவணங்கும் வீரகண்டையணிந்த காலையும் பொறுமையொடு தொடர்ந்த மனத்தினையு முடைய தசரதராசன் மக்களென்பதே யல்லது உறையினின்று நீங்காத வேலையையுடைய சனகராசனே! இவர்களுக்கெல்லாமுபநயனச்சடங்குசெய்து நான்கு வேதங்களையும் பயில்வித்து இவர்களையெல்லாம் வளர்த்துவந்தாரும் வசிட்டமுனிவரென்றேயறி. இதுகிடக்க, இவ

ரால் என்வேள்விக்கு விக்கினஞ்செய்துகொண்டிருந்த தாடகை மாரீசன் சுவாகுமுதலிய கொடிய அரக்கரையெல்லாம் கொல்விக்கச் சிந்தையிலெண்ணி இங்கேயெழுந்தருளிய அழகியபாதங்களையுடைய இராம லக்குமணரைக் கொண்டுசென்று வனஞ்சேர்ந்தேன். அவ்வாறு சேர்வதற்கு முன்னே ஒருவராலும் பெறுதற்கரிய பேராற்றலையுடைய தாடகையென்னுங் கொடியபாவி வந்து தோன்றினாள். உலையினின்றுந்தோன்றும் பெருந்தழல்போலு மிழ்கின்ற கோபக்கண்ணையுடைய அத்தாடகையி னாமுருவி மலையுருவி மாமுருவி மண்ணையு முருவிச்சென்றது இவன் அவள்மேல்கடிதெய்த அம்பு. அலையொடுகூடிய கடல்நிறவண்ணனாகிய இவனது நீண்டுயர்ந்த சிலையையுடைய புயவலியை நீயுருவநோக்கிப்பார். அவனொடு பின்வந்த செவ்வானம்போலுஞ் செம்பட்ட மயிர்த்தலைக் குவைகளும் மலைபோற்சிந்தின, அவை முடிவுகாண்டற்கரிய. அவ்வரக்கிமக்களிற் சுவாகு என்பவன் ஆக்கினேயாஸ்திரத்தால் கொல்லப்பட்டு வீரசுவர்க்கமடைந்தான். மற்றையவனாகிய மாரீசனென்பவன் காந்தருவாஸ்திரத்தினால் எறியப்பட்டான், அவன்புகுந்த விடமறியேன். இவனே என்பகையைமுடித்து வந்துவிட்டான். பிரமனாலும் அளந்துசொல்வதற்கரிதாய் உலகனைத்தும் கடலோடுமலையோடும் சுடவல்லபடைக்கலங்கள் செய்தற்கரியதவத்தால் யான்தரவும் மனங்காணஇவ்விராமனுக்கேயவை ஏவற்றொழிலைச் செய்பாகின்றன, அதனை நீயேயாராய்ந்துபார். பின்னும் கௌதம முனிவருடைய மனைவியாகிய அகலிகைக்கு முன்னையுருவத்தைப் பிரசாதித்ததும் இவனது தாமரைமலர்போன்ற பாதங்களின் பொடியேயல்லது வேறல்ல; எனதன்பும் என்னுயிர்மேலன்றி இக்கரியவனிடத்தேயுண்டு. இதுதான் இவன்வரலாறும் புயவலியுமென்றெடுத்துச் சொல்லிமுடித்தான்.

குலமுறை கிளத்துபடலம்

முற்றிற்று.

---

## கார்முகப்படலம்.

---

அதைக்கேட்டு இம்மாயவில்லுக்கு யான் குறிப்பிட்டுச் சொல்வதுயாது? என்மனம் தோற்றதென்றே கவல்கின்றது. என்மகளாகிய சீதையும் தவஞ் செய்தனள். விரைந்து இம்மையன் அக்கார்முகத்தை வளைத்தேற்றுமாயின் என்னை யிடர்க்கடலினின்றும் கரையேற்றுவேனென்று தன்னெதிரேநின்றவரை அம்மலைபோலும் வருந்திக்கட்டிய வில்லைக்கொணருங்கோளென்று கட்டளையிட அவர்களும் நன்றென்றுவணங்கி நால்வரோடிப்போய்ப் பசும்பொன்னாற்செய்யப்பட்ட வில்வைத்திருக்கும் சாலையையடைந்தனர். மிக்கவலியுள்ளவாளையொத்த மேன்மையுடையாருஞ்செறிந்தமயிரினையும் மலைபோலுந் திரண்ட தோளினையுடையாரும் அளவில்லாத பேராற்றலை யுடையாருமாகிய

* அறுபதினுயிரம்பேர் தரியால்மடுத்து இடையேதண்டிற்றூங்கி பூமகள் தன் முதுகாற்றவுமின்றுபர்கின்ற விசாலமானமலேகளும் நாணமடையவுமிடமில்லே யென்றேயுலகமெங்கும் கடல்போல அங்காத்தார் பேரொலிசெய்து காண வந்தார்கள். அதைக்கண்டு சங்குசக்கரமேந்திய சிங்கவேறுபோன்ற திருமாலே யல்லது இவ்வில்லேத்தீண்ட ஒருவனெங்குளன். இன்று இவ்வில்லேயேற்றின் மங்கையாகிய சிதையின் திருமண முடியுமென்பாரும், இதைத் தனுவென் பதே கைதவமல்லதுவேறல்ல ஆதலின் இது பொன்மேருவே யென்பாரும், இவ்வில்லேமுன்வளேத்துஎய்தவன் யாவனே என்பாரும், அத்திசைமுகனுகிய பிரமன்இவ்வில்லேத்தீண்டிச்செய்ததுமுன் அவன்செய்ததபோபலமேயென்பா ரும், திண்ணிதாகிய மகாமேருவைத்திரட்டியதோ என்பாரும், அழகியகடலேக் கடைந்த மந்தரகிரியாகிய மத்தோ என்பாரும், மகாநாகங்களுக்குத் தலைமை யான வாசுகிதானென்பாரும், ஆகாயத்தில் இடப்பட்ட இந்திரவில்லேதான் பூமியில்விழ்ந்ததோ என்பாரும், எதன்பொருட்டாக இதைக் கொண்டுவரக் கட்டளேயிட்டா னென்பாரும், இவனேப்போலு மதிகெட்டவரில்லேயென்பா ரும்,இதுமுன்னே யூழ்வினேயினுன் முடிக்கலாமென்பாரும், கன்னியும் இச்சிலே காணுமோவென்பாரும், இச்சிலேயையுதைத்த கோலுக்கிலக்கம் யாதென்பா ரும், சிலேயைவளேத்தற்பயனே மங்கையாகிய சிதைமேல்குறிக்கும் வேந்தென் பாரும், சக்கரத்தினேயுடைய இவன் நிச்சயமாகவெடுப்பனே யென்பாரும், சிற்சிலர் விதியானது செய்த கொடுமைதானே வென்பாருமாகி இவ்வாறு நெருங்கிப்பேசிக்கொண்டேயிருக்க, சனகராசன் முன்னேநிலங்குழிந்துபோக அதனே கொண்டுவந்துவைத்தார்கள். அவ்வில்லேக்கண்ட அரசரெல்லாம் இதை வளேப்பவன் யாரோவென்று கைவிரித்துநின்றனர். இது இவ்வாறுக யானே போல்பவனுகிய சிராமபிரான் முகமலர்ச்சிகண்டும் அத்திமையை விளக்கும் வில்லேக்கண்டும் தன்மகளாகிய சிதையின் மணவினேயைக்குறித்தே கருத் தைச்செலுத்தும்,சனகராசன் கருத்தை நோக்கிய கௌதமமுனிவர் புதல்வ ராகிய சதானந்தமுனிவர் சொல்லலாயினர்.

பொன்மலேயை வில்லாகக்கொண்ட இறைவன் தன்பாகத்தில்எழுந்தருளி யிருக்கும் உமாதேவியை இகழ்ந்தானென்று மிக்க கோபத்தீப்போற் கொதி த்து ஒப்பற்ற வில்லேக்கைக்கொண்டு தக்கனது யாகத்தைநோக்கிச் செல்லப் பல்லொடுங் கைககளற்றுத் தேவர்களோடி அடையத்தகாத இடமெல்லாம் அடைந்தனர். தக்கனது பெருவேள்வித்தியும் ஆறிப்போயிற்று. மூன்றுகண் களேயும் எட்டுத்தோளேயுமுடைய இறைவனும் கோபநீங்கி தேவர்கள் ஆயுளே யுடையரா யிருப்பதனுல் அவர்தம் நடுக்கங்கண்டு வலிமையுடைய விடை போலும் இச்சனகராசன் மரபின் முன்னேயுதித்த வாளேயுடைய வீரனெனப் படும் தேவராதனென்னும் மிதிலாநகரத் தரசனிடத்தில் குதையையுடைய வரிந்தசிலேயைக் கொடுத்துவைத்தனர், நீள்சடையுடைய சிவபிரானேயொத்த

*, அறுபதினுயிரர் என்பதற்கு அற்றபதினுயிரவ ரெனக்கொண்ஜெபாயிரவ ரென வுங்கொண்டு பொருளுரைப்பாரு முளர்.

வரதனே! இவ்வில்லின்வலியை யான்சொல்லவும் வல்லேனே! இதையறிவ தற் குலகில் நீயல்லது யாரறிபவர்? இதற்கென்றேதோன்றிய சீதையின் இயல் பைச் சொல்கின்றேன். அதுவேள்வியின்பொருட்டு இரும்பின் வலிபோலும் வலிபுள்ள பெரிய நீண்ட கொம்பினையுடைய இரண்டிடங்களினுடைய பருத்த பெருமையிடறில் பளியவிற்செய்த நுகத்தடியைச்சேர்த்து அதனோடு பொரு த்துவித்து இழுக்கின்ற அளவிகந்த மணிகள்பதித்த பொற்கலப்பையில வைர முள்ள கொழுச்சேர்த்து அதனால ஒப்பில்லாத வன்மையுள்ள பூமியைப் பல காலும்உழுதோம். அப்படியுழுவே உதயஞ்செய்யும் பிரகாசிக்கின்ற சூரியனைப் போலும் வளங்களைச்சொரியும் பூமிதேவியினது செல்வமே வெளிபபட்டாற் போலவும் பாற்கடலிலுண்டாகிய தெளிவாகிய அமுதத்தோடு திருவவதாரஞ் செய்ததிருமாமகளும் அழகுமுதலியவற்றால்இழிவடைந்து ஒருபுறம்போகவும் பெண்களெல்லாம் வணங்கத்தக்க இயல்புடையபெண்ணரசி அக்கொழுமுகத் தில்லே பிறந்தாள். அவளது குணதிசயங்களை யானெடுத்துச்சொல்வதினாலே யுண்டாகும் பயனென்ன? பூங்கொம்புபோன்ற அச்சானகியைச்சேர்ந்து அக் குணங்களெல்லாம் உய்யும்படி தம்மிலேமாறுபடுவன, அழகென்றுசொல்லப் படுவதே இவளைத் தவஞ்செய்துபெற்றதன்றி வேறல்லவே, இச்சானகிதோன் றியபிறகு, ஆகாயகங்கை பூமியிலிறங்கிய பிறகு கிருஷ்ணை, துங்கபத்திரை, காவேரி, யமுனை, சரஸ்வதி, நருமதைமுதலிய மகாநதிகள் பெருமை யிழந்த வாறுபோல மற்றைப்பெண்ணென்று சொல்லப்பட்டவர்களெல்லாம் பெருமை யினின்றும் இழிந்தாராயினர். இந்தச்சானகியினது உருவத்தையொத்த சித் திரமெங்கேதான் கிடைக்கும். அவரவர்செய்த முன்வினைப்பயனால் இன்னா ருக் கின்னாரென் றின்னபடியென்று தலையிலெழுதி மயிரால் மறைத்துவிட்ட பிரமனது சூழ்ச்சியை நூலளவையாலுணரு முணர்ச்சியும் பழயசங்கற்பமும் ஒன்றையொன் றொவ்வாமல் புறத்திலிருக்கவே அதனைச் சிறிதுமறியாமல் தேவர்களுடைய கூட்டமெல்லாம் முன்னைநாளில் அத்திருமாமகளைவிரும்பி யடைந்ததுபோல இப்பூவுலகத்தை யாண்டுவரும் அரசரெல்லாம் இத்திருமா மகளையடைந்து விரும்பலாயினர். மேலும் புகழினையுடைய நால்வகையாகிய சேனாசமுத்திரத்தோடும் ஆரவாரித்துமதங்கொண்ட யானையினைப்போல்வந்து பேசினபேருக்கு நாங்கள் மறுமொழியாக புலித்தொலாகிய ஆடையினையும் யானைத்தோலாகிய போர்வையினையுமுடைய பரமசிவனது போர்க்குரிய இவ் வில்லை வளைத்தவனுக்கே இம்மங்கையர்க்கரசியாகிய திருமாமகள்போன்றவள் மணமகளாவாளென்று உறுதியாகச் சொல்லியிருந்தோம். சொல்லாகிய வில் லைக்கொண்டு உலகைக்காக்கும் விசுவாமித்திர முனிவரே! அச்சொல்லைக் கேட்டு அன்று திருப்பாற்கடல்திருமாமகளைப்பெற்றதுபோல இன்று நிலமகள் பெற்ற பெண்ணரசியை விரும்பிவந்த அரசரெல்லாம்இவ்வலியவில்லை வளைப்ப தற்கு வலியற்று மன்மதனது கரும்பாகிய வில்லினால் சல்லடைக்கண்ணாகத் தொளைக்கப்பட்டவராய் எங்களை யவர்கள் போருக்கழைத்தாராய்ப் போர் செய்யத்தொடங்கினர். ஒளிவிசும் முடியையுடைய வானநாடர் மல்யுத்தத் திற்குரிய தோளையுடைய இச்சனகன் இளமையானஇடபவாகனத்தையுடைய

பரமசிவனது வில்லைக்காக்குமித்தம் வாட்போரில் வருந்துகின்றானென்பதறிந்து அவர்கள் மனமிரங்கி ஆயுதவகைகளை எனக்குக்கொடுத்ததாகக் கேள்விப்பட்டபிறகு அவ்வரசர்களெல்லாரும் இராத்திரிகாலத்தில் காக்கைகளெல்லாம் ஆந்தைகளைக்கண் டஞ்சிப்போவனபோலப் பயந்தோடத் தலைப்பட்டார்கள். அன்றுமுதல் இன்றுவரையிலும் தேரேறிச்செல்லும் அரசர்களில் ஒருவரேனும் இவ்வில்லினருகே போனதுங் கிடையவேகிடையாது! இப்பட்டணத்தின்மருங்கே திரிந்ததுங்கிடையாது! எல்லாரும் ஓடியொளித்தனர். இனி எப்போதும் திருமணமென்பதே யில்லையென் றெண்ணியிருந்தோம்! இச்சீராமன் இவ்வில்லை நாணேற்றுவானாயின் சீதையின்கழுத்தில் மங்கலநாணை ஏற்றுபவனேயாகும் எங்களுக்கும் நன்மையுண்டாகும். அச்சானகியின் பெண்ணலமும் பழுதுபடாதேயாகுமென்று சதானந்தமுனிவர் சொல்லிமுடிக்க, அவர் நினைத்ததையும் சொன்னதையும் முறையே நன்றாயெண்ணி விசுவாமித்திரமுனிவரும் கட்டியிருந்த தமது சடாமுடியையசைத்துப் போரில் விடையேறுபோன்றவனாகிய சீராமனது திருமுகத்தைநோக்கித் தமது குறிப்பை விளக்கினர் அழகே யோர்வடிவெடுத்தாற்போன்ற சீராமனும் விசுவாமித்திரமுனிவர் எண்ணியவற்றையெல்லாம் நன்றாயாராய்ந்து பார்த்து அந்த நீண்ட வில்லினருகேபோய்ப் பார்க்கத்துணிந்தார். அப்படி பார்க்கும்படி யாகாக்கினியில் நெய்யாகிய ஆகுதியைப்பொழிய அவ்விடத்தில் மேலேயெழுந்தோங்கிய செழுந்தீச்சிகைபோல இரகுநாயகன் எழுந்த மாத்திரத்தில் அதைக்கண்ட தேவர்களெல்லாரும் வில்லழிந்தேபோய்விட்டதென்று ஆரவாரித்தார்கள். காமம் வெகுளி மயக்கம் என்னும் முப்பகைகளையும் வென்ற முற்றத்துறந்த முனிவரெல்லாரும் ஆசீர்வதித்தார்கள். பரிசுத்தமாகிய மகத்தானதவத்தைச் செய்தவிசுவாமித்திரமுனிவர் ஏவுதலில்நின்ற காகுத்தவம்சோத்தான் இவ்வலியவில்லையொடிப்பதற்குமுன்னே சித்தசனும் அப்பெருந்தகையினுடைய வடிவழகைப்பார்த்திருந்த செம்பொனாலாகிய ஆபரணம்பூண்டமாதர்கள் சித்தந்தோறும் மேன்மையான புட்பபாணங்களையெய்து ஆயிரங் கரும்புவில்லையுமொடித்தான். இதுகிடக்க;

சிலபேர் நீண்டவில்லானது கால் வலியையுடையதென்றும், சிலபேர் நாணத்தையுடைய சீதையினது செங்கிறம் பொருந்திய இப்பெரியோனது அகன்றசெங்கையானது பொருந்தாததனால் இனி அச்சீதையும்வாழ்வடையப் பெற்றிலளென்றும், சிலர் தத்தங் குலதெய்வங்களை வணங்கித்துதித்து இருகைகளையுங் குவித்துநின்று இரண்டுகண்ணினின்றும் நீர் துளிக்கப் பெரியமதயானைபோன்ற இப்பெரியோன் இவ்வில்லை நாணேற்றிவிட்டால் கத்தூரிமணங்கமழும் கூந்தலையுடைய நமது சானகியாகிய பெண்ணரசும் நாமும் தன்னில் வீழ்ந்தாரைக்கொல்லும் அக்கினிப் பிரவேசமாய் விடுவோமென்றும், சிலர் நம்முடைய சனகராசன் சீதைக்குத் திருக்கலியாணத்தை விரும்பினவனானால் நீ கொள்ளென்று எதிரே இப்புருஷோத்தமனாகிய சக்கரவர்த்தி திருமகனுக்குச் சீதையைக்கொடுப்பதை விட்டுவிட்டுச் சடையிற் கங்கைதரித்த சம்புவில்லையெடுத்து இப்பிள்ளைமுன்வைத்து வளைக்கவேண்டுமென்றுசொன்

னது அறியாமையேயென்றும், சிலர் வில்லுக்கென்றே இப்பிள்ளையையழைத்து வந்த ஞானசொரூபியாகிய விசுவாமித்திர முனிவருக்குச் சிறிதேனும் நாணமில்லையோவென்றும், சிலர் அரசர்களில் இச்சனகனைப்பார்க்கிலும் கொடியவனில்லையென்றும், சிலர் இச்சிராமபிரான் இவ்வில்லை இரண்டுகாலிலும் வளைக்காவிட்டால், பருத்த தனத்தினையுடைய நமது சானகியாகிய பெண்ணரசி பிறந்த பயனடையாளென்றும், இவ்வாறாக மயில்போலும் சாயலையுடையசிலரியர்கள் சொல்லிக்கொண்டேயிருக்கையில் அவர்செய்கைகளையுங்குணங்களையுமெடுத்து நல்லோர்கள் சந்தோஷமாகச்சொல்லத் தேவர்களும்மகிழ உயர்ந்த சிங்கமும், பெருமிதமுள்ள விடையேறும், பொன்மலையும், மதயானையும் நாணும்படி வில்லினருகே நடந்துபோய உயர்ந்த மகாமேருமலையைப்போன்ற அந்தவில்லைத்தேடக்கிடையாத இரத்தினமேபோன்றசானகியென்கின்ற பொற்கடகத்தையும வளையலையுமணிந்த கையையுடையாளே சூட்டிக்கொள்ளக்கொடுக்கும் இதழ்விரிந்த மணமாலையிதுவென்று கண்டவரெல்லாம் அதிசயித்துச்சொல்ல அநாயாசமாகவே அவ்வில்லைத் தன்னிடக்கையாலேயே யெடுத்தான். காட்சியைத் தடுப்பதற்கு இமைபாதவராய் அங்கிருந்தவரெல்லாம் இரகுவீரன் தன்றிருவடியின் பெருவிரலால் அவ்விற்குதையை மிதித்ததையும் நாணினை நுனியில் பூட்டியதையும் செய்கையின்வேகத்தாற் கண்ணினாற் காணாதவராய் அறிவினாலு மறிந்திலர். கையாலெடுத்ததைப் பார்த்தாரேயல்லது வில்முறிந்த ஓசைமாத்திரமே கேட்டார்கள். தேவர்கள் சிவபெருமானுடைய திரியம்பகமென்னும் வில்முறிந்த ஓசையைக்கேட்டு இது பிரமாண்டகோளகைதான்பிளந்ததனாலுண்டான ஓசையோவென்றெண்ணி இனியாரிடத்திலேபோய்நாம் அடைக்கலம்புகுவோமென்று ஏங்கி மனம் வாடிவருந்தினார்கள் பகைவருக்கு அச்சம்பயக்கும் வெற்றிவேலையேந்திய சனகராசனுக்கு இன்றுதான் அவனது நல்வினைபயீடேறிறறென்று சொல்லிக்கொண்டவராய்த் தேரிற்சிலர் கற்பக மலர்மழைபொழிந்தார்கள். சத்தமேகங்களும் பொன்மழைபொழிந்தன, பாற்கடலெல்லாம் பலமணிகளையும்தூவி யாரவாரித்தன. சிறந்தமுனிவரெல்லாம் ஆசீர்வாதஞ்செய்தனர்.

வேல்கிடந்தாற்போன்ற கண்களைப்பெற்றுப் பகற்காலத்தும் தன் தன்மை திரிபாதுலவுதலைப்பெற்ற மதிபோலுந் திருமுகத்தையுடையமாதர்கள் அகப்பொருளறிந்த புலவர்கூடிய கார்காலத்தைநோக்கும்மயில்களேபோலக் களிப்பினால் தோன்றுகின்ற முத்தமுறுவல் விட்டுவிட்டுப் பிரகாசிக்க, காதணிகளும் இடைவிடாமல் ஒளிவீசவிதிகளிலே நடனஞ்செய்வாராயினர். மற்றுவண்டார் கண்ணேபோலச் சிவப்பேறிவிளங்கும் கருங்கண்மாதர் மனவருத்தம் நேரிடும் புலவியாலாயகளிப்பின்மிகுதியால் நீங்காமல்தத்தம்நாயகரைத் தழுவலாயினர், வெள்ளைநிறங்கொண்ட மேகங்கள்மேலுமேலும் விரிகடனீருண்டவிதமேபோல வறியோர் மன்னேயாளும் அரசனாகிய சனகராசனது சேமநிதிபொருளைக் கொள்ளைகொண்டனர். தேவர்களோ, வயிரியரும்பாடுகின்ற இனிய இசையும், மங்கைப்பருவமுமுடைய வேசையர்பாடும் அமுதகீதமும், செயிரி

யர்வாசிக்கும் மகரயாழினது இனியதேனின் இனிமைபோலும் இனிமையடைத்த இசையும், பயிரியர் ஊதும் வேய்ங்குழலும் ஆகிய இவற்றைச் செவியாகிய வாயால் தெவிட்டாமலுண்டு உயிர்தங்கிய உடம்புமுழுதும் அந்நகரத்தின் சித்திரமேபோல அசைவற நின்றனர். சிராமன் வில்லையிறுத்த தோளாற்றலைக் காணத் தேவருலகத்து அரம்பைமாதர்கள் இழிந்துசெயலினாலும் வடிவினாலும் ஆடல்பாடல்களினாலும் பூலோகமாதரென்றே யறியாமல் அவரைத் தழுவிக் கொண்டதன்றி, மையெழுதிச் செவ்வரிபடர்ந்த நீண்டநோக்கமுடைய கண்கள் இமையாமையால்மயங்கித் திப்பிரமைகொண்டுநின்றனர். அந்நகரமாந்தரிற் சிலர் இரகுநாயகனைத் தசரதகுமாரனென்றும், சிலர் செந்தாமரைக் கண்ணனென்றும், சிலர் இவனிறமோ மேகநிறமென்றும், சிலர் அப்படியன்று அது காயாம்பூவை யொக்குமென்றும், சிலர் உலகம் இவன்பாற் காதலையுடைத்தென்றும், சிலர் இவன் மானிடனல்லனென்றும், சிலர் இவன் பாற்கடற் பரமனேயென்றுஞ் சொல்வாராயுமிருந்தனர். சிலர் ஆணிற்சிறந்த பேரழகனைப் பார்க்கிலும்பெண்ணிற்சிறந்த பேரழகினுட்கு ஆயிரங்கண்வேண்டுமென்பாரும், பூங்கொம்பையொத்த நமது அரசியைக்காணுந்தோறும் இப்பெருந்தகைக்குமப்படியே யாகுமென்பாரும், இளையவனைப் பாருங்களென்பாரும், உலகமோ பெருந்தவஞ் செய்தது இவர்களைப் பெற்றிருக்க என்பாரும், இவ்வுலகத்திலுள்ள இந்நகரில் இவரை அழைத்துக்கொண்டுவந்த விசுவாமித்திரமுனிவரை வணங்கவேண்டு மென்பாருமாய் இங்கேயிருக்க; சந்திரனும் இரவும் எப்போது நீங்கப்போகின்றனவென்றெண்ணிக்கொண்டிருந்து அவை நீங்கப்பெற்றுப் பின்னும் ஸ்ரீகாகுத்த வமிசோத்தமனைக் காணவேண்டுமென்னும் ஆசையால் ஆருயிர் சிறிதுதாங்கியிருக்கிகும் சீதாபிராட்டியார் உடலினின்றும் போக்கும் வரவுமுடைய யூசல்போல தீயிலிட்டாற்போலத் தன்னுடம்புமெலிகின்றவராய் மலர்ப்படுக்கையினின்றும் நீங்கிப் பசும்பொன்னுபரணமணிந்த தோழிமார்கள் தன்னைச் சூழ்ந்துவரும்படி சென்று தாமரைத்தடாகத்திற் கருகே பளிங்குக்கல்லாற் கட்டப்பட்டமாளிகையில் சந்திரகாந்தக்கல் சிந்திய பனிநீரைத்தெளித்த பூம்படுக்கையையடைந்தாள். தாமரைமலர்களே இங்குவந்தவர் ஆண்மகனல்ல பெண்மகளேயென்று சிந்திக்கும் உம்முடைய பெருந்தன்மையால் காண்பதற்கருமையான திருமேனி நிறத்தையும இலைகளே காட்டிவருவதனால் சோர்வு நீங்கிவிட்டேன். மாந்தளிர்போலும் நிறமுள்ள என்னுடம்பின் நிறத்தைப்பார்வையாலுண்ட திருக்கண்ணிலமைந்த நிறத்தையுமலர்களால் காட்டிநீங்கள் என்னுயிர்போலச் சிறந்த இரகுநாயகனைக் கொண்டுவர உலோபஞ்செய்துவிட்டீர்கள் இது என்னகாரணமோ அறியேன்! தோளழகைக்கண்டு வெட்கமடைந்துபோன மேருமலைபோன்ற வில்லொடு நாணியமைந்த திருக்கையும், தூண்போன்ற பருத்த நீண்டதோளும், அம்பறுப் புட்டிலும், சந்திரிகை வீசும் வெண்மையும், ஒளியுமுள்ள முப்புரிநூலும் மலர்மாலையுந்தங்கிய மார்பும் மறுபடியுங் காணக்கூடுமானால் என்னுயிரை முன்போலிருக்கக்காணலாமென்றும், ஆகாயத்தில் தவழ்கின்ற சந்திரனோடு தேனுண்ணும்படி அதன்மேற்சூழ்ந்து வண்டுகளொலிக்கின்ற மலர்

மாலைதங்கிய சிகையோடும்வந்து நீண்டவில்லைத்தாங்கிய ஒருமேகம் தன்னிரண்டு கண்களாலும் என்னுயிராகிய நீரைமொண்டுகொண்டு உண்டதுமுண்டு, அது என்னெஞ்சில் இப்போதும் நிலைத்திருக்கின்றது, எப்போதும் நீங்கவேமாட்டாதென்றுஞ் சொல்வாள்.

பின்பு தன் கொங்கைகளைப்பார்த்து நீங்கள் பருத்துப் பூரித்திருந்தும் யாதுசெய்தீர்கள்? கலைகள் நிரம்புஞ் சந்திரனைப்போன்ற தன்னொளிவாய்ந்த முகத்தையுடையவனும், வளைக்காதவில்லைக் கையிற்பிடித்தவனும், நடையிற் சிங்கம்போன்றவனுமிருக்கின்ற அவ்வள்ளலுடைய மார்பிற்பொருந்த அநுபவிக்கும்படி. தவஞ்செய்யுங்கோளென்பாள், என்னெஞ்சே அனங்கனாகிய மன்மதன் மனங்கொதித்து என்னைநெருங்கிவந்துதூவும அம்பென்னும்விஷாக்கினியின் மூழ்கிய தேகம்வேகாமல் நின்றெழுந்து நடையினால் மதயானைபோலுங் கட்டிளமையுடைய பெரியோனைக் காலின்கணடைந்து அக்காலொடுவிடாது அவன் தன்வில்லினின்றும் பாணங்களைப்பொழிந்து பஞ்சையழிக்குந் தீப்போல என்னுயிரை வருத்துவதனால் என்னெஞ்சழிந்து சஞ்சலமுறப் பெண்களுய்யும்படி அஞ்சாதை அஞ்சாதையென்றுசொல்லாத ஆண்டன்மையாதென்றும், இப்படிப்பட்டசந்திரன் இதுவரையிலும் எங்கேதங்கியிருந்தான்? மன்மதன் என்னெஞ்சிலேநடந்து அங்கேயேதான் தங்கியிருந்து எய்தபாணத்தினாலுண்டான காமநோய் பொங்கியெழுந்து தனங்களின்மேல் நிலவாகிய விடத்தைச்சொரிந்தாலுந் தன்னிடத்திலே களங்கமில்லாமையாலே நேற்றிரவிலேவந்த சந்திரனேயல்லவென்றும். ஆகாயத்திலெழுந்த மேகந் தன்மார்பிலே தங்கிய முப்புரிநூலோடு இம்மண்ணுலகத்திலே யிழிந்தாற்போலக் கன்னிமாடத்தருகேவந்து நீங்கிய புருஷோத்தமன் என்மனத்திலிருந்தாலும் நான் இன்னானென்றறியமாட்டேன், அது இருக்கட்டும்; அவன் என் கண்ணருகேயிருந்தாலும் எப்படிப்பட்டவனென்றுகாணாதிருந்தது என்னகாரணமோவென்றும், பாற்கடலிலேயல்லது மற்றையிடத்திற் பிறப்பதற்கருமையான அமுதத்தினை அநாயாசமாகப்பெற்றும், அதையுடனேயநுபவியாது பொன்வட்டிலொடுமிழந்த அறிவிலார்போல, அவனது வலியதோளை நெருங்கிய காலத்திலே தழுவிப்பிணையாமல் நமது வசத்திலிருந்தும் புறத்தேபோகவிட்டு உறுதிமொழிகளை இப்போது சொல்வதனாற் பயனில்லையென்றும், இவ்வாறு பலபலவிதமாகச் சானகிமனம் நைந்து நைந்து இரங்கி விம்மித் துன்பக்கடலிலழுந்தி, அதற்கோர் துறைகாணாமல் அக்கடலிலமிழ்கின்ற சமயத்தில் மலைபோன்ற உருவும் வலிமையும்பொருந்திய வில்லொடித்த சங்கதியைக்கேட்டு மனத்திற் களிப்படைந்த முகமதியையுடைய நீலமாலையென்னுந் தோழியொருத்தி ஓடோடியுஞ்சென்று, வடங்களும் குழைகளும் இந்திரவில்லைப்போற் பிரகாசிக்க அவிழத்தொடங்கிய ஆடையுங் கூந்தலுஞ் சோர்ந்துபோக, துவளுகின்ற மின்னலைப்போல விரைவாகவந்தடைந்து முடிவில்லாத களிப்புடையவளாய் இறைவியின் பாதங்களை வணங்காமல் ஆரவாரித்துச்சோபனம் பாடி ஆனந்தக்கூத்தாடி நின்றாள்.

அதுகண்டு பிராட்டி நீயுள்ளத்திற்கொண்ட பெருமகிழ்ச்சியும் அதற்குக் காரணமான செய்தியுஞ் சொல்லென்றுகேட்டருளத் தோழியும்வணங்கிநின்று யானை தேர் குதிரை காலாள்களாகிய நாற்கடற்படையையுடையவனும் மிக்க கல்வி யுடையானும், மேகம் போலும் வரையாது கொடுக்கும் வள்ளற் றன்மையுடையானுமாகிய தசரதராசகுமாரன், கட்டழகில் மன்மதனினுஞ் சிறந்தவன், கண்டவர்கள் மராமரங்களே யென்றுசொல்லப்பட்ட தோளினை யுடையவன்,பாற்கடற்பரமனென்றே சொல்லத்தக்க பேராற்றலையுடையவன், அவனைச்சிராமனென்றே யாவருஞ் சொல்லுவர். அவன் தன்தம்பியாகிய இலக்குமணனோடு விசுவாமித்திரமுனிவரழைத்துக்கொண்டு நமது மிதிலாநக ரத்தையடைந்து நமது இராசசபையில்வர, அவ்விசுவாமித்திரமுனிவர் நமதா சனைநோக்கி இச்சிராமன் அருட்பெருங்கடலாகிய பரமசிவனது வில்லைக்காண வந்தானென்றுசொல்ல, நமதரசன்கட்டளையால் அவ்வில்லைத் தன்கையாலே அநாயாசமாயெடுத்து நாணேற்றி விண்ணுலகம் நடுங்க முன் தான்கையாடிய சூத்திர மிதுவென்னும்படி ஒரு மாத்திரைப்போதிலேயே தாளான் மிதித்து தோளினால் வளைத்தான். அந்தச்சமயத்தில் தேவர்களெல்லாரும்புகழ்ந்து கற்பகமலர்மழை பொழிந்தார்கள். இவ்வாறு மலர்மழை பொழியுங்காலத்திலே நமது இராசசபைநடுங்க அவ்வில்முறிந்து வீழ்ந்ததென்று சொல்லி நின்றாள். அவள்சொல்லி நிறுத்தியவுடன்; சிறந்தமுனிவனோடும் வந்த மேகம்போல்வா னென்று சொன்னதினாலும், செந்தாமரைக் கண்ணனென்று சொல்வதனாலும் நமது கன்னிமாடத்தில் அன்னமாடும் முன்றுறைக் கயலில்நின்ற அப்பெரி யோனேயாகுமென்றுதேறினாள். உடனே மேகலையினுள்ளே அல்குல்வளர்ந்து இடையேயில்லையென்று முன்னே செல்கின்றவர்களும் இப்போ துண்டுண் டென்றுதுணிந்துசொல்லவும், மற்றையுறுப்புகளேயன்றிமேன்மையான தனங்க ளும்பூரிக்கவிம்மிதமாயிருந்தசானகி தன்தோழியாகிய நீலமாலைசொல்லிநின்ற குறிகளால் அவன் நான்கருதிய அரசிளங்குமரனேயாகும், அவனல்லனாயின் இறந்துபடுவேனென்று நெஞ்சிலெண்ணித்துணிந்து சிராகவன்மேல் ஆசை கொண்டு சோர்கின்றவளாயிருக்க, இங்கே சனகமகாராசன் அவ்வில்முறிந்த ஓசையினால் வியப்படைந்து, எம்பெருமானே உன்மகனாகிய சிராமபிரானுக்கு விவாகமகோற்சவத்தை விரைவாகஇவ்வொருநாளிலே முடிக்கவெண்ணமோ, எங்கும் மணப்பறைசாற்றுவித்துச் சத்திக்கின்ற வீரக்கழலையணிந்த காலாட் சேனையுடைய அந்தத் தசரதசக்கரவர்த்தியையும் வருவித்துமுடிக்க எண் ணமோ சொல்லவேண்டுமென்றுசொல்ல, அதைக்கேட்ட விசுவாமித்திரமுனி வரும் இம்மிதுலாநகரத்திற்குச் சக்கரவர்த்தியும்வந்து சேர்வதே நல்ல தென்றுசொல்ல, அதற்கு அளவிடப்படாத மகிழ்ச்சியுடையவனாய் நடந்த வரலாற்றையெல்லாஞ் சொல்லவேண்டுமென்று தூதுவரைத் திருமுகத்தோ டனுப்பினான்.

கார்முகப்படலம்

முற்றிற்று.

---

## எழுச்சிப்படலம்.

அத்திருமுகம் ஏற்றுச்சென்ற தூதுவரும் வாயுவேகமாய்க்காலால்நடந்து முரசொலிவிடாது சத்திக்கும் அயோத்தியாநகரத்தையடைந்து அந்தச்சக்கரவர்த்தியைவணங்கிக் காணஇடமில்லாமல் அரசர்களுடைய முடியோடுமுடி பொருகின்றவாசலைச்சென்று சேர்ந்து அவரது அருளுப்பாட்டை முன்னடைந்து தமக்குத்தக்கமுறையோடணுகி அவரதுவீரக்கழலையணிந்த பாதங்களைக் கைதொழுது செல்வமிகுந்த அச்சக்கரவர்த்தியைப்புகழ்ந்து அரசர்பெருமானே! தேவரீர்மக்களாகியஇராமலக்குமணர்போனபின்பு இன்னதென்று நடந்த வரலாற்றைப் பலபடச்சொல்லிமுடித்தார்கள். பிறகு அத்தூதர்கள் தாங்கள் கொண்டுவந்த திருமுகத்தைக்காட்டி முடிவில்லாத புகழினையுடைய சக்கரவர்த்தியே இதுவும் அவ்வரலாற்றை யெழுதியதென்று தெரிவித்தனர். தன்னருகிலிருந்த கல்வியறிவாளன் ஆதரத்தோடு வணங்கிநிற்கவே, ஒன்றுக்கொன்று மாறுபட்டொலிக்கின்ற வீரகண்டையணிந்த சக்கரவர்த்தி அத்திருமுகத்தைப்படியென்று கட்டளையிட்டனர். சனகராசனும் விசுவாமித்திரமுனிவரும் அனுப்பிய ஓலைச்சுருளில் தன் மூத்தகுமாரனாகிய தாசரதியின் விற்றொழிலின் சங்கதியெல்லாம் காதிற்கேட்டுவிட்ட மாத்திரத்தில் தன்தோளில் அணிந்திருந்த வாகுவலயங்கள் வளைவுநிமிர்ந்து கழன்றுபோகப்பெரியமலைகள் போலத் தோள்கள் பூரித்தன. சக்கரவர்த்தி கற்றைவார்சடைக்கண்ணுதற்பெருமானது ஏழுலகையும்வென்ற வில்லின்பேரொலிதானோ அன்று நாம் கேட்க இடித்ததென்றுசொல்லி வசிட்டமுனிவர் முதலியோரைப்பார்த்துத் தன்னைநாடிச் சுபச்செய்திகொணர்ந்த தூதுவருக்குவேண்டிய பொன்னாபரணங்களையும் அழகிய ஆடைகளையுங்கொடுத்து சூரியகுலத்திற்பிறந்த என் முன்னோர்செய்த தவத்தால் மன்மதனும்நாணத்திருவவதரித்த சிராமன்இருக்கின்ற மிதுலாநகரத்தை நமது சேனைகளும் அரசர்களும் முன்னேசெல்லும்படி பறையறைவிக்கக் கட்டளையிட, அன்று திரிவிக்கிரமன் மாபலியிடத்து உலகமுழுதுந் தன்திருவடியாலளந்தகாலத்தில் சாம்புவன்திரிந்து பறைசாற்றியதுபோல,வள்ளுவன் அந்நகரமுழுதுந்திரிந்து பறைசாற்றவே, அதைக்கேளாத தன்முன்னே அந்நகரமாந்தரும் மாதரும் அரசகுமாரரும் வெற்றியுள்ள அரசரும்காற்றினாலெறியப்பட்ட அலைகடல்பொங்கினாற்போல ஆனந்தசமுத்திரத்திலழுந்தி கடையுகத்தின்முடிவில் எந்தப்பொருளுங் காற்றினாற்பசையற்றுப் போகப் பின்னே உலகத்திற்சிறிதேனு மிடமில்லையென்றுசொல்ல ஒரு சேனையினின்றும் பெயருங்கடல்போல வெழுந்துபோயின. இவ்வாறு புறப்படுங்காலத்தில் பூமிசிறிதென்னும்படி நெருங்கிய இரதங்கள் தம்மேல் ஏறிவருகின்ற அரசரால் உதயமாகுஞ்சூரியன்போற் பிரகாசித்தன. யானைகள் தம் முகத்திலணிந்திருக்கிற முகபடாத்தினால் இந்திரவில்லிட்ட மேகம்போல்விளங்கின. காம்பினின்றும் எழுந்துவிரியும் வெள்ளைக்குடைகள் பால்பரந்தது போலப் பறக்குமியல்பினையுடையஎண்ணில்லாத அன்னப்பறவைகள்போலிருந்தன. ஆகாயத்தில் விரித்தெழுந்தகொடிகள் விண்ணுலகமுழுதும்அவைகளின்

சூலங்களால் பிருண்டிரிந்துசிந்தும் தோல்களைப்போன்றன. ஆடுகின்ற துகிற்கொடிகள் நுட்பமாகிய கையையுடைய யானைவெள்ளத்தைக்கண்டு இதுகடலென்று பரப்பாய் ஆகாயமுழுதும் எழுந்தனவாய் நீருண்ணத் தாழவரும் வெள்ளை மேகம்போன்றன. ஆபரணங்களெல்லாம் இளஞ்சூரியனைப்போற் பிரகாசிக்கும். அந்தப்பிரகாசத்தில் மயிற்பீலிக்குடையி னிடத்துண்டான நிழல்கெடவுலாவும், அந்தப்பீலிக்குடை நீருண்டமேகத்தினுண்டான அழகு கெடப்பரவும். அந்தமேகங்கள் சிதையும்படி பேரிகைக்கூட்ட முழங்காநிற்கும். பதாதிகள்போகுமிடங்களிலெல்லாம் மாதர்கள் தங்கள்தனத்திலெழுதிய கோலமும், மாந்தர்மலைபோன்ற தோளிலெழுதியசந்தனக்கோலமும் உதிர்ந்து கலந்துபோய் அக்கால்வகையாகிய சேனாசமுத்திரத்திற்கரையைப்போல விளங்கிற்று. தம்மிடத்தே விருப்பமிகுந்த கணவருக்கு வெல்லப்பாகின் சுவையைப்பார்க்கிலும் சுவைமிகுந்த சொல்லைப்பேசும் செவ்வாயையுடைய பெண்கள்மேற் போர்வையிட, அதனுள்ளே அவர்கள் ஆருயிரைவருத்த ஒளித்துக்கொண்டிருக்கும் எமனோ தானணிந்திருக்கும் முத்தினொளியால் முழுநிலாவைப்போலச் சந்திரிகைவீச ஆபரணங்களிற் பதிந்திருக்கிற மணியின்வரிசைகளால் இளவெயிலைப் பரப்பும். இதுகிடக்க; வில்லையுடையாரும் வாளையுடையாரும் பூமாலைமுதலியவற்றினால் மணம்வீசுஞ்சிகையையுடையாரும்மலையைவென்று உயர்ந்த பொன்னாலாகிய வாகுவலயமணிந்த தோளையுடையாருமாகிய மாந்தர்கொடிபோன்ற தங்கள் மனைவியர்பக்கத்திலேவர பிடியானையைத்தழுவிய களிற்றியானையைப்போல நடந்தனர். மாதர்கள் ஏறிநடத்தும் கிங்கிணியணிந்த குதிரைகள் தங்கள்மேலே தங்கியிருக்கின்ற அன்னப்பறவைகளைப் புரட்டிக்கொண்டு வருகின்ற ஆறுகளைப்போன்றிருந்தன. பொன்னாரங்களைப் பூண்டிருக்கின்ற தனங்களையும் புரிசினையுடைய மெல்லியகூந்தலையுமுடைய பெண்கள் மின்னலைப்போன்றிருக்க இளமையான பிடியானைகள் மேகங்களைப் போன்று விளங்கியிருக்கும். மணமமைந்த புதியமலர்கள் மேகத்தாற் சூழப்பட்டாற்போல நெருங்கிய கூந்தலையுடைய மாதர்களுடைய முகமாத்திரம் விளங்குவதனால் பலமுழுமதிகள் ஏறிவரும் விமானங்களைப்போல அவர்களேறிப்போகும் சிவிகைக்கூட்டந் தோன்றாநிற்கும். பட்டத்துயானைகள் மதமயக்கமடைந்து மதமழைபிழிவதனாலுண்டாகிய சேற்றைக்கடவாமல் அலைகடலைப்போல முழங்கும் மூக்கையுடைய துதிக்கையைத்தூக்கி அசைப்பது திக்கயங்களைப் போர்க்குத்தேடுவதை யொத்திருக்கும். குதிரைப்பந்திகள் கிங்கிணிமாலையோடும் தாளவொத்தோடும் தாவியிருந்தாலும் தெய்வத்தன்மைபோலவும் புறத்திற்சேர்ந்தும் அகத்திற்சேராத கச்சையணிந்து தொய்யிலெழுதிய தனங்களையுடைய உருத்திரகணிகையர் மனம்போலவும் பூமியின்மேல் மிதியாமலிருக்கும். சிலர் பனத்தினால் ஊடியிருப்பாரும், அதுவெளியே தோன்றப் பொருந்தாதபார்வையுடையாரும், பெருமூச்செறிவாரும், நெறித்த நெற்றியையுடையாரும், இதழ்விரிந்தமலர்மாலைநீங்கிய கூந்தலையுடையாருமாய் தங்கணவருக்கு உயிரேபோல அவர்களருகிலே நடந்துசெல்வர். அருவியைப்போல மதம்பாய்கின்ற கன்னத்தின்தொளையில் குத்தும் இருப்புமுட்போல்

அனலைச்சொரியும் கண்ணையுடைய யானைகள் பகையென்றெண்ணி மலைகளை மோதிப் பெருமரங்களைக் குறைவுபடும்படி இடையிலேயொடித்துவிட்டுச் சாய்த்து உராவிச் சரயுநதிபோலச்செல்லும். துன்பத்திலழுந்திய எல்லாவுயிர்களுக்கும் அருளாகிய ஊன்றுகோலாகிய சக்கரவர்த்தி தன்னிருக்கையினின்றும் எழுந்திராமல் அவன் ஆக்கினையாலெழுந்து உலகமெல்லாம் உழுந்திட இடமில்லையென்று சொல்லும்படி நெருங்கி அயோத்தியா நகரத்திற்கும் மிதுலைக்கும்மத்தியிலேசெல்லும் சேனைகளின் முதலணிபோய்க் கொடிகளையுடைய மிதுலாபுரியிலே கூடியது ; அலங்காரநிறைந்த பண்டிகள் பரிசைபோலசையயாதுசெல்லுவன கண்டோர் கண்கவருமாசையால் கட்டுக்கொள்ளத்தோன்றுகின்ற தேனுண்ண வண்டுகளடர்ந்த கூந்தலையுடைய மாதர்கள் முகக்கூட்டத்தால் தாமரைதடாகம்போலும் ஒத்திருந்தன. பண்டியில்வைத்த பதுமைபோன்றவொருபெண்ணொடு ஒரிளையான் அன்புடையானாய்ச் செல்பவன்இடைவழியிலே அப்பாவைநோக்கலும் நோக்கியகடைக்கணின்கருமைஆண்டன்மையுடைய அவ்விளையோனுக்கு இனிமையுடையதாகிய அமுதம்போலாயிற்று. பின்னும் வலையிலகப்பட்ட மான்கன்றினோக்கம்போலு மருண்டநோக்கத்தையுடையாளைவிட்டுப் பிரிந்துபோகின்றவனாகிய ஓர் தலைவன் மருதநிலத்தில் அன்னமாகிய பறவையையும் அது ஏறியிருந்த தாமரையையும்பார்த்து உள்ளமுந்தானுமேயிருந்து அவளைத்தேடிபோவதும் வருவதுமா யூசலாடிவருவான். இப்படி அரசர் திரண்டுநெருங்கியிருக்க, மேககர்ச்சனைபோலுஞ் சங்கங்களும் பேரியும் முழங்க, சேனையானது வெண்பட்டுக்குடைகளும்சாமரைகளுங்கவிதலாற்கங்கையை யொத்திருந்ததுமன்றி, தேவர்கள் அஞ்சுகின்ற அத்தெய்வத்தன்மையுடையமாதர்கள்தம்முடையகண்ணென்றுசொல்லும் உயிரைக்கவருங் கூர்மையுள்ள முனையமைந்த யமன் கைவேல்களை ஆடவருடைய மார்பிற் புதையும்படி செய்வதனால் யுத்தபூமியை ஒத்திருந்தது. தூண்கள் நெருங்கினாற்போலப் புயங்கணெருங்கின ; மின்னல்கள் நெருங்கினாற்போல வாள்கள் நெருங்கின ; தம்பினெருங்கினாற்போல கால்கணெருங்கின ; சிங்கங்கள்நெருங்கினாற்போல ஆடவர்நெருங்கினர். கச்சுவிரும்பியடையும் தனத்தில்வைத்தகண் வாங்கிடப்பேராமல் அதனால் விளங்கும்முகத்தையுடையவன் வழிதெரியாது குருடரேபோற்சென்று ஒரு வலியமைந்த யானையை முட்டியும், சுழிகள் வாய்ந்து தாவுமியல்புடைய குதிரைதுள்ள அதினின்றும் தவறிவிழத்தொடங்கியமயிலன்னசாயன்மங்கையொருத்தியைத் தூணன்னபுயத்தால் எடுத்தேந்தி அதினின்று மொழியாமலும் தரையிலும்வையாமலுந்தாங்கியிருந்தும், தாமரைமலர்போன்ற இரண்டுபாதங்களும் நோவத்தொடர்ந்து போர்செய்யுங் கணைபோலுங்கண்ணையுடையஒருத்தியையோரிடபத்தையொத்த நடையையுடைய ஒருவன்விருப்பத்தைத்தரும் பருத்ததனமாகிய யானையைக்கட்ட இப்பெண்ணிற்கு மார்பின் பாப்பில்லையென்றும், சுழித்துமுடிந்த மயிர்முடியில் வண்டுகள் சத்திக்க மதயானைமேற் பவனிவருமொருவன் தன்னைநோக்கிய ஒரு மாதின் விழியைநோக்கி இவை மிகக்கூர்மையுடையனவென்று மதித்துத்தன் கையிலிருக்கும் வேலைநோக்கியும், அலையின்சுருளையொத்துச் சுருண்ட நீண்ட

கூந்தலையும் தாமரைமலர்போன்ற பாதங்களையுங் கருங்கண்ணாகிய வாளையு முடையாளை ஒருகாலை வளையலையணிந்த நீண்ட தோளையுடையீர் மற்றை யுறுப்புகளெல்லா மொருமிக்க விருக்க இடையைமாத்திரம் எங்கே மறந்து வைத்தீரென்றும், ஒருவள்ளல் எமனது கொலைபோலும் கொலையையுடைய கண்ணினாலல்லது வாயினால் ஒருசொல்லையுஞ்சொல்லாத ஒருபெண்ணை ஆற்று நீரில் அழகியகையாலெடுத்து அக்கரையேற்றுவார் யாரோவென்றும் கடக்க, மற்றொரு புறத்தில் யாவராலுங் கொண்டு சொல்லக் கூடாத பாரங்களைச் சுமந்துசெல்லும் ஒட்டைகள் இதயம் உலர்ந்தாற்போலத் தங்கள்வாய்கள் உலர்ந்தும், கள்ளுண்மாக்கள்போலக் கைப்பாகிய வேம்புமுதலிய பொருள் களைத்தேடாமல் தேன் கரும்புமுதலிய இன்சுவையுள்ள பொருள்களையே தேடியுண்ணவும், சிவந்தகண்ணும் இருள்திரண்டாலொத்த காட்சியுங்கறுத்த மேனியுமுடைய பப்பார் இரும்பைத்திருத்தும் சம்மட்டியைத் திண்ணிய கணையத்தோடு பிடரிலேந்திச் செல்லும் மயக்கத்தையுடைய யானைகளைப் போல்தோளிற் சுமந்தகாவடியோடு செல்லவும், மயக்கத்தையுடைய ஒரு மத யானை பாகனோடு மாறுபட்டு பிடியானைமேல் கையைவைக்க அதனால் அப்பிடி யானைமேல் ஏறியிருந்தமாதர்கள் பயப்பட்டு மூடிக்கொள்ளத் தங்களுக்கு இர ண்டுகுடங் கைகளிலும் தங்கள் கண்களடங்காமையால் மிகவுஞ்சோர்ந்து துன்பப்படவும், மேகலாபரணமணிந்த பெண்கள் கூட்டத்திற் சிந்தர்களும் தாமரைக்காட்டில் ஆமையின்மேல்வரும் தேரையைப்போல வால்பூமியின் மேற்படிகின்ற பிடியானைமேலேறிப்போகவும், கம்பத்திற்கட்டப்பட்டனவாய் மதிமருண்டு முன்னங்கால்களைவளைத்துஒருபூங்கொம்பன்னவளைச்சுமந்து ஒரு குதிரையோடவும், அப்படியோடுவது இக்கிலவுலகத்திலிருக்கத் தகுதியுடை யவளல்லள், இந்திரனுக்கே தகுதியானவளென்று தெரிவிப்பதை யொத்திருக் கவும், எமது பெருமானாகிய சிராமபிரான் ஈசன்வில்லை முறித்தானென்று சொல்லப்பட்ட சுபசரிதத்தை ஆடவர்கள் பேசிக்கொண்டிருப்பது கேட்டு அவிழ்ந்து விழுகின்ற மயிர்ச்சாந்துபூசிய கூந்தல்களை யேந்தாமல் சிக்குண் டறுந்துபோய் மணிகள்சிந்தும் மேகலையையுமெண்ணாமல் மனங்களித்தோட வும், அரசனுடைய தலைவாயலிற் கட்டப்பட்ட யானையினையும் மாதர்களையும் முழுதும் அடையப்பயந்த அந்தணர்கள் குடையையுடையாராயும் கமண் டலம் சிக்கத்திலுடையாராயும் குந்திய நடையையுடையாராயும் காசி மேல்வைத்து மூடியகையைத் தொங்கவிடாதாராயும் முன்னேசெல்லவும், மலர் மணம்வீசுங் கூந்தலையுடையமாதர்கள் தங்கள் கணவர் தம்மைவிட்டுப் பிரிந்ததனாலுண்டாகும் துன்பத்தினால் அவர்கண்களிலிருந்துண்டாகும் நீரூற் றில்கோ அக்கணவர்கள் வடிவந்தோன்ற அதைப்பார்த்து என்னிடத்திற் பகைகொண்டுபோய் இப்போது நெருங்கவந்தமையால் தேர்மேலேறென்று கைகளைத்தாழ்த்தியும், ஆரவாரத்தோடு செல்லும் தேர்களும்யானைகளுங் குதிரைகளும் வரிசையாகச்செல்லும் பேரிகைவாத்தியங்களும் நெருக்க மாய்ச்சென்று எங்குஞ் செவிபட முழக்கும் ஓசையால் அவ்விடத்தில் போவார் யாவரும் ஒருவரோ டொருவர் பேசுவது அறியப்படாமையால்

னமைபோல நடந்தும், பாந்தவடிவினதாகிய சிலம்புகளின் கூண்டுகளைப் போன்ற துகிலையும் மலர்த்தேன்நிரம்பிய கரியகூந்தலையுடைய கூட்டங்கள் காற்சிலம்புகள் சத்திக்கப்படுதனால் பலவகையானபறவைகள் கூட்டமாய்ச் சத்திக்கும் பொய்கையைப்போன்றும், தெள்ளியதிரைகளையுடைய திருப்பாற் கடலிற் பிறந்த திருமகளைக் கற்பினாலும் அழகினாலும்வென்ற மாதர் தாம் ஏறிச்செல்லும் வாகனங்களின் இருமருங்குக் கட்டிவிட்டிருக்கிற திரைச்சிலைச் சந்தின்வழியாய்ப் பார்க்கின்ற பார்வைகளைப்பார்த்து ஆடவர் கண்கள்மகிழ் வது யானைமதத்தைக்களித்து வண்டுகள்மொய்ப்பதுபோலவும், எழுமேகங் கள் சத்திப்பனபோல குதிரைகள்கனைக்க, அச்சத்தமே இனியவாத்தியமாக உயிர்மட்டும் உருவுகின்ற பார்வையமைந்து புகழினைப்படைத்த கருங்கண்ணை யுடைய மாதர்கள் காலின்கண் அணிந்திருக்கும் சிலம்புகள் உழையென்னும் இசைகள் சப்தித்தனபோலச் சப்திக்கவும், மண்களிக்கும்படி நடக்கும் பெண் களினுடைய கண்களாகிய வண்டுகள்போலமன்மதன் நமக்குப்போர்கிடைத்த தென்று மகிழக்கண்ட சில ஆடவர்கண்கள் களிப்படையவும், கருதலளவைக் குமரிதாகிய இடையையும், பவளவாயையும், கனிமொழியையுமுடைய மாதர் கள் கச்சினாற்கட்டப்பட்டுவிளங்கும் செவ்விளநீரினின்றும் உதிர்ந்த சுண்ணப் பொடிகள் அவ் வெளியெங்கும் நிரம்பி, துகளு மடர்ந்தும் சித்திரத்தடங் தேருர்ந்து செல்லுமாடவரும் மாதரும் அறிவினை யொரோவழியாகச்செலுத் திப்பேசவும் நினைக்கவும் அளவில்லாதவர் எவ்வளவோ, இப்படிபலபேர் மேற் சொன்னபடி நெருங்கிக்களித்து வழிக்கொண்டு முன்னடப்பாராயினர். இது கிடக்க;

பிடர்மயிருள்ள குதிரைகளும் தேர்களும் வீரர்களும் அவ்விடமெங்குங் கூடி காலிசைத்தலோடு விரைந்துசெல்ல, மிகுந்த தூளிப்படலம்பெருகி மேகத்தின் ஈரமமைந்த துளிகள்வருகின்ற உலராததொளைகளை யடைத்து எல்லாத் திக்கயங்களின் மதத்தொளைகளை உண்மையாகத் தூர்க்கும். ஆட வர்கள் கேடயத்தைப்பிடித்தகையால் வாளையும்பற்றிப்பிடித்துவளையலணிந்த கையையுடைய தமது மனைவியரை மற்றைக்கையால் மெல்லப்பிடித்துப் பொற்பட்டமணிந்த யானையின் மதநீரினாலான சேற்றுவழியில் அவர்கள்பாடக மணிந்த கால்களால்நடக்கும்படிசெய்து கொண்டுபோவதும், வயலிலும் நீர் நிலையிலும் நல்லநீரைக்கட்டிய இடங்களிலும் பூத்தநெய்தன்மலரும் குமுத மலரும் செந்தாமரைமலரும் முறையே கைகளினழகையும் முகத்தினழகை யும் வாயினழகையுங் காட்டக்கண்டு அவற்றைப்பறித்து தாருமென்று தமது கணவரைக்கேட்பவரும், பந்திபந்தியாய்ச்செல்லுங் குதிரைகளினின்றும் இழி ந்தமாதர்கள் யானையருகேவந்து விட்டதென்று கண்டோர் சொல்லக்கேட்டு வாசனையுள்ள பூங்கொத்தணிந்த கூந்தல்சரியவும், இரத்தினாபரணங்கள் சிதற வும், அழகிய ஆடைகள் அவிழ்ந்துவிழவும் தாம் உடுத்திருந்த மெல்லிய ஆடையை தளிர்போன்ற கைகளால் அணைத்துக்கொண்டு மயிலினது கூட் டங்கள் ஓடிப்போவதுபோலச் சிதறியோடவும், குடைகளும் யானைகளும் பிலிக்குஞ்சக்கூட்டமும், கோடிக்காடும் இடையிடைகலந்து எங்கும் வெள்

ளிடையின்றி மறைத்து இருள்செய்யும். ஆயுதங்களும், முடிகளும், ஆபரணங்களும் பரக்ககிரணங்களைப்பரப்பிச் செல்லுவதனால் அங்கே யடிக்கடி இரவும் பகலுமுண்டாக்கும், முருக்கப்பூவையொத்த இதழையும் முத்த நகையையுமுடைய மாதர்கள் முகங்களென்று மதிக்கப்படுகிற தலிலணிந்த ஸ்ரீதேவியென்னுந் திருக்கோலத்தையுடைய தெய்வலுத்தியென்னும்மணியானது தாமரைமலரில் திட்டப்பட்டனவாய் மாறிக்கிடந்த சூரியவாட்களின்கூட்டத்தை இடையிடையே யறுக்கும், நீங்கள் நீங்குங்கோள் நீங்குங்கோளென்று சொலலித் தூரத்தேபோவாரும் உண்டு. கடப்பதற்கருமையான நெடியவழியில தங்கள் ஆபரணங்கள்சுருங்கி அறுந்து சிந்திப்பிரகாசிக்கும் கூட்டமாகியமணிகளும், முத்துகளும், கலாபம் சூழ்கிடக்க அணிந்த பாமபின்படம்போன்ற அல்குலையுடைய மாதர்கள் தங்கள் காற்சிலம்பு கலீர் கலீரென்றுசத்திக்க, பசும்பொனாபரணமணிந்த தளிர்போன்றபாதங்களில் உறுத்தமயக்கமடைந்து போவது அருமையென்று நிற்பர். வெற்றியமைந்த பலவாத்தியங்கள் மேகங்களைப்போல் எங்கும் குமுறுவதனால் பண்டியிற்பூட்டப்பட்ட எருதுகள், அன்னப்பறவைகளைப்போல மாதர்கள் பயப்பட்டு நீங்கக்குறைவில்லாத பாரமானபொருள்களெல்லாவற்றையும் தம்மைக்கட்டிய கட்டோடு சம்பந்தமொழிய முறைமுறையாக நீங்கிப்போய், இல்லொழுக்கத்தின் முயற்சிகளாகிய பாரமனைத்தும அவற்றில்வைத்த அவாவொடும் இருவகைப்பற்றற்று முறைமுறையாக விட்டுவிட்டு வருத்தந்தணந்த யோகிகளேபோல வருத்தந்தணந்தன. மலைபோன்ற யானைகள் பாகருடைய வில்லினுல் விடப்படும் மிக்கவேகத்தையுடைய உண்டையைச் சிறிது மறியாமலும் நோணயைப்பற்றி யேறாமலும் சிறையாகிய கச்சிலைகப்பட்ட தனமாகிய மத்தகங்களும் தந்தங்களும மேற்புறத்தேவிளங்க, முன்னொளில் திருப்பாற்கடலிற் றோன்றிய பணைக்கைபடைத்த ஐராவதமெனனுந் திசைக்களிற்றைப்போலும் நீர்மேலநின்றும், கருமணலபோலுங் கூந்தலையும் கண்களாகியவாளையும் சொல்லாகிய தேன்சிந்தும் செவ்வாம்பல்போலும் செவ்வாயையுமுடைய விறலியரோடு நல்லயாழைவாசிக்கும் செயிரியர்குதிரையையூர்ந்துகொண்டு கின்னர மிதுனப்பறவைபோன்று தேனைப்பெய்வதுபோல் பாடுகின்ற குளிர்ச்சிமிக்கமேகராகக் குறிஞ்சிப்பாட்டைப் பாடுகின்றவர் காதுகளில் பொருந்தும்படிசென்றும், மதமயக்கங்கொண்ட சிவந்தகணணையுடைய யானைகள் அருவிபொழியும் மலைபோலும் மதசலம்பொழிந்து, தம்மைக்குத்தும் அங்குசம் வளைவுசிமிரச்சென்று மாந்தர் சிதறியோடும்படி யெங்குமோடுவதனால் தம் மதசலத்தில் மொய்த்திருந்த விரிந்த சிறகினையுடைய வண்டுகள் வேறோர் யானையினது மதசலத்திற்படிந்துண்டு, மாதரார்கரிய கூந்தலின்கண் மொய்க்கும்படி வேறு பிடிகளோடு தொடர்ந்துசெல்லும். சோடசகலைகள் நிறைந்த சந்திரோதயத்தைக்கண்ட நீனிறக்கடலபோலுங் கொட்டும் பேரிகைமுதலிய தோற்கருவிமுழங்க, தேரும் யானையும் குதிரையும் பகைவர் குருதிதோய்ந்த வேற்படைபோலும் விழியையுடைய மாதரும் ஆடவரும் அழகுபெறக்கூடி விரைந்துசெல்ல, சக்கரவர்த்தி பட்டமகிஷிகளில் தடாகத்திற் பூத்த தாமரைக்காட்டில் விளங்கும் அன்னப்பறவையென்ன ஆயிரம் பாத்

தையர்சூழ மணியிற்குயின்ற சிவிகையையூர்ந்து அரம்பை மடவார் சானுட்கொள்ளக் கைகேசியும், கோவேறு கழுதைகளின்மேலேறிச் செவ்வரிபடர்ந்து குவளைமலர்போலுங் கண்களையுடைய இரண்டாயிர மாதர் தன்னைச்சூழ்ந்துவரச் சிவிகையிலேறிச் சுமத்திரையும், பலமணிகள் குயின்ற சிவிகையிலேறிக் கோசலையும் ஒருபுறஞ் செல்வர். அமுதக்கேள்வி பலமுறை கேட்டுத்தெளிந்த சிந்தையுடையாரும், தேவாகள் காவில் ஆகுதியைத் தங் கையாலளிக்கும் பெருந்தவமுடையாருமாகிய பலமுனிவர்பலர்புடைசூழ வசிட்டமுனிவர் சிவிகையிலேறிப்போவர். யானைகளும், குதிரைகளும், தேர்களும், காலாட்களும் கடல்பெரியமலையைச்சூழ்ந்து நெருங்கினாற்போல இருபுறத்தும் பரம்ப, திருமாமகள்வளரும் மார்புடையாரும் கடவுட்டன்மையுடைய வில்லினையுடையாருமாகித் தேரூர்ந்து செல்லும் வீரர்களாகிய பரத சத்துருக்கர் விசுவாமித்திர முனிவர் பின்னடந்த சிராம லக்குணரைப்போலப் பிரியாமற்போதருவர். முத்துமாலை வச்சிரமாலை மோகனமாலைமுதலிய ஆபரணமணிந்து சக்கரவர்த்தி ஆயிரமௌலி யமலனனந்தனடிமலர்பணிந்து வாழ்த்தி அனுட்டான முடித்துக்கொண்டு வரம்பிலலாதமணியையும பொன்னையும் வரிசையா யமைந்து கிடக்கும் பசுக்கூட்டங்களையும் தானஞ்செய்து சுபமுகூர்த்தத்தில் புறப்பட்டுப்போயினன். அத்தருணத்தில் எண்ணாயிரம்பேர் மணிக்கலசமேந்தி வேதமந்திரமுச்சரித்து அறுகம்புலலால நீரைத்தூவிக்கொண்டு வரலாற்று முறைமையாய் எதிர்வந்தனர். மழலைச்சொற்படைத்துப் பருமணி குயின்ற கலாபமுடைய ஒருகோடி சுமங்கலியப்பெண்கள் பல்லாண்டுபாடிக்கொண்டு வந்தனர். இவ்வாறு செல்லுஞ்சமயத்தில் அரசரிற் சிலா என்னைக்கண்டானில்லையென்பர், சிலர் என்னைக்கண்டானென்பர், சிலர் காதிலணிந்த குண்டலம் வீழ்ந்ததென்பர், சிலர் இனிச்சென்று குறுகுதலோவரிதென்பர், சிலர் புறப்பாடுண்டோவென்பர், சிலா சங்கவாத்திய முழக்கங்கேட்டோமே யென்பர், சிலர் மண்டலத்தையாளும் அரசர்களெல்லாம் மயங்க நெருங்கினரோ யென்பர். சக்கரவர்த்தியோ சங்கமுழங்க வேய்ங்குழலூத வூதுகொம்பும் பேரிகையுயொலிபடப் பீலிக்குஞ்சங்களும் நடைகளும நிழலைச்செய்பச்சென்ற இவ்வைபவங்களை எலலாம தேவர்கள்கண்டு மயங்கித் தேவேந்திரனோ பூமண்டலத்திற் செல்கின்றானென்று எண்ணிக்கொள்ள, இரண்டுயோசனை தூரஞ்சென்று பொன்மலைபோலிருக்கும் சந்திரசைலமென்னும் மலையையணுகினன். சேனைசமுத்திரமு மிறங்கிற்று.

எழுச்சிப்படலம்

முற்றிற்று.

---

## வரைக்காட்சிப்படலம்.

யானையொன்று வஞ்சனையில்லாமல் அடங்காதபகைவனை வென்று மறப்
பென்பதே இடம்பெறாத அறிவினையுடையானது ஆராய்ச்சிபோலத் தான்
வாரினாற் கட்டுண்ட பிணையையும் மராமரத்தினது வளாரையும் வேருடன்
பிடுங்கிக்கொண்டு மலையெனநடந்தது. திரண்டபாராளைபடர்ந்த பனைகளைப்
படைத்த மருதமரங்கள் முறியும்படி பின்றொடர்ந்துவர, உரலோடு அம்மரங்
களுக்கிடையேசென்ற கண்ணனேபோல, இரண்டுமாமரங்கள் ஒருங்கேமுறியும்
படி உருண்டு பின்வரும் காலைத்தொடர்ந்ததறியுடன் அம்மரங்களுக் கிடையே
நடந்தது. கோபத்தை யாற்றத்தகுந்த இனிய குறிப்புரைகளைச் சொல்லிப்
பக்குவத்திலிசைந்துவர நடத்துகின்ற பாகனை அமைச்சனையொத்திருக்க,
யானையொன்று பலவகையால் ஏற்கும்படி அவ்வமைச்சன் பலநீதி நூற்களி
னின்றும் மெல்லென வெடுத்துக்காட்டும் உறுதிமொழிகளை யேற்றுக்கொள்
ளாத அரசனையொத்திருக்கவும், பகைகாண்பதாகி நின்று மேகம்போலமுழங்கி
இருப்புமுள் பாயும் யானையொன்று வனக்களிறுசென்ற வழியைக் கரத்தாற்
பரிசித்துக்கொண்டு பருந்துகள் பின்றொடர்ந்துவரக் காற்றேபோல் முன்னே
போராறுசென்ற வழியிலேயே போகின்ற ஆற்றினையொத்துப்போயிற்று. மற்
றொன்று அணியணியாக வகுத்துக்கட்டிய யானைவரிசையில் மிக்கமதநாற்றம்
வீசத் தன்னைக்காத்திருந்த பாகன் கையங்குசம் திமிர மணத்தைவிடாது
மோந்துசென்று ஏழிலைப்பாலையென்னும் மரத்தைப் பொடிப்பொடியாக முன்
னங்காலால் தேய்க்கவும், அளவில்லாத வலிபடைத்த அநேக மதயானைக
ளும் அவற்றோடுநெருங்கிய திலகமணிந்த பிடியானைகளும் கன்றுகளும் அடர்ந்
தும்போயின. அவ்வா றடர்ந்திருப்பது கொம்புகள் நீண்ட காட்டின்கண்
யானைக்கூட்டத்தையே யொத்தும், அச்சந்திரசயிலம் அதை நடத்தும் யூதத்
தலைவனையே யொத்தும் விளங்கின. இது நிற்க;

அறியவேண்டுவன வெல்லாமறிந்த மேலோர் அறிவில்லாத கயவரைச்
சேரினும் அவருடைய மயங்கிய இழிந்த குணத்தைத்தவிர்த்து மேலாய குண
முடையாராகச் செய்வதே இயற்கை, ஆதலால் அவ்வீதிதோறும் செல்லு
கின்ற தேர்கள் சக்கரங்களா லுருண்டு சென்றவிடமெல்லாம் பொன்னை
யுரைத்துரைத் தோடிச்சென்று கருங்கற்பாறைகளையும் தன்னிறமாகச் செய்
தனவெனின், அத்தேர்களின் மிகுதியைச் சொல்லவேண்டுமோ? இவ்வாறு
தேர்களூர்ந்து செல்லவும், கொவ்வைக்கனியினது அழகினையுடைய வாயினை
இந்திரகோபத்தைக்கவ்விய அழகினையுடையனவென்றே காட்டின்கணுள்ள
கூட்டமாகிய மயில்கள் மான்போலும் மருண்டபார்வையுடைய மாதரார் நன்
மைமிக்க மேகலாபரணத்தி னழகினையும் அழகிய சாயலினழகினையும் நோக்
கத்திரிகின்றனபோலத் திரிந்தன. ஒருபுறத்தே குதிரையினின்று மிழிந்தா
ராய் அன்னப்பறவைபோல நடந்து தழைநிரம்பிய மெல்லியமரங்கள் நிழலுண்
டாய் நிறைந்தவிடத்திலே புகுந்த மாதரார் தம்முடம்பி லணிந்த மணிக்
கோவைகளாலாகிய கலாபமும் முலைகளும் பிறவணிகளும் பிரகாசிப்பதனால்

மலர்ந்த பூங்கொம்பைப்போலத் தோன்றினர். சிலமாதர் வழியின்கண் வருந்தினவராய் இதழையுடைய தாமரை மலரொன்றென்றெண்ணித் தளிர்போன்ற மெல்லிய சிவந்த பாதங்களிலும் முகத்திலும் தேன்வெள்ளத்தைக்கொள்ளும் வாழ்க்கையையுடைய வண்டுகள் மொய்த்துச் சுழலவும், விளங்கும் தம்முருவம் ஓர் பளிக்குப்பாறையில் உபசாரஞ்செய்யவந்த தமது பாங்கியர் சிறிதும் துணியாமல் சந்தேகப்படவும் கண்வளர்ந்தனர். மின்னலொடுகூடி விளங்கும் மேகங்கள் பூமியிற் படிந்தாற்போல பிடிகள் புகுந்து பூமியிற்படியக் கொடிபோன்ற மாதரார் உடுக்கையை உவமைபாகப் பெற்ற இடையையுடைய திருமகள் தன்னிருக்கையாகிய செந்தாமரை மலரை நீங்கிக் குடிபுகுந்தாற்போல, அப்பிடிகள்மேலிட்டு விரித்த செம்பட்டுத்தவிசைத் துறந்து பாதங்கள் நடந்தால் கன்றிப்போய்விடுமேயெனக் கிண்கிணிகள் புலம்ப நடந்து குடிபுகுந்தனர். உண்ணுதற்கரிய உணவுகளை யுண்பித்துக் குமாரர்களால் நகரத்தினின்றுங் கொண்டுவரப்பட்டும், கேட்டோர் நெஞ்சமஞ்சும் முழக்கத்தை யுடையனவும் துருக்கர் கொண்டுவர வந்தனவுமாகிக் கல்லணை யமைந்து வெற்றிமேற்கொண்ட குதிரைகளை நிலமகளினது மார்பிலணிந்த பலவகை நிறமுள்ளமணிகளாகிய சரப்பணிபோல முறைமுறையாக நிறைத்தனர். அலைகள் நிரைக்கப்பட்டனபோல நீண்ட திரைச்சீலைகளை நிரைத்தனர். கடல்கள் நிரைக்கப்பட்டனபோல அங்காடிக்கடைகள் நிரைத்தனர். மேகங்களின் வரிசையேபோல யானைகளைச் சோலைகளினிடத்தே நிரைத்தனர். காற்றினை நிரைத்தாற்போலக்குதிரையை நிரைத்தனர்.

நடிக்கின்ற மயிலைப்போல வருகின்ற மான்போலும் மருண்ட பார்வையையுடைய மாதராரும், வடித்தவேலையுடைய வீரரும் மயங்கித்திரிந்து இடியைப்போலச் சத்திக்கும் முரசவாத்தியத்தின் ஓசையாலும், எங்கும் பரவச்சத்திக்கும் சங்கவாத்திய வோசையாலும், கொடிகளினாலும் அறிந்து தத்தம் அரசர் மாளிகைகளை யடைந்தனர் கால்கள் மிதித்து நடப்பதனால் எழுந்த தூளிப்படலத்தால் பொலிவிழந்த சரீரத்தில் அமுதத்தினிடத் துண்டாகிய நுரையைப்போன்ற மெல்லிய வெண்டுகிலால் இளங்குமரர் சுத்தமாக அத்தூளிப்படலத்தை யுதிர்த்ததனால் ஓவியரேபோலச் சித்திரங்களைப் புதுக்கினார்களென்று கண்டோர் சொல்லும்படி இளமாதரார் குற்றமொன்று மின்றித்தோன்றினர். மலையினின்று மிறங்கித் தரையிற்சேரும் பேராற்றலையுடைய சிங்கவேறுபோல, முன்னங்கால்களுயர்ந்த யானைகளின்மேலேறிய அரசர்களிழிந்து விரிந்த கமுகம்பாளையை யொத்துலவும் சாமரைகளின் காற்றுத் தம்மிருமருங்கும் படப்போய் ஒளிவிச முறைமைப்படவமைத்த படத்தினாற் செய்த வீடுகளிற் புகுந்தனர். தூசினோடு வெண்படத்தாலமைத்த சிறுவீடுகடோறும் மாதரார் இயற்கை மணமமைந்த புன்னகையொடுகூடிய முகங்கள் மேகமுலவிச் செல்லும் ஆகாயத்தில் தங்கியிருக்கும் சந்திரனுடைய கிரணங்களுக்கொப்பாக வழங்கும் ஒளியால் அக்குடில்களுக்கு எப்புறத்துங்கட்டிய திரைச்சீலைகள் வெண்மையாகிய நீரைவிழுங்கியதொத்திருக்கும் மண்ணிற் பொருந்த விழுந்து நீண்டவாளைப்பொருந்த நிமிர்ந்து தன்னுடம்பின் கரிய

நிறத்தை முழுதுமறைத்த வெண்ணிறமாகிய நறிய பொடியை உதறிவிட்டு
ஒருபாகத்தில் ஒருபுறத்தே வெண்ணிறமுள்ள நறியபொடியை உதறுமலை
தரித்த மதயானை நெற்றிமேலொற்றைகாட்டமுடைய பரமசிவன் தன்திரு
மேனியி னொருகூற்றிற் பொருந்த வருகின்ற கன்னனைபோல வாநிற்கும்.
ஒள்ளியபாய்பரிகள் இயவரோடு நட்பமைந்த நிறத்தினையுடைய நல்லறிவுடை
யோர் அதிபார்குணைச்செயலையாராய்ந்துணர்ந்தாராய் அக்கணமே அவரைத்
துறந்தாற்போன்றுபொருந்த வரும் நுண்புழுதியிற் படிந்து புரண்டெழுந்து
விரைந்துஉதறிநிற்கும். விழுந்த பனிபோன்ற நுரைச்சிலைகளை நீளக்கட்டியிருக்
கும் குடிலகளிலெல்லாம அம்மனை கழங்குவிளையாடும் மாதரார் கருங்கண்
கள், அணியாகவமைந்து கிடக்கும் ஒலிகடலின் எறிகின்ற அலைகளில் துள்ளித்
துள்ளி அவற்றிற் பிறழ்ந்தொளிரும் கொழுங்கயன் மீனைபோல விளங்கித்
தோன்றும். தெண்ணீரையுடைய ஆறுகள் அங்குசேனையை யிறுத்து நின்ற
அரசர்களுக்கும் அவர்கள்பரிவாரங்களுக்கும் வெள்ளநீரை மிகத்தந்தனவேனும்
தொண்டச்சுரக்கு நீரையும் சிறிதே யுதவாநிற்பதனால் இரப்பார்க்கு உற
வினைப்போல் விழைந்து தம்பாலுள்ள பொருளை மறுக்காமல் உபகரிக்கும்
வள்ளற்றன்மை யுடையாரையும் ஒத்திருக்கும். நெருங்கி நெறித்த சிகை
புறத்தே யசைய அழலினொடு மின்னல் திரிவனபோல மணியாரங்க ளசைந்து
கிடக்கும் மார்பினையுடையார் மன்றல் மணநாறுகின்ற படத்தினலாய வீடு
களில் மலைத்துவாரத்திலுள்ள முழைகடோறும் நுழையும்பேராற்றலையுடைய
சிங்கங்களேபோல நுழைந்தனர். தந்தங்கள் வேல்களொத்துச் செம்மயினை
யொத்த இங்குலிகத்தால் நெற்றியிற் பூசப்பட்ட பெருங்களிறுகள் போர்க்
குரிய மணிகள் ஆரவாரிக்க அலையொடுகூடிய நீரைக்கலக்குதலால் பெரு
மிதமான கடலைக்கலக்கிய மது கயிடவரை யொத்தன. தமக்கும் அவர்க்
கும் ஒத்திருக்க நன்னெறியிற் செலுத்தும் பாகர்சொன்ன குறிகளைக் கொள்
ளாதனவாயும் பக்கங்களிற் கூட்டமாக மொய்த்த கயன்மீன்கள் வருத்த
மிகமதியாதனவாயும் மதம்பொழியும் புழைக்கையையுடைய கரிகள் உலக
நடையையொத்திருக்கும்படி நன்னெறியிற்புகநடத்தும் அறிஞர்சொன்ன நல்ல
பொருளைக் கேளாதாரையும், கூட்டமாக நட்பினரும் சுற்றத்தாரும் நின்று
அபலவரு மிடித்துக்கூற மிகவு மதியாதாராய் விலைமாதரணிந்த மேகலாபா
ணந்தங்கிய அல்குலைவிழைந்து சேர்ந்தாரையுமொத்து நீளக்கவாயிலேறுமல்
நிற்கின்றன. துகில்புனைந்த இடையையுடைய மாதரோடு ஆடவர்நெருங்கி
அட்டிற்சாலையில் எரிமூட்டப் பரப்பிய அகிற்கட்டைகளினாலாகிய செழும்
புகை பரிதியொளிமழுங்கிக் கிடப்பக் கெடுதலின்றி யெங்குந்தோன்றியெழ
மேகங்கள் நீரைக்குறைபடுக்க இறங்கும் புயலினையே நிகர்த்திருந்தது அப்
பழமையாகிய ஊர். இது நிற்க ;

ஆங்காங்குப்பிளப்புறு மலையின்கண் வாழ்கின்ற வித்தியாதரர் காணவந்து
தம்மொடுவந்த உறவினரையும் அறிகின்றவராய்த் திகைத்து நிற்பர். அழகுமுத
லியவற்றின் பெருமைநிறைந்த குமாரர்களும் மாதர்களும் கூடியிருப்பதனால்
அச்சேனசமுத்திரம் இறுத்த இடமோ தேவர்கள் வசிக்கும விண்ணுலகம்

பூமியினிழிந்ததென்றே சொல்ல விளங்கிற்று. ஒருபுறத்தே முன்னாளில் துயிலுணர்ந்தெழுந்த கலத்தினையுடையாரும் அனியாகிய மிக்க வெறுப்பினையுடையாரும் என்றுகூறப்பட்ட இருதிறத்தாருமாகிய மாதரானெல்லாம் குயிலொடு பேசி கிலம்பொடுகூய் மயிலினக் திரிவதென்று சொல்லத் திரிவர். ஒருபால் ஆடவரெல்லாம் தம்முடைய தோள்களைப்போலுயர்ந்த அம்மலைகளின்வளங்களையெல்லாம் இனிமையாகப்பார்த்துச் சிங்கவேறு திரிவதுபோல இரண்டு பாதங்களிலும் வீரக்கழ லாரவாரிக்கவும், தாமணிந்திருக்கும் மலராலாய மாலைகளில வண்டுக ளார்ப்பவும், வாளிகள் இடையின் புடையேவிளங்கவும், செங்கிறம்படைத்த மணியாரங்களும தோளணிகளும் ஒளிவிசவும் திரிதருவர். உலகைச் சூழ்கிடந்த கடல்களெல்லாம் சுடர்கின்ற மணிகளையுடைய மகமேருமலையைக் கவர்ந்துகொள்ள வளைந்ததுபோலப் பாவிவங் திறங்கின. சேனைகளும் அங்குவந்து தங்கியிருக்கும் அரசரும் அவ்வரசர்மனைவியரும் அரசிளங்குமாரும் அரசிளங்குமரிகளும் அம்மலையின் வளங்காணத்தொடங்கினர். வானுலகையளாவி நிற்கும தருக்களில் ஓங்கிய கொம்புகளை நெருங்கிப் பெண் வண்டுகளும் மிஞிறுகளும் தும்பிகளும் பாந்திசையாடிப்பாடப் பருங்கையை நீட்டித்தளிரொடு மொடித்துக் கோட்டினையுடைய களிற்றியானைகள் தம்மாருயிரைப்போன்ற இளம்பிடிகளுக்குக் கொடுக்கும். பண்போல் இன்சொல்பேசும் பவளவாய்ச்சியர் குவளைமலர்போலுங்கண்ணையுடைய குறத்தியர்க்குவேங்கை மாங்கள் மணஞ்செய்பத்தக்க காலமிதுவேயென்னப் பூத்தலாகிய கணிதத் தொழிலைச்செய்யாநிற்கும். தான் தேனை கிரம்பவுண்டு மலர்களைவெறுத்த வண்டுகள் புதியதேனைச்சொரியும் புன்னைமாத்தின் நறுமலரை யடைய ஆகாயத்திலுள்ள தாரகாகணங்களிலே தாவாநிற்கும்.

தாராகணமென்னும் பிடிகளோடு தோன்றும் வெண்மதியாகிய மதகளிறு வளைவாகிய உயர்ந்த இருபாலினும் நுனியுள்ள கோடுகளை உயாநீட்டித் தேனிறாலைக் குத்துவதனால ஒழுகிப்பாய்கின்ற மடையினைத் தடுத்துத் தினைப் புனத்துக் குரவர் நீர்வளமுள்ள ஆகாயகங்கையைப் பாய்ச்சி மலைநெல்லை வளர்ப்பர். கடந்து செல்வதற்கு அருமையா யிருப்பதனால் மலைச்சாரலில் தங்கி முகத்திற்குவமையாகப்பொருந்த காணும் மதியாகிய கண்ணாடியில் குறமாதர் தங்கருத்திற் கிசைந்த அலங்காரத்தை யிருபாலுங் காண்பர். உதியாகிய துருத்தியினால் ஊதப்படும் உலைத்தீயும் வாயில அதிகமாக இடுகின்ற நீரும் பூசுதலைச்செய்ய நெய்பினையுண்ணுமே யாவிகவரும் கொதிநுதிவேற் கண்ணையுடைய குறமாதர் நெற்றியுடனே ஆகாயத்தில் தவழுஞ் சந்திரனைக் குறவர் முகத்தோடு உவமங்கூறலான் மதியோ டொப்புப்பார்ப்பர். சிறுகுடில்களின் முன்னிடங்களில் சிங்கக்குட்டிகள் அழகிய பிடிகளீன்ற யானைக் கன்றுகளோடு விளையாடும் முற்றத்தின்கண் கோணுதற்குரிய பிறைமதியும் குறமாதர் ஒள்ளியநெற்றியையுடைய மனைவியரீன்ற இளஞ்சிறாரோடுதவழும். வித்தியாதரரது அழகிய சிவிகையினுஞ்சிறந்த நீலமணிப்பாறையினும் தமது இயற்கையழிந்த கன்னங்களையுடைய யானைகளைக் கொன்றுங் கடுங்கோப மேற்கொண்ட சிங்கங்களினுடையகாற்சுவடுகளோடு அவ்வித்தியாதரமாதரது

செம்பஞ்சூட்டிய அழகிய பாதங்கள் படுவதனால் உளதாகிய ஈரமாகிய காற்சுவட்டை அமமலையுடைத்தாயிருக்கும். மாதர்கள் செங்கயல்போலும் கண்களின்பார்வை காதொடுபொருந்தாமலும், பற்கள் தோன்றாமலும், கூந்தலவிழ்ந்து விழாமலும், புருவங்கள் மேலெழாமலும், மலர்போன்ற அங்கையோசையும், குரலோசையும ஒருவழியே செல்ல யாழினாயமிசையைப் பொருத்திப் பாடக்கேட்டு கின்னரங்கள் பயங்கும். கணவ ராவிசோர, மையொடு கலந்து கண்ணினின்றும் தொடுமெனற் கேணியினின்றும் சுரந்து நீர்பாய, ஊடலினுற் சிவப்பேறிய கண்ணுராகிய அரமகளிர் தங் கூந்தலி னின்றும நீங்கிய இதழ்விரிந்த மந்தாரமலர்மாலை வாடாமல் தேன் நீங்காமல் அமமலையிட மெங்குஞ்செறியும். மாந்தளிரேபோன்ற மேனியையுடைய குறத்தியர் மந்தார மாலையணிந்து கூந்தற்கமுகம்பாளைகளைத் தங்கூந்தலோடும், ஆபரணம்பூண்ட அரமகளிர் பாரமென்றே கழற்றியெறிந்த எரியினிறம்படைத்த மணிக்கடகங்களை யெடுத்துக் காந்தண்மலரிற்பெய்து உவமைகாணவும், சில அரமகளிர் அம்புகள் பயிலும் வில்லேபோலப் புருவங்கள் தம்மில்துடிக்க யாழிசையோடு மாறுபடாமல் இனிமையாகப் பாடுவர், மயிலோடு நடிப்பர், வெறுத்து நீத்த மணிமாலைகளையும் முத்துமாலைகளையும் மாமரங்களிலிருக்கின்ற கடுவன்பூண மந்திகண்டு மனமகிழ்ச்சி யெய்துவ. சந்தனமரங்கள் தழைந்துசாய்ந்த மலைச்சாரல்கடோறு மிருக்கும் காவிக்கற்களிற்சார்ந்த கூந்தலையுடைய பிடிகளெல்லாம் குங்குமமணிந்தாற்போன்றும் ஒளியுள்ள மணித்திரளின்சோதி சூரியகிரணத்தொடு கலந்து மொய்ப்பதனுல் ஆகாயத்திலென்றும் செவ்வானம்போன்றிருக்கவும், நிலமகட்கணியென்ன முத்தை வரிசையாகச் சொரிந்து உயாதேவியை யொருபாலுடைய பரம்பொருள் முடிமேல் வந்துவீழுங் கங்கையையொத்திருந்தன. வரம்பகன்ற மிக்கபொற்றுகளால் நிரம்பிச் சந்தனத்தைச்சார்ந்து அம்மலையினின்று வீழும் அருவியின்மாலை உலகளந்த கள்ளமாயன் உத்தரியம்போல்விளங்கின. கிளைகளடர்ந்த புன்னைமலரோடு இலவங்க மலரையும் சேர்த்துத்தொடுத்துச் சூடுவோரும் உண்டு களித்து வண்டுகளையோட்டித் தூயதேனைப்பருகுவோரும இசைநூ லிலக்கண வரம்புகண்டு அதனுேடு மாறுபடாமற் குற்றமற்ற மகரயாழேபோலக் கின்னரமிதுனங்கள் பாடும்பாட்டினுல் ஊடல்தவிர்ந்த குதிரை முகம்போலும் முகத்தையுடைய மக்களைக் கண்டனர். இதுநிற்க;

பளிங்குக்கற்படுத்த இடமென்றெண்ணிப்பரந்த சுனையில் விரைந்துபுகுந்தவர்களாய் தாமணிந்த நுதலணியானது தாமரைமலர்போன்ற ஒளியமைந்த முகத்தினையுடைய மாதரது மேலுத்தரியத்தையும் இடையிலுடுத்த தூசினையும் குற்றமில்லாத அச்சுனைநீர்நனைக்க வீரக்கழலையுடைய வீரர்கள்கண்டுபளிங்குக்கற்படுத்த இடத்துக்கும் குற்றமற்ற சுனைக்கும் வேற்றுமையறியாராய் தங் கைகளி லணிந்திருந்த கடகங்களையெறிந்து தங்களுக்குள்ளே நகையாடுவர். ஒருபுறத்தே மலர்ப்பள்ளியையும், இந்திரகோபத்தின் செந்நிறம்படைத்த தம்பலத்தையும், ஒருபுறத்தே தம்முயிரினுஞ்சிறந்த இனிய கணவரைப்பிரிந்ததனுல் அறிவிழந்த வித்தியாதரமாதர் படுக்கவெண்ணிய தளிர்படுக்கையையும்

கண்டார்கள். நீலோற்பல மலர்போன்ற கண்பிறழவும், பவளம்போன்ற செவ்வாயின் நகைதோன்றவும், தனத்தி லணிந்த முத்துமாலைக ளசையவும், வண்டுகள் ஒலித்துக் கூந்தலிற்சுழலும், காதுகளிற் சிறந்த மணிக்குண்டல மசையவும், சில அரமகளிலாடும் ஊசலையும், சுவர்க்கலோக வாசிகளாகிய அவ்வரமகளிற் சிலர் சிவந்த இதழையுடைய பவளக் கிண்ணம்போலும் வாயும், பின்னர் வரம்பிலலாத சுரும்புகளும், வண்டும்,ஞிமிறும்,விலைமகளிர் வெறுத்துச் சிறிது பொருட்பசையு மில்லையென்று பற்றுவிட்ட ஆடவரையேபோல நீங்கிய இனிய கள்வார்த்திருந்த கிண்ணங்கள் பலகிடக்கவும், வில்லொடு பகைத்த நெற்றியையுடைய அரமகளிர் இரவைப் பகலாக்கும் ஒளியையுடைய பளிக்கறையிலமைந்த படுக்கையில மற்போர்செய்ய வாய்ந்த திண்டோளினையுடைய தேவர்களோடு மணந்த அலங்காரத்தைப் புணர்ச்சிவிருப்பத்தால் தடையென்று வெறுத்துக் கழித்துவிட்ட கற்பகத்தருவின் நறுமலர்மாலைகள் ஆபரணங்களோடும் கிடந்திருக்கவும் காண்பர். தங்கையென்றுவமைசொல்ல மலரும்படிவேண்டி அரும்புகளரும்பிய காந்தண்மலரைப் பார்த்து இவைகள் படத்தையுடைய பாம்புகளென்றே யச்சுற்று வேற்கண்ணை மூடிக்கொள்பவரும், செய்யிலையுடைய வயிரக்கல்லி னிடத்தில் தோன்றும் நிழலாகிய பூக்களைக்கொய்து தம்மினென்று தங்கணவரைத் தொழுபவரும், அசோகந்தளிரை நகங்களாற்கிள்ளியிட்டு உள்ளங்கையிற்கொண்ட சின்னங்களை முலைமுகட்டிற்பொருத்தித் தேனிரம்பிய பூக்களைக்கொய்பவரும், பலவகை நிறங்கள்தோன்ற நவரத்தினங்கள் பிரகாசிக்கும மாலையின்கண் வாழ்க்கைசெய்யாத அன்னப்பறவைகள் புகுந்தனவென்று சொல்லும்படிபாய்ந்து சுனையில மூழ்குகின்றோருமாயினர். இதுநிற்க; சிலமாதரும் ஆடவரும்பெருகி யிழியும் தேனைப் புன்னைப் பூவினிடத்தே மொய்த்த ஞிமிறுபோன்று எங்குமடர்ந்து அவ்வுயர்ந்த மலையினெப்பக்கங்களினும தங்கு நீங்காமல் தாமினிதாக விளையாடுவர். சிலர் இறங்குவதென்பதைச் சொல்லுமிடத்தே அது கழிபெருந்துன்பத்தைப் பிறப்பிக்குமென்பதனைச் சிறிதுமெண்ணாதாராய் விண்ணுலகத்தினிடத்தே இன்பத்தையே நுகரும் தவமுடையாரேபோல, அம்மலையின் இன்பமனைத்தும நுகர்ந்து அதன் வளப்பத்தைச் சிறிதுமறவாதவராயிருப்பர். மேகந்தவழும் அம்மலையோ! யானையையொத்தது. ஆகாயவீதியிற் செல்லும் சூரியனோ! அம்மலைமேற் பாயும் சிங்கத்தையொத்தனன். செவ்வானமோ! அதுபாய்வதனால் உண்டாகிய உதிரம்போல்தோன்றியது. திண்ணிய கிளைகளையுடைய மாமரங்களெல்லாம் தம்மேற் செவ்வானத்தி னொளி பாய்வதனாலே குறைவில்லாததளிர்களைத் தளிர்த்தனபோலத்தழைத்துநிற்க, அழகமைந்த அவ்வொளிபாய்ந்து நிறைவதனால் குற்றமற்ற அம்மலையி னுருவமுழுதும் செம்மணிகளாற் பதிக்கப்பட்ட மலையென்றுசொல்லும்படி யிருக்கவும், காண்பார்க் கினிமைதருவதாய் நல்ல தோற்றமுடையதா யிருந்தாலும் கணக்கிட முடியாமல் விளங்கும் சிகரங்களை யுடைமையாலும் செக்கர் வானத்தினொளி தன்மேற் பாய்வதனாலும் அழகிய சந்தனக் குழம்பை மார்பிலணிந்த கரியமேனிப்பெருந்தகையாகிய திருமாலையுவமைசொல்லவும் விளங்கிற்று.

ஒருவரோடொருவர் உயிருமுடலுமென்ன நட்பினைக்கொண்ட ஆடவ ரும் மாதரும் தாம்புனைந்த மலர்களின் மொய்த்திருந்த தேனும் ஞிமிறும் தும்பியும் நெருங்கி யாரவாரிக்க, களிற்றியானை நிரையும் பிடியானை நிரையும் சிங்கவேற்றினிரையும் பெண்சிங்கத்தினிரையும் அம்மலையினின்றும் இழிந்தன வென்று சொல்லும்படி யிழிந்தனர். ஆகாயத்தில் ஒற்றைச்சக்கரமுள்ள தேரூர்ந்துசென்று கோபிக்கின்ற அஞ்சாமையமைந்த அம்புகளைச் சிதைக் கும் கிரணங்களென்னும் பிடர்மயிரையுடைய சிங்கவேறுபோன்ற சூரியன் அத்தமானகிரியிற் பிரவேசித்தலால் தனித்திருந்த மதமயக்கமுள்ள யானைக் கூட்டம்போல மிக்க இருள் உலகமுழுதும்பரவிற்று. குறையாதொலிக்கும் பெருங்கடலிற் செந்தாமரை பூத்ததுபோல, மந்தாரதருவின் மலரினும்முற் படுந்தேனும் வாசனையும் அமைந்த அழகிய மலர்மாலைபுனைந்த அரசர்பெரு மானது சேனைக்கடலில் தீபமெடுக்கப்பட்டன. குளிர்கடலில் திவலையைத்தூ வும் அலைகளினின்று நீங்கி விண்ணிற்சுடரும்வெண்மதி தன்னழகிய வெண் ணிலாக்கதிராகிய வெண்மணலில் விண்மீன்புடைசூழவந்தது கடலினலை நீங் கிய வெண்மணற்பரப்பிலே முத்துகளையீன்று விளங்கும் வெண்சங்கம் தவழ் வதுபோலவிளங்கிற்று. மீன்கள்தோன்றும் சமுத்திரம்ஒப்பற்ற வெண்மதியைப் பெறும்பொழுது அதைப்பொறுக்காமலிருக்க,இச்சேனை சமுத்திரமோ அரமக ளிர்போல விளங்கும் அரசமாதரது முகங்களென்னும் தேய்வில்லாத அநேகஞ் சந்திரரைப்பெற்றது. மேலும் நாடகத்தார் ஆடுமிடந்தோறும் மார்ச்சனை யமைந்த மத்தளவோசையும், மாதர்கள் பாடுமோசையும்,யாழோசையினின்று மாறுபடுதலில்லாத கையோசையும், புள்ளாங்குழலோசையும் தேவருமயங்க ஒருபுறத்தே முழங்கும். இரத்தினாபரணங்களை நீக்கி முத்துமாலையை உயிர்ப் பாங்கியர் கொடுக்க வாங்கி யணிந்துக்கொள்ளும் மாதர்கள் கொங்கையிலெழு திய சந்தனத்தொய்யில் முதலியவற்றை அகிற்புகையா லுலர்த்துவர். பின் னும் தேன்சொரியும் மல்லிகைப் பூமாலையை வெறுத்துவிட்டு மணமமைந்த கருமுகைமாலையை யணிவாரும் இவைபோன்றன பிறவற்றைச் செய்வாரு மாயினர். அம்மலையினிடத்துப் புதிதாகப்பிடித்த யானைகளைக் கட்டுவோரது புனைபாடலோசையும்,மதுவுண்மாந்தர் தம்மனைவியரிடத்தே பேசுமோசையும், பொதுமாதர்கள் தம்மல்குலிற்புனைகின்ற மேகலாபரண வோசையும், மதயானை செருக்காற் செருக்குமோசையும், பிறவும் ஆங்காங்கெழுந்தன. உண்ணவரி தாகிய தேவாமிர்தத்தைப் போன்ற நூல்களிலமைந்த உண்மைப்பொருளை ஐயந்திரிபின்றிச் செவியா லுண்ணவும், பெண்ணாரமுதன்னவர் மனத்தே நிகழ்ந்த ஊட்லைநீத்தும்,பண்ணொடிசைந்த பாடலாகிய தேனைச் செவியாகிய வாயாற் பருகியும், அப்பாடலின் பொருளமைந்த நடத்தைக் கண்களார இனிமையாகப் பார்த்தும் இராக்காலங் கழிந்தது.

வரைக்காட்சிப்படலம்

முற்றிற்று.

---

## பூக்கொய்படலம்

ஆகாயத்திற் றேன்றும் காண்மீன்களாகிய பற்களையுடைய இரவாகிய இரணியனைச் சினந்து காடுபோலடர்ந்த கதிர்களென்னு மாயிரம் கைகளைநீட்டி உதயமென்னும் பொற்றூணினின்றும் நரசிங்கப்பெருமான் தோன்றியவாறு போலச்சூரியனுதயமாயினன். இவ்வாறு சூரியோதயமானவுடன் நித்தியக் கடமைகளை வழுவாது முடித்துவிட்டபிறகு அரசர்பெருமான் வலியமைந்த தேர்மேலேறி பலமன்னவர் சூழப்போயினன். சேனைசமுத்திரமும் அவனைப் பிரியாமல் எழுந்து தான் பாயாதொழிந்த விடமெல்லாம் சோலையேயாய்ப் பள்ளமான விடங்களிலெல்லாம் செங்கழுநீர்மலர் மலர்ந்து துறைகளிலெல்லாம் கமலமலர்பூத்த சோணையாற்றையடைந்து தங்கியபோது சூரியனும்ஆகாயத்தினிடையே வந்தான். தம்மனைவியருடன் அரசரும் அரசிளங் குமரரும் வண்டுகள் குடைந்து தங்குகின்ற மலர்களைக்கொய்து நீராடக் குளங்களும் மடுக்களும் சூழ்ந்த தண்ணிய சோலையைச் சார்ந்தனர். அங்கு வந்திருந்த மாதரார் புருவமாகிய வில்லைக்கொண்டு கருங்கண்ணுகிய பாணங்களால் தம்மைப் புண்செய்வரென்றே யெண்ணி மயில்கள் அஞ்சிப்போவன போன்றன. அவர்கள் வாயாரப் பேசக்கேட்டுக் கிளிகள் பறந்தன. காலிலணிந்த சிலம்புகள் ஆரவாரிக்கும்படி அவர் நடக்குந்தோறும் அன்னங்கள் நடக்கும். செம்பொன்னுற்செய்த ஓலைச்சுருளும் குண்டலங்களும் சேர்ந்து மின்னவும், நெருங்கிய வண்டுகளொலிக்கவும், அசைந்து தோழிமார் கூட்டத்தொடும் விளையாடப் பார்த்து பூங்கொம்புகளுடன் கொடிபோல்வாரை அடையாள மறிந்து தெளியாதாரை வாசனையமைந்த மலர்மாலையணிந்த ஆடவரும் ஐயமெய்தி நிற்பர். பேசச்சமர்த்துள்ளவரிடத்தே ஒருவர் சென்றுபேசுதல் அருமையாதலால் பொன்னுபரணத்தை யணிந்த அல்குற் பரப்பையும், இன்னிசை போலும் மொழியையும், தேன்றுளிக்கும் மலரணிந்த கூந்தலையுமுடைய மாதர்கள் அடர்ந்த பேரோசையைக்கேட்டுக் குயில்கள் பேசுதற்குப் பயந்தனவல்ல, பேசுதற்கே நாணங்கொண்டன. விடத்தினுங்கொடிய கண்ணுல் அமுதத்தினும் விரும்பிநோக்கித் தாமரை மலர்போன்ற கையால் செவ்வையாகப் பரிசித்தலும் உயர்ந்து நின்ற பூங்கொம்புகள் தமது சிலம்பணிந்த பாதங்களில் மெல்லியபூக்களைச்சொரிந்துவளைந்தன என்றுல்கொடிபோலு மிடையையுடையாரை வணங்காதார் ஒருவருமேயிலர். தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமாமகள்போன்ற மாதர் தமது அழகிய கையால் பரிசித்தலால், மலர்மாலைபுனைந்த குடுமியும், சிங்கம் தன்னினமென் றடையும் பேராற்றலுமுடைய ஆடவரது தோள்களாகியமலைகள் நெருங்கித்தாழ்வனவெனின் தளிர்த்த மலர்களையுடைய கொம்புகள் தாழுமென்பது எடுத்துக்கூறுந் தன்மையேயன்று. நதியினும் குளத்திறும் பூவாத தாமரைமலர்களைக் குவளைமலருடன் மதிபோலும் நெற்றியையுடைய பூங்கொடி பூக்க அவற்றைநோக்கி வரிசையாகவரும் வண்டுகள் அதிசயமடைந்து புகுந்து நெருங்கின. புதுமைபார்க்கும் விருப்பமுடையோர் புதியவற்றைக் கண்டபோது விடுவரோ ? ஆதலால் ஓட்டமுடியாவாகித் திரண்ட கல்

லைப்போலும் தோளையுடையாரும் மலர்மாலையணிந்தாருமாகிய தமது கணவரிடத்தே யிணங்கிய மயிலன்ன சாயல் மாதரார்போலப் பூத்தகொம்புகளிற் சில துவண்டு வளைந்தன, ஊடிய மாதரார்போல அப்பூக்கொய் மாதர்கையில் வராமல் நிமிர்ந்தன. மாதரோ பூக்களையெல்லாங் கொய்துவிடுவதனால் பொலிவற்றுத் துவளாநிற்க அதைக்கண்டு இவைகள் கணவர் கண்களுக்கு செவ்வையாகத்தோன்றும் அலங்காரமில்லையென்றேயெண்ணித் தாமணிந்திருந்த மணிமாலையையும் முத்து மாலையையும் பொன்னூணையும் குண்டலங்களையும் குழையும்படி பூட்டிக் குளிர்ந்த பூங்கொம்பைப் பார்த்துக்கொண்டே யிருப்பர். அடையத்தக்க போகங்களையெல்லாம் மிக்க இன்ப முண்டானவிடத்திலே அனுபவிப்பார்களாதலால் மிதித்து மலர்த்தியடர்ந்த மலர்களிலுள்ள தேனையுண்டு அவற்றைப்பிரியாம லுலவுகின்ற வண்டின் கூட்டங்கள் தாம் விரும்பும் மலர்களையும் வேண்டாதனவாய் நல்ல மலர்மாலையையும் சின்னங்களையும் நீக்கிய கற்புமுதலிய நல்லியல்பமைந்த மாதரது வெறுங்கூந்தலை மொய்க்கும். இது நிற்க;

ஒரு புறத்தே திருமாமகளுக் கணியையொப்பாகிய பெண்ணொருத்தி பளிங்கினிடத்திற்போய்ப் போதைத் தாங்கி நிற்பள். தன்மேனியினிழலைப் பார்த்து இப்பெண்ணே என்கணவனுக்கு உயிர்போல்வாளென் றெண்ணிக் கையிலிருந்த மலரொடு கண்முத்தங்கலுழாநிற்பள். இராகுவினாற் கவரப்பட்ட திங்கள்போலும் முகத்தையுடைய ஒருத்தி ஓரரசன் தன்தோளிலணிந்திருந்த மாலையைத் தன்காதலிக்குச் சூட்டக்கண்டு கச்சினை லிறுக்கிக்கட்டப்பட்ட முலைமேல் வாள்போலுங் கண்ணில் மழைத்துளி சொரிவாள். மயில்போல் வருபவளது மனநிலையை யறிய அவளிடத்தே மிகுதியுங்காதல்வைத்த மன்னனொருவன் ஒரு பூஞ்சோலையிற் குருக்கத்தி மாஞ்செறிந்தவிடத்தில் ஒளித்துக்கொள்ளச் சிறிதேனும் முன்னே தன்னைப்பிரிந்தே யறியாமல் உடனுறையும் அம்மடந்தை நெஞ்சந்துடித்து உயிரைநாடித் தளருமுடல்போலச் சுழன்றுதிரிவாள். மையிட்டகருங்கண் கோபத்தாற் சிவப்பேற நெய்தடவிய வேலைத்தாங்கிய தன்காதலனிடத்தே யூடிக்கொண்டுநின்ற ஒருத்திதனக்கெட்டாத மலரைப்பார்த்து இவற்றை யானடையக் கொய்துதாவென்று ஒருகுயிலைக் கைகூப்புவள். ஓங்கி வளர்ந்துநின்ற தென்னமரத்தினது இளநீரை யோராடவன்பார்த்து வியந்து இவை மங்கைப்பருவத்துப் பெண்ணின் கொங்கைக் கொப்பாமென்று கலுழ்ந் துள்ளங்கொதித்துப் புறத்தே முகம்வெயர்த்துப் பெருமூச்செறிவன். போரொன்றுசொல்லப் பூரிக்கும்மலைபோன்ற அழகியதிணி தோளையுடைய மாரன்போல்வானைப் மலர்கொய்திருந்த தலைவனைப் பார்த்து ஒருகரிய கூந்தலினையுடையாள் வந்து கண்கள்மூட அவன் யாரென்று கேட்க நம்போலும் சரசஞ்செய்யத்தக்க மாதர்கள் பலருளரென் றையங்கொண்டு தீப்போற் கொதிப்பள். ஒன்றும்கொடாதவனாகிய கடுங்குணத்தையுடைய உலோபியைப்போல ஒரு அரசன் சேற்றிற் பிறவாத செந்தாமரை மலர்போன்ற கையை ஒருமிக்க நீட்டி ஏற்றவர்களாகிய தன்மாதருக்கு சுரப்பினையுடைய தேன்செறிந்த புதியமலரை இனிய முகமுடையானாய் உதவானாக அவ்விருவ

ருக்கு மிடையே தான் கொணர்ந்த நான்மலரைப் பகுத்துச் சமன்செய்து தந்தால் அவர்கள் தனித்து மாறுபட் டடிக்கொள்வாராதலால் அஃதெண்ணி அவ்விருவருக்கு மிடையே கையேந்தி நிற்பன். மார்பிற்றைக்கும் வேல் போலுங்கூரிய விழியையுடைய ஒருபெண் ணருங்கலத்தினது ஆருயிரே போன்ற தலைமகன் அம்மையுண்ட கண்ணுளுக்கெதிரே மாற்றவளுடைய பெயரை யெடுத்துச்சொல்ல, அதனையறிந்த அம்மாதுதன்னிலும் அதிகஅன்பு தலைசிறக்க வைத்துக்கொண்டிருப்பதனால் இதுவரையும் தான் அவன்மேல் வைத்த அன்புமுதலியவற்றைப் பற்றி நாணங்கொண்டு மனவாட்டமுற்றுக் கண்ணீர்கலுழ்ந்து விம்மத் தான் கைக்கொண்டிருந்த பூமாலை அவளுயிர்ப் பால் கரியும். திண்ணியதேரையுடைய அரசனொருவன் தன்பட்டமகிஷிகளுடைய தாமரைமலர்போன்ற முகங்களில் விளங்கும் மையுண்டகண்களெல்லாம் தன் கட்டமுகைக்கண்டு திரிவதனால் அவன் மதத்தை வாய்கிரம்ப வுண்ணும்படி மதயானையையொத்து விரும்பித்திரிவன். தான்கொய்துவந்த மலர்களை அந்திப்போதில் தோன்றும் கலையையுடைய மதிபோலும் விளங்கும் நெற்றியையுடைய ஒரு தலைவிக்கும், அருந்ததியும் வந்திக்கலாகும் கற்பினையுடைய மற்றொரு தலைவிக்கும், சமமாக வகுத்துக்கொடுத்துச் சாமுத்திரிகா லக்ஷணப்படி வடிவமைந்த அவ்வரசன் வேறொன்றும் செய்யாதிருந்தபோதும் அவ்விருமாதரும் அம்மலரினையே யல்லது பலமணிகள்கோத்த இருபத்தொரு வடமாகிய கலாபத்தையு மறுத்துச்சிந்தி வேல்போலுங் கூரிய கண் சிவப்பச் செல்வர். இவ்வாறு அங்கு நிகழ்ந்தன, இது கிடக்க;

மற்றொருபுறத்தே தேன்சிந்தும் அழகமைந்த தமது நிலைபேறுடைய ஆவியோ! அதற் கினமாகிய வேறொரு பொருளேயோ! இன்னதென்று யாம் கூறத்துணியோம். மயிர்ச்சார்ந்துபூசிய சோர்குழலினைப் பாராமலும், ஆடையைக்காவாமலும், வடத்தின்கடைப்பூட்டுதோறு மறுந்து சிந்துமுத்தினைமதியாமலும், அச்சோலையிடமெல்லாம் வந்து மலரைப்பறிக்கத் தேடித்திரிவர். யாழிசைபோலுஞ் சொல்லையுடைய திருமாமகள்போலும் அழகினையுடைய ஒருமடந்தை திண்ணிய அரசனொருவன் தன்னைத்தானிணங்கின னல்லன் ஆதலால், தானேசெல்லக்கருதியும் இணங்க நாணங்கொண்டு மனந்தளர்ந்தும், தான்செய்யும் செயலின்பய னின்னதெனப் பிறர்க்குப் புலப்படாதொழுகுஞ் சூதையெண்ணி, அவனிருந்த இடத்திற்குத் தன்கையிலிருந்த கிளியைத் தூதுபோகவிட்டு அதன்பின்னே தான்சென்றும் இவ்வாறிருப்பர். அழகியமாலையணிந்த மார்பினிடத்தே மன்மதன் பஞ்சபாணங்களை நூறுயிரமாகத் தூவுகின்ற சிந்தையையுடைய ஓரரசன் இனித் தான்செய்வதறியானாய் மாதவி விருட்சத்தைப்பார்த்து மந்தார மலரைத் தரவல்லையோ வென்று இதுவரையு மினிய முகமும் இன்பத்தைத்தரு மியற்கையு முடையளாயிருந்து இதுகாலை இயல்புமாறித் துன்பத்தைத்தருவது கருதிச் சந்தனந்திமிர்ந்த தனத்தையும் மாலையணிந்த கூந்தலையுமுடைய மாதினிடத்தே தளர்வான். ஊடிக்கொண்டு பின்பு தன்கணவன் அனுபவிக்க இன்பத்தைத் தருபவளாகிய ஒருபெண் குற்ற

மொன்று தானேநாடிக்கொண்டு அதுவே தகுதியானதென்று துணிந்து தான் கொண்ட ஊடலையாற்றுளாய் அவன் பக்கத்தில் நில்லாமற்சென்று பலமுறை கொய்துகொடுத்த செழும்பூமாலைகளை யணிந்து கண்ணாடியைப் பார்த்துத் துயரங்கொள்வள். யமனுக்குணவாகிய வெற்றியைத் தரும் வேலேந்திய கண வன் என்னிடத்தேவந்துசேர இவ்வலங்காரம் பெறேனாயின் அவனைப்பிரியா திருக்கும் பெருவாழ்வு இப்பிறப்பிற்பொருந்தப் பெற்றிலேனாவேன், இப் பெருமையாகிய அணியாதுபிரயோசனத்தைச் செய்வதென்று தன்னணிகளை யெல்லாம் கொடுத்து ஒருவிறலியைத் தன்கணவனிடத்தே விடுவாள். ஈர்க்கு இடைபோகா இளமுலைகச்சினின்று மடங்காமல் புறத்தே வெளிப்பட்டுத் தோன்றுவதனால் அதனைச்சுமக்க வலியற்று நடுங்கும் தமது நுண்ணிடை நடக் குந்தோறும் நோவெழச்செய்வதனால் துயரமெய்துவள். தம்மைச்சிறிதுபொழு தும்பிரியாதுடனுறையும் கிள்ளைகள் பூங்கொம்புகளி லொளித்துக்கொள்வத னால் உண்ணச்சமைந்த பசும்பொற்கிண்ணங்களை மெல்லிய விரல்களிலேந்தி மனங்கரைவாள். தன்னைப்பார்த்தும், மெல்லிய நடையைப்பார்த்துத் தோழிய ரேபோலப் பிரியாது தொடரப்பார்த்தும், அதனால் நட்பின்மையைப்பார்த்தும் உயிர்ப்பாங்கியென்று சொல்லி உன்னைக் கண்டாரிகழ்வர், அதுகொடிது நீயுடுத்துக்கொள்ளென்றே அன்னமாகிய கன்னிக்கு ஒருத்தி ஆடையைத்தர வொருப்படுவள். பாகையொத்த நுண்ணிய கலையையுடையாளொருத்தி தன் படர்ந்தஅல்குலைக்கண்டு ஆடுபாம்பெனத்துணிந்து அருகேவருகின்ற மயிலுக் கஞ்சிப் பூங்கொம்பேபோல நடந்துசென்று மலர்பூத்த பூங்கொம்புகளின் மறைந்து தன் கையினால் இரண்டுகண்ணையும் மூடித்துயர்கொள்வள். அந்தச் சோலையிலே தன்னேரில்லாதாளாகிய ஒருமாது பொன்னே தேனே பூமகளே என்னைப்பாரொன்று சொல்லிக் கொய்யன் மரத்தின் தழைகளில் நுழைந்து கொண்டு பகைத்துத் தமது மிக்க கடுமையாகிய கண்களைக் கைகளான்மூடிக் கொண்டு சிரிப்பள். வயலிற்கொய்த செங்குமுதமும் வில்லொன்றும் கையிலே வைத்த மன்மதனும் நாணங்கொள்ளத்தக்க பேரழகையுடைய ஆடவர் பேதை மையுடைய தமது மாதர்மையலாற் சொல்லும் குறிப்புமொழிகளை வேதங் களிற் சொல்லும் கலைகளை யாராய்வதுபோன்று ஆராய்வர். மேலும் அச் சோலையிலே வண்டுகளோசையே புள்ளங்குழலோசையாகத் தொடைமேவிய கோலைக்கொண்ட மன்மதனாகியகோபாலன் குறியிலேசெலுத்தலினால் மாலைக் காலத்திலே நீலநிறங்கொண்ட மையுண்ட கண்களையுடைய மாதரார் பசுக் கூட்டமேபோலச் சூழ்ந்துவர மால்விடையேபோல ஆடவர்வருவர்.

கொடியிற் பூக்கொய்யும் ஒருத்தியின் கொழுங்கடைப் புருவமே தவ வொழுக்கத்தினை யழிக்கு மாற்றலுடையதாதலால் முற்றத்துறந்த முனிவரால் காக்கத்தக்கது காமன் கையிற்பிடித்த வில்லென்று சிறப்பித்துச்சொல்வது வாக்குமாத்திரமாய் முடியும். வாசனையுள்ள பூமாலையணிந்த குழலையும் நல்ல நெற்றியையு முடையா ளொருத்தி புன்னைமரத்திலேறிய தன்கணவன் மனத் திற்சென் றேறினாள், ஏனெனின் பெருகிய ஞானத்தையுடைய முற்றத்துறந்த

முனிவரே யாயினும் பெரிய கொங்கைகளைப் படைத்த மாதராசையை வெல்ல வல்லாரோ? இவ்வாறிருக்க மலர்கொய்யக் கிளை யொன்றின்மேலிருந்த அரச னொருவன் தேவராலு மெழுதவரிய உருவும் நலனும்படைத்த தன்தலைவியின் அழகின்பால்வைத்த எண்ணமும் நோக்கமு நீங்காமல் கைகளால் அரும்புகளை யும் புதிய தளிரையுங்கொய்து கொடுப்பான். தண்டுபோலுந் தோளையுடைய மற்றோரரசன் வண்டுகள் தேனுண்டு களித்துவாழும் பூக்களைமுடித்த கூந்தலை யுடைய ஒரு மடந்தை முகத்தைநோக்கி அவளுடைய கொவ்வைக்கனி போன்ற வாய் துடிப்பக்கண்டு கோபமுண்டென்று தெரிந்துஉள்ளம் நிலைகுலை வான். இப்படி பலவியற்கையமைந்துடையாரும், இதுபோலும்பிறதன்மை யுடையாரும் பரிசுத்தமான தண்ணிழலைத்தருஞ் சோலையிலடர்ந்த பூக்களைக் கொய்தணியும் செயலைவெறுத்துச்சென்று திரைகள் கரையிற்பாயும் நீராடலை விரும்பினார்கள்.

பூக்கொய்படலம்

முற்றிற்று.

---

## நீர்விளையாட்டுப்படலம்.

இவினைதீர நோற்ற விண்ணவ ருறையும் விண்ணுலகத்தில் அத்தேவ ரும் காணுக்கொள்ளக் குற்றமற்ற செயலையுடைய ஆடவரும் அரமகளிரை யொத்த மாதராரும் அம்மலர்ச்சோலைகளி னின்றும் களிற்றியானையும் பிடி யானையும் வருவனபோன்று அலங்காரம்பொருந்திய மலர்கள்வாய்ந்த நீர்நிலை களையெண்ணித் தாங்களணிந்த மலர்மாலைகளில் மொய்த்திருந்த வண்டுகள் ஆரவாரிக்கவந்தார்கள். அந்நீர் நிலையினிடத்தே நீர்விளையாட்டைச் செய்ய அமைந்தகாட்சியோ கங்கைவார் சடைக்கண்ணுதற்பெருமான்போலும் தூரு வாசமுனிவன் சாபவாய் நெருப்பாற் சஞ்சலமுற்ற தேவராசன்செல்வம்சிறந்த பாற்கடலில்மறைந்த தோற்ற மொத்திருந்தது. கருங்குவளை மலர்களெல்லாம் அம்மாதரார்கண்மலரேபோலப் பூத்தன.சாமுத்திரிகாலக்ஷணம் கூறியநூலும் விரும்புகின்ற உருவமமைந்த மாதரார் கண்கள் மலர்ந்த குவளைமலர்போலும் தோன்றின. செந்தாமரை மலரெல்லாம் அவரது முகமேபோலப் பூத்தன. அம்மாதரார் முகங்கள் செந்தாமரை மலரைப்பூத்தன. சிலமாதர் தமதுபாதமே போன்ற தாமரைமலர்த்தண்டுகளை மார்பிற் பொருந்தத் தழுவுவார்கள். சிலர் தங்கணவரது தோள்களையே துணையாகப் பற்றி விந்தைமகளே போலத் தோன்றுவார்கள். சிலர் கமுகம் பாளைவிரிந்தவாறேபோல நீரைப்பரவலாகத் தள்ளுவர். வாளைமீன் துள்ளித்திரியக்கண்டு சிலர் தங்கணவரைத் தழு விக்கொள்வர். சிலர் வண்டுகள் உண்ணும்படி அவாவும் வாசனைவீசும் மகரந் தத்தையும் வாசனையூட்டிய தைலத்தையும் கத்தூரியுடன் கையினிடத்தே வாங்கி எதிரே நின்றுகொண்டு ஒருவர்மே லொருவரெறிவர், பூமாலையைக் கையிலேகொண்டு வீசுவர். சிலர் ஆதொண்டங்கனிபோலும் சிவந்தவாயி

ளிடத்தே பரிசுத்தமான நீரைப்பெய்து தங்கணவன்மேற் கொப்புளிப்பர். தாமரை மலர்போன்ற தமது கைகளைக்கூப்பி அந்நீரை அவரது முகத்தில் இறைப்பர். இதுகிடக்க; ஆடவர் தாங்கண்ட உறுப்பேயன்றி வேறொருறுப் பிணையுங் காணத் தமது மனம் தம்வசப்பட்டிராமையால், மின்னேபோன்ற இடையாரும், கழைபோலுந் தோளிணையுடையாரும் பின்னத்தையுமுடையா ரும், தலைமயிர்ப்பந்தியோடு நீரில்முழுகி யெழத் தமது அழகிய முகமறைப்ப தனல் அதைநீக்கிவிட்டு என்னுெடு விளையாடவாவென்றே அன்னப்பறவையை நோக்கி யழைப்பாரும்; பொற்கலசமேபோன்ற முலையின்கண் நெருங்கிய பூக்க ளொத்த அருவருப்புற்று வருந்துவாரும் உண்டு. பண்போலும் சொற்பயின்று பவளத்தையும் ஆதொண்டங்கனியையும் பூத்ததாமரை மலரைப்போலும்வாயி னையும் குவளைமலரையும் வாளையுமொத்த விழிகளையும் இடையுண்டென்பதே காண்பரிதாகிய கரும்பன்னமாதரரில் சிலர் உள்ளே நிறைந்த கயற்கண்டை களைப்பார்த்து ஓடு நீரிணையுடைய தடாகங்க ளெல்லாம்விழிகள் பெற்றுள்ளன வோவெனக் கணவரைக் கேட்பர். தேன்வண்டுகள் விழைந்தடையும் தேன் துளிக்கும் மலர்மாலையணிந்த கூந்தலையுடைய அரமகளி ரன்ன மாதரரில் தமது அழகுவாய்ந்த மேனியினது நிழல் தடாகத்தினீரிலே தோன்றக்கண்டு இந்நல்லநெற்றியையுடையாள் யான்சிரிக்கத் தானுஞ்சிரிக்கின்றனள், ஆதலால் இவள் என்னுயிர்ப்பாங்கியே யாவாளென்று குறைவில்லாத விலைபடைத்த மணி மாலைகளைக் கொடுத் துதவுவார்கள்; வண்டுகள் ஆரவாரிக்கவும் மாலை யணிந்த மாதரார் சிலர் வச்சிரப்பதக்கமணிந்த திண்ணிய தண்டேபோன்ற தோளைத்தழுவும் ஆசையினுல் விண்ணளவு மோங்கிய மலையிலே தங்கியிருக் கும் மென்சாயலையுடைய மயிற்கூட்டமேபோலக் காதிலணிந்த குண்டலங் கள் சிறந்தவொளிவீசவும் சிறந்தமணியாரங்கள் மின்னவும் தடாகக்கரையிற் சென்றுசார்வர்.

இவ்வாறு அவர்கள் விளையாடுகையில் இடையிலே குற்றம் இன்னதென் றறியோம். செங்கயலென்னத்தக்க கண்கள் சிவக்கத் தன்னைச்சிறிச்சென்ற மாதொருத்தி தாமரைமலர்கள் அடர்ந்திருக்கும் ஓரிடத்திலே மறைய, கண வனே இது தாமரைமலரென்றும் இது முகமென்றும் துணியாது ஐயங்கொண் டே பார்த்துக்கொண்டிருந்தான். பொன்னுலாகியவளையலையணிந்த மாதராரோ தளிர்போன்ற கையிலுள்ள சங்கம் வண்டுடனே யாரவாரிக்க, தங்கையால் நீரையெறிந்து மூழ்கும்போதெல்லாம் அல்குலினின்றும் கற்றையாகிய மேகலா பரணத்தின் மணிவடங்கள் நீங்கிச் சிறிய பாதங்களைக் கவ்விக்கொள்வதனுல், காலிலே நாகங்கள்சுற்றிக்கொண்டனவென்று சொல்லி அச்சத்தால்துடிக்கின்ற வரும்; இதுபோன்ற பிறசெயலையுடையாருமா யிருந்தனர். பாற்கடல் கடைந்த காலத்தில் அமுதத்தொடுந் தோன்றிய தெய்வமகளிர்சூழ இடையே நின்ற மந்தரகிரியேபோல, நீரிலே மூழ்கிவிளையாடுகின்றமாதர்கூட்டம்தன் பக்கத்தே வந்துசூழ, அங்கதமணிந்த புயங்கள்தோன்றும்படி அத்தடாகத்தின்கண்ணே மாலைதங்கிய ஓரரசன் நின்றுகொண்டிருப்பான். வேறோரிடத்தே வளைய

லாவும் தாமரைமலர்போன்ற சிவந்தகையையும் தூய்மையான நகையையு மமையப்பெற்ற வாயையும் பூங்கொடியேபோலத் துவளுமிடையையுமுடைய மாதரார்கூட்டத்தில் ஓரரசன் மணமமைந்த தாமரைவேலிபடைத்த இடமகன்ற காட்டகத்தில் பிடியானைகள்சூழ இடையேநின்ற மதம்பொழியும் களிற்றியானையை யொத்து நின்றுகொண்டிருப்பான். அச்சோலையில் வசிக்கும் மயில்களெல்லாம் செருக்கும்படி செருக்கும் சாயலையும் சோனைமழைபோலும் நீண்டகூந்தலையுமுடைய மாதர்கூட்டத்தில்ஒருஅரசன்ஆகாயகங்கையைநெருங்கிவிண்ணிற்பலவிடங்களில்சூழவிளங்கும் நாண்மீன்கள் இடையேதோன்றும் விரிகதிர் மதியையொத்துத் தோன்றுவான். ஒருபுறத்தே ஆயக்கூட்டத்தில் செங்கரும்பாகியவில்லைக் கையிலேபிடித்த மன்மதனும்விரும்புந்தன்மையுடையதேயன்றி அவனுக்கும் அம்பையெய்யும் தொழிலைக்காட்டும் நீண்டகண்ணையுடைய மாதொருத்தி பலவகைநிறமமைந்த மலர்களெல்லா மலர்ந்தபொய்கையிலேதாமரைமலர் விளங்குவதொத்திருப்பாள். வேலென்றும்வாளென்றும்உவமிக்கமுகத்தில்விளங்கும் விழிகளையுடைய மாதொருத்தி தன்னைத் தோழியர் சூழ்ந்துகிடப்பது மடலமைந்த போதுகளடர்ந்த கொடிகள் பலசூழப் பாற்கடலிற்றோன்றிக் கற்பகத்தி னயலிலே காமவல்லிக் கொடிபோல விளங்குவாள். தேர்த்தட்டி னழகைக் கொண்ட அல்குலையும் செவ்விளநீரி னழகைக்கொண்ட முலையையும் அழகிற் சிறந்தோர்யாரும் சென்றடையாத பேரழகையுமுடையாள் கச்சினிடத்தே யடங்கிய கொங்கைகள் மேலே தோன்றும்படி மூழ்க, மேலே அவள்முகந்தோன்றுவது குற்றமற்ற சந்திரனிழலை யொத்துவிளங்கிக் கொண்டிருக்கும்.மலைகளைவெற்றிகொண்ட தோள்களும் மாதரார்ஆடையைக் கடந்தகன்ற அல்குலும், ஒன்றோடொன்று தாக்கும் கொங்கைகளும், மற்றையுறுப்பினும் முற்பட்டுத் தமக்கு நெருங்குவதனால், அம்மடுநீர் தன் கரையைக் கடந்து பரந்தது. பின்னும் அதுசிவந்த வாய்வெளுக்கவும் கண்கள்சிவக்கவும் செய்யோடுகூடிய செம்பராகம் அழியவும் உடுத்த ஆடை புறத்தேசோர்ந்தவிழவும் தொய்யிலணிந்த பருத்த கொங்கைகளையுடைய மாதரார் மூழ்குவதனால் காதற்கணவனையே யொத்துவிளங்கியது. இயற்கையினாலே யல்லது கல்வி கேள்விகளாலமைந்த பேரறிஞரோடும் பிரியாது பயின்றவர் மிகவறிவு படைத்துத் தோன்றுவர். இதுபோலவே அவ்வாடவரும் மாதராரும் மூழ்கிய மடுவில் பயில்கின்ற மீன்களும் தேன் மணமும் கத்தூரிமணமும் அகிற்புகை மணமும் நாறினவென்றால், அவரது மிகுதியை யெவ்வாறு கூறத்தகும். அரசருடைய உடம்பினின்று மிழிந்த சந்தனக்குழம்பும், அங்கே நீராடும் மாதரணிந்த குங்குமச்சேறும் அத்தடாக நீரிற்றோன்றுவதனால் அத்தீம்புனலோ ஆகாயத்திற்றோன்றும் செவ்வானையொத்திருந்தது. தம்முடம்பிலணிந்த அகிற்கட்டையின்சேறும் கலவைச்சேறும் நீங்கலால் பாகையொத்து சொற்பயிலும் தொண்டையங்கனிபோலும் வாயினையுடையார் வேகடஞ்செய்த மணிகளே போலத் தோன்றினர். சிங்கம்போலும் திறலினையுடைய கணவன் தன்பொன்னணிபுனைந்த தோளில் ஈரமான சந்தனத்தால் நிரம்பவெழுதிய தொய்யிற் குறிகளை அழித்துத் தூய்மையாக்கக்கண்ட பெண் செவ்வரிக்கண் சிவந்தன.

திதம்பத்தினையுடைய வேறொருமாதுகாமவேட்கையால் வெதும்பி அவனுடம்பின் வெப்பம் வெம்மைதரப் பரிமளப்பொடியும் சாந்தும் தேனும் உதிர்ந்த பராகமும் நிறைந்த அலையொடுகூடிய நீருஞ்சுட்டது. செந்தாமரைமலரில் எழுந்தருளிய திருமாமகளைக் கையால் ரோட்டும் களிற்றாசேபோல மாலையணிந்த தோளையுடைய அரசனொருவன் ஒரு பெண்ணுக்கு செய்யைத்தடவியகூந்தலில் நீரைமொண்டு வீசவும், தாமரைமலரில் அன்னப்பறவைகள் எழிமிதிப்பது மாதரது நடையை வெறுக்கும் நடைபெற்ற நாம் தோற்கநடக்கின்ற இம்மாதராரது சிறடியையொத்தனவென்று தாங்கொண்டகோபம் புறத்தேதோன்றி மிதிப்பதுபோ லிருக்கும். கொங்கைகள் நூல்மேற்புறத்தே சுற்றிய கலசங்களையொத்திருக்க அரிய கூரிய நகங்களினால் சந்தனமழிந்துபோக அதைக்கண்டு காமவேட்கையாலெரிந்த சிந்தையையுடைய ஆடவர் அளவோ சொல்லிமுடியாது. தாழ்ந்திருக்கும் தாமரைக்கையால் சக்கரத்தையுடைய வரசன் தன் ஆசையைத் தெரிவிக்கவும், அதனை விழிவாய்மெல்லியலொருத்தி தன் உயிர்ப்பாங்கியின் கண்ணிலே தன் கடைக்கண்ணாற் குறிப்பிக்கவும், தங்கிலையினின்றும் தள்ளப்பட்டோடி அலைகள் போவதும் வருவதுமா யிருப்பதனால் தெளிவாகிய நீரில்முழுகும் செந்தாமரைமலர்கள் மான்போன்ற மாதரது முகங்கட் கொவ்வாமல் தம்மிழிவைநோக்கி நாணியொளிப்பதுபோலவும், இத்தன்மையான செய்கைகளைப்பெற்று நீராடிய ஆடவரும் மாதரும் மேற்கூறிய மடு வழிதாகநீங்கிக் கரைசேர்ந்து ஆடையணிகளை யணிந்தனர். இவர்களெல்லாம் நீங்கினமையால் அம்மடுவானது சந்திரனும் விண்மீனும் நீங்கிய விண்ணையும் தன்பாலுள்ள தாமரையெல்லாம் நீங்கியவைபோலவுமிருந்தது. சூரியனே மான்போலும் விழியார் ஆடவரோடு நீர்விளையாடியதைக்கண்டு தானும் நீராடத்தொடங்கினன்போல மேற்கடலில் மூழ்கினன். வலியின்மையால் தோல்வியடைந்தும் தம்மொடு பகைகொண்ட அரசர்மேல் போரைக்குறித்துவரும் அரசரேபோல, முன்னெலாம் இம்மாதர்முகத்தோடு எதிர்நின்று ஒப்பாகாமல் தோற்ற சந்திரன் மீண்டுமுதயஞ்செய்தான்.

நீர்விளையாட்டுப்படலம்.

முற்றிற்று.

---

## உண்டாட்டுப்படலம்.

சந்திரன் உதயமானது வெள்ளைநிறமுள்ள மதுவெள்ளம் பரந்ததுபோலவும், பண்ணுருக்கொண்டு பரந்ததுபோலவும், எல்லாவுயிரிடத்து முள்ளிருந்த காமமிகுந் தொழுகியதுபோலவும் தோன்றி, ஒருவரையொருவர் பிரியாத மாதராடவர்களுக்கு இனிதாகிய மதுவாய், பிரிந்து வாடினவர்களுக்கு உயிரை வருத்தும்விடமாய், பிரியாமலேயிருந்து ஊடனிகழ்ந்தாருக்கு உதவிசெய்யும் புதியதூதுமாய் மன்மதன்வேண்ட விளங்கிற்று. உலகிலுள்ள நதிகளெல்லாம் கங்கையைப்போலவும், உவர்க்கடல் சிறப்பித்துக்கூறும்பாற்கடலைப்போலவும், மலைகளெல்லாம் ஈறில்லாத பரமசிவனைப்போலவும் இருந்ததாயின், அந்நில

வின் பெருக்கத்தை யெவ்வாறு சொல்வது. கடல்புடைசூழுங் காசினியோ இகழ்ச்சியில்லாத திசைகளோடு அத்திசைகளிலுள்ளாரும் மற்றையெப்பொருளும் வெள்ளிய நிலவாற் கோலங்கொள்வதனால் மன்மதனது வெள்ளணியணிந்த படைவகுப்பை யொத்திருந்தது. விண்மீனையொத்த முத்துப்பந்தரினிழலிலும், காற்றினாலியங்குகின்ற மேகம்போற்படர்ந்த திரைச்சீலைகட்டியவிடத்திலும், கயங்களைப்போல்தோன்றும் பளிக்குப் பாறையையுடைய கானிலும், பூப்பந்தரிலும் மாதர்கள் தங்கினர். மலர் முடித்த கூந்தலையுடைய மாதர்கள் இராக்காலங் கழிப்பதற்காக பூவணையின்கண் கலவிப்போராக்களிப்புடன் செய்யக்கருதிப் பாற்கடலிற்றோன்றிய அமுதமென்று சொல்லப்பொன் வட்டிலில்வடித்த நறவையுண்ணலாயினர். தாராகணங்கள் சூழ்கின்ற ஆகாயத்தில் வசிக்கும் வித்தியாதரர் தாம்பிறப்பி லுயர்ந்தவராயிருந்தாலும் ஊனுலாய உடம்பினையுடைய மாதராடவர் வடிவமொத்திலராகி, அம்மான்போலு மருண்டபார்வையுடைய மாதர்வாயில் தேனையுடைய மலரில் தேனைப்பெய்தாற்போல மதுவைப் பருகினர். இது நிற்க ;

ஒரு பெண்கொடி கையாலெடுக்க அக்கைசிவந்து தோன்றியதனால் சித்திப்பரந்த பாலையொத்துவிளங்கும் சந்திரகிரணம்பாய்ந்த வட்டிலும் சிவந்து காட்டிற்று ; தன் மையிட்ட கண்ணுஞ்சிவந்தன ; ஆகையால் இவள் வாயின் வழி புகுந்த தேன் அமுதமாய்ப்பொலிந்ததென்று சொல்லக்கிடந்தது. ஒருத்தி மதுவில் தன்முகந்தோன்ற அந்நிழலைநோக்கித் தோழியே தண்ணிய மதுவை நீயேன் பொன்செய்வள்ளத்தி லுண்டாயென்று சொல்லினள். இதனால்விடம் போலும் நெடுவிழியும் அமுதம்போலும் இன்சொல்லுமுடையார் மடமை போலும் மடமையுண்டென்று நாம் வேறுசொல்வ தெவ்வாறு? அச்சநுண்ணிடையணங்கொருத்தி தன் அளகமும், விடத்தையும் வேலையுமொத்த விழியும், சிவந்த வாயையுடைய முகமும் வள்ளத்திலுள்ள கள்ளிலேதோன்றுவதனால், அதை ஒரு பெண்ணின் முகமென்றெண்ணி அடிபேச்சி! சாடியில் மிகுதியுங் கள்ளிருக்க அதையுண்ணாமல், பயன் சிறிதுமின்றி எச்சிற்கள்ளைக் குடிக்கின்றாயே, நீ யென்னகாரியத்தைச் செய்துவிட்டாயென்று சொல்லிப் பற்களாகிய முல்லையரும்பைக்காட்டிச் சிரிப்பள். ஒப்பிலாத மேனியையும், மறத்தொழில் பழகும் வேல்போலுங் கண்ணையுமுடைய வேறொருத்தி மணிவள்ளத்தில் வெண்ணிலாத்தொகுதி பாய்வதனால், கள்நிறைந்ததுபோலத்தோன்ற அதைக் கள்ளென்று நினைத்துப் புறத்திலுள்ளார் நகைத்தேசவாயில் வைத்தனள். அதைத் தான் சுவைக்கப்பெறாமையால் நாணுட்கொண்டனள். யாழ்க்குங் குழற்கும் இன்பத்தை யுதவினவை யிவையென்று கேட்டற்குரிய மழலைச்சொல்லையும், முருக்கமலர்போன்ற இதழையுடைய வாயையுமுடைய மாதொருத்தி கருங்குவளை மலர்த்தாள்கிடந்த தண்ணிய கட்சாடியில் தன் வாள்போன்ற கண்ணிழலைக்கண்டு அதனைவண்டென்று நினைத்தோட்டி நிற்பள். கனத்த காதணியையுடைய மற்றொருத்தி கட்சாடியினுள்தோன்றும் சந்திரபிம்பத்தி னிழலைக் கண்களிக்கப்பார்த்து நீ ஆகாயத்தில் தவழ்ந்துசென்றால் இராகுவந்து பிடிப்பானென்றெண்ணியோ பயந்தொளித்துக்கொண்டாய்,

னே உனக்கு அபயதானங்கொடுத்தேன், அஞ்சவேண்டாமென்று உறுதி மொழி புகல்வாள். ஆற்றினது சுழியொன்றி நின்றாலொத்த உந்தியையுடைய வேறொருத்தி செந்தேன்பொழியும் மலர்மாலையால் வேய்ந்தபந்தலைத்தொளை த்துக் கீழேவந்திழியும் மிக்க நிலாவைத் தன்னறிவழிவதினாலும், இயல்பான பேதைமையாலும் கள்ளென்று வள்ளத்திலேற்பாள். மின்போலுநுடங்கும் இடையையுடைய வேறொருத்தி வெள்ளமுதம்போலும் தான்பேசு மதுரச் சொல் கள்ளின் மயக்கத்தால் இடையே தடுமாறியதுபோல, மேகலையைநீக்கி மலர்மாலையை யல்குலிற் புனைந்து பொன்னரிமாலையைக் கையிலேகொண்டு குழலிலணிவாள். ஒருமாது மதுநிறைந்த வள்ளத்திலே களிக்கும் தன்முகத் தைப்பார்த்து ஆகாயத்தில் தவழ்ந்துசெல்லும் சந்திரன் கள்ளினாசையினால் இதில் வீழ்ந்தான்போலு மென்றெண்ணி மனமகிழும் நாயகனோடு யான்பிணங் குங்காலையில் வெப்பமொழிந்து தண்ணியமதிபோலத் தோன்றுவையானால் உனக்கு இக்கள்ளைக் கொடுப்பேனென்று சொல்வாள். எள்ளினிளம்பூவை யொத்த அழகிய மூக்கையும், உயர்ந்த ஆபரணங்களையுமுடைய மாதொருத்தி முன்கை கள்ளைத்தள்ளுவதனால் தானிருந்தவிசினிடத்தே சிந்தியதறியாமல் தன்னுள்ள மயக்கத்தால் உட்புறத்தி லுண்டென்றெண்ணிக் கிண்ணத்தைத் திருப்பியெடுத்து மணிநிறவிதழில்வைப்பாள். மதுவின்மேல்வைத்த காதலால் வாளைப்பிரிந்தறியாத வண்டினங்கள் உலோபரிடத்தே கையேற்று அவர் நிதி யைப்பெற விரும்பிய யாசகர்போல ஆரவாரிக்க, வேறொருமாது தேன்பொழி யும் செந்தாமரை மலர்போன்ற வாயைத்திறந்துண்ணக் கூசிவள்ளத்திலூன்றி நின்ற செங்கழுநீர்மலர் நாளத்தாளினாலுண்பாள். கள்ளுலவும் கமலமலர்வாவி யில் பொருகின்ற கயற்கண்டைகள் பயந்தோட வள்ளுறையினின்றுங் கழித்த வாள்போன்று செவ்வரிபரந்து விளங்கும் கண்ணையுடைய மாது மலர்க்கூந் தலையும் களிமயிலையும்போன்ற தன்னுள்ளத்தில்வதிந்து தன்பா லன்புடைய நாயகன் பருகானென்று தான் கள்ளைப்பருக நினையாமலுமிருப்பாள்.

கோபமாகிய அபிநயத்தைத் தெரிவிப்பவர்போல, ஒருத்தி கள்ளின்மயக் கத்தால் யமன்போலுந்தோன்றும் கண்சிவந்து வளைந்து புருவமேலே செல் லும்படிநெரித்துப் பற்களால் இதழினையதுக்கி மாந்தளிர் மயக்கமடையும் கைகளை யுயரநீட்டி மறித்துநின்றாள். துடித்த செவ்விதழாகிய ஆதொண்டங் கனியைத் தூயநிலவைப்பகைத்தபற்களால் அதுக்கிக்கண்களால்வடித்த கூரிய வேல்போன்று உதிரக்கறைபோலச் செவ்வரிபரந்த கண்ணாற்பார்க்கும் மாத ரது மெய்யிலரும்பிய வேர்வை புறத்திலேயும் வழிகின்ற கள்ளையொத்தது. கனிபோன்றவாயின் செம்மை கண்களிற்பொருந்த நினைப்பொன்றும் சொல் லொன்றுமா யிருக்கும் ஒரு பெண்கொடியினது தாமரைமலர்போன்ற முகத் திற் புருவமாகிய வில்லும்வளைந்தது, கெற்றியாகிய குழவித்திங்களும் வியர்த் தது. இதுநிற்க; இவ்விதழ் துவர்நிறமொழியவாலெயிறு ஊறிய நீராகிய செக் தேன்சிந்த முலையிலணிந்த கச்சொடுடுத்த துகிலும் கட்டவிழ, கடலினலை போலும் தோன்றும் குழல்சோர்ந்துவிழ அசதியென்னு மாட்டயர்கின்றமை யால், கலவியாட்டயரும் கணவரும் கள்ளுந் தம்மிலொத்துவிளங்கின. கனை

கடற்கள்வனால் கலக்கமுற்ற தன்மையைப் பரிசுத்தனுகிய தன்கணவனுக்குத் தெரிவியென்றுவிடுக்கும் ஒப்பற்ற கூட்டமாகியமணிவடத்தாலாகிய கலையை யுடைய ஒருமாது நீயும் என்னால் தூதுவிடப்பட்ட என்மனமேபோலத் தாமசஞ்செய்துவிடுவையோ? அல்லது மீண்டுவிரைந்துவருவையோ? என்றுசொல்வாள். மான்போலு மருண்டபார்வையுடைய மாதொருத்தி மதுகைவேந்தன் ஒருவனிடத்தே தனக்கிணங்கிய பாங்கியரையெல்லாம் ஒருவர்பின் ஒருவராகத் தூதுவிடுத்துப் போக்கித் தானும் அங்கவர்கள்பின்னேயே தனிமையாய்ப்போயினாள். வாசனையுள்ள பூப்படுக்கையில் தானடைந்தகரையில்லாத ஆசைக்கடலில் மூழ்கிய தேனினு மினிய குதலைச்சொல்லையு முடையவளொருத்தி நாயகனுடைய பெயரை யெல்லாம் சொல்லத் தழுவுவள். ஒண்ணுதலொருத்தி கிளியைத்தழுவி இன்று என்கணவன்பால் தூதுசென்று அழைத்துவந்தாயில்லை, எனக்கன்றிலை யொத்திருக்கின்றனையென்பள். பொன்வளையணிந்த முன்கையும் மயிற்சாயலுமுடைய வொருத்தி தன்கணவன் தனக்கிளையாள் பெயரிட்டழைத்தமையால், நகைத்து நின்று களகளெனக் கயற்கண்டைபோன்ற கண்ணினீர் வடித்துநிற்பாள். தனக்குக்குற்றமுன் செய்தறியாத வரசன் ஊடல்நீங்கத் தன் னல்குலிற் பரந்துசூழ்ந்த மேகலையை விருப்பத்தாற் பற்றவே தானில்லாமற்போவதனால் அம்மேகலையின் எட்டுமணிவடமுமறுந்து சிந்திய முத்தின்முன் அப்பெண்ணின் பொறுக்காத கண்ணீராகிய முத்தமும் கலுழ்ந்துசிந்தின. மலர்முடித்தகூந்தலையுடைய வொருமாது என்னுயிர்க்கு வருத்தஞ்செய்யப் பிரிந்த என் கணவன் வருவானெனின் அவனோடு ஊடிக்கொள்வேனோ! அல்லது என்னுயிரை வருத்தும் விரகநோய் போகக்கலப்பேனோ! அவனது நற்குணங்களையெல்லாம் விரித்து வீணையிற் பாடுவேனோ! நானெதுசெய்ய வல்லேனென்று இவைபோன்றவற்றை யாராய்வாள். மற்றொருத்தி தன்னாயகனுடன் பிணங்கியதைப் பிறர்க்கறிவியாமல் முருக்காணியைப்பற்றிச்சுருதிகூட்டி மகரயாழைத் தன்மலர்க்கையாற்றொட்டு வாசிப்பாள். பூங்கொம்பன்னதோர்மாது கூடலைச்சுழித்தும் அவ்வாறு சுழித்தபொழுதெல்லாம் தவறுதலும் தவறாமல் அம்பினைவிடுக்கும் மன்மதபாணத்தால் வருந்திப் பரவசமாய் உயிருண்டென்னும்படி யுயிர்ப்பாள். பந்தணிவிரலினாளொருத்தி துன்பமுடையாளாய்த் தோழியைத் தன்கணவன்பால் தூதுபோக்கி வந்தானென்று சொல்லவே, மணிக்கத வடைத்துத் தாழிட்டாள், அவள் கண்ணோ சிவந்தது, அவள்சிந்தித்த கருத்தும் இன்னதென்று தெரியாமலு மிருக்கின்றது, தோழியர் பூக்களாலமைத்த படுக்கையில் ஊடனீக்கவெண்ணமுண்டு, அதை அவளிடத்தே காதலையுடைய கணவனோ அறியாமல் சும்மாயிருக்க, பொய்த்ததோர்சூரியால் உடம்புநிமிர்ந்து காலத்தைப் போக்குபவளாய் இப்போதெத்தனை கடிகையென்றுகேட்பாள். ஒருமாதுஊடலாற்பதைத்துத் தன் கணவனைச் செம்பஞ்சூட்டிய சிற்றடியாலுதைக்கவே, விதைத்தகாதலாகியவிதை அவனுடம்பாகிய புதுக்கொல்லையை அவ்வுதையாலுண்டான சந்தோட சலத்தால் நனைத்தமையால் முளைதோன்றினாற்போல உரோமராசிகள் சிலிர்த்தன. பொலிவுபெற்ற முகத்தையுடையா

ளொருமாது கொங்கைகள் பகையரசரைப் போரில்வென்ற வாள்வீரன் தம மியற்கையினின்று மெலிந்தமைகண்டு தன்னையுமறியாத களிப்பினால்தன்புயங் கள் பூரிப்பாள். பேரழகுடையானொருவன் தன்காதலியி னிருக்கையைச் சேர்ந்து எங்கும் அலங்காரஞ்செய்ததுபோல மன்மதபாணம் பாய்ந்த பூம படுக்கையிற்படுக்க, அங்கேபெய்திருந்த தளிரெல்லாம் தீந்து கரியாகக்கண்டு சிந்தைதிகைப்பாள். மெல்லியலையுடையா ளொருத்தி தான்விரும்பிய தோழி யைத் தழுவுங்கையளாய்த் தூதுபோவென்று சொல்வா னிசைவாள், சொல லவும் வெட்கப்படுவாள், அவ்வெட்கத்தால் சொல்லவுந்துணியாள், அப்படி பலநாள் காலங்கழித்து வருந்துவாள். பேரன்புடையாளொருமாது தனக் குயிர் வேறில்லாத அன்புடைய கணவன் பிரிந்துபோய்விட்டதை மற்றொரு மாதினிடத்தே சொல்ல நாணங்கொண்டு வேறுவேறுசொற்களை மிகுதி யாகப் பேசுவாள். உருவந்தோன்றும் தன்மையமைந்த உயிருமொன்று, தாம்வைத்த அன்பும் அத்துணையென்று சொல்லப்படும் ஒருமாதும் ஆடவனு மாகிய இருவரும் உடம்பொன் றென்னும்படி பொருந்தச் செய்பவரேபோல ஒருவரையொருவர் புல்லிக்கிடப்பர். வேல்போலுந் தோளையுடையாளொரு த்தி தன் கணவனாகிய அரசன் வந்தெதிர்த்தாலும் விருப்பமிகுதியால் தன மனமெழுந்து முன்செல்லத் தான்செல்லாது சந்திரன்போன்ற முகத்தை வளைத்தாள், அது நூதனமாயிருந்தமையால் அவனுக் கச்சந்தோன்றிற்று. நீங்காமல் வருகின்ற அழகுடனே வாடுகின்ற மாதொருத்தியிடத்தே நாயகனை யழைத்துவாராமல் இனிவருகின்ற இரவும் தென்றற்காற்றும்போலத் தனித்து வந்ததோழியோ இப்படி வருந்துவது தகுதியல்லவேயென்று தன்மகட்கு அறிவுச்சுடர்கொளுத்தி யிடித்துக்கூறுவதனால் தாயையொத்திருந்தாள், கண வன் குணாதிசயங்களால் ஆக்கப்பட்ட காதலையுடையாளொருத்தி அந்திக் காலத்திற் றன்மேற்பாய்ந்த தெய்வமுண்டென்னுந் தன்மையுடையாளாய்ப் பார்த்து நின்று தான்சொன்ன செய்தியை யறிந்துகொள்ளாமல தான் அனுப் பிய தூதொடும் அறிவையும்போக்கி) நிற்பாள். பூங்கொம்பன்ன மாதொருத்தி பிறப்பிறப்பென்றுநிலைமாறுஞ் சிந்தையால் தன்கணவனைமறவாமல் மேகத்திற் றோன்று மின்னலைப்போல அவன் வருகையை நோக்கித் தோன்றுதலும் மறைதலுமா யிருப்பாள். தன்கொங்கைமேற் காமபாணம்பட்டமையால் புண் ணாகிப்போக அவற்றை வளையலையணிந்த கையால் ஒற்றியும் அழுதும் சிரித் தும் ஒழித்திருக்கும் சமயம்பார்த்துத் தூதுபோய்வரும்படி யொருத்தியை வேண்டிக் கைகூப்பிவணங்கியும்நிற்பாள். அயர்ச்சியும் அதனாலடைந்தவருத்த மும்அறிந்து அவருக் கொழிந்தசமயத்தைச் சொல்லா லறிவிப்பது அரிதாகை யால், ஒருமாது உள்ளம்வெதும்பி மெலிந்து பூவணையிற்சாய்ந்துகிடந்து தன் வருத்தத்தை வாயாற்சொல்லாமல் தன்றோழியைப் பார்ப்பாள். இதுநிற்க;

தனங்களுடைய இளமைப்பருவமுடைய மாதரினுங்கள்வனாகி அவரவர் மனங்களினுழைந்து அவர்கள் குடிக்கும் கள்ளை அனங்கனும் அருந்தியிருக்க வேண்டும். அவ்வாறின்றேல்மூன்றுபங்கதிகமாய் எல்லாவிடங்களிலும்சென்று களிகொண்டு திரிவதிலன் ! பறைபறைந்தாற்போல இரகசியமெல்லாம்வெளிப்

படுத்தும் மாதர்களை ஆடவர் காணவகையறிந்து, கலவிக்குரிய பக்குவ முள்ள அம்மாதரது மேற்போர்வையை நீக்கிவிட்டு, அல்குலைச்சூழ்ந்த மேகலை மணியை யவிழ்த்தெறிந்து விடுவார்கள். புறத்திலுள்ள பொன்னணிகளையும் ஆடைகளையும் நீக்குவது அறியாமையாதலால் அதைநீக்காது ஒருத்தி துறவற வொழுக்க முடையாள் போலத் தன்னையுந் துறக்குந்தன்மை காமத்திலே தங்கிற்று, ஆகையால் தன் னகத்திலுள்ள நாணமொழிந்தாள். மன்மதன் போலும் அழகுடைய ஒருவனும், திருமகள்போலும் பேரழகுடைய ஒருத்தி யும் கல்விப்போரில் ஒருவருக்கொருவர் தோல்வியடையாமல்உயிருமொன்றே, உணர்வு மொருவழிப்பட்டபடி ஒத்திருந்தனர். போர்செய்யும் வாட்கண் ணையுடைய வொருமாது ஊடலிகழ்ச்சியினால் உதைக்க நினைந்து அவள் பாதங்களைத் தன்மார்பினுரோமக் தைக்குமென்றேபயந்து முருகக்கடவுளன்ன அத்தலைவன் மலர்மாலையணிந்த மார்பினை மலர்போன்ற கைகளால் மூடப் பார்த்து நின் மனத்தில் வேறொருபொருளிருக்க இடமில்லாமல் தங்கிய உயிர் போன்றவள்மேல் என்னுதைபடுமென்றோ உன்வஞ்சனையால்மூடுகின்றாஎன்று முன்னையினுங் கோபமூண்டாள். பால்போலும் இன்சொல் சொல்லும் பவள வாயும் பருத்ததனமும் மெல்லியதோளும் வேல்விழியுமுடைய மெல்லிய லொருத்தி கடல்போன்ற காம வேட்கைமீதூரு மனமும் மேகம்போலுங் கொடக்கையுமுடைய கணவனுக்கு அரம்பா போகத்தைக்கொடுத்தாள்.

சோலை மயில்போல்பவளாகிய ஒருத்தி தன்கணவன் பொய்யுரைநினைத் துக் கோபித்து நிற்க, அக்கோபத்தை அவள்கணவனது படுக்கையில் நிகழ்ந்த கலவிப்போரே வெற்றிகொண்டது. கொலைத்தொழிலேயுருக்கொண்டதொத்த கண்ணையும், மேகலைநீங்கிய அல்குலையுமுடையதோர் மாது தன்கணவனைத் தழுவிக் கல்லினுந் திண்ணியஅவன் மார்பிலே தன்முலைக ளூடுருவிச்சென்றன வென்று தன்முதுகைப்பார்ப்பாள். மாதரின்பத்தை ஆடவரனுபவிப்பதனால் தொய்யிலெழுதிய குங்குமமுதிர்ந்தன, கூந்தல்சோர்ந்தன, கைவளைகள் ஒலித் தன. சூரியன்முன் பனிபோல் ஊடலைக் காதல்நீக்கவே முன்னே ஊடல்தீர்க் கையில தானிணங்காமற் போனமையால் பதைக்குஞ் சிந்தையுடையாளாய் ஆபரணமணிந்த மயிலன்ன ஒருமாது பொய்யுறக்கங்கொண்டு கனவென்னுஞ் சூதினால் தன்கணவனைத் தழுவுவாள். ஒளியமைந்த முகமும் மயிலன்னசாயலு முடையாளும் ஒருதலைவனும் ஒருவரையொருவர் கிடைக்கப்பெற்றபோது இரண்டுடலு மொன்றுபடத்தழுவினர். அவ்வாறு பொருந்திய ஊடலைப்பிரித் தலையென்றமையால் தழுவுதலினின்று நீங்கிலர், வைகறையாதலையும் பார்த் திலர். மதயானைபோல்வானொருவீரனும் கரியகூந்தலையுடையா ளோர்மாதும் கலவிப்போரினால்தொய்யிலெழுதிய தனபாரத்தைச்சுமக்கவலியற்ற இடையே போலத் தன்வலிகுறைந்துநின்றனர். நல்லொழுக்கம் முற்றப்பெறாதார்பெற்ற செல்வம் தேய்வதுபோல சந்திரன் ஒளிகுன்றினான். திருமாமகள் கணவ னாகியஇறைவன் மார்பிலணிந்த கவுத்துவமணிபோல் சூரியன் உதயகிரியிற் றோன்றினான்.

உண்டாட்டுப்படலம் - முற்றிற்று.

---

## எதிர்கோட்படலம்.

வேதநெறியே யொழுகும் தசரதசக்கரவர்த்தி பருவ மேகம்போன்ற யானைகள் மதமாகிய வாற்றைப்பொழியும் படைக்கடலொடு கங்கையைச் சேர்ந்தது. அக்கங்கை நீரை அப்படைகளான் மொண்டு பருகப்பட்டு உப்புடையகடலும் தெண்ணீர்பருகும் வேட்கைமிக்கது. அங்குநின்றும் அப்படைபுடை பரந்துசெல்ல மிதிலைநகரமென்று சிறப்பித்துக் கூறப்படும் நீர்வளம் நிலவளம் குடிவளமிருந்த நகரத்துக் கருகே யுலகமுழுதுமுடைய சக்கரவர்த்தி வருகையில், சனகராசனே அவன் வருகையினைத் தூதுவராலறிந்து தன்மனத்திற்களிப்பு மிகுதிபெற, தன்னுல்வகைச்சேனையும் சூழ்ந்துவரச்சந்திரன் சூரியனைச்சார்வதேபோல, இந்திர திருவமுடையானைத் தானெதிர்சென் றழைக்க வந்தனன். சக்கரவர்த்தி சேனைவெள்ளமோ ஒழிந்த கடல்களெல்லாம் ஒன்றுபட்டுவந்தாற்போ னெருங்கின. பதுமாசனியாகிய திருமாமகளைப்பெற்ற பாற்கடலெதிர்வதேபோலச் சனகராசனது நகரமாந்தர் எதிர்வந்தனர். சக்கரவர்த்தி சேனைக்கடல் மயிற்பீலிகளும் வெண்பட்டுக்குடைகளும் பீலிக்குடைகளும் எங்கு நெருங்கக்கலந்து நிற்பதனுல் சூரியனொளிமறைபட்டு செந்தாமரைமலரும் வெண்டாமரைமலரும் பலமலர்களும் தங்கிய தடாகம்போன்றிருந்தது. இவ்வகைப்பட்டாளென நூலுணர்வறியாதவிசையை மடியென்பதெனைத்துணையுமில்லாத வெற்றிக்குடையி லுள்ளாளோ! அவர் செல்லுநிலத்திலுள்ளாளோ! கடற்படையி லுள்ளாளோ! அவன் மார்பிலுள்ளாளோ! அவனது முடியிலுள்ளாளோ! வென்று சொல்லும்படிநின்றது. அச்சேனையில் யாழ்முதலிய பஞ்சகருவிகளின் குரல்முதலிய யாழொலி கச்சணிந்த முலையையுடைய மாதரார் கரிபகுழலிற்படிந்த வண்டினொலியாம், தேரூர்ந்து செல்வதனுலாகிய ஓசை கடலொலியாம், யானைகளினது கர்ச்சனை மேக கர்ச்சனையாமெனச் சொல்லக்கிடந்தது. உலகைச் சூழ்ந்துகிடக்கும் கடல்களும் தூர்ந்து மேடாக அச் சேனையிலுண்டாகிய செந்தூளெழும்பி உலகமுழுதும் பரந்ததென்று சொல்வதற்கெளிதாமோ? அது உலகமுண்ட பெருவாயனும் உலப்பில் சீர்த்தியெம்மானுமாகியகள்ளமாமாயன் உலகளந்தகாலத்தில் வலத்திருவடிதொளைத்துச்சென்றவழியேசென்று அச்செந்தூள் அப்புறம்போய்ப் பரந்தது. அரசருடைய பெருங்குடைகள் வானைமறைத்து நெருங்கிச்செல்வதனுல் உண்டாகிய நிழலாகிய இருளினை வேறொன்றாற் போக்குதல்கூடாது. அச்சேனை போகுங்காலத்தில் சிந்திக்கிடக்கும் மணிகளினொளியால் அவ்விருணீங்கும். இவ்வாறு சக்கரவர்த்தி சேனையுடன்வருகையில சனகராசன் எதிர்கொண்டு வரும்வழியெல்லாம் எழுகின்றபேரெல்லாம் கதம்பப்பொடியும் பொற்றுகளும் பூந்தாதுகளுமாயிருக்கும். அவர்செல்லும் வழியிலுள்ள சேறெல்லாம் கூந்தலிலணிந்த மாலையிற்சிந்தும் தேனும் மயிர்ச்சாந்தும் குங்குமப்பொடியும் அகிலும் சந்தனமும் கத்தூரிப்பெருக்கும் கலவையும் மதச்சேறுமேயாம். அவ்வழியிலுள்ள நிழல்களோ பொன்னுற்செய்த வாகனங்களிலும் மணிகளாற் செய்த வாகனங்களிலும் போய்வந்துலாவும் கெடாதநிழலும்வெற்றிக்கொடிகவ் விதானங்கள் வெண்கொற்றக்குடைகள் இவைகளாலுண்டாகும் நிழல்களாகுமாம்.

இப்படிவருஞ் சக்கரவர்த்தியின் நால்வகைச் சேனையோடு சனகராசன் சேனைவந்து சேர்ந்தபோதுண்டாகிய ஓசை அலையெறியும் கடலின்மேல்கங்கையாறு பாய்வதனாலுண்டாகிய ஓசையோ டொத்திருந்தது. எல்லாநற்குண நற்செய்கைகளுக் கிருப்பிடமாகி யாவருக்கும் தந்தையையொத்த பெருந் தன்மையுடைய தசரதசக்கரவர்த்திக்கு முன்னே கட்டுத்தறியை முறிக்கும் யானைப்படையுடைய சனகராசனும் காதலானுந்தப்பட்ட தன் சிந்தையையே போல நெடுந்தேரிலேறிவந்து சேர்ந்து தேரைவிட்டிழிந்து தன்றிரண்டசேனை பின்னே நிற்கத் தான் முன்னேநடந்துபோக, அதைக்கண்ட சக்கரவர்த்தியும் கையாற் குறிப்பிக்க விரைந்து சக்கரவர்த்தி தேரிலேறினின்றான். சக்கரவர்த்தியும் தன் அகமு முகமுமொத்துமலர அவனைத்தழுவிக்கொண்டு அவனுடைய சுற்றத்தாரையும் நட்பினரையும் உள்ளன்பொடு விசாரித்து முன்னேசெல்லென்று கட்டளையிட்டுத் தான் மிதிலையைநோக்கிநடந்தான். இவ்வாறிருவரும் போகையில் செந்தழல்வண்ணனாகிய சிவபெருமானது பொன்னிறமமைந்து கிடக்கும் நீண்டவில்லைமுறித்துத் தனக்குத்தானே யொப்பென்றுசொல்ல விளங்கும் ஸ்ரீராமபிரான் தன்தம்பியுடன் சனகராசன்நகரினின்றும்புறப்பட்டுக் குதிரைப்படையும் காலாட்படையும் இருபுறத்தே சூழ்ந்துவர மரகதமணியாற் செய்யப்பட்ட தேரிலேறிக் காவிமலரும் குவளைமலரும் காயாமலரும்போன்று சித்திரமுஞ் சுவைகெடத்தோன்றும் வடிவுடன் முன்பிரிந்தவுயிர்மீண்டும்வந்த தென்று சொல்லும்படி சக்கரவர்த்தியையடைந்து தன் தாதையாகிய சக்கரவர்த்தியினது பாதங்களில் மும்முறைவலம்வந்து பணியவே, அவனை வாரியெடுத்து தோளொடுதோளும் மார்பொடுமார்பும்பொருந்தத்தழுவினான். பின்பு இளையபெருமாள் வந்துவணங்க அவனையும் அவ்வாறே தழுவி நிற்க விடைபெற்று இராமலக்குவ ரிருவரும் தம்மை மக்களாகப் பெற்றெடுத்துவளர்த்த தாய்மார் மூவரையும் பணிந்தார்கள். அவ்வாறு பணிந்த மக்களைக் கண்டபோதுண்டாகிய உவகைக்கோ ரெல்லையில்லையென்று விளங்கியது. தன்னையெப்போதும் நினைக்கின்ற அன்பு உள்ளத்தேநிறைந்து புறத்திலுமொழுகியதென்று சொல்லும்படி ஆனந்தக்கண்ணீர் பொழிந்து வணங்கிய பரதனைச் ஸ்ரீராமனும் மார்புறப்புல்லி நிற்கையில் அவ்விராமன் பரதனென்னும் இருவரையும் இலக்குமண சத்துருக்கர் வணங்கக்கண்டு அவர்களையும் அவ்விருவரும் மார்புடன் பொருந்தப்புல்லினர். நான்குவேதங்களே யென்னு மொழுக்கமுடையாராகிய இந்நால்வரும் நிற்கின்றவைபவங்கண்ட சக்கரவர்த்தி சேனைத்தலைவரைநோக்கி முன்னேகொண்டு செல்லீரென்று கட்டளையிட்டருளினான். தம்மிருபுறத்துந் தம்பாலன்புடைய தம்பியர்மொய்த்து குதிரையேறிச்செல்லத் தம்மைக்கண்டு ஆசீர்வதிக்கும் மலரும் இறைக்கும் அக்ஷதையும் தன்னைப்பார்க்கும் மாதரார் கண்பார்வை மேல்விழாமல் நிற்கப் பவனியாக மிதிலாநகரத்தின்வழியே செல்கையில் அவ்வீதியிலுள்ள மாதரது கைவளைகள் அசைதலாலும் பாதத்திலணிந்த நூபுரங்கள் நடனவிதியைக்காட்டுவதனாலும் யானைத்தந்தத்தின்பெருமிதத்தினைச் செருக்கும்படியெழுந்த கொங்கைகளையுடைய வேசியராடரங்கே நகைவிளங்க நித்தருக்கெல்லா முதல்வனாகிய இராகவபிரான் போகையில்

குறைவற்ற படைகளை யுடைய மன்மதன் தன் கையம்புகளை யேவுதலால் பேதை பெதும்பை மங்கை மடந்தை அரிவை தெரிவை பேரிளம்பெண்ணென்னுமெழுவகைப்பருவத்து மாதரும் அவ்வீதியிலடைந்தவிதஞ் சொல்வோம்.

எதிர்கோட்படலம்.

முற்றிற்று.

---

## உலாவியற்படலம்.

---

இவ்வாறு ஆடம்பரமாய் இரகுகுலோத்தமன் பவனிவருகையில் மானினம் வருவனபோன்றும், மயிலினந் திரிவன போன்றும், மீனினம் நெருங்குவன போன்றும், விண்மீனினம் விளங்குவன போன்றும், வண்டினம் மிகவுமாரவாரிக்கக் காலிலணிந்த சிலம்பினஞ் சத்திக்க, எங்கும் அழகிய கூந்தலையுடைய மாதரார் விரைந்து புகுந்து மொய்த்தனர். அம்மாதரார் விரிந்து சோர்ந்த கூந்தலைமுடியாமலும், அற்றனவாகிய மேகலையை மதியாமலும், சரிந்த அழகிய ஆடைகளையுடுக்காமலும், மெல்லிய இடையில் தமொழிகிற்க, அதனாலே சிறிதுங் காலதாமசஞ்செய்யாமல் நெருங்கிவந்து ஒருவரைப்பார்த்து ஒருவர்போங்கோள் போங்கோளென்று தேனையுண்ணவரும் வண்டினம்போல மொய்த்துக்கொண்டு, நாங்கள் காதலென்னும் பொருளைக் கண்ணாலேகாணகின்றேமாதலால், பெண்டன்மை யின்றுதான் பெற்றோ மாகின்றோமென்றெண்ணிப் பூமியில் நீருண்ட மேகம் பெய்யுமழை சிறிதுமில்லாமல் வறழ்ந்தபோது நீரை யோரிடத்தே கண்டு தாவுகின்ற மான்கூட்டம்போன்று, மிக்க வேட்கையான் மொய்த்து, பள்ளநிலத்தில் பாய்கின்ற தெளிந்த நீரையுடைய வெள்ளத்தினும் பெரியகண்களையுடைய மாதரார் மெல்லிய தொழிலமைந்த சிலம்புள் ஒலிக்கும்படி பாதமாகிய மெல்லிய தாமரைமலர்கள் தள்ளாடவும், தம்முடைய இடைகள் வருந்தவும், தம்மையும் வலித்துக்கொண்டு அவ்விறைவன்பாற்செல்லும் தங்கள் நெஞ்சினைப் பிடிப்போமென் றோடுவார்கள். அகலிகைகண்டு மகிழ்வெய்திய சீபாதங்களையும், இயற்கைமணநிறைந்த கருங்குழலையுடைய சானகிக்காக வில்லைமுறித்த உயர்ந்தோளையுங்காண வீதியில் நெருங்கிய மாதரார் அமுதத்தைமெய்த்துக்கொள்ளுகின்ற ஈயினம்போலவும், அவ்வாறுமெய்த்துக்கொண்டமாதருடைய கண்ணோக்கங்களுள் தாவிச்செல்லும் குதிரைகள்பூண்ட தேரிற்செல்பவனாய், யாவருக்குங் கண்ணனென்று தன்னையாவருங் கூறுகின்ற பெயர்ப்பொருளைக் காரணப்பெயராக்கிச் சென்றான். இரவிகுலோத்தமனுடைய தேரிற்பூட்டிய குதிரைகள் மனோவேகத்தினுமிஞ்சிச்செல்கின்றதென்று அம்மாதரெல்லாம் தங்களுக்குள்தாங்களே பேசிக்கொண்டனர். இவ்வாறு மாதராரெல்லாம் உன்மத்தம்பிடித்தவராய் மண்ணையும் விண்ணையும் தாவியளந்த திருவடியினையுடைய பகவான் தன் கண்மயலைக் காவாமற் காத்துக்கொண்ட சானகியே பெரியளென்று சொல்லும்படி அவ்வீதியினடக்கையில், அவருள் ஒருத்திதன்னுயிரொன்றே யொழிய, பயிர்ப்பப்

போன்று பிரியமற்பொருந்திய சேலையும் பதிப்பில்லாத பெண்ணலத்தையும் கைவளையையும் இயற்கைக்குணத்தையும் குற்றமற்ற அழகையும் எண்ணத்தையும் அறிவையும் மாமைநிறத்தையும வயிரம்பொதிந்த அணிகளையும் நாணத்தையும் கற்பின் வரலாற்றினையும் முழுதுமொழிந்துநின்றாள். காதிலணிந்த குழைகளிற் பாய்ந்துதோன்றும் கண்களாகிய சேல்கள் மேகம்பொழிவதுபோல நீர்த்துளிகளைப்பொழியத், தழையில்லாத கரும்பாகிய வில்லை வளைத்து அதினின்றும் அனங்கன் விடும் பஞ்சபாணம்பாய்வதனால், துவளிழையும் அதனிடத்தே செல்லாமற்றடைசெய்திருமாய்ந்து மார்பிடமெலாங்கவர்ந்து ஈர்த்திடைபோகா விளமுலைமாதொருத்தி சோர்ந்து மேகத்திலில்லாத மின்னல்போன்ற தன்னிடை துவண்டு நின்றாள். பஞ்சின் மெல்லிய விரல்களையுடைய மாதரது வேற்படைபோன்ற கொடியகணைகளெல்லாம் இறைவனது கரிய திருமேனியை யடையப்பெற்றனவோ, அல்லது மேகம்போலுந் திருமேனியையுடைய இறைவனது அழகிய நிறம் அம்மாதரார் கண்ணெச்சில்படக் கறுத்ததோ தெரியாதென்று சொல்லக்கிடந்தது. மாந்தளிரேபோலும் மென்மையுடையாளாகிய ஒண்ணுதலொருத்தி மாதர்மேலெல்லாம் மன்மதன் பூவாளிபொழிந்த போரைக்கண்டு அச்சக்கரவர்த்தியினது ஆண்டன்மையை மறியாமலும், இரகுநாயகன் வில்லாண்மையைப் பாராமலும், இம்மாதர்மேல் தன் மலரம்புகளை யோயாதெய்து நின்றமையால், அப்படி அஞ்சா நெஞ்சு படைத்துப் புட்பபாணம் பொழிகின்றவன் எப்படிப்பட்டவனோ வென்று சொல்வாள். சொல்லுக்கும் மற்றெவ்வகைப்பட்ட இன்பங்களுக்கும் மேம்பட்ட காமச்சுவையே யோருருவமாகச்செய்து இன்பநலங்களை யறியவல்லார் எழுதியவாறேபோன்று அசைவற்று நின்ற பொன்னம்பாவையையொத்த தன்மையுடையவள், இவளோ தானணிந்திருந்த எல்லாவணிகளையும் நீக்கினளாய்த் தன்னையுந்தாங்கும் வலியொழிந்து சேலையொன்றனையுமே தாங்கி நின்றனள். மயிலன்ன சாயலாளொருத்தி வில்லினையேபோன்ற நெற்றியில் வெயர்வொழுகவும், பசலை யுடன்முழுதும போர்ப்பவும், மனந்தளர்ந்து நின்று மற்றொன்றும் காணுமே தன்மனஞ்சிதறும் தன்னிடத்தின்றிச் சிராமன் பக்கல்போயினமையாலே வள்ளற்றன்மையுடைய கோசலைராமன் தனியனோ வென்று கூறுவாள். மேகம்போலுங் கூந்தலும் சிவந்தவாயும் ஒண்ணுதலுமுடையாளொருத்தி மனந்தளர்ந்து உருகிநின்று தோழியே இவ்வஞ்சகன் என் நெஞ்சில்வந்து புகுந்தான், இனி அவன் வெளிப்பட்டுப் போகாதவகைசெய்யவேண்டும், அது என்கண்ணென்னும் ஐம்புலக்கதவைச்சிக்கென அடைத்துச் சேமிப்பதே தகுதியென்றெண்ணிச் சேமித்தேன் பூம்படுக்கையைச் சோலாம் வாவென்று சொல்லுவாள். திருமாமகள்போன்ற தன்மேனியிற் றைத்த காமபாணங்களை மறியாமலும், அணிகலனும் ஆசையும் வெவ்வேறானமை யறியாமலும், அப்போதுதான்செய்த பசும்பொற்பாவையன்னா ளொருத்தி அவ்விடத்தே சிராமனைக் காண்பவரையெல்லா மெரியெழப்பார்ப்பாள். களித்து மதர்த்து நீண்டு கதுப்பினையளந்து கள்ளமறைதற் கிடமாய் அப்புறப்பட் டுருவ நோக்கிச் சிவந்து உள்ளே வெளுத்துக் கறுத்தவேல்போன்ற கண்ணாளொருத்தி

மனக்களிப்பாகக் காணவந்து, கண்டபின்னே காமவெப்பத்தோடு மனைக்குட் சென்றாள். இரகுவீரன் மேனியைக் கருங்குழற் பாசத்தாலும் தனபாரத் தாலும் மேகலையணிந்த பாரத்தாலும் மறைக்கப்படுவதனால் சிறிது நீங்கிஇடம பெருமற் புலம்புறு மாதொருத்தி காண விழையுங் கட்டழகு தன்னை எவ்வுதனால அம்மாதரிடை வெளியேகண்டு களிப்பாள் அவ்விதமாதர் மனத்தில் தைத்துக் கழன்றுபோன மன்மதபாணங்களும், அம்மாதரெறிந்துவிட்ட ஆபரணாதிகளும், அவர் முலையில் வியர்க்க ஒழுகிய சந்தனமும், சரிந்து வீழ்ந்த சந்தனமும், சரிந்துவிழ்ந்தமேகலாபரணமும், முத்துவடமும்,கைவளையல்களும், குழல்சோர்ந்து வீழ்வதனாற் சரிந்த பூமாலைகளுமல்லது வெற்றிடமிரிதென்றுசொல்ல இருக்கும். அவ்விராகவன் வீதிவழியே போகையில் அவன் தோளழகிலே யீடுபட்டவர் அத்தோளினிடத்தே கருத்துவைத்தனரன்றி வேறிடத்தே மீட்கரிதா யிருப்பார். வீரக்கழல்பூண்ட சேவடியினழகிலே யீடுபட்டவர் அச்சேவடியினழகிலேயே சிந்தைவைத்திருந்தனர். விசாலமான கைகளினிடத்தே யீடுபட்டவர், அவ்வாறே கையினிடத்தேயே சிந்தை வைத்திருந்தனர். வாளினழகைக்கொண்ட மாதரில் அவனழகை முழுதுங் கண்டு அனுபவித்தவர்யாவரென்றே சொல்லத்தக்கது; சமயக்குருடர் இறைவனது உண்மை நிலையைக் காண முடியாவாறே போன்றிருந்தது.

உலகமுண்ட பெருவாயனிலும் பெரியரினியாருண்டு; அவனேசிற்றிடையுநீண்ட கூந்தலுமுடைய பெண்ணொருத்தியினது உள்ளத்தில் அவனுய்யும் படி அடங்கினனென்று சொல்லிக்கொள்வர். ஒருமாது சிராமனைக்காண வேண்டுமென்று சிலம்பு மேகலையுமொலிக்க அலங்கார நிறைந்த பூங்கொம் பேபோல நடந்துவந்துசேர்ந்து தன்வருத்தம் நோக்கிவருந்தும் தோழியர் கைமேற் சென்றாள். தாமரையரும்பையொத்த குவிமுலையிணையுடையாளோர் மாது பேரழகே வடிவமாக முன்னைப்பிறவியிற் செய்தருந்தவமுடையான் தனிமையாய் தேரேறிப்போகவிட் டென்னெதிரேயெய்த நின்றமைதானிவன் செய்தகபடநாடகசாலமோ! அல்லது கனவிற்கண்ட நிலையோ! வென்று கரைவாள். மனத்தையல்லது துதுபெற்றியாளாய்த் தன்னினியவுயிர் சோர்பவளாகியமாதொருத்தி தாமரைமலர்போன்றுசெவ்வரிபரந்தவிழியிணையும் குழையிணையடைந்து ஆபரணமணிந்த தனத்திணையுமுடைய சனகி என்ன தவஞ் செய்தனளோவென் றேங்குவாள். சாமுத்திரிகாசாத்திரங் கூறியவண்ணம எல்லா இலக்கணமுமமைந்த பாவைபோல்வாள் அழுது பெருமூச்செறிந்து தன்பாங்கினின்றதோழியைப்பார்த்து தொழுது சோர்ந்தயர்ந்து இவ்வரசிளங் குமரனை இம்மன்மதனால் எழுதலாமோவென்று சொல்வாள். அழகிய வாயினையும் ஒண்ணுதலையுமுடைய வோர்மாது சாதாரணமாய் மானிடவர்க் கிவ்விலக்கணமெல்லாம் எய்தப்பெறுமோ? இதனையுணர்த்துகின்றேன்,இவனே கண்ணபிரானேயாம், இதனைப்பின் கண்டிருமென்பாள். ஒண்ணுதலொருத்தி பொன்னாற்செய்த காற்சிலம்பு கைவளைகளோடு கழன்றுவிழப் புனிதன் இஞ்ஞான்று இம்மிதுலாநகரமடைந்தது சனகராசன்முன்னைப்பிறவியிற்செய்த தவமேயென் பாள். நீர்துளிக்கும் கண்களையும் பசும்பொன்னணியணிந்த வொருமாது தன்

ணழகினலம் நீங்கவருந்தி, இவ்விராகவன் முனிவரும் அரசரும் புடைசூழ்ந்து வாரமல் கனவின்கண் தனித்துவருவானே! என்பாள். புனத்தை யிடமாகக் கொண்ட கார்காலத்து மயிலன்ன சாயலையுடைய பொன்னங்கொம்பனையா ளொருத்தி தன்மனத்தின்புறத்தே வெளிப்படுத்தவொட்டாமல் மறைத்துவிட வெண்ணி, அவ்வாறுசெய்யக் கருதியதை மனத்தைப்போல முகமும் மறைக்குமோ? மறைக்காதாகையால் அனங்கனுகிய மன்மதனே இதையறிந்துவிட்டானென்று சொல்வள். ஒத்தவுருவமைந்த நெடுங்கண்ணையும் மேலாய அணிகளையுமுடைய மாதொருத்தி பூவணைபொன்றிற் சேர்ந்து, இடியோசை கேட்ட நாகமேபோல நெருங்கிய அழகுமிக்க தனங்கள் ஞெமுங்கி யறிவு கெட்டு வருந்தி பெருமூச்செறிவாள். செவ்வாம்பலை நிகர்த்துச்சொல்லாகிய அமுதம் பொழியுஞ் செவ்வாயையுமுடைய மாதரார் உள்ளமிகப்பதைத்து உயிர்தடுமாறுவர். கொங்கைப்பாரம் பொறுமேவருந்துகின்ற சிற்றிடையை யுடைய சானகியரைப்போலச் சிறிது களிப்பையும் பெற்றாரல்லர். எவ்வாறு பிழைப்பார். உயிர்நிலைதளர்ந்து வருத்தத்துடன் விருப்பமு முற்றுப்பெறுது கவலையுறுகின்ற மாதராரெல்லாரையும் இவ்வாணலழகன் சிறிதுங்கருத்தாலும் செந்தாமரைபோலுங் கண்ணலும் நோக்கிப் பாராமலிருப்பதனல் அவன் உள்ளத்தில் அன்பில்லனே என்பள். தேனைப்பற்றித் தொடர்ந்துசெல்கின்ற மாதாரரேச அளவற்றவர். அதுகாரணத்தால் அம்மாதரையெல்லாம் எய்கின்ற அழகிய வில்லையுடையானுகிய மதனனும் யாதுதான்செய்யக்கடவன்? கையம் பொழிந்துபோக உடைவாளிலேயும் கைவைத்தான். மணமிக்க கூந்தலை யுடையமாதர்பால் நடந்த போரினையல்லாது வேனிற்காலத்திற் சீறிய மன்மதனுக்குச்சுவர்க்கலோக வாசிகளாகிய அரமகளிர்பால் நடந்த போரினையறிந்த தில்லை, அவ்வம்புகள் படர்ந்து சென்று அவ்வான நாடியர் கொங்கைகளிலுஞ் சென்றுதைத்தன.

மிகவுமயங்கும் மங்கையாரிடத்தே யொன்றையும் விரும்பாமற் சும்மா போவதே இவனதுசெய்கை யாதலால் இவன் கருணையென்பதைச் சிறிதுங் கண்டறியான். மங்கையரிடத்தே கருணையில்லாமையால் பெருமையாகிய பக்குவப்பட்ட ஞானமுடையாவெனின், நமது சனகியாரைத் திருமணஞ் செய்துகொள்ளச் செல்வதனல் அவனுமல்லன். பின்னையாரெனின்,கொலைத் தொழிலில் வல்லவனே யாமென் றொருத்தி கூறுவாள். தொய்யிலெழுதிக் காமவெப்பமுடைய கொங்கைகளால் உடுக்கைபோன்று இடையே வருந்தும் ஒரு சிற்றிடையுடையமாது கையுமெய்யு மறியாள் கண்டதோழியோ பிழைப்பாள் பிழைப்பாளென்று சொல்ல உடல்தளர்ந்து செயலற்றிருந்தாள். பாகின் மென்மொழியுடையா ளொருத்தி கமுகமரத்திற் பூட்டிய உஞ்சலிலாடுவாளைப் போன்று, மலரினும்மெல்லிய பாதங்கள்காய்ப்பேற இரகுநாயகன் திருத்தேரின் பின் பலகாலுஞ்சென்று மீள்வள். ஆசைமிகுந்த பின்னேயொருவர்க்கு நாண முண்டடாயிருக்குமோ? இராதாகையால், மிக்ககாதலினல் மருள்கின்ற மாதர் களுக்குள் ஒருத்தி அங்கே மற்றொருத்தியைப் பார்த்து, என்மனத்தையும் இரகுபுங்கவன் பின்னுற்போகக் கண்டதுண்டோ வென்பாள். திருமகளே

போனு மழகினையுடையாளொருத்தி தம்மைவிரும்பி யடைபவருயிர் பிழைக்க இவன்வழிவந்தோர் செய்தனர்; எங்களின் னுயிரை எங்களுக் கீயாதகொடுமை இவனுக்கெவ்வாறு விளைந்ததென்று சொல்வாள். நானோ இவனை விரும்பத் தானென்னை விரும்பாதிருக்கின்றானென்று புறத்தேசொல்ல அச்சத்தாலே தன்னுள்ள மழிபவளாகிய ஒருமாது சானகியினது கன்னித்தன்மைக்குக் காவலாகிய வெற்றிமாலை பூண்டவில்லை இவன் முறித்ததை யெண்ணுமிடத்து, அகிற்புகையும் மாலையும் அமைந்த கூந்தலையும் தூயமொழியையுமுடைய சானகியாரிடத்தில் வைத்த விருப்பத்தாலல்ல, தனுர்வேதத்தில் தானடைந்திருந்த புலமையைப் பிறரறிய வேண்டுமென்றெண்ணியேயென்பாள். முத்துவடமும் ஆடையும் மற்றையணிகளும் சோர்ந்து விழத் தன்னின்னுயிர்சோர்கின்ற சோர்குழலொருத்தி கண்டோர்க்கச்சம்பயக்கும் திரியம்பகமென்னும் வில்லினைவளைத்த இவ்வரசிளங் குமரனாகிய மன்மதனுக்கு முன்னேயென்னை உயிர்வாங்கும் வலிமைபெற்றவர் யாரென்பாள். இவ்வாறு மாதர்களெல்லாம் நெருங்கிநிற்க, வள்ளற்றன்மையுடைய தாசரதிபோய் காமம் வெகுளி மயக்கமென்னும்முக்குற்றமு மகன்ற சிந்தையையுடைய வசிட்டமுனிவரும் விசுவாமித்திரமுனிவரும் தங்கியிருக்கின்ற அத்தாணிமண்டபத்திற் கரசர் கூட்டத்தொடுஞ் சேர்ந்தான்.

அறப்பயிர்வளர்க்க அயோத்தியில்வந் தவதரித்த சீராமன் குற்றமற்ற மணிவடங்கள் மின்ன வுலாவினாற்போல மார்பிலசைந்தாட, கார்காலத்து மேகம் நிலத்திற்படிந்ததுபோல எட்டுறுப்பும் நிலமுற, அம்முனிவரிருவரையும் பணிந்துநிற்கவே, அவர்களும் அவனது குணசேட்டிதங்களைப் புகழ்ந்தவராய் அவ்வளவி லிருவெனவேவ, அலங்காரமமைந்த ஓராசனத்தில்தன் தம்பியர் புடைசூழ வெழுந்தருளினான். பின்பு சித்தர்வசிக்கும் திருமாமணிமண்டபம் போல்வதாகிய அம்முனிவர்களும் இரகுவீரனும் இளையவீரரும் இருந்த அத்தாணிமண்டபத்தில் நால்வகைச்சேனைக்கடலையுடைய சக்கரவர்த்திவிண்மீன் தன்புடைவர வானில்வரும் திங்களேபோலத் தம்முறவினரோடும் போய்ச் சேர்ந்து அங்கெழுந்தருளிய முனிவரிருவரையம்முறைமையால்வணங்கித்தன் மேல் அந்தணர்கள் வாழ்த்தி மலர்மழைபொழிய, இந்திரன்முகநாண, இந்திரனென்னத் தானொருசிங்காதனத்தில் வீற்றிருந்தான். அப்போதுவங்கர் கொங்கர் கலிங்கர் முதலிய ஐம்பத்தாறு தேசத்தரசரும் வந்துசேர்ந்தனர். மிகவுமோங்கி வளர்ந்துயர்ந்த கீர்த்தியின்பூங்கொழுந்து பொலிவனபோல தீங்கரும்பினுந்தித்திக்கு மினியசொல்லையுடைய மாதர்கள் சாமரைகளைத்தாங்கி இருபுறத்தும் வீசினர். வண்டு, ஞிமிறு, சுரும்பு சூழ்ந்த திரியும் வாசனையுடைய மலரைமுடித்த கூந்தலையுடையாராகிய சுமங்கலப் பெண்கள் வேய்ங்குழலினோடு பொருந்தக்கூறும் பல்லாண்டி னோசையானது மழலையாழிசையோடு மிகுந்திருக்க, யானைப் படையையுடைய சக்கரவர்த்தியின் வெண்கொற்றக்குடைவிளங்க, சந்திரன் தன்குலத்திற்பிறந்த கொடிபோன்ற சானகியார் திருமணத்தைக் காணவந்து ஓங்கிப் பார்த்ததுபோலிருந்தது. எள்ளிடவிடமின்றியெங்குஞ்சேனைகள் கடல்போற்பெருகியிருப்பதனால் சனகனது மிதிலாநகரமானது உலகமே என்று சொல்லச்சிறந்தது.

உலாவியற்படலம்—முற்றிற்று.

## கோலங்காண்படலம்.

சிங்காசனத்தில் தன்தேவியர் மூவரும் இனிதுசூழத் தசரதசக்கரவர்த்தி சிங்காதனத்தில் வீற்றிருக்கையில், சனகராசனை நோக்கி வசிட்டமுனிவன் திருமகள்போலும் அழகினையுடைத்த சீதையை அழைத்துக்கொண்டுவரக் கட்டளையிட்டார். அக்கட்டளையைப்பெற்ற சனகராசன் தன்னருகிருந்த மாதரை நோக்கிச் சானகியாரைத்தருவிக்கவேவ அவர்களும் தோழியருக்கறிவித்தனர். அவர்கள் சானகியாரை அலங்காரஞ்செய்து அழகிய செம்பட்டை யுடுத்தி நிற்க, சானகியார் சாமரையிரட்டக்கலாப நிழலைத்தர, அந்நிழலிலே விளங்குங் கருமயில்போல விதானநிழலில் நடந்தருளிவந்தாள். அவளைக்கண்டவுடனேசித்திரப்பதுமைபோ லசைவறநின்றுவிட்டனர். காண்பதற்குமுன்னே தான்கன்னிமாடத்திற்கண்ட கன்னியாமெனவும் அல்லவெனவும் ஐயப்படுகின்றசிராமன் அமுதம்போன்ற சானகியாரை எதிர்கண்டு நீங்குமோ,நிற்குமோ வென்றெண்ணிவருந்தும் உயிர் நிலைக்கத்தக்க ஆராக்காதலுடன் திருப்பாற்கடலைக் கடைந்தபோதுவருந்தி அமுதம்பிறந்தமையால் கழிபெருமகிழ்தலைப் பெற்ற இந்திரனைப்போற்களித்தான். அப்போது வசிட்டமுனிவர் எங்கள் செய்தவமுடைமையாற் சிராமனாகத் தோன்றினான். சங்குசக்கரமுடைய தனிமுதல்வனாகலின்,அத்தாமரைமலரி லெழுந்தருளிய திருமாமகளாகும் இச்சானகியாரென்றெண்ணி மனமகிழ்ந்தான். தசரத சக்கரவர்த்தியோ சீதாபிராட்டியி னழகைக்கண்டு உலகமுழுதும் அரசாண்டு வருபவனாயிருந்தானாயினும்,இவளைமருகியாகப்பெறுதற் கென்னதவஞ்செய்தேனென்று சொன்னான். இராமபிரானும் முனிவர்களும் அல்லாத பிறர்க்குச்சீதாபிராட்டியார் நெருங்கி வருதலும், தேகமானது சிக்கையப்பட்டதாகலின் கரணங்களெல்லாம் தெய்வமெனப்பொருந்தின. அவரவர் தஞ்சென்னிமேற் கைகூப்பிநின்றனர். தன்னிருக்கையாகிய செந்தாமரை மலரைவெறுத்து அரசர்வாழ்மனையிற் குடிபுகுந்த சானகியார் முனிவர்களை முன்னேவணங்கிச் சக்கரவர்த்தியைத் திருவடிதொழுது திருமணநிறைவேற்றப்போகின்றதே யென்று மனமகிழ்ந்துஆனந்தக்கண்ணீர் சொரியும் சனகராசனாகிய தன்றந்தையிடத்தேசென்று அவர் அருகேயிட்டிருந்த ஆசனத்தில் தனித்து வீற்றிருந்தாள். ஆடகமால்வரை போன்ற வில்லைவளைத்ததும் முறித்ததும் வசிட்டர் பொருந்தச்சொன்னமையால் கன்னிமாடத்தில் தன்னைக்கண்டு மால்விளைத்த ஆணழகனே யிவனென்று துணிந்தமையால் தான்கொண்டதோ ரையமகன்று,சிராமபிரானைத் தன்னுள்ளத்தே மாத்திர மல்லாமல் புறத்துங் கைவளைதிருத்திக் கடைக்கண்ணா னோக்கிக்கொண்டிருந்தாள். இவ்வாறு பார்த்துக்கொண்டிருப்பதனால் தன்கண்ணின் கடையொளியாறு அப்பெருந்தகையின் பேரழகாகிய கடல் வெள்ளத்திற் பாய்வதனால் ஊசலையொத் துயிர்சுழல, உயர்ந்த அணிகளையணிந்த தெய்வமகளிர்க் கரசாகி அருமையாகிய அமிழ்துமுழுதும் வேறொருவர்க்கின்றித் தமக்கே கிடைத்தவளவில் அதனைத் தாமேயுண்டார்போன்று மனம்பூரித்து, கொல்லுந் தொழிலில் மிக்க யானைப்படையையுடைய அரசர் பெருமான் கல்விகரைகண்ட விசுவாமித்திரமுனிவனைப்பார்த்து, பெரியோய்

வல்லிசாதக்கொடிபோலும் இடையையுடைய சானகியினது திருமணத்துக்குரிய நன்னாளிதுவென்றுசொல்லி யருளவேண்டுமென்று வேண்ட, கயல்மீன்கள்தாவிகிற்பதனால் வாளைமீன்கள் எருமையினது மச்சையுள்ளமுதுகுகிழியக் கமுகின்பாளை மலர வாள்மீன்பாய்ந்து குதிக்கும் நீர்வளப்பமுள்ள வயல்கள் சூழ்ந்த கோசலைநாட்டுக் கதிபதியாகிய சக்கரவர்த்தியே! நீர்கேட்டவாறுசமது சானகியினது மணத்துக்குரிய நாள் நாளையேயென்பதிற் சந்தேகமில்லையென்று விசுவாமித்திரமுனிவர் திருவாய்மலர்ந்தருளினார். அம்மொழிகேட்ட அரசரெல்லாங் கைதொழுது வணங்கி யெழுந்திருக்க, தன்னொற்றை வலம்புரிச் சங்குமுழங்கத் தன்முடிமேல் இளவெயில் பரப்பச்சென்று சூரியமண்டலமளாவு மாடஞ்சூழ்ந்த அழகிய தன்திருமாளிகையிற் புகுந்தார். தாமரையிலிருக்கும் அன்னம்போல்வாராகிய சானகியாரும் அரிதிற்பெயர்ந்து சென்றவுடன், இரகுநாயகனும் அத்தாணிமண்டபநீங்கித் தன்பெண்மனைபுகுந்தான். மற்றையரசரும் தத்தமக்குவிட்டிருந்த விடுதிகளிற்சென்று சேர்ந்தனர். முனிவர்களும் அவ்வாறே சென்றனர். சுடர்க்கெல்லாம் நாயகனாகிய சூரியனும் மானகிரியில் மறைந்தான்.

கோல்காண்படலம்

முற்றிற்று.

---

## கடிமணப்படலம்.

இடம்படு புகழினையுடைய சனகராசன் இன்சொல்லுடன் உண்டிவினையுபசரிக்க, மதம்பொழியும் யானைப்படையையுடைய அரசர் மந்திரிமார் சேனைத்தலைவர் முதல் விசாலமான புயவலிபடைத்த சிறியதம்பியர் வரையிலும் இடையே தம்மாற் காணப்பட்டோருமாகிய யாவரும் உடம்பொடு சுவர்க்கலோகபோகத்தை யனுபவிப்பாரை யொத்திருந்தனர். நீர் வேசையால் வருந்தியருகே யோர் தாடகங்கண்டு அதனிடத்தே தெண்ணீரைப் பருகுதற்குக் காணுதவர்கள் தம்முடல் வலிகுன்றத்தளர்ந் துன்மத்தராவாரன்றோ அதுபோல, பொன்வளைய லணிந்த குயிலன்ன சானகியாரும் அந்நிலையாய் இரகுவீரன் வில்முறித்த நாள்முதலாக ஒவ்வொருநாளுங் கண்படைபெறாது கங்குலில்வருந்தி நின்று, வலிசிறிதுமில்லாதார் உயிரை யிவேமென்றுகூறியுலோபஞ்செய்வாரோ! இல்லை, நீயுமவ்வாறு செய்கின்றனை. சூரியன்உதித்தலும் என்னையடிமையாகவுடையான் வருவான். இரவே! நீ கொடியைவிடிஎன்றும், கருஞாயிறு போல்பவரது சிபாதங்களொடுக் தொடர்ந்துசென்று நாளையருகேவருவாய், வராமலு மொழியமாட்டாய், பலநாள் அவரைச்சேர்ந்து பிரியாமல் தங்கியிருப்பாய், அவ்வாறிருக்க ஒருநாள் தரியாமல் நீங்குவாருமுண்டோ! நீயேன் அவரிடஞ்சென்றனையென்றும், கனைக்கின்ற எழுகடலேபோலும் இரவோ தீவினையுடையேனது தீவினையால்விடியாவிட்டால்பனைமரத்தி லிருக்குமன்றிற் பறவையே; நீ உன் துணையைப்பிரிந்து தனியாகப்பறக்கமாட்டாய், கூவினின்றென்னை வருத்துவதனால் நடுவுநிலை சிறிதுமில்லையாகிப்

பழியை யெய்துகின்றனை யென்றும், நிலவே! கூரிய வேல்போன்ற அழலை விசிகிற்கு மொளிகளையுடைய வெயில்போல விரிகின்றனை, யாதொரு குற்றமுமில்லாதார்தம்முடல்மெலிவர் அவருயிரையும் கொள்ளுவாருமுண்டோ! உன்டேற்சொல்லென்றும், மனமென்னும் அழல்சொரிகின்ற வாயையும் ஒளித்தொகுதியாகிய நிலவென்னும் நகையையும்பெற்று மலைய, மலையிலுள்ளபெருங்குகையிற் குடியிருக்கும் தென்றற்காற்றாகிய புலியே, இரைதேடப் புறப்பட்டாயோவென்றும், குலமன்னரிற் கன்னியரிடத்தே வருவாருமுண்டோ! இல்லையே! அப்படியிருக்க கரியமேகம்போன்ற வொருவர்தெருவிலே திரிபவராய் இரவும் பகலும் என்னைவிட்டுப் பிரிந்திலர் இதுவென்னவென்றும், பிறரால் அறியப்படாத செயலையோ நீயவர் தழுவமாட்டார் அவ்வாறிருக்க, அவரருள் செய்யாமையால் அவர்தோள்களைத் தழுவவிரும்புவாரோ! கூடாது. இரவாகியகடலே! கரைகாண்பரிது, எவ்வளவுஊழிகாலம்இரவேயாயினவோ! அறியேனென்றும், இசையோவொழிபாது, பகற்பொழுதோ வருகின்றிலது,என் எண்ணங்களோ நீங்காதன, இரவோவிடியாது, உள்ளத்திலுண்டான வருத்தங்களோவொழிந்தில, உயிரோ உடலைவிட்டு நீங்காது, கண்களோ தூங்கமாட்டா, இவைதானோ என்கடமைகளென்றும், மன்மதபாணத்திற்கு முன்னில்லாமல் இடையாயினகாலத்தே ஒரு நிலையினில்லாமல் வளைசோர்ந்துவிழவெழுந்து விழுந்திளைத்து நாள்முழுதுந் தூங்காமலிருக்கின்றேன், என்னைப்போல கடலே! நீயும் மன்மதபாணத்திற் கிலக்காயஞ்சிச் சங்காகிய வளைகள் புறத்தேவரும்படி எழுந்தும்விழுந்தும்உடல்தளர்ந்தும் நாள்முழுதும் தூங்காமலிருப்பதனால் ஒருபெண்ணோவென்றும், இவ்வாறு பன்னிப்பன்னி வேறொன்றுந் தன்னாற் செய்யலாகாமையிற் செயலற்று வந்திகின்றாள். இது கிடக்க;

இரகுநாயகனை கன்னிமாடத்தில்முன்கண் டளவிடற்கரிய காதற்பெருக்கால் இருகண்ணாலுங்கண்டு என்மனத்தே பதியவெழுதியும், அத்தாணிமண்டபத்தில் பின்னேயுங் காணப்பெற்றும்,அவர் அழகினை லலையக்கண்டேனல்லேனென்றும், சந்திரனே! விளைகின்ற காமவித்துக்கு முதற்காரணமும், அதன் காரியமாகிய கனியும், துணைக்காரணமாகிய வெருவுமாயினை, ஆகையால் நீ திருமகள்போல்பவளாகிய சானகியாரது திருமுகமேயல்லது வேறன்று, ஆகையால் என்னொருத்தியொடும் உறவாயினாபல்லை, நீ செய்யும்விதம் என்னவென்றும், எவ்விடத்தும் பரந்த விருளோ உடலினின்றும் நீங்காத நிலைமையையுடைய என்னுயிரைத் தள்ளும்படி அப்பெண்ணரசியின் விழியேபோல வளர்ந்து குறையாமல் அழிகின்ற போரிலே இறைவன்பட அஞ்சியவீரனது பழியேபோல வளர்கின்றதென்றும், புனமான்போன்றவரோடுந் தொடர்ந்து சென்றவென்மனமே! ஒருகாலென்னிடத்தேவரா நினையாய், வரத்தான் வழிதூரமோ! நீயென் வந்தனையென்று கேளாதவரிடத்தே விடைபெற்றிலையோவன்றி அவர்போல என்னையும் மறந்தாயோ வென்றும், கடுவிடந்தீர்க்காமலும் பாம்பின் பல்லையிடமாகக்கொண் டிருக்குமென்று சொல்வார்கள், இப்போது என்பாவையினின்றும் நெஞ்சினின்றும் நீங்கா துறைகின்றவரது கண்ணிலன்றோவிருக்கின்றதென்றும்; மலையும் கழிக்கரையும் சோலையும்பிறவுமே அங்குள்ளன;

வாயினும் அமுதத்தின் சுவையினும் இனிய சொல்லினையும் ஒளியமைந்த கூந்தலையுமுடையார் விளையாட்டிடம் இப்போது என்மனந்தானேயென்றும தனிநின்று வருந்துவா ராயினர்.

சனகராசன் வள்ளுவனை யழைத்து நமது சானகியாருக்குத் திருமணத் தொழில் நடப்பது நாளையேயாம். மலர்மாலையாலும் மணிவடங்களாலும் இம் மிதுலா நகரத்தை யலங்கரிக்க வேண்டுமென்று பறையறையக் கட்டளை யிட, அக்கட்டளையேற்ற வள்ளுவனும் யானையேறிப் பறையறைந்து கலி யாணச்செய்தியை யறிவிக்க, முதியாரும் இளையாரும் மயிர்ச்சாந்து பூசிய கூந்தலையுடைய மாதரும் ஆங்காங்குகூடி யணிய விரைவாரும், உசாவுகின்ற சுற்றத்தோடு திருமணத்தினைக் குறித்துக் களிப்பிலே யழுந்துகின்றாரு மாய்க் கரையிடலரிய இரவுக்கோர் கரையைக்கண்டனர். அஞ்சனமேனி யழ கனும் மலர்மிசை யுறையு மங்கையும் நாளை மணம்புணர்வார்களென்ற சொற் கேட்டுத் தன் செஞ்சுடரால் இருளைக்கீறிச் சூரியன் ஒரு தேர்மேல் தன்வழி வந்த காகுத்தனுடைய திருமணக்கோலங்காணப் புறப்பட்டு வந்தவன்போல உதயகிரியி லுதயமாயினான்.

இவ்வாறு தோன்றவே, அந்நகரமாந்தரிற் சிலர் தோரண நடுவர், தூண் களைச் சித்திரித்தை உறைகளான் மூடுவர், பூரண கலசங்களுக்கு ஆடையைப் புனைவர், மேகம் தவழும் நெடிய மாளிகையில் கதிர்மணி மாலைகளை யணிவர், வேதபாராயணஞ் செய்வர், இனிய வுணவுகளை யமைப்பர், அன்னமென் னடையாரும் மழவிடைபோல்வாரும் அழிவில்லாத நகரத்தில் வாழையுங் கமுகு நடுவர். முத்தமாலையை யாராய்ந்தெடுப்பர், பொன்னணிகளை யணி வர், மணியணிகளை யணிவர், சந்தனத்தினால் வீடுகளை மெழுகுவர். ஓரம் பொன்னாற் செய்யப்பட்டுயர்ந்த பளிங்குத் திண்ணைகளில் தீபக்குடம் வைப் பர், இளமுளையாகிய பாலிகைகளை அத்திண்ணைகளில் வரிசையாக வைப்பர், மந்தா மலைபோன்ற மாடங்களின் முற்றத்திலெங்கும் இந்திரன் ஆளுகையில் அமைந்த நெடியவானம் விண்மீனைப் பூத்தாற்போல முடிவில்லாமற் பிரகாசிக் கின்ற முத்துவடங்கள் ஒளிவீசவும் பச்சைப்பந்தா நிழலைத்தரவும் படர்ந்த வெயிலைக் கடிந்து நீக்குவர்.

ஓரத்தில் வயிரமணிபதித்து மரகதத்தாலமைத்த ஓமகுண்டலத்தின் பக் கத்தில் தீபக்குடங்களை சிலதாதியர்கொணர்ந்துவைப்பர். ஆடவர்களோகொடி களைச் சந்திரன் தவழ்கின்ற மதிண்மேல் நடுவார்கள். அகிற்கட்டையால் புகை யுண்டாக வெரிப்பர். வண்டிகளில் நிறைத்து மணமுள்ள மலர்மாலையைக் கொண்டுவருவர். சோலைகளிலுள்ள வாழைமரங்களி னிலையோடு கனி பலவற்

றையுங் கொண்டுவருவார்கள். காதிலணிந்த குண்டலந் தோன்றக் குரவைக் கூத்தாடுவார். உண்டையடியைக்கொண்டு நீராட்டப்பட்ட மதயானைகளுக்கு நெற்றிப்பட்ட மணிவர். கலவைச்சந்தனம் பூசுவார்கள். நல்ல ஆடைகளை யாராய்ந்து பார்த்தெடுப்பர். மலரைக் கூந்தலிலணிவர். நிலைக்கண்ணாடி முன்னர் திலகமணிவார்கள். மணிவடங்களை யணிவார்கள். இலவ மலர்போன்ற விதழில் கோலத்தை யழகுபெற விடுவர் தெரியாது சிந்திப்போன முத்துகளையும் மணிகளையும் கைவளைகளையும் மயிலன்னசாயன்மடவார் அலங்காரஞ்செய்யும்போது உதிர்ந்துபோனமலர்களையும் பவளம்போன்றபரிமளப்பொடியையும் உதிர்ந்த பொற்பொடியையும் குப்பையென்று வாரிக்கொண்டு வீட்டினின்றும் நீக்குவர். அரசரில் வருவாரும், அந்தணரில் நிறைவாரும் யாழிசையாகிய கள்ளைச்செவியாகிய வாயால் பருகுகின்றும் வாணரில் உலாவுவாரும் சிலதியரில் கூடுவாரும் நாழிகை வட்டிலால் திருமணநடக்கவேண்டிய கால நாழிகைகளை யாராய்வாருமா யிருந்தார்கள். நிருத்த மாதர்கள் நிறைவார்கள். பரதநூல்கள் பலவற்றையும் ஆராய்வார்கள். வடங்களிற்கோத்த ஒரினமாகிய முத்துகளும் அலங்காரஞ்செய்திருக்கின்ற முடிகள் ஒன்றோடொன்று தாக்குவதனால் உதிர்ந்த பொன்னும் மணிகளும் மலைபோலக் குவிந்துகிடக்கின்ற சக்கரவர்த்தியெழுந்தருளி யிருக்கும் திருமாளிகையின் வாயிலில் பல தேசராசர்களும் போய் நெருங்குவார்கள். இடக்கையிற் பிடித்த கேடகம் வெயில் வீசவும் வலக்கையிற்பிடித்த வாள்நிலாவொளிவீசவும் தந்தங்களுயர்ந்து போர்த்தொழிலிற் றேர்ச்சியையுடைய நெடிய யானைகளைப்போன்று ஆடவர் திரிவர். கணிகையர் கண்டு அவர்மனமகிழப் பரதநூற்படி நடனஞ்செய்து அவருடைய உயிரையும் தமது நகையினாலேயே கவர்வர். கிரணங்களையுடைய மணிகள் மிகவும் பிரகாசம் வீசுவதினால் விரும்பும் பொருள்கள் இன்னதென்று காண்கிறவர்களுக்குத் தோன்றாமல் எதிரொளிவீச அம்மணிகளி னொளியைப்பெற்றுத் தம்மியற்கையானது மாறுதலினால் தேவர்களும் அரமகளிரும் தாமிருந்த சுவர்க்கலோக மின்னதென்றும் தாம்வந்த மிதுலாநகர மின்னதென்று மறியாமல் மயங்குவார்கள். சிலர் தேர்மேல் வருவர், சிலர் சிவிகையேறி வருவர், சிலர் குதிரையேறி வருவர், சிலர் மணியினாலாகிய நெற்றிப்பட்டமணிந்த யானையேறி வருவர், சிலர் பிடியானைமேல் வருவர், சிலர் பூமியிற் காலால் நடந்தேவருவர், சிலர் வண்டிகளி லேறிவருவர்,சிலர் முத்தணிகளை யணிவார்கள், சிலர் முன்னே புனைந்திருந்த மணியணிகளை நீக்குவர், சிலர் பொன்னாலாகிய ஆபரணங்களைப்பூண்பர், சிலர் பூங்கொத்துகளைக் கூந்தலி லணிவர், சித்திரவேலையமைந்த அழகிய ஆடையை யுடுத்துவர். விடம்போன்றகண்ணையுடையாரும் அமுதமன்ன மொழியை யுடையாரும் செங்கிடையைப்போன்ற இதழையுடையாரும் வெண்ணகை யுடையாரும் மலைபோன்ற பெரிய தனங்களையுடையாரும், நுட்பமாகிய இடை சிறியாரும், பெண்ணன்னம்போலும் நடையினை யுடையாரும், பிடியானைபோல் நடந்து வருவாருமா யிருந்தனர். இவ்வாறு அம்மிதுலா நகரத்தில் நடக்கும் விபவங்களைச்சொல்ல ஒருவராலு முடியாது, பார்த்தளவிடுவது மரிது; இதுவே மிகவும் வியக்கத்தக்கது.யாவ

ராலு மதிக்கப்படுஞ் சுவர்க்கலோகத்தில் இந்திரன் முடிசூடும்படி யலங்கரித்த திருநாளையே யொத்திருந்ததென்று யாவரானுஞ் சொல்லக்கிடந்தது. இது நிற்க;

பரப்பின் எல்லை யறிதற்கரியதும் பொற்றகட்டினுன் முகடுமூடப்பட்டதும் மலைபோன்றுயர்ந்ததும் சுவர் தூண் முதலியவைமணிகளாற்செய்யப்பட்டனவுமாகிய திருமணமண்டபத்தில் சக்கரவர்த்தி தன் வெண்கொற்றக்குடை புதுநிலாப்பரப்பக் கண்ணையூடுருவும்மணிப்பூண்கள் வெயிலெறிப்ப வண்டினம் பாடக் குதிரை தன்காலாற் புழுதியெழுப்பச் சென்றனன். மங்கல முரசிரட்டன, தாரைகள் ஆரவாரித்தன. அந்தணர்கள்வேதவோசைஇரவிலொலிக்குங் கடலோசையினு மிக்கது. தேவர்கள் யானைகள் குதிரைகள் நிரனிரையாகச் சென்றன; கூட்டங்கூட்டமாகக் காலாட்கள் சென்றன. மற்றையரசர் இந்திரனுக் கபனிற்செல்லுந் தேவரேபோலநெருங்கிச்சென்றனர். இவ்வாறுசென்ற தசரதன் அம்மணவினை மண்டபமெய்தி அங்கிட்டிருந்த பொன்னானும மணியானும் புனைதரும் பூந்தவிசினிடையெழுந்தருளினுன். முற்றத்துறந்தமுனிவரும் முடிமன்னரும் முறையாகச்சென்று சேர்ந்தனர். சனகர் பெருமானும் தன் சுற்றத்தொடும் தான் ஓராசனத்தி லெழுந்தருளியிருந்தான். சூரியன் முதலிய கிரகங்கள் வலம்வருகின்ற மேருமலைபோன்ற அம்மணவினை மண்டபத்தில் யாவரும் சூழ்ந்திருக்கையில் அம்மயனுற்செய்யப்பட்ட மண்டபமானதுமேகங்களும் மின்னலும் விண்மீன்களும் இரத்தினராசிகளும் இருசுடரும் உள்ளனவாகலின் பிரமாண்டத்தையும், முனிவரும் தேவரும் இந்திரன் முதலிய இறைவரும் பிறருஞ் சென்றடங்கி யிருந்தமைபான் உலகமுண்ட பெருவாயனுகிய திருமாலி னழகிய திருவயிற்றையு மொத்திருந்தது. பூவுலக முதலிய உலகினுள்ளார் யாவரும் அம்மணவினை காண விழைந்து நின்றமையால் யான் இத்தன்மையதென்று கூறுந் தகையதோ, இனி அரவணை துறந்துவந்து அயோத்தியெய்திய சிராமபிரானது செயலைச் சொல்லாநிற்கிறேன்.

குடங்களில் எழுகடனீரையும் கங்கைமுதலிய புண்ணியதீர்த்தங்களையும் ஒருசேரக் கொணரத் திருமஞ்சனமாடிப் பிரமன் முதலாகிய சேதனரும் பிறரும் தம்மைவிட்டுநீங்காத அவித்தை யிருள் நீங்கிப் பிரபத்திகிட்டையென்னும் பெருநெறியில் வேண்டுதல வேண்டாமை யொழிந்தொழுகி யிரும்புண்ட நீரிற் றிரும்பாததாய் மயர்வறு மதிநல மெய்தினேரெய்தும் உயர்வற வுயர்நலங்கும் திருமண மண்டபத்தைப் பொருத்தும் தன்துவாதசநாம மந்திரத்தை நினைத்துச் கத்தூரிக் கலவையணிந்து தங்குலத்தோர் தொழும் தெய்வப் பிரானுகிய ஆதியஞ்சோதி யாயிரமோலி யமலப்பிரானை யடிவணங்கிக் காதளவோடிய கண்ணிபராகியகன்னியரை அருமறையுணர்ந்த அந்தணருக்குத் தானமாகவழங்கி நின்று அறத்தைவளர்க்க நினைத்துக் கருணையே யொருபடிவங்கொண்டாற்போன்று விளங்கும் ஓவியருமெழுதொணுத திருவுருக்கொண்டு இருண்டமேகத்தைத் தழுவிநின்ற நிலவேபோன்று கலவைச்சாந்து திருமார்பு முதலிய இடங்களிலப்பி முழுநிலா வெறிக்கும் திங்களைக்கருங்கடல் பூத்தாற்

போலச் செங்கிடையாலும் செம்பொனாலுஞ் சமைத்த சிகழிகையாகியமாலை யும் பிறமாலைகளேயும் தன்திருமுகத்தினருகே யடைந்துதொங்க, சுழித்து முடிக்கு மயிர்முடியிற்சூடி மைத்தழைபாகின்ற மாமிடற்றி மழுவேந்திய இறைவனது நீள்சடைமபுறத்து மதியமணிந்து, தான் கடவுட்டன்மையை யுடைய கடர்க்கூட்டத்தை யெல்லாம் சூடினாற்போல வீரபட்டமும் சாவித் திலகமு மணிந்து சக்கரத் தயலில்வரும சங்கமேபோல விலேமிக்க கழுத் தனி முத்துமாலை முதலியன சானகியாரது புன்முறுவ லுள்ளத்தேபுகுந்து நிறைத்து மெய்பொடித்தாற்போலுந் தோன்ற, கிரையாகப் பதித்த வயி ரங்கள்புள்ளிகளேபோலப் பெருமையாகப்பொருந்த வரம்பில்லாத சுடர்மணி கள் செந்தீயைப்போன்று தோன்றலால் அழகிய தோளிணி முன்னேநாளில் மந்தா மலையைச்சுற்றிய பாம்பினை யொத்திருந்தது. பெரிய முத்துவடங்களை யணிந்து கைகள் விளங்குவன மூவகையுலகமும் காக்கு முதல்வனென யாவரு முணர்வதற்கோர் குறியிட்டாற்போல விளங்கப் பூந்தாமரையாள் பொலிவுற்று விளககுந் திருமார்பில் பலவகை மணியாரங்கள் விண்மீன்கள் தன்பால் விள ங்கு மேகத்தில் இந்திர வில்லிட்டிருப்பதுபோலவிளங்கித் தோற்றவும், தன்னி லடங்கியும் அடங்காமலும் விரிந்துணர்ந்த மெய்புணர்ச்சியுடையாரது மாசற்ற அறிவேபோல, ஒளிவிட் டெறிக்கும் வெண்பட் டுத்தரீயம் அடங்காது பெருகும் கருணையாளன் கழுத்திற் பூண்ட தாளமாலை யிருபக்கமெறிக்கும் நிலாவைப்போன்றுமார்பிலே கிடந்தசையவும், பரிதியங்கடவுளேபோலவொளி விட்டெறிக்கும் மார்பிற்புரளு முந்நூல் தேவரும் முனிவரும் தெரியொ ணாத மூவர்தங்கோ னிவனென்றுரைக்க விளங்கவும், தன்னைச்சூழப் பருமணி கள் ஒளிவிச மேலிடத்தே யொன்றாக வில்லுமிழும் பருமணிகுயின்ற உதர பந்தனமென்னு மணி பிரமாண்டமும் பிரமனும்வந்து தோன்றப் பொலிவுற்ற பொற்றாமரைப் பூவேபோல்தோன்றவும், மணிகள் வயங்கித்தோன்றியகடல் ஒன்று பாற்கடலைத் தழுவியதுபோலும் வெண்பட்டாடை யணிந்து முத்து வடங்களும, நீலமணிவடங்களும், அலங்காரமாகவமைந்த பொற்கச்சினுல்தன் னினஞ்சூழ்ந்துவரும் பொன்மலையில் வலம்வரும் சூரியனேபோல் விளங்கவும், உடைவாள் வீக்கி உலகங்களை யளப்பதெப்படியென்று அவ்வுலகங்கள் தனித் தனி தடுப்பனபோன்ற இயல்பினதாகி நுண்ணியதொழிலமைந்து கிடக்கும் சிலம்புகள் வீரக்கழலேயணிந்த பூந்தாமரை போன்ற பாதங்களைச் சூழ்ந்து கிடக்க இன்னவண்ணம் தன்னைத்தானே நிகர்த்த கோலஞ்சமைந்து நின்ற னன். இதுகிடக்க;

சங்கருஷ்ணனாக அழித்தும், பிரத்தியுமனனாக நின்று படைத்தும், அநி ருத்தனாகக் காத்து முத்தொழில் புரியு மூவருக்கு முதன்மையாகிய பரவாசு தேவனும், அம்மூவருக்குங் காரணமாகிய பரமபதநாதனும், திருமலையில் எழுந்தருளிய பெருமானும் பாற்கடலி லறிதுயில் செய்யும் பரமனு மாகி விபவாவதாரங்களுட் சிறந்த சிராமபிரான் தன்னையே யொப்பனைசெய்தமை யாராலேதான் சொல்லிமுடிவுபெறும். இவ்வாறு கோலம்புனைந்து பல கோதா

ணங்களும் சுவர்ணதானமும் பூதானமும் நன்னெறிபற்றியொழுகும் அந்தணர்க்குவழங்கிச் செந்நெறியிற்பயிலு முனிவர்கள் பலர் ஆசிகூறத்தேரிலேறிப் பரதாழ்வான் முட்கோல் கைக்கொள்ள,இளையவன் பின்னே காத்துநிற்க, சத்துருக்க னாழ்வான் சாமரைவிசச்சென்றான். இக்கோலங்கண்ட மனிதரெல்லாம் இமையா நாட்டமெய்தினர். தேவரோ உலகெல்லாம் வருத்தும் அரக்கர்கூட்டம் நாசமாவது இன்றுசமைந்ததென்று கருதிவந்து நிரம்பி அரமகளிரொடு ஆனந்தக்கூத்தாடினர். மாதரோ மலர்மழைபொழிந்து பொற்சுண்ணந் தூவி இரவலர்க்குப் பொன்னையும் மணிகளையும் ஆடைகளையும் வீசினர். இந்நகரமாந்தர் கருத்தின்னதென்று அறியோம்,மேலுஞ் சிலர் தமபாலுள்ளனவற்றை யிரப்போர் வெறுப்பக் களிப்பாற் கொள்ளக்கடவீரெனக் கொடுக்குந் தன்மையனைப்போல வள்ளற்பிரானாகிய ஸ்ரீராமபிரானை நோக்கிய மாதர் தம் முடலி லணிந்திருந்த பலதொழிலமைந்த ஆபரணங்களெல்லாங் கழல நின்றனர். குறைவற்ற உலகினுள்ள பகைவர்மே லெய்தத்குரிய அரசர்கூட்டம் யானைத்திரளேபோலச்சூழ்ந்துகிடப்ப வெஞ்சினமமைந்த விற்றொழிலிற்சிறந்த ஸ்ரீராமபிரானும் பொன்மலையிற்சேரும் பரிதியங்கடவுள்போன்று சென்று அதினின்றுமிழிந்து பின்னர் இருபாங்கரும் இருகரங்களை இளையவனும் பரதாழ்வானும் பற்றிநிற்பச்சென்று அவித்தை யிருளொழிந்த முற்றத்துறந்த முனிவர்களைத் தொழுதுவாழ்த்தி நீதியும் உண்மையும் விரதமாகக்கொண்ட தன்பிதாவின் செய்ய தாளைவணங்கி அவனருகே யிருக்க வில்லை மேற்புறத்தேயுடைய இரண்டு கயன்மீன்களை இடையே பெற்ற ஒள்ளிய மதியைச் சுமந்து ஒரு செம்பொற் கொம்பு முலைகளாகிய அரும்புகள் தன்னிடை யரும்பத் தேரின் மேற் கீழ்த்திசையில் முளைத்தாற்போன்ற சானகியார் அலையெறிகின்ற பாற்கடலில் திருவவதரித்து, மீண்டும் பொன்மலையி லுதிக்கின்றாள்போல அம் மண்டபத்தைக் குறுகினாள். பாற்கடலில் அன்றவதரித்த பெருமகிழ்வினும் இன்றுகாணப்பெற்றது பெறலரும்பேறென்று தேவர்களெல்லாஞ்சிந்தைமகிழ்ந்தனர். கடல்புடைசூழ்ந்த காசினியி னுள்ளாரினும் தேவரினும் நாகரினுமிக்குத்தோன்றும் பொலிவு இறைவன் திருமறுமார்பின் அழகேயாயின் இவரது திருமணத்தினுண்டாய விபவத்தை வாயானெவ்வாறு எடுத்துரைப்பதென்றுபலரு முரைத்தனர்.

இந்திரன் ஐராணியுடனும் சந்திரசேகரனாகிய பரமசிவன் பார்வதியாருடனும் நான்முகக்கடவுள் கலைமகளுடனும் ஸ்ரீராமபிரானது மணக்கோலத்தினழகுகாண அந்தரமார்க்கத்தில் வந்திருந்தனர். நீந்த வரிய கடல்போல நிறைந்த வேதமுணர்ந்த அந்தணர்சூழவேதத்திற்கூறிய தொன்னெறியில்வந்த கேள்விக்குரிய வசிட்டமுனிவர் குற்றமென்பதின்றியமைந்த தருப்பைகொண்டெய்தி அரிசியைப்பரப்பித் தருப்பையைச்சாத்திமண்டலத்தை வேதநெறியினமைத்து மலர்சொரிந்து எரியை மூட்டி வேதமந்திரங்களைச் சொல்லி அக் கலியாணத்திற்குரிய வேள்வியைச் செய்தான். அத்திருமணஞ் செய்யுமிடத்தில் ஸ்ரீராமபிரான் வந்து வீற்றிருக்கவே, சானகிப்பிராட்டியாரும் அங்கெழுந்

தருளினர். அவ்விருவரும் எழுந்தருளிய காட்சி சாத்தியமான பேரின்பசுக மும் சாதனமாகிய தியானமும்போன்று விளங்கின. அப்போது சனகர்பெருமான் சானகியாரை இரகுநாயகன் கையிற் பிடித்தளித்து இச்சீதையோ என் மகள் தவமும் தருமமும் சரிதமாகவுடையாள் என்று சொல்லித் திருமகளுஞ் செல்வப்பொருளுமென நிலைபெற்றிருக்கவென்று தாரைவார்த் தளித்தான். அவ்வாறு அளிக்கவே அந்தணர்களாசிகூறினர். அந்தணமடவார் பல்லாண்டு பாடினர். முடிமன்னரும் தேவர்களும் வாழ்த்தொலிசெய்தனர். சங்கவாத்திய முழங்கின. தேவர்கள் கற்பகப்பூமழை பொழிந்தனர், அரசர் பொன் மழைபொழிந்தனர். ஏனையோர் முத்தமழையும் நறும்பூமழையும் பெய்தனர். இவற்றால் அம்மிதிலைநகரம் ஆகாயத்தில்விண்மீன் பூத்ததேபோலவிளங்கிற்று. பின்னர் தசரதராமன் அம்மணவேள்வியில் கலியாணத்திற் குரிய மந்திரங்களைச் சொல்லி யாகஞ்செய்து, சானகியர் கையைப்பிடித்து செய்யவேண்டியவனைத்துஞ் செய்துமுடித்து, அத்தீயின்கண் சங்கற்பஞ்செய்பத்தொடங்கி அதனை வலமவந்து பொரியிட்டு அம்மியிலித்தலாகிய சத்தபதியை நிறைவேற்றப் பிராட்டியார் காலைத் தூக்கிவைத்து அருந்ததியைக்கண்டு தவமே பொருளாகவுடைய பாதங்களைத் தன்முடியிற்சூட்டிச் சக்கரவர்த்தி பாதங்களையும்வணங்கிச் சானகிப்பிராட்டியார் கையைப்பிடித்துக்கொண்டே நன்றாகச்சமைந் திருந்த திருமாளிகையிற்புகுந்தான். பேரிகைகள் ஆரவாரித்தன, சங்கங்கள் முழங்கின, வேதகோஷ்ட முழங்கின, தேவர்கள் ஆரவாரித்தனர், பலநூல்கள் ஆரவாரித்தன, பல்லாண்டுகளாரவாரித்தன, வண்டினமுமார்த்தன. இரகுநாயகனோ தன்தாயாகிய கோசலைப்பிராட்டியினும் பேரன்புடன்கைகேசி பாதங்களைத் தாழ்ந்துவணங்கிநின்று முறையே தன்தாயாகிய கோசலையையும் சுமித்திரையையும்வணங்கிநின்றனர். சானகியாரோ அவ்வாறே அம்மூவர்பாதங்களையும் வணங்கினர். அதைக்கண்ட கோசலைப்பிராட்டியார் முதலியமூவரும் இவ்வருந்ததியன்ன பெண்மணி நங்கண்மணியாகிய சிராமனுக்கு இல்வாழக்கைத் துணைமணியாகவிருப்பளென வாழ்த்தித் தனித்தனி சானகியாரைத் தழுவிநின்று நமதுமகனுக்கு மனைவியாவார் பெண்பிறப்பிலே இவர்போல் எவ்வுலகத்து விருப்பரென்று கண்ணுமனமுங் களிப்பெய்தி எண்ணில்பலகோடி பொன்னையும் எண்ணருங்கோடி மாதர்வெள்ளத்தையும் இடமகன்றநாடுகளையும் உயர்ந்தஆடைகளையும் தெய்வப்பெ ணன்னவரே பெறுகவென்று கூறினர். நூற்கேள்வியிற் கடல்போன்றவராகிய முனிவர்பாற் சொல்லின் கடன்மையைச் சீர்தூக்கிக் காதல் கடலையொத்த மனத்துச் சானகிப்பிராட்டியாருடன் காற்றினால் வீசப்படடுப் பொங்கிருங் கடலேபோலக் களிமிருந்து கருணைக்கடலாகிய சிராமபிரான் தான்முன்னே யோகநித்திரை செய்தருளிய திருப்பாற்கடலையொத்ததோர் பாயலிற் கண்வளர்ந்தனன். பங்குனிமாதத்தில் திருவுத்திரநாளில் அம்மிதிலை நகரத்தில் அருமறையிற்கூறிய ஆயிரந்திருநாமமுமுடையசிங்கவேறன்னசிராமபிரானுக்குத் திருமணத்தொழிலைச்செயத வகையினுல் மங்கலத்தீயை வசிட்டமுனிவன் வளர்த்திநின்றான். இதுநிற்க;

சனகராசனே என்னுடன்பிறந்த குசத்துவசன்பெற்ற மாதர் மூவரையும் நமது இரகுவீரனுக்குப் பின்தோன்றிய பரதாழ்வான்முதலிய மூவருக்கு மணஞ்செய்விக்க வேண்டுமென்றுசொல்ல அவ்வாறே குசத்துவசன்பெற்ற மாதர் மூவருள் ஊர்மிளை இளையவனையும், மாளவி பரதாழ்வானையும், சுருதசேனை சத்துருக்காழ்வானையும் மணம்புரிந்தனர். அவரவர் மணம்புரிந்த பின்னர் சக்கரவர்த்தியும் தொன்றுதொட்டுவந்த புகழைக் கொடுத்திலனல்ல துண்மைவழியிற் றேடிய பொருளெவையுள்ளன, அவை வேண்டியவேண்டியாங்குதவினன். சக்கரவர்த்தியும் அவ்வாறுகொடுத்து வரம்பகன்றெரூப்பிகந்த வின்பத்தை யனுபவியா நின்று வைதிகநூல்களை யாராய்ந்து உண்மைநெறியெய்த ஞானக்கேள்வியையுடைய அருந்தவத்தவரோடு அம்மிதுலாநகரத்திற் றங்கினன். இவ்வாறு சிலநாள்தங்கியிருந்து காலங்கழித்தனன். இதுகிடக்க;

கடிமணப்படலம்.

முற்றிற்று.

---

*கொய்நிறை தாரன் குசத்துவ சப்பேர்
நெய்நிறை வேலவன் மங்கையர் நேர்ந்தார்
மைநிறை கண்ணியர் வானுறை நீரார்
மெய்நிறை மூவரை மூவரும் வேட்டார்.

இதன்பொருள் -கொய்து குறைவறத்தொடுத்த மலர்மாலைபணிந்த குசத்துவசனென்னும் பெயரெய்தி நெய் முற்றத்தடவிய வேலினன் பயந்த மையுண் கண்ணியரும் வானின்க ணுறையு நீர்மையருமாகிய மங்கையர் மூவருரையு மெய்யொழுக்கமே வாய்ந்த மூவரு மணர்ந்தனர். எ - று.

மெய்நிறை மூவரென்றார் அவருள் பரதாழ்வவன் ஓவிய வெழிலுடை யொருவனையல்லதோ ராவியு முடலமு மிலதென மேவிநிற்றலானும் அவனிட்ட கட்டளையாதோ அதையன்றிப் பிறிதறியாக் கொள்கை யுடைமையானும், இளையவன் அவன் நிழலேபோ லென்றும் பிரியாது புறந்தொழில் புரியுந் தன்மையானும், சத்துருக்கன் அவ்வயர்வரு மமரர்கட் கிறைவனை யல்லதறியாத பரதனையல்லது வேறொன்றறியாத படியானுஞகலானு 'மெய்ந்நிறை மூவரை' என்றார். மையுண் கண்ணியர் மூவரென்றது மாளவி, ஊர்மிளை, சுருதசேனை என்பாரை. மூவரையென்புழி முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. அவரை முறையே பரதன், இளையவன், சத்துருக்கனென்னு மூவரு மணந்தமைகாண்க. இனி ஊர்மிளையைச் சனகர்கோன் மகளென வான்மீகபகவான் கூறியிருப்ப "வள்ளறனக்கிளையோர்கடமக்கும் - எள்ளவில் கொற்றவன்யான் பினவித்த - வள்ளன் மலர்த்திருவன்னவர்' என்றும், 'கொய்நிறைதாரன் குசத்துவசப்பேர்-நெய்நிறை வேலவன் மங்கையர் மூவர்' என்றும் இவ்வாசிரியர் மாறுபடக் கூறினராலெனின் 'தேவபாடையி னிக்கதைசெய்தவர் மூவரானவர்தம்முளு முந்திய நாவினுரையின்படி நான் றமிழ்ப்பாவினுலி துணர்த்திய பண்பு' என்றமையால் அன்னரல்லரென்றுணர்க.

## பரசுராமப்படலம்.

நம்போல் வினைவயப்பட்டுத் தோன்றுமே தானே அறநெறியொழுக்க
திறத்தத்தோன்றிய சானகியாரும் சிராமபிரான் முதலானோரும் இன்ப நல
மனுபவிக்குங்காலத்தே துவாதசாக்கர மந்திர மனுவை மாதவத்தையுடைய
கோசிகமுனிவன் சிராமபிரானுக்கருளி வடதிசையில்வவாய்ந்த மேருமலையை
நோக்கிநடந்தான். இவ்வாறுசென்றபின்னருஞ்சிராமபிரான்முதலியோர்மிதிலை
நகரத்தில் வசித்துக்கொண்டிருந்தனர். சக்கரவர்த்தியோ நாம் வந்து பலநாள்
சென்றன,நமது அயோத்தியாநகரஞ்செல்லவேண்டுமென்றுகருதியமாத்திரையில்
பல அரசரும் திரண்டெய்தி வணங்கிநிற்பத் தேரேறிச்சென்றனர். செல்லவே
சிராமபிரான் முதலிய மக்களும சானகியார்முதலிய மருகிமாரும் கோசலைப்
பிராட்டி முதலியமனைவியரும் சுமந்திரன்முதலிய பலரும் நால்வகைச்சேனை
யும் வசிட்டபகவான் முதலிய முனிவரும் தொடர்ந்து சென்றனர். இதைக்
கண்டமிதிலையில்வசிக்கும்நகரமாந்தர் உயிர்பிரிவென்னும் ஒப்பறுதுயரமெய்தி
மனம்வருந்தியிருந்தனர். இவ்வாறு சக்கரவர்த்தி தன்சேனையுடன்செல்கையில்
மயில்வலமும் காகமுதலியன இடமும் வரக்கண்டு, இதென்ன? தடையையுண
ர்த்தும் துர்ச்சகுனந் தோன்றுகின்றன, இவ்விடத்தில் நமக்கேதோ இடையூறு
நிகழுமென்றுகருதிவழிச்செல்வதைவிடுத்துத்தன்தேரோடு நின்றுசகுனக்குறி
யாராய்வதில் வல்ல ஒருவனையழைத்து இப்போது தோன்றுஞ் சகுனத்தால்
நல்லதோ அன்றித்தீயதோபயக்கும்? உள்ளவாறுசொல்லவேண்டுமென, அவன்
சக்கரவர்த்தியை மும்முறை வலம்வந்து பணிந்து நமக்கோஇடையூறுண்டாம்;
ஆயினும் அதுபின்னே நலம்பயக்குமென்று சொன்னான். இவ்வாறு சொல்லிக்
கொண்டிருக்கையில் இருள்கெட்டோட விளங்குஞ் சடைமுடி யுடையானும்
மழுவாளியுமாகிய பரசுராமன் கண்டோர் வெருவிப்பயந்தோடும்படி புருவக்
கடைநெரிய, வெவ்வியகண் தீயுக, இடியேறுபோன்றுகர்ச்சித்துக்கொண்டுசக்கர
வர்த்தியைவிட்டொதுங்கி இரகுவீரனுக்கெதிரேபோகத்துணிந்தான். அழகிய
திருமேனியையுடைய சிராமபிரானும் இவன்யாரோவென்றுநினைத்துக்கொண்
டிருக்கையில் பரசுராமனுக்கு ஆராதனைசெய்ய வெண்ணமுடையனாய்ச்சக்கர
வர்த்தி அவனை மன்னர்வணங்குந் தமதுமுடியைத்தாழ்த்துவணங்கவும்கோபக்
கடலின் கரையைக்கடவாதானாய் வடவைத்தீப்போற்கனன்று இடியேறுபோன்
முழக்கிச்சொல்லுகின்றான். இராமா! நானே உன் ஆற்றலுக்கு முறிந்துதோற்
றுப்போன வில்லின் வலியையறிவேன். உன்தோளாற்றலைச் சோதிக்கவே இவ்
வளவுதூரம்வந்தேன். உங்கள் குலத்தரசரையெல்லாம் ஆவியைக்கொள்ளை
கொண்ட என்தோளோ தினவுகொள்ளுகின்றதென்று சொல்லிக்கொண்டிருக்
யில் உலகமுழுதுமாளும் சக்கரவர்த்தியும் நடுநடுங்கி பூமிமுழுதும்வென்று
காசிபமுனிவனுக்குத் தக்ஷிணையாகக்கொடுத்த உதாரகுணமுடையானே!
சிவனும் பிரமனும் திருமாலுமென்று சொல்லப்படும் முத்தேவருமே நினக்
கொப்பாவாரலரோ எனிற் சிறுமனிதரோ ஒருபொருளாம். இவனும் என்னு
யிரும் இனி உன்னபயம்;கொலைபடைத்தார் கொலையுண்பது தீவினைவிளைந்து

செய்யும் கொடியாரிடத்திலன்றோ! நல்வினையை விரும்புமுன்பாலன்று. இவ்விளஞ்சிறுவன் செருக்கினால் உனக்குச்செய்யும் வணக்கங்களில் ஏதேனு மறந்ததுண்டோ, மழுவாளியே! வலியார்காட்டவேண்டியவலி அவர்போலும் வலியாரிடத்தி லல்லது மெலியாரிடத்தே யென்படும்; என்மேற்கொண்ட கோபத்தைத் தணியுமென்றிரந்துசொல்வான். என்மகனோ என்குலத்தார்க்குத்தொன்றுதொட்டுவந்த பகையுடன்பொருந்தினனல்லன். அவனிறந்துபட்டால் என்சுற்றமுநானும் உயிர்நீங்குவோம். அப்படி யாகாவண்ணம் என்னைக் காக்கவேண்டுமென்று தன்பாதங்களில்வீழ்ந்துவணங்குஞ் சக்கரவர்த்தியைச் சிறிதுமதியாது தீயெழக்கனன்று, ஸ்ரீராமபிரானின்ற நிலையைநோக்கிச் சென்றான். அக்கருத்தின்நிலைமையறிந்த சக்கரவர்த்தி சிறிதுமுணாயடானாய் மின்னலைக்கண்டுசோரும் அரவேபோல வருந்த, அதைக்கண்டு சிறிதுமெண்ணாமல் தாசரதியைநோக்கிச் சொல்லுகின்றனன். உன்கையாலொடித்த வில்லோ அருட்பெருங்கடலாகிய பரமசிவன் கையிலுற்றதிரியம்பகமென்னும்வில், அது வந்தவரலாறு சொல்லுகின்றேன். ஒற்றைச்சக்கரமுடைய தேரில்வருஞ் சூரியனைப்போலமிகுதியும் ஒளியுடையதும் மேருமலைபோலும்வலிபெற்றுடையதுமான இரண்டுவிற்களை மயனென்னுந்தச்சன் செய்துமுடித்தான். அவற்றுள் ஒன்றினை உமாபதியாகிய பரமசிவன்மகிழ்ந்தேந்தினன். மற்றொன்றினைத் திருமால்தாங்கிநின்றனன். இச்செய்தியையறிந்த தேவர்கள் இவ்விரண்டில் இன்னது வலிபெற்றுடையதென்று அறியாதாராய்க் கமலமலர்மேவிய கடவுளை வினவினர். அவர்களெண்ணம் நன்மைபயப்பதாகக் கருதி அக்கடவுள் விசயமாகவே யாரினுமுயர்ந்த மூலத்தொருவரா மிருவராகிய திருமாலையும் பரமசிவனையும் வலியமைந்த வில்லைக்குறித்துப் போர்செய்யமூட்டிவிடவே, அவ்வருவாரும் இரண்டுவிற்களையும் நாணேற்றி ஏழுலகமு மஞ்சிநடுங்கவும் திசைகளூடுபெயரவும் மேன்மேலுங் கோபத்தீயெழுந்தோங்கவும் போர்செய்கையில் திரிபுராரியாகிய பரமசிவன் கையிற்பிடித்திருந்த திரியம்பகமென்னும் வில்முறியவே, அதற்குச் சிவபெருமான் சினந்து மீண்டும் போர்செய்தனன். தேவர்களோ வணங்கிநின்று அவர் போர்செய்வதைத் தடுக்கவே, அவ்வலி யிகந்த வில்லை இந்திரன் கையில் கொடுத்தனன். திருமாலோ தன் கையிற்பிடித்த கோதண்டத்தை இருசிகமுனிவருக்குக் கொடுத்துச் சென்றான். அதனை அவ்விருசிகமுனிவர் என் தந்தையாகிய சமதக்கினிக்குக்கொடுத்தார். அவர் எனக்குக் கொடுத்த வரிசிலை யிதுவாகும்; நீ இதை யெளிதாக வளைப்பையாயின் அரசர்களி லுன்போற் சிறந்தாரில்லை, யான் எண்ணிவந்த போரையுங் குறித்துச் செய்யேன், நீயோ ஊனவில்லைமுறித்தே மென்று உன்னாற்றலையெண்ணுவது சிறந்ததேயன்று, எனக்கென்றும உன் மரபினோரிடத்தே சாலப்பகையுளது; அது எந்தையாகிய சமதக்கினிசாந்தகுணமுடையானென்பதறியாது, உங்கள் குலத்தரசரு ளொருவனாகிய கார்த்தவீரியனென்போன் முன்னாளில் அசுரனைப்போல் சிறிதுங் கருதாது கொலைசெய்தான். யானோ மனந்தளர்ந்து இருபத்தொருமுறை முடிமன்னரை யெல்லாம் என் கையிலுள்ள மழுப்படையால் சந்ததியற்றுப்போமாறு கொன்று களைந்து அவர்க ளுதிரவாற்றினாலாகிய

மந்த பஞ்சகமென்னுந் தடாகத்தில் என் தந்தைக் குரிமைக் கடன்மை செய்து முடித்தே சினந்தவிர்ந்து எனக்குக் கிடைத்த இவ்வுலக மெல்லாங் காசிப முனிவருக்குக் கொடுத்துவிட்டு என்பகைவரையெல்லாமொடுக்கினேன். நான் அவ்விடத்தினின்றுஞ்சென்று மையமலையிற் றங்கித் தவஞ்செய்து கொண்டிருந்தேன். ஆங்கு நீ முறித்த வில்லோசைகேட்டுச் சினங்கொடு வந்தேன், நீ யாற்றலுடையானாயின் போர்செய்வேன், இவ்வில்லைவளைத்து விடுபார்ப்போமென்று சொல்லச் சிராமபிரானும் புன்முறுவல் கோட்டி இன்முகங்கொண்டு எந்தை திருமால் கைப்பிடித்த கோதண்டமென்று கேட்கவே, பரசுராமனும் சிராமபிரான் கையில் அக்கோதண்டத்தைக் கொடுத்துவிட்டான். அதைக் கையிற்பெற்று அப்பரசுராமன் மனத்தி லச்சமுற நாணையிட்டு வளைத்து ஒரு பாணத்தைப்பூட்டி அவனை நோக்கி, நீயோ இந்நிலவுலகத்திலுள்ள அரசரை யெல்லாங் கொன்றனை யெனினும் வேதவித்தாகிய சமதக்கினி முனிவன் மைந்தனாகையாலும் தவவேடம் பூண்டனையாகையாலும் உன்னைக் கொல்லாமல் விடுத்தேன்; ஆயினும் என் அம்பு பழுதாகாது; இதற்கிலக்கியாது? விரைந்து சொல்லுமென்று கேட்டருளினன். அதற்குப் பரசுராமன் பயந்து நீதியையுடைய சிராமபிரானே! என்மேற் சினங்கொள்ளா தொழி நீயெப் பொருட்கு முதல்வனாகிய பரம்பொருளென்பதறிந்தேன். மலர்மாலை புனைந்த ஆழிப்படையையுடைய இறைவ! வெண்மதிப்பிறையையணிந்த பரம சிவனது வில் வேறுபட்டு முறிவதல்லது உன்னாற் பற்றப்படுமோ! நீயே ஆழிப்படையேந்துங் கொண்டலாவது மெய்யாகவே முடிந்தது இனி உலகினுக்கியாது இடுக்கணுளது, யான் உன் கையிற்கொடுத்த வில்லும் உன் வலிக்குத்தக்கதேயன்று, நீ யெய்த அம்போ இனி பழுதாகாவண்ணம் யான் செய்தவமனைத்துந் தொலைக்கக்கடவதென்று இரண்டு கரங்களையுங் குவித்துக் கொண்டு நின்னைக்கெஞ்சி இலக்காக்கிக்க, அக்கணையோ அவன் செய்தவமனைத்தும் வாரியுண்டம்பறாத்தூணியி லடங்கிற்று. இதைக்கண்ட பரசுராமன் சிராமபிரானை நோக்கித் தளவமாலையணிந்த துய்யாறு சடாமுடித்தொல்லோய்! நீயெண்ணிய வெவ்வினையுஞ் செய்தகவெனக் கூறிச் சிராமபிரானிடத்தே விடைபெற்றுச் சென்றான். இதுநிற்க;

அவன் சென்றபின்னர் ஐம்புலனுணர்வுஞ் செட்டவிந்து தன்பொருட்டாவி சோர்கின்ற தன் தாதையாகிய தயரதனிடத்தே சென்று அன்பினுலவன் திருவடிதொழுது அவனை யோ துன்பப் பெருங்கடலினின்றுங் கரையேற்றிச் சக்கரவர்த்தி துன்பந்தவிர்ந்து களிப்பென்னும் கடலிலழுந்தி அரசர்பாற் சிற்றெனு மன்பில்லாத சிந்தையையுடைய பரசுராமன் கையிற் பிடித்த வில்லை நீ கைக்கொண்டு அவனுக்கு எளிதுமொழிபாத வசையுண்டாகச் செய்தாயே, மகனே! யென்று வாரியெடுத்துச் சிமோந்து முத்தமிட்டுத் தோளோடு தோள்பொருந்தத் தழுவித் தன் கண்ணிரண்டி னின்றும் ஆனந்த பாஷ்பத்தாற் றிருமஞ்சனமாட்டி இன்று நீ யெளிதாகச்செய்த ஆண்மைத் தொழில் இமையவுலகத்தவராலு முடிக்கும் வலியுள்ளதோவென்று புகழ்ந்து, இவன்றான் இம்மை மறுமைப் பயன்களை யாருயிர்க் கருத்து மிறைவ

னென்று தெண்ணி மகிழ்ந்தான். அதுபோது தேவர்க ளெல்லாரும் பூமழை பொழிந்தனர். அவ்வாறு பொழிந்த தேவருள் வருணனை யழைத்து இக் கோதண்டத்தைச் சேமித்துவையென்று சொல்லிக்கொடுத்துத் தன் நால் வகைச் சேனைக ளாரவாரிக்க அயோத்தியாபுர மடைந்தனன். யாவரும் அயோத்தியாபுர மடைந்து களிப்பென்னுங் கடலிலழுந்திக் கொண்டாடிப் வசிக்கையில், ஒருநாள் சக்கரவர்த்தி யொப்பிலெழிலுடைய பொருவருகிய சீராமனை யல்லது ஓராவியு முடையா னிலனென அவனுக்குக் குற்றேவல் செய் தொழிலே தான் பெறலரும்பேறெனக்கொண்டுள்ள பரதாழ்வானைநோக்கி; தன்றுடை காவலினுலகனைத்துங் காக்கும் மாதாமகனாகிய கேகயனு முனைக் காணும் பேராதரமுடையனா யிருக்கின்றனன்; ஆகலினீ கேகயநாட்டிற் கேகுக வென கட்டளையிட அக்கட்டளையைப் பெற்று தந்தையைமும்முறை வலம்வந்து பணிந்து தன்னோ டிளையவனோ டினிது வீற்றிருக்கும் சீராமபிரானை யடைந்து தனக்காவி யவனல்லதில்லை யாதலால் ஒழிதலில்லாத உயிரைப் பிரிந்து உடல்சென்றாற்போன்று உதாசித்தென்னும் பெயருடைய தன் மாதாமக னுடன்வரும் கேகயநாட்டை 'என்னல்லது பிறிதறியேன்' எனத் தன்னை விட் டகலாத தம்பியாகிய சத்துருக்கனனும் பாலொடு மணுகிக் கண்டான். இவன் சென்றபின்னர் சக்கரவர்த்தி தன்னாணை செலுத்துகையில் பிரமன் முதலிய தேவர்கள் செய்த பெருந்தவ முண்மையால்மேலே நடந்த செய்தியையும் விரித்துச்சொல்லுவேன்.

பரசுராமப்படலம்,

## பாலகாண்டம் - முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீராமஜெயம்.

# அயோத்தியா காண்டம்.

## மந்திரப்படலம்.

வானின் றிழிந்து வரம்பிகந்த மாபூ தத்தின் வைப்பெங்கும்
ஊனு முயிரு முணர்வும்போ லுள்ளும் புறத்து முளவென்ப
கூனுஞ் சிறிய கோத்தாயுங் கொடுமை யிழைப்பக் கோற்றுறந்து
கானுங் கடலுங் கடந்திமையோ ரிடுக்கண் காத்த கழல்வேந்தை.

மார்ச்சனைத் தடவிய முரசக்கூட்டங்கள் மேகத்தினு மாரவாரிக்க, யானைச்சேனையையுடைய தசரதன் சாமரைபுடையிரட்ட அத்தாணிமண்டப மடைந்து அரசரும தன் சுற்றத்தவரும் பக்கமாகப் பெயர்கலேவைக் கடடளை யிட்டு ஒக்க நின்று உலகோம்பி யோகுசெய்யுந் திருமாலேபோலத் தன்னந் தனியனாய் வியாழபகவானை யொத்த தன் மந்திரக் கிழவரை வருகவென்று ஏவியபோது வசிட்டபகவான்வர அவருந் கிருக்கையுதவியிருந்தான். மந்திரக் கிழவரோ உயர்பிறப்பினராயும் சாத்திரவாராய்ச்சிநன்குடையாரும்பலவாகிய முதன்மைப்பட்டகேள்வியுடையாரும் தமக்குநலமொழியினும் நடுவுநிலை நாடு பவரும் கோபமுதலனவொழிந்து நற்றருமந்தாங்கியாருமாயோர். இவர்கள்கட லெனப் புடைசூழ்ந்து வசிட்டபகவானை வணங்கி, தம்மரசர் பெருமானையுந் தொழுது அரசனருகே யிட்டிருந்த சிங்காசனங்களில முறையே உட்கார்ந்து அரசனருளும் பெற்றிருந்தனர். சக்கரவர்த்தியெழுந்தருளிய அத்தாணிமண்ட பத்தில் இவ்வாறு அவனருள்பெற்று மந்திரிமாரிருக்கையில் மன்னாபெருமா னும் அவர்முகங்களை மாபிநோக்கி நான் எண்ணிய அருமையான காரியம் ஒன்றுண்டு ; என்னறிவினை யொப்பீர் ! அதைக்கேண்மினென் றுரைப்பானாயி னன். சூரியகுலத் தரசர்களின் செய்கையின் மாறுபடாது உங்கள் பெருங் குணத்தால் யான் வையமாண்ட வருடம் அறுபதினாயிரம். இப்படி யரசாட்சி செய்துவந்த யான் என்னுயிர்க்குறுதியை நாடி இனி யரசாண்டிருக்க விரும் பேன். நமது குலதரசர்கள் தங்குலக்குமரரோ கடைமுறை யுலகந் தாங்கப் போய் ஐம்புலத்தாறுநடந்து துறவறமெய்திச் சிந்தையு மொழியுஞ் சொல்லா நிலைமைத்தாகிய அந்தமில்வீட்டினை யடைந்தனர். விண் மண் பாதலமென் னும் மூவகை யுலகமும் வெற்றிக்கொண்ட யான் காமாதியறுவகைப் பகைவ ரால் வருந்துவனோ ! கைகேசி முட்கோல்கொள்ள கொடுங்கோப மெய்திய அவுணர்களுடைய பத்துத்தேரையும் வென்றேன், மனமேறி நடந்தும் ஐம் புலத்தேரை யடர்த்து வெற்றிகொள்வது அருமையோ ! உலகின்கண் ஒருவன் போரில் சுத்தவீரனாயிருந்து இறந்துபட்டானென்றுவது பெயர் பெறவேண் டும் பரமஞானம் பெற்று தெளிந்தானென்றுவது பெயரடையவேண்டும்.

செல்வத்தைத் துறந்தாவது பேறடையவேண்டும் இலவோளரின் வீடுபே
றடைந்தவர் யாரென்று சொல்வது அத்தனிமையாகிய புத்திரப்பெருஞ்செல
வத்தைத் துய்க்குங் கருத்து இவ்வுலகமாண்டவருள் களிப்பிலாழுமோ? உங்
களை யான் தோழமையாகவுடைமையான் உலகமுழுதும் செம்மையாகக் காத்
தோம்பினல்லறஞ்செய்தேன், இம்மையி னுதவிபுரிந்து நன்மைசெய்யுடத் தந்திய
நீர் அம்மையாகிய மறுத்திநல மளிப்பதற்குந் துணியவேண்டும். நானோமகப்பே
றில்லாமையால் பலகால் வருந்தினேன். இராமனே அக்குறையைப்போக்கத்தோன்றி
னான். இனி அவன் வருந்த இவ்வரசபாரத்தை அவன்தோளிற் சுமத்தியானுய்
க்குப்போகவேண்டுகிறேன் இராமபிரானைச் சீதையாகிய திருமகள் மணம்புரி
யக்கண்ட யான் பூரணமணம்புரியவுங்கண்டு களிக்கவேண்டும் ஆகையால்
இராமபிரானைக் காசு நல்கி அவித்தையின் காரியமாகிய பிரபஞ்ச வாழ்க்கை
யைத் துறக்க வேண்டுகின்றேன், உங்கள்கருத்தென்னென ; மந்திரக்கிழவர்
சொல்வாராயினர்,

இவர் சொன்னதைக் கேட்ட மந்திரக்கிழவர் சிராமபிரானுக்கு மகுடா
பிஷேகமென்றதனால் பெருமகிழ்ச்சியும், அரசன் பிரிவுநோக்கி வருத்தமுங்
கொண்டு, இரண்டு கன்றினுக்கிரங்கிய தேனுவைப்போலிருந்த மந்திரக்கிழவர்
கருத்தை யுணர்ந்து அரசன் கருத்தினை நொடித்தாய்ந்து, வசிட்டபகவான் அர
சர்பெருமானே! உன்குலத்தாரெல்லாம் அரசாண்டு புகழெய்தினாரல்லது,
யாரோ இராமனை மகனாப்பெற்றனர்? கற்றுணர்ந்தோர் செய்யவேண்டிய
கடமையாகும். அறவொழுக்கமே நினைத்தனையென்று சொல்ல, அதைக்கேட்ட
தாதகன் பெற்றவன் நீனும்; பிஞ்ஞகன் பிடித்த பெருவில்லொடித்தவன் நீனும்;
பரசுராமனை வென்றிகொண்டவன் நீனுமெனப் பேருவகையெய்தி; கண்களினின்று
மிசைக் கண்ணீர்பெருகி நிற்ப, இனியதோர் சொல்லினை, நின்கருணைபெற்ற
எனக்கொரு குறையுளது, நீதயஞ் சொல்லியவா எங்குலத்தாசர் அளவில்
புகழெய்தியவர்தமென் சொல்லினான். குற்றமற்ற பெருந்தவத்தையுடைய
வசிட்டபகவான் சிறிது மொழியாடலனாயிருந்தான். மந்திரக்கிழவர் கருத்துக
ளெல்லாம ஒன்றுபட்டிருப்பச் சுமந்திரனென்னும் பெரிய மந்திரி சொல்வா
னாயினான்.

சிராமபிரானுக்கு அரசுறத்தகுமென்பதை நீ துறக்கின்றனையென்றசொல்
சுடுகின்றது. உன்குலத்தோர் மறத்தல் செய்தறியாத கருமத்தை மறப்பிப்பது
வழக்கேயன்று,உலகத்தினகன் அறத்தினும் மிக்க தியாது?யானைப்படையை
யுடைய அரசருக்கும்; நகரமாந்தருக்கும், மந்திரக்கிழவருக்கும் உள்ளம் முரச
மார்த்தபடி நின் மூத்தகுமாரனாகிய சிராமபிரானை முறையா லரசனாக்கி,
பின் உமக்கு அப்புறத்தி லெடுத்ததாகிய துறவற நெறியை மேற்கொள்ள
வேண்டுகின்றோமென்று மந்திரி சுமந்திரன் சொல்ல, சக்கிரவர்த்தி நீ நன்று
சொல்லினை, நமது சிராமபிராமனுக்கு மகுடாபிஷேகஞ் செய்து நின்று அழி
யாத நிலைபேறுடைய பரமபதத்தைத் தரும துறவற வொழுக்கமேற்கொண்டு
தவஞ்செய்வதைப் பின்னே செய்கின்றேன், நீ விரைவிற் சென்று நம்பிரா
மனை யழைத்துக்கொண்டு வாவென்று கட்டளையிட, மந்திரி சுமந்திரனும்

சக்கரவர்த்தியை வணங்கி நின்று, மலைபோன்ற மாளிகைகளையுடைய பலவீதி களையுங் கடந்து உலகமுழுதும் அடையப்பெற்றவன்தானே யென்று மனக் களிப்புடன், அழகிய தேருடன் இராகவனது திருமாளிகையை யடைந்து பெண்ணினலமுழுதுமாகிய சீதாபிராட்டியுந் தன்னை யென்றும் பிரியாத அழகிய வில்லேந்திய இளையவன் பக்கத்திலிருப்பக்கண்டு, தன கண்ணு மனமும் வண்டெனக் களிப்பாலுய்க் கண்டு கைதொழுது ஐயனே! இவ்வுலகு முழுதுமுடைய உமது பிதா ஒரு காரிய நோக்கி உன்னை யழைத்துவரக் கட்டளையிட்டனர். அக்கட்டளை யாதெனலும் புண்டரீகக்கட் பாலனாகிய சீராமன் விரைந்தெழுந்து அச்சுமந்திரன் கொணர்ந்த தேரிலேறிக்கொண்டு முரசமார்க்க மாதரார் கைச்சங்குமுலைச் சங்கொலித்தியக் தழுங்க எங்கள்குறை இன்றுதான் முடியப்போகின்றதென்று தேவர்கள் களிப்பெண்ணுங் கடலி லாழப் புறப்பட்டுச்சென்று அத்தாணிமண்டப மடைந்தான். அடைந்த உடனே, தம்பியுந் தானுமுந்திச் சென்று வசிட்டபகவானை முன்னேவணங்கிப் பின்பு சக்கரவர்த்தி பாதங்களையு மன்பொடு பணிந்து நிற்ப, தசரதனு மம் மகனை இருகையாலு மெடுத்தணைத்து உச்சிமோந்து முத்தமிட்டு மார்புடன் மார்புபொருந்தத் தழுவி நலந் துயாலையணிந்த மாலையையுந் தனது தோள் மார்புகொண்டளந்து அருகேயுட்காருவித்து அன்பாகநோக்கி மருவொளியாகிய பரசுராமனது தோளாற்றலைவென்ற சீராமா! உன்னை யருமையாகப் பெற் றெடுத்து வளர்த்த நான் உன்னை வேண்டிக்கொள்வ தொன்றுண்டு அதாவது, இதுவரையும் மிகவருந்தப்பட்டேன், மூப்பா மிகக்கொடியதாக வென்னை வருத்தியது, நானிதுவரையிலும் சுமந்துவந்த அரசபாரமுழுதும் நீயே பொறுத்து என்னைப் புனிதனுக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்ளுகின்றேன். என் சொல்லைத் தட்டவேண்டாமென்று சக்கரவர்த்தி சொல்ல, அக்கருத்தின் உள்ளுறையறிந்த சீராமன் விருப்பவுமிலனாய் இகழ்வுமிலனாய் 'தந்தைசொன் மிக்க மந்திரமில்லை.' என்பதனால் காது அரசன் கட்டளையாதோ அதைச் செய்வதே மக்கட்குரியகடன். இது கருதியே 'ஏவாமக்கள் மூவாமருந்து.' என்றும் பெரியாரும் கூறியிருக்கின்றனரென்று அச்சட்டளையை யேற்று நின்றான். சக்கரவர்த்தி தாசரதியின் சிந்தைத் துணிவையறிந்து எனக்கிவ்வரந் தரவேண்டுமென்று மகனை யுயிருறத்தழுவி விடுத்தனன் தன்மந்திரக்கிழவருஞ் சூழ மேருவுந் தனக்கொவ்வாத இராசமாளிகையை யடைந்தான்.

தாசரதியும் பலவரசர் புடைசூழ நகரமாந்தர் தொடரத் தனது திருமாளிகையைச்சென்று சேர்ந்தான். சக்கரவர்த்தியோ வெற்றி வேந்தரை வருகவென்று தன்னிலைச்சிறையிட்ட முடங்கலைப்போக்கி வசிட்டபகவானை நோக்கி நமது சீராமனுக்கு மகுடாபிஷேகஞ் செய்யவேண்டுவனவற்றைச் சித்தஞ்செய்யவேண்டுமென வேண்ட, வசிட்டபகவானு மவ்வாறே செய்கின்றேனென்று தேமொழி அந்தணர் கூட்டம் புடைசூழ்ச்செல்ல அரசனை நோக்கி நமதிராமனுக்கு திருவும் பூமியுஞ் சிந்தையிற் சிறந்தனவென்று கூறினன் அவ்வாறு சொல்ல அச்சொல்லாகிய இனிய தேனையருந்தினராக யாவரும் முறைதடுமாறி நின்று ஆனந்தக்களிப்பி லழுந்தி நிறைந்த நெஞ்சில் உவகை

யானதுசென்று மயிர் வழி நமிர விண்ணில் உடலொடு செல்பவரை யொத்து நின்றனர், யாவரு மொத்த சிந்தையுடையாராய்த் தாமே அரசுபெற்றாற் போலக் கழிமகிழ்சிறந்து சக்கரவர்த்தியை மும்முறை வணங்கி இறைவனே! நீகொண்டகருத்து நன்மையை விளைவிப்பதேயென் றறிவிப்பதாயினர். இருபத்தொருமுறை எங்கள் குலங்களை வேரொடுங்களைந்த பரசுராமனைவெற்றி கொண்ட சேவகனுக்கு இவ்வரசுஉரிமையாக்கக்கடவது! இது அறவொழுக்கமென்றுங் கூறினர். இவ்வாறு மற்றையரசரும் எடுத்துக் கூறவே அதனை மனத்திற்கொண்ட அரசர்பெருமான் அரசர்களே! நான் என் மகன்பால் தலையளிகொண்டு மயங்கிக்கூற நீங்கள் யான் மகிழக்கூறியதோ அல்லது தகுதியாற்கூறியதோ சொல்லுங்களென்று கூற, அங்கிருந்த அரசர் கூட்டம் நின் மகனுக்கு அறிஞர் பலர் தத்தம்வரையிலும் தாங்கள் செய்தொழுகும் தலையளியைக் கேளுங்கள், தானமும் தருமமும் தகுதியும் ஞானமும் நல்லவரைக் காக்கு நலமும் செல்வமும் இவையும்படி நினைப்பார். ஊருணி நிறைந்திருக்கவும், யாருக்கு நிழலைத்தரும் அலமரம பழுக்கற்றாகவும். மேகம் மழைபொழியவும், கழனியிற்பாய்கின்ற ஆற்றின புனலபெருகவும் மறுப்பவர்யாவர்? பணையவாவுகின்ற புழைக்கையை யுடைய பருமத்தைவாய்ந்த யானையையுடையானே! நின்னை யவாவுந்தன்மையை நினைந்தலைபேறுடைய ஆருயிர்க்குளவ் வகைபன்புடையானே இராமன் இவ்விடத்தவனுக் கவ்வகை யன்பினையுடைய அவைகளுமென்றனர். அவர்கள்சொன்னசொற்கேட்டதசரதன்மனத்தைச்சூழ்ந்து பொழிந்த பொங்களிசிறந்தானாய் காதன்மிகுந்து இடர்கழிந்து களிக்குஞ்சிந்தையனாய் ஆனந்தக்கண்ணீர் பொழிந்து அரசர்க்கரசனாகிய தசரதசக்கரவர்த்தி சொல்வானாயினன், நடுவுநிலையினும் தருமத்தினும் செய்கையினும் தீங்கைக்குறித்து வெறுத்தலினும் ஒழுக்கத்தினும் மேம்பட்டபெரியீர்! என்மகனென்று யான்சொலவதென்! நன்னெறிபற்றி யொழுகலிற் றவறெய்தின் உங்களாதரவு வேண்டுமென் றிரந்து, அரசவையெல்லாம் அவரவர் விடுதிகளுக் கனுப்பிவிட்டு, மகுடாபிஷேகத்திற் குரிய நாளை நிச்சயஞ்செய்வதிற் பொழுதுபோக்குவானாய் சோதிடநூல் நன்குதெரிந்த சோதிடரை வருவித்து ஒரு தனிமண்டபத்திற் புகுந்து ஆலோசிக்கத் தொடங்கினான்.

அரச னிவ்வாறு ஆலோசனை செய்துக்கொண்டிருக்கையில் காதல் மேற்கொண்டாராயும் கொங்கையை வீக்கிய கச்சொழிந்தும் நீண்ட கூந்தல் சரிந்தும் நீண்ட ஆடை யவிழ்ந்துபோவதை யறியாமலும் நெருங்கிய ஆனந்தக் கூத்தாடுவாரும் பண்ணின்றிப் பாடுவாரும் பார்த்தவருக்கே காஞ்சூடுவாரும் சொல்லுவதறியாருமாகி நான்கு மாதர்சென்று நின்றதை யன்பாகச் சிராமனைப் பயந்த கோசலைகண்டு, நீங்கள் வந்த கோலங்கண்டால் சந்தோஷ சம்பத்தமான செய்தியா யிருக்கின்றது சொல்லுங்கோளென, அதற்கம்மாதர்கள் சொலவாராயினர். பல அரசரும் வந்து வணங்கப் பலநாளும் பாரையளிக்கவேண்டுமென்று உன் மைந்தனாகிய சிராமனை உலகமுழுது முடைய இறைவன் தொன்றுதொட்டுவந்த மகுடத்தைச் சூட்டப்போகின்றான். இதுதான் நாங்களறிந்த செய்தியென்று மிக்கக் களிப்புடன் சொல்லினர்.

முழுதுமாளும் பெருஞ்செல்வம் தன்மகனெய்துவனென்றதனால் உவகைக்கடலி லழுந்தியும் மன்னவர் பிரிவைநோக்கிவடவைக்கனல்போல்வருந்தியும் அவ்வகைப்பட்டவளாயினும் விலையுயர்ந்தமுத்துமாலைகளையும்பொருட்குவியலையு மவர்களுவப்பக் கொடுத்துத் தன் காதன் மிகுந்த சுமித்திரையோடுஞ்சென்று ஆயிரமோலி யமலனாதிப்பிரா னெழுந்தருளிய பிரணவவிமானத்தையடைந்து பூந்தாமரையாளும் பூமகளென்னுந்தேவிய ரிருமருங்கிருப்பத் தேவர்கள் யாவர்க்கும் ஆவியு மறிவு முதலாகிய இறைவனது வாவியின் மலர்ந்த தாமரைப்பாதங்களை வணங்கி என்னிடந்தோன்றியமகனுக்கு இனி யருள்செய்வது உன்னிடத்ததென்று சொல்லி வணங்கி அத்திருமகன் கேள்வனுக்கு வேதசம்பந்தமான பூசனைபுரிந்து அங்குள்ள மெய்புணர்ந்தார்க்கெல்லாம் கன்றையுடைய பசுவைக் கோதானமாகக் கடல்போலளித்துப் பிராமணர்களுக்குச் சுவர்ணதானமும் நவமணித்தானமும் கன்னிகாதானமும் பூதானமும்பெருக்கக்கொடுத்து அன்னதானமும் அன்பாய்ச்செய்து மீண்டும் இறைவனை வணங்கி விமானத்தை வலம்வந்து பல நோன்புகள் செய்யலாயினள்.

மந்திரப் படலம் முற்றிற்று.

## மந்தரைசூழ்ச்சிப்படலம்.

வாசனைதங்கிய மலர் மாலையணிந்த அரசர்பெருமான் கணிதநூல் வல்ல புலவரையழைத்து அவர்களை நன்குபசரித்து மழுவாளியாகிய பரசுராமனைவெற்றிகொண்ட என்மகனாகிய சீராமனுக்குமுடிபுனை*கடிகைநாள் எடுத்துச்சொல்லுங்கோ ளென்றனன் அதைக்கேட்ட அக்கணிதநூற்புலவர் உன்மகனுக்கு முடிபுனையும்காலம் நாளையே யென்றனர். அரசனேகுற்றமற்ற செம்மையான தவத்தினைச்செய்த வசிட்டமுனிவனை வரவழைத்து நமது சீராமனுக்கு நன்மையமைந்த மங்கல நாள் நாளையேயாம். அவ்வில்லில் வல்ல சீராமனுக்கு இங்கே வேண்டுவனவற்றை விரைந்துசென்றுஅவனுய்யும்படிபெரிதுஉறுதியும்வாய்மையுஞ்சொல்லவேண்டுகின்றேனென்று வணங்கிக்கூற, வசிட்டமுனிவனும் உவகை மிகுந்து மனுகுல நாயகனாகிய சீராமபிரான் வாயிலடையவே,அவன்வரவைக்கேட்டுச் சீராமபிரான் இனிமையாகச்சென் றெதிர்கொண் டழைத்துப்போய்த் தமது திருமாளிகையினுட்புகுந்து அவருக்கு ஆசனமளித்து இருக்கச்செய்ய, அவர் சீராமபிரானை நோக்கிச் சீராமா! உன்பாற் பரிவுமிக்க நமதரசன் இக்கடலிடமுழுதும் நினக்குநாளையே தரப்போகின்றானென்றுசொல்லிச் சீராமனைநோக்கி உனக்குச்சொல்லு முறுதிப்பொருளொன்றுண்டு, அதைக்கேட்டுநன்றாகக் கடைப்பிடிக்கவேண்டும். திருமகள் கணவனினும் பரமசிவனினும் தாமரையாசனத்தினையுடைய பிரமனினும் ஐம்பூதங்களினும் உண்மையினும் பெரி

* "முடிபுனை கடிகைநாள்" என்று தசரதன்கேட்பதே முடிபுனைகின்றகடிகையாகிய நாளென்றும், முடிபுனைதலைக் கடிதலைசெய்யுநாளென்றும் பொருள் படல் காண்க.

யாராவார் அந்தணரொன்றேயெண்ணித்துணி. அந்தணர் முனிவர் மகிழ்ந்த
ருள்செய்யவும் தேவர்களில்கேடெய்தினரையும் சிறந்தாரையும் எண்ணிப்
பார்க்க அளவுசொல்லப்போமோ, அத்தன்மைய ராதலின் இக்கொடிய
தீவினையினின்று நீங்கிய மேலோர்பாதங்களைப் புனையுஞ் சென்னியையுடை
யானைப் புகழ்ந்துவணங்கி அவர்கட்கினியமொழிசொல்லி அவர்களேவிய
காரியங்களைச்செய்து நடக்கவேண்டும். அவ்வந்தணர் ஏவலிற்கும் விதியே
ஆவதற்கும் அழிவதற்குமென்று சொல்வோமாயின் இனியாவ தெப்பொ
ருள் இம்மையினும் அம்மையினும் தேவர்களை வணங்கிநிற்கும் அளவுசிறந்
தது. சக்கரப்படையும் சூலப்படையும் வாக்காயுதமும் வல்லமூவர்க்கும்
தெருளும் அறமும் மனச்செம்மையும் அருளு நீத்தபின்னர் ஆவதுண்டா
குமோ, சூதென்றமுந்துறச்சொல்லிய பெருந்துயரம் நீதியையுடையமைந்
தனே! நினக்கில்லையென்றாயினும் குற்றமென்பன யாவு மடைதற்கோது
கின்ற மூலகாரணம் அதுவென்றெண்ணித்துணி. யாரோடும் பகைகொள்
ளிலனென்றபின்,போரொடுங்கும் புகழோவொடுங்காது தன்சேனையொடுங்
கல்செல்லாது அதுதந்தபின்னர்வேரொடுங் கெடுதல்வேண்டுமோ. கொள்
ளத்தக்க ஐம்பொறியுங்குறையமெய்ம்மையை யெந்நாளுங்கண்டு நடக்குறும்
ஆற்றலான் ஆளு மவ்வரசே யரசெனப்படுவது. அதுதான் வாளின்மேற்
செய்யு மாதவமாகும். பரமசிவனுக்கும், திருமாலுக்கும், பிரமனுக்கும்
சமைத்ததோளாற்றல தாங்கினவரேயாயினும் அமைச்சர்சொல்வழிநடப்
பதுதான் ஆற்றலெனப்படும். முன்பின்பின்றி மூவுலகத்தின்கண்ணும் அன்
பினல்லது ஓர் செல்வமுண்டோ, தேவர்கட்கும் மக்கட்கும்வலிமையாகிய
புலன்களைக் குற்றமற மாய்ப்பதுயாது? வையமே மன்னுயிராக அம்மன்னு
யிருய்யத்தாங்கும் உடல்போன்ற மன்னவனுக்கு ஐயமில்லாமலே அறங்க
டவாமலருளும் மெய்ம்மையி னின்றபின்பு வேள்வியென்பது வேண்டுமோ?
இனியசொல்லை யுடையானும் ஈகையையுடையானும் மதிப்புடையானும்
தூய்மை யுடையானும் வினையை யுடையானும் வண்மையை யுடையானும்
வெற்றியையுடையானும் யாவருங்கொள்ளும் நீதிநெறிகடவாதானுமாயின்
அவ்வகையரசனுக் கழிவுமுண்டாமோ? சிலமல்லாதனகள் நீக்கித் துலைநா
வன்னதனிநிலைதாங்கி உலகமுழுதுமாளும் அரசர்க்கு நல்லவர்நோக்கியகா
லமேயல்லது கண்ணுமுண்டாகுமோ? நிலத்தின்கண் தூமகேதுவெனத்
தோன்றிய அழகிய மேகலாபரணமணிந்த மாதரால்வருங் காமமென்ப
தில்லையென்றால் கடுங்கேடென்று சொல்லப்படு நாமமுமில்லையாம். நரக
மெனப்படுவதுமில்லை என்பனவாகியநீதிகளையெல்லாம் உலகமுண்டபெரு
வாயனுக்கறிவுறுத்தி, அவ்விராகவனொடும் ஆயிரமோலியமலனுதிப்பிரான்
கோயிலையணைந்து அங்கெழுந்தருளியபரம்பொருளை வேதவிதிப்படித் திரு
மஞ்சனமாட்டி அறிவுடையோராற் கொள்ளப்படும் சற்கருமமெல்லாஞ்
செய்து வெண்ணிறமுள்ள தருப்பையை விரித்து அதன்மேற்காகுத்தவம்
சோத்தரனையிருக்கச்செய்து தான் அரசர்பெருமானுக் கறிவித்துச் சென்
றான். அதைக்கேட்டுத் தசரதனும் தன்நகரத்தையலங்கரிக்கக்கட்டளையிட

வள்ளுவனே நமது சிராமபிரான் நிலமடந்தை நாயகனாக நாளையே மகுடாபிஷேகஞ் செய்துகொள்ளப் போகின்றானென்று தேவர்களு மகிழ்வெய்தும்படி அந்நகரமுழுதும் திரிந்து பறையறைந்தான்.

புலவர் பலராலும் கூறப்படும் வலியமைந்தபுகழினையுடைய சிராகவபிரான் நாளையே புவிக்கரசனெனப் பொலிவானென்றசொல் செவிக்கமுதமாக விளங்குவதேனும் தேவர்களின் அவியமுதமாக விளங்கிக்கிடந்தது. நகர மாந்தரிற் சிலர் ஆரவாரித்தனர், களிப்படைந்தனர், ஆடிப்பாடி நின்றனர், வேர்த்தன, உடல்பூரித்தனர், மெய்ம்மயிர் பொடித்தனர், சக்கரவர்த்தியைப் புகழ்ந்துவாழ்த்தினர். நிணிதியை இச்சுபச்செய்தி சொன்னவர்கட்கெல்லாம் தூர்த்தனர். அந்நகரமாந்தரோ மிக்க ஒளியுள்ள சூரியனைத் திருத்துவதுபோலவும், அக்கள்ளமா மாயப்பிரான் மார்பிற்கிடந்திலங்கும்கவுத்துவமணியைவேகடஞ்செய்வதுபோலவும். அந்நகரினை வாழைகமுகுநட்டு முத்தமாலைநாற்றிப் பூரணகும்பம்வைத்து மகரதோரண நட்டுப் பவளத்தூணில் திரைச்சீலையிட்டு அலங்கரித்தனர். ஒருபுறத்தே அந்த இராசவீதியானது *முத்துமாலை தொங்கவிட்டிருப்பதனால் முழுநிலாவெறிக்கவும், மாணிக்கமாலையில் சூரியகாந்திவிளங்கவும், நீலரத்தினவொளி அவ்விரண்டொளியையுமடக்கி இருளைச்செய்கின்றமையால் சோதிடநூற் புலவர் விரித்தநாள்களையே பொத்துவிளங்க, குதிரைகட்டிய தேர்க்கூட்டங்கள் நிலவுலகத்தைக்காண விண்ணுலகத்தினின்று மிழிந்த விமானம் போல் தோன்றவும், நெற்றிப்பட்டமசைகின்ற யானைகளோ உதயமலையானது சூரியனோடுதிரிவதுபோலவும்விளங்கின. இவ்வாறு அவ்வயோத்தியா நகரத்தின் அலங்காரம் பொன்னுடென்றுதோன்றுகையில் உலகத்திற்கே துன்பஞ்செய்துவரும் இராவணன் செய்த தீமையேபோல் நெருங்குதலருமையான கொடியமனமுள்ள மந்தரையென்னுங்கூனி நெஞ்சுதுடிக்ககோப

* முத்தனின் முழுநில வெறிப்ப மொய்ம்மணிப்
பத்தியி னிளவெயில் பரப்ப நீலத்தின்
தொத்தின மிருள்வரத் தூண்டச் சோதிட
வித்தகர் விரித்தநா ளொத்த வீதியே.

இதன்பொருள் - முத்தில் முழுநிலாவெறிக்கவும் நெருங்கிய மணிவரிசையில் இளம்பருதி யொளிவீசவும் தொழிலமைந்த நீலமணியின் கூட்ட மிருள்வரத்தூண்டலான் அவ்விராசவீதி கணிதநூற்புலவர் விரித்தநாளையொத்திருந்தன. எ-று.

நவமணிகளொன்பானுக்குங் கோளென்பானும் அதிதேவதைக ளாதலானும், அவற்றுள் சுபக்கிரகங்களாகிய மதியும் இரவியும் அதிதேவதையா முத்துமாணிக்கமென்பவற்றின் ஒளியடங்கப் பாபக்கிரகமாகிய காரியதேவதையாம் நீலமணியின் ஒளிவிஞ்சி நிற்பதனான் சிராமபிரானுக்கு முடிபுனை கோலமின்றென்பது அவ்விராசவீதியே கணிதநூற் புலவர்போன் றுணர்த்திற்றென்க இக்கிரகங்களே அம்மணிகளொன்பானுக்கு மதிதேவதை என்பதனை முத்திற் கதிதேவதை முத்தின் முழுநில வெறிப்ப வென்பதனானும், மாணிக்கத்தினதிதேவதை மணிப்பத்தியி னிளவெயில் பரப்பவென்பதனானும், நீலமணியினதிதேவதை நீலத்தின் றொத்தினமிருள்வரத் தூண்ட வென்பதனானுமோர்ந்துணர்க. வீதிகள் சோதிட வித்தகர் விரித்தநாளொத்தவென்றார் அப்புலவர் இன்னகிரகம் இன்னபடி சுபா சுபந் தோற்றும் என்பது தானே அவ்வீதிவிளக்கலா னென்க.

மீக்கொண்டு வருந்தியமனமுடையளாய்க் கண்சிவந்து கொடுஞ்சொற்பே ரிக்கொண்டு மூன்றுலகத்திலுக்கும் ஒருதுன்ப மூட்டுகிற்பாளாய் உதாசித் தெனப்படும் கேகயநாட்டரசன் மகளாகிய கைகேசியின் திருமாளிகைய டைந்து இராகவபிரான் உண்டைவில்லுக்கு வருந்தியதை யுள்ளத்தேநி னைந்து அவள் பஞ்சணையிற் கண்ணுறங்கிக்கிடப்பதையறிந்து அவள் சிற டியைத் தன்கையால் தடவிநின்றனள். கைகேசியும் உடனே நித்திரைநீங் காதிருக்கத் தான்கொண்ட பெரும்பழிமுடிக்கும் சொற்களைச் சொல்லத் துணிந்து விடப்பாம்பு தன்னை நெருங்கியகாலத்தும் குணங்கெடாமல்விள ங்கும் குளிர்ந்த சந்திரனேபோலப் பேரிடர் உன்னைப்பிணிக்கவாவும் நீய தையெண்ணிவருந்தாமல் உறங்கலாமோவென்று சொல்லிநின்றனள்.

இவ்வாறு சொல்ல அதைக்கேட்ட கைகேசியும் பகைவரை வெற்றி கொள்ளத்தக்க வில்லையுடைய என்மக்களே நடுவுநிலைமை தவறாதவர் தத் தமக்குரிய முறையினின்றும் தவறாதவர்; எனக்குளத்துயரந்தானடுக்கும்? பரவுதற்கருமையான மக்களைப்பெற யாவரும்பொருந்துத லருமையான உறுதியைவிட் டுறுதிகாண்பவராவர்; நிலவுலகத்திற்கு வேதம்போல்பவ னுகியசிராமனைப்பெற்றபின்னர் எனக்கிடரென்பதுண்டோவென்றுமகிழ்ந் துசொல்லக் கூனியாகிய மந்தரை பொறாதவளாய் உன்னலம் வீழ்ந்தது செல்வமுங்கெட்டது. கோசலையோதன் சூழ்ச்சியினுல் வாழ்ந்தனள் எனக் கைகேசியும் என் மணமகன் உலகமுழுதாளும் மன்னவர் மன்னனேயாயி னமையாலும், சொல்லரும்புகழ்படைத்த பரதன் என் மகனுயினமையா லும் இவ்வுலகத்தில் என்னினுமிக்கவாழ்வு யாரடைந்தனரென்று சொல் லினள். கூனியோ ஆண்மக்கள்நகைசெய்ய ஆண்மைகெடத் தாடகையைக் கொன்ற வில்லைவளைத்த சிராமன் நாளை மகுடாபிஷேகஞ் செய்துகொள் ளப்போகின்றுனென்று சொல்லி முடித்தனள். இசசொல்லைக் கேட்டுக் கைகேசி மனமும் வெற்றியமைந்த கோசலை மனமுமொத்திருந்தன, இம் மாதின் உள்ளத்தில் தசரதன் இருப்பதனு லொக்கும்போலும்; அவளுள் ளம் வேறுபாடெய்தாதிருந்தது. இவ்வாறிருக்கையிற் கைகேசியினுள்ளம் பொன்பெண்ணுங்கடல்பொங்கி யதிகரிப்பவும் பூரண சந்திரன்போன்ற முகம் பொலிவெய்தவும் உவகையி லழுந்தி எவ்வகைச் சுடர்கட்கு நாயகம் போல்வதோர் மாமணிமாலையைக் கொடுத்தாள். அதைக்கண்ட மந்தரை கைகேசியை நோக்கி அதட்டி முறுமுறுத்துக் கோபநகைசெய்து வைது நெட்டுயிர்ப்பெறிந் தழுது புரண்டு தனக்களித்த மாலையாற் பூமியைக்குழி செய்து அடிபேதாய்! உனக்குப்பிறந்த மகனுகிய பரதனேடும் நீ துயரம டைய நான் உன் மாற்றவளாகிய கோசலையினது தாதிகட்காட்செயத்த ரிக்கமாட்டேன். சிவந்த வாயையுடைய சீதையும் சிராமனும் சிறந்தசிங் காதனத்திலிருக்க உன்மகன் பரதன் பயனற்றவனுய் வெறுநிலத்தி லிருக் கையாயமைந்தபோது உய்ந்தவாறு என்? இதற்குறுதிப்பொரு ளென்ன வென்று வினவினள். கோசலைக்கு உறுதியை யளிக்கும் மகனுகிய சீராமன் சிறந்த செல்வத்துட் செல்வமடைந்தான், பரதனே பிறந்தும் பிறவாதா

ணயினன் நீ பெற்றதனலென்று சொல்லிவிட்டுப் பின்னும் சீராமன் தன் தம்பியுடன் இவ்வுலகத்தை யளித்துவருவானயின் அளவில் காலம் பரதனும் சத்துருக்கனும் இந்நகரை நீங்கிச்சென்று மாதவஞ்செய்யப் போவது நல்லது; ஆயினும் மதயானைபோல்பவனகிய பரதன் நிலமகள்மகிழ அரசாண்டுவரும் அரசர்வரிசையின் மதிக்கப் பிறந்திலன், இதைப்பார்க்கினும் அவன் இறப்பதே நல்லது, மேலும் வேறொன் றெனக்குப் புலப்படுகின்றது. நல்வினை செய்தறியாத பரதனை நமது சக்கரவர்த்தியன்று தன்னணையால் தேக்கமரஞ்செறிந்த மலைவழியைக் கடந்து வெகுதூரமுள்ள கேகய நாட்டுக்கு அனுப்பிவிட்டசெய்தி இப்போதுதான் தெரியவந்தது. உன்னை நெடுந்தூரஞ் செல்லச்செய்தமையால் தந்தையுங்கொடியன், உன்னைப் பெற்ற கைகேசியும் அறக்கொடியள் எந்தாய் பரதனே நீ யென்செய்வையோ என்று கூவி, கைகேசியைநோக்கி அரசர்குலத்திற் பிறந்து பின்னரசர்வீட்டில்வளர்ந்து அரசர் குடியிலே புகுந்து பேரரசியெனச் சொலக்கிடந்த நீ கரையிடலரிய பெருந்துயர்க்கடலில் வீழ்கின்றனை! நான் சொல்வதைச்சிறிதும் கேட்டாயில்லை, உனக்குச்சிறிதுந் தெரியவில்லையேன்று சொல்லவே; அச்சொற்கேட்டுக் கைகேசி மனம்புழுங்கி நெருப்பில் நெய்விட்டதுபோற் சினந்து *சூரியகுலத்து மன்னரெல்லாரும் உயிர்முதலிய பொருள் மாறுபடினும் முறைவழுவா திருப்பவராவார். மயிலினது முறைமையுள்ள குலத்துரிமையைச் சிறிது மதியாமல் குற்றமுறப் புல்லறிவால் யாதுகூறினை? நீயோ எனக்கு நல்லவளுமல்லள், என்மகனகிய பரதனுக்கும் நல்லவளுமல்லள், அத்தருமத்தை நோக்குமிடத்து உனக்கு நல்லவளுமல்லள், வந்து முன்செய்வினைதூண்டலான் மனத்துக்கு நல்லன வல்லனவற்றைப் பேசத்துணிந்தனை! ஒருவன் பிறந்திறந்துபோய்ப் பெறு

* வெயின்மு றைக்குலக் கதிரவன் முதலிய மேலோர்
உயிர்மு தற்பொரு டிறம்பினு முறைதிறம் பாதோர்
மயின்மு றைக்குலத் துரிமையை மனுமுதன் பரபைச்
செயிரு றப்புல்ச் சிந்தையா லென்சொனய் தீயோய்.

இதன்பொருள் வெயில் பரப்பும் சிறந்த பரிதி முதலிய மேலோர் உயிர்முதலிய பொருடிறம்பினும் தஞ்சொற் கடவாதவராவர், மயிலினது முறைமையையுடைய குலத்துரிமையையுடைய மனுமுதலிய அரசர் மரபினைக் குற்றமுறப்பேதையறிவானீயாதுகூறினை கொடியாய். எ-று.

மயில் முட்டையிட்டுப் பொரித்த பின்னர் முதற்பார்ப்பின்வயிற் சென்றுடினல்லது கலாபந்தோன்றுமையின் அம்முறைநோக்கி மயின்முறை யென்றதென்க. இனி மயிலடிவைக்கு ஞான்று முன்னடிவைததாலும் அளவிற்சேறலும் பொறுந்துமாற்றானும். முதற் பார்ப்பினுக்குச் சூடுதோன்றுமை யேனையவற்றிற்குத் தோன்றுமையானு மங்ஙனங்கூறிய தெனினு மமையும். மயிலடிவைக்கு முறையென்பதனை 'மயிலடித்தொழுக்கு, என்று இவ்வாசிறியா கூறியவாற்றானு மறிக. உயிற் முதற்பொருடிறம்பினு முறைதிரம்பாதோ ரென்றது கடனெருட்டார், புறவின்பொருட் டெறுறந்தார், கங்கைகொணர்ந்தார் வயிற்காண்க. மனுபரிதியங்கடவுள் மகனகலானும், அவன் வழிவந்தாரே கடைமுறையுங் காத்தமையானு மனுமுதன் மரபென்றதென்க. என் வினைப்பெயர். இது உருபேற்று என்னுக்கோவளர்கின்றதே என்றும் எனனுமென்றும் வருவதுகாண்க.

வது விழுப்பதும் புகழேயாயின் கீர்த்தியே மாறுபடினும் நியாயமேமாறி
னும் நெறியின் வகைமாறினும் செய்தவமாறினும் குற்றந்தீர்ந்த வலிமை
மாறினும் வான்முறைமாறுதல் வழக்காகுமோ? என்னருகே யிருக்கவேண்
டாம் என்னைவிட் டகன்றுபோய்விடு, உன்னற்பமான நாவைச் சேதிக்க
வேண்டும்; சேதிக்காமல் பொறுத்தேன், புறத்தவர் சிலரறியின் உன்னைக்
கெடுசூழ்வர். நீயோ நீதியல்ல வும்நெறிமுறை யல்லவுமான காரியத்தை
நினைந்தனையாகையால் அறிவில்லாத பேதாய்! இம்மட்டில அடங்கென்று
கூறினள். இதுகிடக்க;

கைகேசி இவ்வாறு கடுகடுத்துச் சொல்லக்கேட்டு அஞ்சி யகலாமலே
நின்று உனக்குறுதிப்பொருளை யுணர்த்துவ தொழியேனென்று அவளடி
யில்வீழ்ந்திறைஞ்சிச் சொல்லுகின்றாள். அரசுமூத்தவர்க்கென்னு முறை
மையைப் பார்த்தால் இவ்வுலகங் காத்துவந்த சக்கரவர்த்திக் கிளவனே
யன்றோ! கடல்போலு நிறத்தையுடைய சிராமன், அரசன் யாவரும் வந்து
வணங்கும் நீண்முடி அவனுக்கணிய இசைந்தானென்றால் பரதனை அச்செ
ல்வத்தினின்றும் விலக்குவ தெவ்வண்ணமுடியும்? அறத்தின் வழியொழு
கும் அருளுடைய அர்ந்தவர்க்கேயானாலும் பெறலருஞ் செல்வம் பெற்ற
பின்பு கருத்துவேறாகமுடியும். கொடுமை நினைந்து உம்மைவருத்தாவிடி
னும் மனத்தாற்றிமையை யெண்ணிச் செய்துவருவர். தன் மகனுக்கே யா
சென்றால் பூமண்டலவாதிக்கமுழுதும் கோசலைக்குடைமையே யல்லது
வேறன்று. ஆதலால் உன்மகனுக்கு முனக்கு மிப்பூமியினிடத்தே அவளுத
விய வொருபொருளல்லது உரிமையுள்ளதெது? துன்பமும் வறுமையும்
தொடாந்திடத் துன்பத்தால் வருந்திக் கேட்டவர்க்கு வேண்டியபொருள்
களை அவளைவேண்டிக் கேட்டுக்கொடுப்பையோ? கோபிப்பையோ? துன்
பத்தினால் வருந்தி மாண்டுபோவையோ? மறுப்பையோ எவ்வாறுயிர்வாழ்
வை. மனச்செயலாற் றிகைத்தொழிந்தனை? இனிச் சிலநாளில் தத்தமில்
லாமையும் எளிமையும் உன்னைக்கொண்டு தவிர்க்க உன்தாதையும் உறவி
னரும் பிறரும் உன்னைவந்து காணவெண்ணினால் உன்மாற்றவள் செல்வத்
தையே கண்டு மகிழவேண்டும். நல்லது உன்கணவனுக் கஞ்சியே சிதைக்
குத் தந்தையாகிய சனகராசன், உன்தந்தையாகிய உதாசித்தோடு போர்
செய்யாமலிருக்கின்றனன். இனி அவனுக்கு வாழ்வாவது எவ்வாறுகிடைக்
கும்? பழிபெய்தப்பிறந்தார் உன்னளவு யாரிருக்கின்றனர். உன்பிதாவிற்
குப் பலபகைவரிருக்கின்றனர். அவர்பகைத்தெழுந்தால் உன்தந்தைக்கு
தவி சிறிதேனுமில்லை, அவன் எவ்வாறு வெற்றியடைவன்? நீயோ சுற்றத்
தையவலமாக்கித் துபர்க்கடலிலழுத்தப் பிறந்தனை. உன்மகனை யவலமாக்
கினை? அரசன் உலகமுழுதும் தன்மகனாகிய சிராமனுக்கென்று மகுடாபி
ஷேகஞ்செய்யத் துணிகையில் அச்செல்வம் அவனுக்கும் அவன் தம்பியா
கிய இலக்குமணனுக்கும் அல்லது வேறெவர்க்குண்டாமென்று வடித்து
வடித்துச் சொல்ல, தேவர்கள சூழ்ச்சியினாலும் அவர்கள் பெற்ற வரத்தா
லும் மாயையாலும் அந்தணர்செய்த அருந்தவத்தாலும் அக்கைகேசி யுள்
ளம் மாறுபட்டது. இது கிடக்க;

அரக்கர் செய்த பாவமும் தேவர்கள் முதலியோர் செய்த வறமும்
துரக்க சிராமன்பால் வைத்த அன்பு துரந்துவிட்டனள். அவ்வாறு அவர்

கொண்ட இரக்கமில்லாமையன்றோ இவ்வுலகங்களெல்லாம் சிராமபிரானது பரந்த பழைமையாகிய கீர்த்தியென்னும் அமுதத்தை வாய்மடுத்துண்டவசமாயின. அத்தன்மையளாகிய கைகேசி தீவினையேயுருக்கொண்டமந்தரையைநோக்கி என்னை மகிழ்வித்தனை. என்மகனுக்கும் இனியை, அவன் முடிபுனையுஞ்சூழ்ச்சி எவ்வாறு சொல்லவேண்டுமென்று குறைவிரப்ப, அதற்கு மந்தரையும் என்சொல்வழி நின்றால் இப்பதினாலுலகமும் உன்மகனுக்கே ஆக்குவேன். நீ அந்நாளிற் சம்பராசூரன் யுத்தத்தில் அரசனுக்குத் தேர்சாரதியாகச் சமைந்தாய், அப்போது அரசன் உனக்கு இரண்டுவரங்கள் கொடுத்திருந்தானல்லவா? அவ்வரமிரண்டில் ஒன்றால் இராமன் பதினான்காண்டு காடுறை வாழ்க்கையனாகவும், மற்றொன்றால் உன்மகன் பதினான்குலகமும் ஆண்டுவரும்நாடுறைவாழ்க்கையனாகவும், இருக்கும் உபாயத்தைத்தேடவேண்டும், இதுதானுபாயமென்றெடுத்துச் சொல்லினள். கைகேசியும் அவளை யுயிருறத்தழுவி முத்துமாலைகளையும் செல்வக்குவியலையுங் கொடுத்து என்மக னரசாளத்தந்தனை, இனி எனக்கு நாயகன் மாதா நீயேயாவையெனத் தாழ்மொழிபுகன்று அவ்வாறு இவ்விரண்டு மெய்தப் பெறுவிடின்பொன்றுதல் திண்ணமென்று சூள்மொழி சொல்லியனுப்பிவிட்டு மலர்படுக்கையினின்று மிழிந்து, தன்கூந்தலிற் சொருகிய மாலையை மேகத்தினுழையும் மதியைப் பிதிர்ப்பாள்போலத் தேனைவிரும்பியடையும் வண்டினமலமரச்சிதைத்து தானணிந்திருந்த மேகலாபரணத்தைத் தன்புகழாகிய கொடியை வேரறுத்தாற்போல கிண்கிணியோடும் கைவளைதுறந்து மதியில் மறுத்துடைப்பாள்போன்று அளகவாணுதற்றிலதமுமழித்து இரத்தினாபரணங்களையுங் கழற்றியெறிந்து நீலோற்பல மலர்போன்றதன்மையுண்ட கண்ணினஞ்சானங் கான்றிட அழுது பூருதிர்ந்தகொம்பெனப் பூமியிற்புரண்டு வீழ்ந்திருந்தாள். இது எவ்வாறிருந்ததெனின் மான்வீழ்ந்தாற்போலவும், நாடகமயில் துயின்றாற்போலவும், சானகியாகிய தாமரையாள் நீங்குமென்று அயோத்திவந்தடைந்த கைமேசியாகிய மூத்தவள் துன்பமடைதல்போலவு மிருந்தது.

மந்தரைசூழ்ச்சிப்படலம் முற்றிற்று.

## கைகேசிசூழ்வினைப்படலம்.

நள்ளிரவாகிய வுடன் யாழின் இசையைப்பதிக்குஞ் சொல்லையுடைய கைகேசி மாளிகைக்குப் பல அரசர்கள்திரண்டுவந்து முற்றத்தி லவர்களையெல்லா நிறுத்திவிட்டுத் தான் ஏவியவாறு செய்யும் மாதருடன் சென்று பாயலைத்துறந்து வருந்தும் கைகேசியைக்கண்டு உனக்குவந்துநேர்ந்ததுன்பம்யாது? என்றுமனஞ் சோர்ந்து மானையெடுத்தணைக்கும் யானைபோலத் தன்கைகளாரத்தழுவியெடுக்கக் கைகேசியுந்தன்கைகளால் அவ்வரசன்கைகளைநீக்கிமீண்டும் மின்துவள்வதுபோல மண்ணில் வீழ்ந்தயர்ந்து ஒன்றும் பேசாளாய்நெட்டுயிர்ப்பெறிந்து உன்னையிகழ்ந்தார்மாண்டாரொன்றேதுணி உனக்குநேர்ந்ததைச்சொல்லவேண்டும்; சொன்னபிறகுஎன்செயலைப்பாரென்றுசொல்லக் கைகேசியும்அரசன்முன்னே தன்னிரண்டுகண்களும் நீர்பெ

ருகிமுலைவழியொழுக என்னிடத்தில் உனக்கு அருளுண்டாயிருக்குமாயின் முன் எனக்குக் கொடுத்திருந்தவரங்களிரண்டுந் தரவேண்டுமென்றுகேட்க அவளுள்ளக்கருத்தை யறியாதானாய் உன்மகன் இராமனுணையின்படி நான் அவ்வரங்களிரண்டையுங்கொடுத்தேனென்றான். அவள் அவ்வரங்களிரண்டில், ஒன்றினால் என்மகன்பரதன்நாடாள்வதும் மற்றொன்றினால் இராமன் காடாள்வதுமென்று விரித்துச்சொல்லவே அரசன் புத்திரசோபத்தினால் வருந்தித்தன் உடம்புமுழுதும்வெதும்பி அரவினால்தன்வேகமடங்கியயானை போல்வீழ்ந்து பூமியிற்புரண்டுகொல்லன் உலையிற்கனலேபோலநெட்டுயிர்ப்பெறிந்தான்றான். அவன்துயரத்தினுக்களவுசொல்லவல்லவர்யாவர் அரசனுக்கு நாப்புலர்ந்தது; உயிரோடுடலூற்றது, உள்ளம்புலர்ந்தது,கண்கள் உதிரப்புனல்சொரிந்தன. கோபம்தலைக்கொண்டது. ஐம்புலன்களும் அலமந்தன. நிலத்தில் நிற்பான், வீழ்வான், சித்திரம்போலசையாது கிடந்து உயிர்ப்படங்குவான், இப்பாவியைக்கொல்லவாவெனத்துணிவன், ஆனாலும் பெண்பழி சாருமென்று நாணமடைவான். இவ்வாறு அரசன் வருந்தக் கண்ட கைகேசியோ சிறிதுமஞ்சா நெஞ்சுபடைத்து நாணமின்றியிருக்க அவளைநோக்கி சக்கரவர்த்தியும் நல்லுணர்ச்சிதலைக்கூடி உனக்குப்பொய்க் கிலேயோர் புணர்த்தியவஞ்சமுண்டோ? அதனை என்னுணை சொல்லவேண்டுமென்றான், எனக்கு மாறுபட்டுவந்ததுமில்லை, எனக்குக் கொடியவர்பலர் இசைத்ததுமில்லை, நீ யெனக்குமுன்னாளிற் கொடுத்த வரங்களிரண்டையுங் கொடுத்தாற்பெறுவேன், அன்றேல் உள்பால்வசைநிகழவைத்துமாள்வேனென இம்மொழிகேட்பதன் முன்னரோ சுட்டபுண்ணில் வேல்நுழைந்தாற்போற் சிந்தை நைந்துருகித் தன்மகனல்ல துயிர்நிலைவேறறியாத அரசன் அயர்ந்துவீழ்ந்து ஆ! கொடியாளேயென் றுயிர்வருந்துவான். அறமென்பதே யறக்கட்டதென்பான், மெய்ம்மையென்ப தழியக்கடவதென்பான், உடல்தளர்ந்து வீழ்வான், உலகிற்பெண்களாவா ரில்லையென்று சொல்லக்கூரிய வாளைக்கொண்டு கொன்றுநீக்கியானும் பூரியரொன்னின் மதிக்கப்படுவேனென்று சொல்வான். இவ்வாறு மனம்வருந்தி சக்கரவர்த்தி ஆவிசோர்ந்தயர்ந்து நாம்கொடுந்தொழில் மேற்கொண்டு வெட்டத்துணிவதினும் இரந்துகோடலே நல்லதென்று துணிந்து அவள்கால்மேல் வீழ்ந்து வேண்டிக்கொள்வான். இவ்வரசினைநோக்கிச் சகல தருமமு மறிந்தவனாகையால் பரதனே மனங்கொள்ளான், அவ்வாறு கொண்டாலும் இவ்வுலகம் அதையொப்பாது,ஞாலத்தாரெல்லாம்புகழ்ந்துநிற்கவேபேரெடுத்துத் திரியவேண்டும். அவர்களெல்லாம் நிந்திக்கும் பெயரைக்கொண்டு திரிவதனாலென்னபயன் பெற்றாய்! நீ கொண்ட கருத்தைத் தேவர்களும் உட்கொள்ளார்கள், மண்ணிலுள்ளாரும் ஒருபொருளாகக்கொள்ளார்கள் மற்றவர்கள்செய்கைதானெவ்வாறும்! நீயாரொடு இவ்வரசாளத் துணிந்தாய்! யானேவலியவருந்திக்கேட்கத்தான்முறையால் ஆண்டுவரவிசைந்தான் உன்மகனுக்குவேண்டுமென்றால்தானேதருவான். என்கண்ணே வேண்டு

மெனினும் கொடுக்கிறேன், என்னுயிரை வேண்டினும் தட்டேன், பெண்ணரசியே! ஈகையிற் சிறந்த கேகயன்னமே! நீபெறவேண்டி யிச்சித்தால் மன்னே பெற்றுக்கொள், மற்றொன்று உன் மனத்திற் குடிகொண்டிருக்கின்றதே அதைமறந்துவிடு. நானோ என் வாயாற் சொல்லிய சொல்லை மாற்ற மாட்டேன், உலகத்தில் தாய் தந்தை யெனத் தன்னையோர்ந்து நின்றால் பேயுமகிழ்தியும், நீ யிவ்வரமொன்று தந்தால் பிழைபடுமோவென்றுபன்னியிரந்துநின்றான். அதைக்கேட்டு உள்ளஞ்சிறிதும்நடுமொருதுஇவ்வார்த்தை முன்னரேகொடுத்திருக்கின்றீர்; இப்போது தடுப்பீரேல் அரசே! மெய்மைக்கினியாரென் றுகூறினள். அதைக்கேட்டுநெஞ்சநடுங்கிப்பெண்ணுருவென்பது ஆலவிடமன்றோ!என்றுநினைந்து இரப்புளாயாக நின்மகனுண்டுவருவான், நீயினிதாள்வாய் எவ்வுலகமு முன்வயமேயாகும், ஆயினும்என் மகனும் என்கண்ணும்என்னுயிரும் எல்லாவுயிருக்கு மிதஞ்செய்தவனுமாகியசிராமன் இந்நாடுகடவாமைமாத்திரம்வேண்டுகிறேன், தாமரைக்கண்ணனாகிய அச்சிராமன் என்கண்ணைவிட் டகல்வானானால் நான் பிழைப்பேன, நான் உன்னபயமென்றுசொல்லிமுடிந்தனன். சக்கரவர்த்தி இவ்வாறுசொல்லக் கைகேசியும் நீகொடுத்தவார்த்தைத் தவிர்கவென்று சொல்வது உரத்தானன்றி நல்லறமாமோ வென்றனள். கொடியவளாகிய கைகேசி சொல்லிய வார்த்தையைக் கேட்டு முடிசூடாமல் நெருங்கிய காட்டினிடத்தே யுண்மையாகச் சிராமன் நீங்குவானாயின் என்னுவி நீங்குமென்று இடியேறுண்ட மலைபோல் மண்ணிடை வீழ்ந்து துன்பக்கடற்கோர் எல்லைகாணுதானுய்க் கைகேசிசொன்ன கொடுஞ்சொற் குள்ளம்புழுங்கி உலகத்தில் கற்புடைமாதர் தம்முயிர்போன்ற கணவர் ஆருயிர் விடுவராயின் அவன் முன்னே தம்முயிர்துறப்பரென்பது திண்ணம், நீ கொல்லத் துணியச் சமைந்தாயே! எனக்கு நன்மையு மெண்ணாய், தருமமுஞ் சிறிதுமெண்ணாய், அருளையுங்கொன்றனை, உன் னுவாகிய அம்பால் என்னுருயிருண்டனை! *மாட்சிமையின் பகுதி நீங்காத நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்பவையும்

---

எண்பா லோவா நாண்மட மச்ச மிவையேதம்
பூண்பா லாகக் காண்பவர் நல்லார் புகழ்பேணி
நாண்பா லோரா நங்கையர் தம்பா னணுகாரோ
ஆண்பா லாரோ பெண்பா லாரோ டைவம்மா.

இதன்பொருள் - மாதராவார் மாட்சிமையின் பகுதியினின்று நீங்காதநாணம் மடம் அசச்ம் பயிர்ப்பென்னு நான்குபகுதியினையும் அணிகலமாகக் கண்டவராவார். புகழைவிரும்பி நாணின்பகுதியை உணராத மாதரார் தம்பகுதியைநணுகாரேஆயின் ஆண்பாலாரோ யாவர், அவர் பெண்பாலரோடொருபுடை யொப்பு. எ-று.

பயிர்ப்பு உபலக்கணத்தாற்பெறப்பட்டது. இணைத்தென்றுணர்த்து மெண்ணுமுற்றும்மையும்விகாரத்தாற்றொக்கன.பயிர்ப்பு - பயிலாதபொருட் கண்வந்த அருவருப்பு. 'உயிரினுஞ்சிறந்தன்று நாணேநாணினுஞ்-செயிர் தீர்காட்சிக் கற்புச்சிறந்தன்று.'என்றும்,'தாயிற்சிறந்ததன்று நாண்டையலாருக்கு'என்றுங்கூறலின்நாண்பாலோராநங்கையர் என்றதென்க. நாண்புகழ்முதனிலைத் தொழிற்பெயர்கள். பூண்வினைப்பெயர்.நாணென்றில்லாமையான்ஆடவரொன்றும்,வடிவான் மாதராகலின்பெண்பாலாரோடடைவென்றுங் கூறினர். தம்பாலென்ற தந்நாற்குணங்களையும், அம்மா அசைநிலை.

பூணுகக்கொள்வார் மாதராவார். புகழை விரும்பி நாணின் பகுதிஉணராத மாதர் தம்பால் நணுகாராயின் ஆண்பாலாரேயாம், பெண்பாலரோ டொருபுடை யொப்பாம், இனி உலகத்திற் பாவத்தை நோக்காமல்என்னுயிர் வாங்கப்போகின்றாய்! வல்லமையால் மன்னுள்கின்றவராகி மதியினால் வைத்து எண்ண நின்றார் யாரையும் எவ்வகையாகியபோராலும் விண்ணுலகம் வரையுஞ் சென்று வென்ற எனக்கு என்மனைவியால் முடிவுவந்ததென்று சொல்லப்பெருவேனோ! என்று, நினைப்பான் இடரிலாழ்வான், ஒன்றோ டொன்றொவ்வாத துன்பத்திலாழ்வான்; இவனுக்குயிருண்டோ இன் றின்றென்று சொல்லும்வண்ணம் மயங்கி யிடிவான். இவ்வாறு துன்பமெய்திக் கிடந்து புரள்கையில் அரசனே! நீ உன்னுரை யெய்த்தால் என் உயிர்மாய்வேன்! உங்கள் குலத்தரசனொருவன் தன் வாய்மை வளர்ப்பதற்கெண்ணி தன் னருமையான உடம்பைப் புறாவின்பொருட் டரிந்தானன்றோ! நீ வரங்கொடுத்துவிட்டுப் பரிந்தாலென்படு மென்றனள்; சக்கரவர்த்தியும், இவ் வரங்களைக் கொடுத்தேவிட்டேன். என் மகனாகிய சிராமன் வனம்போக நான் மாள்வதுநிண்ணம், நீயோ வசையினின்றுந் தீராத விடும்பையேயடைவை! என்று துயரத்தினால் வருந்திக்கிடக்க, தன்கருத்து முடிந்ததென்று உவகையோடு கைகேசியுந் துயில்கொண்டாள். இது நிற்க;

பலநாளெல்லாம் உயிர் ஒன்றுபோலவேகாட்டி பின்பு மாட்சிமைப்பட்ட தோளையுடைய தசாதன் இடரடையும்படிசிறிது மிரங்காத ஒளியுள்ளமிலாவைப்போலு நகையையுடைய கைகேசியின்செய்கையைக்கண்டு ஆடவர் முன்னே நிற்க நாணினளென்றுசொல்ல இரவாகியமாது கழிந்துசேண் சென்றனள். அச்சத்தை விளைவிக்கும் வில்லேந்திய கையையுடைய சிராமனைத் தொழுகின்றநாள் நமக்கடைந்தது, காமபாணத்தால் வருந்துமிரவுகழிந்த தென்பது கற்பிப்பதுபோலப் பேரிகையதிர்ந்தன. அவ்வொலியை மாரிகாலம் கண்டு மகிழும் மயிற்கூடம்போலத் மாதர்கேட்டு மகிழ்வெய்தினர். மேன்மையடங்க நலமனுபவித்துக் தன்குல நன்மையும் போயடங்கப் பெரும்பழிமேற்கொண்டு அரியபுகழைக்கெடுக்கும் அக்கொடிய கைகேசியின் செயலைக்கண்டு சிறந்த கற்பின் நலமமைந்த மாதர்கள் வாயடங்கினாற்போலக்குமுதமலர்வாய் மூடிக்கொண்டன. ஆடவரோ ஆழியானாகிய சிராமன் முடிசூடுகின்ற பகற்போதிற்கு இடையாகநின்ற பாவியாகிய இரவு நமக்கோரூழிகாலம்போல் தோன்றுகின்றதென்றும், திருமகளும் எழுலகமும் தவஞ்செய்யப்பெற்ற கண்களும் எங்கள் மனங்களும் வாழுநாளீதென்றும் எண்ணித் துயினீங்கினர். தாமரைமலரோ மூவராயும் அம்மூவர்க்கு முதல்வனாயும் ஞானமாயும் நின்று மகதேவனாகிய பரமசிவன் கையிற்பிடித்த போர்த்தொழில் மேற்கொண்டபினாகத்தை யொடித்த சேவகனாகிய சிராமன் மகுடாபிஷேகஞ்செய்வதைக்காண ஆசைகொள்ளு மாதர் முகம்போல மலர்ந்தன. மாதரிற் கற்பின்மிக்கார் கோசலைமனத்தை யொத்தனர். அந்தணரெல்லாம் வசிட்டர் மனத்தையொத்தனர், வேறுமங்கையரெல்லாம் சீதையையொத்தனர், சதுக்களெல்லாம் தயரதனையொத்தனர். அவ்வீதியில் மாதர்கூட்டமும் மைந்தர்கூட்டமு நெருங்கி

யெங்கும் ஏகுங்கோள் ஏகுங்கோள் என்றிடையிடை நிற்றலான் போதலும் மீளலு மொழிந்தில. வேந்தர்களே பெரிதென்பாரும், வீரர்களேபெரிதென்பாரும், மாந்தரே பெரிதென்பாரும், மாதரேபெரிதென்பாரும், போந்ததேபெரிதென்பாரும், புகுவதேபெரிதென்பாரும், தேர்ந்ததேதேருவதன்றி யாரோ தான் அங்குநிகழ்வதைத் தெரியக்கண்டவராகச் சொல்லக்கூடும். சிராமனது மகுடாபிஷேகங்காண அந்நகரத்திற்கு வந்தவர் இலங்கையிலிருக்கும் அரக்கரும்இவ்வேழுலகத்திலிருக்கு மலைகளும் திசையானைகளுமல்லது யாவருல் கூட்டமாகக் கூடினர். இவ்வாறிருக்கையிற் பலகோடிசந்திரனொன்ன முத்தக்குடை நிழல்செய்யவும், ஆகாயத்தில்வாசஞ்செய்யும் அன்னக்கூட்டம் நெருங்கியதென்னச் சாமரை யிரட்டவும், இந்திரனுக்கு உவமையெடுத்துச் சொல்லப்பட்ட உலகத்திருக்கு மரசரெல்லாம் வந்து மகுடாபிஷேகஞ்செய்யும் அத்தாணிமண்டபமேபோய்ச் சேர்ந்தனர். தாம் முன்னேபெற்றெடுத்த காதற் புதல்வனை முறையாக இல்லறப்பயன் சிறப்பிப்பார்போல நெருங்கிய உவகைதூண்ட நான்மறையுணர்ந்த அந்தணரும் சிராமனது மகுடாபிஷேகங்காண வந்து நெருங்கினர். விண்ணவரெல்லாம் ஆகாயத்தில் நெருங்கினர், மாந்தர்கள் திசைகளிலெல்லாம் நெருங்கினர், மங்கலச் சங்கமுழக்கும் முரசினோசையும் காணவந்தவருடைய செவிகளில் நெருங்கின. பொன்மழை எழுகடல்போலநெருங்கின; இவ்வண்ணம் நிகழ்கையில் சிராமனுக்கு மகுடம் சூட்டுவதற்கு வேண்டுவனவாகிய மங்கலப்பொருள்களையெல்லாங் கொணர்ந்து நான்கு வேதங்களை நன்றாக ஆராய்ந்தவேதபாரகர் சூழ்ந்துவரவும் அந்நகரவாயில் நெருக்கநீங்கவும் வசிட்டமுனிவர் எழுந்தருளிக் கங்கைமுதல் கன்னியீறுகிய தீர்த்தமும் கடனீரும் பூரித்து அக்கினி காரியத்துக்குரியயாவையும்சேகரித்துச் சிங்காதனத்தின்மேல் வைத்துச் செயயவேண்டிய வனைத்துஞ் செய்தனர். சோதிடநூற்புலவர்கள் பட்டாபிஷேகஞ் செய்தற்கடுத்தகாலஞ்சமீபித்ததென்று சொல்ல வசிட்டமுனிவரும் சக்கரவர்த்தியை விரைவாக அழைத்துவரக் கட்டளையிட்டனர்; சுமந்திரன் பரிந்துசென்று அரசனை இராசமாளிகையிற்காணுமல் கைகேசிக்குத் தோழியர்களா லறிவிக்க அவர்களு மவளுக் கறிவித்தனர். கைகேசியும் சிராமனை நானே அழைத்துவரச்சொன்னதாகச் சொலலுங்கோளென்றனள். அவ்வாறே மாதரும் சுமந்திரனுக்கறிவிக்கச் சுமந்திரனும் விரைந்துசென்று இராசவீதிகடந்து சிராமனையடைந்து வணங்கிநின்று கைகட்டி வாய்புதைத்துத் தாசரதீ! அரசரும் முனிவரும் மற்றையுலகத்துள்ளாரும் உம்மைப்பெற்றசக்கரவர்த்திபோலும் பரிவுசெய்கின்றனர். உமது சிறியதாயாகிய கைகேசியோஉம்மைத் தமது திருமாளிகையில் வரக்கட்டளையிட்டனள், அழகிய மகுடாபிஷேகஞ்செய்துகொள்ள விரைவிற்செல்லுமென்று வேண்டினன். சிராமனும் அச்சொல்லைக்கேட்டு ஆயிரமோலி யமலனுதிப்பிரானைக் கைதொழுது அரசர்கூட்டம் கடல்போலத் தன்னைச் சூழ்ந்துவரவும் தெய்வகீதங்கள் பாடவும் தேவர்கள் மகிழ்ந்து வாழ்த்தெடுப்பவும் மாதர்களிறைந்து பரி

க்கரும் தேரிலேறிச் சென்றனன். கடுஞ்சொல்லைச்சொல்லும் கைகேசியிடஞ்சென்று பொன்முடி துறந்து நிலமகளாகியபெருந்திருவைநீங்கி வழிக்கொள்ளா முன்னமே, ஸ்ரீராமபிரான் பண்ணென்னுந் தீஞ்சொல்லையுடைய மாதரார் தோளென்னும் வேயும், அவர்கண்ணென்கிற காலனையொத்த வேலும் நெருங்கிய காட்டிற்புகுந்தான். இவ்வாறு கடந்துதாதையினைத்தேடிவரவே, கைகேசி நமது நாயகனாகிய தயரதனே சொல்லத் தரியான்! நாமே முன்சென்று சொல்லுவோமென்று எண்ணிக்கொண்டிருக்கும் கைகேசியெதிர்ப்பட அவளைத் தன் மணிமுடிநிலமுறப் பணிந்துநின்று கைகட்டி வாய்புதைத் தெதிர்நின்றான். கொடுமைமிகுந்த கைகேசியும் இன்றுனக்கறிவிப்பதொன்றுண்டு, அது எனக்கேவியசெயலேயா மென்றாள். ஸ்ரீராமனும் எமது பிதாவே யேவ நீரே யுரைசெய்யப் பொருந்திய தாயின் நானுய்ந்தேன்! உய்ந்தேன்! என்னினும் பிறந்ததனாலாகிய பெரும்பயன் பெற்றாருண்டோ? என் தவத்தினாலாய பயன்வந்தது தந்தையும் தாயும் நீரேயாகலின் எனக்குக் கட்டளையிடலாமென்றனன். உன்தம்பிபரதனே இவ்வுலகமுழுதும் ஆண்டுவர, சடைமுடியும் மரவுரியும் புனைந்துதவமேற்கொண்டு கானிற்சென்று புண்ணியதீர்த்தங்களில் நீராடி, பதினான்கு வருடங்கழித்து வாவென்று சொல்லிவிட, அதைக்கேட்ட ஸ்ரீராமபிரான் திருமுகச் செவ்வியை நோக்குமிடத்து மகுடாபிஷேகஞ்செய்ய மேற்கொண்டபோது எவ்வாறிருந்ததோ அவ்வாறே பொலிவுற்று விளங்கிற்று. ஸ்ரீராமபிரான் சகடத்திற்பூண்ட பெரியதோரேறு அருளுடைய வொருவனாற் பிணிப்பவிழ்ந்த தொத்துத் தாயே! இது இறைவனது ஏவலன்றேயெனினும் உமது குற்றேவலைமறுப்பனோ, என்தம்பி பரதன் பெற்றசெல்வம் யான்பெற்றசெல்வமேயன்றோ! இதனினும் சிறந்தவுறுதியாதிருக்கின்றது! இக்குற்றேவலைத் தலைமேற்கொண்டு காட்டிற்போக இப்போதே விடைபெறுகின்றேனென்றான்.

கைகேசி சூழ்வினைப்படலம் முற்றிற்று.

## நகர்நீங்குபடலம்.

ஸ்ரீராமன் கைகேசியிடத்தேவிடைபெற்று அவள்பாதமலரில்வீழ்ந்து வணங்கி மீட்டுந் தன் தாதைபாதங்களை அவரிருந்த திசைநோக்கி வணங்கித் திருமகளும் புவிமகளும் மனம்வருந்தக் கோசலை திருமாளிகைநோக்கிச்சென்றான். இருபுறமும்சாமரையிரட்டுதலும் தவளவெண்குடை நிழற்றலுமின்றி சங்கற்பமுன்னே நடந்துசெல்லத் தருமம்பின்வருந்திநடப்பத் தாசரதி பொன்முடிபுனைந்து வருவானென்று மனக்கிளர்ச்சியுடன் வழிபார்க்குந்தாய் முன்னே தன்னந்தனியனாகப்போய்ப் பணிந்துநிற்க அவனை வாரியெடுத்துமுத்தமிட்டு ஆசிர்வதித்து அரசன் நினைந்ததென்? நெடுமுடிபுனைதற்கேதேனு மிடையூறுண்டோ வென்றாள். ஸ்ரீராகவபிரான் தாயை வணங்கி அன்னாய்! உனமகனாகிய பரதனே மணிமுடிசூட்டிக்கொள்வ னென்றான். கோசலையும் முறைமையன் றென்ப தென்றே யல்லது பரதன் நின்னினும் நல்லவனன்றோ! குறைவிலாதானாய் இவ்வுலகமுழுதும் உன் தம்பிக்குக்கொடுத்து வாழக்கடவையென்றனள்; ஸ்ரீராமனே இதுவன்றி-எனக்

கேவிய குற்றேவலும் வேறொன்றுண்டென்றான். கோசலையும் அதென்னை வெனப்பதினாலாண்டு காட்டின்கண் மாதவரோடு வனசஞ்சாரஞ்செய்து மீள்வதேயென்று சொல்லினன். அம்மொழி செவியிற்புகாமுன்னம் எங்கி யிளைத்துத் திகைத்து மனம்வீங்கி விம்மிவிழுந்து இது வஞ்சமாயிருக்கின்றது, மகனே! இவ்வரசாண்டு வாவென்றுசொன்னசொல். நஞ்சமாமோ, நானுயிர்வாழ்ந்திருப்பேனோ, என்னாருயிர் அஞ்சாநிற்கின்றதென்று கையொடு கைநெரித்து ஆலிலைபோலும் வயிற்றைத் தன்கையாகிய தளிராற் பிசைந்தும் வெய்துயிர்த்துப் புழுங்கி, நன்று நன்று, அரசன் கருணையென்றுசிரிப்பாள். மகனே! நீயென்று காடுசெல்வாயென்று உயிர்நீங்குங்காலத்திலேயெய்தும் துன்பம்போற் றுன்பமெய்துவாள். உன்னிடத்தே அன்பு மிகுதியும் வைத்த அரசனுக்கு நீ பிழைசெய்தவா றெண்ணி அறமெனக்கில்லையோவென்றும், தெய்வங்களே! எனக்கு மரணமடுத்தவா றென்னவென்றும், கன்று பிரிய வருந்திய சேதாவைப்போல் மனம்வருந்தினாள். இவ்வாறு துன்பப்படுந்தாயைக் கையாலெடுத்து அருமையாகிய கற்பு நலமுடையாளே! வாய்மைக்கிருப்பிடமாகிய அரசனைப்பொய்யனாக்கத்துணிந்தனையோ, சிறந்த தம்பி செல்வமடைய என் தந்தையாகிய தசரதனைமறந்தும் பொய்மொழி சொல்லாதவனாக்கி, யான் வனத்திற்சென்று வசிக்குமுறுதியைப்பெற்றேன், இதைப்பார்க்கிலும் யான் பிறந்து பெற்றபேறு யாது? விண் மண் நீர் முதலிய எல்லாப்பூதங்களும் இறந்தொழிந்தாலும் நமது அரசனேவலை மறுக்கத்துணிவேனோ! என்று சீராமன்சொல்லினான் கோசலையும் அரசனாணையாலேகுவதாயின் தடுக்கேன், ஆயின் சாகலாகாதவுயிர்தாங்கவல்ல என்னையும் உன்னோடு கூட்டிக்கொண்டு போகவேண்டுமென்றாள். என்னை நீங்கி யிடர்க்கடலிலழுந்தி வருந்தும் என்தந்தையை வற்புறுத்தி வேண்டுவனசொல்லாமல் என்னுடன் காட்டுக்கு வருவதாகத் துணிவது தகுதியோ; தாயே! நீயோ அறத்தைச்சிறிதுமறியாதிருக்கின்றனை! என் தம்பிபரதன் மண்முழுதும் அரசாண்டுவருமரசனாகவே இவ்வுலகமுழுதும் அவன்வசமாகும், அதன்பின் நமதரசன் செல்வந்துறந்துதவஞ்செய்யுங்காலத்திலே அவனுடன் நீ அருமையானநோன்புகள் செய்யத் துணியவேண்டும். தாயே சிந்தையிற் றுயரங்கொண்டு வருந்துவானேன்? தேவர்களும் சிறந்த மாதவஞ்செய்தன்றோ உயர்ந்தனர், எத்தனைவருடந் தான் காலங்கழிக்கப்போகின்றேன் பத்து நாலும் பகலல்லவோ கழிக்கப் போவது! விசுவாமித்திரபகவான் அருளால் தாங்கிய வித்தையும் பின்னரடைந்த பேறும் பிழைத்தனவோ! நான் முனிவரோவினவற்றைச் செய்தல் இன்னும்நல்லதாகும். அருந்தவர்கு வழிபாடுசெய்து மெய்யுணர்ச்சிபெற்று ஒப்பில்லாத வித்தைகள் குற்றமற்றன தாங்கித் தேவர்கள் காதல்பொருத்து நானும் வரக்காண்பாய். கடறொட்ட சகரர் அறுபதினாயிரவரும் தந்தை ஏவலிற் றலைநின்று உடம்பினின் றுயிர்போக்கிய சிறந்தபுகழ் நிலை பெற்றிருக்கின்றதன்றோ! மழுவாளியாகிய பரசுராமனும் தன்றாதையாகிய சமதக்கினிமுனிவன் சொற்கடவாமல் தாயை ஊன்சிதையக்கொன்றானெனின் யான் 'தந்தைசொன்மிக்க மந்திரமில்லை.' என்றதைத்தவிர்ந்து நடப்

பதோ!என்றிவ்வகையான பலமொழிகளையும்சொல்லிநல்லறிவுச்சுடர்கொளுத்திய சிராமன்சொல்லைக்கேட்டு உலகையாள்வதுபரதன்பாலாகினு மாகட்டும், இவன்மாத்திரம் இந்நாடு கடவாவண்ணஞ் செய்யவேண்டு மென்பது கருதித் தான் எண்ணியது முடிக்க தசரத னிருக்குமிடஞ்சென்றுள்.

கோசலை போவதைக்கண்டு இவள்கொண்ட சோகத்தைத் தீர்ப்பவள் சுமித்திரைதானெனத் துணிந்து அவளிருக்குமிடஞ் சென்றுன். கோசலையோநடந்துசென்று கைகேசிமாளிகையடைந்து அரசன் தரையில்விழுந்துகிடக்கப் பார்த்து உயிர்நீங்க உடல்வீழ்ந்ததுபோல அரசன்மேல்விழுந்து புலம்பியிருக்க அப்புலம்பலோசைசென்று கேளாமுன்னம் முனிவரும் மன்னரும் இனிக்காலம்செல்கின்றதுதகுதியன்றென்றுவேண்டநானே எல்லாச்செய்தியுமறிந்து வருவேனெனத் தசரத னிருக்குமிடமடைந்து அவனிலைக்கண்டு இது என்ன விளைவென்றுநினைத்து, இவனே இறந்தானல்ல ன்இறவாதொழிவானு மல்லன், ஆயின் இப்போதுணர்வு கெட்டிருக்கின்றுனென்றும் கோசலையோ ஆருத்துயரா லயர்கின்றுளென்றும் சிந்தித்துத் தன்னைவணங்கிநின்ற கைகேசியைநோக்கி அரசன் இவ்வாறு வருந்தக் காரணமென்ன சொல்லவேண்டுமெனத் தன்னுல் நடந்ததைத் தானே சொல்லி நின்றுள். அவள். சொல்லிமுடிப்பதன்முன்னே சக்கரவர்த்தியைத்தரையினின்றெடுத்துச் சயித்தியோபசாரஞ்செய்து அறிவுடையானே! நீயேனயரவேண்டும்; கைகேசியை உன்மகனுகிய சிராமனுக்கு முடிசூடுவாள், அப்படி செய்யாளேல் நாங்கள் சும்மாவிருப்போமோ வென்றுசொல்லத்தயரதன் வசிட்டமுனிவனைப்பார்த்து என்மகனைப்புனைமணிமகுடஞ்சூட்டிக்காடேகாவண்ணஞ்செய்துஎன்னையும் புனிதனுக்கவேண்டுமென்று வேண்டினுன். வசிட்டமுனிவரும் யாவனையும் முனியுங் கொடுஞ்செய்கையையுடைய கைகேசிமுகமேநோக்கிப்பொன்போன்றவளே! உன்மகனுக்கு அரசும் ஏனையோருக்கும் உன்கணவனுக்கும் உயிருதவிசெய்து பெரும்புகழையடையவேண்டுகின்றே னென்று சொல்லிமுடித்தனர். கைகேசியும் அரசன் தான் சொன்னசொல் தவறுவானேயாயின் உயிர்வாழமாட்டேன் டேன் என்சொல்பொய்யாதற்றன்மைக்குப் பொன்று தொழியேனென்று சொல்லினள். அதைக்கேட்ட அரசன் தன்கணவன் இறந்துபடுவனென்றும், உலகந் தான்கொண்டகருத்தைக் கொள்ளாதென்றும் பழி நிலைபெற்றுயருமென்றும்பாவம் பெருகு மென்றும் நீ யறிகின்றலை; அன்றியும் சிறிதும் அறியாதிருக்கின்றனை! இனிநான் உனக்கென்ன சொல்வது நீபேயோ! தீயோ! இம்மண்ணில் உனக்கு வசையே நிலைபெற்றிருக்கு மல்லது வேறன்று. வாயால் அரசன்தன்மகனை வனமேகச்சொல்லாமுன்னம் நீயே சொல்லிவிட்டாயே! அவன்போய்ப்புகுதல் தவிரமாட்டானே, புகழுடன் உயிரைச்சுடுகின்ற தீயன்னுளே! உன்போலுந் தீயாருளரோ, உன்செயல் அறக்கொடியதென்றனர்

இவ்வாறுசொல்வதைக்கண்ட தசரதன் நாவினஞ்சமுடைய மாதாரனைப்பார்த்து அடிபாவி!என்னுயிரைக்கொடுங்கான் படர்ந்து செல்லென்று ஏவினுயோ! அவனும்போனுனே! நானே உன்கனிவாய்விடத்தை நெடுநா

ன்ளுடேன் அதனலன்றோஎன்னுயிரைமுதலோடுண்டாய்!உன்னை அக்கினி சாட்சியாகமுன்னளில் மணமாலேசூட்டியதுநானிப்போதுமினமாகும்பொருட்டென்றே துணிந்தேன். என்மகனைக் காட்டிலனுப்பினமையால் உன்கழுத்திற்கட்டியிருக்கிற மங்களநாணே உன்மகனுக்குக் காப்பிணுனேயாகுமென் றிவ்வாறு சொல்லி தன்னைநோக்கி யிரங்காத கைகேசிக்காக வசிட்டமுனிவரைப்பார்த்து இக்கைகேசியோ எனக்குத்தாரமாகவே ஆகமாட்டாளென்பதுதுணிந்தேன். இனி மன்னனுகிவரும் அப்பரதனே மகனுவானெனக் கருதேன், அவனும் என் உருமைக்கடன்செய்வது கூடாதென்ருன். அதன்பின்பு என்னைக்கண்டும் பேசிப்போகவே இடையூறுடைய சிராமன் உன்னைக்கண்டும் போகவில்லையோ வென்று கோசலையைகேட்க, கோசலேயும் இது மற்ருள் செயலென்றும் தன் கணவன் வரங்கொடுத்து உள்ளமயர்ந்தானென்று கண்டு, அரசனைத்தேற்றியும் மகனை நிறுத்தினல் அரசன் மெய்ம்மொழி தவிர்ந்தானென்று உலகஞ்சொல்லும் பழிக்கும் சோர்ந்தும் மெய்மைதழுவாவகையால் நிந்தியாதநிலைமைவய்ந்த பெருமைக் கிழிவாமென்று சொல்லி அரசனே அன்பான் மகன்மேல் மெலியின், உலகம் கொள்ளாதென்றும் நமது மகன் போவாதொழியானென்றும் கணவனே சாகாமலிரா னென்றும் உள்ளம்புலர்ந்துவாடிமகனே உன் தந்தையைக்காக்கவேண்டுமென்றும்புலம்பிவருந்த,அதைக்கண்ட தசரதனேசிராமனை எண்ணி கண்ணீர்போலுயிரொழுகக்கரைகின்றேன், உன்மேல் அக்கினிகாரியஞ் செய்கையில் புரோக்ஷிக்கும் கங்கைமுதலிய புண்ணியதீர்த்தங்களே எனக்குண்ணீரா யுதவிக்கானடைய வேண்டுகின்றேன். உலகத்திலுள்ள அரசரை எல்லாம் மழுப்படையாற் கொன்றுவெற்றிகொண்ட பரசுராமனை வில்லாற்செயங்கொண்ட விறல் வீரனே! பொன்மகுடந்தரிக்கின்றேன் என்று சொன்னவாயால் இப்போதுசடைமகுடந்தரித்தனுப்புகிறேனே என்றுகவலைப்படுவான். வடிவங்கறுத்தாய்! மனமும் கண்ணும்கையும் செம்மையுடையாய்! புரமூன்றெரித்த புண்ணியமூர்த்திபோர் வில்லொடித்தாய்! என்னை இம்மூப்பில் விட்டுபோக மனம்படைத்தாய்! நானே இனி வாணுள் வேண்டேன் வேண்டேனென் றிவ்வாறு மிகவும் புலம்பி மூர்ச்சையடைந்தான். இவ்வாறிருக்கையில் வசிட்டமுனிவன் அரசனைப்பார்த்து நீஅயரவேண்டாம், உன்மகனுகிய சிராமனைக் காட்டிற்செல்லாவண்ணம் தடுக்கின்றேனென்று சொல்ல, அதைகேட்ட அரசன்வசிட்டபகவான் சொல் சொல்லுமல்லவா? நாம் வருத்தமொழிவோமென்று எண்ணியிருந்தான். கோசலேயும் அரசன்படும்பாடறிந்துமகனையும் எங்களையும் உலகொடு துறந்தீர்? இதுதானே அறமெனப்படுவது, நீ ரிவ்வாறிருக்கின் உலகமுழுதுந் துயரமடையும், நமது மகனுகிய சிராமனே வசிட்டபகவான்சொல் தட்டாமல்வரினும் வருவான், வரிந்தாதிருமென்று சொல்லி அரசர்பெருமான்வருத்தந்தீரும்படி சயித்தியோபசாரஞ்செய்தாள். அரசர்பெருமான் கோசலையை நோக்கி ஒன்றுந்தெரியானுய் சிராமன் வருவானே வருவானே வென்றேங்கிப் புலம்புவான், கொடிய கைகேசியின் வாக்கால் என்னு

யிரை முன்னேமாய்கக் கூனியின்புணர்ப்பினுல்துணிந்தாளென்பான். தானு ம் தன்மகனும் அரசுதுறந்தோமென்று சொல்லிப்புலம்புவான். அதுபோ கட்டும்என்மகனைக்காட்டுக்குப் போகச்சொன்னுனே அதுதருமமோவென் றேங்குவான். என்மகன் அவள்பேச்சைக் கேட்டுக் காட்டுக்குப்போகாம லிருப்பனோவென்பான்; அவன் போவானேல் என்னுயிர்போகாமலிராதெ ன்பான், கோசலையாரைநோக்கி எனக்கு முன்னளில் ஒருமுனிவனிட்ட சாபமுண்டு, அதைவிரித்துச் சொல்லுகின்றேன். நான் ஒருநாள் வேட் டையாடக்காட்டிற்குப்போய்யானைவேட்டை யாடித்திரிந்தேன், திரியுங் காலத்தில் யானை வரும் வழியை நோக்கி ஒருதடாகக் கரையில் வில்லுங் கையுமாய் மறைந்திருந்தேன், அப்போதுகண்ணில்லாத பிறவிக்குருடனு கிய ஒருமுனிவன் தன்மனைவியுடனே அக்காட்டிற் பன்னசாலை கட்டிக்கொ ண்டு தவஞ்செய்பவனுய்த் தன்மகன்குற்றேவல்செய்ய விருந்தான். அவன் தன்மகனைநாவறண்டு நீர்வேட்கை யுடையானுய் நீர்கொண்டுவர அனுப்பி னுன். அவன்கையிற் கரகங்கொண்டு அத்தடாகத்தில் நீர்மொள்ளுகையில் நான்சித்தப்பிறமைபாய் யானைநீருருந்துகின் றதொனியாகவெண்ணி இரவா தலால் அம்மகன்மேல் பாணப்பிரயோகஞ்செய்தேன், நான் யானையென் றெண்ணி பாணப்பிரயோகஞ் செய்ததனுல் அம்மகன் அப்பாணத்தால் வருந்திப் புலம்பினுன். அவ்வோசைகேட்டுப் பயந்து ஓடிவந்து கையிலிரு ந்த வில்லும் அம்பும் போட்டுவிட்டுத் தன் கையிலிருந்த பாத்திரத்துடன் வருந்துகின்ற அம்மகனைப்பார்த்துநீர்யார்உள்ளபடிசொல்லுமென்றுகேட் டேன். அதற்கம்மகன்என்வரலாற்றைச்சொல்லுகின்றேன்கேள்? மச்சாவ தாரங்கொண்ட மணிவண்ணப்பெருமான் திருவுந்தியில்வந்தநான்முகக் கட வுள்படைத்த நான்குவருணத்தில் அந்தணர்குலத்திற் காசிபமுனிவன்ம கன்விருத்தேச னென்பவ னெருவனுண்டு, அவனுக்குச்சலபோசனனென் பவனுக்குச் சுரோசன னென்பவன்பிறந்தான்; அவனே யானுகும்; என் தந்தை தாயாரோ பிரவிக்குருடர்; அவர்கள்நீர் வேட்கைகொண்டயர்ந்த மையால் அவர்கள்பெட்டு நீர் தேடிக்கொணரவந்தேன். இடையிலே ப ழுதாயிற்று, நீயோயானையென்று கருதி என்மேற் பாணப்பிரயோகஞ்செ ய்தனை! விதியைவெல்லவல்லார்யாருளர், நீர் வருந்தவேண்டாம், என் தந் தை தாயர்நீர் வேட்கையால் வருந்துகின்றுராதலின் அவர்களுக்கு நீரைக் கொண்டுகொடுத்து என் மரணத்தையு மெடுத்துசெல்லி நான்மரணமடை கையில் அவர்களை வணங்கி உயிர்விடுகின்றேனென்றுசொல்லுமென்று வே ண்டிக்கேட்டுத்தேவர்கள் புட்பவிமானம்கொணர அதன்மேலேறிச் சுவர்க் கம்புகுந்தான். மகன்போய் நீர் கொண்டு வருவானே அவன் சென்றுவெகு நேரமாயிற்றே! இத்தனைநேரந் தாழ்வானேன்! வந்துவிடுவானே, வராதகார ண மென்னவென்று வருத்தப்பட்டுக்கொண்டிருந்த அப்பிரவிகுருட ரிருவ ரும் யான் நீர் கொண்டுவர அவர்கள் என்னைத் தன்மகனுக வெண்ணித் தழுவிக்கொள்ள வாவென்றனர். அதற்கு நான் அவர்களைநோக்கி உமது மகனல்லன், அயோத்திநகரத்தி னரசன், சூரியவமிசத்திற் பிறந்தவன் இர வில்யானைவேட்டையாட ஓர் தடாகக்கரையிற் பதுங்கியிருந்தேன், உமது மகன்கலசங்கொண்டு நீர்மொள்வது யானைநீருருந்துவதுபோலத் தோன்ற அதன்மேற்பாணம் பிரயோகித்தேன்,

அவன் அப்பாணத்தால் அலறிய ஓசைகேட்டோடிவந்து அவன்செய்
தியையறிந்து நிற்க, தேவர்கள் அவனைப்புட்பவிமானத்திலேற்றிச் சுவர்க்
கம்சேர்த்தார்கள். நான்வேண்டுமென்றுகொன்றேனல்லேன் என்னைக்குற்
றேவல் செய்பவனாகக் கருதவேண்டுகின்றேனென்று வணங்கினான். அச்
செய்தியைக்கேட்டு அவ்விருவரும்வீழ்ந்துபுரண்டு இதுவரையிலும் கண்
பெற்றுடையராயிருந்தோம்! இன்றுதான் கண்ணிழந்தோமென்றுதுன்பக்
கடலிலாழ்ந்து நீ சுவர்க்கத்திலிருக்க நாங்கள்மாத்திரம் மண்ணுலகத்திலி
ருப்போமோவென்று கதறி என்னைப்பார்த்து எங்கள் கண்மணிபோன்ற
மகனையிழந் துயிர்விரும்பி உயிருடன்வாழ்ந்திருந்தால் உலகம் என்சொல்
லாது, நாங்களும் இறந்துபடுவோம். நீயும் எங்களைப்போற் புத்திரசோபத்
தாலுயிர்நீங்குவை, நீ யுள்ளபடி யெங்களுக்குச் சொன்னதனால் கொடியசா
பமிடவில்லையென்றுசொல்லி அவ்விருவரும் புத்திரசோபத்தாலிறந்தனர்;
நானும் அயோத்திநகரமடைந்தேன். இக்காரணத்தால் என்னுயிர்நில்லாது
என, கோசலையும் மனந்திகைத்து நின்றனள். வசிட்டமுனிவரும் அவலந்த
ரு நெஞ்சினையுடையானாய் இராசமாளிகையகன்று பட்டாபிஷேக மண்ட
பத்தையடைந்தார். அதைக்கண்ட அரசரெல்லாம் சிராமபிரான் இங்கே
எழுந்தருளுவதற் கேதேனு மிடையூறுண்டாயிற்றோ! மிகுந்தசோகமாய்
இராசமாளிகையில் அழுகுரலுண்டாவதற்குக் காரணமென்ன? என்று
கேட்க, வசிட்டமுனிவரும் கைகேசியோ அரசர்பெருமானிடத்தே வரமி
ரண்டுபெற்றனள்; அவற்றுள் ஒன்றால் சிராமன்காடுபோகவும், மற்றொன்
றால் பரதன் நாடாளவும் ஆயினர்; இதுதான் செய்தியென்ன, அம்மொழி
காதிற்புகுமுன்னே மாதரும் மற்ற நகரமாந்தரும் அரசர்களும் அந்தண
ரும் சக்கரவர்த்தியேபோல வீழ்ந்து வருந்தினர். கிள்ளையும் பூவையுமழு
தன; வீட்டில்வசிக்கும் பூனையுமழுதன, கருவிலுருத்தோன்றாத மக்களும
ழுதனர், பசுக்களுமழுதன, அவற்றின் கன்றுகளுமழுதன, அன்றலர்ந்த
மலர்களுமழுதன, நீரில்வசிக்கும் புட்களுமழுதன, தேன்சொரியும் சோலை
களுமழுதன; பரவைகளுமழுதன, இவ்வாறியாவருமழவேகைகேசியுங்கூனி
யுமே அழாதிருந்தனர்; அத்தெருவெங்குங் கண்ணீர்ப்பெருக்கேயாறாயோ
டினதேயன்றி மனமிருபிளவாகாமையே குறையென்று சொல்லவிருந்தது.
இவ்வாறிருக்கையில் இது சிலர்மண்செய்த பாவமோவென்பர், சிலர் மலர்
மகள்செய்த பாவ மதனினும் பெரிதென்பர். சிலர் விதி மனத்தைப்புண்
செய்ததென்பர். மண்ணுலகத்தோர்கண் செய்த பாவம் கடலினும் பெரி
தென்பர். சிலர்பரதன் தனக்குவந்த அரசை யாளமாட்டானென்பார்கள்.
நமதையனாகிய சிராமனோ மீளமாட்டான் நமக்கு விதியோ கொடியதென்
பார்கள். நமக்கு இம்மகுடாபிஷேகம் கிரகசாரம்போலத்தோன்றியதே எ
ன்பார்கள், இச்சொல்லைக்கேட்டுஞ் சாகாத நம்மினும் மனவலிபடைத்தவ
ர் யாரென்பார்கள்; நமது சக்கரவர்த்தியோகைகேசிமேல்வைத்தகாதலினா
ல் கருத்துக் கெட்டானென்பார்கள்; சிலர் நாமெல்லாம் சிதாநாயகனுடன்
காட்டிற்குப்போவோம், அவ்வாறல்லாவிட்டால் தீயில்வீழ்ந் தழிவோமெ
ன்பார்கள். சிலர் கையால்நிலத்தைத்தடவிக் கண்ணீரான் மெழுகுவார்கள்.

சிலர் இச்சொல்லைக்கேட்டுக் கோசலை தரிக்கமாட்டாளேயென்றொழியாம ற் பெருமூச் செறிவார்கள். சிலர் கைகேசி தன்மகனுகிய பரதன் பூமிமுழு துமான வரம்பெற்றுளே இவளைக் கணிகையென்றேதான் சொல்லவேண் டும். இவள் உள்ளத்தே சுரக்குமன்புடையவளே யல்லவென்றுஞ் சொல் வார்கள். சிலர் இச்சக்கரவர்த்திநின்று தவஞ்செய்து தான்றீரநேர்ந்ததுவோ, அல்லது இவ்வுலகத்தில் அருமையாகிய உயிருடன் வாழ்வாரைக் கொன்று களையத்தான் எண்ணிய செய்கையோவென்றுஞ் சொல்லிக்கொள்வார்கள். சிலர்தான்பிறந்துமுழுதுலகாளுஞ் செல்வப் பெருக்கினையுடைய சீராமன் தான்பெற்ற உலகமுழுதும் அவளுக்குக்கொடுத்துவிட்டாலும் நாமெல்லாம் அவனைப் பின்றொடர்ந்து நெருங்கிப்போவோமாயின் அவன் வாழும் காடெல்லாம் நாடாகச் சிலநாளைக்கு ளாகமாட்டாவோ வென்று சொல்வார்கள். இச்சக்கரவர்த்தியை இதுவரையும் சத்தியசந்தனனென் றெண்ணியிருந்தோமே, இவன் முன்னே தன் இராச்சியமுழுதும் சீராமனுக்குக் கொடுத்துவிட்டு இப்போது பரதனுக்கு முறை தவறிக்கொடுத்துவிடுவானுல் சத்தியந் தவிர்தவனுகமாட்டானே, இவன் அறிவுகெட்டதென்னவகை யென்பார்கள். சிலர்வில்லேந்திய கையையுடைய சீராமனுக்கே கொடுத்துவிட்ட நிலத்தை மற்றொருவர் அனுபவிப்பார்களா! இவன் ஆளப்படாதென்று வஞ்சனையாலடைந்த அறிவில்லாதவளுடைய கைகேசிமகனுகிய பரதனைப்பின் பார்த்துநிற்குமா! சிதைபிரிந்தாலும் செல்வம் சீராமனைவிட்டுப் பிரியாதென்பார்கள். தூண்டாவிளக்கேபோல மாதர்களெல்லாம் நடுங்குகின்றவர்களாய் நமது சீராமனது கடைக்கண்ணோக்கம் பிரியுமோ ஐயோ விதியே என்னசெய்வதென்றுஞ் சொல்வார்கள். இது கிடக்க;

இளையபெருமாளோ தன்சிறியதாயாகியகைகேசியோ தன்திருத்தமையனுகிய பெருமாளுக்குச் சக்கரவர்த்திகொடுத்த செங்கோலைத் தன்சொல்லால் வாங்கினுள் என்ற கொடுஞ்சொல்லைப் பொறுமல் ஆலவிடம் போற் கொதித்துப் பிரளயகாலத்தில்தனது பூர்வாவதாரமாகிய அனந்தாழ் வானே யென்றுசொல்ல விளங்கிச் சிங்கத்திற் கிடுஞ் சுவையொடுகூடிய ஊனுணவை நாயின்குட்டிக் களிப்பதுபோலச் செய்துவிட்டாளே! இப்பேதைக் குமதிகெட்டது அழகாயிருக்கின்றதென்று கைகொட்டிச் சிரித்து உடைவாள்பக்கத்திற் கட்டிக்கொண்டு அம்புப்புட்டிலை முதுகிற்றூங்கிச் செம்பொற்கவசமணிந்து தன் காலில் வீரகண்டாமணி சத்திக்க வில்லைவளைத்து நாணேற்றி நாணோசையால் உகாந்தகாலத்திற் கடலேழுமொன்றாகக் கோத்துக்கொண்டாலொத்த வோசையுண்டாகவும் தானுந் தன் திருத்தமையனு மல்லாதவர் அவ்வோசையால் நடுக்கமுண்டாகவுஞ் செய்து இனி பூமிதேவி நான்பாரமொழிந்தேனென்று சொல்லும்படி என்னுடன் போர் செய்யவந்தோரையெல்லாங்கொன்று அவர்கள் சரீரத்தையெல்லாம் மலைபோற்குவித்து என் திருத்தமையனுக்குத் தொன்றுதொட்டுவந்த மகுடாபிஷேகஞ்செய்துபார்க்கின்றேன், தடுக்கவலியுள்ளவர்கள் தடுக்கலாம். இது இருக்கட்டும்; தேவர்கள் மனிதர் வித்தியாதரர் நாகர் மற்றும் எல்லாவுலகத்தார்களே வந்தாயினும் இவரொழிந்த சிருட்டி திதி சங்காரமென்னும்

முத்தொழிலையுடைய பிரமன்மால் அரனென்னும் மூவரும் என்னுடன் போர்செய்யவந்தாலும், பெண்ணென்னும் பூண்டில்லாமற் செய்துவிடுவே னென்று மத்தியான சூரியனேபோலக் கோபித்து மந்தரகிரிபோல அந்தக ரத்தின் மத்தியிற் சுழன்றுகொண்டிருக்கையில் தன் சிறியதாயாகிய சுமி த்திரை திருமாளிகையில் இருந்த சீராமபிரான் இளையபெருமாளுடைய வி ல்லாகிய மேகம் அண்டகோளம் இடியஇடிக்கும் நாணோசையாகிய இடி யோசையைக்கேட்டு நீருண்ட கார்மேகம்போல இன்சொல்லாகிய மழைத் துளி பெய்துகொண்டேவந்து இளையபெருமாளை நோக்கி அப்பா! நீயென் ன இமையளவுபோதும் கோபமென்பது குடியிராத மனமுடையவனே யன் றோ! நீ வில்லைக் கையிலேந்தி யுத்தசன்னத்தனாய் வருவதற்கேது வென்ன வென, இளையபெருமாள் மெய்யைக்கெடுத்து முறைதவறிய கைகேசி முன் பாக உனக்குப் பட்டாபிஷேகஞ் செய்யவெண்ணினேன், அதைத்தடுக்கத் தேவர்களேதுணிந்தாலும்பஞ்சின்தொடர் நுனியைச்சுடுகின்ற தீயேபோல என் பாணத்தால் அவர்களை யெல்லாஞ்சுட்டுக் கரியாக்கத்துணிந்தேன், என்கையிலேந்தியிருப்பானேயாயின் அதைத்தேவரோயாயினும் விலக்குவத ரிது; அப்படி விலக்கத் துணிந்தாலும் என்கைபாணத்தால் அவர்களை யெ ல்லாங்கொன்றுகளைத்து இப்பதினான்குலகத்திற்கும் அரசனாக நானேசெ ய்கின்றேன் பெற்றுகொள்ளென, சீராமபிரானும் நீதியினின்றுந் தவறாத வொழுக்கமாவது உன்னறிவிடத்ததல்லவோ! தருமங்கெட முறைதவறிய கோபமென்பது விளையாதவிடமாகிய உன் மனத்திற்றோன்றக் காரணமெ ன்ன ? சொல்லவேண்டுமென, இளையபெருமாள் நகைத்து இவ்வுலகமுழு தும் உன்னதேயென்று உமது திருத்தந்தைசொல்ல இவ்வரசாள மேற் கொண்டாய் ! அதைப் பகையாலிழந்துவிட்டுக் காடுபோகின்றாய் என்றால் எவ்விதமாகத்தான் எனக்கு கோபம்வராதிருக்கும். உன்னிடத்தே யன்பு சிறிது மில்லாதவர்கள் உன்னை வனத்திற்போகச்சொல்ல நான் இவ்வைம் பொறியையுடைய இச்சிறு மனிசவுடம்பைப்போற்றி வளர்ப்பேனோ ! நா ன்முன்னே அரசெல்லாங் கொடுத்துவிட்டுப் பின்பில்லையென்று சொல்லி க் காட்டுக்கனுப்பிய அரசன்போல்வேனோவென, சீராமபிரான் தம்பி ! இ வ்வரசபாரம் மிகவுங்குற்றமுண்டாக்கு மென்பதெண்ணாமல் முன்னே அர சன் இவ்விராச்சியபாரம் கைக்கொள்ளென்று சொல்ல, அதை யேற்றுக் கொண்டது என்குற்றமேயல்லவோ ! அதுஅரசன்செய்த குற்றமாகுமோ! நன்னீரில்லாதிருப்பது நதியின் பிழையேயல்ல ; இவ்விராச்சியத்தின் பி ழையேயல்ல, நம்மைப்பெற்ற தாயினுடைய மதியின் பிழையுமல்ல, பரத ன் பிழையுமல்ல, விதியினாலுண்டாகிய பிழையேயாகும். இதற்காக நீகோ பிப்பதென்னகாரியம்! என, கொல்ல னுலைக்களத்தீப்போலப் பெருமூச் செறிந்து மனங்கொதிக்கின்றேன் அதனை யெப்படி நீங்குவேன் ; இப்படிப் பட்ட துன்பத்தையுண்டாக்கிய கைகேசியினுடைய மதிக்கு மதியாயும் மு தன்மையான வானவர்க்கும் வலிதுமாகிய விதிக்கும் விதியுமாகிய என்வில் லினது தொழிலைக்காண வேண்டுகிறேனென் றிளையவர்சொல்ல, சீராமபி ரானும் மறைகளைக்கூறுகின்றநாவால் வாயில்வந்தனகூறுகின்றாயோ! தன் னையீன்ற தாய்தந்தையரைக் கோபிப்பாரும் அவரைச் சலித்துக்கொன்

வாருமுண்டோ ? தாய் தந்தை முதலிய யாவுநீயே எல்லாங்கற்றுவல்லபெ ரியோனே ! இதை நீ யாராய்ந்து பார்க்கவேண்டுமென்றுகையைமறித்து; வரம்பெற்றவளோ என்னை யீன்றதாய், இவ்வரசினைப் பெறுபவனே தம் பி பரதன், அவனேஎன்தந்தையினுடைய சொல்லாற்பொறுகின்றான், யா ன் பெறுகின்ற செல்வமோ விரதமாவது ; அதினிலும் சிறந்தது வேறியா து ! நீ கோபங்கொண்டாயே ! அக்கோபந்தீர்வது உலகமையலை யறியாத பரதனுகிய தம்பியைப் போரிலே தொலைத்தோ ? பெரியோரால் புகழப்ப டும் தந்தையை வாதனைசெய்தோ ! அல்லது பெற்றதாயைக்கொன்றோ சொல்லென, இளையபெருமாள் யானே பகைவராற் சொல்லப்படுஞ் சொ ல்லும், இருதோளெனச் சொல்லும்படிச் சோம்பிக்கிடக்கும் மலையும் அ ம்புப்புட்டிலும் கட்டமைந்தவில்லும் சுமக்கப்பிறந்தேன் ; நான் கோபித்து நின்றென்னபயன் ? என, சிராமபிரானும் எனக்கு நல்ல சொற்களைப்போ தித்து வளர்த்த தந்தை சொல்லைக்கடந்து இவ்வரசபாரம் பொறுப்பதுதகு தியல்ல, என்சொல்கடக்க வேண்டாமென, அம்மொழிகேட்டு இறைவ னுணையால் கடல் கடவாதிருப்பதுபோற் கோபந் துறந்துநின்றான். அப் போது சிராமபிரான் தானும் தன்பாலிருக்கும் மானுரிபோர்த்த மணிகண் டப்பெருமானும்போல அவ்விளையபெருமானைத் தழுவிக்கொண்டு சொல் லின் மாட்சிமையுடைய சுமித்திரை திருமாளிகையை யடைந்தான். சுமித் திரையோ தன்கண்போல்பவராகிய மக்களிருவருங் காட்டிற்குப்போகத் துணிந்திருப்பது கண்டு சகியாதவளாய்த் துன்பக்கடற்கோ ரெல்லைகாணு மல் மனம்புண்ணுகிப் பூமிமேற்புரண்டழுதாள். அவ்வாறழுகின்ற தா யைத்தொழுதேந்தி, நான் துன்பமென்னும் வாளைவாங்கமனந்தேற்றுதற் குத் தக்க காரியஞ்செய்பவனுய் சக்கரவர்த்தியைப் பொய்யனுக்கவே மாட் டேன், காட்டினைச் சிறிதுநாள்கண்டு மீளுகின்றேன். நான் காட்டிற்குப் போனாலும் கடற்குப்போனாலும் வானுலகமே சென்றாலும் எனக் கவை யெல்லாந் திருவயோத்தியையே யொத்திருக்கும் ; என்னை யார் வருத்து மியல்பினையுடையார் ; நீ மனம்வருந்தவேண்டாமென்று சொல்லிக்கொண் டிருந்தான். இப்படி சொல்லிக்கொண் டிருக்கிறபோது கைகேசியனுப்பிய தொழுத்தையர் கையில் மாவுரி யேந்திக்கொண்டு அழுதுகொண்டே தா ங்கொண்டுவந்த மாவுரியைக் கொடுத்தனர். அதைக்கண்ட இராமாநுசர் என் திருத்தமையனைத் திருவயோத்தியை யிழப்பித்தவர் கொடுத்தனு ப்பியவற்றை யெல்லாம் எடுத்தணியப்பிறந்த பெருமாளும் நிற்கின்றனன், அவற்றைப் போர்வில்லோடும் காணப்பிறந்த நானும் நிற்கின்றேன், அவற் றைக்காட்டவேண்டுமென்று வேண்டினன். சக்கரவர்த்தித் திருமகனர் அ வர் தந்த மாவுரியை யாதரத்தோடு மேந்திக்கொண்டு துன்பந்தீர்ந்து உட னே செல்லவேண்டுமென்று எமது பெருமாட்டிசொன்னல், அதுவே து ணையாமென்று தன் தாயாகிய சுமத்திரையினுடைய அழகிய பாதங்களைவ ணங்க அவளுஞ் சொல்வாளாயினள்.

உனக்கோ அக்காடாகாததல்ல நீபோகும் அக்காடு இத்திருவயோத் தியெனவும் பெருங்காதலையுடைய சிராமன் நம்மரசனுகிய தசரதனெனவு ம், நமது பூங்குழலையுடைய சீதையை வையமெலாமீந்தும் போகாத வுயிர்

த்தாயெனவும் எண்ணிச்செல் இவ்விடத்தே யிருப்பாயாயின் குற்றமாம். இவன்பின்னே அடியவன்போல் குற்றேவல்செய்யவேண்டும். தம்பியென்னும்படி நிற்கவேண்டாம், இவன் இத்திருவயோத்தியில் வருங்காலத்தில்வா அப்படியல்லாமற்போனல் அவன்முன்னேமுடியென்று பால்முலைசோரநின்றுசொன்னள். இவ்வாறு சொல்லவே இருவரும் தொழுதுநின்றார்கள். அச்சுமித்திரையோ இரண்டு கன்றுகளை நீங்கி வருந்துகின்ற பசுப்போல வருந்திநின்றாள். இராமலட்சுமணரிருவரும் இடையில் சிறையையுடுத்துப்போயினர். பிறகு தானுடுத்த மரவுரியைத் தம்பியு முடுத்துக்கொள்ளச் சிராமன்பார்த்து தேவரும் புகழுங் கீர்த்தியையுடையானே! யான் ஒருறுதிமொழி சொல்லுகின்றேன், அதை மறுக்கவேண்டாம், நமதுதாய்மாரனைவரும் சக்கரவர்த்தியும் முன்னை நிலைமையுடையரோவல்லர், கொடுந்துயரத்தில் முழுகியிருக்கின்றார்கள். என்னையும் பிரிந்தார்கள். அவர்கள் துன்பத்திலழுந்தாவண்ணம் உன்னை நீயென்பொருட் டுதவவேண்டுகின்றேனெனத் தம்பியும் தோள்குலுங்கநடுக்குற் றுயிர்வருத்தமுற்று யான் உமக்குச்செய்த பிழையாது? நீருள்ளவளவுமீனுண்டு அம்மீனையுடைய கடல் உலகமுள்ளவளவுமுண்டு பார்க்குமிடத்து நாணியொடுகூடிய வில்லையுடைய எமது இறைவனே நானும் என்தாயாகிய சீதையும் ஆரிருந்தால் இருப்போம், எமக்கிதுசொல்லவேண்டும். 'தையல்சொற் கேளேல்' என்றபடி பெண்ணொருத்தி சொற்கேட்டுப் பூமிதேவி யுள்ளநடுங்கவும் காட்டிற்குப்போவென்று சொன்னவன் இன்னும் உயிரோடிருக்கிறான். அவன் சத்தியந்தவறாத அரசனும்! அவன்மகனுனபடியால் இப்படிப்பட்டசொல்லை நீர்சொல்லவந்தீர், பின்னும் நீர் காட்டுக்குப்போவதாகக் கேட்டகாலத்தில் எனக்குண்டான கோபத்தினைத் தணியவேண்டுமென்றுசொல்லவே, நானுங்கோபந்தணிந்து நின்றேன். அதனினும் இது கொடியவார்த்தையேயாம்; உலகமுழுதுமுடைய செல்வத்தை நீங்கிச்சென்றும் என்னையும் கைதுடைத்துப்போகவெண்ணி யிருங்கின்றீரோவென, சிராமபிரானேஒன்றுஞ்சொல்ல வகையறியாதவனுய் இளையபெருமாள் திருமுகமண்டலத்தை நோக்கிப்பார்த்தான். அவனது திருக்கண்களாகிய தாமரை மலரினின்றும் நீர்முத்துகள்போல் வடியக்கண்டு வெகுநேரம் நின்றான். இவ்வாறிருக்கையில் இராசசபையினின்றும் தன்பால் அன்புடையவராகிய வசிட்டமுனிவரெழுந்தருளக்கண்டு சிராமலட்சுமண ரிருவரும் தலைவணங்கித் தாழ்ந்தார்கள்; அதைக்கண்ட வசிட்டமுனிவரும் துன்பப்பெருங்கடலிற் கால்வைத்தவராய் அவர் மனத்தையு முகத்தையு முற்றுப்பார்த்த தல்லது மரவுரியுடுத்த கோலப்பொலிவையுங் கண்டு நாமினி எடுத்துச்சொல்வதென்ன விருக்கின்றதென்று தனக்குண்டான துன்பத்தால் தன்னையும் தனக்கிறைவனையுமறியு மியல்புடையவராயிருந்தும் மறந்தேபோய் வாழ்வையெண்ணிச் செய்யத்தொடங்கிய மகுடாபிஷேகத்திலே தீயவூழின்வலியால் மரவுரிதரிக்க நேர்ந்ததே! எல்லா வுலகங்களையும் படைக்கும் பிரமனுலும் ஊழ்வினை கடப்பதற்கு முடியாதென்றால் விதியைக்கடக்க வொருவராலு முடியாதே! இதனலன்றோ பெரியோரும் "தாந்தாமுன்செய்தவினை தாமேயனுபவிப்பார்பூந்தா மரையோன் பொறிவழியே" என்றே சொல்லியிருக்கின்றனர். இது

வோ அக்கொடியவளாகிய கைகேசியால் விளைந்ததுமல்ல, இவனிடத்தே இவ்வகையான வினையடையத் தகுந்ததுமன்று, இது என்னத்தால் நடந்ததோ, யாருடைய வெண்ணந்தானே செவ்வையாகவே பின்னொருமுறைதெரியவருமென்று சொல்லிக்கொண்டே வில்லேந்திய செந்தாமரைக் கண்ணையுடைய சிராமபிரானைக் கிட்டிவந்து ஐயனே நீ காடுசூழ்ந்தவிடத்தைக் காண்பாயானால் உன்தந்தைவீடு காணவேண்டுவது நிச்சயமாய் நிறைவேறுமென, சிராமனே அவன்சொன்னசொல்லைச் சிரமேற்கொண்டு நடப்பது எனதுகடமை, அவர் எனது பிரிவால் வருந்துவதை மாற்றுவது உமதுகடமை இதுவே முறையென்றுசொல்லி வெம்மையான எல்லையில்லாத காட்டினை யடையென்றானல்லன், பகைவாது அம்பினையொத்த சொல்லைத் தீட்டியவளுக்கு அவ்வாம்பொருத வேலையுடைய சக்கரவர்த்தி சிறிதுமாராயாமல் இவ்வரந் தருவேனென்று ஏற்றுக்கொண்டதுண்டு, அவ்வரங்களைப் பெற்றுக்கொண்டு என்தாயோ என்னைக் காட்டிற்போக ஏவினாள், நானே மாதுருவாக்கிய பரிபாலனஞ்செய்ய வென் சிரமேற்கொண்டு செய்யத்துணிந்தேன் எவற்றிற்குஞ் சான்றாகநின்ற நீ தடுப்பது தகுமோவெனத் தருமநிலைநிறுத்தத்தோன்றிய தசரதாாமன், சர்ப்பப்பரியங்கந்துறந்த சானகிமணாளன் சொல்ல, அதைக்கேட்டுச் சித்திரப்பதுமைபோ லொன்றுமுரையாடாமல் தன்கண்களி னீர்த்துளிசிந்த நின்றான். அவனது பாதங்களை மலைபோலுந் தோளையுடைய தாசரதி பொன்னாற்செய்யப்பட்ட மதிலையுடைய வாயிலைக்கடந்து மாவுரிதரித்த கோலத்துடன் தம்பி தன்னோடு தொடர்ந்துவர அந்தணர்களும் அருந்தவரும் பூமியையாளுமரசரும் நகரமாந்தரும் காட்டில்வாழ்வுடையாரும் கொண்டிருக்கின்ற எண்ணத்தைத்தான் என்னவென்று சொல்வது! தேவர்களும் தமக்கினிவரு முறுதியை யெண்ணாமல் மனம்வருந்தியே நின்றார்கள். இவ்வகையான மாவுரிதரித்தகோலத்துடன் சிராமபிரான் வரக்கண்ட மாதர்களெல்லாம் இளந்தளிரால் தாமரைமேல்விழும் வண்டுகளைக்கடியும் வகைபோலத் தங்கள் கையால் தங்கள் கண்களை மோதிக்கொண்டார்கள்.

இவ்வாறு நீங்காதஅன்பினால் தம்மையுமறியாதவராய் மறுமைபிறுவினையைநீக்கவெண்ணியோ அல்லதுவருந்துகின்றதங்களாருயிர் நீங்காமையாலோதயாதன்போலச் சிலர்மூர்ந்தினர்கள். சிலர்விம்மிவிம்மி மேல்விழுந்தழுதார்கள். சிலர் மேல் எழுந்தனர். சிலர்முகத்தினின்றும் இழிந்தகண்ணினில் அழுந்தினர்கள். சிலர் அளகமாகிய கொடியில் தீக்கொழுந் தடைந்தாற்போலுந் துயரங்கொண்டார்கள். கரும்பையொத்த சொல்லையுடைய சில மாதர் எல்லையில்லாத துயரத்திலழுந்தி மதிமயங்கி யிருப்பதனாலோ கண்ணீர் விழாதிருந்தது. கரும்பையொத்த வலிய நெஞ்சுபடைத் திருந்தமையால், அவர்கள் பெரும் பொருளிழந்தார் தன்மையுடையவரா யிருந்தார்கள். உடலோ டுயிர் நிலையினிற்காமல் நெகிழ்ந்தன. இக்கண மிக்கணமென்னுந் தன்மையும் புகுந்தன, புறத்திலுமிருந்தன, புண்ணினின்று நீர்வடிவது போலக் கண்மலரினின்றும் நீர்வரண்டு உதிரவாரி பெருகின; இரண்டு கைகளையுடைய யானைகளைப்போலும் எண்ணிலாதவர் பெரிய கைகளாற்

பெயர்த்துத் தங்கள் தலையை விரும்பாதவராய்க் கவந்தத்தின் நிலைமையை யடைந்து ஒருகையிற்கொண்டே யுருட்டுவோர்களாய்த் தங்களுடைய சுரிகையாற் கன்மலைசைச்சூன்று நீக்கினார்கள். பசியதேனெழுகும் மலர்மாலையைப்போலும் சிந்திய அழகிய மணிகள் சிதறி வீழ்ந்தன; சிலமாதர்களது அழகியமுகமும் சந்திரனுக்கு நகையினொளியால் தோற்றன; சக்கரவர்த்தியினது தேவியாகிய அறுபதினாயிரம்பேர்கள் குற்றமற்ற கற்பினையுடையவராவார் மழைபோலுங் கண்ணீரைப்பெருக்கித் தன்சிறுவனாகிய சிராமனைத் தொடர்ந்து வாயைத்திறந்துகொண்டே எறிகின்ற அலையையுடைய கடல்போலவிரங்கி யேங்கினார்கள். மயில்களுங், குயில்களும், அன்னங்களும் சிறையிழந்து பூமியில்வீழ்ந்து புரண்டாற்போலத் தங்களுக்குச் சிராமபிரா னல்லது தங்களுக்கு உயிர்போன்றமகனை வேறுபெருமையால் வீழ்ந்து புறண்டழுதார்கள். கிளையென்னும் பண்ணினாலும் நரம்பினாலும் நிரம்புகின்ற ஒலியையுடையனவாய் அளவிறந்துயிர்க்காடெட்டழுந் தன்மையால் தொளைபடுகின்ற குழலினோடு யாழ்க்கு மாதர்களது அமுதினு மினியசொற்கள் தோற்றுப்போயின. அடைக்கலத் தானமாவது கொடிய காடு போலுமென்று தன்மகனாகிய சிராமபிரான் விஷயமாகவே வருந்துகின்ற மாதர்கள் வாய்கள்தோன்றக் கழறுவதனால் அகன்ற மதிலையுடைய நெடியமனைகளில் ஆம்பல்கள் பகற்காலத்தில் மலர்ந்த வயலைப்போலும் விளங்கின. முலையாகிய மலையினின்றுமிழிந்து மேகலாபரணமணிந்த அல்குற்றடமாகிய கடலிடத்தேபுகுந்து கண்ணினின்றும் பெருகிய காட்டாறும் மேடுபோன்ற குங்குமச்சேறும் சந்தனமும் பலவிடங்களில் சேர்ந்து வண்டலிட்டு முத்துமாலைகளை யிழுத்துக்கொண்டுபோயின. விண்ணுலகத்தில் வசிக்கும் இந்திரனுக்கேயானாலும் தீவினையுண்டானால் அவனுக்கு வராத இக்கட்டுகளெல்லாம் வந்தேவிடுகையால் சக்கரவர்த்தியினது மாதரை இதுவரையிலும் காணாத சூரியன் அவர்கள் சிராமபிரான் காடுபோவதனைக்கேட்டுவருந்தி வெளிவந்தமையால் மதிமுகமாகிய தாமரை இன்றுதான் காணப்பெற்றான், தாய்மாரும் பந்துக்களும் அவரைச்சார்ந்தவர்களும் தூரத்தவரும் சமீபத்தவரும் சிறந்த மாதர்களும் தீயில்விழுந்து வருந்துவார்கள் போலத் துன்பமுடையவர்களாய் வாசல்களிலும் முற்றங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். இரைத்துக்கொண் டெழுந்தோங்கி யெங்கும் அலைகளையுடைய கடல்போல ஆரவாரித்துத் தொடர்ந்து பின்னே செல்லக்கண்டு அவர்களுக்குச் சொல்லுவதை யறியாமலும் ஒழிக்கவறியாமலும் சக்கரவர்த்தியினது திருமாளிகையை நோக்கிக்கொண்டேபோய்ப் பட்டாபிஷேகஞ் செய்துகொள்ளப் பொன்னாற்செய்த தேரேறிப்பவனிசெல்லக் கண்டவர்கள் காண அத்தெருவழியே மரவுரியைத் தரித்துக்கொண்டு மறுபடியும் அத்தெருவின்வழியே போனான். அவ்வாறு போகக்கண்ட சிலர் அஞ்சனநிறத்தையுடைய இப்பொழுதனாகிய சிராமபிரானுக்கடுத்த வஞ்சனையைக்கண்ட பின்னே வகிர்ந்து நீங்காத நெஞ்சினும் உயிர்வலிது! இனிச் சிலவற்றையெண்ணிவிடுவதனா லென்னபயன்! நமது நலமேவிடத்தினும் கொடியதென்றே சொல்லிக்கொண்டார்கள். அரசுபெற்று வருவானென்றேயெண்ணி

யிருந்த நாம்எண்ணுகின்ற கொடியகடுவனத்திற்செல்லக் கண்கள் படைத்துக்கொண்டோம். பெண்ணாகக் கொடிய வினையினால் பிறந்து இந்நாட்டில் அவ்வாறு காணப்பெற்ற கண்கொண்டு பிறந்தது அதினுங் கொடியதென்று சொல்லிக்கொண்டார்கள். சில மாதர்கள் பிறந்து உலகமுழுதுடைய தாசரதி புலிகள் வசிக்குங் காட்டிற்போய் நான் வாசஞ்செய்வேனெனப் போவதும் அவ்வாறு போகக்கண்டிருப்பதும் அழுவதும் மிகவுமழகாயிருக்கின்றதென்று சொல்லிக்கொண்டார்கள். சிலமாதர்கள் நன்மைமுழுதுங் கெட்டுப்போக அறத்தைக்கெடுக்க விரும்பாதவரோ உங்கள் குலமெல்லாம் முழுதுமறக்கெடுத்த பரசுராமனை வெற்றிகொண்ட பெருந்திருவாளனாகிய கொண்டல்போலும் நிறத்தையுடைய சீராமபிரானை தங்கள் வலிகெட்டு ஏழையாகி வேந்தரைநோக்கி நிலத்தையாளக்கடிந்த கைகேசியோடொப்பாமென்று சொல்லிக்கொண்டார்கள். சிலமாதர் தன்றிருவரையிற்சுற்றிய மரவுரியுடையவனும் தனக்கொப்பானதில்லாத் துயரத்தால் வருந்துகின்றவனும் இவ்வளவு பெரியநகரத்திற் றுணையாகச் செல்லுகின்றவன் இருவரைப்பெற்ற உத்தமியாகிய சுமித்திரை மகனாகிய இளையபெருமாளொருவன்றானேயென்று சொல்லிக்கொண்டார்கள். பெரியமலையினும் வலியநமது நெஞ்சினை மழுவாயுதத்தாற் பிளக்கலாமென் றோடுவார்கள். சிலமாதர் வழியாவது தங்கள்கண்ணினின்று ஒழுகப்பட்ட நீரால் வெள்ளமாகியிழுக்குவதனால்கால்வழுக்கிவிழ்ந்து வருந்தினார்கள். சிலமாதர்கள் பொன்னாபரணங்களையும் இரத்தினாபரணங்களையும் உடம்பினின்று நீங்கிச் சுழற்றி யெறிந்தார்கள். மின்னலைப்போலத்தோன்றுந் தங்கள் உடம்பிலணிந்த விலையேறப்பட்டபலவகைநிறங்களையுடைய சேலைகளையெறிந்துவிட்டு நாட்பமாகிய ஆடையைத்தரித்துக்கொள்வார்கள். சிலமாதர்கள் நிறைந்த புத்திரசம்பத்துடையவர்களாயினு நெறியேசெல்லும் ஐம்பொறிகள் குறைந்த மக்கள் வருத்தமுற்றால் அவர்களுக்குத்தங்களுயிராயினுங் கொடுப்பார்கள். அரசுக்கேயுரிய திருமகன்காடுபோகத் துணியக்கண்டுந் தன் சொல்லைமாத்திரங்காக்கத்துணிந்த இந்தச்சக்கரவர்த்திமனம்இரும்பினும் வலிதென்றுசொல்லிக்கொண்டார்கள். சிலமாதர்கள் பூங்கொடிபோல் ஒதுங்கிப்பார்த்தார்கள். சிலமாதர் அழுதேங்கிய குரலினராய்க்காந்தள்மலர்போன்ற இரண்டு கைகளையும் தலைமேல்வைத்து நின்றார்கள். மாடங்களில் சந்திரன் தவழும் தங்கள்மாளிகைகளினது நிலைகளினின்று பார்க்குமாதர்கள் சிலர்தனமாகிய மலைகளினின்றுமிழிகின்ற ஆலாங்கட்டிநெருங்கிச் சிந்தமலைகளி லடைகின்றமயிலினம்போல் மனம்வருந்திநின்றார்கள். மேகம்போல வகிற்புகையூட்டும்மாளிகைகளினது சாளரவாசலில்வருந்துகின்ற இன்சொல்லையுடையசிலமாதர்தங்களுடையமைதடவிய கண்களில்நீரருவிபெருக்கெடுக்கக்கூட்டிலிருந்தழுகின்ற கிளிபோலப் பலமுறை சொல்லியழுதனர். சிலமாதர்களுடையகண்ணினின்றும் நீர்த்துளிதாரைதாரையாயொழுகிஅம்மாளிகைகளினதுதளத்தினின்றும்விழுவதனால் நமதுசக்கரவர்த்தி திருக்குமாரனை நினைந்துவருந்தி அப்பொன்னாலாகிய மாளிகைகளும் அழுவனபோன்றிருந்தன.

துன்பமே நின்று தங்களுயிரினைச் சூறையாடுவதனால் தாய்மார்தமது மக்
களை மறந்தார்கள். மக்கள் தம் தாய்மாரிருந்த விடமறியாமல் வருந்தி
மனமுருகிச் சோர்ந்தார்கள். சிகாமரமென்னும் பண்கனிந்தாற்போலுஞ்
சொல்லையுடைய மாதர்கள் வீதிகளில் நெருங்கிப் பார்ப்பதனால் அவ்வெ
ண்சுண்ணந்தீற்றிய மாடங்களெல்லாம் இயற்கைமணமமைந்த கூந்தலையு
டைய திருமகளைத் துறந்தாற்போலும் விளங்கின. மேகத்தையொத்த தங்
கள் கூந்தலைவிரித்துண் மணிற்புரண்டுவிழும்படி பசுந்தளிர்போன்ற முக
த்தையுடைய மாதர்கள் கூட்டங்கூட்டமாகச்சென்றது தாங்களணிந்திரு
ந்த ஆபரணங்கள்சிதற அம்புபட்டுவருந்தும் மான்கூட்டம்போல ஒருபுற
த்தே யிருந்தது. மலைபோன்ற வீடுகளில் கொடிகளசையாதிருந்தன. முர
சவாத்தியவோசையடங்கின பலவாத்திய வோசைகளு மடங்கிப்போயின.
மதிற்புறத்துள்ளவீதிகளில் அம்மாதர்கள் அழுதகண்ணீரால்பொடியடங்
கிப்போயின. சமையற்சாலைபுகையிழந்துபோயின. அகிற்புகையைப் பெரி
யமாளிகைகளிழந்தன. கிளிகள்வைத்திருக்கும் கூடுகளில் வட்டில்கள்பா
லொழிந்தன. குழந்தைகள்வருந்தும்படி மாதர்கள்தொட்டிலாட்டாதிருந்
தனர். உயிர்நீங்கினாற்போலமுகங்கள்பூரிப்பொழிந்தன. மேகங்கள்நீர்த்துளி
யொழிந்தன. குதிரைகள்நிரையுடைய இடங்களிழந்தன. மதயானைகளும்ம
லரிற்கள்ளுண்ணும்வண்டினம்போலமதக்களிப்பொழிந்தன. குடைகள்நிழ
லைப்பிரிந்தன. நீண்டகண்ணுள்ள மாதர்களுடையகூந்தலில்மலர்பிரிந்தன.
வீரர்களுடைய கால்களில் வீரகண்டாமணிநீங்கின. காமபாணமும் துணை
பிரிந்த அன்றிற்பறவைபோல அழல்நீங்கின. குதிரைகள்கிங்கிணிமாலைகளி
னோசைநீங்கின. மத்தளங்கள் வாரினாற்கட்டப்படாமல் தமக்குரிய ஓசை
கள்நீங்கின. மேகம்போலநெருங்கிச்செல்லும்தேரொலிதெருக்களெல்லாம்
நீங்கின. வெள்ளம்போலவே கடலுமோசைநீங்கின. முழவொலி நீங்கின.
யாழினரம்போசைநீங்கின. தேவர் கோயில்களில் திருவிழாவொலிநீங்கின.
அவ்விராசவீதிமுழுதும் அழுகைக்குரலே மிகுந்திருந்தன. சிலம்புகள்சத்தி
க்கும் பொன்மணியோசை நீங்கின. கலைகள் ஆராயாமையால் அவ்வாறே
யிருந்தன. நீரில்வாழ்கின்ற பறவைகளும் ஓசைநீங்கின, சோலைகளு மவ்
வாறே யோசைநீங்கி யிருந்தன. மலர்களில் தேன்பொழியாதிருந்தன ;
மதயானைகளும் அவ்வாறே மதசலம் பொழியாதிருந்தன. வயல்நீரொழி
ந்தன. குழந்தைகள் தாய்மார் கையிலிருந்தும் நீங்கின. ஆகவனீயம் தக்ஷி
ணாக்கினி காருகபத்தியமென்னும் முத்தீயும் ஆகுதியாக விருக்கின்ற நெய்
யைமறந்தன. நன்னெறியிலே நடந்துவரும் அறிவுடையோர் யாவரும்மெ
ய்மறந்திருந்தனர். வேதங்களும் உதாத்தம் அனுதாத்தம் சுவரிதமென்
னும் சுரங்கள்மறந்தன. ஆடிக்கொண்டிருந்த மாதர்களழுதனர். அமுதம்
போன்ற இனிமையுள்ள சத்தசுரரூபங்களைப் பாடுகின்ற மாதர்களு மழு
தார்கள். நாயகரோடு பிணங்கிக்கொண்டிருந்த மாதரும் அழுதார்கள்.
உயிருறத்தழுவிக்கொண்டு நாயகனோடிருந்த மாதருமழுதார்கள். யானைக
ளும் துதிக்கையைநீட்டி நீரைக் குடியாதிருந்தன. குதிரைகள் புல் பூண்டு
தின்னுதொழிந்தன. பறவைகளும் தங்குஞ்சுகளுக்குஇரையுதவாதிருந்தன.

இளங்கன்றுக்குக் கறவைப்பசுக்களும் பாலூட்டாதிருந்தமையால் கன்றுகளும் மனமுருகிச் சோர்ந்திருந்தன. கணவருடைய தோள்களைப்போல மாதர்களுடைய தனங்களாகிய இளநீர்களும் சந்தனப்பூச்சில்லாமல் வறுமையடைந்தன. அக்கணவருடைய முடிகளைப்போல அம்மாதர்கள் கூந்தலில் மலர்முடியாமல் வறுமையடைந்திருந்தன. யானைகள் நெற்றிப்பட்டமாகிய ஆபரணத்தை நீங்கியிருந்தன. வீடுகள் ஆடைமணிகள் துறந்திருந்தன. மதில்கள் கொடிகளில் கட்டப்பட்ட ஆடைகள் நீங்கியிருந்தன. புருக்கள் தம்பேடைகளை நீங்கியிருந்தன. * இது தீவினைப்பயனென்று மனமுருகுவார்களும் நல்வினைப்பயனைத் தேடுவார்களுமாகிய இவர்களைப்பற்றிச் சிராமபிரான் காட்டிற்போதலை நோக்கக் காரணமேயில்லை. இன்பத்துன்பமென்னுமிவ்விரண்டின் கூறுபாடுகளையும் சமமாகநோக்கி நிற்கின்ற யோகிகளும் பெருந்துயரமடைந்தார்கள்.

நீங்காத உயிர் உயிர்ப்போடு முடல்பதைபதைத்துவருந்தி யழகுகெட்டுத்துன்பமதிகப்பட்டு ஐம்பொறிகலங்கத் தயரதன்போல ஆவிநீக்குகின்றதொத்ததாயிருந்தது அயோத்திமாநகரம்; அழுது தாய்மாரோடு அருந்தவரும் அந்தணரும் அரசரும் புழுதியாடிய உடம்புடையவாய்ப் பக்கத்தே இருக்கக்குற்றமாகிய மரவுரிதரித்துவாக்கண்டு எழுதுகின்ற சித்திரப்பாவைபோன்றசானகியார் மனந்திடுக்கிட்டெழுந்து அழிந்தசிந்தையையுடையாளாய் இதுஇன்னதென்றறியாமல்கண்களில்தாரைதாரையாய்க் கண்ணீரொழுக இராகவபிரானைப்பார்த்துயாவராலும்புகழப்பட்ட அரசனுக்குத்

---

* திக்கு நோக்கிய தீவினைப் பயனெனச் சிந்தை
நெக்கு நோக்குவோர் நல்வினைப் பயனென நேர்வோர்
பக்க நோக்கலென் பருவர லின்பமென் றிரண்டும்
ஒக்க நோக்கிய யோகரு மருந்துய ருழந்தார்.

இதன்பொருள். திக்குநோக்கிய தீவினைப்பயனென - ஆதரவுபற்றிய தீவினையின்பயனென்று, சிந்தை நெக்கு நோக்குவோர் - மனநெகிழ்ந் தாராய்வோரும். நல்வினைப்பயனெனநேர்வோர் - நல்வினையின்பயனை யாராய்வோருமாகிய இவ்விருவர், பக்கநோக்கலென் - பக்கத்தேநின் றாராய்வதனாற் பயனில்லை, பருவரலின்பமென்ற இரண்டு மொக்கநோக்கிய யோகரும் - துன்பவின்பக் கூறுபாடுகளாகிய இரண்டனையுஞ் சமமாக வெண்ணுகின்ற யோகியரும், அருந்துயருழந்தார் - அருந்துயரத் தழுந்தினர். எ-று.

தன் காலம்வருந்துணையும் புலனாகாது உயிரைப்பற்றிநின்று அதுவந்துழி உருப்பதாதலான் திக்குநோக்கிய தீவினைப் பயனென்றதென்க. பக்கம் வடசொற்சிதைவு. உம்மை; யிரண்டில் முன்னது முற்று; பின்னது இறந்ததுதழீஇயதனோ டுயர்வு சிறப்பு. தீவினைப்பயன் நல்வினைப்பயன் என்பன பருவர லின்பமென்பன. இன்பத்துன்பக் கூறுபாடுகளை நோக்குவோர் சீராமன் காடுபோனமைகேட் டாங்குவருந்து தனியறி; இவ்விரண்டனையு நீத்தாரும் அருந்துய ருழத்தலின் 'பக்கநோக்கலென்' என்றும், இன்பத்துன்பக் கூறுபாடுகளைத் துவரக்கெடுத்தார் நிரதிசய வின்பமாகிய வீடுபேற்றினையே நோக்குவார், அவ்வீடுபேற்றை யுதவுவானே சீராமனாகலின் அவனது நீக்கம்நோக்கிய வழியோகரும் வருந்தினரொன்பதுபற்றி யோகருமருந் துயருழந்தாரென்றுங் கூறினர்.

நீங்கடுத்தநோ' இத்துயாமுண்டாகக்காரணமென்னசொல்லவேண்டுமென்றுகேட்க்க,அதைநோக்கியகாகுத்தவம்சோத்தான் என் தம்பியோ இப்பூமி முழுதுமாளப்போகின்றான், நானோ தந்தைதாயரிருவருடையகட்டளையை யுந்தலைமேற்கொண்டு இன்றுசென்றுபின் னுமுழக்குமவற்றதுதொகுதியுமுடையமேகங்கள் தவழுகின்றமலைகள்காடுகள்முதலியவற்றைக் கண்டுவேந்துவிடுகின்றேன், இதுவேசெய்தி,நீமனவருந்தவேண்டாமென, சானகியுந்தன்கணவன்காடுபோய்வரத்துணிந்தானென்றும்மண்ணிழந்தானென்றும் வருந்தாமல் நீவருந்தவேண்டாம் நானுன்னைநீங்கிக் காடுபோய் வருவேனென்றகொடியசொல்லொன்றையே கேட்டுப்பொறுக்காமல் தன்கணவனைநோக்கித்தாய்தந்தையர் சென்னவண்ணஞ் செய்யத்துணிந்தது தகுதியான செய்கையே! அவர்கள்நினைக்கநினைக்கமனம்வருந்திஎன்னையிங்கேயிருக்கக் கட்டளையிட்டார்களோ வென,சிராமபிரான்வலியஅரக்கரைப்போல பெரியமலையிற்போய்வீழ்ந்துஇரவில் அழலிற்காட்டிய உருக்கிய அரக்கினைப்போன்று அயலாகிய கல்லிலேதேயும் கடுமையானதன்று; உன்னுடைய மேன்மையானசிவப்புநிறமுள்ள சேவடிப்போதுகள் என, சானகியாரும் பரிவில்லாத மனத்துடன் என்பால் அன்புசிறிதுமில்லாமல் நீங்கிப்போகிறாய்! ஊழிகாலத்துத் தோன்றுஞ் சூரியனும் எரியுமென்றது எவ்விடத்தது, அது உன் பிரிவினைப்பார்க்கிலு மிகவுஞ்சுடுமோவென.சிராமபிரான் அந்தச்சொல்லைக் கேட்டதல்லாமலும் அச்சானகியார் கருத்துமறிந்து கண்ணினீர்க்கடல் கைவிடாமல் என்செய்வதென் றெண்ணுகின்றேனென்றுசொல்லிக்கொண்டிருக்கையில் சானகியார் தந்திருமாளிகையினுட்புகுந்து மரவுரி தரித்துக்கொண்டு பெருமாளுக்கயலாக வந்துநின்றார். இவ்வாறுவரக்கண்டு தாய்மாரும் தோழிமாரும் ஆயக்கூட்டத்தவரும் தீயின்மூழ்கினவரை யொத்திருந்தனர். சிராமபிரானோ சானகியாரை நோக்கி நீயும் என்னுடன் வரத்தொடங்கினமையால் எல்லையில்லாததுன்பத்தைத் தருவதற் கிடமாகுமென்றான். சானகியாரும்பொருந்தி நின்ற துயரமிதொன்றுதானோ, என்னை நீங்கியிருந்ததனால் உமக்கின்பமுண்டாகுமோவென, வேறொன்றும்பேசவகையறியாதவனாய்க் கோசலைராமன் நகரமாந்தருமாதருங்கலங்கியழ வழியினை யரிதிற்பெற்று அவ்வயோத்திநகரத்தின் வ் திவழியேசென்றான்.* மரவுரிதரித்துத் திருமகளாகிய சானகி பின்றொடர்ந்துபோக, வலியவில்லேந்திய கையுடன் இளையபெருமாள்முன்னேசெல்ல, மேகம்போல்பவனாகிய சிராமன் போகக்கண்ட அவ்வயோத்திக் குண்டாகிய துன்பத்தைச்

* சீரை சுற்றித் திருமகள் பின்செல
மூரி விற்கை யிளையவன்முன்செலக்
காரையொத்தவன் போம்படி கண்டவவ்
வூரை யுற்ற துணர்த்தவு மொண்ணுமோ.

சீரைசுற்றித் திருமகள்பின்செல மரவுரியை யுடுத்துத் திருமகளாகியசானகிபின்செல்ல, மூரிவிற்கை இளையவன்முன்செல வலிய வில்லேந்தியகையையுடைய இளையபெருமாள் முன்செல்ல, காரையொத்தவன் போம்படி கண்ட கொண்டல்போன்ற சிராமபிரான் செல்லும்படிகண்ட, அவ்வூரையுற்றது உணர்த்தவும் ஒண்ணுமோ. அவ்வயோத்திக்குளதாகிய துன்பத்தைத் தெரிவிக்கவும் பொருந்துமோ. எ-று.

சொல்லவும்வேண்டுமோ; நகரமாந்தர்யாவரும் அழுதுவருந்தினார்கள். சிரா மபிரான் காடுபோகின்றானெனக் கேட்டுத் தளருஞ் சிந்தையுடையவர்களெல்லாம் அவனை நெருங்கிச்சூழ்ந்து இவன்போவதற்குமுன்னமே நாங்களும்வனவாசஞ்செய்யப்போகின்றோமென்று பேரொன்ற ஒலியுடன்உடன் போகத்துணிந்தார்கள். சீராமபிரானோ தன் தந்தையிருக்கும் திருமாளிகையையடைந்து அவரைக்காணாமலே தாய்மாரையெல்லாம் வணங்கிஎன் தந்தையார் யான்பிரிந்ததனால் மிகத் துயரங்கொண்டு வருந்துவர்; அவரைத்துயராற்றிக்கொண்டிருங்கோளென்று வணங்கினான். அவர்களுஞ்சிராமபிரானையும் இளையபெருமானையும் சானகியாரையும் வாழ்த்தித் தெய்வங்களைநோக்கி இவர்களைக் காத்திரட்சிக்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டுநின்றார்கள் அவர்களைக் அரிதில் நீங்கித்தன்முன்னேநின்ற வசிட்டமுனிவரை வணங்கிக்கொண்டேதம்பியும் சானகியாரும் தொடர்ந்துவர ஓராழிய தேரேறிப்போனான். இதுகிடக்க;

நகர்நீங்குபடலம் முற்றிற்று.

---

கற்புடையாள் தன்கணவனுக்கு முன்னடந்து சேறலொல்லாதாகலின் 'சீரை சுற்றித் திருமகள் பின்செல என்றும். சுமித்திரை இளையவனைநோக்கி 'தம்பியென்னும்படியன் றடியாரினேவல்செய்தி என்றுளாகலாலும் அவன் முன்னழகினும் பின்னழகே சிறத்தலான், பின்செல்வானேல் அழகிலிபெட்டேவற்றொழில் இறையுமாகலாலும். மூரிவிற்கை யிளையவன்முன்செல என்றும், பன்னகப்பாயலுட் பள்ளி நீங்கிப்போய்த்தோன்றிய நல்லறநிறுத்தத்தோன்றியே தேவர்களாகிய உழவர்வேண்டஅரக்கர்கள் கொடுமையாகிய கோடையால் வருந்திய அறப்பைங்கூழ்வளர்ப்பான் தன்வாளியாகிய மழைபொழியக்கொண்டல்போற்செல்பவனாகலின் காரையொத்தவன்' என்றும். மேகம் வில்லிட்டு மின்னிட்டுச் சேறன்முறையாகலின் மின்னற்கொடிபோன்ற திருமகளையும் வில்லையுமென் றதன்றி, எவராலும் வேறலொல்லாத மேகநாதனை வெல்லுதனோக்கி மூரியென் றடைகொடுத்தும். திருமகள் தன்கணவனோடவ்வயோத்திநகரை நீங்கலின் அது உலகமுழுதுநாளும் வேந்தர்பெருமானை யிழந்ததென்பதுபற்றி 'ஊரையுற்ற துணர்த்தவுமொண்ணுமோ' என்றுங்கூறினர். ஒன்றும் என்பது மரீஇயது. ஓகாரம் எதிர்மறை. கார் ஊர்என்பன ஆகுபெயர்கள். உம்மை எதிர்மறை.

இனி ஒருரை. சீரைசுற்றித் திருமகட்குப்பின்செல மூரிவிற்கை யிளையவனென்றும், முன்செலக் காரையொத்தவனென்று மமைத்துக் கொள்க. ஏனையவெளி.

திருமகட் கென்புழி நான்காவது தொகுத்தல் பெற்றது; ஐந்தவித்தா னாற்றல் என்புழிப்போல. அகர வுகர மகர மெனக்கிடந்த பிரணவத்துள் அகார வாய்ச்சிய னாகிற சீராமனைக் காரையொத்தவன் என முன்னும். உகார வாச்சியையாகிற் சானகியை நடுவேனும் மகாரவாச்சியனாகிற் சேதனனாகிய இளையவனைச் 'சீரைசுற்றித் திருமகட்குப் பின்செல மூரிவிற்கையிளையவன்' எனப்பின்னுங் கூறியவாறென்க. அவ்வூரொன்றூர் அயர்வரு மயரர்கட் கிறைவனின்பச் சிறுமாமனிசனகத் தன்கண்தோன்றிய பெருமிதநோக்கி ஊரா - உருபுமயக்கம்,

## தைலமாட்டுபடலம்.

இவ்வாறு இரகுநாயகன் காடுபோகத்துணிந்து பயணப்படவே அச்சக்கரவர்த்தியை நீங்காமல் வசிக்குந்தேவிமாரும் உயிரிலாமையால் ஓவியங்களுமேயல்லது யாவரும் அவனுடன் போகவெண்ணினார்கள். சீராமபிரானோ தான்செம்பொற்றேரின்மேல் அவர்கள் கண்ணீராறாகப் பெருக்கெடுத்துச் செல்லும் அக்கண்ணீர்வெள்ளத்தில் தேரைவிட்டுக்கொண்டே *நட்சத்திரங்கள் பிரகாசிக்கவும் வெயிலொதுங்கவும் மேதியுமானும்மனையிற் பிரவேசிக்கவுஞ், தான்காடுசெல்வதுதரியாமல் சூரியன் அத்தமானமலையிற் பிரவேசிக்கவும் சீராமன்காட்டிற்சென்றான். அந்நாட்டு மாதர்கள்இராமன் பிரிவால் கண்ணினின்றுமொழுகிய நீர்த்துளிபட்டு ஒளியிழந்த அவர்கள்முகம்போலத் தாமரைமலர்களெல்லாம் கூம்பின. அத்தினத்தினிரவோ கைகேசியின் தூய்மையான மனமானது மந்தரையென்னும் கூனியாகிய தொழுத்தையினதுசொல்லாகிய விடத்தால் இருண்டதுபோலிருண்டது. எங்கும் கவுதமமுனிவன் சாபத்தால் இந்திரனுக் குடம்பெல்லாங் கண்ணாகியவாறுபோல் நக்ஷத்திரங்கள் பிரகாசித்தன; சீராமபிரான் திருவயோத்தியையகன்று இரண்டுயோசனைதூரஞ் சென்று ஒருமலர்ப்பூஞ்சோலையைமுனிவருடனுந் தம்பியுடனுமடைந்து வசிக்கையில் தன்னையோர்யோசனையளவாய் வட்டமாகச்சூழ்ந்து எள்விழவிடமில்லாமல் எங்கும் பரந்து அச்சோலையின் புறத்தே சேனைசூழ்ந்துகொண்டிருந்தன. அவர்கள் அங்குள்ளகதிக்கரையின் மணற்பரப்பின்கண்மேலும் பசும்புல்லின்மேலும் படுத்துக்கொண்டு உணவுசிறிதுமுண்ணாமல் அழுதுகொண்டேயிருந்தார்கள். செந்தாமரைமலரில் நீலோற்பலமலர் அரும்பினாற்போலுங் கண்ணையுடைய மாதர்கள் பாலினுரைபோன்ற ஆடையேதமக் கணையாகத் தூங்கினார்கள். பகற்

---

* மீன்புகழ் பெறவெயி லொதுங்கமேதியோ
டான்புகக் கதிரவ னத்தம் புக்கனன்
கான்புகக் காண்கிலே மென்று கல்லதர்
தான்புக முடுகின னென்னுந் தன்மையான்.

இதன்பொருள்.—மீன்புகழ்பெற-நாண்மீன்புகழெய்த,வெயிலொதுங்க-வெயில் கரப்ப, மேதியோடான்புக - மேதியோடாவினம்புக, கான்புகக் காண்கிலேமென்று கல்லதர் தான்புக- சீராமன் கானிற்செல்லக் காண்கிலேமென்று மலைவழியிற்போக, முடுகினன் என்னுந் தன்மையான்-முடுகிச் செல்கின்றனனென்னுந் தன்மையுடையானாய்,கதிரவன் அத்தம்புக்கனன்-சூரியன் அத்தமானவரையை யடைந்தான்.எ-று.

உத்தரநாளினது தாரையும் அத்தாளினதுதாரையுமேதியு மானுமாகலின் ஒதுங்க மேதியோடாவென்றும் கூறுவாருமுளர். இவன் திருவயோத்தியினின்றுஞ்செல்கையிற் பிற்பகலாகலின் வெயிலொதுங்கவென்றும் இவன் அக்கானிலிருக்க நாண்மீன்கள் விளக்காக விளங்கலின் மீன்புகழ்பெறவென்றும், பரிதி தன் குலத்தோன்றலக்கானிற் சேறலாற்றானாகி அத்தமானவரையை யடைதலாற் கான்புகக் காண்கிலேமென்று கல்லதர் தான்புகவென்றும். மாலைக்காலம் வந்துழி மேதியுமானுந் தத்தமில்லந்தோறுஞ்சேறன் முறைமையாகலின் மேதியோடான்புகவென்றுங்கூறினார். தன்மையான் முற்றெச்சம்,

காலத்திலெல்லாம் வருந்திச்செவிலித்தாயர்கள் தொடைமேல் அரும்பை பொத்த தனத்தையும் அம்பையொத்த மையுண்டகண்ணையும் கரும்பைப் போலும் இன்சொல்லையு முடைய மாதர்கள் சிலர் தூங்கினார்கள். மணற்குன்றின்மேல் மாவடுவையொத்த கண்ணாராகிய மாதர்கள் மடப் பிடிபோலிருக்க, சேவகத்திற் றூங்கிக்கொண்டிருக்கின்ற சிறுகண்ணும் புகர்முகமுமுள்ள யானைகளைப்போல வீரர்கள் தூங்கினார்கள். இவ்வாறு அவரவர்கள் தூங்கிக்கொண்டிருக்குஞ் சமையத்தைப்பார்த்துக் கண் ணுறங்கா திருக்கின்ற சிராமனும் மந்திரி சுமந்திரனையழைத்து எல் லாநற்குணங்களையுமுடைய உன்னால் இனிமேல் நடக்கவேண்டிய காரி யங்கள் சில விருக்கின்றன. அவைகளைச் சொல்லுகிறேன். இவ்விடத்தி லே என்னைத் தொடர்ந்துவந்தவரைப் போக்குவதோ அரிதாயிருக்கும், அவர்களைப்போக்காமல் இங்கேயிருந்துஅப்புறம் அடிவைப்பதோகஷ்டம், நானும் தேரேறித் திருவயோத்திக்குப்போய்விட்டதாகத் தோன்ற நீயோ தேரைநடத்திப்போவாயானால் அவர்கள் அச்சுவட்டைக்கண்டு நான் திரு வயோத்திக்கு வந்துவிட்டதாக எண்ணுவார்களென, மந்திரி சுமந்திரனும் இவ்விடத்தே உன்னை விட்டுவிட்டு இனிமையானஉயிர்நீங்கிப்போய் அங்கே அவ்வகையான துன்பத்தைக்காணச்சமைந்தேனே! கொடியதாயினும் தீய ஊழினும் கொடியது யாதிருக்கின்றது! இரும்பையொத்த மனமுடைய நான் சிராமபிரானைத் தன்தேவியோடும்திருத்தம்பிதொடரப்பூஞ்சோலையி லிடத்து விட்டுவந்தேனென்பேனோ! சிராமனை என்னுடனே யழைத்துக் கொண்டு வந்தேனென்பேனோ! *தாருடைய மலரினு மொதுங்கத்தகாத வாரணிந்ததனத்தையுடைய சனகியோடும்உமதுமக்களைப் பாதசாரியாக நடக்கச்செய்தேன், நானேபழமையான சினேகவாஞ்சையுள்ளவனா யிருந் தும் அவர்களைவிட்டுவிட்டு நான்மாத்திரம் தேரேறி வந்தே னென்பேனோ! சக்கரவர்த்தியினிடத்தே நீசொன்னசொல்லைச்சொல்லயமதூதனைப்போற் போவேனோ, நான்குதிசைகளிலுள்ளசனங்களும்நகரமாந்தரும்சிராமனைத்

---

* தாருடை மலரினு மொதுங்கத் தக்கிலா
வாருடை முலையொடு மதுகை மைந்தரைப்
பாரிடைச் செலுத்தினேன் பழைய நண்பினேன்
தேரிடை வந்தனென் றீதிலே னென்கோ.

மாலையாகத் தொடுத்த மலரினு மொதுங்கத்தகாத வாரணிந்த முலையையுடைய சானகியாரோடும் பேராற்றலையுடைய மககளைப் பாரிடைச்செலுத்தினேன்தொன்று தொட்டுவந்த நண்பினையுடையேன் தேரில் தீதிலனாகி வந்தேனென்பேனோ எ-று.

ஆய்ந்து மாலையாகத்தொடுக்கப்பட்ட மலரும் இறைவி நடக்கப்பாதங்களைவருத் துமாதலின் தாருடை மலரினு மொதுங்கத தக்கிலா முலையொடுமென்றார் அனிச்ச மும்அன்னத் தின்றூவியு மாதரடிக்கு நெருஞ்சிப்பழம்' என்றாராகலின். தக்கிலாமுலை யென்றமையின். முலையாகுபெயர். தொன்றுதொட்டுவந்த நண்புடையனா யிருந்தும் அதைச்சுருதாது விலகிவந்தமையான் பாரிடைச்செலுத்தினேன் பழைய நண்பி னேன் என்றும் அவர்கட்குத் தீதிழைத்தேமீண்டேனென்பது தோன்றத் தீதிலே னென்கோவென்றுங் கூறினார். என்கு குவ்வீற்றுத்தன்மைமுற்று. உடைய இரண் டும் ஈறுதொக்கப்பட்டன.

தேற்றி அழைத்துக்கொண்டு வருவார்களென்ற நான் அந்த அரசனிடஞ்சென்று நீ போய்விட்டாயென்று யமனையொத்து எவ்வாறுசொல்ல இசைவேன், யாகஞ்செய்து அருமையாகப்பெற்ற சிங்கவேறுபோன்ற சிராமன் போய்விட்டானென்று சொல்லுமென்னைப்பார்க்கிலும் கைகேசி நாட்டைப்பெற்றதன்றி நீபோய்விட்டாயென் றுயிரைவாங்காமையால் அவளைநல்லவளாகத் தோன்றுகின்றதென்று பலபலசொல்லி நின்று அடியற்றபனைமரம்போல அச்சிராபிரானதுபாதங்களில் வீழ்ந்து புலம்ப, அவனைத்தன் கைகளாலெடுத்துத் தழுவிக் கண்ணீர்துடைத்து வேறாகவிருக்கச்செய்து தருமமோ முன்னே கீர்த்தியைப்பெருக்கிப் பின்னே உறுதியையுண்டாக்கும். அது இன்பத்தை யுண்டாக்குமென்றால் நல்லதென்றெண்ணித் துன்பம்வருவதானால் அதைத்துறந்துவிடலாமோ, நான்பிறந்தபின் காடுசெல்லப்பயந்து இவ்வரசர்குலம் தருமத்தினின்றும் தவறியதென்று பேரெடுத்துத் திரிவேனோ! தன்மகனைக் காட்டிற்போகத் தருமநெறிக்காக அனுப்பினானென்பது என் தந்தையாகிய தசரதனுக் கருந்தவம், அவன்சொல்லைப் பரிபாலிக்கவே காட்டிற்குப்போய் வாசஞ்செய்வதெனக்குப்பெருந்தவம், இதற்காக நீ மனம்வருந்துவது தகுதியான காரியமல்ல, நீ முற்பட்டுவசிட்டமுனிவரிடஞ்சென்று என் வந்தனைமுதலிய யாவுஞ்சொல்லியென்தந்தையை எப்பொழுதும் தேற்றிக்கொண்டிருக்க வேண்டினானென்று சொல்லவேண்டும். என்தாயினால் தீமைநேர்ந்ததாகச் சிறிதும்மனத்திலெண்ணாமல் என்னிடத்தில் எவ்வளவு அன்புவைத்திருந்தாரோ அவ்வாறே என் தம்பியிடத்தும் அன்புவைத்திருக்கவேண்டினானென்று சொல்லவேண்டும், என் தந்தையினது துயரத்தை வசிட்டமுனிவரை யழைத்துக்கொண்டுபோய்ஆற்றிவிட்டுப் பதினான்குவருடங் கழிந்தபிறகு வருவானென்றுஞ் சொல்லவேண்டுகின்றேன், என்னைப்பெற்ற தாய்மார் மூவருக்கும் என்னுடையவந்தனை வழிபாடுகளைச சொல்லிவிட்டு என்தந்தைக்கு இதஞ்சொல்லிக்கொண்டே அவனைவிட்டுப் பிரியாதிருக்க வேண்டுகின்றேன், இவைகளே நான் சொல்லவேண்டியவைகளென்று சீராமன் சொல்லக்கேட்டு, சீராமனைவணங்கி உயிர்நிலை ஊழ்வினையின் வசமேயென்றெண்ணிச் சானகியாரைவணங்கிநிற்க, சானகியாரும்என்னுடையவந்தனைவழிபாடுகளைச் சக்கரவர்த்திக்கும்மாமிமாருக்கும்முறையாகச்சொல்லவேண்டும் என்தங்கைமாரைநோக்கிநான்வளர்த்துக்கொண்டிருந்த நாகணவாய்ப்பறவைகளையும் கிளிகளையும் காப்பாற்றக்கேட்டுக்கொண்டாளென்றுசொல்லவேண்டும் என, இவ்வாறு சொல்லக்கேட்டுத்தீங்குநேரிட்டால்யார் உயிர்துறக்கவல்லவர்! இது இலேசானகாரியமுமல்லவென்றழுதுநின்று சீராமனைவணங்கி இளையபெருமானை நோக்கிநீர்சொல்லவேண்டியதைச் சொல்லவேண்டுமென்றான். அதற்கவர் தானேவலியவழைத்துச்சொல்லி எம்மரசனுக்குறுதியாக்கியஇராச்சியலட்சுமியைத்தவிர்ந்துதான்வேறொருமனைவிக்கேகொடுத்தஅரசனைச்சத்தியசந்தனனென்று இன்னுஞ்சொல்லிநிற்பதோ.காட்டிற்சென்றதன்னரும்புதல்வன் காய்கனிகளையுண்ணத் தான் நாட்டிலிருந்துகொண்டு அறுசுவையோடுங்கூடிய உணவைத்தின்ன விரும்பிய பொய்யிலாத அரசனுக்குடம்போடு

கூடிய உயிரைக்கொண்டு இன்னும்போய் வானடையாத வலிமையைச்சொல்லவேண்டும், மேலும்* அப்பரதராசனுக்கு சிராமனோடு நான்பிறந்திலேனென்றும், மண்ணைக்கொண்டாளுந் தன்னொடு பிறந்திலேனென்றும், தம்பிக்கு முன்னோனல்லேனென்றும், என்னுடன்பிறந்த யானே சுகமாயிருக்கின்றேனென்றுஞ் சொல்லவேண்டுமென்று வருந்திக் கூறக்கேட்ட சிராமபிரான் இளையபெருமானைநோக்கி ஐயனே! இவ்வகையாகச் சிறப்பில்லாதசொற்களைச்சொல்லவேண்டாமென்ற பின்னே மந்திரியாகிய சுமந்திரன் சிராமபிரானைவணங்கி மனம்பதைத்துத் தேரினிடஞ்சென்று குதிரைகளைப்பூட்டிக்குதிரைகள்போனவழியையுங்காட்டித்தன்கல்வித்திறத்தால் ஒருவருமறியாவண்ணம் திருவயோத்திக்குச் சென்றான்; சிராமபிரானுந் தம்பியோடும், சானகியாரோடும் தன்வில்லேதுணையாக அந்தராத்திரியில் அச்சோலையைவிட்டகன்றுபோனான்.

இவ்வாறு செல்கையில் பொய்வினைக்குதவும் வாழ்க்கையையுடையவராகிய அரக்கர்களைப் பொருந்தி அவர்கள்செய்யும் காரியத்துக்குதவு நட்பினாற் போவாரைத் தடுப்பதொத்திருக்கும் கரியமைவிளக்கியதேயொத்த இருளிங்காமையால் அதுகைவிளக்கெடுத்துக் காட்டியதேபோலச் சந்திரோதயமாயிற்று. சிராமன் மூங்கிலடர்ந்த காட்டிற்செல்லும் வறுமையைவெண்ணிச் செங்கழுநீரும் தேம்பிக்குவிந்து சாய்ந்துபோகவே, சாரைப்பாம்பின் தலையைப்போலப் பரிந்து சாய்ந்து குவிந்தன.

---

* மின்னுடன் பிறந்தவாட் பரதவேந்தற்கு
மன்னுடன் பிறந்திலென் மண்கொண் டாள்கின்ற
தன்னுடன் பிறந்திலென் நம்பி முன்னலென்
என்னுடன் பிறந்தயான் வலிய னென்றியால்.

மின்னுடன்பிறந்த வாட்பரத வேந்தற்கு - மின்னலோடு தோன்றுகின்றவாளையுடைய பரதராசனுக்கு, மன்னுடன் பிறந்திலென் சிராமபிரானோடு யான்தோன்றினேனல்லேன், மண்கொண்டாள்கின்ற-மண்ணைப்பெற்றாள்கின்ற, தன்னுடன்பிறந்திலென், அப்பரதராசனோடுந்தோன்றினேனல்லேன் தம்பிமுன்னலென் சத்துருக்கனுக்கு முன்தோன்றினேனல்லேன், என்னுடன் பிறந்த யான் வலியனென்றி-என்னுடன் தோன்றிய யானே சுகமாயிருக்கின்றேனென்று கூறு, எ று.

பரதவேந்தற் கென்றியென்றியைக்க. மின்னல்தோன்றிய துணையில்லாது கழிவதனால் இவன் வாளுமென் பேராற்றலின் முன்தோன்ற லரிதென்பார் மின்னுடன் பிறந்தவாளென்றும் யான் என் திருத்தமையனை முடிசூட்டி அவனுக்குக் குற்றேவல்செய்யும் விதியிலேனென்பார் மன்னுடன், பிறந்திலெ னென்றும் தனக்குரிமையல்லா வரசைத் தானாளத் தொடங்கினமையான் மண்கொண்டாள்கின்றவென்றும், அவன் பிறந்தமையானே தம்மரபு முறைதவறிற்றாகலி னவனோடுந்தோன்றல் மிக்கபாவமென்றதுபற்றித் தன்னுடன் பிறந்திலெனென்றும், சத்துருக்கன் அவனையே சார்ந்தொழுகுபவனாகலின்யானுமுடன்தோன்றினேனெனப் படுவதனால் பெரியர்வருக்கத்திலெண்ணப்படுவேனென்பார் தம்பி முன்னலெனென்றும், இவரோடுறவுபெரிதுடையேனெனல் கிராயத்துன்பமாகலின் அவருறவொழிந்தேனென்பார் என்னுடன் பிறந்த யான் வலியனென்றியென்றுங் கூறினார். ஆல்-அசைநிலை.

இவ்வாறு ஆம்பற்பூவும்மற்றநின்றமலர்களும் அலர்வதுண்டோ! இவ்வாறிருக்க அஞ்சனமலைபோன்ற அழகனாகிய சீராமனும் அழகன் மேற்குறையாதபொன்போர்த்தாலொத்த இளையபெருமாளும் நடக்க, விற்போலும் புருவத்தையுடைய சானகியாரது மெல்லிய பாதங்களுக்குத்தக்கபடி சந்திரனே வெண்மையாகிய நூற்பஞ்சினை இடையே பரப்பினாற்போல வெள்ளிய சந்திரிகையைப்பரப்ப அவர்கள் சூரியன் உதயகிரியை யடையாமுன்னமே தெற்குத்திசையைநோக்கி இரண்டியோசனை கடந்துசென்றார்கள். சுமந்திரனோ அழுத கண்ணுஞ் சிந்திய மூக்குமுடையானாய் மனவருத்தத்தோடு தேரைநடத்திக்கொண்டே ஐந்துநாழிகைக்குள் திருவயோத்தியைக்கண்டு வசிட்டமுனிவரையடைந்து அவரை மும்முறை வலம்வந்து பணிந்து நடந்த செய்தியெல்லாஞ் சொல்ல அதைக்கேட்டு மனம்வருந்தி நடக்கப்போவதையு மறிந்துகொண்டு இனி அரசன் முடிந்துபோவானென்றுதுணிந்து சீராமனை என்னசொல்லித்தடுத்தும் பழிக்கஞ்சியே நேர்ந்திலனென்றும், உலகத்தில்விதியினை வெல்லுவார்யாரென்றும்இராசமாளிகைக்குச் சுமந்திரனுடன் போனான். தேரேறிக்கொண்டு சீராமன் வந்துவிட்டானென்று தங்கள் மனமுற்பட்டுச் செல்லப்பரிவேடஞ்சூழ்ந்த சந்திரனைப்போலச் சக்கரவர்த்தியை மந்திரிமாரெல்லாஞ்சூழ்ந்துக்கொண்டுதன்கண்ணில் வற்றாதநீர்ப்பெருக்கினையுடையதேர்ப்பாகனது நிலைமைகண்டேஅவர்கள் நிலைமாறி நின்றார்கள். தேர்வந்துவிட்டதேயென்று யாவருஞ் சொல்லிக்கொள்ளவும் சீராமன் வந்துவிட்டானென்று சக்கரவர்த்தியும் மயக்கம்தீர்ந்து கண் விழித்திப்பார்த்து வசிட்டமுனிவரை நோக்கிச் சீராமன் வந்தானோவென்றுகேட்க, அதற் கவரில்லையென் றுரைக்கவாயெழாமலேங்கிநிற்கு முகக்குறிப்பைக்கண்டு சோர்ந்துவிழ இங்கேநின்றும் இவ்வல்லலைக் காண்பதோவென்று வசிட்டமுனிவரைப்பாற்போயினர். சக்கரவர்த்தியும் தன் தேர்ப்பாகனைப்பார்த்துச் சீராமன் தூரத்தி லிருக்கின்றானோ சமீபத்திலிருக்கின்றானோ வென்றுகேட்டனன், அவன் சீராமன் தம்பியுஞ் சானகியாருந் தொடரக் காட்டிற் சென்றானென்று சொல்லவே தன்னுவி நீங்கித் தன்னை இந்திரன்முதலிய தேவர்களெல்லாம் நெருங்கிச் சூழ்ந்துவரச் சந்திரன்போலும் பிரகாசத்தையுடைய விமானத்திலேற்றி எங்கள் பிதாமகன் வந்தானென்றுசொல்லி மனங்களித்துபிரமலோகத்துக் கப்பாலிருக்கும் பரமபதநாட்டிற் கொண்டுபோகச் சென்றான். சக்கரவர்த்தி உயிர்ப்புந்துடிப்புமில்லாததைப்பார்த்து உருவந்தீண்டச்சந்தேகித்து அரசனுக்குயிர் நீங்கினதாகவேதெரிந்துகோசலை மனங்கலங்கி வீழ்ந்து புத்திரரென்பவர் புத்தென்னு நரகத்தினைநீக்கி மறுமைப்பயனைத் தருவதே யல்லாமல் இம்மையின்பதத்தைத் தருவாரல்லரோ, மக்களைப்பெற்றுயிர்வாழ்கின்றவர்க்கு அவமான காரியமுண்டோ? இங்கேவந்துபயப்படவேண்டாமென்னமல் என்மகனென்று சொல்லப்படுபவன்தன்தந்தையைக் கொன்றுவிட்டானே? என்று சொல்லுவாள், அடிகைகேசி! உன்னெண்ணத்தால் உலகமுழுதும்பெற்றாய், அழியாத வரமும்பெற்றாய்! அதைப்பெற்றும்

அரசனைக் கொன்றாயல்லவோ, உன் எண்ணம் பலித்ததேயென்று கதறு வாள், தேரிற்சிறந்த சம்பராசுரனைப் போரில்வென்று தேவர்களுக்கெல்லாம் அவர்கள்பதங்களைக்கொடுத்துவாழ்வித்தாயே! இப்போது அத்தேவர்களோ 'தினைத்துணைநன்றி செயினும் பனைத்துணையாக் - கொள்வர்பயன் தெரிவார்.' என்றபடி, அவ்வுதவியின் பயனை யறிந்தவராகையால் அவர்களுக்கு நல்விருந்தாகச் செல்கின்றாய்! என்று கதறிப்புலம்பி யழுதாள். இவ்வாறு சக்கரவர்த்தியினுடைய பெருந்தேவியாகிய கோசலையழுதுபுலம்ப அதைக்கேட்ட சுமித்திரையும் மனம்வருந்தியழுதாள். இவர்கள் கூடியழக்கண்டு சக்கரவர்த்தியினது அறுபதினாயிரம் தேவிமாரும் மயிற்கூட்டம்போல் நெருங்கியழுதார்கள்.

மெய்வார்த்தை தவறாமைக்காக உயிரிழந்தும் மகனைப்பிரிந்தும்கடைபோடச் சத்தியசந்தனாகிய சக்கரவர்த்தியினது அழகிய உடம்பைப்பிரியாமல் அழுதுவிடாதிருந்தவர்கள் பித்தமயக்காகிய சுறவெறியும் பிறப்பாகிய கடல்கடக்கச்செலுத்திமீண்டகப்பலில்தாமும்போவாளையொத்திருந்தார்கள். இவ்வாறு அறுபதினாயிரமனைவியரும் கோசலையும் சுமித்திரையும் வருந்தி யழுதுகொண்டிருக்கையில் மந்திரியாகிய சுமந்திரன்போய்சக்கரவர்த்தியினது தன்மையை யெடுத்துச்சொல்ல, வசிட்டமுனிவர்கேட்டு மனம்வருந்தி இவருக்குரிமைக்கடன்செய்யும்மக்களோ ஒருவருமிங்கில்லை, நடக்கவேண்டிய காரியத்தைப் பாதன் வந்தாற்பின்னேசெய்யலாமென்று பெண்கள் சூழக்கிடந்த சக்கரவர்த்தி திருவுடம்பைத் தயிலமாட்டி அறுபதினாயிரம் பேரையும் அரசனைச் சிதையில்வைக்கும்போது சஹகமனமாவிரெனக்கட்டளையிட்டுத் தேவிமாரிருவரையும் இராசமாளிகையில் இருத்திப் பாதனைக்கொண்டுவாருங்கோளென்று அரசனாணைதீட்டியசுருளோலை கொடுத்துத் தூதரை கேகயதேசத்திற்குப்போக வனுப்பிவிட்டுத் தான் சுமந்திரனைச் சேனைத்தலைவற்குரிய காரியத்தைச் செய்துவர வேவிச்சென்றார். இதுநிடக்க;

இங்கே சிராமபிரானைச் சூழ்ந்துகொண்டிருந்த நகர மாந்தரெல்லாம் நடந்து வந்தவருத்தத்தால் வருந்திச் சிராமனே அங்கிருக்கின்றானென்றேயிருந்து தூங்கிவிட்டுப் பின்பு எல்லாருமெழுந்தார்கள். அவர்கள் கருணை பொழுகுகின்ற செந்தாமரைபோலுங் கண்ணையுடைய கொண்டல்போலு மேனிப்பிரானைக்காணாமல் மயங்கிக் கண்கள் தம்மைநித்திரைவிளைவித்தே வருத்தமுண்டாக்கினவென்று எட்டுத் திசையுமோட வெழுந்திருப்பார்கள். சிலர் நம்மைத் துன்பகடலிலாழச்செய்து போய்விட்டானேயென்று சொல்லிக்கொள்வார்கள். சிலர் நமதையன் செய்கைபோ கொடியதென்பார்கள். சிலர் இவன்போன தண்டகவனமும் இந்தவுலகத்திலிருப்பதல்லவோவென்று அறிவைச் சுட்டியாராய்ந்து அவர் ஏறிப்போன தேரினது அடிச்சுவட்டைத்தொடர்ந்துபோவோமென்பார்கள். சிலர் தேரின்சுவட்டைநோக்கி இச்சுவட்டால் நமது திருவயோத்தியே சென்றான் என்பர். சிலர் கோசலையீன்ற கொண்டனிறத்துக் குழகன்போனானென்று அச்சுவட்டை யொற்றிக்கொண்டு யாவரு மஞ்சவேண்டாமென்றுசொல்லி இடி

யொடுகூடிய மேகமும் கடலுமொருவழியேசன் முராவாரித்தாற்போலஆர வாரத்தோடும் போனார்கள். அவர்கள் சர்ப்பத்தின் வாயிலுள்ள காளன், காளாமுகன், யமன், யமதூதை யென்னு நான்கு பற்களாலுங் கடியுண்ட விடத்திற்கு அவ்விடத்தை நீக்க அருந்துந்தேவாமுதம்பெற்றுயர்ந்திரா மன் மீண்டானென்பதுபற்றி போனபொழுதில் புகுந்த வுயிர்பொருத்த வரையொத்திருந்தார்கள். இவ்வாறு வழிக்கொண்டு அவர்களெல்லாரு மொரோ முகமாகத்திரண்டி செல்கையில் அயலிலே அப்பால் வேறுகச் சென்ற நெறிகாணுமல் சந்தோஷமே மிகுந்து கடல் உகாந்தகாலத்தில் பெருக்கெடுத்துக் கொண்டு மண்முழுதும் புரண்டுவருவதுபோல மதில் சூழ்ந்த திருவயோத்தியை யடைந்து அரசன் பொன்னுலக மடைந்தா னென்ற உண்மையான செய்தியைக்கேட்டு மனங்கெட்டுப்போய் உயிர் நீங்கினாரை யொத்திருந்தார்கள். இனி யென்னசொல்வது நமது காகுத்த வம்சோத்தரன்காடுபோனானென்பதையேதுணிந்து உயிர்நீங்குவதற்குக்கா லமல்லாமையாலே அதுவொன்றும் நீங்காதிருந்தது. மன்னவனுக் காகா தவரும் வனம்போன மகனுக்காகாதவரும் துன்பமாகிய சிறையினிடத்தி லகப்பட்டிருந்தார்கள். அங்கேயிருந்த வசிட்டமுனிவரும் நாம்பழிக்கஞ்சி யல்லவோ வொழிந்ததென்று பல பல நல்லமார்க்கங்களையும் சொல்லிக் கொண்டு தம்மனப்பதைப்பு நீங்கினர். திருவயோத்தியோ கடலினடுவே யிருந்துக்கொண்டும் அக்கடலினைக்கடக்காமலிருக்கின்ற வடவாமுகாக்கினி போல வசிட்டமுனிவர் ஆணையைக்கடவாமல் துன்பமே வடிவமாய் அத்தி ருவயோத்தி இவ்வாறிருக்க, மந்திரியாகிய சுமந்திரனைத் திருவயோத்திக் கனுப்பிவிட்டுத் தாமும் தம்பியோடுஞ் சானகியாரோடும் நடுராத்திரியிற் சீராமன் காடுசெல்வதைச் சொல்லுகின்றோம்.

தைலமாட்டு படலம் முற்றிற்று.

---

## கங்கைப்படலம்.

மையோ மரகதமோ கருங்கடலோ நீருண்டமேகமோ இவன் வடிவ மென்று யாவரும் அதிசயித்துஞ்சொல்ல உண்டோ இல்லையோவென்று சந்தேகங்கொள்ளு மிடையுடைய சானகியாரோடும் இளையபெருமாளோ டும் சூரியனொளி தன்மேனியில்விரிந்த பிரகாசத்தின்முன்னே மறைந்து போக அழகனாகிய சீராமபிரான்சென்றுகளியன்னமும்மடவன்னமு நடமா டுவனவற்றைக்கண்டான். காமபாணங்களஞ்சையும் அப்பெருமானது அல கினையுடைய அம்பினையும் அளந்து விடத்தைவெல்லும் கண்களையுடைய வளாகிய சானகியோ அங்கேதங்கிய களிப்பினையுடையனவாகி இசைபாடுந் தன்மையையுடைய வண்டுகள் தன் குழலைப்போலச்சுழலாநிற்கும்தாமரை களைநோக்கி இறைவணங்கிய சீராமபிரானது பாததாமரைகள் சிரிப்பதைக் கண்டாள். இவ்வாறுபார்த்துக்கொண்டே செல்கையில் பிராட்டி தன்விழி யைப்போல வயல்களிற் களைகளைபவர் தளையினின்றும் விட்டெறிகின்ற குவளைத்தொகுதியையும் கருப்பேந்திர முதலானவைபார்த்துக்கொண்டே நடந்துவருவதனாலாகிய இளைப்பறியாதவளாய் நடந்துசென்று சின்னஞ்

தருகின்றமலர்களைத்தரும் நெருங்கியநந்தனவனங்களையும் பொற்சன்னங்களையடித்துக்கொண்டுவரும் நதிகளையும் பார்த்து மகிழ்ந்து சூரியனைப்போலும் பிரகாசிக்கும் இரத்தினாபரணங்களையணிந்த பலமாதர்கள்வசிக்கின்ற மருதநிலத்தூர்களையும் பல கடந்து வேதாகம சாஸ்திர புராணங்களை நன்றாக யுக்திபுறவறிந்தவர் பலரும்வாழ்கின்ற அலையெறியும் கங்கைக்கரையையடைந்தார்கள். அக்கங்கைக்கரையில்வாழ்கின்ற தவசிகள் யாவரும் யாங்கள்பெறும் பேறாகிய சிராமபிரான் எழுந்தருளிவந்தானென்று களிப்பாய் வரக்கண்டு இல்லறவாழ்வையுடையார் தாம் எவ்வாறுபெண்ணினாலனுபவிக்கும் இன்பத்தைச்சொல்லிமுடியாத வகைபோலத் துறவறவாழ்வினையுடையார் தம்மனத்தால் எண்ணி யாராய்ந்தனுபவிக்கும் சொல்லரிய பேரின்பம்போன்றவனும் தெய்வப்பாடலால் சொல்லித் துணியமுடியாத அமுதம்போன்றவனுமாகிய ஞானக்கண்ணாலறியும் சிராமபிரானை ஊனக்கண்ணாற்கண்டுள்ளங்களித்து எதிர்கொண்டு வணங்கி இன்னிசைபாடி மதுராவாரியில்தோன்றிய அமுதமென வனுபவித்து தங்கள் மனையில் வாழ்கின்ற மக்களையென்று நினைக்குமியல்பினை யுடையவராயிருந்தும் அவர்களைக் காணாது தேடிவருந்துகையில் அவர்களை மீண்டுங்கண்டால் எப்படியோ அப்படியேதமக்குரிய இனியதாகியதவச்சாலையில்அழைத்துக்கொண்டுபோய்த் தம்கண்களினின்றும் பொழிகின்ற ஆனந்தபாஷ்பத்தால் அவர்களை நீராட்டி இன்சொல்லாகிய மலர்சூட்டி அன்பென்னு மருமையாகிய அமுதமூட்டி வழியில்வந்த வருத்தத்தையோட்டிக் காட்டிலுள்ளனவாகிய பரிசுத்தமான காயுங் கனியுங் கிழங்குந் திருத்திக் கொணர்ந்துகொடுத்து அக்கங்கைநீரில் நீராடித் தீயையோம்பி அமுதுசெய்யவேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள்.

பெண்களில்விளக்கேபோன்ற மானையும்தேவர்கள் துன்பநீங்கத்தங்காருத்தனே செங்கையாற் பற்றிக்கொண்டு தாமரைமலரிலிருக்கும் பிரமன் தன் பாதத்தின்கண் தன்னழகியகையால் திருமஞ்சனமாட்டிய அக்கங்கையில் நீராடினான் கன்னித்தன்மைநீங்காத கங்கையும் கைதொழுது வணங்கிசொல்லவே யருமையான பாதகங்களையெல்லாம் பூமியிலுள்ளவர்கள் என்னால் நீக்கிக்கொள்வார்கள், இன்று யான்செய்த பாதகங்களையெல்லாம் என்னையீன்ற உன்னானீக்கிக்கொண்டேன். என்று சொல்லிநிற்க, சிராமன்*நாககங்கணமுடைமையாலும், வெண்ணிறக் கங்கைதங்கிய சடையுடைமையாலும், கற்புடைமங்கை காணநின்றாடுகின்றமையாலும், சந்திரசேகரன்போலும் அக்கங்கையின் அலைநடுவே தோன்றுவதனால் வல்லிசாதக்கொடிபோலும் இடையையுடைய திருமகளோடு முன்னாளில் திருப்பா

* வெங்கணாகக் கரத்தினன் வெண்ணிறக்
கங்கை வார்சடைக் கற்றையன் கற்புடை
மங்கை காணநின் றாடுகின் றான்வகிர்த்
திங்கள் சூடிய செல்வனிற் றோன்றினான்.

இதன்பொருள், வெங்கண் நாகம் கரத்தினன் - தறுகண்மையையுடையயானைப் புழைக்கையைப்போலும் நீண்ட கையையுடையானும், வெண்ணிறம் கங்கைவார்சடை கற்றையன் - வெண்ணிறமுடைய கங்கையையொழுகும் சடைக்கற்றையை யுடையானும், கற்புடைமங்கை காணநின்றாடுகின்றான் - கற்பினையுடைய சானகியார்காண நீராடுகின்றானுமாகிய சிராமபிரான், வகிர்திங்கள்சூடிய செல்வனின் தோன்றினான் பிறைசூடிய பரமசிவனைப்போலும் விளங்கினான், எ-று.

ற்கடலில் தோன்றுகின்ற தன்மைபோலும் விளங்கினன். சானகியோ தன் இடைக்குக் கொடிநாணவும், அன்னம் மடநடைக்கொதுங்கவும், தன்பாதங்கள்போன்ற தாமரைகள் நீரிலொளிக்கவும், கண்போன்றமீரில் ஒடிப்போகவும் நீராடினள். அக்கங்கையோ தேவர்கட்கெல்லாம்பெருந்தெய்வமாகிய பரமசிவனது கற்றையஞ்சடையில் எருக்கமலராற் றொடுக்கப்பட்ட கோவைமாலையோடு கொன்றைமலரால் மணம்பெறுதிருந்தும் சானகியாரது கூந்தலின் கத்தூரிமணத்தாலும் பூமணத்தாலும் மணம்பெற்றுக்கொண்டு நுரைக்கொழுந் தெழுந்தோங்கித் துவளுகையால் நரைத்த கூந்தலையுடைய மந்தாகினியாகிய அக்கங்கை சானகியாருடைய தனிமையையெண்ணித் தன் கையாகிய அலையைக்கொண்டு நீட்டிச்செவிலித்தாய்போல் நீராட்டினள். அச்சானகியாரது கூந்தற் கற்றையாகிய மழைக்குலம் நிலைநீரிலே தங்கிக்குழைவதுகங்கைநதியிலிருந்தும்காவிரிநதியிலிருந்துமிகுந்த நீர்ச்சுழி போவதை யொத்திருந்தது. அவ்வாறு சுழியிட்டோடுகின்ற மிக்க வொலியுள்ளவாற்று வெள்ளத்தில் தன் கண்ணாகிய சேற்கண்டைகள் புரளத் தான் நீராடி எழுவதனால் முன்னாளில் திருப்பாற்கடலிற் பிறந்ததையொத் திருந்தது. முற்காலத்தில் கங்கை அயர்வருமமரர்கட் கிறைவனாகிய கள்ள மாமாயன்பாததாமரை தீண்டலால் கொடிய பாதங்களெல்லாம் நீங்கிவிளங்குவாளானல் இந்நாளில அப்பெருமானதுதிருமேனிமுழுதும்பட்டால் இவ்வுலகமானது நரகத்திலழுந்தி வருந்துவதற்கிடமுண்டோ! அக்கங்கை நதியிலுள்ள கட்டங்களிலொன்றில் நீராடி வேதபாரகராகிய முனிவர்கள் வசிக்கு மாச்சிரமத்தையடைந்து மெய்யுணர்வுடையோ ருணரும் இறைவனைக்கைதொழுது அக்கினிகாரியமுஞ் செய்துமுடித்துப் பின்பு அம்முனிவர்கள் விருந்துண்டு களித்திருந்தார்கள். வருந்தித் தான் தரவந்தவமுதத்தையும்அருந்தும் நீரொனத்தேவர்களையூட்டி மகிழ்வித்தசிராமபிரான்விருந்தாகி மெல்லிய இலைமுதலியவற்றையுண்டு விளங்கிநின்றதைப் பார்க்குங் காலத்தில் பெரியோர்பாற்செய்தவை குறையாதென்னும் நிலைமை மேற்

---

தண்டியாசிரியர் 'ஒருவகைச்சொற்றொடர் பலபொருட்பெற்றி தெரிதரவருவது சிலேடையாகும்' என்றமாத்திரையொழியாது 'அதுவே, செம்மொழி பிரிமொழியென விருதிறப்படும்' என்றாராகலின் செம்மொழிச் சிலேடையாகக்கொண்டு வெங்கணாகம் கரத்தினன்-தீயைக்காலுங் கண்ணையுடைய நாகமாகிய கங்கணமணிந்த கையையுடையானும், வெண்ணிறம் கங்கைவார்சடை கற்றையன் - வெண்ணிறமுடைய கங்கையை யணிந்த நீண்ட சடைக்கற்றையுடையானும், கற்புடைமங்கைகாண நின்றாடுகின்றான் - மலையரையன் பயந்தபாவைகாண இரணியமன்றில் ஆனந்தத்தாண்டவஞ் செய்வானுமாகிய, வகிர்திங்கள் சூடியசெவ்வனிற் றேன்றினனெனவும் கொள்ளக் கிடந்தமைகாண்க. சானகியை கற்புடைமங்கையென்றார், அது இவ்வாசிரியர்சிராமன் கூற்றாக 'அருந்ததியனையாளே' எனப் பிறண்டுங்கூறலானும், இவள் கற்பினிலைமையை அயோத்தியர்பெருமான் சோதித்தஞான்று அக்கற்புநிலைமையால் தீயினின்றுமெழுந்துதீயையுஞ் சுட்டமையானு முணர்க. இனிவெண்ணிறக்கங்கைவார்சடைக் கற்றையனென்புழி வெண்ணிறநீரைக்கையின் ஒழுக்கம் சடையென்னு மறையின்பிரிவினை யுச்சரிப்பானுமென் றுரைப்பாருமுளர், அவர்சடைக்குக் கற்றையெனக்கூறல் பொருந்தாமை நோக்கிலர்,

கொண்டிருந்தது. அத்தருணத்தில் ஆயிரம் படகுகளுக்குத் தலைவனும்குக ப்பெருமானென்னுந் திருநாமமுடையானும், கங்கையைத் தாண்டுகின்ற வர்களுக்குப் படகுவிடுவோனும், வில்லேந்திய திரண்ட தோளையுடையா னும், துடியுடையானும், நாயையுடையானும் தோலாகிய செருப்பணிந்தி ருக்கும்,காலையுடையானும், இருளைப்போலுநிறமுடையானும் தன்பெருஞ் சேனை தன்னைச்சூழ்ந்து நெருங்குவதனால் நீருண்டமேகம் இடியோடெழுந் ததென்னுந் தன்மை யுடையானுமாய்ப் புறப்பட்டுக் கொம்பு துத்தரி பம்பை முதலியவற்றை முழக்கிக்கொண்டு வருஞ் சேனையோடு வந்து அவற்றை நிறுத்திவிட்டு திருவயோத்தியி னின்று மெழுந்தருளிய வள் ளற்பிரானாகிய சிராமபிரானைக் காணவந்தான். சிருங்கிபேர புரத்திலி ருந்து சிராமபிரானைக் காணவந்த வேடுவர் பெருமானாகிய குகப்பெரு மாள் தன்னரையிற் கட்டியிருந்த உடைவாளெறிந்துவிட்டு வில்லுங்கணை யுந்துறந்து பேரன்புடையவனாய் இறைவன் எழுந்தருளியிருந்த வாயி லையணுக, அதைக்கண்ட இளையபெருமாள் நீயாரென்றுகேட்க, இளையபெ ருமாளை யன்பாய்வணங்கி இறைவனே! நின்பாதங்களைச்சேவிக்கவந்தேன், நானே இக்கங்கைக்கரையிற்படகுவிடும் வேடுவர்கட்கரசன் என்றான். இளை யபெருமாளோ இறைவனை மும்முறை வலம்வந்து பணிந்து இறைவனே! நின்னைத் தெரிசிக்கவந்திருக்கின்றான். தன்சுற்றமும் தானும் உள்ளந்தூய் மையுடையான், தாயினும் நல்லவன். கங்கைக்கரையில் ஓடம்விடுகின்றவர் கட்குத்தலைவன், சிருங்கிபேரபுரத்திலிருந்து வந்திருக்கின்றான், அவன்பெ யர் குகப்பெருமாளென்று சொல்லுவார்களென்றுசொல்ல, அதைக்கேட் டசிராமபிரான் அவனை யன்பாசொலவழைக்க வேண்டுகின்றேன், நீபோ வென, இளையபெருமாள் குகப்பெருமானையணுகி வருகவென்றுசொல்ல அவனும் விரைவிற்சென்று கண்ணனைக் கண்களாரப்பார்த்து மனக்கனி வொடும் இருண்டகுஞ்சிமண்ணுறவணங்கி யுடல்வளைத்துவாய்புதைத்துக் கைகட்டிக்கொண்டுநின்றான், அவனைக்கருணையோடுபார்த்துஇங்கேயிருவெ ன்று கட்டளையிட அதைக்கேட்டு மிருக்கையிலிராமல் பேரன்பே யுருவமு டையவனாய்த் தேவரீர் பொருட்டுத் தேனு மீனும் திருவமுதுசெய்யத்திருத் திக் கொண்டுவந்திருக்கின்றேன், தேவரீர் சம்மதம் யாதென்றுவினவ, இரா குநாயகன் அதைக்கேட்டு சிறுநகைபுரிந்து தன்னருகேயிருந்தமுனிவர்களை நோக்கி அரியனவாய் உவக்கும்படியுள்ளத்து ஆராவன்பு மீதூரக்கொண் டுவந்த பொருள்களென்றால் அது தேவாமிர்தத்தைப் பார்க்கிலுஞ் சிறந் ததல்லவா? நாம் அன்பாற் பரிசித்தனால் பவித்திரமாம், எமக்குமுரியன வேயாம், இனிதாக நாங்களுமுண் டதனோடொப்பாகுமென்று திருவாய் மலர்ந்தருளிப் பின்னும் குகப்பெருமானைநோக்கி யான் இன்றிங்கேவசித்து நாளைக் கங்கைக்கரைசெல்ல வுத்தேசித்திருக்கின்றேன், இன்று நீயும்உன் சுற்றத்துடன் சிருங்கிபேரபுரஞ்சென்று நாளைக்காலை உன்படகுகளோடும் வரவேண்டுகின்றேனென்று விடைகொடுக்க, அதைக்கேட்ட குகப்பெரு மாள் இரகுவீரனே! தேவரீரை இக்கோலத்தோடும் பார்த்த என்கண்ணை நங்கைச்சூன்றெடுப்பதுபோலவெடுக்காதகள்ளத்தன்மையுடையேன்,இத்

துன்பத்தைப் பார்த்தும் இறவாதிருக்கின்றேன், என்னடிமைத்திறம்நன்று யிருக்கின்றது இனி உன்னைப் பிரியாமலே அடிமைத்தொழில் செய்துவருகின்றேனென்று சொல்லக்கேட்ட சீராமபிரான் சீதையைப்பார்த்தும் தம்பியாகிய இளையபெருமாள் திருமுகத்தைப்பார்த்தும் இவனே நீங்காத பேரன்புடையவனுகுமென்று சொல்லிக் கருணைபொழியும் கண்களையுடையவனுய் என்பாலன்புமிகுந்தவனே! இங்கே யெம்மோடிருவென்று கட்டளையிட, அக்கட்டளையையேற்றுத் தானும் இளையபெருமாளைப்போலப்புற காவல்செய்து கொண்டு இளையவனைப்பார்த்து பெருமாள் திருவயோத்தியை நீங்கியகாரணம் யாதென்றுகேட்க, தம்பியும் பரிவோடும் அவனுக்காதியோடந்தமாக வெடுத்துச்சொல்லக்கேட்டுத் துன்பக் கண்ணீர் பெருக ஐயோ! நிலமகள்நோற்றும் நம்மிறைவன் தன்னை யாளப்பெற்றிலளேயென்று நெட்டுயிர்ப்பெறிந்துநின்றுன். சூரியனும்இருட்பகையையோட்டித்திசைகளை வென்று மேலேநின்று தனித்திகிரியைச்செலுத்தி யுயர்ந்தபுகழை நிறுத்தி என்றும் இந்நிலவுலகத்தி லெவர்க்கு முள்ளத்திருந்தானென்று சொல்லவிறந்த சக்கரவர்த்தியேபோலமறைந்தான். இவ்வாறுசூரியன்அத்தமானவரையையடையவெ மாலைக்காலத்திற்குரியநியமங்களைச்செய்துமுடித்து இரவில்நாணலினல் தொடுக்கப்பட்டமாலையைப்பரப்பித் தரையாகிய படுக்கையில்சீதையும் இரகுநாயகனும் நித்திரைசெய்தனர். வில்லேந்திய கையுடன் இளையபெருமாளும் சிறிதும் கண்ணிமைகொட்டாமல் புறத்தே காத்திருந்தனன். புற்றீசல்போலத்தன்னைச் சூழ்ந்துவருஞ் சுற்றமுடையபடகுவிடுவோர்தலைவனுகிய குகப்பெருமாள்தொடுத்த வில்லையுடையானும், மனம்வெதும்பி வருந்துகின்றுனும் இமையாத கண்ணையுடையானுமாகிநிற்கும் இளையபெருமா ளியற்கையையும் இரகுவீரனது இயற்கையையும்பார்த்துக் கண்ணீராறுகப் பெருக்கெடுக்கநின்றுன்.

இவ்வாறு நிகழ்கையில் *சூரிய னுதையமாயினன். இரகுநாயகனும் காலைக்கடனை முனிவருடனேசென்று முடித்துக்கொண்டு குகப்பெருமானை நோக்கி விரைவாகப் படகைக்கொண்டுவர வேண்டுமென்று கட்டளையிட அச்சொல்லைக்கேட்டு மனம்பதைத்து அருவிநீரைப்போற்கண்ணீர்ததும்ப உயிர்வருந்துமியற் கையுடையானுகிய குகப்பெருமாள் பெருமானையும் சானகியாரையும் திருவடிதொழுது இறைவனைப்பார்த்துநாங்களோபொய்ம்முறையில்லாதவர்கள்; நாங்கள்வசிக்குமிடமோ காடு, நாங்கள் ஒன்றுனும் குறைவுடையரல்ல, வலிமையுமுடையவர்களாகையால் உமக்குச் செய்யத்

* துறக்கமே முதலவாய தூயனயாவையேனும்
மறக்குமா நினைய லம்மா வரம்பில தோற்றுமாக்கள்
இறக்குநா ளிதுவென் பான்போன் முன்னைநா ளிறந்தான் பின்னுள்
பிறக்குநா ளிதுவென்பான்போற் பிறந்தனன் பிறவாவெய்யோன்.

இ-ள். துறக்கமே முதலாகிய தூயபொருள்கள் யாவையேனு மறக்குமாறு நினைதல் வரம்பகன்றன; பிரமனுற் படைக்கப்பட்ட மானிடர் இறக்குநாளிதுவென்றுசொல்லப்படுவான்போல முன்னைநாள் அத்தமானவரையில் மறைந்துசென்றுன்;

தருக்த விதமாகக் குற்றேவல்செய்து வருகின்ருேம். இவ்வாறு எங்களை வைத்துக்கொண்டு எங்களிடத்தே யிருக்கவேண்டுகின்றேன், எங்களிடத்திலே தேனும் தினையுமுண்டு, தேவரு முண்ணத்தகு மினியமாமிசமுண்டு, உமக்குத்துணையாக எங்களுமிருண்டு, விளையாடக்காடுண்டு, நீராடகங்கையுமுண்டு நானிருக்கும்வரையிலும் என் சிருங்கிபேரபுரத்தி லிருக்கவேண்டும், துகிலைப்போலுந் தோலிருக்கின்றது; மஞ்சம்போலப் பாணிருக்கின்றது, விரைவாயோடக்காலும் சிலையைக்கொண்டிருக்கும் கையும் உடையோம், ஆகாயத்திலுள்ள பொருளையேனும் கொண்டுவந்துகொடுப்போம், என்னிடத்திற் பன்னீராயிரம்பேர் வேடரிருக்கின்ருர்கள். எனக்கவர்கள் குற்றேவல் செய்வார்கள்; அவர்கள் தேவர்களினும் வலிமை படைத்தவர்கள், எங்களிடத்தே வந்து தேவரீர் ஒருநாளைக் கெழுந்தருளியிருப்பிரேயானல் யான் பெறும்பேறு சொல்லிமுடியாதென்று சொல்ல, அதைக் கேட்ட இரகுநாயகனும் சிறுநகைசெய்து பெருங்கருணையோடு நோக்கி நாம் புண்ணியநதிகளிலெல்லாந் தீர்த்தமாடிப் பெரியோரையெல்லாம்வழிபாடுசெய்து தாயாற் குறிக்கப்பட்ட பதினன்குவருஷமும் போனவுடனே மீண்டு உன் சிருங்கிபேர புரத்துக்கு வருவேமென்ருன்.

அக்கருத்தை யறிந்த குகப்பெருமாள் விரைந்துபோய் படகுகொண்டுவருகின்றேனென்று விடைபெற்றுச்சென்று கொண்டுவந்தேனென் றறிவிக்க, சிராமபிரானும் அந்தணர்களிடத்தே தான் விடைபெற்றுத் தம்பியோடும் சானகியாரோடும் அப்படகிலேறி விரைந்து படகுவிடக்குகனுக்குக் கட்டளையிட்டான். அக்குகப்பெருமாளும் அக்கங்கையில் படகைவிரைந்து செலுத்தவே, அது அன்னத்தின் நடைபோலுஞ்சென்றது, சிராமபிரானது பிரிவுர்கு அவ்வந்தணரெல்லாம் எரியுறுமெழுகாயேங்கி மனம் வருந்தினர். அப்படகேறிச்செல்கையில் சானகியும் சிராமனும் அக்கங்கை நீரைச்சிந்தி விளையாடினர், அப்படகும் வண்டைப்போலுஞ் சென்றது. அப்படகை மனாற்குன்ருகிய முலையையுடைய கங்கையும் அந்நீரிளுள்ள

---

பிற்றைநாளில் பிறக்குநா ளிதுவென்றுசொல்லப்படுவான்போலப் பிறவாத வெய்யோனுகிய ஞாயிறு தோன்றினன். எ-று.

நிரதிசய வின்பம் பயக்கும் வீடுபேறு கருதிநிற்பார் துறக்கமுதலாய யாவையும் கருதலாகாமையின் துறக்கமேமுதலவாய மறக்குமாகினையல் வரம்பில' என்றும் நிரயத்துன்பத்தை நோக்கியவழித் துறக்கவின்பஞ் சிறந்ததாகலான் 'தூயன யாவையேனும்' என்றும், உலகிற் பிறப்புக்களை ஞாயிற்றி னுதயமு மத்தமனமும்போன்றென உவமை முகத்தான் விளக்குவான் 'தோற்றுமாக்கள் இறக்குநாளிது வென்பான் போல் முன்னைநாளிறந்தான். பின்னை் பிறக்குநாளிதுவென்பான்போற் பிறந்தனன்' என்றும் இவனுக்கு நாடோறும் பிறத்தலிறத்தலியல்பன் றென்பார் 'பிறவா வெய்யோன்' என்று தற்குறிப்பேற்றமென்னு மணிநலம்படக்கூறினர். மறக்குமாகினையென்பதனை 'கற்றவாகடவான்' என்புழிப்பேராசிரியர் கூறியாங்குரைத்துக் கொள்க என்பானென்புழிச் செயப்பாட்டுவினை செய்வினைபோனின்றது; இதனை 'இல்வாழ்வானென்பான்' என்புழி என்பானென்பதற்குப் பரிமேலழகர் கூறலானுமுணர்க. தோற்றும் தல்வினைக்கும் பிறவினைக்கும் பொதுவான வினையேனும்ஈண்டுப்பிறவினையாய் நின்றது;தொல்காப்பியனெனத்தன்பெயர்தோன்றிஎன்புழிப்போல

யுடையகங்கையும் அந்நீரிலுள்ள இரத்தினங்கள்பிரகாசிக்கவும், தன்பாலுள்ள தாமரைபூத்த அலையாகிய கையினால்தானே ஏந்திச்சென்று அக்கரையில்விடுத்தாள். அக்கரையையெய்தியவுடன் சீராமபிரானும் தன்பாலன்புடைய குகப்பெருமானைநோக்கிச் சித்திரகூடத்திற்குப்போம் வழியாதென்றுகேட்க, பத்தியினால்தன்னுயிரையேனும்கொடுக்கும்பேரன்பேயுருவமாகியகுகப்பெருமான் சீராமபிரானைநோக்கித் தேவரீரோடியான்வரக் கட்டளையானால் இக்காட்டில் செல்லுதற்கருமையான விடங்களிலெல்லாஞ்சென்று பரிசுத்தமாகிய கனியுங் காயுந் தேனும் கொண்டுவந்து கொடுப்பேன். தாங்கள் வசிப்பதற் குறைவிடமமைப்பேன், மலைபோலுள்ள கவலைக் கிழங்கு முதலியயாவுங் கொண்டுவருவேன், வெகுதூரஞ்சென்று தித்திப்பாகிய சலங் கொண்டுவருவேன், யானே வில்லினமுடையேன் பயப்படவுமாட்டேன், நின்னடித்துணை யல்லது வேறு புகலிடமறியேனாகையால் உம்மைப் பிரிதற்கு மனங்கொள்ளேன், தேவரீருக்குத் திருவுளமேயானால் என் சேனைகளையு முடனேகொண்டு உம்மோடேப்போது நீங்காமல்வசிப்பேன், சத்துருக்கள் எதிர்ப்படுவாராயின் முன்னே நானிறந்துபடுவேன், உம்மைவிட்டுப் பிரியவேமாட்டே னென்று சொல்ல, அதைக்கேட்ட சீராமபிரான் அவனன்புக்கிரங்கி என்னுயிரனையானே! நீயே யென் தம்பி, இச்சீதையே நின்மதனி, இக்கடல் சூழ்ந்த வுலகமுழும் முன்னுடையதே, யானே உன் தொழிலுரிமையி னுள்ளவன், இதுவரையிலும் சக்கரவர்த்திக்கு என்னோடுநான்கு மக்களுடையானென்னுஞ்சொல்லே நிலைபெற்றிருந்தது. இனி உன்னோடு அவனுக்கு ஐந்துமக்களென்று சொல்லும்படி சிறக்கும், உன் தம்பியாகிய பரதன் யான் காட்டில்வசிக்குங் காலமெல்லாம் துன்பமடைந்துகொண்டே யிருப்பான், அத்துன்பமே யல்லது பகையென்பன யாவை! நீசென்று சிருங்கிபேரபுரமாகிய நகரில்வசிக்கும் சனங்களையெல்லாம் என்சொற்கடவாமலாண்டுவரவேண்டும். என்சொல்லைக் கடக்கவேண்டாம், நான் வடதிசைக்கு மீளுங்காலத்தில் உன்னிடத்தே வந்துபோகின்றேன், திருவயோத்தியுள்ள பந்துவர்க்கங்களைப் பாதுகாக்க உன் தம்பிபரதனும், இங்குள்ள பந்துவர்க்கங்களைப் பாதுகாக்க நீயுமல்லாமல்வேறியாரிருக்கின்றனர். உன்சுற்ற மென்சுற்றமல்லவோ? நான்துயரமடைவதுதகுதியோ! இச்சிருங்கிபேரபுரத்திலிருப்பவர் என்சுற்றமாகையால் என்சொல்லைக்கடவாமற்போய்ப் பாதுகாக்கவேண்டுமென்று சொல்ல, குகப்பெருமாளும் சீராமபிரான் சொல்லிய சொல்லைக்கடவாதவனாய்த் துன்பத்தைக்கடக்க முடியாமல் பிரிவென்னும் நோய் கொண்டானென்று சொல்லும்படி சிருங்கிபேரபுரஞ்சென்றான்; சீராமபிரான் சானகியாரும் தம்பியும் தன்னைத்தொடர்ந்துவரக் காட்டில் வெகுதூரம் நடந்துசென்றான்.

கங்கைப்படலம்

முற்றிற்று.

---

## வனப்புகுபடலம்.

கீழோர் அடையும் பொதுமாதர் மனம்போல ஈரம் உள்ளது இல்ல
தென்று அறிதற்கரிதாகியஇளவேனிற் பருவமானது சிராமபிரான்வரக்கண்டு
அமுதமாகிய குளிர்ந்த மேகத்தினது குயிலைக்காட்டியதெனச் சொல்லக்
கிடந்தது. சூரியனே இளநிலவெரிக்கவும் மரங்களெல்லாம் நிழலைத்தரவும்
மேகம் பனித்துளிவீசவும், தென்றற்காற்றோடு கலந்து மலர்மணம் வீசவும்,
மயிலினங்கள் தங்கள் சிறகைவிரித்தாடும் வழிகளைக்கடந்துபோகையில்சிராம
பிரான் சானகியாரை நோக்கிஇந்திரகோபம் கொன்றைமலர்களில்தங்கியிருப்
பது பொன்னிற்பதித்தமணிகளைப்போலத் தோற்றுகின்றனவென்றும்,வண்
டுகளேபாடுவோராகவும், மழையேவாத்தியமாகவும் கொண்டுநடிக்கின்றமயில்
கள் உன்சாயலைக்காணப் பலகண்களாற் காண்பதுபோலிருக்கின்றதென்றும்,
சிவந்த வாயுள்ள பசுங்கிளிகள் சிவந்த காந்தட்பூவிலேறி அதைக்கோதுவது
உன்கையிலேந்தியிருப்பதுபோலத்தோன்றுகின்றனவென்றும்,மயிலுமானும்
உன்சாயலைநோக்கித் தம்மினமென்றும் வந்தடைகின்றன வென்றும்,குராமல
ரும்பிடாமலரும் பூத்திருக்கின்றவிடத்தில் துயினீங்கியமயிலொன்றின் தூவி
யில் அம்மலர்களின் மணம் வீசக்கண்டு துணைபிரிந்த பேடையும் அச்சேவ
லோடுபிணங்கித் திரிகின்றனவென்றும், காந்தளினரும்பைக் கண்ணுற்கண்ட
மயில் அதைப்பாம்பென்றெண்ணியிருக்கிறதென்றும்,யானைக்கன்றும் சிங்கக்
குருளையும்,பகையற்றுப் பிரிவென்று சொல்லப்படுவதே யில்லாததால் சிநேக
மாக விளையாடுகின்றன வென்றும், பூங்கொம்புகள் எல்லாம் ஆற்று நீரில்
மூழ்குவன பெண்கள் நீராடுவதுபோ லிருக்கின்றதென்றும், வண்டுகள் கோங்
கமலரிலேறித் தூங்குவது பொன்தகட்டில் நீலரத்தினம் பதித்தாற்போலிருக்
கின்றதென்றும், தேனை வாயிற்கொண்டு கண்கொள்ளாத களிப்பினால் தாங்
கள் வேகமாகவரும் வழியையு மறியாமல் ஆண்வண்டுகள் குருடரைப்போல்
வர இசைகள் பாடிவரும் பெண் வண்டுகள் வழியறிவிக்கும் கண் போல
விளங்குவதென்றும், வேங்கைமலர்கள் அளகத்தில் கீழுள்ள நெற்றியி லப்பு
கின்ற சின்னமலர்கள்போலச்சிந்துவனவென்றும்,தென்றற்காற்றுவீசுவதனால்
பரந்தபராகங்கள் மலைக்கற்களிற்படிவது உன்தனத்தின்தேமலைப்போல விளங்
குகின்றனவென்றும், அடியிணைகள் கல்லில் நடக்கப் பொறுக்க முடியாதென்
றே மரங்களெல்லாம் இடையிடையே மலர்களைச் சிந்துகின்றன வென்றும்,
பூங்கொடிகளோடு கொம்புகள் துவள்வது உன்னிடைக்கு நாணியோவென்
றும், மலர்போன்ற அடிகளையொத்த தளிர்களில் தங்கியிருக்கும் வண்டுக
ளிவையென்றும், உன்கூந்தலையே யொத்திருக்கின்றன மேகங்களென்றும்,
உன்தோளையொத்திருக்கின்றன மூங்கில்களென்றும், பூவும் அரும்புஞ்சினையு
நெருங்கிப் பறவைகள் இடையிடையே யிருக்க பல நிறங்களையுடைய வல்லி
சாதக்கொடிகள் அளவில்லாதன நெருங்கி மானினங்களும் மயிலின் கூட்டங்
களும்குயிலினமும்வருகின்ற காடுகள்நெருப்பினையொத்திருக்கும்படி,தொழி
ல்செய்துள்ள ஆடைகள் அலைபோல் தோன்றுகின்றனவென்றும், சொல்லிக்

கொண்டே சானகியாரோடும்விளையாடிச் சீராமபிரான் எழுந்தருளிப்போகை யில் பொழுதுபோய்விட்டது, இதுபெரியோர்களுக்கு வாசஸ்தானமென்று சொல்லவே சித்திரகூடமென்பது இம்மலையோவென்று சொல்ல, அத்தரு ணத்திலே இவர் வருகையைக்கேட்டு மனமுவந்து நெடுநாள்செய்த தவமீடே றிற்றென்று பாரத்துவாசமுனிவன் அன்பொடும் இராகவனை எதிர்கொண்டுவந் தான். அம்முனிவரைக் கண்டவுடன் மலர்தூவி மும்முறை வலம்வந்துபணி ந்து நிற்க, அம்முனிவனும் இராகவனை மார்போடு மார்புபொருந்தத் தழுவி அப்பா; இவ்வுலகமுழுதாளும் பெருஞ்செல்வத்தை விட்டுவிட்டு எங்களைப் போலக் காட்டிற் றவஞ்செய்யத் தம்பியோடும் வருவானேனென்று சொல்ல, அதைக்கேட்ட இராகவனும் நடந்தசெய்தியனைத்தையும் ஒன்றுமொளியாமல் விண்ணப்பிக்க, பாரத்துவாசமுனிவன் கேட்டு விதிசெய்தகொடுமை! இதைப் போலும் வேறுண்டோ பெருநிலக்கிழத்தி தான் பல நோன்புநோற்றும் நீ யரசனாகவிருக்கப் பெறுமற்போயினளே, உன்னைச்சானகியும் தம்பியுந்தொட ர்ந்துபோகத் தனியேயனுப்பிவிட் டெவ்வாறு என்சிநேகனாகிய அந்தத் தச ரதன்மனந்துணிந்திருப்பான், எனக்கு உலகத்திலேதுன்பவின்பக்கூறுபாடுகள் இருப்பன சகசமே; நல்லசெய்கைகளும் தீயசெய்கைகளு மிருக்கின்றன, நாம் இங்கிருந்து வருந்துவதனாற் பயனில்லையென்று துணிந்து அன்னவர்களைத்தம் மிடத்திற் கழைத்துக்கொண்டுபோய் அவர்களிருக்க இடமுதவி அதிதிபூசனை க்கு வேண்டியவற்றைக் குறைவரநடத்திக் காய் கனி கிழங்கு முதலியவற்றை யும் வேண்டியமட்டுங்கொடுத்து இதவார்த்தைகளை அவ்விராம லட்சுமணர் களுக்குச் சொல்லிக்கொண்டு காலங் கழித்து வந்தான். அவர்களும் மனக் கிளர்ச்சியோடு மிருந்தார்கள். அப்படி யிருக்கையில் பொழுது விடியவே அப்பாரத்துவாச முனிவர் காலைக்கடனை முடித்துக் கொண்டு சீராமனை யுபசாரமாக அழைத்து தன்னருகேயிருத்தி சலசமூர்த்தியாயும் கனி காய் கிழங்குகள் மிகுதியாயு மிருக்குமிடமிது, தவஞ்செய்வதற்கு வாசயோக்கியமா யிருக்கும். இதைப்பார்க்கிலும் தகுந்தவிடம் வேறொன்றுங்கிடையாது, கங் கையும் சரஸ்வதியும் யமுனையும் ஒன்றாகக்கலக்கு மிடமாகையால் இதற்குத் திரிவேணிசங்கமம் என்று பெயர். அதனால் இதைவிட்டுப்பிரியாமல் வாசஞ் செய்கின்றேன். இது பிரமதேவனாலும் பெறுதற்கருமையான தீர்த்தமாம். இது எங்களைப்போன்றவர் தாத்ததல்ல. இங்கேவாசஞ்செய்வதேதக்கதென்று பாரத்துவாசமுனிவன் சொல்ல, இதுவோ அயோத்திக்கு வெகுதூரமான விடமேயல்ல, இங்கேயே யான்வாசஞ்செய்வேனானால் என்னை அயோத்திநக ரத்திலிருக்கும் சனங்களெல்லாம்வந்து நெருங்கி வருத்துவார்களென்றான்.

அதைக்கேட்ட பாரத்துவாசமுனிவன் ஆனால் நீகேட்ட அச்சித்திரகூட மென்பது இதற்குப்பத்துக்காதவழி தூரத்திலிருக்கின்றது. அதுதேவர்களும் வணங்குதற் குரியது. தேவலோகத்தைப் பார்க்கினும் மனோரம்மியமாயிரு ப்பது. நீமனவிருப்பங் கொண்டிருப்பதனாற்போகலாமென்று விடைகொடுக்க அவரை வணங்கி விடைபெற்று மத்தியான காலத்தில் காளிந்தி நதியைக்கண் டார்கள். அந்தநதியைக்கண்டவுடனே நீறுபூனைந்த அழகியமேனியையுடைய

இராமலட்சுமணரிருவரும் சீதையுடன் அந்நதியில் நீராடிச்சுவைமிகுந்த காய் கனி கிழங்குகளையுண்டு நீரருந்தி இளைப்பாறினார்கள். பிறகு இளையபெருமாள் இந்நதியையெவ்வாறு கடப்பதென்று அங்கிருந்தமாணைக்கொடியாலும் மூங்கிலாலும் தெப்பங்கட்டித் தன்திருத்தமையனையும் சானகியாரையும் ஏறச்செய்து தான் அவர்களை அக்கரையைக் கடக்கச்செய்தான். அதைக்கடந்து சிராமபிரான் தன்தம்பியும் சானகியாரும் பின்றொடர வெகுதூரம்நடந்து ஒரு பாலைவனத்தை யடைந்தான். இப்படிப்பட்ட பாலைவனத்தை சானகியார் கடக்கமாட்டாளென்று நினைந்தபோது சூரியன் சந்திரன்போலக் கதிரைச் சிந்தினன். உலர்ந்த கொம்புகளும் தழைத்தன, பக்கத்திலிருந்த கொடுங்கனலும் தாமரைவனம்போ லிருந்தது. வறுத்து விதைத்தாற்போன்றிருந்தபருக்கைக்கற்களெல்லாம் பறித்து விதைத்த மலர்போலிருந்தன. பிடுங்கியெறிந்த கொடிகளெல்லாம் இளந்தளிரீன்றன. பெரும்பாம்புகளின் விஷப்பற்களும் அமுதஞ்சிந்தின. மேகங்களொன்றுசேர்ந்துகுளிர்ந்தநீர்த்துளிகொண்டுவந்து குமிறின. வேடர்களும்முனிவர்களைப்போலத்தோன்றினார்கள். புலியின்முலைப்பாலை மானினங்களுண்டன. மலைத்துவாரத்திற்கிடந்து வயிறுவெந்து வருந்தும் பாம்புகள் அல்லற்படாமல் கடலிடத்தே தங்கியிருந்தாற்போ லிருந்தன. புற்கள் பசுமிறக்கம்பளம் பரப்பிக்கிடந்தாற்போ லிருந்தன. மயில்கள் நாடக மாதரைப்போலப் பலவிடங்களிலும் நடனஞ்செய்து கொண்டிருந்தன. வண்டுகள் பாணரைப்போலப் பாடிக்கொண்டிருந்தன. அகாலமாயிருந்தும் கனிகள்பழுத்தன. நல்லபரிமளம் காரணமில்லாமலும் வீசிக்கொண்டிருந்தன. மலர்க்கொம்புகள் அலங்காரம்பெற்ற மாதரைப்போலத் தோன்றின. ஒழுக்கத்தை யல்லாமல் செய்யத்தக்கதவம் வேறுண்டாயிருக்குமோ. வேடர்களிருப்பிடம் இருடிகளிருப்பிடமாயின. பலவிடங்களிலும் இந்திரகோபங்கள் தோன்றியிருந்தன. பேடையோடு கூடியிருக்கும் குயிலினங்கள் பலவிருக்ஷங்களிலும் தங்கியிருந்தன. இவ்வாறு அவ்விராமலட்சுமணர்கள் சீதாபிராட்டியாரோடு வனத்தைக்கடந்து சித்திரகூடத்தைக் கண்டார்கள்.

வனம்புகுபடலம்
முற்றிற்று.

---

## சித்திரகூடப்படலம்

---

இனியும் தேவர்கட்கும் நமக்குமொரு புடையொத்து நின்ற பரிசுத்தனாகிய சிராமபிரான் சானகிக்கு அச்சந்தனமா மடர்ந்திருக்கும் சித்திரகூடமலையின் சிறப்பையெல்லாம் எடுத்துச்சொல்லத் தொடங்கி வாளும் வேலும் விட்டெறிவினாற்போன்ற கண்ணையுடைய மயிலனையாளே! ஏலமுந்தமாலமும் தொடரப்பட்டிருக்கிற இம்மலையிலே தூங்கிக்கொண்டிருந்தயானையும்நீருண்ட காளமேகமும் வேற்றுமைதோன்றாமையால் இன்னதெனத் தெரியா திருப்பதையும், மலையினுச்சியில் குதிக்கின்ற ஆடு அம்மலையில் பச்சையொளி சூழ்வதனால் சூரியன் தேரிற் கட்டியிருக்கும் பச்சைக் குதிரைபோல் விளங்கு

வதையும், யானைகளைப் பசிகொண்டகாலத்தில் விழுங்கிவிடும் மலைப்பாம்புக ளின் தோலுரி இம்மலையிலுள்ள மூங்கிலைச்சுற்றிக்கொண் டமைவதனால் நமது திருவயோத்தியிலுள்ள மாளிகைகளின்மேல் அசையும் துகிற்கொடிபோலத் தோன்றுவதையும், பவளமணித்தடங்களிலும் மற்ற இடங்களிலும் நெருங்கி கவரிமானினது பானிறமுள்ளவால் அசைவது பவளமலையின்மே லிருந்து வரும்அருவியையொத்திருப்பதையும், இம்மலைசந்திரமண்டலம்வரையும்போ யெட்டியிருப்பதனால் சந்திரசேகரனைப்போலவும்,இம்மலையினுச்சியிலிருக்கும் மணிச்சுடர் அதன்சுற்றையிற் சொருகுவதனால் சிவபெருமானதுசடையிலிரு க்கும் கங்கையின் தோற்றத்தையும்; இம் மலையிலிருக்கும் மலைப்பாம்புகள் மணியோடு விளங்கிய யானை வேங்கைமலரோடு நெருங்கி விளங்கிநிற்பது நெற்றிப்பட்டமணிந்ததையும், சந்தனமரங்கள்நெருங்கி இம்மலையி லிருப்பது சந்திரனைத் தான் செல்லுங்கதியைத் தடுப்பதையும், மிகுந்த அன்பினால் தழைகளைக்கொண்டு வண்டுகளை யோச்சித்தேனை முழைமினின்றும்வாங்கி இளம்பிடிக்கு மதயானை தருவதையும், இறைவன் மாயையிற்புகுந் தடங்கினு ஞானும் இந்திரிய நிக்கிரகஞ்செய்தவர்க்கு மறையாததுபோலஒளித்துக்கொ ண்டிருந்தாலும்பளிங்குக்கற்பாறையில்தம்முருவந்தெரிகின்றபரிமுகமாக்களை யும்,தங்கள்கணவரைக்கூடாமலும் தங்கள்மனங்கொதிக்கப்பிணங்கிக்கொண்டு யிருக்க அவர்கள் மனமுருகும்படி கின்னரமிதுனமென்னும் பறவைகள்பாடு வதையும், கொடிகள் தாவுகின்ற மூங்கில்கள் தாக்குவதனால் வழிந்திழிகின்ற தேன்குறவர் கவலைக்கொடிகளைக் கல்லி யகுழிகளை நிறப்புவதையும்,மிகுந்த அன்பால்இனிமையாக நடித்த பெண்குரங்கு அருவி நீரைக்கொண் டெறிய அப்பாற்சென்று ஆண்குரங்கு மின்னு முழக்குமவற்றது தொகுதியுமுடைய மேகத்தையுதிர்ப்பதையும், சீறுகின்றவெங்கதிர் நெருங்கிப்பேராமலுந்திரியா மலும் மாறுபடுதலில்லாத மண்டலமாக நிரம்பிய மணிகற்பாறை வேறொரு சூரியனைப்போல பிரகாசிப்பதையும் நீலநிறத்தையுடைய வண்டின் கூட்டங் கள் படிந்தெழுதலினால் வளைந்துடனிமிர்வதாகிய வேங்கைமரத்தின் பூங்கொ ம்புகள்பொன்மலர்சொரிந்துகாலில்வீழ்ந்துதொழுதெழ அதுபோலிருப்பதை யும்,இம்மலையினுச்சியில்தினைப்புனங்காக்கும் குறப்பெண்கள்குருவியினங்களை யெறியும் குருவிந்தக்கற்கள் வானில் நின்றும் நட்சத்திரங்களைப்போல வீழ்வ தையும்வேடர்கள்மழுவாலெறிந்தஅகிற்கட்டைகளின்பசும்புகைப்படலம்அரி யவேதங்களையுணர்ந்தபிராமணர்கள் ஆகுதிப்புகையோடுகலந்து மலைக்கொழு ந்தைப்போலத்தோன்றுவதையும்,சுவர்க்கலோகத்திற்செல்லுங் கங்காநதியின் மீன்கள்தோன்றினாற்போல நீர்வறண்டகாட்டாற்றின்கண் கூட்டமாகியஇரத் தினங்கள்பிரகாசிப்பதையும், வித்தியாதரமாதர் தங்கள் நாயகரோடு பிணங்கி யதனால் பஞ்சளாவிய அவருடைய சிறியபாதச்சுவடுகள்மேகமளாவிய மாணி க்கப்பாறையின் மறைவனவற்றையும், செம்மையாகவே மரகதப்பாறையின் தெரிவனவற்றையும் கொழித்தமணிகளையடித்துவரும் அருவியோடு இழுத்து வருவனவாகிய அரமகளிர் கூந்தலிற் கழித்துநீங்கிய கற்பகநறுமலர்மாலையும், வேடர் தினைப்புனங்காக்கும் பறையையெடுத்து ஆண்குரங்கு கடிப்பதையும்,

பிறையைவெட்டிப் பிடித்து இதற்கிது பிழையென்று அதன் களங்கத்தைத் துடைக்கும் பேதைமையையுடைய வேடப்பெண்ணையும், பலகாலம் தம்கணவனைப் பிரிந்தாரென்பதை நமக்கறிவிப்பார்போலக் கறுத்திருண்ட மலைச்குழலில் தெய்வப்பெண்கள் படுத்திருந்த தளிராகிய படுக்கைகளையும், வேங்கைமரத்தினும் கோங்கமரத்தினு மூசல் ஆடிக்கொண்டிருந்த வேடப்பெண்கள் பாடிக்கொண் டிருந்த குறிஞ்சிப் பாட்டைக் கேட்டு அசுணமாவருவதையும், மலையருவியில் அரம்பையர் நீராட அவ்வருவிகலவையும் சாந்தும் குங்குமமும், கற்பகமுமாகிய இவற்றினால் பரிமளமுண்டாவதையும், இம்மலையில் சூரியன் மத்தியானத்தில்வர இம்மலைக்குப் பொன்முடிதரித்தாற்போல் விளங்குவதையும், நீலரத்தினக் கற்பாறையில் மூங்கிலிற்றோன்றிய முத்தங்கள் சிதறுண்டுகிடப்பன செவ்வானில் தாராகணம்போலத் தோன்றுவதையும், முழுதுமலர்விரிய அன்றலர்ந்த முருக்கிடத்தே நெருங்கிய சோலையானது தீப்பற்றிக் கொண்டதுபோலத் தோன்றுவதையும், தொளையைக்கொண்ட தாழ்ந்த தடக்கையாகியபெரிய துருத்தியால்தூக்கி அளவில்லாத மூப்பினராகிய அருந்தவர்க்கு அருவிநீரைக் கொண்டுவந்து யானைகள் கமண்டலத்திற் சொரிவதையும், இடுகுகண்ணினை யுடையவரும் இடர்கின்ற மூப்பினருமாகிய மாதவர் வழிசொல்லத் தங்கள் நீண்டு வளைந்த வாலை நீட்டி யுருகியமனமுடைய ஆண்குரங்கு வழிகாட்டிவருவதையும், பிராமணர்களுடைய ஆகுதிக்கு இயைந்திருக்க, மயில்கள் தம்முடைய தோகையைக் கொண்டு எரியெழுப்புவதையும், பிராமணருடையமார்பினுக் கிசையநாடிச் சிலம்பிநூல் நூற்பதையும், பெண்குரங்குகள் மாங்கனி கொண்டு வருவதையும், வாழைக்கனிகளை அன்பாய் ஆண்குரங் களிப்பதையும், பன்றி நிலத்திற் கிழங்கைத் தோண்டிக்கொடுப்பதையும், சாமை தினை மூங்கிலரிசி முதலியவற்றை மாதவ ராச்சிரமந்தோறுஞ் சென்று கிளிப்பிள்ளைகள் கொடுத்து வருவதையும், யானையை விழுங்கிவிடும் மலைப்பாம்புகள் படித்தரிந்தவர்போ லடங்கி முனிவர்கள் மிதித்தேரப் படிகள்போ லிருப்பதையும், முற்றத்துறந்த முனிவர்கட்குத் துறக்க நாட்டைக் கொடுக்க ஆகாயத்தைத் தூர்ப்பனபோலப் பிரகாச மிகுந்த விமானங்கள் போவனவற்றையும் வருவனவற்றையும், தம்முடம்பு வருந்துகின்ற பிடியானைகளை அடைந்து ஆண்யானைகள் துதிக்கைகள் நோகாமல் தாங்கிநிற்பதையும், உன்னிடையே மின்னலென் றெண்ணி நாகங்கள் முழையிற்போய்ப் புகுந்து கொள்வதையும், சிங்ககர்ச்சனைபோல மேகங்கள் குமுறக்கேட்டு மதயானைகள் வீறிட்டோடுவதையும் பாரென்று ஒவ்வொன்றையுஞ் சொல்லிக் காட்டிக்கொண்டேபோய்த் தன் வரவைநோக்கி அருமையான முனிவர்கள்எதிர்வரச் கண்டு அவர்களை வணங்கி அவர்களாலுபசரிக்கப்பட்டு அவர்களுக்கு விருந்தாக விருந்தான். இது கிடக்க;

அப்போது உதயகிரி யாகிய திருமால் பகையாகிய இருளென்னும் அவுணர் அழிய அத்தமானகிரியாகிய காலநேமிமேல் சூரியனாகிய சக்கரப் பிரயோகஞ் செய்தது போலச் சூரியனும் அஸ்தமான மலையை யடைந்தான். அச்சக்கரம் அவ் வரக்கனுடைய உடம்பில் தாக்கப்பட்டபடியால்

பரந்த உதிரம்போலச் செவ்வானம் எங்கும் பரந்தது. அவன் வாயினின்று நீங்கி பூமியில் கோரப்பல்லைப்போலச் சந்திரன் உதயமானான். சூரியன் அஸ்தமானமாகவே எங்களுக் கெல்லாம் முகம்போல விளங்கியிருந்த தாமரைகளெல்லாம் குவிந்தன, நக்ஷத்திரங்களைப்போலப் பிரகாசித்துக்கொண்டிருந்த வெள்ளிய ஆம்பற்பூக்கள் வாயைப்போல தடாகங்களில் எல்லா மலர்ந்தன. ஆண்குரங்குகளும் பெண்குரங்குகளும் மரங்களைநோக்கிச் சென்றன. யானைகளும் பிடிகளும் சாரலைநோக்கிச் சென்றன, குற்றமில்லாத சகுந்தப்பறவைகள் கூடுகளை நோக்கிப்போயின, இப்படிப்பட்ட சமயத்தில் அறிவினால்நோக்கப்படும் இறகுநாயகன் அந்தியைநோக்கினின்றான், ✻ சிலமலர்கள் மலர்ந்தும், சிலமலர்கள் குவிந்துகொண்டுமிருக்க இரகுநாயகனும் சானகியும் இளையபெருமாளும் சந்தியாவந்தனஞ் செய்துகொண்டு மாலைக்காலம் கழிந்ததே சானகியுடன் தான் திருப்பாற்கடலே வந்திருந்ததென்று சொல்லத்தக்கதாகி இளையபெருமாளால் செய்யப்பட்ட பன்னசாலையி லெழுந்தருளினான். பின்பு அயோத்தியர் பெருமான் மிதிலைநாட் டன்னத்தின் பாதங்களும் இங்கே நடக்கப்பெற்றன, தம்பிகைகளோ பன்னசாலை கட்டிவருந்தினவென்றால் யாதுமில்லாதவர்க் கியையாதவை யாவையென்று நினைத்துக்கொண்டு இளையபெருமாளைப்பார்த்து கண்ணீர் சொரிந்துகொண்டே இப்பன்னசாலையைக்கட்ட எங்கே கற்றுக்கொண்டாய்! எனக்குச் செல்வத்தைக் கொடுத்த நமதரசன் ஆணையால்காடுவாழும் இந்நல்லறம் நடத்திச் சூரியனைப் போல விளங்கும் புகழைத் தேடிக்கொள்ள உனக்குத் துன்பம் வெகுநாளைக் குண்டாக்கினேனென்ன, இளையபெருமாள்குறிப்பாகவே துன்பத்திற்கங்குரம் முன்னமே தோன்றியதென்று தெரிவிக்க, அறத்தைக்கடந்து நடப்பது முடி

✻ மய்யறு நறுமலர் மலர்ந்த வாஞ்சில
கொய்யுறு நறுமலர் குவிந்த வாஞ்சில
அய்யனொ டிளவற்கு மமிழ்த னாளுக்குக்
கய்களுங் கண்களுங் கமலம் போன்றவே.

குற்றமற்ற நறியமலரிற் சிலமலர்ந்தன, கொய்தற்குரிய நறியமலரிற் சிலகுவிந்தன, ஸ்ரீராமபிரானோ டிளையவனுக்கும் அமுதன்னவளாகிய சானகியாருக்கும் கைகளும் கண்களும் தாமரைமலர்போற் குவிந்தன. எ-று.

ஆண்டெய்தியது மாலைக்காலமாகலி னன்றே 'மய்யறு நறுமலர்மலர்ந்தவாஞ்சில' என்றும், 'கொய்யுறு நறுமலர் குவிந்தவாஞ்சில' என்றுங் கூறுவாராயினர். அவற்றுள் சில புலரியிலெழுந்து நீராடிக்கொய்த லியல்பாகலின் 'கொய்யுறும்' என்றும், இஃதங்ஙனமல்லாது இன்பநலமொன்றனையே யுணர்த்தற் கறிகுறியாக நின்று மலர்தலின் 'மய்யறும்' என்றும் அடைகொடுத்தும். கமலம் குவித லியல்பாதலின் 'கய்களுங் கண்களுங் கமலம்போன்றவே' என உவமைமுகத்தாற் கூறினமையானே இளையவனோ டய்யனு மமிழ்தன்னாளுந் துயில்கொண்டாரெனக் கொள்ளின் இளையவன் பதினான்காண்டுந் துயிலாமையின் மாறுகொளக்கூறலாக முடிதலானும், பின்னர்ச் சாலைவந்தெய்தினானென்றும், முன்னரே அந்தியை நோக்கினானென்றும் கூறிப்போந்தமையானும், மாலைக் கடன்செய்வான் கைகூப்பிக் கண்முகிழ்த் தாயிரமோலி இறைவனைச் சிந்தித்தாரெனக் கொள்ளக் கிடந்தமை காண்க. அமிழ்து-வடசொற்சிதைவு.

யாதுஎன்று அவாது துன்பந்துடைத்துத் தம்பியைப் பின்னும் பார்த்துஅரசச் செல்வத்திற்காயினும் ஒருவரம்புண்டு, இதுவோ சிந்தையுமொழியுஞ்செல்லாகில்லைத்தாகிய அந்தமி லின்பத்தினையடைய அழிவில்லாச் செல்வமல்லவோ வென்று தெளிவித்துத் தேவர்களும் கைதொழத் தவஞ்செய்துகொண்டிருந்தான். இனி வசிட்டமுனிவர் கொடுத்த திருமுகத்தைக் கையிலெடுத்துக்கொண்டு கேகயதேசஞ்சென்ற தூதர் செய்தியைச் சொல்லுகின்றேன்.

சித்திரகூடப்படலம்

முற்றிற்று.

---

## பள்ளியடைப்படலம்.

---

தூதுவர்களோ வசிட்டமுனிவர் எழுதிக்கொடுத்த திருமுகத்தை யெடுத்துக்கொண்டு இரவும் பகலுநடந்து கேகயதேசத்தை யடைந்து பரதராசனது திருமாளிகையைச் சேர்ந்து காவற்காரரைநோக்கி நாங்கள் வந்தமையைப் பரதராசனுக் கறிவிக்கவேண்டுமென்று சொல்லியனுப்ப அவர்களும்இவர்கள் வரவைத் தெரிவிக்கக்கேட்டு அவர்களை வரும்படி கட்டளையிட்டான். அவர்களுஞ்சென்று திருவடிதொழுது நமது அரசர் பெருமான் சுகமாயிருக்கின்றாரோ, எமது பெருமானாகிய இரகுநாயகனும் இளையபெருமாளும் சுகமாயிருக்கின்றாரோ வென்ன அவர்களும் சுகமாயிருக்கின்றார்க ளென்றுசொல்ல தயரதனையும் இரகுநாயகனையும் தியானித்துஅவர்களிருந்த திசைநோக்கிவணங்கினின்றான். தூதுவரும் அரசர்பெருமான் முத்திரையிட்டிருக்கும்திருமுகத்தைக்கொடுக்க,அதைவாங்கிமனமுருகிநோக்கி முடிமேற்சூடிக்கொண்டு அதையவிழ்த்து வாசித்துப்பார்த்து அதைக்கொண்டுவந்துகொடுத்த தூதர்களுக்கு வேண்டிய திரவியங்கொடுத்து மயிர்க்குச்செறிந்து தன் திருத்தமையனைக் காணவேண்டுமென்னும் ஆசை அதிகப்படத் தன் மாதாமகனாகிய கேகயராசனிடத்தே விடைபெற்றுத் தன் தம்பியோடு மேறி நாளுங் கோளுங் குறியாமல் தன்னை யானை குதிரை தேர் காலாள் என்னும் நால்வகைச் சேனைகள் சூழவும் அரசர் கூட்டங்கள் புடைசுற்றவும் சங்கத்தொனி முழங்கவும் பேரிகைகள் கடல்போலொலிக்கவும் புறப்பட்டு ஆறும் காடும் மலையும் நடந்து ஏழாநாள் கோசலைநாட்டை யடைந்தான். அத்தேசத்திலே வயல்கள் ஏர்பூட்டி யுழாமலிருந்தன, வீரர்கள் தோள் மாலையிழந்திருந்தன, வயலிலுள்ள நெல்லும் நீர்பாய்ச்சாமலிருந்தன, திருமகள் தாமரையைநீங்கினாற்போல அந்நாட்டை நீங்காதிருந்தாள். பிதிர்ந்துசாறுதுளைகளி லெல்லாம் நெருங்க இனிமையான கனிகளோ முதிர்ந்துபோய்க் கொய்வா ரில்லாமையால் சிதர்ந்து சிந்தின, மலர்க்கூட்ட மெல்லாம் உலர்ந்துதிர்ந்து கிடந்தன, எந்தகாலமிது இதற்காமென்று ஆராய்ந்து அறியும் மள்ளரில்லாமையால் மாம்பழச் சாற்றினால் செஞ்சாலிமுளைத்தது. கிள்ளைகளும் தூதுசெல்லா திருந்தன, அழகிய வீதிகளில் பேரிகை குடமுழா முழக்கநீங்காதிருந்தன, திருவிழாவு நடக்க

வில்லை. புள்ளாங்குழற் பாடலொழிந் திருந்தன, நாடகசாலைகள் ஆடலொழிந்திருந்தன, நீராடுதலும் செய்யாமலிருந்தனர்; மாலைகள் சூடாமலிருந்தனர், வீடுகளில் மங்கலவள்ளை யென்னும் பாட்டைப் பாடாதிருந்தனர்; முகம் நகையிழந்திருந்தன, வீடுகளெல்லாம் வாசனைகமழ்கின்ற அகிற்புகையிழந்திருந்தன, விளக்குகளெல்லாம் அழற்சிகை இழந்திருந்தன, மாதர்கள் கூந்தல்கள் மலர்மாலை இழந்திருந்தன, அலர்ந்த பயிர்கள் நீர் செல்லும்வழியிற் சலம் செல்லாமையால் உலோபிகள் கடைத்தலைவாயிலில் வருந்தும் யாசகர்களை யொத்தே யிருந்தன. இவ்வாறு அத்தேசம் பொலிவிழந்து ஆவி நீங்கிய உடல்போலிருந்தது. இவ்வாறு அத்தேசத்தைப் பார்த்துக்கொண்டு இதென்ன? இங்கே நடந்ததுன்பச்செய்தியொன்றுந்தெரியவில்லையேயென்று நினைத்துத்தான் தீங்கானகாரியங்கேட்கவிருக்குமென்றுநின்றுபெருமூச்செறிந்துவிரைந்து தேரேறிச்சென்று நகரவாயிலைக்கடந்துநீயுலகமுழுதும்சென்று வருந்துகின்றாயாகையால் இங்கே தங்கிப்போவென்று சூரியனைக்கிட்டியழைப்பதுபோன்ற கொடியின் கூட்டங்களைக்காணுமலும் புசமைத்தேடிச் சம்பாதித்த பொருள்களையெல்லாம்கொள்ளைகொள்ளுங்கோளென்று அழைப்பதுபோன்றபேரிகையோசைகேளாமலும், யானைகளையும்பிடிகளையும்செல்வங்களையும் தியாகங்கொடுப்பவர் கொடுக்கப்பாடுவோர் பெற்றுப்போவதும் பசுக்களையும் யானைகளையும் குதிரைகளையும் செல்வத்தையும் பிராமணர்கள் தானமாக வாங்கிப்போவதும் இல்லாமையைப் பார்த்துக்கொண்டே இது இராசதானிபோ லிருக்கவில்லையேயென்று தம்பியைநோக்கி இந்நகரம் திருநீங்கிய மாநகரம்போல் இருப்பதுகாணென்று பரதாழ்வான் சொல்ல; இத் திருநகரத்தில் நமக்குண்டான துயரமொருவகையன்று, ஊழிவாழ்நகரம் திருநீங்கிக் கிடக்கின்றதென்று இரண்டு கைகளையும் சிரமேற் குவித்துக்கொண்டு தம்பி வணங்கிச்சொல்ல பின்பு இருவரும் இராசவீதிகள் எல்லாம் கடந்து தம் பிதா யினிதிருக்கும் மாளிகையை யடைந்தனர். பரதாழ்வான் விருப்பத்தோடடைந்து அவரிருக்குமிடமெல்லாம் தேடியும் காணுமல் அருமையா யிருக்கின்றதென்று ஐயமடைந்து சிற்கையில் அவ்வாறுதந்தையைத் தேடித்திரியும் பரதாழ்வானை உமது தாயார் அழைக்கின்றனர், எம்மோடு வருகவென ஒரு தோழி யெடுத்துக்கூறவே, அதைக்கேட்ட பரதாழ்வானும் அவ்வாறே தன் தாயிருக்கும் இடத்தையடைந்து அவ்வன்னையை வணங்க, அவளை மார்புறத் தழுவியெடுத்து என் தந்தை தாய்மார் தங்கைமார்சுகமேயிருக்கின்றனரோ! என்று கேட்டனள்; அதற்குப் பரதாழ்வானும் அவர்கள் சுகமாவே யிருக்கின்றனரென்று சொல்லிவிட்டு என் தந்தையைக்காண ஆசைகொண்டிருக்கின்றேன், அவர் எங்கிருக்கின்றனர்? கட்டளையிடவேண்டுமென, அதைக்கேட்ட கைகேசியும் சிந்தையில் துயரமேயற்று சம்பரன்முதலிய அசுரரைக்கொன்று குவித்த படைகளையுடைய அவ்வரசர் பெருமான் தேவர்கள் தன்னைக் கைதொழுது வணங்க, சுவர்க்கலோக மடைந்தான்; அதற்காக நீவருந்தவேண்டாமென்றாள். அச்சொல்லைக்கேட்ட பரதாழ்வான் தன்னை யறியாமல் உயிர்ப்படங்கி இடியால் மராமரம் வேரோடும் வீழ்ந்தது

போல் பூமியில்வீழ்ந்து புரண்டழுது வாயொளி மழுங்கவும், தன் தாமரை மலர்போன்ற கண்களினின்றும் துன்பக்கண்ணீர் பெருக்கெடுத்தோடவும், கொடியநெருப்பைக் காதிற் சொருகினுலொத்த இக்கொடுஞ்சொல்லை நீயல்லாமல் இன்னொருவ ரெடுத்துச் சொல்லவும் நினைப்பாரோவென் றெழுந்தேங்கியிரங்கிப் பின்னும் விழுந்து விம்மி வெய்துயிர்த்துப் புலம்பலாயினன்.

அறத்தை வேரறுத்தே அருளைக்கொன்றனை! சிறந்த நின்றண்ணளியையழித்து இறந்தனையென்றால் நீ நீதியைமறந்தவனாகின்றனையே! உனக்கிதைப் பார்க்கிலும் இழிவும் வேறுண்டோ? சினந்தவிர்ந்துங் காமத்தையவித்து மதற்கு இனமாகிய மயக்க முதலியவற்றையும் களைந்தும் யாவருடைய மனத்திற்கிசைந்த மார்க்கத்திற் செல்லு மீகையாளனே! மறந்துபோய் உனக்குற்றமார்க்கத்திற் செல்லுதல் ஒழுக்கநெறியாமோ! சூரியன் முதலிய முந்தையோர் பழங்கதையையும் புதுக்கிய தலைவனும், கண்ணுதற் பெருமானுடைய மலைபோன்ற பினாகமென்னும் வில்லின் பெருமிதத்தையு மழித்தவனுமாகிய உன்மகனை யெவ்வாறு பிரிந்துபோய்விட்டாய்! நடுவு நிலைமையிலேயே ஆஞ்ஞா சக்கரத்தை யுருட்டிய அருமையாளனே! இவ்வுலகில் எவ்வழி நோக்கினும் ஏற்போ ரில்லாமைநோக்கி அத்துறக்கநோக்கிநடந்தனையோ! அறுபதினாயிரம்வருஷம் உன்னுடைய வெண்கொற்றக் குடைநிழலில் நிற்பனவும் நடப்பனவுமாகிய எவ்வகையுயிரையும் தங்கச்செய்தமையால் இப்போது அவைகள் வருந்த நீ கற்பகத்தருவினது நிழலை விரும்பி நடந்தாயோ! நீ இருக்குமிடமொழிந் திவ்வுலகத்தைவிட்டுப் போயினையே! தேவர்கள் வந்து உன்னுடைய காற்கீ ழொதுங்கினர்களோ! சம்பராசுரனைப்போன்ற அசுரர் இன்னும் அத்துறக்கநாட்டி லிருக்கின்றார்களோ! அதனால் அத் துறக்கநாட்டைச் சென்றடைந்தாயோ! உனக்கிவ்வுலகத்திற் பல அரசர்கள் கொடுத்துவந்த திறைப்பொருளை அந்தணர்கட்குக் கொடுத்துதவித் தேவர்கள் பொருட்டு அசுவமேத முதலிய யாகங்களைச்செய்து அவர்களுக் காக்கிய உதைத்தை யடைந்து தங்கவில்லையோ! ஏருறப்புயர்ந்த மும்மதக் களிற்றையுடையானே வாழ்வினையுடைய இராகவன் வறியவன் கையைப்போலேந்த வலிமையுள்ள அழகிய உன் தோளினின்றும் நீங்காத ஆஞ்ஞாசக்கரத்தை இனி அவனுக்குக்கொடுக்க எண்ணியோ நடந்துபோயினை! தவத்தினைப் பற்றினையல்லை! நீ பெற்ற மகனுக்கு முழுதுலகாளு மரசுரிமையளித்துமுறைமையாக வடைந்த அவ்விராசகுமாரனது மகுடாபிஷேகக் கோலங்காணவும் உன் பெரியகண்களாற் பெற்றிலைபோலு மென்றே பலவாறு பாதவித்துக்கொண்டு தொடுமணற் கேணியிற் சுரந்த நீர்போலக் கண்ணினின்றுந் துன்பக்கண்ணீர் பெருக்கெடுப்ப மனமுருகும் பரதன் தன்னைத்தானே தேற்றிக்கொண்டு ஒருவகைத் தேறியபின் தாயைநோக்கி என் தந்தையும் என்தாயும் என்கடவுளும் என்தமையனும் அந்தமில் பெருங்குணத்தருட்கடலாகிய சிராமனாகையால் நானவனை வழிபாடுசெய்தா லல்லாமல் என் சிந்தைத்துயரந் தீராதென்றான்; அவ்வாறு சொல்லிய மகனைப்பார்த்து சிராமனும் தம்பியும் சீதையுடன் காடுசென்றனரென்ன; அவன் வனசாரியாகப் போயினு

னென்ற சொற்கேட்டு நெருப்புண்டான்போல நினைந்திருந்து வினவகை யெத்திறத்தது! இன்னமும் விளைவதாகிய துயரங்கள் என்காதாற் கேட்க எவ்வளவோ வுள்ளனவென்று சிந்தித்து விம்மியேங்கியிருந்த பரதாழ்வான் தாயைநோக்கி என்தமையன் காடுசென்றதுதான் தீங்குசெய்ததனாலோ! தெய்வஞ்சீறியோ! அல்லது விதியினாலோ! யாதினாலென்றறியேன், சீராமன் தீயகாரியங்களைச்செய்வானேயாயின் அவை உலகத்திலுள்ளார்க்குத் தாய் செயலென் றெண்ணப்படுவதல்லவோ! அப்படியானால் அவன்காடுசென்றது தந்தை இறந்தபின்னரோ அல்லது அதற்கு முன்னரோ விளக்கவேண்டு மென்று வேண்ட, அதைக்கேட்ட கைகேசி குரவர்களை யிகழ்ந்ததனாலுமல்ல, தெருவத்தாலுமல்ல, தீவினையாலுமல்ல, அரசர் பெருமா னிருக்கவே அவன் காடுபோனானென்றாள். அவ்வாறு குற்றமொன்றில்லை யானாலும் வேறொருவர் கோபித்ததுமில்லை யானாலும் தெய்வத்தாலுமல்ல வானாலும் பெற்றவனிருக்கப் பிள்ளை காடு சென்றதும் அவன் போனபின் அவனிறந்தது மென்னகாரணமென்று சொல்ல, அதைக்கேட்ட கைகேசி என் வாக்கினால் வரந்தரப்பெற்றுக்கொண்டு சீராமனைக் காடுபோக்கி உலகமுழுதாளு பரசுரிமையை யுனக்கே யாக்கினேன், அது பொறுக்காமல் அரசன் தன்னுயிர் நீங்கினானென்றாள்.

இவ்வாறுசொல்லி வாய்மூடுதற்கு முன்னே இரண்டு காதினையு மூடிக்கொண்டு நெற்றிவரையிலும் புருவஞ்சென்று நெரிந்துக்கொள்ளப்பெருமூச்செறிந்து கோபநகைநகைத்து கண்கள் இரத்தநீர் சிந்தத் தன்கைகளாற் பூமியை யறைந்து*பாதங்கள் பெயருந்தோறும் பாரும் மேருவும் யானையையேற்றிக்கொண்டுவருகின்ற மரக்கலம் பெருங்காற்றினாற் கடலில் வருந்துவது போல வருந்திநிற்க, அதைக்கண்ட தேவர்களும்பயந்தனர், அவுணர்களும் அச்சத்தால் இறந்துபட்டனர், மதம்பொழியும் திக்கயங்களும் மதமொழிந்தன, சூரியனுமீண்டனன், யமனும் விழிபுதைத்துக்கொண்டனன். இவ்வாறு கோபங்கொண்டு தன் தாய் கொடியவளென் றெண்ணாமல் சீராமபிரான் கோபிப்பானேயென் றஞ்சிக்கொண்டு நின்றிடிபோற் கர்ச்சித்துச்சொல்லலாயினன்.

என் தந்தையோ இறந்துபட்டான், என் தமையனோ பெருந்தவமேற்கொண்டான், இவ்வளவும் கொடிய சூழ்ச்சியாலன்றி வேறல்ல வென்று

---

* பாதங்கள் பெயர்தொறும் பாரு மேருவும்
போதங்கொ ணெடுந்தனிப் பொருவில் கூம்பொடு
மாதங்கம் வருகல மறுகிக் கால்பொர
ஓதங்கொள் கடலினின் றுலைவ போன்றவே.

(இதன்பொருள்) தமது பாதம் பெயருந்தோறும், பாரும் மேருவரையும் மரக்கலங் கொண்ட நெடிய தனியொப்பிகந்தபாய் மரத்தொடு யானையேறிவருமரக்கலம் காற்றினாற் பொரக்கலங்கிப் பெருக்கினையுடைய கடலினின்று வருந்துவன போன்றன என்க.

கூம்பு - பாய்மரம். ஓதம் - பெருக்கு. மாதங்கம் - யானை. போதம் - கலம் என்பன ஒருபொருட் பல்பெயர்க்கிளவி. பாதங்கள் பெயர்தொறும் பாரு மேருவும் கலங்கியவா றென்க. இது உவமையணி பெயர் என்னும் வினைத்தொகை வினைச்சொல் தொறு என்னும் இடைச்சொற்கொண்டது, இடைச்சொல்லும் ஒருபுடைப் பெயரொ டொப்புடைமையாகலின்.

எடுத்துச்சொன்ன வாயைத் துணிக்கவேண்டும்,அதைக்கேட்டுச் சும்மாவிருந்ததனால் நானரசை யாசையா யாண்டேனாகின்றே னல்லவா? நீயின்னமுமிருக்கின்றனை,யானும் சும்மாவிருக்கின்றேன், உன்னைச் சீக்கிரமாய் அழிக்காதிருக்கின்றேன், தாய்போன்ற மனமுடையானாகிய சிராமபிரான்கோபிப்பானென்று பயந்திருக்கின்றே னல்லாமல் தாய் என்ற பெயரொன்னைத் தடுக்கவல்லதோ! உன்னொருசொல்லால் ஒரு அரசன் மாளவுமாயிற்று, மற்றோரரசன் மீளவுமாயிற்று, அவன் விரும்பி யாளவேண்டிய பூமியை ஆளவும் நின்றானொரு பரதனென்றால் இது குற்றமேயல்லது அறநெறிக்குக் குறையுண்டாகமுடியுமோ?சுழிகையுடைய தாயினது கொடியசூழ்ச்சியினால் பரம்பரையாகவரும் மரபைமாய்த்து முன்னாளில் பரதன் பழியுடைய தாக்கினான் என்னும் மொழியெங்கும் வழங்குதலினும் முறைமை வேறுண்டோ? கோவியரல்லீர் உம்முடைய கணவனுயிரை யுண்டீர் பேயீரே! நீரின்னமுமுயிரோடிருக்கப்பெறுவீரே, மாயீரே கெடாதவன்மையான பழியையும் விளைத்தீரே முலையையும் கொடுத்தீரே தாயீரே நீரெனக்கின்னமுமென்னதரமாட்டீர்! என்று கோபித்துநின்று சிறிதும் பொய்யாதமன்னவர் பெருமானை வாய்மொழியாலே உயிருடன் நின்றும் தீராதவலியபழிகொண்டுந் திருவையடைந்தும் என்றும் நீரேவாழவிரும்பினீர்; அவன்போகக் கன்றும் தாய்ப்பசுவும்போல அவற்றைப்பார்த்தும் கழியீர்; தான்கொடுத்த வரத்துக் கிழிவுண்டாகாமல் தந்தை யிறந்தான், இதுவே அறமென்றெண்ணி அவ்வரசன் பெற்ற சிராமன் அரசாட்சிமுழுதும் தாயின் சூழ்ச்சியால் துறந்தான், அவ்வரசுமுழுதும் அவனோடும்பிறந்தான் ஆண்டுவருகின்றானென்னு மிது என்னாற் பெறலாமோ! என் தந்தைமாண்டுபோவானென்பதை யெண்ணி வசைகொண்டவன் கோளுமென்னாலேயென்பது கொண்டான், அதுவல்லாவிட்டால் அவன் மீள்வானல்லவா? மெய்யாகவே யுலகமெல்லா மாளுவானென்றல்லவா உலகமுழுதாள்வான் போயினான். யாவராலுஞ் சொல்லப்பட்ட தொன்மையான குலத்திற் பிறந்த அரசன் உணர்வு அப்பால் யாதாயினுமாகுக! எனக்கே பணிசெய்பவன் தீயசிந்தனை செய்தானென்றுசொல்ல என் தாயாகிய இக்கைகேசி தேடிக்கொண்டபுகழ் போதாதா! இன்னமும் நான் பிழைத்திருக்கின்றேனே, என்னுடன் பிறந்த சிராமன் கையிலார்ந்த கல்லையில்வைத்த புன்மையான காய்கனிகிழங்குகளை உணவுகொள்ளப்பொற்கலத்தை யேந்தி இனிமையான சம்பாவரிச் சோற்றை அமுதெனக்கொண்டு நெய்யோடு வைத்துண்ணா நின்றதை நிலைபெற்றவர்களும் நினைக்கமாட்டார்களோ, வில்லமைந்த தோளையுடைய சிராமன் கொடுங்கா னடைந்தானென்ற சொற்கேட்டன்றே நமதரச னிறந்துபட்டனன், நான் அவன் சென்றதைக்கேட்டிருந்தும் நஞ்சையொத்த தாயைக் கொல்லாதிருக்கின்றேனே, வன்பழியாற் குறையாதிருக்கின்றே னல்லேனே, மேலும் அன்புடையார்போலவுமழுதுகொண்டிருக்கின்றேன். இதைப் பூமியிலுள்ளாரும் கொள்ளார்கள், யானே உயிரைவிரும்பிப் பழிபூண்டிரோன்,துன்பந்தீராதொன்றுதானே இந்நகரத்தும் திருமகள் வசிக்கவேமாட்டாள், ஆரோடுநீயாலோசனைசெய் தாருடைய யோசனைமேற் கொண் டிவ்வாறு செய்யத்துணிந்தாய்! அறத்தையெல்

லாம் வேருடன்கெடுத்து என்னகரியத்தை விளைவித்தாய்! என் தந்தையை
உன் கொலைத்தொழி லமைந்த வாயால் கொன்றேனன்றோ! அதுபோகட்
டும்; என் அண்ணனைக் காட்டிலுஞ் செலுத்தினேனே, அரசாளவு நிற்கின்
றேனென்று சொல்வதனால் இதனால் உனக்குப் பிழையுண்டோ பழியுண்டா
மோ! என்றாலும் என் புகழ்மாயு மிடமுண்டாமோ! கண்ணிலே யென் செய்
கையைக் காணும் மண்ணுலகத்தவர் பாராதென்னுவார்கள், நீயோ பழிபூண்
டுகொண்டாய்! ஒருவன் உண்ணாமலே நஞ்சமானது கொல்லமாட்டாதென்
னுமுறைமையுண்டென் றெண்ணுகின்றேன், அல்லாமலென்னுயிரோடிரேன்,
நானிசைந்து பாவத்தொழிலமைந்த கும்பிபாகம்போன்றஉன்பாழ்வயிற்றிற்
றங்கியிருந் தென்றுந்தோன்றுகின்ற தீராதபாதகமொழிந்து அத்துயரமொ
ழிவதன் பொருட்டு நல்லறமாக உலகமூன்றும் காணும்படி பெருந்தவஞ்
செய்ய முயல்கின்றேன். இவ்வளவும் பெரியோர் சொல்லும் நல்லசொர்க
ளைச் சொன்னேன், நல்லசெய்கையெல்லாம் அறக்கெட்டவளானாய் உன்
னுயிர்துறப்பையானால் தூயையுமாவாய் உகைத்திற்பிறந்ததனாற் பேறடைந்
தாயுமாகின்றாய்! இதல்லாமலும் வேறில்லையென்று சொல்லிவிட்டு இக்கொ
டும்பாவியிடத் திரேனென்று தன்னை நெருங்கியதுன்பங்கெடத் தூயதன்மை
யையுடைய கோசலையார் பொன்னடிவணங்கி யுய்வேனென்று அவ்வன்னை
யது திருமாளிகையையேநோக்கி நடந்துபோனான். அவ்வாறு நடந்துசென்
று மண்கிழிய வீழ்ந்துவணங்கி அவளது பாதங்களைத் தன் கையினாற் பிடித்
துக்கொண்டு புலம்பிநின்று அன்னையே! என்தந்தை யெவ்வுலகி லிருக்கின்
றான், என் தமையன் எங்கேசென்றான், நானும் இங்கேவந்தது இத்துன்பங்
களையெல்லாம் என்கண்களாரப் பார்ப்பதற்கோ! என் சிந்தைத் துயரந் தீர்
க்கவேண்டுமென்று தேவர்களும் பரதாழ்வான் படுந்துயரங்கண்டு அழுது
சோரும்படி சொல்லத்தொடங்கித் தான் புழுதியாடிய தோளையுடையானாய்
ப் புரண்டுசோர்ந்து என்னையனை அடித்தலங்கண்டிலேன், அரசன் பூமியை
நீங்கிப் பெயருவானோ! நீர் பிடித்தீரல்லீர்போலும்! பிழைத்திருக்கின்றீர்க
ளென்று கொடியவர்களெல்லாம் தங்குலங்கள் வேரற்றுப்போகக்கொல்வே
னென்று சொல்வது எவ்வாறு? அஃதிருக்கட்டும்; கொடியவாளாகிய கை
கேசிவயிற்றிற்பிறந்த கள்ளத்தன்மையுடையேன் ஏன்துயரமுடியும்படி முடி
வேனென்றும்; ஒற்றையாழியந் தேரூர்ந்து இருளையோட்டும் அச்சூரியனைப்
போலக் கீர்த்திபெறவளர்ந்த பழமையான இக்குலமானது பரதனென்று
சொல்லப்படும் ஒருபழி படைத்ததென்றும்; வாளையேந்திய சேனையையுடை
ய அரசன்வீடெய்தவும், மற்றொரு அரசன்காடெய்தவுங் கண்ணிலாமலே
உலகமுழுதும் துயரத்தில் வருந்துவதோ வென்றும், பரதன் சொல்லிக்
கொண்டிருந்தான். அதைக்கேட்டுக் கோசலை இவ்வரசபாரம் பொறுக்க
மனமில்லாதவனாயும் நெஞ்சந் தூயனாயும் நடுவு நிலைமையையுடையனாயும்
பரதன் தோன்றுகின்றானென மனத்திற் சிந்தித்துக் கைகேசிசெய்த பழிபா
வங் கண்டறியாயோ வென்றாள். அதைக்கேட்ட பரதன் நல்லறநடுங்க நாவி
னால் கட்டுரை சொல்லத்தொடங்கினான்.

தருமங்கெட முயன்றவனும், அருளில்லாத நெஞ்சமுடையானும், பிறன் கடைகின்றானும், பிறரைச் சிறுகின்றவனும், பிறவுயிரைக்கொன்று வாழ்ந்தவனும், துறந்தார்க்குத் துன்பஞ்செய்தவனும், குரவர்களையும் பெண்களையும் வாளாற்கொன்றவனும், அரசன் பொருளைச் சூதாற் கைக்கொண்டவனும், முதுகுகாட்டிப் போரிலோடினவனும், ஏழைகள் கையிற் பொருள் பறித்தவனும், திருமகள் கோனைக் கடவுளல்லவென்று சாதித்தவனும், அந்தணர் அருநெறிக்குக் குற்றஞ்செய்தவனும், வேதநிந்தை செய்தவனும், பொய்பேசுதலை யுடையவனும், தாய் பசித்திக்கத் தான் புசித்தவனும், போரில் தன் தலைவன்படத் தான் நடந்துபோனவனும், தன்னைப் புகலடைந்தவருக்கு வஞ்சினங்கொடுத்தவனும், அறமறந்த சிந்தையுடையானும், பொய்ச்சாக்ஷிசொன்னவனும், போருக்கஞ்சினவனும், கையிற்பொருந்திய அடைக்கலப்பொருளை யனுபவிப்பவனும், வருந்தியிருந்த சமையத்தில் இடரைவிளைத்தவனும், பிராமணர்வீட்டை நெருப்பை மூட்டினவனும், மக்களைக்கொன்றமா பாதகனும், தேவர்களை நிந்தனைசெய்தவனும், கன்றுக்கிரங்கிப் பாலூட்டாதவனும், இராசசபையிலேயே பிறர்பொருளைக் கவர்ந்தவனும், செய்ந்நன்றியை மறந்தவனும், தன்னுடன் வழிவருமாதரைப் பிறர் துன்பஞ்செய்ய அதை நீக்காமல் தன்னுயிர் சுமந்தவனும், தன் னயலிலிருந்து சாப்பிடாதிருக்கத் தான் சாப்பிட்டவனும், போர்முகத்திற் பகைவருக்கஞ்சித் தன்னுயிர்வளர்க்க ஆசையுள்ளவனும், தருமத்திற்காக்கியவன் பொருளை விரும்பிய அரசனும், அழிவருகின்ற அரசியலை யடைந்தாகுமென்று இழிவடைகின்ற சிறுதொழிலைச்செய்து அங்கதின்வழி வருகின்ற தருமத்தை மறந்து மற்றொரு பழிவரும் மார்க்கத்தைப் படர்பவனும் இதுபோன்றவரும் அடைகின்ற கொடிய நரகத்தை நானடையக்கடவே னென்று சொல்லிநிற்க அவ்வாறு சொன்னமகனைக் காட்டிற்சென்ற சீராமபிரான்மீளவும் வந்தாற்போல மதித்து அழுதணைத்து அரசன் செய்கையும் தாய்செய்ததீமையும் எடுத்துச் சொல்லிப் பான்முலை சோரநின்று அப்பாபரதா! உன்குலத்தில் முன்னோர்களில் யார்தான் உனக் கொப்பாவார்களென்று சொல்லிப் புலம்பியழுதாள். அவ்வாறு புலம்பக்கண்ட பரதன் கோசலையாகிய தாயைவணங்கித் தானும் புலம்பிக்கொண்டிருந்தான். அந்தச் சமையத்தில் வசிட்டமுனிவரும் அங்கே யெழுந்தருளினர். அவரைத் தாளில் வீழ்ந்துவணங்கி எந்தையாண் டுள்ளார் அருளிச்செய்ய வேண்டுமென்று வேண்ட, அதைக்கேட்ட முனிவர் பெருமான் சிறிதுஞ்சொல்ல நாவெழாமல் நொந்துவருந்தி உன் தந்தை இறந்துபட்டுப் பதினன்கு நாளாகின்றன, மக்களாவார் செய்யவேண்டிய உருமைக்கடன் செய்யவேண்டுமென்று சொல்லிமுடிக்க, பரதனும் தாயாகிய கோசலையன்னையினிடமுத்தரவு பெற்றுக்கொண்டு வசிட்டமுனிவரோடுஞ் சென்று தன்னைத் தந்தே தருமத்தைநாட்டிய அறப்படிவத்தைக் கண்டு மண்ணின்மேல் விழுந்தலறிப் புரண்டு சக்கரவர்த்தியினுடைய தயிலமாட்டிய பொன்மேனியைத் தன் கண்ணீராலாட்டிக் கழுவி அங்குநின்றும் பரிவின்வாங்கி நான்மறையுணர்ந்த அந்தணர்கூட்டம் நிறைந்து சுற்ற

அரசனை விமானத்திலேற்றி மந்திரிகள், பிரதானிகள், சேனாபதிகள், தண்டத்தலைவர், யூகத்தலைவர், சாமந்தர், குறுநிலமன்னர், பட்டவர்த்தனர், மகுடவர்த்தனர் முதலானோர் சூழ்ந்துவர பட்டத்துயானைமேற்கொண்டு சென்றானர். அப்போது சங்கம் பேரிகை திருச்சின்னமுதலிய வாத்தியங்கள் எங்குமின்று ஆரவாரிக்கச் செல்கையில் யானையும், குதிரையும் தேர்களும், அரசரும், நான்மறை யுணர்ந்த அந்தணரு முன்செல்ல, தேவிமாருடனே கொண்டுசென்று சரயுநதியை யடைந்தார்கள். அவ்வாறடைந்தவுடனே பிரேதசமஸ்காரமுழுதும் செய்து சிதையிலிருத்தித் தீமூட்டித் தந்தைக் குருமைக் கடன்முழுதுஞ் செய்யத்துணிய; அருகிருந்த வசிட்டமுனிவரும் உன் தாய் செய்த கொடுமையால் அரசன் நின்னையு மகனல்லவென்றே துறந்துபோனானென்று சொல்லினர். அதைக்கேட்ட பரதாழ்வானும் நான் பிறந்ததனல் பேறம் தவிர்ந்ததென்றெண்ணியே யென்னைப் பரிகரித்தான்போலும் இச்சூரியவமிசத்தில் தோன்றியும் யான் என் தந்தைக் குருமைக்கடன் செய்யப் பாக்கியம் செய்யாதிருக்க அரசுசெய்யமாத்திரமா ஆனேன், மனு முதலாகிய அரசர்களெல்லாம் தருமநெறியால் தேவர்களாயினர் தாழைக்குலையினது பதடியானேன், என்னை யீன்றுகாத்த என் தாய்செய்த நன்மை நன்றுகவே யிருக்கின்றதென்று தன் தம்பியாகிய சத்துருக்கனுழ்வானை யழைப்பித்து அவனைக்கொண்டு சகல காரியங்களையு நடப்பித்து நின்றான். ஆபரணங்கள் முதலியவை யணிந்துகொண்டு தாமரைபூத்த காட்டிற் புதரில் பீலியையுடைய மயில்கள்போல அறுபதினுயிர மாதரும் சஹகமனமாகித் தங்கள் கணவரிறந்து பட்டபின் மாதரடையும் திவ்வியவுலகம் சென்றடைந்தனர். இங்கே நடத்தவேண்டிய காரியங்களையெல்லாம் முடித்துவிட்டு பரதாழ்வானுங் களிப்பில்லாமல் தன் இராசமாளிகை சேர்ந்து நிற்க; அவனை வசிட்டமுனிவர் தன்னைப் பல அந்தணர் புடைசூழக்கண்டனர்; அப்போது 'அரசனெவ்வழி அவ்வழி குடிகள்.' என்று பெரியோர்கள் சொல்வார்களே, அரசனில்லாமல் உலகம் வருந்திநிற்பது தகுதியல்லவென்று படை, குடி, அமைச்சு, புரோகிதர் முதலானோரும் பெரியாரும் சேனைத்தலைவர்களும் தண்டத் தலைவரும் சாமந்தரும் மகுடவர்த்தனரும் பட்டவர்த்தனரும் குறுநிலமன்னரும் சூழ்ந்துபோய்க் கண்டார்கள்.

பள்ளியடைப்படலம்

முற்றிற்று.

---

## ஆற்றுப் படலம்.

---

அவ்வாறு காணப்போகையில் வரலாற்று முறைமையினல் வேதநான்கையு முணர்ந்த பெருந்தவமுடைய வசிட்டமுனிவர் அவ் விராசமாளிகையிலெழுந்தருளியிருக்கின்றாரென்பது கேட்டுணர்ந்து பரிந்த நெஞ்சினை யுடையாராய்ப் பரதாழ்வானைக் கண்டுகொள்ள, அவருள் சுமந்திரனென்பவன் அரசனுக்குறுபொருள் குறித்த உள்ளத்தனாய் எல்லாமுணர்ந்த வசிட்டமுனிவரை முகத்தானோக்கி நிற்க, அதை அவன் வாயினாற்சொல்லாமலே யறிந்து

கொண்ட அம்முனிவர்பெருமான் உலகங்காப்பதுன் கடனென்று பரதாழ்வானுக்குத் தெரிவித்து பிராமணரும் முனிவரரும் விருத்தர்களும் அரசர்களும் நகராமாந்தரும் உன்னிடத்தே அடைந்தகாரியம் நீதியையும் தருமத்தையும் நீ நிலைநிறுத்தற்கென்றே தணி, தருமமென்கிற ஒரு பொருளைத்தந்து காட்டுதல் அருமையான காரியமெனப் பெரிதுமறிவாய்! இம்மை மறுமையுமாகிய இரண்டையும் தருவதற்கியைந்தன, இது தெருண்ட வினையார் செய்யும் செயலாம். அரசில்லாத உலகம், சூரியனில்லாத பகலும், மதியில்லாத இரவும், பரவான்மா சீவான்மாவென்னு மிரண்டுமில்லாத உடம்பேபோலும் என்றறி. தேவர் வசிக்கு முலகத்திலுந் தீமைசெய்தே உயிர்வாழும் நாடுகளிலும் ஏனைய உலகங்களிலும் அரசனில்லாதிருக்கக் கண்டிலோம், முறை தெரிந்தொருவகை யாராய்ந்து பார்க்குங்காலத்தில் பிரமனால் படைக்கப்பட்ட மண்ணினும் வானினும் நிற்பனவும் நடப்பனவுமாகிய எல்லா வுயிர்களும் தலைவனில்லாதிருக்கக் கண்டதில்லை. இனி இவ்வுலகமோ அரசனில்லாமல் வருந்துகின்றது; உன் தந்தையோ இறந்துபட்டனன், உன் தமையனோ நாடுகடந்து காடுசென்றான், இவ்வுலகமோ உன் தாய்பெற்ற வரத்தினால் உனக்கேவந்து நேர்ந்தது. நீ இவ்வுலகமுழுது மாண்டேவரலாம், அதுதான் நான்கொண்ட கருத்துமென்று சொல்ல, அச்சொல்லைக்கேட்ட பரதாழ்வான் நஞ்சையுண்ணுகென்றபோது நடுங்குவாரைப்பார்க்கிலும் அஞ்சி யயர்ந்து அருவிபோற் கண்ணீர்சொரிந்து நடுநடுங்கி நாத்தடுமாற மாதரைப்போனின்றழுது தன் வய மகன்று ஒருவாறு தெளிந்து இராசசபையைப் பார்த்துச் சொல்வானுயினன். இந்த மூன்றுலகங்களுக்கு மொரு முதல்வனாய் என் முன்னே தோன்றிய சிராமபிரானிருக்க யான் மகுடாபிஷேகஞ் செய்துகொள்ளும்படி பெரியோர் சொல்லத்தக்க தருமமாகையால் தாய்செய்கையினும் இழுக்காக முடியுமே? என் தாய் செய்கையே நீங்கள் நல்லதென்பீராயின், இனி கலிகாலத்தின் ஆட்சியென்றே சொல்லவேண்டும். இராசசபையிலிருந்த நீர் இவ்வுலகத்தில் மூத்தவனிருக்க இளையவன் மகுடாபிஷேகஞ்செய்து கொள்வதாக இருக்க நடந்தாரை யறிவிக்கவேண்டுகிறேன். இது நன்னெறியேயாயினும் நான் இவ்வுலகபாரஞ் சுமக்கமாட்டேன், இந்நகருக்குரிய அரசனை யழைத்துக்கொண்டு பழமுறையாக முடிசூட்டிக் காண்பேன், அதற்கவன் மனங்கொள்ளாவிட்டால் காட்டிலிருந்து அவனுடனே அருந்தவஞ் செய்வேன். அல்லது என்னுயிரையு நீக்கிக்கொள்வேன். பேரரசனிருக்கவே அரசனும் முடிபுனையும் பாக்கியம்பெற்றுக்கொள்ள விசைந்தான், அரசர் பெருமானே! பெருஞ்செல்வம் உனக்கு நேர்ந்தும் நீ அதை மறுத்துவிட்டாய்; உன்னைப்போன்ற இளந்தோன்றல்கள் யாரிருக்கின்றனர். ஆக்கினைசக்கர நடத்தியும் வேள்விசெய்தும் தருமத்தை வளர்க்கவேண்டுமோ? பதினன் குலமழிந்தாலும் நின்புகழென்றும் வாழக்கடவதென்று வாழ்த்தினர்கள்.

பின்பு பரதாழ்வான் தம்பியைக் கூவியழைத்து இந்நகரமுழுது மறிய முரசறைவித்து இந்நகரத்தரசனை அழைத்துவரத் தெரிவிக்கவேண்டுகின்றேனென்று கட்டளையிட, அவன் அவ்வாறேசெய்ய உயிரில்லாத உடம்பைச் சொல்லென்னு மமுதத்தால் துளித்ததுபோல யாவரும் பயணமாயினர். இவ்

வாறு நால்வகைச்சேனையும் பயணப்பட்டன. தாரையும் சங்கமும் ஊதுகொம்பும் பம்பையும் பேரியு முழங்கின. இவ்வாறு சக்ரவர்த்தியினுடைய சதுரங்கசேனையும் சிராமபிரானை யழைத்துவர விசைந்து பரதாழ்வானுந்தானும் மரவுரி யணிந்துகொண்டு தன் தம்பியொடும் பிறந்த துன்பத்தோடும் தேரேறிச் செல்வானாயினன். இதையறிந்த தாய்மாரும் தவமுடைய முனிவர்களும் தந்தைபோன்ற மந்திரிமாரும் பிராமணரும் அளவில்லாத சுற்றங்களும் தன்னைச் சூழ்ந்துவரத் திருவயோத்தி நகர்க் கோட்டைவாயிலில் அடைந்தான். இவ்வாறுபோகையில் மந்தரையென்னும் யமனும் வழிச்செல்வாருடனே போகக்கண்டு தம்பியாகிய சத்துருக்கனாழ்வானோடிச்சென்று அவளை ஆகாயத்தில் எறியும்படி நினைத்துக்கோபித்துப்பற்றலும், அதைக் கண்ட பரதாழ்வான் இதுவரையிலும் பரம்பரையாக நடந்துவந்த வழக்கத்தைக் கெடச்செய்த மாபாவியைச் சின்னபின்னமாக்கி என் கோபத்தையே தீர்த்துக்கொள்ளுவேன்; என்னை இன்று என்னையன் துறந்துவிடுவானென்றெண்ணியே விட்டேனல்லாமல் அன்னையென்று மதித்தவனாகவே மாட்டேனென்று சொல்லிவிட்டு, நாம் இவளைக் கோபிப்போமானால் நம்மையன் நம்மைக் கோபித்துக்கொள்ளுவானாதலால் மந்தாரையைக்கோபிக்கவேண்டாமென்று தம்பியை அழைத்துக்கொண்டுபோய், சீராமன் தம்பியோடு சீதையும் தொடரக் காடுசெல்கையில் தங்கிய சோலையில் அன்று தங்கிக் கண்ணீர் பெருக்கிக்கொண்டே அழுது புலம்பிக் காய் கனி கிழங்குண்ணாமல் வில்லேந்திய உயர்ந்ததோளையுடைய அச்சிராமன் படுத்திருந்த புல்லணையின் பக்கத்தின் புழுதியிற் படுத்திருந்தான். அங்கிருந்து தன் தமையன் கால்நடையாகவே நடந்துபோனதைகேட்டுத் தானும் தம்பியுடன் நால்வகைச் சேனைகளும் புடைசூழக் கங்கைக்கரையை யடைந்தான்.

ஆற்றுப் படலம்

முற்றிற்று.

---

## குகப்படலம்.

---

வீரகண்டையையணியாமலும் அலங்காரஞ்செய்யப்பெறாமலு மிருக்கிற சேனையையுடைய பரதாழ்வான் காவிரிசூழ்ந்த நாடாகிய சோணாட்டைப் போன்ற கழனிகள்சூழ்ந்த நாட்டைவிட்டுவிட்டுத் தாவரசங்கமமாகிய எல்லாப் பொருள்களுமிரங்கக் கங்கைக்கரையை யடைந்து நிற்கவே அங்கே சுரும்பினங்களுக் கல்லது கங்கையெங்கும் பரதாழ்வானுடன் வந்தயானைகள் மதம்பாய்வதனால் உண்ணவும் நீராடவும் உரித்தல்லாதிருந்தது. பாலைப் போன்ற நிறத்துடன் பண்டுதான்செல்லும் அந்நீர் ஒல்லென்னும் ஒலியுள்ள கடலில் பாயாதிருந்தது, அப் பரதாழ்வானுடைய சேனையாகிய கடலினால் உண்ணப்பட்டதனாலாயிற்றென் றுணர்ந்திடலாம், இச் சேனையானது கங்கைக்கரையை யடைந்தது கேட்ட குகப்பெருமாள் சூலம்பிடித்த யமன் இருபத்தைந்து லட்சம் வடிவங்கொண்டாற் போன்ற தன் சேனையுடனே சுரிகையைக் கட்டிக்கொண்டு வாய்கடித்துக்கொண்டு வெட்டிப்பேசு மோ

ழிபுடையானைத் தடிகொட்டிக்கொண்டு கொம்புகுறித்துத் தோள்தட்டிக் கொண்டு அச்சேனையைநோக்கி இப் பரதனுடன்வந்த அறுபதினாயிரம் அக்குரோணிசேனையும் எலியாக, அவ்வெலிகட்குயான் நாகமமென்று கூவிக்கொண்டு புலியெல்லாம் ஒருவழி புகுந்தாற்போல அக்கங்கைக்குத் தென்கரையில் வந்துதோன்றி ஊழிகாலத்துமேகமும் கருங்கடலும் ஒன்று கூடினாற்போல அடைந்து, அவர்கள் எமது தலைவனாகிய இரகுநாயகன் விஷயத்தில் அபசாரப்பட்டமையால் அவர்களை வானிலனுப்பி அந்த இராச்சியத்தை அவனுக்கேபட்டாபிஷேகஞ் செய்விக்கின்றேன்; என் திராணியைப் பாருங்கோளென்றும், நீங்கள் ஒடியெறிக்கும் படகுகளைச் செலுத்தவேண்டாமென்றும், அக்கரையில் வந்திருப்பவரைப் பிடியுங்கோள் எறியுங்கோள் கொல்லுங்கோளென்றும் ஆஞ்ஞைசெய்து விட்டுப் பின்னுஞ் சொல்லுகிறான்.

அஞ்சனவண்ணனாகிய என்னுருயிருக்கு நாயகனாகும் சிராமனை உலகாளவொட்டாமல் வஞ்சனையால் அவ்வரசைப் பிடுங்கியாளும் வேந்தனும் வந்தானல்லவா? நெருப்பைச் சொரியும் செஞ்சரங்கள் இவன்மேல்விட அவை பட்டுருவிச்செல்லாவோ? என்கையில் இப்பரதன் முதலானவர்கள் தப்பிப் போய் விடுவார்களானால் உலகம் நாய்க்குகனென்றெண்ணி என்னைச் சொல்லமாட்டாதோ? ஆழமாகிய இக்கங்கையைக் கடந்தும் இக்கரை வழியாய்ப் போவார்களோ? நான் யானைப்படையைக்கண்டு விலகிப்போய்விடும் வில்லாளோ! அச்சிராமன் என்னைத் தோழனென்று சொல்லியசொல்லு மொரு சொல்லல்லவோ? அதைக் கடப்பேனானால் ஏழைவேடனிறவாமற்போனானே யென்று பார்த்தவர் பரிகாசிக்காமற் போவார்களோ? அவ்விராமன் எனக்கு முன்னவனென்று நினையாமற்போய்விட்டானே, அதுபோகப் பின்பிறந்தவன் இங்கே இருக்கின்றானென்பதும் சிறிதும் எண்ணாமற்போனானே. என்ன இவனென்னை யிகழ்ந்தகாரியம்? இக்கங்கையைக் கடந்தல்லவோபோகவேண்டும், வேடர் பாணம் விட்டால் அரசன் மார்பில் பாயக்கூடாதென்றநியதியும் உண்டோ? பாவமும் பழியும் பகையும் நண்பும் துன்பமும் என்பவைகளை அரசாள்பவர் எண்ணமாட்டார்களோ? என்னுருயிர்த் துணைவனாகிய சிராமன்மேற் போகிற சேனையும் இக்கங்கையைக் கடந்தல்லவோ உயிர்கொண்டு போகவேண்டும். அருமையான தவஞ்செய்கையை எமது தலைவனாகிய சிராமன் கைக்கொள்ள இவன் பூமியை யரசாண்டுவரலாமோ? உயிர்மருந்தா; புகழைமேற்கொண்டு உயிரையேனும் விடுத்துப்போர்செய்ய மாட்டேனோ! நான் சிராமபிரானொடு போகாமல் இங்கேயே யிருந்தது நல்லகாரியமாகத்தோன்றுகின்றது, என்கடனை இன்றே கழிக்கின்றேன். யானையும் குதிரையும் சூழ்ந்த பெரும்படையுடனே வந்தவர்களும் தங்கள் வாள் வலிகாட்டி யுத்தஞ்செய்து கங்கையைக் கடந்தல்லவோபோகவேண்டும், வேடர்களே நமதுதுறையில் ஓடங்களை விலக்கவேண்டுகிறேன். நம்முடைய சேனைக்கு இறைபோதா இப்பரதனுடைய சேனை; அது கிடக்கட்டும், தேவர்களே போர்செய்யவந்தாலும் வில்லாகிய மேகம் பாணமாகிய மழைபொழிய குடல் சூறைபடவும் வாளுடன் சேனைவிழவும் யானைபடவும் அச்

சேனைகளைச் சாய்க்கமாட்டேனோ! வள்ளற்றன்மையையுடைய சீராமன் மாவுரிதரிக்கக்கொடுத்த அக் கைகேசியினுடைய மக்கள்வலியை இன்றேபார்க்கின்றேன்; அவர்களை என் அம்பாலே இன்றேகொன்றுகுவிக்க அங்கிணங்கொண்டபிணக்குவியலைக் கொண்டோடிக் கடலில் இக்கங்கையாறு தூரத்தே விடப்பார்க்கமாட்டேனோ! ஆடுகின்ற கொடியையுடைய படைகளை எதிர்த்து வேடர்கள் போர்செய்து சீராமபிரானே யாள இராச்சிய லக்ஷ்மியைச் சம்பாதித்துக் கொடுத்தார்கள் பாருங்கோளென்று சொல்லும் இத்தப்புகழை யடைய மாட்டீர்களோ! நாட்டைக்கொடுத்த நமது நாயகனாகிய சீராமனுக்கு இவர்கள் நாமாளும் காடும் கொடுக்காமல் படையெடுத்துக் கொண்டும் வந்துவிட்டார்களே பாருங்கள். பெருந்தவமுடைய முனிவர்கட்கு உறவாகி வனத்தில் வசித்துக்கொண்டிருக்கும் சீராமன் கோபிக்கத் தகுமென்று சிறிது மனத்திற் கொள்ளாமல் பாணங்களைச் செலுத்தும் போர்முனையில் எழுகடல்போன்ற சேனையேயானாலும் ஆமுனையிற் சிறுகூழே போல இப்போதே முடியாதோ! என்று பலபலசொல்லி இரும்பையொத்த மற்றவர்களுடனே வில்லேந்திக்கொண்டு மல்யுத்ததத்திற்குத் தகுந்த தோளையுடையவனும் சீராமபிரானுக்குத் தோழனுமாகிய குகப்பெருமாளிருக்க; அக்கரையில் பரதாழ்வான் முன்னே சுமந்திரனாகிய பெரியமந்திரி எதிரேவந்து சொல்லத்தொடங்கினான்.

அதோ நிற்பவன் இக்கங்கையாற்றி னிருகரையுமுடையவன், கணக்கிறந்த படகுகளையுடையவன், உங்கள் குலத்துக்குத் தனி நாயகனாகிய சீராமனுக்கு உயிர்த்தோழன், தோள்வலியையுடையவன், யானையை வெல்லும்சிங்கம் போன்றவன், வில்லேந்திய சேனைக்கடலையுடையவன், குகனென்னும் பெயரையுடையவனென்றுசொல்ல, அதைக்கேட்ட பரதாழ்வான் தன்றமையன்முன்னே செல்லுகின்றசொல்லைப்போலவே கேட்டுமகிழ்ந்து குற்றமற்றமனமுடைய அவன் எம்மிறைவனால் முன்னே நட்புக்கொள்ளப்பட்டு அவன் மனத்திற்கான உயிர்த்தோழனாவானாயின், என்னை அவன் காண்பதற்குமுன்னே நான் அவனையே காண்பேனென்று தானிருந்த இடத்தை விட்டுத் தம்பியாகிய சத்துருக்கனாழ்வானோடு மெழுந்து தன்னுள்ளத்தே தோன்றுகின்ற ஆராவன்புடனே மலையெழுந்து சென்றாற்போல அக்கங்கையாற்றின் கரையையடைந்து நின்றான். அவனைத் தூரத்தேகண்ட குகப்பெருமாளும் அவனது திருமேனியின் நிலைமையையறிந்து திடுக்கிட்டு மரவுரியையணிந்து மாசடைந்த மெய்யுடன் கலையொடுங்கூடாத சந்திரன்போல முகப்பொலி விழந்து கல்லுங்கண்டு கரைந்துருகுந் துன்பக்கடலிலழுந்தித் துறைகாணாமல் வருந்திக்கொண்டிருக்கக்கண்டு தன்கையிலிருந்த வில்லைத் தூரத்தே யெறிந்துவிட்டுத் தானும் துன்பத்தால் வருந்திச்சொல்கின்றான். இப்பரதாழ்வானும் என்னாயகனாகிய சீராமனையே யொத்திருக்கின்றான், இவனுக்கயலிலேநிற்கின்ற தம்பியோ இளையவனையே யொத்திருக்கின்றான், இவர்களும் தவவேட மேற்கொண்டு அவன் சென்றதிசையைநோக்கித் தொழுது கொண்டிருக்கின்றார்கள். எமது பெருமான் பின்பிறந்த தம்பிமார்கள் தவறானகாரியத்தையும் செய்துவருவார்களா? இவரோ துன்பமொன்[illegible]டைய

ராயிருப்பதன்றி மாறாத அன்புமுடையாராயு மிருக்கின்றனர். நமது பெருமான் கொண்டிருந்த தவவேடத்தையே மேற்கொண்டிருக்கின்றனர். இவர் கருத்தறிவோமென்று போகின்றேனென்று தன் சேனைகளைநோக்கி யெடுத்துச்சொல்லி அதுவரையிலும் இங்கே வழியைக் காத்துக்கொண் டிருங்கோளென்று அத் துறையிலிருந்த படகொன்றில் தானேறிக்கொண்டு தான் தனியேபோனான். * அவ்வாறு வந்தெதிரேதொழுத குகப்பெருமாளைத் தாமரையில் வசிக்கும் பிரமனும் தன்னை வணங்கும் பெருந்தவமுடைய பரதாழ்வான் தலைவணங்கினின்றான். அதைக்கண்ட குகப்பெருமாள் அவன் பாதங்களில்வீழ்ந்து எட்டுறுப்பு நிலமுறப்பணிந்தான். பரதாழ்வானோ அவனைத் தந்தையினும் மகிழ்வாகத் தழுவினின்றான். இவ்வாறு தழுவப்பட்ட வேடர் பெருமான் பரதாழ்வானை நோக்கி நீரெழுந்தருளியகாரண மென்னவென்றுகேட்க, உலகமுழுதாண்ட அரசர்பெருமான்பரம்பரைவழக்கத்தைத் தவறினான்; அவ் வழக்கத்தைக் கெடுக்காமல் அதை யாளவேண்டியவனை யழைத்துக்கொண்டுவர வந்தேன் இதுதா னென்வருகையென்று சொல்ல, அதைக்கேட்டு நெட்டுயிர்ப்பெறிந்து மண்மிசை வீழ்ந்துபணிந்து விம்மி மகிழ்வுபெருக அவன் பாதத்தைத்தொட்ட கையையுடையானாய் மெய்ம்மையான வுள்ளங்கொண்டு சொல்லலாயினான்.

அரசனே! தாய்சொல் மேற்கொண்டு தந்தையுதவிய நாடுமுழுதும் தீய காரியமெனத் துணிந்து சிந்தனை முகத்திற்றேக்கிப் போந்தாயென்றால் அதனால் நீபெற்ற புகழினை உன்னோடு ஆயிரம் சிராமர் தாமேநிகராவரோ ஆகாரோ! என்னவென்று தான் வேடகுலத்திற்பிறந்த ஏழையான நானெடுத்துச் சொல்லவல்லேன், சூரியனுடைய ஒளிக்கற்றைகள் மற்றையொளிக் கற்றைகளைத் தவிர்ப்பதுபோல மண்ணுலகத்தாராற் புகழப்படுகின்ற உங்கள் குலத்து மூதாதைகள் புகழையெல்லாம் உன் புகழாக்கிக்கொண்டாயே என்று சொல்லி வேடர்பெருமானாகிய குகப்பெருமாள் அப் பரதாழ்வானிடத்தே அன்புமிகுந்து நின்றான். யாரோதான் பரதாழ்வானிடத்தே அன்பில்லாதவரா

* வந்தெதிரே தொழுதானை வணங்கினான் மலரிருந்த
அந்தணனுந் தனைவணங்கு மவனுமவ னடிவீழ்ந்தான்
தந்தையினுங் களிகூரத் தழுவினான் தகவுடையோர்
சிந்தையினுஞ் சென்னியினும் வீற்றிருக்குஞ் சீர்த்தியான்.

இ-ள். தன்னைவந்து எதிரே தொழுத குகனைத் தலைவணங்கினான் தாமரை மலரிலிருந்த பிரமனும் தலைசாய்க்கு மியல்பினையுடைய பரதன்; பின்னர் அவன் தாளில்வீழ நடுவு நிலைமையுடையார் மனத்தினும் தலையினும் வீற்றிருக்கும் சிறப்பினையுடைய பரதன் அக்குகனைத் தாதையினு மகிழ்ச்சிகூரத் தழுவினின்றான் என்க.

அந்தணன்-அழகிய தட்பமாகிய குணமுடையான், அற்றாகலினன்றே 'அந்தணரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ் - செந்தண்மை பூண்டொழுக லான்' என்றார் பிறரும் இக்கருத்துணராத நச்சினார்க்கினியரும் 'ஆறறி யந்தணர்' என்றகலியினும், 'அந்தணர் வேள்வியோர்க்குமே, என்ற படையினும் வேதத்தினந்தத்தை யணவுவாரென்றுரைத்துப்போதருவர்; அவர் செந்தண்மை பூண்டொழுகலா னென்ற வேதுவை யறியார்போலும். இச்செய்யுளிரு தொடர். இவ்வாறு கூறாது வேறுகூறிச் சொற்குணம் வாளாபோயினருமுளர்.

யிருப்பார்கள். அவ்விதமாக அவனைப்பார்த்து அருட்கடல்போன்ற செம்மையான குணமுள்ள பரதாழ்வான் தென்றிசையே நோக்கி வணங்கிக்கொண்டு எந்தவிடத்தில் எழுந்தருளியிருந்தான் எங்களிறைவனென்று கேட்க, நான் காட்டுகிறேனென்று கார்கால மேகம்போல் விரைந்து சென்று கல்லையடுத்த இடத்தில் நீண்ட வில்லையுடைய சீராமன் படுத்திருந்த புல்லாலாகிய சயனத்தைக் காட்டக்கண்டு பூமியிற் பதைத்துவீழ்ந்து துன்பக்கடலி லழுந்திப் பூமி முழுதுங் கண்ணினின்றும் பெருக்கெடுத்துவரு நீரினாற்கழுவி என்னால் இத்துன்பத்தை யனுபவித்தா யென்றபோதும், கிழங்கும் காயும் அமுதம்போலும் நினைத்துண்டா யென்றபோதும் இப் புற்படுக்கையிற் படுத்துக்கொண்டிருந்தா யென்றபோதும் கேட்டு என்னுயிர் நீங்காதிருக்கின்றேனே, இரத்தினுபரண முதலியவற்றை யணிந்து மகுடாபிஷேகம் நான்மாத்திரஞ் செய்துகொள்ளலாமோ வென்றுசொல்லிப் பின்னும் குகப்பெருமாளைப்பார்த்து இறைவன்மாத்திரம் இங்கே சயனித்திருந்தானென்று சொன்னாயே, அவனிடத்தே அன்பு மேற்கொண்டன்பேயுருவமாக அவன்பின்னே தொடர்ந்து வந்த இளையவன் காலங்கழித்தவிட மெதுவென்று பரதாழ்வான் கேட்க, அதைக்கேட்ட குகப்பெருமாளும் அவனோ பெருமாளும் தாயாரும் இப் புல்லாகிய திருவணையிற்கண்வளரவே, வில்லையூன்றிய கையுடனே பெருமூச்செறிந்துகொண்டு கண்களி னீர்சொரிந்துகொண்டிருக்கவே சூரியோதயமாகின்றவரையிலும் கண்ணொடுகண்ணிமைக்காமல் இருந்தானென்று சொல்ல, பரதாழ்வானும் சீராமருடன் பிறந்தாரில் நானோ முடிவில்லாத துன்பத்திற்கேதுவானேன், அவனோ அதைத் துடைக்க நிற்கின்றான். அன்புக்கெல்லையென்பதுண்டோ! என்னடிமைத்தன்மை அழகாயிருக்கின்றது! என்று சீராமன் படுத்திருந்த புற்படுக்கையினருகே புழுதியிற்படிந்து குகப்பெருமாளை நோக்கி இக்கங்கையைக் கடத்தினையானால் என்னைத் துன்பக் கடலினின்றும் கடத்தினவனாகி, என்னை எமதிறைவனிடத்தில் விடுத்தாயாகின்றாயென்று சொல்ல, அவ்வாறே செய்கின்றேனென்று தன் உறவினரை யழைத்து * கயிலையும் மேருவும் புட்பகவிமானமும் ஒவ்வொன்றுள்ளன,

* நன்றெனப் புளிஞர் வேந்தனண்ணினன் றமரை நாவாம்
சென்றினித் தருதி ரென்ன வந்தன சிவன்சேர் வெள்ளிக்
குன்றெனக் குதிக்கு மம்பொற் குவடெனக் குபேரன் மானம்
ஒன்றென நாணிப்பல்வே றுருவுகொண் டனைய வான். திரு.

இ - ள். நல்லதென்று வேடர்கட்கிறைவன் தன் னுறவினவரை யடைந்து நாவாயினைச்சென்று இனிக்கொணர் வீரென்ன, சிவனது இருக்கையாகிய வெள்ளிமலையும் அவனால் வளைக்கப்பட்ட வில்லாகிய மேருமலையும் குபேரனது புட்பகவிமானமும் ஒன்றாயிருந்தனவாக அவை நாணமெய்திப் பல வேறுருவங்கொண்டெய்தினாற்போலும் வந்தன என்க.

புளிஞர் - வேடர் - நாவாய் - மரக்கலம். இதுகாறும் வெள்ளிக்குன்றும் மேருமலையும் புட்பகவிமானமு மொன்றெனக் கூறலாயின; அவை இற்றைஞான்றுபலவேறுருக் கொண்டெய்தினாற்போன்றன வென்க.

குபேரன் மானமென்பதற்குச் சந்திரனது விமானமெனினு மிழுக்காது. சிவனென்றது ஈண்டுச்சிசண்டபரமசிவனே. விமான மென்றது முதல் குறைக்கப்பட்டது.

நாம் பல வருவானேமென்னும் படகுகளைக் கொண்டுவரும்படி கட்டளை யிடவே, அவர்களும் அவ்வாறே கொண்டுவந்தனர். படகுகள்வந்து சேர்ந்த வுடனே உன் சித்தமென்னவென்று குகப்பெருமாள் கேட்க சுமந்திரனைப் பார்த்து இச்சேனைகளை முன்னே அக்கரைபோகக் கட்டளையிடவேண்டு மென்று சொல்ல அவ்வாறே அச்சேனைகளை முறையாகவனுப்ப அவைகளும் அக்கரையை யடைந்தன. அச்சேனைகள் படகேறிக் கரைசேரத் தவத்தினும் சிறந்தது சுவர்க்கமத்திய பாதலமென்னு மூவித வுலகினுமில்லை யாதலால் அவைகளைப்போலத் தாங்களும் படகேறுமல் மனதிற் செல்கின்றவராய் ஆகாயமோ யோடமாகத் தேவர்களைப்போல முனிவரும் போயினர். இவ் வகையாக அறுபதினுபிரம் அக்ரோணி சேனைகளும் நகரமாந்தரும் மாதர் களும் கங்கைபிற்படச்சென்று அக்கரைசேரக் கள்ள ஆசையை அழித்து நின்று உலகைமுழுது மரசாண்ட அரசர்களையெல்லாம் இழித்து மேற்பட நின்ற பரதாழ்வானும் குகப்பெருமாளைப் பார்த்து தம்பி சத்துருக்கன் தாய் மார் மூவர் சுமந்திரன் இவர்களுடன் எஞ்சியிருக்கு நம்மெல்லோரையும் அக்கரையிற்கொண்டுபோய்ச் சேர்க்கவேண்டுமென்ன அப்போது குகப் பெருமாள் சுற்றத்தாரும் தேவர்களும் தொழுகின்ற கோசலையைப் பார்த்து இவராரென்று கேட்க, அரசர்களெல்லாம் வணங்கு முற்றத்தையுடைய சக் கரவர்த்தி மூத்த மனைவி; மூன்றுலகமும் பெற்ற பிரமனையீன்ற சீராமபிரா னாகிய பெருஞ்செல்வம் பெற்றதன்றி யான் ஒருவன் பிறந்ததனல் அச்செல்வ மிழந்த பெருந்தன்மை யுடையவளென்று சொல்ல, அதைக்கேட்ட குகப் பெருமாளும் அவள் பாதத்தில் வீழ்ந்து புலம்பிகின்றுன். அதைக்கண்ட கோசலையும்இவன்யாரென்று பரதாழ்வானைக்கேட்க இரகுநாயகனுக்குஇன் னுயிர்த்தோழன், எனக்கும் தம்பிக்கும் இளையவனுக்கு மூத்தவன், குக னென்று சொல்லப்படுவனென்ன, அதைக்கேட்ட கோசலையும் மகனே இனி வருந்தவேண்டாம், துன்பத்தால் இராமன் நாடுகடந்து காடுசென்றதும் நல் லதாகவேமுடிந்தது; இக்குகனேடு நீங்களனைவரும்ஒருதன்மையராயிருந்து இவ்வுலகை யரசாளுங்கோளென்று சொல்ல ; அவளிடத்தே விடைபெற்று அவ்வன்னைக்கருகே யிருந்தாரைநோக்கி இவராரென்ன ? தன் மெய்யை நிற்பதாக்கி இறந்துபோன சக்கரவத்தி மனைவிகளிற் சிறந்தவள், யாவரும் வணங்கும் சீராமனுக்குப் பின்பிறந்தானு மொருவனுண்டென்று சொல் லும்படி . ஈன்ப் பிரியாத இளையவனைப்பெற்ற பெருங்குணத்தாளென்று சொல்ல ; அவளையும் வணங்கி விடைபெற்றுப் பின்பு காட்டில் தன் துணைவ னாகிய சக்கரவர்த்தி செல்ல, தன் மகனுகிய பரதன் துன்பக்கடலி லழுந்தி நிற்க, கடுங்கானகத்தே கருணைக்கடலாகிய சீராமன்போக உலகமுண்ட பெருவாயன் அன்றளந்த உலகமுழுதும் தன் மனத்தால் நினைந்து செய்யுங் கொடுமையாலளந்தவளை யாரென்றுகேட்க, அதற்குப் பரதாழ்வான் சொல லத்தொடங்கினன். துன்பத்தை யுண்டாக்கிவிட்டுப் பழியை வளர்க்குந் தோழியாய்த் தன் பாழான பாவிக்குடலிலே பத்துமாதந் தங்கியிருந்த என க்கும் உயிர்ப்பாரங் குறைந்துபோகவும் உடல்களெல்லாம் உயிரில்லாதன வாயினவென்று சொல்லவும் தோன்றும் இப்பூமியில் துன்பமென்பது சிறிது

மில்லாம லிருக்கின்ற முகத்தாலேப் பார்த்தமாத்திரத்திலேயே யறிந்துகொள்ளலாமே! இவளோ என்னைப்பெற்ற கைகேசியென்றான். அவ்வாறு சொல்லிய அவ்விரக்க மில்லாதாளையும் தாயென்று வணங்கி அவர்களுடன் தோணியேறி அக்கரைசேர்ந்தான். பின்பு தாய்மாரைச் சிவிகையிலேறும்படிசெய்து பரதாழ்வானே குகப்பெருமாள் தன்னைத் தொடரத் தம்பியுடன் பலகாதம் காலால் நடந்து பரத்துவாசமுனிவராச்சிரமத்தினை யடைந்தான். அதைக்கண்ட அப்பரத்துவாசமுனிவரும் சிலவேதியருடன் எதிர்சென்றழைக்கவந்தனர்.

குகப்படலம்
முற்றிற்று.

## கிளைகண்டு நீங்குபடலம்.

இவ்வாறு தம்மை யெதிர்கொண் டழைக்கவந்த பரத்துவாச முனிவரை வணங்க, சந்திரசேகரனாகிய சிவபெருமானையொத்த அம்முனிவரும் பரதாழ்வானைக் கண்டிரங்கி யாசிகள் கூறி, உயர்ந்த மாமுடி சூட்டிக்கொண்டு உனக்கு வந்தடுத்த பேரரசு செய்யாமல் சடைக்கற்றையை யுடையவனாய் மரவுரி தரித்து இவ்விடம் வருவதற்குக் காரணமென்னவென்று கேட்டனர். அதைக்கேட்ட பரதாழ்வான் சிறிதுபொழுது கோபங்கொண்டு எனக்கடுத்தது கூறுதது உமக்கடுத்தது சொல்லாதிருப்பதுந் தகுதியன்றென்று சொல்ல பரதாழ்வானும் முனிவரைநோக்கி நானே முறைதவறி அரசைக் கைக்கொள்ளேன், எம்மிறைவன் கைக்கொள்ளானுயின் அவன் மேற்கொண்ட பதினான்கு வருடமும் நானும் அவனுடனே காடே கதியாக வாழ்ந்துகொண் டிருப்பேனென்று சொல்ல, அதைக்கேட்ட பரத்துவாச முனிவரும் அரைத்தசாந்துகொண் டப்பியதுபோல மனங்குளிர்ந்து அப்பரதாழ்வானைத் தன் பன்னசாலைக் கழைத்துக்கொண்டு அவன் சேனைக்கு விருந்தமைப்பேனென்று அக்கினியில் ஆகுதியளித்திருக்கையில் துறக்க நாடே வந்ததுபோல யாவரும் முன்னையவாழ்வை மறந்துவிட்டார்கள். கெடுதலில்லாத நல்லறம் விருத்தியாயினாற்போல அந்தரவாசிகளாகிய அரம்பையர்அன்பினையுடையராய் அவ்வீரரையடைந்து சந்திரனைப்போலும் விளங்கும் பளிக்கறையில் வந்துவந் ததிரேத்தி யழைத்துக்கொண்டு வான நீரினலாட்டிக் கற்பக மலர்மாலையைப் புனைந்து செம்பொற்கலந்திருத்தி இனிய அமிழ்தினை யுண்பித்துப் பஞ்சசயனத்தில் பஞ்சூட்டிய பாதங்களையும் நஞ்சுதீட்டியகண்ணையுமுடைய மாதர்கள் மான்போன்றுறங்கஅத்தனைபேருமுறக்கங்கொண்டார்கள். இவ்வாறு அரசர் முதல் சிவிகையைக் காவுவோர்வரையிலுள்ள யாவரும் தத்தமக் குரிய வரிசை வழுவாமல் தெய்வ மகளிர் கொண்டாடத் தேவபோகத்தை யடைந்தனர், மாதர்களும் தேவமாதர் செல்வத்தை யனுபவித்தனர். வாடையும் கற்பகச்சோலையின் மணமுகந்து மெல்லென வீசிற்று. மயங்கின வண்டின் கூட்டம் மதசலமருந்தின, தேன் மணங் கமழ்கின்ற கவளத்தையும் செங்கதிரைத்தரும் நெற்கதிரையும் கற்பக மளிக்க யானைகளுண்டன, நரகத்தின்வழிச் செல்வோர்க்கு அறத்தைத்

தாரும் நீரைத் துதிக்கையையுடைய கோபமுள்ள யானைகள் காலை நிமிர்த்துண்டன. மரகதக்கொழுந்தென வார்ந்த புல்லைக் குதிரைக் குழாங்கள் அருந்தின. இன்னவிதமாக உயர்திணை அஃறிணைப்பொருள்கள் இந்திர போக மனுபவித்தன. இவ்வா றிருக்கையில் பரதாழ்வான் சீராமபிரானுண்டு வருவதுபோலத் தானும் காய்கனி கிழங்குகளை யுண்டு அன்று தன் அழகியமேனி புழுதியிற்படப் போக்கினான். இன்னவிதமாக அந்த இராத்திரியெல்லாம் நீங்கலும் நீங்குகின்ற அக்காரணமில்லாத கனவிற் சிறந்த செல்வமுற்றுப் பெற இயைந்த நல்வினை யனுபவிப்பவர்க்கு ஒன்றுமில்லாத காலம்போலச் சூரியனு முதயமானான். தாபசமாக நின்று அறஞ்செய்யாதவர் வாழ்வுபோலச் செல்வம் மாறிப்போக வருந்தாதவராய் உடன் மாறிப் பிறந்தாலொத்து முன்னைச் சிந்தையுடையவராயினர்.

சூரியன் எழுந்தது கண்டு சேனைகளேயல்ல இது கடலேயென்று தேவர்கள் கண்டு மயங்கவும் போம்வழியிலுள்ள சோலைகளும் மலைகளும் சுண்ணமாகவும் பரதாழ்வானுடன் செல்லும் சேனை பாலைவனமடைந்தது. தூசியெங்கு மெழுந்தன. அதனால் வெப்பமுள்ள சூரியனும் தன் வெப்பநீங்கினான். யானைகள் மதம் பொழிவதனால் சனங்கள் காலடிவைத்துப் போக மாட்டாமல் வருந்தினர். கூர்மையுள்ள வேலைத்தாங்கிய அரசர் வெண்குடை மாநிழலைப்போல நிழலைச்செய்தன, தீப்பொறியானது பூமியிற் கிடக்கும் பருக்கைக்கற்கள் உள்ள பாறைமேல் உயர்ந்த கொடிகளால் பந்தலைப்போலக் குளிர்ந்தன. பெருகுகின்ற செல்வத்தை நீ பிடியென்ற தன் தாயாகிய கைகேசியிடத்து மாறுபட்ட கோபத்தால் செம்மையாய் நிறங்கருகிய பரதாழ்வானைக் கண்டு உலவைக்கூட்டம், காதலால் உருகித்தளிர்த்தன ; பாலையை மருதமாகவே யெண்ணிக்கொண்டு நடந்தசேனை சித்திர கூடஞ் சேர்ந்தது. இவ்வாறுவருஞ் சேனையின் கோலாகலத்தை இளையவன் மலையின்மேலேறிப் பார்த்துப் பெருங்கோபங்கொண்டு இதென்ன விபரீதம்! தன்னுள்ளத்திற் பகை வைத்துக்கொண்டே வெளிக்குப் பட்சம் காட்டி இப்பரதன் படைகூட்டிக்கொண்டு விரதமேற்கொண்டிருந்த சீராமபிரான்மேற் பகைகொண்டுவந்தானென்று அம்மலையினின்றும் குதித்துப் பூமியிலுள்ள மலைகளு நீறுய்ப்போக மிதித்துச் சீராமபிரானை விரைந்தடைந்து நமது பரதன் சேனையைக் கூட்டிக்கொண்டு போர்க்கோலங்கொண்டு வருகிறான். நம்மைச் சிறிதும் மதித்திலனென்றும் உடைவாளை யிறுக்கிக் கட்டிக்கொண்டு வீரகண்டாமணியையும் பலசரங்கள் நிரம்பிய புட்டிலையும் தரித்துக் கவசமணிந்து வரிந்துகட்டிய வில்லேந்திக்கொண்டு சீராமபிரானை அடிவணங்கி நின்றதைச் சொல்வானுயினான். இரகுநாயகனே! இம்மை மறுமை யென்னு மிரண்டையு மிழந்த அப்பரதனுடைய தோட்பருமையும் அவன்படைத்த சேனையின் பெருமையும் உன்னொடு பிறந்த என்னொருமையும் காணவேண்டுகிறேன். படாத துன்பமெல்லாம்படப் பிறந்த யானைத்திடர்கள் உருண்டுகிடக்கவும் தேர்கள் இழுத்துக்கொண்டுபோகவும் குடர்களெல்லாம் நிரைந்துகிடக்கவும், உதிரவெள்ள மோடவும், காலாட்கள் தம்படைகளும் கைகளும் துண்டமாகக் கவசமணிந்த மார்பு துளைக்கப்பட்டு உயிரோடு

உதிரத்தையும் தோயாமல் கடுகணைகள் திசையானைகளையும் பயப்படும்படி
செய்கின்றேன் யானைத் தந்தத்தாற்செய்த தேர்களும் குதிரைகளும் பொற்
றகட்டினிடத்தே அலகைக ளற்றுப்போன கேடகத்தை யணிந்த தடங்கை
கள் நாலக்கொண்டு சங்கீதம்பாடி நாடக நடிப்பதையும் இப்பரதனுடைய
சேனைவெள்ளத்தை இமைப்போதிற் கொன்றுகுவித்து விண்முழுதுகு நெருங்கிய
வும் மண்முழுதுகு அற்றிக்கொண்டிருக்கவும் படையெலாம் இப்படிப்பட்ட
இரத்தவெள்ளத்தின்மேல் நீந்திக்கொண்டு மெய்சிவந்தகுறள்களும் பாரிடமு
ம் கவந்தமும் இவ் வுலகமுழுதும் சீராமபிரான் வசமாய்ப் போய்விட்டதே
யென்று ஆனந்தக்கூத்தாடவும் பார்க்கலாம். நெற்றிப்பட்டமணிந்த யானைக்
கூட்டங்களும், குதிரைக்கூட்டங்களும் காலாட்களும் யுத்தகளத்திலே மடிய
வீழ்மலர்போன்றசிவந்த உதிரத்தால் அலையையுடையகடல்களேழுமொன்று
பட்டு நின்று ஒலிக்கவும் காணலாம். மேலுங்காலாட்களழியவும் வீரருடைய
கைவாளற்றுப்போகவும் விற்கள் துண்டமாகவும் யானைகள்தாளற்றுப் போக
வும் குதிரைகள் தலைகளற்றுப்போகவும் சில வீரருடைய தாளும் தோளுமற்
றுப் போகவும் நான் வடிக்கணை தொடுப்பேன். இதுநிற்க;

இச்சேனையை நடத்திவந்த அப்பரதசத்துருக்கருடைய மார்பை யூடுரு
விக்கழுகிறகுபூண்டு ஓரத்தில் பொன்வடிம்பிழைத்துள்ள என் பாணங்கள்
துவாரமாக்கிப் போகக் காணலாம். அப்பரதனோ கைகேசி சூழ்வினையால்
உலகமுழுதும் வருத்தமுண்டாக்கிய அத்தசரதன் கட்டளையால் தான் பெற்ற
இருநிலத்தை ஆளுவதொழிந்து இன்றென்கட்டளையால் நரகத்தையே யாளச்
செங்கோல் கொடுக்கின்றேன் பாரும்; உலக முழுதும் துறந்துவிட்டு நீர் காட்
டில்வந்துவிட்டதைக்கண்டு வருந்துகின்ற கோசலையன்னையின்வருத்தங் கண்டு
சந்தோஷிக்கிற கைகேசி தன் மகன் பட்டது கண்டு வருந்தி யழுவதையும்
பார்க்கலாம். மேலும் ஒருநொடிப்பொழுதிலேயே இக்கடல்போன்ற சேனை
வெள்ளத்தை மார்பு துருவிச்செல்லும் வடிக்கணையொன்றினால் நான்வெற்றி
கொண்டு திரிபுராந்தகனைப்போல் விளங்குவதைப் பாருமென்று சொல்லிக்
கொண்டிருக்கையில் சீராமபிரான் இளையவனைப் பார்த்து தம்பீ ! இப்பதினா
ன்குலகத்தையும் நீ கலக்குவேனென்பதை யெண்ணினால் அதை விலக்குவ த
ரிது, அதைச் சொல்லவும் வேண்டுமோ ! உன் மனத்திற்குரிய மெய்மையைச்
சொல்கின்றேன்கேள். நமதுகுலத்தாரோ குற்றத்தினின்றுநீங்கினார் எண்ணிப்
பார்க்கையில்யார்தான்யாண்டுமுடிவெய்துவர்? தருமந்தவறினாரும் உண்டோ?
வேதங்களெத்தனையோ அத்தனையும் தம்பிபரதனுடைய செய்கைகளேயாம்,
அவற்றிற்கூறுதன அவன்செய்கைகளாகக் கொள்ளப்படமாட்டா, அதைநீஎ
ன்னிடத்துவைத்த மிக்க அன்பினால் சிறிது மெண்ணாம லிருக்கின்றாய் ; பரத
ன் என்னிடம் சேனைகளைக் கூட்டிக்கொண்டு போர்க்கு வந்தானென்று நினை
க்கின்றாயே ! அவனென்னோடும் போர்செய்ய வந்தானென்று நீயும் நினைக்க
லாமா ! அப்பரதனோ தரும தேவதை, நடுவு நிலைமைக் கோருரையாணி, அ
வனை இப்படியும் நினைக்கப் போமா ! என்னைக்காணும்பொருட்டே இவ்வள
வுதூரம் தேடிவந்தானென்றறியெனச் சொல்லிக்கொண்டிருக்கையில்பரதாழ்

வான்தன் சேனையைப்பின்னேவரக் கட்டளையிட்டுத் தன்னைப் பிரியாத தம்பியாகிய சத்துருக்கனாழ்வானை யழைத்துக்கொண்டு தான் முற்படக் கைகளை யுயரவெடுத்துக்கொண்டு துன்பமே யொருவடிவங் கொண்டதென்று சொல்லும்படி வந்தான். அவன்தூரத்தே வருவதைப் பார்த்தசிராமபிரான் வில்லேந்திக்கொண்டு போர்க்கோலங் கொண்டிருக்கும் இளையவனே! நீபரதன் போர்க்கோலங்கொண்டுவந்தானென்றாயே! அவன்கொண்ட போர்க்கோலத்தையுற்றுப்பாரென்றுதம்பிக்குக்காட்ட, அதைக்கண்டஇளையவன்ஒளியிழந்தமுகத்தையுடையானாய்ப் பரதாழ்வானை வைதசொல்லும் உணர்வும் கோபமும்சோரவில்லை யெறிந்துவிட்டுக் கண்ணீர் பூமியிற்சிந்த நின்றான். பரதாழ்வானோ குற்றமறத்தவஞ்செய்து குறிப்பினாலடைந்த நாயகனைப் பிரிந்து நலத்தினீங்கிய வேதனைமேற்கொண்ட நிலமகள் பொருட்டுவருகின்ற தூதனென்றுசொல்லும்படித்தோன்றி இறந்ததாதையை யெதிர்கண்டார்போலச் சிராமனைப்பார்த்து நீ அறத்தைநினைந்தாயில்லை! அருளை நீங்கினை! முறைமையு மாறிவிட்டனையென்று சொல்லிக்கொண்டே தன்னைமறந்து அச்சிராமபிரானது மலர்போன்ற பாதங்களில்வீழ்ந்து வணங்கியிருண்டோ இல்லையோவென்றுசொல்லவுயிர்ப்படங்கி நின்றான். அதைக்கண்ட சிராமபிரான் கண்ணாகிய தாமரை மலரினின்றும் பொழிகின்ற துன்பக்கண்ணீர் அப்பரதாழ்வானுடைய சடாமகுடநிறைந்து வழிந்துபோகப் பெருமூச் செறிந்து அழுத கண்ணீரருவி பெருக மார்பிலிறுகவணைத்துக்கொண்டு தயாமூலந்தன்மத்தைத் தழுவினாற்போலத் தழுவிநின்று அப்பரதாழ்வான்கொண்ட வேடத்தைக்கண்டு பொருமி விம்மித்தம்பியாகிய பரதனை அப்பா! பரதா! வாளேந்திய தோளையுடைய நமதுபிதாவானவர் சுகமா யிருக்கின்றனரோ வென்றான். அதைக்கேட்ட பரதாழ்வான் சிராமபிரானைப் பார்த்து அண்ணா! அவர் உன் பிரிவென்கிற நோயாலும் அத்தாயினது கொடிய வரமாகிய யமனாலும் தனக்குரிய மெய்யை நிறுத்தித் தான்பரமபதஞ் சென்றாரென்ற வெய்ய சொல்லைக் கேட்கவே, சிராமபிரான் புண்ணில் வேல்சொருகியதுபோல கண்ணும் மனமுங் கறங்கேபோற் சுழலும்படி மண்ணிடை வீழ்ந்துபுலம்பிச் சிறிது முயிர்ப்பில்லாமல் இடியோசை கேட்ட நாகம்போல்வருந்தி யுணர்வொழிந்து பலவிதமாகப் புலம்பலானான். கெடாத தீபம்போன்ற நாயகனே! உலகமுழுதுக்கும் தந்தையே! ஒப்பில்லாத தனியறத்தின் தாயே! தயைக்கிருப்பிடமே! எந்தையே! பகைத்த அரசர்களாகிய யானைகட்குச் சிங்கம்போன்றவனே! நீஇறந்துபட்டாயோ! இனி வாய்மையைக் காப்பவரா ரிருக்கின்றனர். வேதங்கள் சொல்லுகின்றபடி வழுவாமல் யாகஞ்செய்யவல்ல கலைக்கோட்டு முனிவரைக்கொண்டு புத்திரகாமேட்டி செய்து என்னை மகனாகப்பெற்றது நீ உன் இனிய உயிரை இழக்கவோ! உயிர்களைக் காத்துவரும் அரசபாரநான் சுமந்துவர நீ யுடம்பினைவிட்டது இவ்வகையோ! நான் உன்னுயிர்க்குயமனாகவேதோன்றினேனல்லவா! இவ்வரசுரிமையை என்பாரமாக்கி இந்திரியங்கள் அவமாகக்கழியத்தவஞ்செய்தது இதன் பொருட்டோ? வேண்டுகின்ற திறத்தினால் யாரும் வேண்டாத அரசாட்சியை மேற்கொண்டு இவ்வுலகத்திற் கிடரையே பெருக்கிய புல்லறிவினையுடை

யேனுகிய யான் மாண்டு முடிவதேயல்லாமல் மாயாத வுடம்பைக் கொண்டு ஆண்டுவருவதினி யாருடையமுகத்தை நோக்கிக்கொண்டிருப்பதற்கு? யான் திருவயோத்தியை விட்டுக் காட்டுக்குப் போய் விட்டேனென்று கேள்விப் பட்டமாத்திரத்திலே பொறுது வானடைந்தாயே! அடியேன் வாழ்வுவிரும்பி யுயிர்வாழ்ந்துகொண் டிருக்கின்றேனே, குளிர்ச்சியைச் சந்திரனுக்குங் கொடுக்கும் தண்ணளியையுடையானே! ஈகையும் மானமும்மேலே தேவர்களாலும் போக்க முடியாதவன்மையும் செங்கோனெறியும் கெடாதவுண்மையுமென்று சொல்லப்படுவனவற்றை நீயுடன் கொண்டுபோய் விட்டாயோ! என்று பல பலவிதமாகப் புலம்பிக்கொண்டிருந்த இரகுநாயகனைத் தம்பியர்மூவரும்மற்ற அரசரும் தாங்கிக்கொண்டார்கள். வசிட்டமுனிவரோ அவ்விராகவனைத்தேற் றினர். அந்தருணத்திற் சொல்லற்கரிதாகிய நோன்பினையுடைய பரத்துவாசர் முதலிய முனிவரும் அநேக அரசர்களும் மந்திரிமார்களும் பிறரும் வந்துசேர்ந்தார்கள். சிராமபிரானைப்பார்த்து வசிட்டமுனிவர் அப்பா! இராமா? துறப்பநும் நல்லறத்துறையுமேயல்லாமல் வேறுதுணை யென்பதுயிர்கட்குக்கிடையவே கிடையாது, உண்மையிலே பிறவிகள் பலகோடி யெனத்துணியப்படும். அவைதண்மையும்வெம்மையும்தழுவினவென்கிறவண்மையை நோக்கியமனிடத்திற்பொறுமையிருக்கின்றதென்றுநினைக்கலாமோ! மேலும்அறுபதினுயிர வருடம் இவ்வுலகத்தையரசாண்ட உன்தகப்பனுக்காகநீயிரங்குவதுநியாயமாமோ! இதுவுமன்றி * திரிமூர்த்திகளும் காலமென்னு மொரு வலையைக்கடப்பார்களோ! கண்முதலாகிய காட்சிகளுக்கு விடயமாவனவும் கரையில்லாத நீளமுடையனவும், உள்பொருட்கெல்லாம் ஊற்றமாவனவுமாகிய மண்முதலாகிய பூதங்கள்மாயுமென்றபோது எண்ணுமுதற்பொருளாகியஉயிர்க்காகநீயிரங்கவேண்டுமோ! † புண்ணியமாகிய நறுநெய்யும் காலமாகிய திரியும் விதி

---

* சிலமுந் தருமமுஞ் சிதைவில் செய்கையும்
சூலமுந் திகிரியுஞ் சொல்லுந் தாங்கிய
மூலம்வந் துதவிய மூவர்க் காயினும்
காலமென் றொருவலை கடக்க லாகுமோ.

இ-ள். ஒழுக்கமும் அறனும் கேடில் செய்கையு முடையராய சூலப்படையும் சக்கரமும் வாக்காயுதமுந் தாங்கிய முதற்கடவுள் உதவிய மூவர்க்காயினும் காலமென்ற தோர்வலை கடத்தற் பாலதாந் தன்மையோ என்க.

மூலம் - முதற்கடவுள், மூவர்-படைத்தல், காத்தல் அழித்தலென்னு முத்தொழில் நடாத்து மிறைவர்.

ஆயினும் என்னும் உம்மை உயர்வுசிறப்பு, ஏனைய எண் - காலத்தை வலையாக உருவகஞ் செயப்பட்டது. இது எதிர் நிரனிறை. ஓ எதிர்மறை. சீலமும் சொல்லும் தருமமும் திகிரியும், சிதைவில் செய்கையும் சூலமுடையார் முறையே பிரமன் மாலுருத்திரனென்னு மிறைவர் மூவர்; அவர் பரம்பொருள் வயிற்றேன்றலின் மூலம்வந் துதவிய மூவரென்றும், அவர்களுங் கற்பாந்தகாலத் தொடுங்கலின் காலமென்றொரு வலைகடக்கலாகுமோ வென்றுங் கூறினர்.

† புண்ணிய நறுநெயிற் பொருவில் காலமாம்
திண்ணிய திரியினில் விதியென் தீயினில்
எண்ணிய வின்னவை யிரண்டுமெஞ்சினல்
முண்ணலே யவிவதற் கைய மாவதோ.

யாகிய தீயுமாகிய விளக்கில் திரியும் நெய்யும் எஞ்சினால் தீ யவியாமற் போய் விடுமோ! இந்த வுலகத்திலும் இடரிலே கிடந்து அந்த உலகத்திலும் நரகத்தி லாழ்ந்துபின் வெவ்வினை யநுபவிப்பனவாகிய விரிந்தயோனி பேதங்கள் இவ் வளவினவென்று எண்ணப்படுமோ! ஆகையால் நீ சிறிதும் வருந்த வேண் டாம், இதைப்பார்க்கிலும் அவர்க் குய்யுந் திறமுண்டோ! செய்யத்தக்க கரு மங்களை யெல்லாம் செய்து முடித்து உன் கையால் மும்முறை எள்ளு நீரும் கொண்டு தருப்பணஞ்செய்யவேண்டுமென்றார். இவ்வாறு சொல்லவே சீராம பிரானைத் தாங்கிக்கொண்டு அரசரெல்லாந்திரண்டுபோய்ச் சேர்ந்தனர். வசிட் டமுனிவரும் அவ்விடத்திற் சென்றனர். உடனே இரகுநாயகன் நீரில் முழுகி யெழுந்து வசிட்டமுனிவர் தந்தைக்குரிய கடனைச்செய்ய மூன்று கைநீர் விதி முறை விடுத்துப் பின்னுஞ் செய்யவேண்டிய கருமங்களெல்லாஞ்செய்து முடி த்தான். பிறகு இரகுநந்தனன் மந்திரத்தவரும் மாதவரும் மன்னவரும் பிற ரும் சூழச் சானகியிருந்த சாலையை யடைந்தான். அப்போது தனியேநடந்து வந்த பரதன் தன்கைகளாற் கண்ணிலறைந்து கொண்டு அவ்வன்னை காலில் வீழ்ந்தழ அதைக்கண்ட இரகுவீரன் அவனைத்தாங்கிக்கொண்டு சீதையைப் பார்த்து அரசர்பெருமான் அன்பினால் இறந்துபட்டானென்றான். அதைக்கே ட்ட சானகி கண்ணென்னும் கடல் பெருங் கலுழியைச் சொரிய மண்ணென் னுஞ் செவிலித்தாய் மேல் வைத்த கையை யுடையளாய்த் தன் கணவன் பின் னே நடந்து வந்தமையால் தனக்குக் காடானது திருவயோத்தி நகரத்தையே யொத்திருந்த தாயினும் மன்னர் பெருமான் இறந்து பட்டா னென்ற சொல் தன் செவித்தொளையில் புகுந்தமையால் துயரமாகிய கடலுக் கடிவைத்தாள். அதைக் கண்ட முனிவர்களுடைய தருமப் பத்தினிமார்கள் அவளைத் தங் கையா லேந்திக்கொண்டு நீராட்டித் துயர மகற்றி இரகுவீரனிடத்திலே சேர் த்தனர். அப்போது மந்திரியாகிய சுமந்திரன் இரகுநாயகன் முதலிய நால் வரையும்பெற்ற தாய்மார் மூவருடனேவந்து அவ்விரகுநாயகனை வணங்கினின் றான். இரகுவீரனே தனக்கு முன்னே யெழுந்தருளிய தாய்மார் மூவரை யும் பார்த்தருளி அவர்கள் பாதங்களில் வீழ்ந்து வணங்கி "எந்தையா ரெங்

இ - ள். புண்ணியமாகிய நல்ல நெய்யினாலும் ஒப்பி கந்த காலமாகிய திண்ணிய திரியினாலும் விதி யென்கின்ற தீயினாலுமாகிய எண்ணப்பட்ட விளக்கில் அவைக ளிரண்டும் குறைபடின், பெரியானே! அவ்விளக் கவிதற் கையமாவதுண்டோ என்க.

ஒருயிர் தான்செய்த புண்ணியம்பற்றியே மனிதவுடலெய்து வசனாற் புண்ணிய நறு நெயியென்றும், காலமென்னும் அருவப்பொருள் உலகியல் நடாத்தற் பொருட்டு ஆதித் தன்முதலிய அளவைகளாற் கூறப்படுவதல்லது தானாகக் கூறப்படாமையின் காலமாந் திண்ணிய திரியென்றமாத்திரை யொழியாது பொருவிலென் றதனையடைகொடுத்தும், தீத்தன்னைப் பற்றினானைக் கெடுப்பது போலத் தன்னை யாக்கினானைக் கெடுத்தலின் விதி யென் தீயினியென்றும், விதியாகிய தீயும், காலமாகிய திரியுமெஞ்சியவழிப் புண்ணியத் தானுய மனிதவுடல்விட் டொழிந்து உயிர்நீக்கலின், எண்ணிய வின்னவை யிரண்டு மெஞ்சினால் அவிவதற் கையமாவதோ வென்றுங் கூறினார்.

இது இயைபுருவகம். அண்ணல் - ஆகுபெயர், பெரியான், பொரு - ஒப்பு. எஞ் சல் - குறைதல், அவிதல் - கெடுதல்,

குற்றார் சொல்லுங்கோள்" என்று கேட்க, அதைக் கேட்ட தாய்மார்களும் கதறியழத் தொடங்கினர். அதைக்கண்ட சேனைகளும் மாதர்களும் அழுது புலம்பினார்கள். பின்பு தாய்மார்கள் மூவரும் சானகியைக் கட்டிக்கொண்டு புலம்பி யழுது நின்றார்கள். இவ்வாறிருக்கையில் சேனைத்தலைவரும் நகரமாந்தரும் மற்றையோரும் அரசர்களும் மாதவரும் கூடிக்கொண்டு ஸ்ரீராமபிரானிருந்தவிடஞ் சென்று சேர்ந்தார்கள். இங்ஙனமாகவே சர்ப்பசயனந்துறந்து திரு வயோத்தியிற் பிறந்த இரகுநாயகன் தன் குலத்தே தோன்றிய இறைவனாகையால் சூரியனும் அவனைப்போலத்தானுந்தனக்குரிய கடன்செய்யும்படி நீரின்முழுக வேண்டினான் போல மேற்றிசைக் கடலில் முழுகினான்.

அத்தினங் கழிந்த பிறகு அரசர்கள் கூட்டமும் சேனைக் கூட்டமும் மாதர்கள் கூட்டமும் சூழ்ந்து இருந்த பரதன் இளையவன் சத்துருக்கனென்னும் தம்பிமாரும் புடைசூழ இரகுநாயகன் வீற்றிருந்து பரதனைப் பார்த்து நமது பிதாவோ இறந்து பட்டனன், பூமி முழுதும் அவன் ஆணையால் உன்னதேயாயின, நீ விரதவேடங் கொள்வானேனென்று கேட்க, அதைக்கேட்டு மனம் பதைபதைத்தெழுந்து கைகூப்பிகொண்டு நின்று, இரகுநாயகனைப்பார்த்து நீயல்லது அறத்தின்வழிநிற்பவர் யார்! அதைத்தவறலாமோ! மனத்திற் பொருந்தாதவரத்தினால் உன்னையும் உனக்குப்பொருந்தாதநிலையில் நிறுத்திய சக்கரவர்த்தியினது மனத்திற்குப்பொருந்தாதவளாகிய கைகேசிபெற்றமகனாகையால் எண்ணிப் பார்க்கையில் தவம் அடுப்பது எனக்குப் பொருந்தாதே! உலகமுழுவதும் நோவதாக நோய்மூட்டிய பாவகாரியாகிய கைகேசி பெற்ற பாவியாகையால் நான்சாவவுமறியேன், தவஞ்செய்வானுமல்லேன், யார்தானாகி இப்பழியினின்றும் கரையேறுவேன், கற்பினைநீங்கிய மாதர்நிலைமையும் பொறுமையினீங்கிய தவமும் அருளாகிய துறையினீங்கிய அறமும் தொல்லையோர் முறையி னீங்கிய அரசினும் முந்துமோ! நீ பிறந்ததனாலுடைய பிரிவில்லாத தொன்மையான அப்பதத்தைத்துறந்து மாதவஞ்செயத் தொடங்கினா யென்றால் மறந்து நீதியினின்றும் மாறுபட்டு வாளிற்கொன்று அறத்தைத்தின்றாற் போல அரசாளத் தொடங்குவேனோ? உன்னிடத்தே பேரன்பினாலே அரசர் பெருமான் இறந்துபட நீகாடேவாழ்க்கையாகப் புறப்பட்டுப் போக வஞ்சகனைப் போல இவ்வரசாட்சியைக் கைக்கொள்ள நீயில்லாத சமையத்தை நோக்குவதற்கு நான் பகைவனோ! உன் தந்தைசெய்த தீமையும் உலகமிதுவரையுமடையாதநோயைத்தந்ததாய்செய்த பெருந்தீமையுநீங்க நீயிங்கிருந்துமீண்டு போய் அரசாள வேண்டுகின்றேனென்று தன் கருத்தைத் தெரிவித்தான். இப்படிசொன்ன பரதாழ்வானுடைய கருத்தைச் சீர்தூக்கிப் பார்த்த இரகுநாயகன் இவன் எண்ணம் இப்படியா யிருக்கின்றது? என்று அவனைப்பார்த்துச் சொல்லானாயினான்,

உலகத்திலே முறையும்வாய்மையுநீதியும் மேன்மையும் அறமுமுதலிய யாவும் சுருதிநூல் விடாத இறைவர்கள் ஏவலினாற் பொருந்துவன வென்று தெரிந்துகொள்! மேலும் மேலான கேள்விச் செல்வமும் ஞானமும் ஒழுக்க

மும் வினையின் மேன்மையும் நாம் தொழற்குரிய கடவுளரும் நம்மை யீன்ற இருமுது குரவரென்றே தெரிந்துகொள், ஆகையினல் 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்றும், 'தாயிற் சிறந்தொரு கோயிலுமில்லை' என்றும் பெரியோர்கள் சொல்லி யிருக்கின்றனர். தாய்வரம் பெற்றுக்கொள்ளத் தந்தையினது ஆணையால் நமது குலதருமமாகியசத்தியவாக்கிய பரிபாலனஞ் செய்யவே இக்காடுவந்து சேர்ந்து தவஞ்செய்வதாகிய அறத்தை மேற்கொண்டேன், அதை நீதவிர்ந்து அரசுபுரிய அழைப்பதுந் தகுதியோ? மக்களாவார் கடமை தாய் தந்தையரைப் புகழுக் குரியராகச் செய்வதோ; அல்லது பழி பூணும்படி செய்து முடிப்பதோ! இம்மையிலே பொய்புரைத்து உலகத்தில் உலோபியாகச் செய்துவிட்டு நமது தந்தையை மீளாத நரகமாளும்படியாக்கி நான் மாதர்க ளின்பநல மனுபவித்து அரசச்செல்வம் பெறுவதுவோ தகுதி! வரத்தினுல் நமது தந்தை சொல் மரபினுல் வந்த பூமி முழுவதும் உன்னதே யென்று சொல்லிவிட்டமையால் இவ்வர சுனக்கே யுரியது நீயே யாளவேண்டுகின்றே னென்றுன். அதைக் கேட்ட பரதாழ்வான் என்முன்னேவந்து பிறந்து உலகமூன்றினும் பின்னை யொப்புரைக்கப்படாத நீபிறந்த இவ்வரசுரிமை என்னதென்று நீ சொல்வதானுல் அவ்வரசுரிமையை நானே கொடுத்துவிட்டேன்; நீமகுடாபிஷேகஞ்செய்துகொண்டு அரசாள வேண்டுகின்றேனென்று இரகுநாயகன்சேவடியில் வீழ்ந்துவணங்கிக்கேட்டுகொண்டான். அதைக் கண்ட இரகுநாயகன் பரதாழ்வானைப்பார்த்து அன்புடைய சிந்தை கொண்டு இவ்வுலக முழுதும் என்வசமே நீ செய்தாயானுல் அது முறையாமோ! வசை யுண்டாமன்றே! நம்மைப்பயந்த தந்தையார் சொல்ல நான் மேற்கண்ட வருஷம் பதினுலும் இன்றோடு முற்றுப்பெறுமோ! வாய்மையென்னுமிதுவல்லாமல் உலகமும் இதுசரியென்றேயேற்றுக்கொள்ளுமா! தீமையானது அதினுல் தீர்வதல்லாமலாய் மெய்யாக வேறுசொல்ல யாதிருக்கின்றது! நமது தந்தை சொன்ன கட்டளையின்படிமேற்கொண்டுவந்தபதினுலாண்டும் நான்வனத்தில் வாசஞ்செய்து கொண்டிருக்கின்றேன், அதுவரையும் எனக்கு நீ கொடுத்த அவ்வரசுரிமைமுழுதும் என்னுணை கடவாதபடி நீயரசாண்டு வரவேண்டுகின்றேன். இதுநிற்க; நான் சக்கரவர்த்தி யிருக்கையிலே 'மூத்தோர் சொல்வார்த்தையமிர்தம்' என்றபடி அவரிட்ட கட்டளைக்கஞ்சி யொப்புக் கொண்டேனே அப்படியே நீயும் நான்சொன்னபடியே கேட்டு நடக்கவேண்டும்நான்சொன்னபடியே செய், துயரப்பட வேண்டாமென்று சொல்ல, அப்படி சொல்லிக் கொண்டிருந்த பரதாழ்வானைத் தடுத்து விட்டு வசிட்ட முனிவர் சொல்லத் தொடங்கினர்.

முன்னுளில் திருமாமகள் கொழுநனுகிய பகவான் தன்னுதியஞ் சோதி யுருவை யங்குவைத்து இக்கடலிடத்தி னின்றும் ஆதிவராகத் திருவுருவாய் இங்குத்தோன்றி இப்பூப்பிராட்டியைத் தன்வெண்கோட்டிற் சந்திரனிடத்தே யுள்ள மறுவைப்போல எந்தி விளங்கினுன். அப்படிப்பட்ட காலத்தில் ஐம்பெரும் பூதமும் வெளியொளித்தேவையும் புகுந்த பின்பு இறைவனும் மீளவும் கடலைப்படைத்து அதில் அறிதுயி லமர்ந்தருளினுன். அக்கடல்வண்ணப்

பெருமான் தன் உந்தி மலரிற் றோன்றிய நாற்றிதழ்க் கமலத்தி லிருந்தும் விரைந்து யாரையும் படைக்கப் பிரமதேவன் அவதரித்தான் அன்று அவன் படைக்க ஆகிய இவ்வுலகமுழுதும் உன்குலத்திற் பிறந்த அரசர்கள் இன்று வரையிலும் முறைதவறாமல் அரசாண்டுவந்தார்கள். ஆயினும் நான் உனக்குச் சொல்ல வேண்டிய தொன்றிருக்கின்றது, அதைச் சொல்லுகின்றேன் கேள்! உலகத்தில் ஐம்பெருங் குரவரென்று நீதிநூல்கள் எடுத்துச்சொன்னவற்றில் இம்மை மறுமையென்னு மிரண்டையும் தரும் கல்வியைப் போதித்த போதகாசிரியனே சிறந்தவனென்றுசொல்வார்களே நான்உனக்குவேண்டிய சமஸ்த வித்தைகளையும் கற்பித்தேன், அது மெய்மையாகையால் என்சொற்படி நீயுனக்குரிய நாட்டிற்குவந்து அதைக்கைப்பற்றிக்கொண்டரசாளவேண்டுகின்றேன் என்று சொல்லிமுடித்தார். அதைக் கேட்ட காகுதஸ்தவம்சோத்தான்வசிட்டமுனிவரைத் தாமரைமலரைப்பழித்த தமதுகைகளால்தொழுது வணங்கிப் பெரியோரே யாகட்டும், தன்னுசிரியரே யாகட்டும், தாய்போன்றவரே யாகட்டும், தமதுமக்களே யாகட்டும், பிரமதேவன் பெற்றசிறுவனாகிய எமது குலதெய்வமே! நானின்னது செய்வேனென்று ஒப்புக்கொண்டபின்பு அதைமறுத்துப்பேசுவதுந்தகுதியாகுமா! தாய்அன்றுவரங்கொள்ளவிசைந்து தந்தைமகிழ்ந்துசெய்யக் கட்டளையிட்ட எப்பொருளும் நானே செய்வேனென்று ஒப்புக்கொண்டபின்பதைச் செய்யாதிருப்பதைப் பார்க்கிலும்நாயகத்திரிவதேநல்லது, முன்னமேஅவர்கள் கட்டளையிட்டபடியே அதைச்செய்வேனென்று ஒப்புக்கொண்டபின்பு இப்போது தேவரீர் கட்டளைபிறந்தது! நான் எப்படிச்செய்ய மனந்துணிவேனென்றனன். அதைக்கேட்ட பரதாழ்வானும் அப்படியானல் நாடுஆளவேண்டிய கருத்துடையவர்கள் நாட்டை யரசாண்டுவரட்டும், நான்காட்டிலிருந்துகொண்டு தவஞ்செய்கிறேனென்றான். அச்சமையத்தில் தேவர்களெல்லாரும் இப்பரதாழ்வான் ஸ்ரீராமபிரானையழைத்துக் கொண்டுபோய் விடுவானானல் நமக்குக்காரியக்கேடாய் விடுமேயென்றுகாயத்தின்மறைந்துகொண்டு நின்று புகழுவரிய பெருங்குணத்துப் புண்டரீகக்கட் புரவலனாகிய ஸ்ரீராமபிரான் இங்கே தன் தந்தைசொற் கடவாமல் பதினாலாண்டும் வனசஞ்சாரஞ்செய்தேவரவேண்டும், அதுவரையிலும் நீ அவன்சொற் கடவாமல் இவ்வுலகமுழுதுமே அரசாண்டு வரவேண்டுமென்று பரதனைநோக்கிச் சொல்லினர்.

அதைக்கேட்ட இரகுநாயகனும் தேவர்களும் தன்கருத்தையேசொன்னமையால் இனி மறப்பது தகுதியல்ல, இதுவரையிலும் நீ என்னுணையைக்கடவாமல் அரசாண்டுவரவேண்டுகின்றேனென்று பரதன்கையைப் பிடித்துச்சொல்ல,அதைக்கேட்ட பரதாழ்வான் இரகுநாயகனைப்பார்த்து தேவரீர் கட்டளையின்படியே நான் பதினாலாண்டும் நாடடைந்து அரசாண்டுவந்தாலும்.பதினாலாண்டுங்கழிந்ததே நீரெழுந்தருளி அரசாட்சியை மேற்கொள்ள மாட்டீராயின் யான் அக்கினிப்பிரவேசமாவது சத்தியமென்றான். அதைக்கேட்ட இராகவபிரான் மிக மகிழ்ச்சி பெருகி அப்படியே யாகட்டுமென்று சொல்ல, பரதனும் வேறுசெய்யவகையறியாமல் தேவரீர்திருவடி நிலைகளாகிய திருப்பாதுக

ங்களிரண்டையும் எனக் களித்தருள வேண்டு மென்றே வேண்டிக் கொள்ள, எல்லாச்செல்வமுந் தருவனவாகிய அத்திருப்பாதுகங்களிரண்டனையும் பெற்றுக்கொண்டு அரதகண்ணும் சிந்தியழுக்குமாய் அவைகளைத் தன்முடி மேல் எழுந்தருளப்பண்ணிக்கொண்டு இராகவபிரானிடத்தே விடை பெற்றுக்கொண்டு தாய்மாரும் மாதவரும் பெரியோரும் சேனைகளும் தம்பியும் தன்னைச் சூழ்ந்துவரச்சென்றான். வசிட்டமுனிவரும் பரத்துவாசமுனிவரும் குகப்பெருமாளும் ஸ்ரீராமபிரானிடத்தே விடை பெற்றுக்கொண்டு சென்றனர். ஆகாயத்தில் மறைந்திருந்த தேவர்களும் போய்விட்டனர். பரதனும் அத்திருப்பாதுகங்களைத் தலைமேற் சுமந்துகொண்டு கங்கையைக் கடந்து திருவயோத்திக்கணுக்கமான நந்திக்கிராமத்தி லெழுந்தருளி யிருந்துகொண்டு திருப்பாதுகங்களை செங்கோல் செலுத்திவரப் பஞ்சேந்திரிய நிக்கிரகஞ் செய்துகொண்டு அல்லும் பகலும் கண்ணீரருவிபோலப் பெருக்கெடுப்பத் தான் தென்றிசையே நோக்கித் தம்பியுடனிருந்தான். இப்பால் சித்திரகூடத்திலிருந்த இரகுநாயகன் நகரமாந்தரும் தம்பியிருவரும் தாய்மாரும் நம்பால் வைத்திருந்த அன்பால் இங்கேவந்து அடிக்கடி நம்மை வருத்துவார்களே, இங்கேயிருப்பது நமக்குச் சரியல்லவென்று தம்பியும் சானகியும் தொடர்ந்துவரத்தென்றிசையே நோக்கி நடந்தான்,

கிளைகண்டு நீங்கு படலம்.

அயோத்தியாகாண்டம்

முற்றுப்பெற்றது.

---



ஸ்ரீ

ஸ்ரீராமஜயம்.

# ஆரணியகாண்டம்.

## விராதன் வதைப்படலம்.

பேதி யாதுநிமிர் பேதவுரு வம்பி றழ்கிலா
ஓதி யோதியுண ருந்தொறு முணர்ச்சி யுதவும்
வேத வேதியர் விரிஞ்சன்முத லோர்தெ ரிகிலா
ஆதி தேவரவ ரெம்மறிவி னுக்க ரியரோ.

முத்திருத்தி அவை யிருந்தாற்போன்ற நகையாளாகிய சானகியாரோடும் வில்லாளிகளாகிய இராம லட்சுமணரிருவரும் காமம் வெகுளி மயக்கமென்னு முக்குற்றமுங்கடிந்த காரணத்தால் அத்திரியென்னும் பெயரையுடைய முனிவரது ஆச்சிரமத்தை யடைந்தனர். அது இலைகளடர்ந்த ஆலமரங்கள் நெருங்கிய சோலையுடையது; அவ்வாச்சிரமத்தை யடைந்து அதிலெழுந்தருளி யிருக்கும் அம்முனிவரது பாதமலரை வணங்கி நின்றனர். அதற்கு அம்முனிவர் நீங்கள் இவ்விடத்தி லெழுந்தருளித் தெரிசனந்தந்தது எளிதாமோ! தேவர்களியாவரும் இங்கேயெழுந்தருளியதற் கொப்பாகுமே. எம்மவரில் யாவர் இப்படி நீங்கள் வந்தருளத் தவஞ்செய்தவர்! என்று மனமுருகி நின்றான். அன்று அம்முனிவருடன் அவரதாச்சிரமத்தி லெழுந்தருளியிருந்து அவரது மனைவியாகிய அசூயை நீங்கியாளென்னும் காரணப் பெயருள்ள அநசூயை என்பவள் பணியால் ஆடை ஆபரணம் பெற்றுச் சானகியாருடனும் தம்பியுடனும் தாம் தண்டகாரணிய மடைந்தனர். இவ்வாறு தண்டகவனத்தை நாடிவருகையில் பதினாறு யானைகளும் அதற்கிரட்டி சிங்கங்களும் யாளிகள் பதினாறுமாகப் பிணைத்துப் போட்டிருக்கும் கையிலே சூலம் பிடித்துக்கொண்டும், மேகங்கள் சுற்றிக்கிடந்த செம்பட்ட மயிரையுடைய முடியும் ஆலவிஷம் ஒருருவங்கொண்டு நடந்ததென்று சொல்லத் தன்னடையாற் பஞ்சுபட்டபாடு படும்படி மலைகளைச் செய்யும் பாதமுடையவனாய்ப் புண்துளங்கிய கண்கள் தீப்பொறி சிதறவும் ஆகாயங்குலுங்கவும் மலைகள் குலுங்கவும் சூரியனும்கண் டுள்ளங்கலங்கவும் கடல்புடை சூழ்ந்த காசினி குலுங்கவும் கூற்றுவனு மனந்தளரவும், சிங்கங்கள் முழங்குஞ் செவிகளிற் புகுந்து, தங்கவும், அழகிய மேருவும் குழையவும் யுத்தத்தின் மடிந்த வீரருடைய உதிரத்தினாலாகிய செச்சையோடு நால்வகைச் சேனைகளையும் வாரி மலைப்பாம்புகளாற் பிணைத்து மாலையாக விளங்கும் தோளும் மலைகள் நெருங்கினவே யெனத் தக்க யானைகள் ஒன்றோடொன் றடுக்கியனவாய்த் தடக்கையுதவ அவற்றை மென்று தின்னுகின்ற பகுவாயும் அவ்வாறு தின்று மடங்காப் பசியையும், நாகாதிபருடைய மணிகளைப் பதித்தாலொத்து

அவற்றைப் பருத்தாற்போன்ற தேவர்கள் விமானங்களை யிடையிலிட்டு நவக்கிரகங்களையும் தாராகணங்களையுந் தொகுத்து ஆக்கிய சன்னவீரம் பிரகாசிக்கின்ற விசாலமான மார்பும் செம்பட்டமயிரும் ஒருபக்கம் விளங்கக் கும்பம்போன்ற நெற்றியில் வசித்த ஐராவதத்தினது நெற்றிப்பட்டமும், தந்தத்தினாற் பூணப்பட்டிருக்கும் கிம்புரிப் பூணாகிய பெரிய வாகுவலயம் விளங்கவும்,கருமையானதொரு வடிவங் கொண்டதுபோல நின்று கொடிய செயலனைத்தும் புழுங்கி யெழவும் பாதகங்களும் விடமுங் கனலும் மிகவும் பிரகாசிக்கவும், கலிகாலமென்னும்படிப் புலித்தோல்களையும் யானைத்தோல்களையும் ஆடையாகக் கொண்டு திசைக்களிறுகளையும் மகா நாகங்களையும் கச்சாக வணிந்து சர்ப்பராசர்களை வாகுவலயமாகப் பிடித்தணிந்து சலஞ்சலம் கங்கணமாகக் கைகளில் விளங்கவும் பொன்மலையும் வெள்ளிமலையும் தம்முள் மாறுபட்டுப் பந்துபட்டபாடுபடச்செல்லும் தன்மையாய் இங்கிவ்வுலகத்தி லிருந்தானாயினும் தேவர்கள் சிந்தையினும் விழியினு மிருக்கின்றானென்று சொல்லத்தக்க தன்மையனாய் * மகாபூதங்க ளொருவடிவங்கொண்டு புதியதென் றோதத்தக்க வுருவமுடையான்,இடியுமாறுபடுங் குரலுடையான் பிரமசிருட்டியிற்பட்ட படைப்பிலாகிய இலக்கத்திற் காற்பங்கா மதயானையினது பேராற்றலு மடைந்துள்ளவன் ; அப்படிப்பட்ட அக்கொடிய தானவன் சாரவந்து அயலில் விலங்கி மரங்கள் எல்லாம் வேரற்றுப்போய் விழவும் மலைகள் பிளந்து தூளெழவும் அவ்விராமலட்சுமணரெதிரில் விராதனென்னும் பெயருள்ளவன் ; இடியேறுபோன்ற கொடுந்தொழிலை யுடையவனாய் நில்லுங்கோள் நில்லுங்கோளெனத் தோன்றி நின்று கோரப்பல்லும்

---

* பூத மத்தனையு மோர்வடிவு கொண்டு புதிதென்
றோத வொத்தவுரு வத்தனுரு மொத்த குரலன்
காத லித்தய னளித்தகடை யிட்ட கணிதப்
பாத லக்கமத வெற்பிடை படைத்த வலியான்.

இ-ள். பூதமத்தனையு மோருருக்கொண்டு புதிதென்று கூற வொத்தவடிவினையும் இடியேறுபோலுங் குரலையும் விரும்பி அயன்படைத்த எண்பத்தினான்கிலக்கம் பிறப்பில் காலென்னு மெண்ணினாய மதயானை வலியும் பெற்றுடையான் என்க.

பஞ்சீகரணப்பட்ட மகாபூதங்களுட் சிறிது கூறு அப்பூத பரிணமமாய தோ னரம்பென்பு முதலனவாய தாதுக்களாதலின் இவ்விராதனுருவமங்ஙனமன் றென்பார் பூதமத்தனையு மோர்வடிவு கொண்டென்றும், அவை அங்ஙன முருவமாகக் கண்டாரின்மையின் புதிதென்றோத வொத்தவுருவத்த னென்றும், இடியேற இவன் குரல்கண்டாங்கு நாணலின் உருமொத்த குரலனென்றும், அயன்படைப்பு எண்பத்தினான் கிலக்கமாக, அவற்றிற்காற்கூறாய இருபத்தோரிலக்கமதயானை வலியுடையனாகலின் காதலித்தயனளித்த கடையிட்டகணிதப்பாதலக்க மதவெற்பிடை படைத்த வலியானென்றுங் கூறினார்.

மதவெற்பு - யானை ; கணிதம் - கணக்கு ; பாதம் - கால் ; காதலித்து - விரும்பி அயன் - வடமொழிச்சிதைவு; உம்மை - முற்று.

அயனளித்த கடையிட்ட கணிதமென்றது - 'ஊர்வ பதினொன்றுமொன்பது மானுடம், நீர்ப்பறவை நாற்காலோர் பப்பத்தாஞ் சீரிய-பந்தமாந் தேவர்பதினா லயன் படைத்த, அந்தமில்சேர் தாவரநா லைந்து' என்றதனானறிக.

பகு வாயுந்திறந்து ஒரு சொல்லைச்சொல்லி வாய்மூடிக்கொள்ளுவதற்கு முன்னமே சானகிப்பிராட்டியாரை யொரு கைக்கொண்டு ஆகாயமார்க்கத்திற் பறந்துசென்றான்.

அதைக்கண்ட இராமலட்சுமண ரிருவரும் மிக்க கோபங்கொண்டு வில்லை யிடக்கையிற் பிடித்து வலக்கையில் பாணங்களை யேந்தி எங்கே போகின்றாய் சற்று நில்லு நில்லென்ற அளவில் அவன் அவர்களைப்பார்த்து நான் பிரமனாற்பெற்ற வரத்தினால் என்னுயி ரீங்கேன், நான் ஆயுதங்களொன்று மெடாதிருந்தும் உலகமுழுதும் என்னொடு பகைகொண்டு போர்செய்தாலும் என்னாற் சாதிக்கப்படாத காரியங்களே யில்லை, உங்க ளுயிர்ப்பிச்சைக் கொடுத்தேன் இப்பெண்ணை விட்டுவிட் டோடிப்போய்ப் பிழையுங்கோளென்றுசொல்ல,இரகுநாயகன்கண்டு சிறுநகை புரிந்து இவன் போரென்பதைச்சிறிதேனு மறியான்,இவன் தூரமும் வரமும் கழிந்துபோமெனத்துணிந்துதன் கையிலிருந்த கோதண்டத்தை வளைத்து நாணோசைசெய்ய அவ்வோசை பொறாது மலைகளும் நாகராசர் வாழும் பிலங்களும் வானங்களு மாதியாகிய பதினாலுலகமும் இடியேற்றி னோசை கேட்டாற்போற் கெட்டொழிந்தன. அவன் பூனைவாய்ப்பட்ட பஞ்சரக் கிள்ளைபோலப் பொருமி விம்மிய சானகியாரை விட்டுவிட்டு மனங்கலங்கிச் சிறிதுநேரநின்று நினைத்து அஞ்சன மலைபோன்ற சீராமபிரா னெதிரேவந்து கோபித்துக்கொண்டு நின்று வடவாமுகாக்கினிபோன்ற தன் கையிலிருந்த சூலப்படையை விட்டெறிந்தான். அது திசைகளையும் தேவர்களையும் திசையானைகளையும் எல்லா வுலகங்களையும் கலக்கி ஆலவிடமெனக்கோபித்து மின்னிக்கொண்டுவர அதைக் கண்ட இரகுநாயகன் மேருமலையே முதலாகிய பெரிய மலைகளினும் வலியுள்ள ஒரு பாணத்தையெடுத்து அபிமந்திரித்து விட்டான். இன்றேடே இவ்வரக்கர்குலநாசமானதென்று சொல்லும்படி பகற்போதில்வெள்ளிடையாகிய ஆகாயத்தினின்றும் வான்மீன் வீழ்வதுபோல அச் சூலப்படை இரண்டு துண்டாக வொடிந்தது. அவ்வாறு வொடிந்த துண்டங்களும் திசையின் புறத்தேபோய் விழுந்தன. சூரபதுமனை யொடுக்கிய வேலைப்போன்ற அம்மூவிலை வேலாகிய சூலப்படை யொடிந்துபோகவும் சிறிதும் போரொடுங்காமல் மறத்தாற் புழுங்கிப் பாரையுமொடுக்கும் தன் கையால் பருவதங்களை யெல்லாம் ஊசிவேரோடும் பிடுங்கியெறியத் தலைப்பட்டான். அவ்வாறெறியத் தலைப்பட்ட மலைகள் வட்டமிட்டுக்கொண்டுவர அவை பொடிப் பொடியாய்ப் போம்படிப் பாணங்களைச் சீராமபிரான் விடுக்க அவை வந்த விடம் போனவிடந் தெரியாமற்போயின. * அதைக்கண்ட அக்கொடிய

* ஓம ராமரையொ ருங்குமுணர் வோரு ணர்வுறும்
நாம ராமவரை நல்லற நிறுத்த நணுகித்
தாம ராவணை துறந்துதரை நின்ற வனையோர்
மாம ராமர மிறுத்தது கொடெற்ற வாலும்.

இ-ள். பிரணவப் பொருளாகிய தாசரதியாவாரும், முழுதமுணர்ந்தா ருணரவல்ல பெயரினாரும், தோன்றிய நல்லற நிறுத்த அராவணை துறந்து தரைமேல் னின்றாரு

அரக்கன் ஒரு பெரிய மராமரத்தை வேரோடும் பிடுங்கிக்கொண்டு வந்தெறி யவே, சிராமன் நான்கு பாணங்களைக் கோதண்டத்திற் பூட்டி விடுத்து அதைத் துண்டுகளாக்கிப்பின்னும் ஆறு பாணங்களைத் தோளிலும் ஆறு பாணங்களை மார்பிலும் அழுந்தப் பிரயோகித்தான். நெருங்கிய முட்கள் தன்னுடம்பில் தைத்துத் தொளைக்க விரைந்து பிடுங்கி யெறியும் பெரும் பொறிபோலத் தன்னுடம்பில் தைத்த பாணங்களைப்பிடுங்கி யெறிந்துவிட்டு நின்றான். அதைக்கண்ட சிராமபிரானும் எரியைச்சொரியும் பாணங்களை யபரிமிதமாகப் பிரயோகிக்க அதனாற் சிறிது மறத்தன்மை நீங்காத விரா தன் உடம்பில் மலையினின்று விழும் அருவியாற்றைப்போல இரத்தவெள் ளம் பாய வலிகெட்டுணர்வுகெட்டு நின்றான். அதைக்கண்ட இராம லட்சு மணரிருவரும் இவனே மேன்மையான வரங்கள் படைத்துள்ளவன், நமது பாணங்களாற் கொல்லப்படமாட்டானென்று துணிந்து இருவரும் அவன் கையினைத் துணிக்கலாமென்றே விரைந்து அவன் தோளிலேறவே; அவ னுக்கு முன்னை உணர்வுவந்துகூட அவர்களைத் தன் தோளிலேற்றிக்கொண்டு தன் விசையினும் பதின்மடங்கதிகமாய்ச் சாரிகை திரிந்தான். அது சூரிய சந்திரர் வலம்வரும் மேருமலையை யொத்திருந்த தல்லாமலும் கருடனையும் போன் றிருந்தது.

இவ்வாறு நிகழ்கையில் பெருங்கருணைக் கிடமாகிய தன் கணவன் வஞ் சகனாகிய விராதன் வசப்பட்டிருப்பதுகண்டு மனங்கலங்கி வருத்தப்பட்டுப் பூமியிற் கோதையோடு மொடிந்த கொம்பாமென்ன விழுந்து சேவல்பிடியுண்ட அன்னம்போல ஆற்றாமல் பிறிதொரு துணையுமின்றி மின்னேபோன்ற இடைநுடங்க விரைந்து தொடர்ந்து தாய்போன்ற அன்பினையுடைய அற வோரை விடுத்து என்னையுண்டு பசியாறென்று புலம்பி யழுதாள். அவ் வாறு சானகியார்படும் கன்கலக்கங்கண்ட இளையபெருமாளும் இரகுநாயக னைத் துதித்துநின்று தேவியார் வருந்த நீர் திருவிளையாடல்செய்வ தழகோ! இது பழுது பழுதென்றதன்றி, இவன் வெகுதூரம் போய்விடச் சிந்தித் திருக்கின்றான், இவன் சாவது உமக்கொரு பொருளல்லவென, இரகுநாய

மாகிய சக்கரவர்த்தித் திருமகனுரை யோர் பெரிதாகிய மராமரம்பிடுங்கியதனன் மோத வாறும் என்க,

வாறும் எதிர்கால வினையெச்சம், உம்மீறுகாலங் காட்டிற்று ஓம குறிப்புப் பெய ரெச்சம், உம்மை முற்று. தாம் அசை. சொண்டென்பதுமரீ இயது. தோன்றிய நல்லற நிறுத்த அண்டசத்தி வருந்துயி றறந்து ஆதியஞ்சோதி யுருவை யங்குவைத் தீங்குத் தோன்றினனகலின் நல்லற நிறுத்த நணுகித் தாமராவணை துறந்து தனைநின்றவனா என்றும், அவன் இரவிகுல திலகனுவானுகிய தாசகவாச்சிய னென்பதுணர்த்தற்கு ஓமாமலா என்றும், அவன் திருநாமம் துவாக்கற்ற பெரியானன்றி யேனையாராலோத வொல்லாதாகலின் ஒருங்கு முணர்வோ ருணர்வுறு காமராமவனா என்றும், அன்னனை இவ்விராதன் மராமரங் கொண்டோச்ச வருதலின் மாமராமர மிறுத்தது கொடெற்ற வாறும் என்றுங்கூறினர்.

ஒருங்கு - முழுது, நாமர் - பெயரினர், துறந்து - நீங்கி, இறுத்து - பிடுங்கி, எற்ற- மோச, ஒருபொருள் குறித்த வேறுபெயர்க்கிளவி - தொழில்வேறு கிளப்பி ஒன்றிட னிலவே' என்றசனன் இராமர்முதலிய பலபெயர்வக் தொருதொழில் கிளத்தி எற்ற வென்றும் பயனிலைகொண்டது.

கன் சிரித்து தமது திருவடியால் அவனை உதைக்க விராதன் பூமியில் வீழ்ந்தான். இராமலட்சுமண ரிருவரும் அவன் தோளிரண்டையும் வாள் கொண்டு வெட்டிப் பூமியில் வீழ்த்தித் தாமும் நிலத்திற் குதித்தவராய் இவனைப் பூமியில் கொலைசெய்துவிட்டு நிலத்திற்றோன்றிய பள்ளத்தில் புதைப்பது நலமென்ன, அவ்வாறே இளையபெருமாள் அந்நிலத்திற் பெருங்குழி சமைத்துவைக்க அன்பர்கள் வேண்டிய வேண்டியாங்கெய்தப் பயக்கும் திருவடிகளால் இறைவன் எட்டித்தள்ள அப்போது விரிஞ்சனென ஓர் முட்டை தந்து அதில்வந்த முன்னவனாகிய ஆதிபகவனைப்போல முன்பெற்ற சாபத்தாலாகிய கடையான அரக்கனுருவமொழிந்து தேவரூபம் பெற்று விளங்கி,

“ வேதங்களறைகின்றவுலகெங்கும்விரிந்தனவுன்
பாதங்களிவையென்னிற்படிவங்களெப்படியோ?
ஓதங்கொள்கடலன்றியொன்றினேடொன்றொவ்வாப்
பூதங்கடொறமுறைந்தாலவையன்னைப்பொறுக்குமோ?”

* * * *

“ ஒப்பிறையும்பெறலரியவொருவாமூன்றுவந்துறையும்
அப்புறையுநிறந்தடியேனருந்தவத்தாலணுகுறலால்
இப்பிறவிக்கடல்கடந்தேனினிப்பிறவேனிருவினையும்
துப்புறழுநீர்த்தசுடர்த்திருவடியாற்றுடைத்தாய்நீ.”

இவ்வாறு பல பலவிதமாகத் துதித்துநின்றதைப் பார்த்து நியார் ? நீயிப்படி யானவிதமென்ன ? உள்ளபடியே தெரிவிக்கவேண்டுமென்று சீராமபிரான் கேட்க, கள்ளமாயப் பிறவிகளைக் களைந்தெறியும் சீபாதங்களையுடைய ஆதிபகவனே என் வரலாற்றைக் கேளென்று சொல்லத்தொடங்கினான்.

நான் இவ்வுலகத்தில் அரக்கனாக வுருக்கொண்டேன் ; நானோ தும்புருவென்னும் பெயருடையவன். இருநிதிக் கிழவனாகிய குபேர லோகத்தில் வசித்துக்கொண்டிருந்தவன், நடனஞ்செய்திருந்த அரம்பையைக் கண்டு காமாந்தகனாய் அவள் பாட்டோசை கேட்டு மகிழ்ந்து அவளைக்கூட இக்கூடு கிடைத்தது. அப்படி காமநோய் என்னைத் தாக்கச்செய்த குற்றத்தினால் இரக்கமில்லாமல் ஏவ நான் இவ்வரக்கன் மகனாகப் பிறந்துவிட்டேன். அவ் வியக்கராசன் என் துன்பத்தைத் தீர்க்க நினைந்து பிரதிசாபமாக இரகுநாயகன் பாதந் தீண்டினாற்போமென்று எனக்குத் தெரிவித்தான். வானும் வையமும் வலமாகத்திரிந் துயிர்களை வருத்தித்தின்ன வேற்படையால் உயிரைக் கவர்ந்து வெற்றிகொள்ளும் கிலிஞ்சனென்னு மரக்கனுக்கு மகனாகத் தோன்றிய அன்றுமுதல் இன்றுவரையிலும் நன்மை தீமை என்பவற்றைச் சிறிதேனு நாடாமல் உயிர்களையெல்லாங் கொன்றுதின்று தீயகாரியங்களையே தேடிச்செய்தேன். முன்செய்த புண்ணிய முதிர்ச்சியினால் உன்னுடைய திருவடி தீண்டப்பட்டு இன்று அக்கடையான பிறவி தொலைந்தொழிந்தேன். நானறியாமற் செய்தபிழை யத்தனையும் பொறுக்கவேண்டுகிறேனென்று விடைபெற்றுப் போயினான். இவ்வாறு விராதனைக் கொன்றுவிட்டுப் பிறகு அவ்விடநீங்கி முனிவர்கள் வசிக்கும் இடங்களாகிய ஆச்சிரமங்களை நாடி யடைந்தார்கள்.

விராதன் வதைப்படலம்
முற்றிற்று.

---

## சரபங்கர் பிறப்பு நீங்குபடலம்.

சானகிப்பிராட்டியாரோடும் சரபங்கர் தவஞ்செய்யும் ஆச்சிரமத்திற்கு இரவில் இராமலட்சுமண ரிருவரும் அடைந்தனர். அந்தச் சமையத்தில் ஆயிரங் கண்களையுடைய இந்திரன் வந்திருந்தான். அப்படி வந்த இந்திரன் அச்சரபங்க முனிவரையடைந்து நிற்க, அதைக்கண்ட சரபங்கமுனிவர் இவ்விடத்திற்கு நீ வந்தகாரண மென்னவென்று கேட்க, அதற்கிந்திரன் நின்னாலியற்றப்பட்ட தவம் எவ்வகையாலு மெடுத்துச்சொல்வ தருமை, ஆகையால் உன்பத்தினியோடும் உன்னை அப்பிரமதேவன் தன்னுலகமாகிய சத்தியலோகத்திற்கு அழைத்துவரக் கட்டளையிட்டான். அருந்தவர் பெருமானே! நீ வரவேண்டுகின்றே னென்று சொல்ல, சொல் மிகுகின்ற, பெரும்புகழினையுடைய இந்திரனே! சிலநாளில் அழியும் அப்பதத்தைச் சிறிதேனு மனத்திற் கருதவேமாட்டேன். யான்செய்த மாதவமோ அளவில்லாதன, அவைசெய்யப் பல கற்பங்களுங் கழிந்தன. யானோ சிறுகாலை யில்லாததும் நிலை திரியாததும் குறுகாததும் நெடுகாததும் குணம் வேறுபடாததும் காற்றே முதலிய பூதங்களெல்லாம் அழிந்தபோதும் கலங்காததுமாகிய அப்பரமபதம் அடைய விரும்புகின்றேனென்று இவ்வாறு பலபலவிதமாக வெடுத்துச்சொல்ல, அச்சமயத்தில் இராமலட்சுமண ரிருவரும் வந்தார்கள். அவர்கள் இக்காட்டில் இவ்விதமான பேரொளியுண்டாகக் காரணமென்னவென்று நினைந்து, ஐராவத மிருக்கக்கண்டு இம்முனிவரிடத்தே இந்திரன் வந்தனனெனத் துணிந்து, அவ்விடத்திலேயே இளையபெருமாளையும் சீதாபிராட்டியாரையும் நிறுத்திவிட்டு ஆனேறுபோலவும் ஆளரியேறுபோலவு நடந்துசென்று அம்முனிவருடைய ஆச்சிரமத்தினுட்புக, * இந்திரன் தன்னாயிரங்கண்களாலும் தாமரைக்கண்களையுடையகருஞாயிறுபோன்ற அருமறைக் கனியைக்கண்டு மனநொந்து கவன்றுபுருஷோத்தமனும் அந்தணர் நாயகனுமாகிய பரம்பொருளை யென்றும் வணங்கு நன்முடியாலுந் தொழுது, தூணாகிய தோள்கொண்டு தழுவி நின்று துதிப்பானாயினன்.

"துவசமார்தொல்லமருட்டன்னைச்செற்றுஞ்
சுருதிப்பெருங்கடலின்சொற்பொருள்கற்பித்தும்
திவசமார்நல்லறத்தின்செந்நெறியிலுய்த்துந்
திருவளித்தும்வீடளித்துஞ்சிங்காமைத்தங்கள்
சவசமாயாருயிராய்த்தவமாய்க்கண்ணாய்க்
கடையிலாஞானமாய்க்காப்பானைக்காணா
அவசமாயச்சிந்தையழிந்தயலேநின்று
னறியாதான்போலவறிந்துவெலாஞ்சொன்னான்."

* * * *

"வல்லைவரம்பில்லாதமாயவினைதன்னான்
மயங்கினரோடெய்திமதிமயங்கிமேனாள்
அல்லையிறையவனீயாதி யெனப்பேதுற்
றலமருவேமுன்னையறப்பயனுண்டாக
எல்லைவலயங்கணின்னுழையென்றக்கா
ளெரியோனைத்தீண்டியெழுவொணநின்ற
தொல்லைமுதன்முனிவர்குளுற்றபோதே
தொகைநின்றவையர்துடைத்திலையோவெந்தாய்!"

* கண்டா மவையா யிரமுங் கதுவக்
கண்டா மணைபோல் கருஞா யிறெனக்
கண்டா னிமையோ ரிறைநா சினியின்
கண்டா னருநான் மறையின் கனியை.

என்று பலவிதமாகத் தோத்திரம் புகன்று முனிவரிடத்தே விடைபெற்றுக்கொண்டு இந்திரன் போய்விட்டான். அவ்வாறு இந்திரன் விடைபெற்றுச்சென்றபின்பு சீராமன் தம்பியையும் சீதையையு மழைத்துக்கொண்டு அச்சரபங்க முனிவருடைய ஆச்சிரமத்துக்குப் போனான். முனிவர் பெருமானும் அறவுரையனைத்தும் சீராமனுக்குச் சொல்லிக்கொண்டிருந்து இராக்கால மணையக்கண்டு தன்மனைவியுடன் வேள்வித்தீயில் நுழையுங் கருத்துடையவனாய்ச் சீராமபிரானை நோக்கி நீ யெனக்கு விடைதரவேண்டுமென்று வேண்டித்தான் அக்கினியை வளர்த்தினான். அதைக்கண்ட சீராமன் அம்முனிவர் பெருமானை நீர் செய்யும் காரியம் யாதென்று கேட்க, யான் நிரதிசய வின்பத்தைத் தரும் மீள்விலா வுலகம்பெறவேண்டியே யெரியிற்புக நினைத்தேனென்றார். இரகுநாயகன் யான் வருங்காலத்தில் இவ்வகைப்பட்ட காரியத்தைச் செய்யத்துணிந்த காரணமென்னென. அதைக்கேட்டு உடல் பூரித்துச்சொல் வானாயினான். நீ வருவது நோக்கியே ஆயிரயுகமாக அருந்தவஞ்செய்துவருகின்றேன்; இருவினையும் இன்றேபோயொழிந்தன, இனி யெனக்கு வினையென்ப தறக்கெட்டொழிந்தது. எனக்கு முத்திச்செல்வந் தரவெண்ணியே இந்திரன் வந்து பிரமலோக மடையும்படிக்கேட்டுக்கொண்டான், அதைச் சிறிதேனும் விரும்பமாட்டேன், நானோ சிந்தையுமொழியுஞ் செல்லா நிலைமைத்தாகிய அந்தமிலின்பத் தழிவில் வீட்டினைப் பெற முயல்கின்றேன், இதுதான் என் கருத்தென்று தன்மனைவியோடு அவ்வேள்வித் தீயில் மூழ்கி அந்நிரதிசய வீட்டின் பதத்தையடைந்தான்.

சரபங்கர் பிறப்பு நீங்குபடலம்
முற்றிற்று.

---

## அகத்தியப் படலம்.

---

இராமலட்சுமண ரிருவரும் சானகியோடும் அம்முனிவரது இறுதியைக் கண்டு அதையரிதி னகன்றுபோய் மலைகளும் மரங்களும் மணிக்கற்பாறைகளும் ஆறுகளும் அருவிச்சாரலும் சோலைகளும் கானாறுகளும் தடாகங்களுங் கடந்து தண்டகவனத்தை யடைந்தனர். அத் தண்டகவனத்திற் சஞ்சரிக்கும் பிரமபுத்திரர்களாகிய வாலகில்லியரும் முண்டரும் போனருமாகிய முனிவர்களெல்லாரும் சீராமபிரான் அங்கு வந்ததறிந்து அவனைக் காணவந்தனர். அவர்கள் கருத்தை யறிந்துகொண்டு சீராம னெதிர்வரக் கண்டு அவனருள்பெற விரங்கி இதுவரையிலும் அரக்கரால்வருத்தமடைந்து

---

இ - ள். தேவர்கட் கிறைவணங்கிய இந்திரன் தன் கண்களாயிரமும் பெருந்தக்கண் தாமரைமலர் போல்கின்ற கருஞாயிறே யென்னலாம்படி சொல்ல அரிதாகிய நான்மறைகனிந்தகனியை நிலமேற் கண்டான் என்க.

கதுவ - பொருந்த, இமையோரிறை - இந்திரன், காசினி - பூமி. தான்-அசை.

உம்மை முற்று. வேதநான்கின் முடியில்விளங்கும் பொருளாகலின் அருநான்மறையின் கனியையென்றும், தன் அரந்தை யிருள்கெடத் தோன்றுவதனால் கண்டாமரைபோல் கருநாயிறென வென்றும், அவனைத் தான்செய்த முன்னை நல்வினைப்பயனால் நிலமேற்காண்டலின் காசினியின்கண் இமையோ ரிறைகண்டான் என்றுங் கூறினார்.

அரக்கரென்ற பேரைக்கேட்டாற் பெரும்பயமெய்தி யிருந்தவர்களாகை யால் இராகவனது வருகையைக்கண்டு துன்பக் கடற்கோர் மரக்கலம் பெற்றாற்போற் களிப்படைந்து அவ்வரக்கரது துன்பத்தை இதுவரையும் காமம் வெகுளிமயக்கமென்னு மூன்றனையும் அறக்கடிந்தவ ராகையாற் பொறுத்திருந்தார்கள். அப்படி பொறுத்திருந்த முனிவர்களெல்லாம் இரகுநாயகன் இருந்த இடத்தை நோக்கியடைந்து எதிர் சென்றழைத்து வந்து இருக்கை யளித்து அவரிடத்தே தங்கள் குறைகளை யெல்லாமெடுத்துச் சொல்வாராயினர்.

இரக்கமென்ற வொரு பொருளில்லாத நெஞ்சமுடையவர்களாய், அறத்தினீங்கிய அரக்கரென்பாரோ சிலருண்டு, அவர்க ளெங்களைவருத்த நாங்கள் அறத்துறையாகிய தவவொழுக்கத்தைத் தவிர்ந்து தீயவொழுக்கங் கடைப்பிடித் தொழுகினேம்; இதுவரையினும் புலிகள் பலதிரியும் காட்டிலே மான்போல இரவும் பகலும் நொந்திரங்கி வருந்தியிருக்கச் சகிக்கமாட்டோம். எங்களுக்குரிய தவவொழுக்கத்தை விட்டோமாகையால் நாங்கள் விடுதி பெறுவது எப்போது? நாங்கள் அந்தணர்களாகையால் எமக்குரிய ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றலென்னும் அறுதொழிலுமில்லாதிருந்தமையால் நாங்களோ அந்தணர்களென்று சொல்லவுஞ் சிறந்திருக்கவில்லை. இந்திரனோ வென்றால் அவன் அரக்கர்கள் ஏவியவற்றைச் சிந்தையாலும் சென்னியாலும் கொள்ளுஞ் செய்கையை யுடையானாயிருக்கின்றான்; எங்களுடைய துன்பத்தை நீக்குவோர் உம்மையல்லது யாரிருக்கின்றனர். யாங்கள் செய்த தவத்தின் மாட்சிமையால் நீர் இங்கே யெழுந்தருளினீர்! யாங்களுன் னபயமென் றுரைத்தனர். அதைக்கேட்ட இரகுநாயகன் அவ்வரக்க ரென்போர் அடைக்கலமென் றடையாவிட்டால் அண்டப் புறத்திற்சென்றடைவாரேனும் அவர்கள் என் கையம்பாலே வீழ்வர்; நீங்கள் துன்பமொழியுங்கோள், அரசனிறக்கவும், தாய்வர மடையவும், பெருங்குணத்தையுடைய தம்பியாகிய பரதன் வருந்தவும், நகரமாந்தரெல்லாம் துன்பப்படவும், யான் திருவயோத்தியை விட்டு இவ்வளவு தூரமாயுள்ள இக்காடுவந்து சேர்ந்ததுயான் செய்த புண்ணிய முதிர்ச்சியே யல்லது வேறல்ல, அறத்தைக் கைவிடாத அந்தணர்களை அறக்கெடுத்த அரக்கர் வலியைத் தொலையே னென்றால் அதைவிட நானிறப்பதே நல்லது, அல்லது யான் பிறந்ததனலாகிய பேறுயாது! நீங்கள் அக் கொடியவர்களாகிய அரக்கரது கவந்தக் கூட்டங்கள் நடனஞ் செய்வதைக்காண வில்லும் அம்புப்புட்டிலு மேந்திய தோளும் பொறைத்துயர் தீரும். உலகத்தில் ஆவின்பொருட்டாயினும் அந்தணர்பொருட்டாயினும் பிறர் யாவர்பொருட்டாயினும் சாகப்பெற்றவர் யாவரோ அவரே சுவர்க்கலோகத்தில் வாழுந் தேவர்களாலும் தொழப்படும் தேவர்களாக விளங்குவார்கள். இதுநிற்க; அவர்கள்பொருட்டாக என்னைதடுக்கச் சூரனைத் தடிந்த சுடர் நெடுவேற் பெருந்தகையும் சுதரிசனமென்னுந் திருவாழியையுடைய கள்ளமாமாயப்பிரானும் முப்புரம் பொடித்த முக்கட்பெருமானும் தடுத்தாலும் எதிர்த்து என்னொடுபொர அருமையான அறத்தினொடு

பகைத்துநின்ற அவ்வரக்கரையெல்லாம்வேரோடுங் களைவேன்;நீங்கள் பயப் படாதிருங்கோளென்றான். அவ்வாறு சொல்லிய சொல்லைக்கேட்ட அம்முனி வர்களெல்லாம் சந்தோஷத்தாற் பெருமுழக்கஞ் செய்து துன்பமெல்லாம் அறக்கெட்டாராய்த்திரிதண்டத்தையுயரப்பிடித்துக்கொண்டுவேதகோஷ்ட முழங்கத் குடந்தம்பட்டுக்கூத்துமாடிச் சொல்வாராயினர்.

இரகுவீரனே! நீ கோபிப்பாயாயின் இப்புவன மூன்றேபோல முப்பது கோடிவந் தெதிர்த்தாலும் எதிராகமாட்டாவே; அதற்கு நான்கு வேதமும் தவமும் ஞானமுமே சான்றாகற் பாலன. அன்னதாகையினால் உம்மைத் தாதையேவின காலமெல்லாம் எங்கள் துன்பத்தைத் தவிர்த்துக்கொண்டு இங்கேயெழுந்தருளி யிருக்கவேண்டுமென்று வேண்ட, அவ்வாறுவேண்டிய அம்முற்றத்துறந்த முனிவரையெல்லாம் வணங்கிதான் அவ்வனத்திலேவசித் திருந்தனன். அவ்வாறு அவ்வனத்திலேயே பத்துவருடமளவும் வசித்துக் கொண்டிருக்கையில் அம்மாதவர்களெல்லாமொருங்குசேர்ந்து செந்தமிழா சிரியராகிய அகத்தியமுனிவரைத்தரிசிக்கவேண்ட, சீராமன் அவ்வாறேதம் பியும் சானகியாரும் புடைசூழ்ந்துவரத் தான் விருக்ஷங்களும் மூங்கிலடர்ந்த காடுகளும் படர்ந்த சின்னெறியை மெல்லமெல்லக் கடந்துசென்று சுதீட் சணனென்னு முனிவர் பெருமான்வசிக்கும் சோலையையடைந்தான். அம் முனிவரைச் சீராமன் இலட்சுமணனோடும் சீதையோடும் வணங்கி நின்ற னன். அவர் அவர்களை அங்கேயிருக்கவேண்ட அவ்வாறே வசித்துக்கொண் டிருக்கையில் அவர்களுக்குச் செய்யத்தகுவனயாவையும் செய்து நீங்களி ங்கெய்த யானெத்தவஞ் செய்தேனென்றான். இரகுவீரனும் அவன்பால் மெ ய்யன்பு படைத்துச் சொல்வானாயினன். முனிவர்பெருமானே! யாவரானு ம் எடுத்துச்சொல்லப்பட்ட நான்முகன் வழியிற் பிறந்தாரிலே உலகத்தின் கண் உயர்தவம் முற்றச்செய்தார் உம்மினும் பிறர் யார்? உமதருள் பெற்ற என்னிற் சிறந்தவர் யார்? என, அவரைநோக்கி எனக்கமைவதாகிய குற்ற மற்ற விருந்தினனாகி என்னாலமைந்ததவத்தையெல்லாம்நீ தக்ஷணையாகக்கொ ள்ளவேண்டுமென்ன, அதற்குச் சீராமபிரானும் உன்னருள் எத்தவத்தினு மடைவதரிது,ஆயினும்யான்சொல்லத்தக்கதொன்றுண்டு, அதுயான் செந்த மிழாசிரியராகிய அகத்தியமுனிவரைச் சென்றடைவதே; அக்குறையொன் றேயென்னுள்ளத்திற் கிடக்கின்றதென்றான். அதைக்கேட்ட முனிவர்பெரு மானும்நீநல்லதேநினைந்தகூறினாய்! நானும் உனக்குமுன்னேதானேசொல்ல வேணுனிந்தகாரியமுமதுவாம்,அவரைநீசென்றுசேர்வதேகடமை, அவரை ச்சேர்ந்தபிறகுநின்னிடத்தெய்தப் பெருதனவொன்றுமில்லையே,அதுவல்லா மலும்நின்வரவினையெதிர்பார்த்துக்கொண்டே அம்முனிவரிருக்கின்றனர், அ வரை நீ சென்றடைவதே தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் யாவர்களுக்கு ம்நல்லதென்றேயெண்ணுகின்றேனென்று அவரிடத்திற்குச்செல்லும் வழியு ம்உணர்த்திநல்லஆசீர்வாதமும் செய்தனுப்ப, அவரைச்சீதையும் இராமலட் சுமணரிருவரும்வணங்கித்துதித்து விடைபெற்று அவ்வாச்சிரமத்தை அரிதி னகன்றுசெந்தமிழாசிரியராகிய அகத்தியமுனிவரது ஆச்சிரமத்தையடைய வருகையில்தமிழால்உலகத்தைத் திருமாலேபோல அளந்தவனும்தேவர்கள்

குறையிரப்ப விருத்திராசுரனைக்கொல்லக் கடலையொருகையால் முகந்துஆச
மனஞ்செய்தவனும் குறுமுனிவனென்று சொல்லப்பட்டவனும், வாதாவிச
மைத்த வில்வலனென்னுமாட்டுருக்கொண்ட அக்கொடியவனது ஊனை நுகர்
ந்துஉலகோரிடர்தீர்த்தவனும், உயிர்வகைகள் வருந்தாவண்ணம்போம்வழி
யாதென, தன்திருவடியால்மிதித்து அடியிலேறி மேகக்கூட்டங்கள் தவழ்கி
ன்றவிந்தமலையென்கிற நாகமது நாசமுற நாகமென நின்றவனும், சிவாஞ்
ஞையால் வடதிசைதாழ வானினோங்கியமாமலயமோராக இறைவன்போலவு
லகுசீர்பெறவெழுந்தருளியிருந்தவனும்,முயற்சியைத்தரும் வேதநான்கினு
முயர்ந்து உலகமோதும் வழக்கினும் அறிவினு மரபினொடு மழுவாளியாகி
யபரமசிவனிடத்தேசெந்தமிழிலக்கண முழுது மையந்திரிபறவுணர்ந்து அத
னைப்பரம்பச்செய்தபரமகாருணிகனும்,விண்ணிலும்மண்ணிலும்நாகலோகத்
திலும் எண்ணிலும்இருக்கிலுமிருக்குமென்றேயாவரும்உள்ளத்தே நினைக்கு
ம்கருத்துப்பொருளும் காட்சிப்பொருளுமாயிருப்பானைத்தன் ஊன்கண்கா
ணக் களிக்கின்றமனத்தினையுடையவனும், வேதாகமங்கள் முறையிற்கூறிய
மெய்யுணர்ச்சியைநெடுங்கல்லினிட்டரைத்தும் அயனும் உணர்வரும் அப்
பொருளைக் காணப்போகின்றேனென்பவனுமாகிய அம்முனிவர்பெருமான்
உலகமேழும் உவகைக் கடல்பெருக அவ் விராமன் சரண்வழங்க வெதிரே
வந்தான்.

தன்னைநாடிவந்தசிராமனைகமண்டலத்தில் காவிரியாற்றைக் கொணர்ந்த
செந்தமிழ்ப்பரமாசாரியராகியஅகத்திய முனிவர்கண்டுதமது புண்டரீகமலர்
போன்ற கண்களில் ஆநந்தவாரிபொழியநின்று தாசரதி! உனதுவருகைநல்
வருகையேயென்றான்.என்றுமுள்ளசெந்தமிழிலக்கணமியம்பிப்பெரும்புகழ்
கைக்கொண்ட முனிவர்பெருமான் அவ்வாறு சொல்லவே, அங்குள்ளவேத
வேதியர்களெல்லாரும்காதல்பெருகிவேதகோஷ்டம்செய்து தங்கள்கமண்ட
லசலத்தினைப் புரோக்ஷித்தனர். அகத்தியமுனிவரோ அத்தசரதாத்மசனையும்
சானகியாரையும்இளையபெருமாளையும்அழைத்துகொண்டுபோய்மலர்மணம்
வீசும்குளிர்ந்த சோலையிற் கொண்டுபோயினர்.அவ்வாறே இரகுவீரனும்தம்
பியுடனும்சானகியாருடனும்எழுந்தருளிஅவர்விருந்தமைப்பவுண்ணமுனிவ
ரும் நீ யென்கிருகத்தில் வந்து என் னருந்தவமுடித்தனையே யருட்கரசனே
யென்றார்.இவ்வாறுசொல்லியஅகத்தியமுனிவரைசிராமன்தொழுதுவணங்கி
எவ்வகைஅருந்தவஞ்செய்துநீவினையெல்லாந்தீரநோற்றமுற்றத்துறந்தமுனி
வர்களும் பெறலரும் உன்னருள்பெற்றேன், இனி எனைத்துலகமும் வென்றி
விதேறினேனென்றான். அதற்கவர் தண்டகாரணியத்தில்வாசஞ்செய்யென்ற
சொல்மேற்கொண்ட உன்வருகை இவ்வனத்தினுமுளதாகவறிந்து கழிமகிழ்
சிறந்திருந்தேன் எண்ணத்தக்க குணத்தினையுடையானே! எனப் பின்னுஞ்
சொல்லுகின்றார்.இங்கே நீவீற்றிருப்பையாயின் வேண்டிய வேண்டியாங்கெ
ய்தபெறுகின்ற பெருந்தவங்களெல்லா மொருங்கு முடிப்பாய் மிக்ககோபத்
தினையுடையவாளரக்கர் வந்துதோன்றுவாரேல் மாண்டுபோக அவருடன்ம
லைந்துஎங்கள்மனதுயரையு மொழித்துவிடுவாய்,இனிமறைநெறியும், மனுநீதி
யும் அறநெறியும்வாழும் இதுகாறும்தாழ்வெய்திய தேவர்களெல்லாம் உயர்

வார்கள், அரக்கரெல்லாந்தாழ்வடைவர் சக்கரவர்த்தித்திருமகனே! இதற்கு சிறிதேனுமையமில்லை;மெய்யாகவேஏழுலகமும்வாழ்வெய்தும்; இங்கேநீவாசஞ்செய்துகொண் டிருக்கவேண்டுமென்றான். அதைக்கேட்ட சிராமபிரான் செருக்கடைந்த அரக்கர்கள் செய்கின்றதீமைசிதைந்துபோய் தருக்கொழியக் கடிதுகொள்வான் நான் சமைந்திருக்கின்றேன்; அவர்கள் வருகின்ற திசையில் முந்தியிருப்பதுவே நல்லகாரியம். உமதுதிருவருள் யாதென்று சொல்ல,அகத்தியமுனிவரும் நீ சிறந்த செய்தியே சொல்லிமுடித்தனை!என்னிடத்தில் வில்லொன்றிருக்கின்றது, அதுமுன்னாளில் இறைவன் வைத்துக்கொண்டிருந்ததுமூவுலகத்தாரும்யானும்வழிபாடுசெய்ய இருப்பது; அதனை வடித்த பாணங்களின் குழுஅடர்ந்த புட்டிலொடும் கொள்ளெனச் சகலமந்திரமுமுறையாகவுபதேசித்துக்கொடுத்ததன்றி இவ்வுலகமுழுதும் ஒருதட்டினிடத்திலிட்டால் ஒப்பாந்தன்மை யில்லையெனச் சொல்லுதற்கரிய வாளும் பாமசிவன் மேருமலையேவில்லாககொண்டகாலத்தில் முப்புரமழித்த நாராயணாத்திரமும் உடன் அளித்துச் சிராமபிரானை நோக்கி மரங்களோங்கிமலைகளோங்கி மணலோங்கிப் பூங்குயில்குலாவுகின்ற குளிர்ந்த சோலைகள் புடைசூழ்ந்து அலைவீசிவருகின்ற யாறுதவழ்கின்ற ஒருகுன்றினிடத்திற்பஞ்சவடியென்னுமிடமொன்றிருக்கின்றது. அங்கே இளவாழைகள் கனிகளைத்தரும் நீண்டவாலையுடைய செந்நெற்பயிர் செழித்திருக்கும்,தேன்பொழிகின்றபூக்களுமுண்டு,காவிரியாறுஎன்றுசொல்லத்தக்கஆறுகளுண்டுஇச்சானகியோடு நீ விளையாடிக்கொண்டிருக்கப் போதாவு மன்னமுமுண்டு, நீ இங்கேயிருந்து புறப்பட்டு அங்கேபோய் தவஞ்செய்யலாமென்று சொன்ன அகத்தியமுனிவரைவணங்கிவிடைபெற்றுக்கொண்டுஇரகுநாயகன்,தம்பியும் சானகியும்பரிவினாற் பின்றொடர, முனிவர்கள் சிந்தைமேற்பட விரைந்துசென்றான்.

அகத்தியப்படலம்
முற்றிற்று.

---

## சடாயுகாண்படலம்.

---

அவர்கள் அநேக காதம் நடந்து நதிகள் மலைகள் குன்றுகள் காடுகள் வனங்கள்வனாந்தரங்கள்கடந்துசென்றுகழுகரசாகியசடாயு வெனப்படும்பெரியவுடையாரைக் கண்டனர். அவர்உதயகாலத்துசூரியனது உருக்கியபசும்பொன்னிறமொத்து உச்சியில்அச்சூரியனது உலகமுழுதும்படர்ந்த சுடர்க்கொழுந்தேபோல்சிறைவிரித்துவிளங்கிக்கொண்டிருப்பதையும், ஒருகருமலையினது உச்சியில்சந்திரனொளியுடன் பொருந்தச்சாத்தியமந்தரகிரிபோலவிளங்கியிருப்பதையும் விசும்பினதொளி மறையத்தன்மணிமயமான காலினிறத்தின் செவ்வொளிபற்ற இடமகன்ற நீலமலையினிற்பவளக்கொடியினது நிறம் பொலிந்தாற்போல்விளங்கிக்கொண்டிருப்பதையும்,தூய்மையும்பெருங்கலையும்துணிந்த கேள்வியும் வாய்மையும்குற்றமின்மையும்அறிவின்கூர்மையும்மந்திரத்தறிஞன்போல செய்கையினேக்குஞ் சிறுகண்ணுடைமையையும் வாள

ரக்கர் வருக்கத்தைக்கொன்று களைந்து நமனுக்கு விருந்தூட்டிவீழ்கின்றபி ச்சிலைத்தானுமுண்டு நாடோறுந்தீட்டி இந்திரனது வெள்ளையானையின தங்குசம்போல் விளங்கும் மூக்கினிடத்தே அலகுடைமையையும், நவக்கிரக மாலைபோல்விளங்குங் கழுத்தினூரத்தையும்,மேருமலையின்உச்சியையடைந்த சூரியனைப்போல விளங்குமுடியையும், சொல் தமது புகழ்சொல்லுதற்கில்லையாக முடிகின்றகீர்த்தியினதுகூட்டத்தையும்பெற்றுள்ளார்; இருள் பங்கமுற வருகின்றஅருணனுடைய குமாரரும், சின்மைகொண்ட பகலேபோலவிரைந்துநீக்கின்ற அநேக கற்பங்கண்ட தன்மையுமுடையாருமாகிய அச்சடாயு ஒருநெடிய மலையொன்றினின்று அது தன்னைத்தாங்கவலியில்லாது பிலத்திற் புக வலிபெற்றிருந்தமையை சந்தேகங்கொண்ட மனத்தராய் வந்து அடைந்தனர்; அவரைநோக்கி இவன்முடிவினைத்தன்னிடத்தே செய்யவெண்ணினான் அறிவிலியாகிய அரக்கனாகும் அல்லனுமென்றால் கருடனேயாமெனக் கருதி அவ்வீரரிருவரும்சோர்வுடன் பார்த்தனர். அவர்களை அப்பெரியவுடையாரும் இவர்கள் தீவினைநிரநோற்பாருமல்லர், வில்லினையுடையாராயு மிருக்கின்றதன் நிச்சடைமுடியையுமுடையாராயுமிருக்கின்றனர், இவர்கள்தேவராவரோ! அல்லர்; நான்இந்திரன்முதலிய இறைவரெண்மரையும் நிரந்தரமும் பார்த்திருப்பேனே! பிரமன்மாலுருத்திரனென்னுந் திரிமூர்த்திகளையுங் கண்டிருக்கின்றேனே!காமனென்பவனையுங்கண்ணினாற்பார்த்திருக்கின்றேனே, செந்தாமரைமலர்போன்ற கண்களும் ஆஜானுபாகுவுமுடையஇவ்வீரர்களுடையகாற்பொடியினு மவரை யொப்பாமெனப்படாதே,இவராரோ தெரியவில்லையே! உலகமூன்றினையுந் தமக்குடைமை யாக்கிக்கொள்ளும் அளவற்ற இலக்கணமமைந்து தனிமுதல் மார்பினுறையு மலர்மகளுக் குவமைகூறப்பட்ட பெண்ணருங் கலத்துடன்வந்த இவ்வில்வீரரின்னாரென்றுந் தெரியாமலிருக்கின்றதே!மேலும் நீலமலையும் செம்பொன் மலையும்போலுந்தோற்றப்பொலிவுடையாராயுமிருக்கின்றனரே. திருவிருந்தமார்பினையுடையாராகிய புண்டரீகக் கட்புரவலன்போல்பவராகிய இவ்வீரர்கள் என்றோழனாகிய சக்கரவர்த்தியை போலுஞ் சாயல்படைத்திருக்கின்றரேயென்று பலபலமனதினிலேநினைத்து அவ்விருவர்மேற்செல்லுமன்பினையுடையானுய்நீங்கள்யார், என்மனம்பொருந்தவிளக்கவேண்டுமென்றுவேண்டிக்கேட்டுக்கொண்டான். அவ்வாறுகேட்ட பெரிய உடையாரை நோக்கி வாய்மையல்லது வேறுகூறவரியாதலின் நாங்கள் உலகமுழுதுமாண்டதசரதசக்கரவர்த்திதிருக்குமாரர்களென்றனர். அவ்வாறுசொல்லவே களிப்பென்னுங் கடலிலாழ்ந்துதரையிலிறங்கி அவர்களைத் தழுவுங் காதல்சிறந்தனுய் மக்காள்! சக்கரவர்த்தி சுகமேயிருக்கின்றனரோ வென்றுகேட்க, அவன்வாய்மை நிறுத்துவதல்பொருட்டாகத் துறக்கமடைந்தானெனத் தன்முன்னெடுத்துரைக்கவே ஏங்கிஉறங்கினனென்றுசொல்லும்படி உணர்வழிந்தனர். சக்கரவர்த்தித்திருமகனாரும் அவரையெடுத்துத் தழுவித் தமதிருகையாலும் தம்புண்டரீகக்கண்ணினின்றும் பொழியும் அருவிநீரைக்கொண்டு முகங்கழுவவே வழுவிப்போன வுயிர் மீளவும் வந்தாற்போன்ற சடாயுவும் நெஞ்சழிந்து புலம்பலாயினன்.

பரவுதற்கரிய கொடைக்கும் நின்றன்வனிக்குடைக்கும் பொறுமைக்கும் முறையே நெடும்பண்புதோற்ற *கரவலரும் கற்பகமும் சந்திரனும் கடலிடமும் மகிழ்ந்து வாழ அரசர்க்கரசனே! யாசகரும் நல்லறமும் யானுமினியாதாகவிட்டுப்போயினையே! அலங்காரமென்று சொல்ல உலகுக் கமுதமளிக்குந் தனிக்குடையானே! நிலத்தைக் காவல்செய்யவேண்டிய திருக்க நிலையாத நிலையுடையேனது நேயநெஞ்சின் நலத்தைக் காண்பதற்கு நடந்தனையோ! நாயகனே! தீவினையுடையேனாகிய என்நட்பினின்றும் விலங்கானேனாகையால் விலங்கினேன்; இன்னமும் உயிர்விடா திருக்கிறேன், தயிரையுடைக்கு மத்தேபோல உலகுயிரை வருத்திய சம்பராசுரனைக் கொன்றகாலத்தில் நுண்மணல்கிடக்கும் கடல்சூழ்ந்த பூமண்டலத்தில் அயலாரறிய நீயுடம்புநாணுவியென்று கோபஞ்சிறிதேனுமில்லாத அழகிய மனத்தையுடையானே! நீ முன்னே சொல்லியிருந்தாயே! உன்சொல்லும் அதினின்று மாறுபடுமோ! அறிவு சிறிதேனுமிராத யமன் உடனாகிய என்னையிருக்கச்செய்து உயிரை விசும்பேற்றி விட்டானன்றோ! எழுகின்ற கீர்த்திபெருக இப்போதே ஒப்புரைக்கப் படாத எரிகின்ற தீயினிடத்தே விழுவதேநலம்! அப்படியிருக்கப் பெண்களைப்போலவே நின்று தேம்பித்தேம்பி யழுவதோ தகுதியென்று முன்னை நல்லறிவுதோன்ற வெழுந்து அங்கே நிற்கின்ற இராமலட்சுமணரைப்பார்த்துச் சக்ரவர்த்தி திருக்குமாரர்களே! நான்சொல்வதைக் கேளுங்கோளென்று சொல்லலாயினன்.

முன்னாளில் தக்ஷப்பிரசாபதிக்கு ஐம்பது மாதர் பிறந்தனர். அவருள் பதின்மூவரைக் காசிபமுனிவர் மணஞ்செய்துகொண்டனர். அப்பதின்மூவரில் அதிதியென்பவள் முப்பத்துமுக்கோடி தேவரைப்பெற்றாள். திதியென்பவள் அறுபத்தாறுகோடி அசுரரை வயிறுவாய்த்தாள். தனுவென்பவள் தானவர்முதலியோரைப் பயந்தாள். மதியென்பவள் மனிதர் முதலானவரை வருணங்களுடன் பெற்றாள். சுரபியென்பவள் தேனுவுடன் கந்தருவர் முதலியவரைப்பெற்றாள். குரோதவசையென்பவள் கழுதை மரை ஒட்டக முதலியவற்றைப்பெற்றாள். விநதையென்பவள் வானிடி மின்னல் கூகை பருந்து முதலிய பெரும்பறவைகளோடு அருணன் கருடனிவர்களையும் பெற்றாள். தாம்பரையென்பவள் ஊர்க்குருவி சாவல் காடை முதலியவற்றைப்பெற்றாள். கதையென்பவள் கொடி செடி முதலியவைகளைப் பெற்றாள். கத்துருவென்பவள் அனந்தன் முதலிய நாகராசர்களைப் பெற்றாள். சுதையென்பவள் ஒருதலையுள்ள நாகங்களைப்பெற்றாள். அருட்டை யென்பவள் ஓந்தி உடும்பு அணில் முதலியவற்றைப் பெற்றாள். இளை யென்பவள் சலசரங்களைப்பெற்றாள். இவ்வாறு அதிதிமுதலியவர்களால் உலகம்படைத்தற்றொழில் நடக்க, விநதை மகனாகிய அருணன் அரம்பையை மருவ அவள் சடாயுவாகிய என்னையும் எனக்கு மூத்தவனாகிய சம்பாதியையும் பெற்றாள்.

---

* கரவலரும் கற்பகமென்பது தானிங்கேயிராமல் விண்ணுலகத்திற் கரந்தலரும் கற்பகமென்றும், கரவலரும் உடுபதி என்பது கரவாக இருளில்தோன்றும் அழகிய சந்திரனென்றும், கரவலரும் கடலிடமென்பது மாயிருஞாலமாதலின் கரத்தல் அருமையான கடல் சூழ்ந்த நிலமென்றுங் கூட்டிப் பொருள் கொள்க.

நான் உமது திருத்தந்தையாராகிய சக்கரவர்த்திக் குயிர்த்தோழன். தேவர்களுடன் வருணங்கள் தோன்றிய அக்காலத்தே பிறந்தவன். கழுகுகளுக் கரசனென்று சொல்லிமுடிக்க, அதைக்கேட்ட இராம லட்சுமண ரிருவரும் அஞ்சலித்த மலர்க்கைகளை யுடையாராய்க் கண்ணினின்றும் மழைபோலுங் கலுழிபெருக்கெடுக்கப் புகழுடம்பை நிறுத்தித் தம்பொருட்டிறந்த சக்ர வர்த்தியை மீளக்கண்டாற்போல மனமகிழ்ந்து நின்றனர். சடாயுவும் அவ் விருவரையும் இரு சிறகாலு முறத்தழுவி மக்களே! நீங்களே எனக்குரிமைக் கடனுஞ் செய்யவேண்டும்; இரண்டுடலுக்கு முயிரொன்றாகிய சக்கரவர்த்தி பிரிந்தும் பிரியாதிருக்கும் இவ்வுடற்பாசத்தை இப்போதே யொழித்து விடாமற் போவேனேயானால் இந்தத் துயரத்தை நான் மறக்கவேமாட்டே னென்றான்.

அவ்வாறு சொன்ன பெரியவுடையாராகிய சடாயுவை இராமலட்சுமண ரிருவரும் வணங்கிக் கண்ணீருகுத்து நின்று சொல்வாராயினர். எந்தையோ சத்தியந்தவறவெண்ணாமல் விண்ணுலகஞ்சென்றனன்; இவ்விடத்தில் எங்களை நீருங் கைவிடுவீராயின் எமக்குக் களைகணாவார் யாரென்று மனமறுகிக்கூற, அதைக்கேட்ட சடாயுவும் அது அப்படியன்றெனின் நீங்கள் திருவயோத்தியை யடைந்தபிறகேனும் அவனைச் சேராமலொழியேனென்று சொல்லிவிட்டு அவர்களை நோக்கி நீங்கள் அரசன் இறந்தபின்பு அரசாண்டு வாராது காடுறைவாழ்க்கையராகவரக் காரணமென்ன? எனக்கு நன்றாகத் தெரியச்சொல்லவேண்டும். என்மனம் வருந்துகின்றதே! தேவர் தானவர் நாகர் முதலிய யாவரேனும் உமக்குத் தீங்குசெய்திருப்பாராயின் அவர்களையெல்லாங்கொன்று களைந்து நானே அரசைத் தருவேனென்று சொல்ல, அதைக்கேட்ட இராகவன் தம்பியைநோக்க, அவன் தன்சிறியதாயால் நேர்ந்ததனை யொன்று மொழியாமற் சொல்லிமுடித்தான். பெரியவுடையாரோ இராகவபிரானை நோக்கி உமது தந்தையை யுண்மையுடையனாக்கி உன்சிறிய தாய் தந்தசொல்லைத் தலைமேற்கொண்டு உலகமுழுதும் உன் பின்றோன்றிய தம்பிக்குதவியவள்ளலே! எந்தைசெய்துமுடித்தது யாவர் வல்லாரென்று ஸ்ரீராமபிரானை அன்பாய்ப் புல்லிமோந்துபொழிந்த கண்ணீரையுடையாராய் என்னையும் அரசனையும் அளவில்லாத புகழை யடைவித்தாயேயென்று சொல்லிவிட்டுச் சீதையை நோக்கி. இவர் இன்னாரென்று சொல்லவேண்டுமென்று வேண்ட, இருளையிறுத்தாலொத்த தாடகை முதலாகவும் வில்லிறுத்து மணஞ்செய்துகொண்ட திடையாகவும் முன்னாளிலே தருப்பைப் புல்லில் தாதைக்குரிமைக்கடன் செய்துவந்தது கடைசியாவும் நிற்க நடந்த எல்லாச்செய்திகளையுஞ் சொல்லி இளையவன்முடிக்க, நீங்கள் நாடுதுறந்து காடுறை வாழ்க்கையராகவந்தீர் ஆதலால் இவ்வன்னையொடும்வாசஞ்செய்து கொண்டிருந்தால் நான் உங்களைக் காத்துவருகின்றேனென்றார். பின்பு ஸ்ரீராமபிரான் சடாயுவை நோக்கி அகத்தியமுனிவராற் கட்டளையிட்டுள்ள பஞ்சவடிக்குச்செல்லும் வழி யாதென்றுகேட்க, நீங்கள் அங்கே செல்ல வழிகாட்டுகின்றேன், அங்கேசென்று தவஞ்செய்வது தக்கதேயென்று ஸ்ரீராமபிரான் முதலிய மூவரும் தன் சிறகின் நிழலில்வரத் தான் ஆகாய மார்க்கத்திற்சென்று காட்டி விடைபெற்றுப்போக; அவர்களும் அங்கே

இனிதாக வசித்துக்கொண்டிருந்தனர். சடாயுவும் தன் மருகியையும் மக்களையும் பொருந்தச் சிந்தனையிட்டு அரக்கரது வரவைச் செவ்விதாககாடிச் சேக்கையிற் பார்ப்பைப்பார்க்கின்ற பறவைபோற்பார்த்துவருவானுயினன்.

சடாயுகாண்படலம்
முற்றிற்று.

## சூர்ப்பநகைப்படலம்.

சீராமபிரான் முதலிய மூவரும் சான்றோர் கவியெனக்கிடந்தகோதாவிரியினைக்கண்டனர். அவ்வாறுகண்ட அவ்வாற்றின் கரையில் சக்கரவாகம் அன்னம் பூங்கொடிகள் முதலியவற்றைப் பார்த்துக்கொண்டே பஞ்சவடியைக் கண்டு தம்பியாற் சமைக்கப்பட்ட சாலையில் சானகியாரோடும் தான் எழுந்தருளி யிருந்தனர். இது நிற்க;

நீலமணிபோன்ற நிறமுடைய இராவணனை நாசமாகச்செய்யும் வலியாளும் முன்னுளில் உயிரோடும் பிறந்து தான் விளையுங்காலத்தையறிந் துடன் வசிக்குங் கொடியநோய்போல்வாளும்,செம்பட்டமயிரையுடையாளும்,இராகுவும் வருந்தும் உடம்பினையுடையாளும், திரிலோகத்தாருக்கும் நாசமுண்டாக்குபவளுமாகிய சூர்ப்பநகையானவள் தேவர்கள் அரக்கரால்நாங்கள்படுந்துயரத்தை நீக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்ள நானே உங்கள் துயரந் தீர்ப்பேனென்று சர்ப்பப்பரியங்கந்துறந்த ஆதிபகவனுகிய சீராமபிரானிருந்த இடத்தையடைந்து தன் குலநாசஞ்செய்யக் கருதுவதுபோல் பின்வருமாறு நினைப்பாளாயினள். சித்தசனென்னும் பெயர்கொண்டு திரியும் மன்மதனே உருவிலியா யிருக்கின்றான், இந்திரனுக்கு ஆயிரங்கண்கள் பரமசிவனுக்கு மூன்றுகண்கள், பிரமனுக்கு நான்குதோள் இவன் அவ்வாறல்லாமையால் அன்னவரல்லன், அம்மன்மதன் கற்றையஞ்சடைக் கடவுட்பெருமான் கண்ணிற் காய்ந்தமையால் அழிந்துபோனபிற கன்றுமுதலின்றுவனையும் தான் நல்ல தவஞ்செய்து நல்லுருவம் பெற்றுவந்தான்போலுமென்றும், இவனது தோள் தகுதியாலமைந்து தாழ்ந்து அழகின் சார்பினையுடையனவாகிய மராமரங்களையு மொத்தில,மலைகளும் புல்லிய தன்மையுடையன, வலிமையானுயர்ந்த திசையானைகளின் துதிக்கைதா னெப்பென் றெடுத்துச் சொல்ல நேருமென்றும், மேருமலையை வில்லாகவுடைய இறைவனது வீரத் தோளினேடும் கன்மலையும் ஒப்பாகாது; நீலமலையே யல்லாமல் மேருமலையாகிய பொன்மலையும் அவற்றினுக்கொப்பாகாவென்றும், தாளையுடைய தாமரைத்தளங்களோடும் நட்பாக வுயர்ந்த நாட்டத்தையுடைய இம்மலைபோல்பவன் தோளொடுதோள் செல்லத் தொடர்ந்துபார்க்கையில் கண்கள் நெடியவேயல்ல, மார்புநெடியவென்றும், மிகவும் விளங்கு மிப்பேரழகினையுடைய நாள் முகமானது முருக்கவிழ்ந்த தாமரைமலரைப்போல்வதோ! சந்திரனை யுவமையாகச்சொல்கையிற் கலைகடேயும்,அச்சந்திரனிடத்தினும் ஒரு களங்கமுண்டாயிருக்கும், இவனிடத்திலே அவ்வாறு ஒன்றுமிருக்கக் கண்

டதில்லையே என்றுஞ் சொல்லுவாள். எவன் செய்ய இனிய இப்பேரழகினை யடைந்தவன் பயனின்மையாகத் தான் தன் திருவுடம்பு வருந்தத்தவஞ் செய்கின்றானே, புதுமையாகவமைந்த இத்தாமரைக் கண்ணன் தவஞ் செய்யத் தவந்தானே செய்ததவம் யாதென்றும், கடலையாடையாக வுடுத்து உருவச்செவ்வியமைந்து பிடிபோலுநடையுடையாளாகிய பூமிதேவியினதுபெண்டன்மை நன்று நன்று, எங்கும் புல்படர்ந்திருப்பது இவனடித்தலம் தீண்டலின் அவட்கு மயிர்க்குச்செறிந்ததுபோலும், ஐயோ சூரியன் ஆகாயத்தில் தன் புல்லொளி செலுத்திச் சிந்தையில் நாணங்கொள்ளாமல் நடக்கின்றானே, வாளின்பிடிப்பைப்போலும் இடையையுடையானது திருமேனிப் பொலிவைக்காணாதிருப்பானோ! என்றுஞ் சொல்லிக்கொண்டே வானில் விரைந்ததோர் மாதரோவியமேபோன்று வெம்பிப்புலர்ந்தயர்ந்து தோளிற்சென்ற கண்ணோட்டங்களை ஊன்றிப்பறிக்க முடியாமல் வருந்தினாள்.

இவ்வாறெண்ணி நினைந்துருகி இராகவன்மேற் காதல்கொண்டு தன்னை அரக்கியென் றுளத்தேநினைத்துத் தடுத்துவிடுவானென் றெண்ணி மயிற்சாயலை யுடையாளெனக் கருதப்போவதே நலமெனத்துணிந்து திருமகளை மனத்தே பாவித்து அவள் மனுவையுருச்சபித்து ஆகாயத்திலே மறைந்து அழகமைந்த தாமரைமலரை யிருக்கையாகக்கொண்ட பூவைபோலும் பூவையாகிய திருமகலழகு தன் பின்னழகேயாக வால்போலு மிரண்டுகண்கள் விளங்கும் திருமுகத்தையும் மேகலையணிந்த அலகுற்றடத்தையுமுடைய மின்னற்கொடி யொன்று விண்ணினின்று மிழிகின்றதென்று சொல்லவிழிந்தகற்பகத்தருவிடையேபூத்த காமர்வல்லிக்கொடிபோல நுடங்கித் தேன்மொழிசொரிந்து மான்போலுமருண்ட பார்வையடைந்து மயிலேபோல நடந்துவந்தாள். இவ்வாறு வந்த அம்மாதை மெய்ஞ்ஞானக் கண்ணருள் செய்யுங் கண்ணன் கண்டு மூவுலகத்தினும் இத்தனை யற்புதவடிவமுடையாளைக் கண்டதில்லையேயெனப் பார்த்து இவளையாரோ டொப்புக்கூறும் தன்மை; அழகிற்கு மெல்லைசொல்ல முடியுமோவென்று நினைத்துக்கொண்டிருக்கையில், அவள் விரைந்துவந்து தன் கண்ணாகிய வேலைவீசி யயலிற் பார்த்து மானினொதுங்கி அயலிற் சிறிதுநாணி நின்றாள். அதைக்கண்ட இரவிகுலதிலகன் நின்னுடைய வருகைநல்லதாக, வெகுதூரத்தே நின்றும் இங்கே வந்திருப்பது எம்மிடத்திலுள்ளதோர் புண்ணியமேயன்றோ? உமதூரெது?பெயரென்ன? உம்முறவார்யாராரென்ன?என; அவ்வாறு கேட்ட வேதமுதல்வனுக்குப் பேதையாகிய சூர்ப்பனகை சொல்வாளாயினாள்.

நானே தாமரைப்பூவை யிருக்கையாகவுடைய பிரமனது மாசைபுத்திராகிய புலத்தியமுனிவர் மகன் விச்சிரவசுவின்மகள்,பரமசிவனுக்குத்தோழனாகிய குபேரன் தங்கை,திக்கயங்களையெல்லாம்வென்றுசிவபெருமானினிது வீற்றிருக்கும் வடகயிலைமலையை ஊசிவேரோடும்பறித்த இராவணனுக்குப் பின்பிறந்தாள்;காமவல்லியாகிய கன்னிநானெனக்கேட்டுஐயம்படர்ந்தநெஞ்சினையுடையனாய் இவள்செய்கையோ செவ்வையானதன்று; இனிச்சிறிதறியலாமென் றெண்ணி, நீ இராவணனுடைய தங்கையாவது மெய்யேயாயின்

இவ்வுருவமடைந்ததன்மை யாதென்றுவினவ, இறைவன் அவ்வாறுகட்டளை யிடுவதற்கு முன்னமே நான் மாயைகள் வல்ல அரக்கருடன்வாழ்க்கைசெய் வதை மதியாமல் ஆராய்ச்சியையுடைய மனமுடையேனாகி அறந்தலை நிற்ப வெண்ணி நீவினையே நோற்றுத் தேவரினிவ்வுருவ மடைந்தேன். இரகு நாயகன்இந்திரனும் எளிதாக வேவல்செய்யும்படி உலகமூன்றையுமாள்கின்ற இராவணன் தங்கையானால் நீ பெருஞ்செல்வத்தொடுந் தோன்றாமல்யாருந் துணையின்றித் தன்னந்தனியாகநீ வரக்காரணமென்ன சொல்லவேண்டுமென் றுகேட்க, அவள் அச்சிரியரல்லராகிய அரக்கரோடு வாழ்க்கை செய்யாது தேவர்களிடத்தும் முனிவர்களிடத்து மடைந்துள்ளேன். இங்கோர் காரியம் பற்றி உம்மைநாடிவந்தேனென்றாள். இரவிகுலதிலகனும்நீராமுப்பார்க்கினும் மகளிரது நெஞ்சாழமோ அறியவெண்ணாதே, நன்னெறிப்பாலுமிராதே, பின் னதையறியலாமெனநினைத்துச் சூர்ப்பநகையைநோக்கி என்னிடத்தேயாது காரியம்பற்றி வந்தாய்என்னாலாவதேற்செய்வேன்சொல்லென்றுகேட்க, அத ற்கு அவள் தாமடைந்த காமத்தன்மை தாங்களே சொல்வதென்பதுகுலமக ளிருக் கடுத்ததல்ல, நானோ உயிர்வருந்துகின்றேன், யாதுசெய்யவல்லேன், யாருமில்லேன், காமனென்னும் பெயருள்ள ஒருவன் செய்யும்வன்மையைக் காக்கவேண்டுகின்றேனென்றாள். இரகுவீரன் அதைக்கேட்டு இவள் நாண முடையாளல்லள், அற்பத்தன்மையுடையாள், நல்லவளுமல்லளென்றெண்ணு முரையாடாம லிருந்தான். அவளிருந்த நிலையையறியாது இவன் நம்மேல் ஆசைகொண்டானோ அல்லனோவென்னு மயக்கத்தா லுலாவுநெஞ்சமுடை யாளாச் சொல்வாளாயினாள். எழுதரிய திருமேனியையுடையானே இங்கே எய்தியதறியாமல் முழுதமுணர்ந்த முனிவர்க்கே ஏவற்றொழில்செய்துகொ ண்டு பெண்டன்மையும் இளமையும் பயனின்றிவறிதே கழியவீணாகப்பொழு துபோக்கினேனென இரகுநாயகனோநீதிநெறியிற்செல்லாதஇவ்வரக்கிவேறு சிந்தனை மனத்திலெண்ணி இங்கே வந்தன ளாகுமென்றுமனத்திற்கொண்டு அவளைநோக்கிஇதுமுறையுமன்று, நீயோ அத்தணன்மகள், நானோஅரசன்மக ன்நம்மிருவர்க்கும் பொருந்தாதேயென்ன அதற்கவள் என்தந்தையோபிரா மணனானும்என்னையீன்றதாயோஉலகைப்புரந்த அரக்கர்பெருமான்மகள்நீ என்னைவிரும்பாது என்னை யிகழ்தற்கொத்த காரணமிதுவாயின் என்னுயிர் காண்பேனென்றாள். அவளவ்வாறுசொல்லக்கேட்டஇரவிகுலதிலகன்சாலக் குறுநகைபுரிந்து அரக்கரை மானிடர் மணஞ்செய்துகொள்ளல்பொருத்தம ன்றென்றே அறிவுடையோர் கூறுவார்களென, அதற்கவள் நானோ அரக்கரி னீங்கித்தேவர்ப்பராவி அப்பழிபடு பிறவிநீங்கினேன் என்றுசொல்ல, இரகு நாயகன் உன்னுடன் பிறந்தவரில் ஒருவனோ உலகமூன்றையும் அரசுபுரியும் செங்கோலுடையான், மற்றொருவனோ சிவபிரான் தோழனெனத்தகும் கு பேரன், அவர்களோ என்பால்வந்து உன்னைமணஞ்செய்து கொடுப்பாரேல் நான் ஏற்பேனென்றுசொல்ல, அதற்கவள் உலகத்தில் நூலோர் எண்வகை மணம்வகுத்திருக்கின்றனர், அவற்றுள் காந்தருவமணமென்பதுஒன்றுண்டு, அது காதற்சிந்தையுடைய மாதரும் ஆடவரும் தாமேகூடும் கூட்டமென

வருத்திருக்கின்றனர். இதனால் நாமொன்றுபட்ட சிந்தையாராய்க் கூடுவோமாயின் எனக்குமூத்தவராகிய அவ்வேந்தர்களும்மகிழ்மகிழ் சிறப்பரென்றாள்.

இராவணன் முதலான அரக்கரோ முனிவருடன் முதிர்ந்தபகையுடையாயிருக்கின்றனராதலின் முறைமை நோக்கிலாய் நீதனியையாதலால் அவருடன் தழுவுதற்கான சமைய மிதுவல்லாமலில்லை, விண்ணுலகமு நின்னுரிமையாக்கி இனியராய் அவர் நின்னேவல் செய்தொழுகுவர் என, சீராமபிரானும் சூர்ப்பநகையைப்பார்த்து அரக்கருளும் நின்னின்பநலமும் பெற்றேன் நின்னொடுநீங்காப் பெருஞ்செல்வத்திருந்து வாழ்வேன் நான் திருவயோத்தி நீங்கியபின்பு செய்தற்குரிய தவம்பயந்ததென்று சிரித்து நின்றான். அச்சமயத்தில் அப்பன்னசாலையினின்றும் தேவர்கள்பெற்ற வரத்தால் வந்த சீதையெழுந்தருள; அவ்வாறெழுந்தருளியசீதையாகியஅரக்கர்கூட்டத்தையழிக்க வந்த கற்பாகிய நெருப்பைக்கண்டு இம்மணநாறும் கூந்தலையுடைய பெண்ணை வனத்திலிவன் கொண்டுவரவேமாட்டான். இப்படிப்பட்ட உருவமுடையாளை உலகத்தில் நாமெங்குங்கண்டதேயில்லை, தாமரைமலரினீங்கியடியிணைபூமியிற் படியத் திருமகளார் இங்கே யெழுந்தருள்வாரோவென்று மனந்திகைத்து நின்றாள். பெண்பிறப்பெடுத்த எனக்கே இப்படிப்பட்டதிப்பிரமை யுண்டாக்குமாயின்பிறருக்கென்னாகுமென்றுசீராமனையும்சீதையையும்பார்த்துப்பிரமன்றானே அழகென்று சொல்லப்படுவதை இரண்டுருவாகப்படைத்தானென்று சொல்லவேண்டுமே இவர்களே அவ்வழகுக்கு வரம்பானவர்கள் என்பாள்.

இவ்வாறெண்ணிப் பின்சானகியை இகழ்விப்பேனெனத் துணிந்துஇங்கே நடந்துவந்தாள் மாயைவல்லவள் வஞ்சனைக்குணமிகுந்தஅரக்கிஇவள்நெஞ்சமறியவல்லதல்ல,இவள்கொண்டஉருவமோமெய்யானவடிவமல்ல,மாமிசமேயுண்ணும் வாழ்க்கையுடையாளைக்கண்டு பயந்தேன் நான் அவளைஅடையாதிருக்க விலக்கவேண்டுகிறேனென்று சொல்ல, அதைக்கேட்ட காகுத்தன் நீசொல்வது நன்றாயிருக்கின்றது,உன்னை யாரொளிக்குந் தன்மையர்,தெளிந்த வறிவால் உன் எண்ணந்தெரிந்தது.இவளோ கள்ளத்தன்மையுடையஅரக்கியேயாமென நகைத்துக்கொண்டிருக்க,சானகி காகுத்தனைநெருங்கினாள். அவளைப்பார்த்து கள்ளதன்மையுடைய அரக்கியே நீயிடையிலேவந்த தென்னகாரணம்? என்று சூர்ப்பநகை யதட்ட சானகி யஞ்சி தன்னிட்டைநோவ நடந்துவருந்தி பஞ்சின்மெல்லடி கள்பதைக்கப்பருவகாலத்திற்றோன்றும்மேகத்தில்விளங்கும்பவளக்கொடியேபோலஅங்கெழுந்தருளியிருந்தஇராகவனைத்தழுவிக்கொண்டாள். அரக்கரோடுவரும்விளையாட்டேயென்றாலும் தீமையேவிளையுந்தன்மையாம்என்பதையறிந்துஇரகுநாயகன் வருத்தமுறுவனவாகியகாரியஞ்செய்யவேண்டாம்,உன்னிலையை இளையவன்காண்பானாயின்கோபிப்பான்விரைந்துபோய்விடென்றுகட்டளையிட,அதைக்கேட்டசூர்ப்பநகை என்னைத் திரிமூர்த்திகளும் மன்மதனும்பிறரும்என்னைப்பெறத்தவஞ்செய்கின்றனரே!என்னை யிகழ்வதனாலென்னகாரியம்?பொறுமையென்பதுசிறிதேனும் இல்லாத இக்கள்ளியை விழைந்தென்று சொல்லிக்கொண்டிருந்தாள். இவள்தன்னொடுந் தொடர்புடையோம்அல்லோமென்று சொல்லவும் நீங்கா

திருக்கின்றாளென்றேஎன இரகுநாயகனும்சானகியொருடன்பன்னசாலையுட்பு குந்தனர். இறைவன் போனபிறகு உணர்வுகெட்டதென்னும் தன்மையாளா கிய அச்சூர்ப்பநகை உடம்பினின்று நீங்கியுயிர்போய்விட்டதென்றுசொல்லும் படியொடுங்கிநின்று உயிர்ப்படங்கிற்கோபித்துஅச்சானகியிடத்தேமிக்கமன வலிமையுடையாளென்றே அவனைச்சேரும்நெறியைநினைந்துசென்றுஇன்று இவனது திருமேனியை யணையேனேயாயின் உயிரிழப்பலென்று துணிந்தஒ ருபூஞ்சோலையிற் புகுந்தாள். சூரியனும் அத்தமானவரையை யடைந்தான். எங்குஞ் செவ்வானமூடிகொண்டது.

இவ்வாறு சூரியன் அத்தமானவரையை யடையவே சூர்ப்பநகைக்குக் காமானலம் உடம்பு முழுதும் பற்றிக்கொண்டது. அவளோ தாடகைமேல் விட்ட கொடுங்கணைபோல மன்மதன்விடுங் கணைபட்டு மன மறுகிநின்றாள். இவள் காமபாணத்தால் மொத்துண்டு தன் கொங்கைகள்ளெழுமுங்க ஆகாயத் திற்செல்லும் மேகத்தை இறைவ னுருவமென்றெண்ணித் தழுவுவாள், அவை கள் இவளுடைய மேனியின்வெம்மை வெதுப்பச்செல்லக்கண்டு வருந்துவா ள். இவள்கொண்ட மோகத்திற்கே யளவைகிடையாம லிருந்தது. இவளோ ஊழித்தீப்போன்ற காமா னலத்தினுல் வெதும்பப்பட்டும் தான் இரகுவீர னை யடைந்து வாழலாமென்னும் ஆசைமிகுந்துசிறிதும் ஆவிநீங்காதிருந்தா ள். வஞ்சனையாகிய கொடிய மாயையைவளர்க்கும் என் நெஞ்சிற் புகுந்து என்னுடைய ஆபத்தை நீக்கவேண்டுமென்பாள், அஞ்சனமலைபோல்வானே யருளாயென்பாள், பின்னும் நஞ்சுண்டார்போல நடுங்குவாள், காவிமலரோ கயலிணையோ வென்று சொல்லப்படும் இரண்டுகண்களையுடைய அவனது மனைவியோ திருமகளினும் சால அழகுபடைத்தவள்,பாவியாகிய என்னையும் பார்ப்பனோ வென்பாள்,இவ்வாறு ஆவிவருந்தியும் ஆசைநோய்நீங்காதாளா ய், காதலால் மொத்துண்டுகிடந்து வருந்தாநிற்க மூன்றுலகத்திலுமுள்ள அரக்கராகிய இருளைத்தொலைக்க இரகுவீரன்தோன்றினுற்போலச் சூரியனு தயமானுன்.

சூரியோதயங் கண்டவுடனே தன்னுயிரைக் கண்டேனென்று சொல்ல த்தக்காளாகிய அக்கொடியவள் இடையென்பதே யில்லாதவளாகிய இச்சா னகியிருக்குமளவும் என்னை அவன் கண்ணெடுத்துப்பாரான், விரைந்து நா மோடிப்போய் அவளையொளித்துவிட்டு அவளுடையகாதற்கணவனைச்சேரு வதேநலமென்று துணிந்துவந்து அப்பன்னசாலையை நோக்கி இராகவனில் லாதிருக்கக்கண்டு இதுதான் தக்கசமயமென்று எண்ணினுள். இராகவ னக் காலைக்காலைக்கடன் கழிக்கச்சென்றதனுல் இளையவன் அயலிலேகாத்துக் கொண்டிருந்தான். அங்கேஇளையவனிருக்கின்ற தறியாமல் இவளோதனியே யிருக்கின்றாள்; என் எண்ணம்பலித்தது இங்கேதனிநின்று எண்ணுவதனுல் பயனில்லை யென்றேசிந்தித்துக்கோபமிகுந்துஅப்பன்னசாலையைநோக்கிநட ந்தாள். அதை இளையவன் கண்டு நில்லடி அரக்கியேயென விரைந்து சென் றுஅவள் பெண்ணென நினைந்து வில்லைக் கையிலெடாமல் அவளுடைய கூந் தலைப் பிடித்திழுத்து அவள் வயிற்றில் ஒருதை யுதைத்து உடைவாளை யுரு விச்சானகியைப் பிடித்துப்போகலாமென்று எண்ணிவந்த அவளுடைய கா

துமுலை மூக்கு என்னு மூன்றுறுப்பினையு மறுத்தெறிந்து விட்டுவிட்டான், அப்போது அவள் அழுதுபுலம்பிய ஓசையோ திசையனைத்துஞ் செவிடுபட்டது, தேவர்கள் காதிலும்போய்ப்பட்டது, நிலமுழுதும் அவள் அறுப்புண்ட உறுப்பினின்றும் பெருகிய இரத்தவெள்ளம் பரந்தது இராவணவேட்டையாடுவான் அவனுடைய மனைகள்பதித்த தலையைத்துணிக்க முகூர்த்தங்கொண்டதுபோலிருந்தது. தன்காலடியதிர நடக்கத்துணிந்த அரக்கிஇராவணன் முதலிய சூரர்களுடைய ஆவிநீக்க உற்பாதமென்ன இரத்தமழை சொரியும் கார்மேகமொத்துயர்ந்தும் பின் மண்ணில் விழுந்தும் உழைத்துக்கொள்வாள், அயர்வடைவாள் கைக்குலைத்தலமருவாள், ஆருயிர்சோர்வாள், பெயர்ந்துசெல்வாள், பெண்பிறந்தேன் பட்டகொடுமை நன்றாயிருக்கின்றதென்பாள், வருந்துவாள் அறுப்புண்ட மூக்கையொற்றுவாள், உலைக்கத்தியேபோற் பெருமூச்செறிவாள், கையை நிலத்திலோங்கியறைவாள், தன் கொங்கையைப்பற்றிப்பார்ப்பாள், காலாலோடுவாள், இரத்தஞ்சொரிய நிற்பாள், ஊற்றுமிக்க நீருருவியேபோல ஒழுகுகின்ற உதிரச்சேற்றிற் பாய்கின்ற வெள்ளத்திற் றிரிகின்றாளாய்த் தன் குலத்துள்ளோர்பெயரை யெல்லாம் எடுத்துச் சொல்லிப் புலம்பலாயினள்.

நிலையாக இந்தவுலகத்திலிருக்கத் தவஞ்செய்வோர் வில்லைக்கையிலெடுத்துத்திரிவது சிறியதன்றோ! தேவர்கள் எதிரே தலையெடுத்து விழிக்காதிருக்கச் சமைப்பதுபோன்றதன்றோ! பரமசிவனுடைய கைலைமலையை ஊசிவேரொடும்பறித்த தனியலையே! நீ என்னைப்பார்க்க வாராயோவென்றும், புலிபுறத்தாகக் குட்டியகப்படசதென்ன உலகம் எடுத்துக்கூறும் உரைபொய்த்துவிடுமோ ஊழிகாலத்தும் சலியாத மூவருக்கும் வானவருக்குந் தானவருக்கும்மேம்பட்ட வலியையுடையானே! யான்பட்டதுன்பத்தைப் பார்க்க வாராயோவென்றும் காற்றையும்நீரையும் நெருப்பையும் விண்ணையும்யமனையும் நவக்கிரகங்களையும் ஏவல்கொண்டாயே! நானே இங்கே இரண்டுமனிசருக்கு ஆற்றாதிருக்க உன்வல்லபத்தை மாற்றிவிட்டாயோவென்றும், அழகிய வடிவம் மன்மதனை யொத்தாரேயாயினும் உன்செருப்படியிற் பொடியொவ்வாத மனிசரைச் சிறுவாயோ! என்றும், திசைக்களிற்றையெல்லாம் வெற்றிகொண்ட வீரனே தேனுடைத்தெரியல் புனைந்த தேவரையும் வருத்துகின்ற போராற்றல் உனக்கும் உன்தம்பியர்க்குந் தவிர்ந்துவிட்டதோ வென்றும், மாமிசதேகம் பெற்று நம்மவர்க்கெல்லா முணவாயிருக்கின்ற இம்மனிசரிடத்தில் உங்கள் வலியொடுங்கிப்போய் விட்டதோவென்றும், மரங்களடர்ந்த நெடியகாட்டில் மறைந்துவசிக்கும் தவசிகள் வலியேயோ! வல்லபம் அமைந்த அரக்கர்களுக்கு ஒவ்வுகாலமோ தன்னேடெதிர்ந்தபகைவர் அரனே அயனே அரியோவென்று சொல்லும்போராற்றலைப்படைத்த கரனே! நான் பட்டசெயலின்மையைக்காண வாராயோவென்றும், இந்திரனும் பிரமனும் சிவனும் தேவரும் குற்றேவல்செய்ய சயமடைந்தை பல்லாண்டுகூற எல்லாவுலகங்களும் துதிக்க சந்திரவட்டக் குடைநிழலில் நீயிருக்கும் சபையினடுவிலே நான் வந்து நாணுமல் உன்முகங்காண வருவனேவென்றும், என் மார்புசிதைந்துபோக உதைத்துருட்டி என்மூக்கை யறிந்த சிறுமனிசனிருந்து என் தோளன்றோ இவ்வெற்றிகொண்டதென்று பார்த்துக்கொண்டி

ருக்க நானிங்கிருந்து புலம்புவதுதகுமா! இது கானிருக்கும் காணியாட்சியாகிய சனஸ்தானமென்னும் வனமன்றோ? நானிக்கேடடையலாமா என்றும், தேவர்களைக் கருவறுத்து இரந்திரனை விலங்கிட்டு வானவர்களைக்குற்றேவல்செய்யப் பண்ணிக்கொண்ட என் மருகனாகிய இந்திரசித்தே நானோ காதல்மிகுந்து மூக்கிழந்து நாணமில்லாமல் அடைந்த வசையால் உங்கள் புகழ் மாசுண்டதா மன்றோவென்றும், மலையையும்வருத்துந்தோளையுடைய கரதூடணன் திரிசிரன் முதலிய அரக்கர் குலத்தவரே; நீங்களும் நம் அண்ணனாகிய கும்பகர்ணனைப்போலத் தூங்கிக்கொண்டிருக்கிறீர்களோ வென்றும், நானழைத்ததைக்கேட்டு வந்துசேவீரோ வென்றும் இவ்வாறுபலவிதமாகப்புலம்பி அரக்கியாகியசூர்ப்பநகையழுதிரங்கிப்பூமியிற்புரண்டுவீழ்ந்துகொண்டிருக்கையில் ஆற்றங்கரையிற்சென்று அநுட்டான முடித்துக்கொள்ளப்போன இரகு நந்தனன்வர அவனைக்கண்டுமழைக்கண்ணீர்பெருக்கெடுப்பத்தன் அரிந்தஉறுப்புகளினின்றும் உதிரம்பெருகஉனது அழகியதிருமேனியில் அன்பிழைத்தவன்பிழையாலே எம்மிறைவனே!யான்பட்டகொடுந்துயரம்இதுகாணன் றெதிரிலேவிழுந்தாள். அவளைக்கண்டஇரகுநாயகன் இவள் யாதேனுங் கொடுஞ்செய்கை செய்திருப்பளென்று தன்னைப்பில்லாதமனத்தெண்ணிஇவளைமூக்குமுலையுங் காதும் தம்பியே யரிந்திருப்பானெனத் துணிந்து அவளைப்பார்த்து நீயாரென்றான்.

அச்சொல்லைக்கேட்ட அரக்கி என்னை நீயறியமாட்டாயோயான்பகையென்பதுதனக்கோருலகத்திலுமில்லாதகோபத்தினையுடையஇராவணனாகிய எவ்வுலகமுமுடையானுக்குடன்பிறந்தா ளல்லளோவென்றாள். அப்படியிருந்தால் அரக்கரிருக்குமிடத்தை நீங்கி யாமிருக்கு மிடந்தேடி நீர் இங்கேயாது காரணமாக வந்தீரென்றுசொல்ல, வேகின்றகரிக்குவியலைப்போன்றகொடிய காமமாகியநோய்க்குமாமருந்து போல்வானேநேற்றும் யான் வந்திலேனோ வென, நாமோ நேற்றுத் திருமகளார்போலும் அழகியவுடிவங்கொண்டுவந்ததென்றுஇரகுவீரன்கேட்க, அதற்குச்சூர்ப்பநகைகொங்கையு மூக்குங்காதுமரிந்தால்ஒருவர்க்கழியமாட்டாதோ அழகென இரகுவீரன்குறுநகைபுரிந்து இளையவனை இவளை நீ யரிவானேனென்ன, இளையவன் சக்கரவர்த்தித் திருமகனது பாதங்களை வணங்கிநின்று இவள்தன் வாயிற்பெய்துண்ணவோ? அல்லது தீவினை செய்துழல்பவராகிய அரக்கர் கூட்டம்புறத்தேயுளதோ அறியேன்; விரைந்தோடிவந்து சானகியாரைவலிதிற் கைக்கொண்டெடுக்கச்சென்றாள்!நானதுகண்டுஇவ்வாறுசெய்தேனென, அச்சொல்இரகுநாயகன்செவிபுகாமுன்னேசூர்ப்பநகை சேற்றிலுள்ள தன்கணவனருகிருக்கமனத்திற்கோபித்து கண்கள் நெருப்பெழச் சூல்கொண்ட தவளை நீரைக்கலக்குகின்றநீர்த்துறையையுடைய அயோத்திநாட்டரசே! மற்றிவளைக் கண்டால் என்மனம் வருந்தாதோவென்றுசொல்லிமுடித்தாள். நான் ஆண்டன்மையில்லாதஅரக்கருடன் பொருது அவர்கள் குலத்தை யொருங்கழிக்கத் தேடியேயிருக்கின்றேன். நீகொடியசொற்களைப் பிதற்றவேண்டாம், இக்காட்டைக்கடந்துபோவென்று இரகுநந்தனன்சொல்ல, அதைக்கேட்டசூர்ப்பநகை நான்முகனே

முதலாய தேவர்கள் அளவிலாதவர் இராவணற்குக் கானிருக்கும் குடிமை யுடையதென்றால் விரைந்துபோய்விடென்று சொல்வதுநல்லதன்று, உங்களுக்கு வேறாகின்று யான்சொல்லுஞ்சொல்லுண்டு அதுஉமக்குறுதியைத் தருவது அதைக்கேளுங்கோள்! செய்தற்கரிய மூக்கையரியுண்டாளென்ற வசையுரைப்பாரைஇராவணனே நாக்கரிவான்; நீங்கள்என்மூக்கையரிந்துஉங்கள் குலத்தையு முதலரிந்தீர்கள், உமக்குப்போக்கரிதாகும்இவ்வழகையெல்லாம் புல்லிடையுகுத்தீர்கள். கற்புடையாரோதம்பெருமையைத்தாமே யெடுத்துச் சொல்லவுமாட்டார்; உம்மிடத்திலுள்ள பேரன்பாலேயான் சொல்வதரிது; தேவர்களைப்பார்க்கிலும்பெருமிடல்பெற்ற இராவணன் தங்கைஇவளாயின் யாரினும் பெருமிடல்பெற்றவளென்று இளையவனுக்கு நீர் சொல்லவேண்டுகிறேன். வானுலகைக்காப்பாரும் நாகருலகங் காப்பாரும் இனித்தங்கள் தலைகாத்துநின்று உங்கள்ஊன்காக்க உரியார்யாவர், என்னை யுயிர்காப்பீராயின் யான் காப்பேன் அல்லாமலும் அவ்விராவணனுக்குமுளர், நானேபெரும்போர் நடக்கையில்புறத்தேநின்றுகாப்பேன், வானிற்சுமந்துஞ்செல்வேன், ஊனைப் போலும்நறுஞ்சுவையுள்ள கனிகளையுங்கொணர்ந்துதருவேன், காப்பாரைக் கைத்தென்று சொல்ல வேண்டாம் நீர் கருதியவனைத்துந் தருவேன். இப் பூப்போலு மெல்லியளாகிய சானகியால் பெறப்படும் பொருள்யாது? நீர் வல்லீராயின் குலத்தாலும் நலத்தாலும்வேண்டியவற்றைவேண்டி யாங்குக் கொணரத்தக்க பலத்தாலும் மதியினாலும் வடிவினாலும் இளமையாலும்கிலத்திலுள்ளாரும் வானத்தாருமாகிய மாதரில் என்னைப்போலத்தான் சொல்லத்தான்வேறெவருண்டு சொல்லுங்கோள்; என்னை வேண்டாதார் விண்டாரென்றுரைக்கப்படுவதன்றோ! நான்கொண்டகாதலால்என்னுயிரென்பதுஉம்முடைமையன்றோ! உலகத்தின்கண் கண்டவராலேகாதலிக்கப்படும்உருவமும் விடமேயன்றோ! கொண்டவரே கொண்டாடப்படும் உருவம்பெற்றால் கொள்ளாமற்போவீரோ! என்னுசையைப்போக்கிவிட்டீர்கள்; போவதென்னமாட்டீர் பொறுப்பீராயின் அதனை ஒருநொடியில்ஆக்கிக்கொள்வேன், நான்பேரழகேயமைந்த வடிவமாக்கிக்கொள்வேன், நீர் அருள்செய்யும்பாக்கியம் படைப்பேனானால் அதனால் பெண்மைக்கோர்பழுதுண்டாமோ! மாதர்க்குமூக்கும் மிகையேயன்றோ? சிவனும் பிரமனும்திருமகள்நாயகனும்இந்திரனும் ஒன்றாகி நிற்கும் பேரழகு படைத்தவனே இவ்விளையவன்போ லருளிலனேயாயின் உலகமுழுதும் தன்பூங்கணையால் உயிர்வாங்கும் மன்மதனும் உனக்கிளையானே? என்மூக்குப் புழைகாண அரிந்தபொருளை நோக்குமிடத்தில் இனிய இவ்வுருவங்கொண்டு கம்மிடத்திலேவாசஞ்செய்துகொண்டிருப்பாள், அப்பாலெங்கும்போகாள்; பின்னயலாரொருவருமிவளைப்பாரார்களென்பதேயல்லாமல் எனக்கேதேனுந் தீங்குகுறித்துச்செய்தீரோ அதையறிந்தல்லவோ அவ்பிராட்டி செய்ததுநான் அறிவில்லாமல்அல்லவே? வெப்பமாறாதகெடுங்கோபமுள்ள அரக்கர் இதனையறிந்து வெகுண்டு நோக்குவாராயின் அப்பழியால்உலகமுழுதும் உம்பொருட்டாலழிந்தனவேயாகும்; எனக்குயிருதவிசெய்து இங்கேயே என்னுட னிருங்கோ ளென்றாள். அதைக்கேட்ட

இரகுநாயகன் அடிஅரக்கி! உன்தாயைப்பெற்றதாடகையைக்கொன்றபாணமுமென்னிடத்திருக்கின்றது, நானோ அரக்கர்வருக்கத்தையெல்லாம்கொல்லவேஇங்கேவந்திருக்கின்றேன். புல்லியஒழுக்கத்தைஅகலப்போடுநான் தயரதன்மகன், தாய்சொன்மேற்கொண்டேகாடடைந்தேன், வேதியர்களும்மாதவர்களும்வேண்டவேபடைமிகுந்துள்ள அரக்கர்வருக்கத்தைக் கொன்றுகளையவிருக்கிறேன்,அவ்வாறு செய்துவிட்டேநான்திருவயோத்திக்குமீள்வேன். நெறிவழியே செல்லாத அரக்கரெதிரே தேவர்களோ நிற்கமாட்டாமற்விட்டனர், இருவர் மானுடர் இவரேயென்று நினைப்பாயேயாயின் உன்னால்மிகுந்த சூரனென்றுகுறித்திருக்கும்அரக்கர் வருக்கத்தையெல்லாம்இங்கேகொண்டுவந்து போர்செய்யத்தூண்டினாலும் அத்தனைபேரையும் உன் கண்முன்னே கொன்றுபோடுவேன் என்றான். அதற்குச் சூர்ப்பநகை கொல்லலாம், மாயங்கள்குறித்தனவேகொள்ளலாம் வெற்றியும்பெறலாம்,மற்றுள்ளவினையனைத்துங் கடக்கலாம், மெல்வாய்தோன்றும்படி கோரப்பற்கள்மிகுதியாகத்தோன்றுகின்ற வாயாளென்னாதுபார்ப்பையேயாயின்அயோத்திநகரத்தரசனே! கேள், மூங்கில்போன்ற தோளையுடையாளைக்கைவிடென்றாலும் நான்மிகையோ; கள்வராகிய பொறியில்லாதவெற்றிபெற்ற அரக்கருடனே போர்செய்யஅமைந்தீராயின்அவர்செய்யும்மாயைகளெல்லாம்தடுப்பேன்,உலகத்திலோபாம்பின்கால்பாம்பறியுமென்றபழமொழியையும் பார்க்கமாட்டீர்களோ! உள்ளத்திற்கொள்ள உம்மைச்செய்துகொண்டவளொருத்தியுண்டென்பீராயின்அரக்கருடனே போர்க்களங்கொள்ள ஒருமூவருங்கலந்தோமாயின் குளம்பறித்து விடுவோமென்பதுவே பொருந்தியகொள்கையென்பதைச் சிறிதுமெண்ணாத இளையவனோடென்னையிருத்துவீராயின்இருகோளையுஞ் சிறையிலிருத்திய இராவணனுக்கும் இளையாளாவேன்;நீங்கள்நகரத்திற்குச்செல்லும் நாளையில் வேண்டுருக்கொள்வேன்,அல்லாமல்அருங்கலாமுற்றிருந்தால் இளையவனென்றாலும் அவன் மூக்கை முதலிலே யில்லாதவளோடுகூடியிருப்பேனோவென்பானேல்அவனுக்குநீர் நான்இடையில்லாதவளோடு கூடியிருக்கவில்லையாவென்று மறுமொழிசொல்லவேண்டும் என்று சொல்லிக்கொண் டிருக்கையிலே இளையவன் தன்கையிலிருந்தவேலைப்பார்த்துக்கொண்டேஇவளை இங்கே நாம்கொன்றுகளைவோமென்றால்அருள்நெடிதுவருந்துமென்று இரகுநாயகனைநோக்க, இவள் இவ்விடம்விட்டுப்போகாளேல் அவ்வாறாகட்டுமென்று சொல்ல, அதைக்கேட்ட சூர்ப்பநகை நானிங்கிருப்பேனேயாயின்உயிரிழப்பேன்என்று நெஞ்சில்நினைத்துமூக்கும்காதும் முலையிரண்டுமிழந்துவாழப் பொறுப்பேனோவஞ்சனையாலுங்கள்கருத்துணரவேண்டியேஇவ்வளவுஞ்செய்தேன், காற்றினும் நெருப்பினுங்கடுமையானவனாகிய கரனென்னும் பெருள்ளஉங்களுககு யமன்போன்றவனைஇப்போதேயழைத்துக்கொண்டு வருகிறேன் பாருங்கோளென்றுசொல்லிப் போய்விட்டாள்.

சூர்ப்பநகைப்படலம்
முற்றிற்று.

---

## கான்வதைப்படலம்.

அவ்வாறுசென்ற சூர்ப்பநகை கரனது பாதத்தின்மேல் விழுந்துபுரண்டழுதுநின்றாள். அதைக்கண்ட கரன் தன் வாக்கினைப்போலும்புகைமூண்டும் வாயினையுடையானாய் உன்னைக் கூசாமல் இவ்வாறுசெய்தவன் யாரென்று கேட்கவே, இருவர் மானுடர் அவர்கள் மேலும் தவப்படிவமுடையவர், வில்லும் வாளுமுடையவர், மன்மதனைப்போலும்பேரழகுபடைத்தவர், தருமசிந்தையுடையவர், தயரதமகாராசன்மக்கள், போரிலெதிர்ந்தஅரக்கர்வருக்கத்தைக்கொல்லச்சமைந்துள்ளவர், உன் ஆற்றலைச் சிறிதேனுமதியாமல் அறத்தை நோக்கிநிறுத்துநினைப்பினையுடையவர், அவர்க ளொருபெண்ணருங்கலமன்னாளொருத்தியுடன் வந்திருக்கின்றனர். அவளைக்கொண்டுபோய்இலங்காதிபதியாகிய இராவணனுக்குக் கொடுக்கலாமென்று துணிந்துபோனேன், அதைக்கண்டு கோபித்து என்னை அவர்கள் வலிந்துபற்றி மூக்குமூலை காதுஇவைகளைத்துண்டமாக்கினர், இதுதான்நடந்தசெய்தியென்றுசொல்ல, அதைக்கேட்டுக்கோபமூண்ட கரன் உன்னைஇவ்வாறுசெய்தாரைகாட்டென்றுஎழுந்தான், பின்பு அருகிருந்தவரைப்பார்த்து தேரைக்கொண்டுவாருங்கோளென்றுசொல்ல, அங்கிருந்தபதினான்குசேனைவீரர்க ளெழுந்துநின்றுஇக்குற்றேவல்காரங்களை செய்யக் கட்டளையிடவேண்டுகிறோம், தேவர்கள்மேற் போர்செய்யவாபோகின்றீர்? அல்லவே, மானுடர்மேல்போர்செய்யலாதலால்நாங்களேபோகிறோம் எங்களுக்குவிடைகொடுமென்று சொல்லினர். அதைக்கேட்டகரன் நன்றாய்ச்சொன்னீர்கள், நான் அக்குழந்தைகள்மேற் போர்செய்வேனாயின் தேவர்கள் நகைசெய்யார்களா. நீங்களே அவர்களைப்போய்க்கொன்றுஅவர்களுதிரத்தைப் பானஞ்செய்து வெற்றிக்கொண்டுவாருங்கோளென்றுசொல்லினான். அவ்வாறுசொன்னகரனை வீழ்ந்துபணிந்துயமதூதரென்னும்படி சூர்ப்பநகை தங்களைத் தொடர்ந்துவர, சக்கரவர்த்தித்திருமகனாரிருக்கும் இடத்தையடைந்து ஆயிரமௌலி யமலனாதிப்பிரா னடிமலரைமனத்திலிருத்தும் இறைவனைக்காட்டிநின்றாள்.

அவர்களோ போயடைந்ததே மோதுங்கோள் எறியுங்கோள்பாசத்தால் பிடியுங்கோள் கட்டுங்கோளென்றுசொல்லி அச்சோலைமுழுதுஞ்சுற்றிக்கொண்டார்கள். ஸ்ரீராமனோ இளையவனைப்பார்த்து சீதையைக் காத்துக்கொண்டிருவென்று சொல்லிவிட்டு, கற்பகம்போலும்விளங்கும் தன்கையால்வில்லை வளைத்துநாணேற்றி அச்சாலையைநீங்கி இவ்வழியாகநெருங்கோளடாவென்றதட்டிப் போர்செய்யத்தொடங்கி மழுவும் வாளும் முத்தலைச்சூலமுடைய யமன்போன்றஆற்றலையுடையவர்களாகிய அப்பதினான்குபேருடையவிற்பிடித்த கைகள் பதினாலையும் பாணங்களால் வேட்டித்தள்ளினான். மராமரங்கள் வேர்பறிந்துவீழ்ந்தாற்போல் அவர்களுடைய தோளற்றுவிழவே வாள்கொண்டுபோர்செய்தனர். அதைக்கண்ட இரகுநாயகன்விடும் பாணங்களே அத்துஷ்டர்களுடைய தலைகளையும் அறுத்துத்தள்ளின. இவ்வாறு தன்னெதிர்வந்த சேனைத்தலைவர் பதினால்வரும் வந்தவழி போனவழிதெரியாமற்போய்

விட்டது. சூர்ப்பநகை யோடிப்போய்க் கரனுக்கு நடந்தவிஷயத்தை யெல்லாம் எடுத்துச்சொன்னாள். கரனும் சங்கரனாலும் தடுப்பரும் கோபமுண்டாகிக் கரிப்ப யானேறத் தேனைக்கொண்டு வருவதன்றிப்போர்க்குச் செல்ல வெற்றி முரசறையுங்கோ ளென்றான். அப்படி பேரிகையோசை கேட்டவுடன் மாரிகாலத்தின் மேகம் அளவில்லாதன வந்தாற்போலத் தேர்ச்சேனை திரண்டன, தேவர்களுலகமும் நாகருலகமு நடுங்கின. அச்சேனையிற் போர்க்கெழுமுரசமே முழக்கமாகவும், தோள்களே அலைகளாகவும் இறுதிக்காலத்திலே கருங்கடல் கால்கிளர்ந்தாற்போல ஆரவாரித்தெழுந்தது. காடு நெருங்கி விண்மூடிக்கொண்டாற்போல நீண்டெங்குமோங்கிய நெடிய கொடிகள் எங்கள் பசியோடிப் போமென்று சந்தோஷித்தெழுந்து துள்ளியாடிக்கொண் டிருக்கின்ற அலைகைகளைப்போல ஆட மதயானைக் கூட்டமே போன்ற அரக்கர்கள் கையிலுள்ள வாளோடு வாள்தேய்த்துத் பொறியினைப்போலக் காடெங்குந் தீப்பொறிபொங்கப் பல வாத்தியங்களெழுந் தாரவாரிக்க ஆதிசேஷனும் அச்சேனையின் பாரத்தைச் சுமக்கமுடியாமல் தலைநெளித்துக்கொள்ளஉலகத்தில் உள்ள மலைகளெல்லாம் ஒருபுறத்தேவந்து சேர்ந்தாற்போலவும் புலியின்கூட்டமோ, மேகக்கூட்டமோ, யானைக்கூட்டமோ, மலைகளோ அல்லது சிங்கத்தினமோவென்று சொல்லத்தக்க பல பதினாயிரம் படைவீரர்கள் போயினர். சில தேர்கள் ஆளிகள்பூண்டவையும், சிங்கங்கள்பூண்டவையும், யானைகள் பூண்டவையும், புலிகள் பூண்டவையும், நாய்கள்பூண்டவையும், நரிகள்பூண்டவையும், கூளிகள்பூண்டவையும், குதிரைகள்பூண்டவையு மாகச்சென்றன ; அப்போதோ எருதுகளாரவாரித்தன,மறைக ளாரவாரித்தன,காற்றினமாரவாரித்தன, கழுதைக ளாரவாரித்தன, தோன்றியமாத்திரத்தில் உலகமுழுதும் சூழ்ந்துசெல்லும் பருந்துக ளாரவாரித்தன, சங்குகளாரவாரித்தன, தேரினங்கள் நெருங்கின, யானைகளுநெருங்கின, குதிரைகளுநெருங்கின, காலாட்களுநெருங்கின ; மழுக்களும், வேல்களும், வயிரவாட்களும், இருப்புத்தடிகளும், தோமரங்களும், எறியீட்டிகளும், முசுண்டியும், சூலமும், உலக்கையும், காலபாசமும், குந்தமும், வயிரமும், கோல்களும், பிண்டிபாலமும்,வில்லும்,பாணமும், சக்கரமும், வலயமும், சங்கனுபந்தமும் கப்பணமும் பாசமுமாகியபடைகளும் நெருங்க, சூரியனும் தீக்கடவுளும் அஞ்சுஞ் சோதியை யுடையனவாகி உதிரமும் மாமிசமுந்தங்கிய படைகளைக்கொண்டாராய் தேவர்கட்கெல்லாம் துன்பத்தை யுண்டாக்கியவைகளாய் வெற்றிமாலைவேய்ந்து அநேகமாயிரம் யானைகளின்பலமுடையாராய் உலகமுழுதும்கவளங்கொள்ளும்வாயினையுடையாரும் தீயைப்போலும்விழிக்கும்கண்ணையுடையாருமாகிய பதினான்குசேனைத்தலைவர் புறப்பட்டனர். தூஷணன் திரிசிரன்முதலிய வீரர்களும் வந்து கலந்தனர். அச்சேனை சமுத்திரத்தின் மத்தியில் கருங் கடல்மேருவை வளைந்தாற்போலக் கரனும் சூரியனுடைய பசும்பொற்றேரும் சேனைகளாலுண்டாகின்ற தூளியால் வெண்மையடைந்தது. அச்சேனைகள் நெருங்கிச் செல்வதனாற் காடுகள் துகள்பட்டன, மலையிற் சஞ்சரிக்கும் மேகங்கள் துகள்பட்டன, கடல்கள் தூர்ந்தன, நிலத்திலும் ஆகாயத்திலும் நெருங்கிச்செல்வதனால்

நீண்டமலையின்மேல் மலையினம் வருவனபோல மலையொன்றைவிட் டொன் றைத் தாவிச்சென்றனர். இவர்களைக்கண்டு பயந்து மிருகங்கள் ஓடிமுன்னே போவது இவர்கள் வரவைத் தெரிவிப்பதற்குத் தூதனைப்போல விளங்கிற்று. இரகுவீரன் சேனைகள்வந்து சேர்ந்ததென்று நினைத்து மின்னின்ற சிலையை யுடையானாய் கவசமணிந்து வாளையேந்திப் பாணங்களமைந்த புட்டில்கட்டிப் புகையு நெஞ்சங்கொண்டு யான்செய்யு நிலைமையை நின்றுகாணென்று விரு ம்பி நேர்ந்துமுன்னே நின்றுதன்பின்னேதோன்றிய இளையபெருமாளைப் பார் த்துநெறிகொண்டமாதவர்க்கு முன்நானிருதருயிரைக்கைக் கொள்வேனென்ற சொல் பழுதாகாவண்ணம் சிதையைக் காத்துக்கொண்டிருவென்று சொல்லி விட்டுமரங்களடர்ந்த காடெங்கும்படர்ந்த இச்சேனையோ கரன்சேனையென்று துணிந்து இரகுநாயகன் வாளிகளடர்ந்த புட்டிலைக்கட்டிக்கொண்டு வில்லேந்தி யுடம்பிற் கவசமணிந் துடைவாளைக் கட்டிக்கொண்டு என்மேல் திரிலோகங் களுமெதிர்ந்துவந்தாலும் நாளுலந் தழியுமல்லவா? சிங்கம்போல்பவனே! இப் போரை யெனக்குக் கொடுத்துவிடுமென வேண்ட, அதற் கிராமபிரானும் மன மிசையாமல் நின்றகுறிப்பை மனத்திலறிந்து அவனது ஆணையை மறுக்கப் பயந்து தன் செங்கையைக்கூப்பி நின்றுகொண்டு கண்ணீர்விட்டுக் கதறி யழுது சிதையிருந்தவிடத்தி லிருந்தான்.

பூங்கொம்பன்ன சானகிமனங்குழைந்து வருந்தப் பன்னசாலையினின்றும் இரகுநந்தனன் அரக்கர்க ளழியும்படியாகக் குகைக்குளிருந்த சிங்கம்குஞ்சரங் களைத் தேடிவருவதுபோலவந்தான். அவ்வாறுவந்த தாசரதியை மூங்கிலிற் றோன்றிய தீ அம்மூங்கிலை யழிப்பதுபோலத் தான்றோன்றிய குலத்தையழிக்க வந்த கொடியவளாகிய சூர்ப்பநகை சானகிராமனைச்சுட்டிக்காட்டினாள். அப் படி சூர்ப்பநகை காட்டக்கண்ட கரன் இதோநிற்கின்ற மனிசனுடைய வல்ல மையையழித்துவெற்றிமாலையைப்புனையுங்கோளென்று விரித்துச்சொன்னான். வந்தவனோ மனிசனொருவன், இவ்வலிமைமிகுந்த சேனைக்குக் காடிடங்கொள் ளாதே! அப்போதுயானடைந்த வெற்றியென்னும்? யாவரும்பார்த்திருங்கோள் மாமிசந்தின்ந்த இவனை இப்போதே கொன்றுகளைகின்றேனென்று சொல்ல, அச்சொல்லைக்கேட்ட அகம்பனென்பவன் நமக்கா சகுனம் நல்லனவாகத் தோன்றவில்லை, இரத்தமழையோ மேகங்கள் குமுறிப்பெய்கின்றன, பகலில் சூரியனைப் பரிவேடஞ் சூழ்ந்திருக்கின்றது. உன்கொடியின்மேல் காக்கைக் கூட்டங்கள் சண்டைசெய்து வீழ்ந்து புலம்பாநின்றன, வாளின்வாய்களை ஈவளைக்கின்றன, வெற்றிவீரருடைய தோள்களும் கண்களும் இடந்துடிக் கின்றன, வீரர்களுடைய குதிரைகள் தூங்கிவிழுகின்றன, நாயு நரியும் கூடி ஊளையிடுகின்றன, பெண்யானைமதம் பெருக்கெடுத்துப்பொழிய ஆண்யானை களினுடைய தந்தங்கள்முறிபடுகின்றன, உலகம் அசைகின்றது. வானில் இடி விழுகின்றது. பெருந்திசைகள் கரிகின்றன. எல்லாச் சேனாவீரர் முடிமாலை களிலும் புலானாற்றம்வீசுகின்றன. அவனோ நம்மாலானதெல்லாங்காட்டிச்சுல பமாகவேவெற்றிகொள்ளத்தக்கவனுமல்லன்; சற்றேதாமதிக்கவேண்டுமென்று சொல்ல, அதைக்கேட்ட கரன்கோபநகைநகைத்து தேவாரயெல்லாம் தேய

அளைத்தஅம்மியாகிய என்தோளோ போர்செய்யவிரும்பிப் பூரிக்கின்றன; இம் மனிசனுக்கின்றெளியவோவென்று சொல்லினன். அத்தருணத்தில் எதிபடை யிடிபோல்வீசி சேனைகள்சக்கரவர்த்தி திருமகனைவளைந்தன; அவ்வாறேவளை ந்தகாலையில் ஸ்ரீராமனது கைவில்லும் வளைந்து அதனால்விளைந்த போரையும் ஆனவரையிலும் சொல்லுவேன். எப்படியென்றால்சூலமற்றாரும், மழுவும்வாளு மற்றாரும், தண்டு பிண்டிபால மற்றாரும், பாணங்களொழிந்தாரும், வேற்படை நீங்கினாரும், விற்களற்றாரும், பல்லயமற்றாரும், தொடியணிந்த தோளொடு தோமரம் இழந்தாரும், யானையை யிழந்தாரும், அச்சுடனே தேர் கொடி முத லியவைக ளிழந்தாரும், குதிரைகளிழந்தாரும், முடியிழந்தாரும், முசலந்துணி ந்தாருமாய்இப்படிபலவிதமாகப்போரில் அரக்கர்கள்சின்னபின்னப்படஎங்கே பார்த்தாலும் இரத்தவெள்ளமும் பிணமலையுமாகக் குவிந்திருந்தன. எங்கே பார்த்தாலும் கவந்தபந்தங்கள்கூத்தாடின. அரக்கரதுகண்மணியைப்பிடுங்கிக் காகங்களும் கழிமகிழ்சிறந்தன, இவ்வாறாகவே போர்செய்யச்ஸ்ரீராமபிரானை அரக்கர்கள்எல்லாம் ஒன்றாகக்கூடியெதிர்த்தார்கள். அப்போதுஇரகுநாயகன் தன் வில்லைவளைத்து நாணேற்றிப் பாணப்பிரயோகஞ்செய்தான், செய்யவே அப்பாணங்கள் வானத்திற் செல்வனவும் கடற்புறத்தேயுள்ள இடத்திற்செல் வனவும் சந்திரனைச்சூழ்ந்த நக்ஷத்திரமண்டலத்திற் செல்வனவும் காட்டிற் செல்வனவும் மலையிற் செல்வனவும் திசையானையிடத்திற் செல்வனவும் மண் மேலனவும் மலைமேலனவும் விண்மேலனவும் கடலின்மேல்கீழனவும் வெற்றிநா டிய அவுணர்களுடைய மார்பையுருவிச் செல்வனவுமாயிருந்தன; அதனால் போரிற்சிலர் அயர்ந்தார்கள், சிலர்கழிந்தனர், சிலர்வருந்தினர், சிலர்பெருமூச் செறிந்தனர், சிலர் புரண்டனர், சிலர் உதிரவெள்ளத்தில் மூழ்கினர், சிலர் பாணமழைபடப் பூமியில்மாண்டார்கள், சிலர் உயிர்துறந்தார்கள். இப்படி அரக்கவீரர்கள் மடியக்கண்ட பதினன்கு படைத்தலைவீரர்களும் மேருவில்லி யாகிய பரமசிவனைத் திரிபுராதிகள் முன்னாளில்வளைத்துப் போர்செய்தவாறு போல் இரகுநாயகனை மதியாது கண்ணில் தீப்பொறிசிதற வருந்தி வளைந்து போர்செய்யத் தொடங்கி அவன்மேற் பலபாணங்களை யெய்தார்கள், சிலர்பல படைகளை யெறிந்தார்கள். சிலர்மழுவால் வீசினர், சிலர்எழுவால் போர்செய்ய வளைந்தனர். இப்படி போர்செய்தாரை யெல்லாம் இரகுநாயகன் பதினன்கு பாணங்களைவிடுத்து அவர்கள் கையிற்பிடித்த விற்களைப் பொடிப்பொடியாக்க அவர்கள் வில்லிழந்து வெகுளிமேற்கொண்டு மலைகளைப்பிடுங்கி யெறிந்து ஆகாயமார்க்கத்தி னின்றுகொண் டெறிந்தார்கள். அதைக்கண்ட இரகுநாய கனே தன்புருவச்சிலையையும் கைச்சிலையையும்வளைப்ப அம்மலைகள் வந்தவழி போனவழி தெரியாமற்போயினவன்றி அவர்களு மவ்வாறாயினர். இப்படி படைத்தலைவர் படவே திரிசிரனென்னும் பெயர்கொண்ட அரக்கர்பெருமான் இரகுநாயகன்முன் தோன்றிப் பாணப்பிரயோகஞ்செய்ய அவனையு மெதிர்த்து நின்றனன். இரகுநாயகனே அவனோடுவந்த அவுணவீரரையெல்லாம் தன் பாணத்தின் வாய்மையால் தேவராக்கினன். அதைக்கண்ட திரிசிரன் கோபங் கொண்டு இரகுநாயகனது திருவுருவமறையப் பாணப்பிரயோகஞ்செய்தான்.

இரகுநாயகனும் பதினன்கு பாணங்களையேவி அவனேறிவந்த தேரையழித்து அதைச்செலுத்தும் சாரதியையுங் கொன்றுன். பின்னும் இரகுநாயகன் அத்திரிசிரனுடைய முத்தலையினில் இரண்டைத் தன்பாணங்களா லறுத்துத் தள்ளத் திரிசிரனும் தன் தோழிந்தும் திரிசிரனென்னும்பேரழிந்தும் தன் ஆற்றல்பிழைபாறுய் மேகசாலம்போலக் கணைமாரிபொழிந்தான், பின்னும் இப்படி அவன் சலியாமற் போர்செய்து, அவன் கையிற்பிடித்த வில்லையும் அழிக்கத்தான்றிதும்மனந் தளங்காமல் மாயப்போர்செய்யத் துணிந்தான், அதைக் கண்ட இரகுவீரன் தாளிரண்டுக்கும் தோளிரண்டுக்கும் இரண்டுபாணங்களை விட் டறுத்தெறிந்ததுமல்லாமல் அவன் தலையையு மறுத்துத்தள்ளினன். திரிசிரன் இறந்ததைக்கண்ட அரக்கர்கள் தூஷணன் விலக்கவும் நில்லாமல் விரிட்டோடினர். அதைக்கண்ட தேவர்கள் கையைப்புடைத் தாரவாரித்தனர். பிணமலை சுமக்கின்ற நிலம் குழியுறக் கால்புதைந்து நிணத்தின்மேல் விழுந்தழுந்துவாரும் பிணத்தின்மேல் விழுந்துருண்டு போவாருமாய்ச் சிலர் உயிர்பிழைத்தோடினர். சிலர் உதிரவெள்ளத்தில் பாய்ந்து கால்பறித்தழுந்தினர். சிலர் இரத்தவெள்ளத்திற்புகுந்து நிலைகொள்ளாமல் பயந்து நீந்தினர். சிலர்கச்சும் வாளும் தங்கள் காலைத்தொடர்ந் தீர்ப்பனவற்றைக் காணுமலும் அச்சமென்பது ஒருருவங்கொண்டாற்போல நின்றுமனம் வருந்துவார்கள். இவ்வாறு அரக்கர்கள் மனத்திகிலடைந்து போருக்காற்றும லோடிப்போக அவர்களை நோக்கி நீங்கள் மனிசருக்குச் சிறிது மஞ்சவேண்டாம், உமக்குச் சில சொல்வேன் கேளுங்கோளென்று தூஷணன் சொல்ல ஆரம்பித்தான்.

உலோபமென்னும் பய மனத்திலுண்டென வாழ்கின்ற கொச்சைத்தன்மையையுடைய ஆடவரைக்கண்டு மாதரும் மனங்கூசார். உண்மையென்னுங் கவசந்தான் நிலைநிற்பதல்லாமல் அச்சமென்னு மிது ஆருயிர்க் கருந்துணையாகுமோ! இந்திரனேடும் திரிமூர்த்திகளோடும் போர்செய்தகாலத்தில் இராக்கதரில் எவர்களே யோடிப்போகாதவர். உங்களுக்குப் பயந்தோடிப்போன தேவர்களிடத்திலா நீங்கள்இப்படி யோடக்கற்றுக்கொண்டீர்கள். இங்கொரு மனிசனுக்கு இத்தனைவீரர்கள் இடைந்துபோனீர்களே. உங்கள்கையிலுள்ள வாளொடுபோய்விழுந்து ஊர்புகலுற்றீரே! மாதர்களுடையகொங்கைதாங்கிய மார்பிற்குளிக்க களிப்புற்றிருந்தும் கொழுமையாகிய கண்ணையுடைய அம்மாதர்களை யிச்சிக்கவாயினீரோ! நீங்கள் அவர்களைப் புல்லிக்கொண்டிருப்பீரோ! செம்பைப்போலுஞ் சிவந்துகாட்டும் கண்ணிரண்டும் பாலெனத்தெளிந்தீர்; வருத்துகின்ற காட்டின்கண் நுழைபுந்தோறும் முதுகி லுறப்பாய்ந்த அம்பைக்காட்டுவீரோ! கவசமணிந்த விசாலமான மார்பிற்குளித்த அம்பைக் காட்டுவீரோ! சொல்லுங்கள். துன்பமிங்கேஇதன்மேலுமுண்டோ! மனிசன் செய்யும் பேராற்றல் அத்தேவர்களுக்கு மரிதாகஉங்களரசன் தங்கையினது மூக்கேயல்லாமல் முதுகுகாட்டியோடும் பழியையு மேற்கொண்டீர்கள். நீங்கள் வணிகராக அமைவீர்களோ! வீரவாளைக்கொண்டு வேல்மடுத் துழப்படுவீரோ! எவ்வாறு வாழ்வீர்கள் சொல்லுங்கோள் என்று தானும் தன் கடல் போன்ற சேனையுடன் எதிர்நின்றுபோர்செய்யத்தொடங்கி அவர்களைநோக்கிச்

சிறிதுநேரம் பார்த்திருங்கோளென்று இரகுநாயகனை எதிர்ந்து நின்றான்.
தேவர்களும்மனந்திகைத்துநின்றார்கள்,இராகவபிரானும்அவனைநன்றாகக்காத்
அக்கொள்ளென்றே எதிர்நோக்கி நடந்துசென்றான். அப்போது தூஷணன்
படையிலுள்ள யானைகளிற் சில கோடிழந்தன,தேர்கள் சில கொடி கொடிச்
சிலை அச்சுமுதலிய வறுப்பிழந்தன,நெல் சூடறுப்புண்டாற்போலச் சிலகுதிரை
கள் கழுத்தறுப்புண்டன, சில பாணங்கள் அரக்க ருடலிற்பட் டுருவிச்
சென்றன,கச்சையும் கவசமுமிழந்து அருவியாற்றொழுக்கேபோற் சிலருடம்பி
னின்றும் உதிரவாறொழுகக் கேடகத்தட்டுடனே யுடம்பை யுருவிச்சென்றன.
இவ்வாறு தூஷணனுடைய படைவீரர்களும் தூஷணனும் புங்கானுபுங்கமாக
விட்ட படைக்கலமாறவும் அவ்வரக்கருடைய சேனைக்கடல் வறளவும் இரகு
நாயகன் குறைத்துத்தள்ளினான். தேவர்கள் ஆரவாரித்தெழுந்தனர், உதிர
வெள்ளமோ மலைகளையும் மரங்களையும் இழுத்துக்கொண் டோடின ; இராகவ
னது பாணங்களோ திசைகடோறும் தொடர்ந்து அரக்கர்வெள்ளத்தைப் புர
ட்டின. நிணத்தையுண்டு அலகைகளின் வயிறு நிரம்பின. போரை விரு
ம்பி வந்தாரெல்லாம் அழிந்தனர். யமனோ அவ்வரக்கராவியைப்பிடித்து மெய்
ய்ம்மறந்தான். தூஷணனோ இவ்வாறு சேனைகள் மடிவதைக் கண்டு தன்
தேரை அரக்கர் பிணக்குன்றின்மேல் விரைவாகச் செலுத்தித் தானும் அரிதி
னடைந்து யமனெதிரே ஆவிசென்றாற்போல இராமபாணத்தை யெதிர்ந்து
நின்றான். அவன் ஏறிவந்த தேரையும் அத்தூஷணனையும் பார்த்த இராக
வன் நன்று நன்று நின்னிலையென்று சிலசொல்விரும்பிக்கூற;அச்சொல்சொல்
லிக்கொண் டிருக்குங்காலத்திலே அக்கொடியவனாகிய தூஷணன் மூன்று
பாணங்களை யேவினான். அது எட்டுத்திசைகளை தனித்தனியேசுமக்கும் பார
மாகிய எட்டு நாகங்களுடனே சிஞ்சுமாரசக்கரமும் அனந்தனுமாகிய இரண்
டில்ஒன்றி னமிசமாகிய சக்கரத்தி னமிசபூதனாகிய பரதாழ்வானை அரசாளப்
பேரச்செய்த இராக்வனது நெற்றியிற்பூண்டிருக்கும் வீரபட்டத்தைத் தேவர்
கள் வருந்த வெட்டித்தள்ளியது. அப்படியாகவே அவனெய்த காலமும்வலியு
நல்லவென்று நினைந்து இரகுநாயகன் புன்முறுவல்செய்து பாணங்களைத்
தெரிந்தெடுத்து அவனது வேகத் தேரழியவழித்து கையிற் பிடித்திருந்த
வில்லையும் கவசத்தையு மறுத்தெறிந்தான். இப்படி போர்செய்து அத் தூட
ணனைநோக்கித் தேவர்கள் ஆரவாரிக்கவும் முனிவர்கள் வாழ்த்தெடுப்பவும்
நீ வலியுள்ளவனானால் இதைக் காத்துக்கொள்ளென்று ஒரு பாணத்தை யேவி
அவனது தலையையு மறுத்துத் தள்ளினான்.

தன் தம்பியிறந்ததையும் தன்கடல்போன்ற சேனையை இராகவன் துணி
ப்பதையுமறிந்து கரன் மிகவும்கோபங்கொண்டு சந்திரன் மேகக்கூட்டங்களை
வளைப்பதுபோல இராமபிரானைச் சேனைக்கடலொடுஞ் சூழ்ந்துகொண்டான்.
அவ்வாறு சூழ்ந்துகொள்ளவே சிராமபிரான் தன் வில்லினின்றும் பாணங்க
ளைப் பிரயோகஞ்செய்தான். அவ்வாறு சூழ்ந்துகொண்ட அரக்கர்கள் மாயப்
போர்செய்து மாண்டனர். கரனென்னும் பெயருள்ள வீரன் தன் சேனைகள்
முழுது மாண்டதுகண்டு கோபங்கொண்டு நிணச்சேறடர்ந்த உதிரவெள்ள

த்தினடுவில் நெடுங்கடலிலே மந்தரமலை தனியே நிற்பதுபோல நின்று தேரி லேறி இராமனை எதிர்த்தான். இராகவனும் தன்னையெதிர்த்த கொடியவனாகிய கரன்மேல் பாணங்களை யாராய்ந்தெடுத் தெறிந்தான். கரனோ தீயுருவின தாயும் காற்றின்விசையுள்ளதாயும் கொடியனவாயுமுள்ள ஆயிரம் பாணங்களை யெய்யவே இராகவனும் அவ்வாறே யாயிரம்பாணங்களைவிட் டறுத்துத்தள்ளி மீண்டும் ஊழித்தீப்போன்ற ஒன்பது பாணங்களைப்பிரயோகஞ்செய்தான். கரனும் அவ்வாறே அத்தனை பாணங்களையேவிடுத் தவைகளை யறுத்துத் தள்ளினன். கரனோ அவ்வா றறுத்துத்தள்ளியதுமன்றி மாயப்போர்வினைத்து சிராமனது திருவுருவைப்பாணமழைபெய்து மறைத்தான். தேவர்கள் கரனதுபோர்த் திறலைக்கண் டோட்டெடுத்தொளித்தனர். இராமனும் கோபங்கொண்டான். கரனோ மற்றொருகணைதொடுத்து தோளுற வாங்கிவிடுக்க இடியோசைபோல் அவ்விராமன் பிடித்த வில்லொடிந்தது. இதுவரையிலும் இராகவனுக்குவெற்றி யுண்டாகுகவென்று சொல்லிக்கொண்டிருந்த தேவர்கள் இராகவன் பிடித் திருந்த வில்லொடிந்ததைக்கண்டு நெஞ்சந் துளங்கி வருந்தினர். சிராமனோ தன் கையிலிருந்த வில்லொழிந்து தன்னந்தனியே யிருப்பதற்குச் சிறிதேனு மஞ்சாமல் தன் கையைப் பின்னுக்குவிடக்கண் டுணர்ந்து கருத்தினை யறிந்த வன்போல இராகவனது கையில் முன்னே பரசுராமரிடத்தேபெற்றுத் தான் சேமித்துவைத்திருந்தவில்லைவருணபகவான்கொண்டுவந்துகொடுத்தான். அப்படி வருணன்கொடுத்த வில்லைக் கையிலேந்தியபோது நன்னெறிபற்றி யொழுகாதபேருக்கெல்லாம் இடக்கண்ணும் இடத்தோளும் துடித்தன. இராமனோ அவ்வில்லில் நாணேற்றிக் கூற்றுவனுமஞ்சும்படி குனித்து எதிர்ந்து நூறுபாணங்களைவிடுத்து அக்கரனேறியிருந்த தேரை யழித்தான். தேரிழக்கவே கரன் அந்தரத்தி லாரவாரித்தெழுந்து தன் கையிலிருந்த பாணங்களையெல்லாம் இராமனது மந்தரகிரிபோன்ற தோள்மேல் மழைபோற் சொரிந்தான். தயரத ராமனோ தூணியினின்றுமெடுத்து சுடுகின்ற கொடிய பாணங்களைப்பொழிந்து அவனதுவலக்கையும் தோளும் அறுத்துத்தள்ளினன். வலக்கைவீழ்ந்துபோகவே தன் இடக்கையால்வெற்றியைத்தரும் உலக்கையை யெடுத்துச் சுழற்றி யெறிந்தான். இலட்சுமணனுக்கு முன்றோன்றலாகிய இராமனும் ஒருகொடிய பாணத்தால் அதையும் விலக்கினன். விடந்தங்கிய பல்லொடிந்தபின் பாம்பு கோபங்கொண் டொழிந்தாற்போன்ற தன் வல்லமையால் மராமரங் கையில் வாங்கிவந் தெதிர்த்தான். இராமபிரானோ அதன்மேல் ஒரு பாணத்தை செலுத்தினன். அரக்கனோ வரம்பெற்றிருப்பதனாலும் மாயையில் வல்லபமுடைமையாலும் உலகேழும் பாராமுருக்கிய பாவத்தாலும் வலக்கரம்போலக் கரன் கண்டதுண்டமடைந்தான். உடனேதேவர்கள் ஆரவாரித்தெழுந்து ஆடிப்பாடி மலர்மழைபெய்து தூர்த்தனர். சிராமபிரானும் சூரியன் உலகிற்படர்ந்த பனிமூடல்களினின்று நீங்கிவிளங்கினாற்போலவிளங்கினன். அப்போதுமுனிவர்கள் முறைமுறையாக வந்து நெருங்கப் போனாகாடித் தன்னுருயிரன்ன கணவன் டைக்கத்தன்னந்தனியேயிருந்த சிதையிடம் இராமனுமடைந்தான். இராமனைத் தம்பியும் அன்னமும் தங்கள் கண்ணீரினால் பாதங்கழுவினார்கள். முகூர்த்த

மொன்றில் கரன்முதலிய அரக்கரை யெல்லாங் கொல்ல அவர்கள் உடம்பி னின்றும்பெருகுகின்ற உதிரவெள்ளமோடவும்,தேவர்கள் வாழ்த்தெடுக்கவும் இரகுநாயகன் எழுந்தருளியிருந்தான்.

இங்கிப்படியிருக்க இராவணன்தங்கையாகிய சூர்ப்பநகை தன்கையாலே வயிற்றிலறைந்துகொண்டு இரவுபோன்ற கரனைத்தழுவியெடுத்து அவன துதிர வெள்ளத்திற் புரண்டழுது நின்று நானே மனத்தி லாசையையுண்டாக்கிக் கொண்டேன். அவ்வளவுடன் போகாமல் அவ்வாசையா லென்மூக்கினோடு முடிய முடிந்திலேன், வாக்கினு லுங்கள் வாழ்வையும் போக்கிவிட்டேனே யென்று இலங்கையை நோக்கிநடந்தாள்.

கரன்வதைப்படலம்

முற்றிற்று.

---

## மாரீசன் வதைப்படலம்.

அரக்கரிறந்ததை மறந்ததுபோல் இராமனது மலைபோன்ற தோளில் வைத்தபேராசை மனத்தைவருத்தச் சகியாமல் சீதையினது தன்மையை யுரைப்பேனென்று இலங்கைநகரிற் செல்ல அப்போது இராவணன்கொலுவீற் றிருந்தான். அதுநிலையிலாவுலகினுடத்துச் சரவசரபேதங்களைப்படைத்த நான் முகக்கடவுளாகிய பிரமனும் வகுப்பரிதாக ஒப்பிலாத வரம்பகன்ற ஆற்றலை நுனித்தெண்ணவரிதாய்க் கெடாதவகைமுயன்ற தருமம்போல வேண்டிய வேண்டியாங் கெய்தப் பெறுவிக்குந் தெய்வத்தச்சனது அறிவனைத்தும் விளங் குவதாகியமணியாலலங்கரித்த மண்டபத்தில் எட்டுத்திசையானைகளின்மருப் பொடியப்படர்ந்த அழகிய தோள் வீங்கித் தடித்து உதயமலைபோல் விளங்க வும், அவனது குண்டலங்கள் மேருமலையை வலம்வரும் சூரியனது பிரகாசம் பொருந்திய மண்டலங்கள் பன்னிரண்டும் இருபதாகத் தோன்றுமாறு விளங்க வும், புலியுரியணிந்த புனிதனும், பொன்னுடைபுனைந்த கண்ணியனும்,பூமிசை மேவிய புண்ணியனும் அழிக்கும் வல்லமையுடையாரல்லர், தேவர்களில் இனிவெல்லும் தகையார்யாவரோ! என மாதர்கள்புலவிக்காலத்தல்லதுவணங் காதமுடிகள்வணங்கவும்,மணிப்பிரகாசங்கள் ஒளிக்கற்றைவீசவும்,வயிரத்தோ ள்கள் அனந்தன்மணிமகுடம்போல்தோன்றவும்,நக்ஷத்திரங்கள் ஒளிவிட்டெறி ப்பதுபோலவும் தான் வாரியிட்ட கிரகங்களெல்லாம் நெடுஞ்சிறையிற் கிடந் தாற்போலவும்முத்துமாலைகள் விளங்கவும், அரக்கர்தலைவராவார் தாம்வீழ்ந்து பாணங்களால் தேய்ந்து தேய்ந்து பெயர்ந்து செஞ்சுடர் பரப்பும் மணிகள் பதித்த வீரகண்டாமணி யாரவாரிக்கவும், திரிவித வுலகத்தினு முதல்வராகிய மூந்தையோர் நீங்காமலுதவிய பரிசேபோலத்தேவர்கள் அவுணர்கள் பலதிசை களினின்றும் தூவும் பூக்குப்பை பொருந்தவும், இன்னகாலத்தில் இவ்வழி நோக்குவானென்பதையெண்ணுமல் கரதலந் தலையிற்கூப்பிய தன்மையராய் வித்தியாதரர் முறைமுறையே சூழ்ந்திருக்கவும், மாதர்விஷயமாகவே யொரு வார்த்தைசொல்லினும் தங்களையே சொல்லினுற்போலத் தாழுமுடியராயும்

அங்கையு முள்ளமுங்குவித்த யாக்கையராயும் சிங்கவேறெனச் சித்தர்கள் சூழ்வும்தான் மந்திரிமாரைநோக்கி நல்லனமொழி பகர்ந்தாலும் அதைக்கேட்டு நடுநடுங்கு மனமுடையராயும் எங்களுக்கு யாது பணியென்று வணங்குவாராய் பயங்கிடந்த நெஞ்சம்படைத்த கின்னரர் சூழவும், மிக்க பயங்கரமான தண்டேந்திய கையையுடைய யமனைக் கண்ணினோக்கிய நரகவாசிகளைப்போல ஒருங்கு நாணுடையராய் நாகர்கள் தங்கள் மனங்கெட்டுச்சூழவும், திசையானைகளைச்செயங்கொண்டு பரமசிவனும் வசையையடையக் கயிலைமலையை ஆணிவேரொடும் பிடுங்கித் தேவர்கள் நடுங்க இந்திரனையும் பொருதுவென்று தோளினாற்றலையெடுத்து தும்புரு நாரதர் வீணையிற்பாடவும், மேகமாகிய துருத்திகொண்டு தேவரும் வித்தியாதாருலகத்துப் புன்னாகமரமுஞ்சூழ்ந்த இனிய தேனாகிய புனலொடு கலந்து மான்போன்ற பார்வையையும் மயிற்சாயலையுமுடையாரது துகிலிலே தோயுமென்னு மச்சங்கொண்டுநீர்த்துளியையவருணன் சிந்தவும், பூந்தாதுவும் தேனும் மருட்டகோடிகள் முறைமுறையறையச் சிந்துகின்ற மணிகளும் முத்துக்களும் தரையில் விழாமுன்னம் தாங்கித் துறைகள் தோறும் அச்சபை குப்பையாகாவண்ணம் தொடர்ந்து நின்று வாயு துடைக்கவும், வேத்திரக் கையரும் கஞ்சுகப்போர்வையரும் அருகேநின்று வியாழபகவானும் சுக்கிரபகவானும் இந்திரன் முதலானோரும் வந்தடைய அவர்களுக்கிருக்கை யளிக்கவும், சூலமுதலிய படைகளைத்துறந்து சுற்றிக்கொண்டிருக்கிற ஆடையால் தன் வாய்புதைத்துத் தன் செங்கையால் முரசறையுந்தோறும் யமன்வந்து நாழிகை யறிவித்துக்கொண்டேயிருக்கவும், பரிமளத்தயிலமளாவிக் கர்ப்பூரமாகிய பஞ்சியிற்கொளுத்தித் தடாகத்தில் தாமரைக்காடு பூத்தாற்போல அக்கினி கர்ப்பூரவிளக்கெரிப்பவும், அதிசயமளிக்க அருளறிந்து பநிதாகவலரும் கற்பகத்தருவும் சிந்தாமணியும் காமதேனுவும் இருநிதிகளும் முறைமுறையே வேண்டுவனவற்றை நிறைவிக்கவும், குண்டலமுதலியவற்றிலுண்டான பேரொளிமிகுந்துவீசுவதனால் இரவென்பதினியுலகத்திலுண்டோவென்று சொல்ல இருளென்ப தில்லாமற்போகவும், கங்கையே முதலிய நதிகளாகிய மாதர்கொங்கைகள் சுமந்து தங்களிடை கொடிபோலத் துவளச்செங்கையிற் புட்பங்களைச்சிந்தி முறைமுறைநின்று மங்கலவாழ்த்துக் கூறவும், ஊர்வசி யென்கின்ற உயிர்பெய்த ஓவியமேபோல்வாள் மேகத்தைக் கண்டு களிக்கும் கலாபத்தையுடைய மயிலேபோல முழவொலிமுதலியவற்றிற் கிணங்க அபிநயங்காட்டி நடனஞ்செய்யவும் மூன்றுலகமும் தன்னருந்தவத்தாலும் அளவில்லாத வாற்றலாலும் அடங்கிநிற்கப் புருவமாகிய வில்லையும் கருந்தடங் கண்ணையுமுடைய மாதர்களுடைய கண்ணின் வெள்ளஞ்சூழவும் கொலுவீற்றிருந்தான்.

இவ்வாறு கொலுவீற்றிருந்த இராவணனது அத்தாணி மண்டபத்தில் தலையிற்றூங்கிய கையையுடையாளாயும் உதிரம் பெருக்கெடுத்தோடும் கொங்கையும் மூக்கும் காதுமுடையளாயும் மேகத்தினொலிகெடத் திறந்த வாய்கொண்டு ஒருவர்முடிகளோ டொருவர்முடி நெருங்கிநிற்கும் கொலுமண்டபத்தின் வடதிசைவாயிலின் புறத்தேவந்து முறையிட்டு உகாந்தகாலத்தின்

கடலொலியேபோலக் கூவியழுது மேற்றிசையிலிட்ட செவ்வானம்போலச் செம்பட்ட மயிரையுடையாளாய் வந்தாள். அவ்வா றவள்வரக்கண்ட அரக்க மாதர்கள் எதிர்ந்துநின் றுவயிறலைத்தேங்கியிரங்கிநின்றுதிரிலோக கண்டகனது தங்கையோ மூக்கில்லாதவளாய்த் தன்னந்தனியேவரச் சகியாதாராய் நின்று பொருக்கெனவெழுந்து பார்ப்பார்கள், இன்னது சொல்லலாமெனவு மறியமாட்டார்கள். அதைக்கண்ட அரக்கர்களும் இடியேறுபோலவே பெருங்குரலிட்டுக் கையொடு கையைப்புடைத்து கண்கள் நெருப்பெழவிழித்து வாய்மடித்துநின்றார்கள் ; அவர்களிற்சிலர்இவள் இவ்வா றடைந்த அலங்கோலத்தையெண்ணினல் இந்திரன்மேலதாமோ? பிரமன்மேலதாமோ ? திருமான்மேலேதானுமோ? சந்திரசேகரனாகிய பரசிவன்மேலேதா னெண்ணப்படுமோ ? இனிமுடிவு யார்பாலோவென வருந்துவார்கள், சிலர் கொல்லத்தக்கபகைவர்கள் யார்தானிருக்கின்றார்கள்? சிலர்இதுமூன் றுலகமுமடங்கிய இவ்வண்டத்தார்செய்த செய்கையாகத்தானே யெண்ணப்படாது, அப்புறத்தண்டத்தார் செய்கையாகத்தானே முடியுமென்று சொல்லிக்கொள்வார்கள். என்னவிது ! சொற்பிறந்தார்க் கிது துணியப்பொருந்துமோ ? இல்லிற்பிறந்தார்க் கிவள்பொருந்துங்காரியம்செய்யாமற்போய்க் கற்பழிந்தாளென்றுதானே கரன்றானே இவள் அழகைக்கெடுத்துவிட்டான்போலுமென்பார்கள். சிலர் இதென்னவிந்தை ? இவளை இராவணன் தங்கையென்று சொன்னபிறகும் அச்சொல்லைக் கேட்டவர்கள் இவளை அடிவணங்கிப்போவாரேயல்லாமல் ஒருவரால் வேறென்றெண்ணப்போமோ; அப்படியாகையால் இவள்தன்னைத்தானே அரிந்துகொண்டாளோ வென்பார்கள். சிலர் போர்செய்யமுடியாமல் இந்திரன் ஏவலாளியாகத்திரிகின்றானே! செந்தீவண்ணனாகிய பரமசிவனும் மலைமேலேறிக்கொண் டிருக்கின்றானே ! இனியார்தான் இப்படிசெய்யவல்லவரென்பார்கள். சிலர்தத்துறுகின்ற சிந்தைகொண்டு தளருகின்றதேவரில்பிழைப்பில்லாத சூழ்ச்சியையுடையார்பித்துறவல்லரோ! சிலர்திரிவிதவுலகத்தினையும் முடிக்கவெண்ணுபவரோ இவ்வாறு செய்ய வெண்ணங்கொண்டார்கள்போலு மென்பார்கள். சிலர் இனி ஒரு கற்பமிருந்தாலன்றிக் கழலையணிந்த வாள்வீரர்கள் வல்லவராவாரோ ? அப்படியன்று; காட்டிற் குற்றமறத் தவஞ்செய்யும் வாழ்க்கையராகிய முனிவர்களுடைய சாபமாகிய நெருப்பினாலேதான் இப்படியானதென்று சொல்லிக்கொள்வார்கள். எல்லையில்லாத அவ்விலங்காநகரத்தில் வசிக்கும் இராக்கதப் பெண்களெவ்லாம் வளையலையணிந்த கைகளைநெரித்துப்பார்த்துப் பிரையிட்டபாலென நிலைகலங்கிய சொல்லை யுடையாராய் ஒருவர் முன்னொருவ ரோடுவார்கள். முழவினாலும் வீணையாலும் முரளியென்னும் பண்ணை வாசிக்கின்ற யாழினாலும் குழலினாலும் சங்கினாலும் உண்டாகின்ற ஓசை யில்லாமல் என்று மில்லாத ஓரழுகுரல் அவ்விலங்கையிற் பிறந்தது. கள்ளையுடைய கிண்ணமும் அதை மொய்த்த வண்டும் மனமு மொருவழி கிடக்கவோடி வெள்ளமேயன்ன கண்ணீர்தளர்ந்த இடையாராய்த் தழுவிக்கொண்டு சென்றனர். சிலர் தண்டதரனையுந் தண்டஞ்செய்ய வல்லவர், கோபங்குடிகொண்ட மனமுடையவர், ஊழிய காலத்தில் சிவக்கும் தன்மையினும் கண்மிகச்சிவந்து கண்ணீர் பெருக்

கெடுத்தோட, சூர்ப்பநகை பாதங்களை வணங்கி நின்றனர். சிலமாதர் ஆடல் முதலிய துறந்து தெருவினின்று புலம்பினர், தன்னேரில்லாத நம்மரசன் இவ் வாறிதைக் காண்பானாயின் என்ன பாடுபடுவனோ வெனவெண்ணிச் சிலர் புலம்பி வருந்துவார்கள். சிலர்கணவன் தருஞ்சுகத்தையுமறந்தாராய்க்குழல்சோர கலைசோரக் கொங்கைததும்பநடப்பர் ; தூங்கிக் கொண்டிருந்த சில மங்கையர் அறுதவிர்ந்துதளர்வார்கள். இவ்வாறு அவ்விலங்கையிலுள்ளமாதர்களெல்லாம் வருந்திக் கொண்டிருக்க அவள்நடந்துபோய் இலங்காதிபதியாகிய இராவணன் கொலுவிற்றிருக்கும் அத்தாணி மண்டபத்தை யடைந்து புரண்டழுதாள். அப்போது உலகமெங்கும் இருட்படல மூடிக்கொண்டது, அனங்கனும் பயந்து தன்பணு மகுடங்களை செரித்துக் கொண்டான். அட்டகுலாசலங் களு நடுங்கின, சூரியனு மயிர்த்தான், திசையானைகளு நிலைபெயர்ந்தோ டின, தேவர்களு மொளித்துக் கொண்டனர். தோளிலணிந்த வலயங்கள் படாமேலிட்டுக் கண்கள் நெருப்புப் பொறியோ கோரப் பற்களின்மேற்சென் றெரிப்ப நெரிந்த புருவங்கள் நெற்றியிற்சென்று படரத்திரிவித வுலகமும் சுழலத்தேவர்களும் அயர்த்தார்கள். தென்றிசையில் வசிக்கும் யமனும் மற்றையரும் இன்று நமக்கும் முடிவுகாலம் வந்ததென்றே உயிர்வருந்தி யுடல்வருந்தி ஒன்று முரையாடாமலிருக்க இராவணன் வாயிதழைக் கவ்விக்கொண்டு இது யாருடைய செய்கை சொல்லென்றுகேட்டான்.

அதற்குச்சூர்ப்பநகை இப்படிசெய்தவரோ இராசகுமாரர்கள், அவர்கள் காட்டில்வந்திருக்கின்றனர், மன்மதனைப்போலு மழகுபடைத்தவர்கள், ஒருவருந்தங்களுக்கொப்புரைக்கப்படாத மனிசரோவாளுருவித்தடிந்தார்களென்ருள். மனிசர்களே செய்தார்களென்றவுடனே திசையனைத்தும் பொருந்த நகைத்ததுமன்றிக் கண்கள் தீப்பொறிபறக்க விளைந்திப்படிசெய்வானேன் பயமொழித்துவிடு நடந்தசெய்தியென்ன சொல்லவேண்டுமென்று இராவணன்கேட்க,சூர்ப்பநகை சொல்லலாயினள். அண்ணு ! அவர்கள் மன்மதனையொத்த அழகினையுடையவர்கள்,தோள்வலியால் மேருவினது வலியைக் கெடுப்பர், வில்லொன்ருலேயே உலகத்திலுள்ளாரெல்லாம் எதிர்த்தாலும் அவர்கள் செருக்கையழிப்பவர். முனிவர்களிடத்தேவந்தனைத்தொழிலையாசரிப்பவர்,சந்திரனைப்போலு முகமுடையவர்கள்,தாமரைமலர்போன்ற கண்களையுடையவர்,முடிவுசொல்ல வரிதாகிய தவத்தினை யுடையவர். அவரையொப்பவர்யார்? மரவுரியணிந்து கொண்டிருக்கின்றவர், மார்பிற் பூணூலுடையார், விற்ருெழில் மிகுந்துடையவர், வேதபடனஞ் செய்யு நாவினை யுடையவர், சத்தியவாக்கிய பரிபாலனஞ் செய்பவர், உன்னை யொரு தூசெனவு நினையாதவர், அக்ஷய தூணி சுமந்திருப்பவர், அரக்கருக்கஞ்சி யடைந்தோமென்று சிறந்தநன்னெறிபற்றி யொழுகும் அந்தணர்முறையிட அரக்கர்கள் குலத்தையெல்லாம் வேரொடுங் களைவோமென்று சூளுரைத்துநம்மைத் தேடியிருப்பவர், திரிமூர்த்திகளையு மொப்பானவர். தசரத மகாராசன்பெற்ற மக்கள், பழி நீங்கினவர், அவ்வரசன்கட்டளையாலே காட்டில்வந்து இருக்கின்ருர்கள், அவர்கள் பெயர் இராமலக்ஷுமணர்க ளென்ருள்.

இராவணனே தன் தங்கையாகிய அருமருந்துபோன்ற சூர்ப்பநகையி னது நாசியைவாளாலரிந்தாரும் மானுடராம், அரிந்துமுயிர்வாழ்வாராம்! யான் இன்னுமுயிர்கொண்டிருந்தவனாய் வெற்றியடைந்து வலியாலரசுகொண்டேன், நடந்தசெய்கையிது, குறையாத முறைகடந்தேன், உலகத்திலுள்ள முதன்மை யான வீரர்களுடைய முடிகளெல்லாம் அற்றபொழுதிலும் இது பொருந்து மெனலாமா? மூள்கின்ற பழியை என்னிடத்தே முடித்தோர் ஆண்மை யுண்டாம்! அவராருயிரு முண்டாம்! ஒதவிட்மூண்ட இறைவன் அளித்த வாளும் வாழ்நாளு மிருபதுதோளுமுடையானாய் நானுமிருக்கின்றேனன்றோ? புதியவுறவாக பழிவந்தடைந்ததென்று மனநாணி வருந்துவதென்ன மனமே! ர்தளரவேண்டாம், எந்தத்துயர முனக்குண்டு; இனிப்பழிசுமக்கப் பத்துத்தலைக ளும்தோள்களிருபதுமிருக்கின்றனவன்றோ! என்றுசொல்லிநகைத்து தீயெழ விழித்துத் துணையில்லாத இருமனிசரை வாளாலே கொல்லாமற் போய் விட்டார்களா? சனஸ்தான மென்னும் பருங்காட்டில் வசிக்கும் கரனே முதலாகிய அரக்கர்களென்றான். அதற்குச் சூர்ப்பநகை கண்ணீர்ப்பெருக் கெடுக்க வயிற்றிலறைந்துகொண்டு பூமியிற்புரண்டழுதுபுலம்பி என்சொல்லைக் கேட்டவுடனே தங்கள் சேனையுடனே கரதூஷண திரிசிராதியோர்களும் சிராமன்பிடித்த ஒரேவில்லால் மூன்றுகடிகைக்குள்ளாகக் கொல்லப்பட்டன ரென்றாள். இராவணன் தன்னந்தனியேவந்த ஒருவன்செய்த போரால் தம் பிய ரிறந்துபட்டனரென்று சொல்லக்கேட்டுக் கோபமூண்டு நீ அவர்களுக்குச் செய்த குற்றம் யாது? அவர்கள் உன்னை இவ்வாறு செய்வானேனென்றான். அதற்கவள் என்னிடத்தே யுண்டானகுற்றம் யாவராலு மெழுதவொண்ணாத பேரழகினையுடைய அவ்விராமனோடும் தாமரை நீங்கி மின்னல்போலு மிடை யையும் மூங்கில்போலுந்தோளையும் பொன்போலும் மேனியையும் படைத்து வந்த வோர்பெண்பொருட் டிதுநடந்ததென்றாள். அதைக்கேட்ட இராவணன் யாரவளென்ன, அரக்கியும் ஐயனே! ஆராய்ந்த திரண்ட கொங்கையாகிய தேமல்படர்ந்த இங்குலிகச்செப்புடையாளாய் பூமிதேவி தன் பாதந்தீண்ட என்னபாக்கியம் படைத்தாளென்னத்தக்காள். அவள்பெயரோ சீதையென்று சொல்வார்களென்று அவள் வடிவெல்லாம் சொல்லத்தொடங்கினாள்.

அச்சனகியோ மேகம்போலும் அளகமும் பஞ்சுபோலும் பாதங்களும் பவளம்போலும் விரல்களுமுடையாள்; அழகிய சொற்கள் அமிழ்தினள்ளிக் கொண்ட அப்பெண்ணின் முகமோ குற்றநீங்கிய தாமரை மலரினும் கடலி னும் பெரிய கண்களும் படைத்திருக்கின்றாள். மன்மதனே பரமசிவனது கண்ணினால்வெந்து நீறானானென்றுசொல்வதோர் குற்றமாகிய சொல்; இவ்வா சனை கமழும் கூந்தலையுடைய சானகியைக்கண்டு பேசுதற்கரிய பெரும்பிணி யடர்ந்து வருத்த அவ்வாசை நோயாலே யழிந்து தேய்ந்தான் தன்னுருவ மென்றுசொல்லவேண்டும். நீயோ பலமாச்சுவர்க்கலோகத்தும் நாகருலகத்தும் கடலுலகத்தும் கண்டிருக்கின்றாய்! வேலையும் வேளையும்வென்றகண்ணாளாகிய அச்சனகியோஇவ்வுலகத்தாளே! அங்கமோயாவராலு மெழுதவரியாள், அவள் தோளைத்தான் சிறப்பாக வெடுத்துச்சொல்வேனோ! முகத்திலுலாவும் கண்

ளுகியவாளைத்தான் சொல்லுவேனே ! அவையொழிந்த மற்ற அவயவங்களை த்தா னெடுத்துச்சொல்வேனே ! மீளவு நினைப்பதல்லாமல் நான் தனித்தனி சொல்லமுடியாதே, நாளையே நீபார்க்கக்கூடும்,நானுனக்குச் சொல்வதென்ன விருக்கின்றது.வில்லையொக்கும் நெற்றியென்றாலும்,வேலொக்கும் கண்ணென்றாலும், முத்தொக்கும் பல்லென்றாலும்,இதழ்பவளமென்றாலும் சொல்லொக்குமே யல்லது பொருளொவ்வாவே ! அவற்றிற்குச்சொல்லத்தக்க உவமையுமுண்டோ ?நெல்லொக்கும் புல்லென்று சொன்னபோது நேராகவெடுத்துச் சொல்லவல்லதோ ! இந்திரனே இராணியைமணந்திருக்கின்றான், தாமரைமலர் போன்றகண்ணையுடைய திருமகள் நாயகனும் திருமகளைமணந்திருக்கின்றான், நீயோ சீதையைப்பெற்றாய் முடிவாகப்பார்க்கி னன்மை யவர்க்கேயில்லை உனக்கேயுண்டென்றும் ; பரமசிவனே பாகத்தில் உமையைவைத்திருக்கின்றான், திருமகளை மார்பில்வைத்திருக்கின்றான்,பிரமனே நாவில்வைத்திருக்கின்றான், மேகத்திலே யுண்டான மின்னை இளமைப் பருவத்திலே வென்ற நுண்ணிய இடையையுடையாளை நீயும் பெருமிதமமைந்த தோளையுடைய வீரனே ! பெற்றால் எவ்வாறுவைத்து வாழ்வாயென்றும்,பிள்ளைபோலும் பேச்சினையுடையாளைப் பெற்றபின் கொள்ளை போகின்ற செல்வம் அவனுக்கே கொடுப்பாய் ; ஐயனே ! வள்ளற்றன்மையை யுடையானே ! உனக்கு நல்லேன் மற்றும் உன் மனையில்வாழும் கிளியைப்போலும் மொழியையுடையார்க்கெல்லாம்கேடுசூழ்கின்றே னென்றும் சொல்லி, சீதை தேவமாதரும் மண்ணுலக மாதரும் வயிறு வாய்க்கத் தந்தாளுமல்லள், முன்னாளில் திருமகளைப் பாற்கடல் தேவர்கள் மந்தரகிரியாகிய மத்திட்டுக் கடையத்தந்தது, இவளையோ நிலம் தந்து கிரம்பிற்று, நீ அச்சானகியைப் பெற்றுக்கொண்டு சீராமபிரானை யான் பெறத்தருவாய் ! அப்படிதருவது விதியே யானாலும் தவம் பெரிதே யுடையராயினும் வருவது வருநாளன்றி கைகூடவல்லதோ ! பத்து முகமும் கண்களு முருவமும் மார்பும் தோள்க ளிருபதும் படைத்த செல்வத்தை இனி நீ யடையக்கடவாய் ! அவளை உன்னிடத்தே கொண்டுவரத் தொடங்கிய காலத்தில் என்னை அவ்விராமன் தம்பியாகிய இலட்சுமணன் இடையேநேர்ந்து வாளால் மூக்கரிந்து விட்டான், என்வாழ்வு முடிந்துவிட்டது, உன்னிடத்தே சொன்ன பிறகு உயிரை நீக்கிக்கொள்ளலாமென்றே துணிந்திருந்தேனென்றாள். அப்படி சொல்லவே கோபமும் பராக்கிரமுமான கொதிப்பும் ஆதிய பாபநின்ற விடத்து நில்லாத தன்மையைப்போற் பற்றுவிட்டன ; தீபமொன்று ஒன்றை யுற்றாற்போன்ற செயலிற் புகுந்தவாறென, தாவமும் காமநோயும் உயிரைக் கலந்தன. அவ்விராவணனேகாணையு மறந்தான், தங்கை மூக்கையும் கடிந்து நின்றான், வன்மையு மறந்தான், தானடைந்த பழியு மறந்தான். சிவபிரானையும் வெற்றிகொண்ட காமனம்பினால் முன்னாளில் தான் பெற்ற வரமு மறந்தான். தான்கேட்ட மங்கையாகிய சீதையை மறவாம லிருந்தான். அவனிவ்வாறு காமத்தால் வருந்தி நின்றெழுந்து பதினா லுலகத்தவரும் ஆசிகூறச் சங்கமெங்கு நின்றாரவாரிக்கப் பூமழை பொழியப் புறத்தோருக் கெல்லாம் விடை கொடுத்தனுப்பித் தன்னரண்மனை நோக்கிச் சென்று பூவினால்

வேய்ந்த புட்ப சயனத்தில் தன் மனைவிமார் நீங்கச்சேர்ந்து சானகிமேற் கொண்ட காதல் தன்னுடல் முழுதும் வெதுப்ப மெல்ல மெல்ல வருந்தினன்.

அவனே காதல் பல வகையாகத் தோன்றலால் தான் படுத்திருந்த பூவால் வேய்ந்த சயனம்கரிந்து திசையானைகளை வென்றி, கொண்டதோளும் யாக்கையும் தீயவுள்ளமு மாருயிரும் வேவலானன். மேலும் சந்தனமும் அழகியதளிரும் மலரும் கொண்டடுத்த போதுண்டாகியதீ மருந்தினல் வேது கொண்டாற்போல உடல் முழுதும் வெந்து கொல்லனுலைக்களத்துத் துருத்தி யிற்றோன்றியதீயேபோலும் உயிர்த்துயிர்த்துவருந்தியும்தாவியாமலும் தீதென னுமலும் சானகியை மெய்ம்மையாகப் பாவியாத போதில்லாத அவரது மேனி யைக்காண அதிகப்படு மாசையால் உயிர் நொந்தும் திசையானைகளையும் வென்ற இராவணன் மரங் குடைந்த வண்டேபோல மன்மதபாணம் வந்து வந்து தாக்க உரங்குடைந்து மிகவு நொந்து வருந்தியும் கொன்றைக் காய் போலும் கூந்தல் படைத்த பூங்கொம்பு என்னெஞ்சில் நின்றதுண்டு கண்ட தென்றென்று சிந்தையழிந்தும்வருந்துகின்றதன்மையால்தானிருக்குமிடத்தே நெருங்கி மலர்வாசனை படிந்து தென்றற் காற்றுவந்து பட அக்காற்றைச் சீறியும் இன்னவண்ணம் செய்யலாமென்று சிறிது மறியாமல் பலதீபமாலை களை வாளைப்பழித்த மொழியையுடைய மாதர்களெடுக்க அங்குள்ள வோர் பூஞ்சோலையை நாடிச்சென்றான்.

அச்சோலையில் பனசமாணிக்கத்தையும் வாழைமரகதத்தையும் தேமா வயிரத்தையும் வேங்கை ஆணிப்பொன்னையும் கோங்கு பதுமராகத்தையும் கமுகு நீலத்தையும் சாலம் குருவிந்தத்தையும் தென்னை வெள்ளியையும் நாகம் பளிங்கையும் பாதிரி பவளத்தையும் தருமென்றால் பாணித்தென்ன பயன்? வானளவுநீண்ட மிக்க செந்நிறம்படைத்த மணிமரநெருங்கி நக்ஷத் திரங்களோடு மலர்களில் வேற்றுமையறியப்படாத தேனைச்சொரியும் பூஞ் சோலையின்மத்தியில் செம்பொன்னாலாகிய மண்டபத்தில் பாலினிறம்போன்ற பூம்படுக்கையைச்சேர்ந்து வருந்தினன். கனிகளிலும் மலரிலும்வந்த கள்ளை யருந்திக் கனிகளைப்போல மாதர்களுடைய மழலைச்சொற்போன்று கிளிக ளும்குயில்களும் வண்டுகளும் இனியனவாய்ப்பாடினல் அவைகளையெல்லாங் கேட்டுக் கோபிப்பானேயென்ற அச்சத்தால் ஊமைகளைப்போற்பாடாதொழி ந்தன. பருவத்தினலாகிய வாடையின்வந்த பசும்பனி மன்மதபாணம் உரு விப் புகுந்தொளித்த புண்ணிற்படுதேலும் வருந்தி என்ன இருதுவென்றெடுத் துச் சொல்ல அதைக்கேட்டுப்பயந்து பனிக்காலம்போய் வேனிற்காலம்வந் தது. மரங்களும் மலைகளுங் குளிர்வாழும் பனியேயெரிந்ததென்றால் வேனிற் பருவத்தையும் சொல்லுந்தரமோ! இன்பதுன்பங்களாகிய இரண்டும் உள் ளத்தோ டியைந்தனவாகும், உலகத்தில் அன்பெனும் விடத்தையுண்டாரை யாற்றலாகு மருந்துமுண்டோ? திசை யிறுதிவரையிலும் தன்மனத்தேதோன் றியமையல் வேதனையுண்டாக்கும் வெப்பமூள்விக்க வேனிற்பருவமும்வெதுப் புங்காலத்தில் என்னஇது? முன்னேவந்த பனிப்பருவமேஅல்லது,இவ்வேனிலை நீக்கிவிட்டுக் கூதிர்ப்பருவத்தை யழையுங்களென்று சொல்லக் கூதிர்ப்பருவம்

வருதலும் தன்குவிந்ததோள்கள் கொதித்தன, சிதமுஞ் சுடவல்லதோ! இதுமுன்னேத்தோன்றிய பனிக்காலமோ வென்று சொல்ல, அதுஉன்னுடைய ஆஞ்ஞைக்கது அஞ்சுமல்லவா? வென்று அருகேகின்றூர் சொல்ல, என்பால் வந்தயாவும் இருதுக்களாகமாட்டா ஆதலால் அதையு மகற்றுங்களென்றுன். இவ்வாறு சொல்ல இருதுக்களெல்லாம் போய்விட்டன, அவை யாவையும் தத்தமக்குரிய பருவங்களைச் செய்யாதனவாய் யோகிகளேபோலப் பற்றெழிந்து விட்டன.

பின்னே உலகமெல்லாம் பிணிமுதலாகிய பாசங்களை நீங்கி நெருங்குதற் கரிய தாழ்வினுலடையப்பெறும் சுவர்க்கம்போற் ரோன்றின. உலகமுழுதும் குளிர்ச்சியும் வெப்பமு நீங்க இராவணனுடைய உடம்பு நெய்யின்றியெரிந்தது காலத்தால் வருவதென்றோ? காமானலம் ஒழுக்கத்தால், அவிவதல்லாமல்செய்யத்தானுகுமோ! இவ்வாறுசெய்வதால் சகிக்கமாட்டாதவனுய் சந்திரன்சாந்த முடையானென்பாரோ, நீங்கள்போய் அவனைக்கொண்டுவாருங்கோளென்றுன். அதைக்கேட்ட இராவணனது இலங்காபுரத்துக்குவரப் பயப்படும் சந்திரனைப் பார்த்து நமதாசனுகிய இராவணன் உன்னைவரும்படி யழைத்தானென்று சொல்லவே, அதைக்கேட்ட சந்திரனும் உதயமானுன். அச்சந்திரன் அவ் விராவணனுடைய உயிரைவருத்தக் காலனேபோலத் தோன்றி விளங்கினுன். சந்திர கிரணமோ அவனைவருத்துவது அராவணைதுறந்துபோந்த அயோத்தியாண்டகை இராவணன் உயிர்மேற்செலுத்திய சக்கரம்போல விளங்கிற்று. இராவணன் தன் கருத்தைப்பார்த்து தண்ணிய மேனியையுடைய சந்திரனை யழையுங்கோளென்ன, அவன்படும் வருத்தத்தால் சிதமதியாகிய சந்திரனும் வடவா னலமென்று சொல்லும்படி வெப்பமுண்டாக்களன்னைச் சூரியனை யழைப்பித்து வருத்துகின்றவர்யார்? என்று சொன்னுன்; அயலிலுள்ளார் சூரியன் தேரிலே யன்றி விமானமூர்ந்து வரமாட்டானே, திங்கள் கொடியதே யெனின் விமானத்தின்மேலே யிருக்கின்றுன், பாருமென்றுர்கள். இராவணனே மாதாருக் கன்புபூண்ட மனிசரெலலாம்படுகின்ற குணத்தை யொரு பொழுதுமுணரா தானுய் வருந்தி சந்திரனை நோக்கி நீயுந் தேபாகின்றுய் நானுந்தேய்கின்றேன், நீயுமெய்வெளுத்தாய் நானு மெய்வெளுத்தேன், நீயு முள்ளங்கறுத்தாய் நானு முள்ளங்கறுத்தேன், நீ நிலேதிரிந்து காய்கின்றுய், நானும் நிலேமாறுபட்டுக் காயப்படுகின்றேன், நீயும் கண்டார்சொல்லக் கேட்டிருக்கின்றுயோ? என்மேற்பாய்கின்ற புட்பபாணத்தைப் பறிக்கின்றவரில்லாமையால் வருந்துகின்றேன், ஆகையா லென்னுயிரைக்காப்பவர்யார்? ஆற்றுமற்போனுராயின் நம்மைக்கொண் டடங்கமாட்டாரோ; என்னரிய வுயிருக்கு யமன்போன்ற சானகியாரது குவளைமலர்போன்ற கண்ணுக்குத் தோற்றுப் போனுய், அதனுல் உள்ளங்கரிந்து மெலிந்துபோனுய்! வெதும்பவுந் தொடங்கினுய்; மாற்றுருடைய செல்வத்தைக்கண்டு மனமழிந்தால் வெற்றியாகவல்லதாமோ! வென்றுசொல்லி அவன்வருந்தி இரவினேடு சந்திரனையு நீக்கிவிட்டு முன்னைப்பகலும் சூரியனும் வரவேண்டுகின்றேனென்று சொல்லி வாய்மூடா முன்னமே சூரியனும் பகலும்வந்து விளங்கின. வேதமந்திரங்களைச்சொல்லி

முத்தீயினிடத்து விழுகின்ற நெய்யைப்போலச் செம்பொன் உருக்கியது போன்ற கதிர்கள்பாய அனலைப்போலத் தாமரைமலர் விகசித்தது. சூரியன் வரவே அமைந்தடங்கி வாழாமல் அடாதபெருமையை யடைந்து கர்வங்கொண்டு இடையே செல்வமிழந்த சிறியோரைப்போன்றன குளிர்ந்த செவ்வாம்பல் மலர்கள் ; சந்திரனே நாணங்கொண்டு நின்ற ஒளிமழுங்கிப்போய் நடுங்குகின்ற வுடம்பை யுடையானுய்ச் சேணினின்றும் புறத்தே சாய்ந்து இரவாகியமனைவி பின் செல்லச் சூரியனொரு திசையாகவே பிரவேசிக்கப்போய்ப் புகழினைப் படைத்த அரசர்கள் ஆணை நடக்க நிலைகெட்ட அரசனை யொத்திருந்தான்.

தம்மை மணந்த நாயகனைப் பூம்படுக்கையிற்புணர்ந்துஅவரிடத்தே மிக்க கோபங் கொள்ளலால் மாதர்கள் இரவுநீங்கிய துணராமலே கனவினு மூடநீரா திருந்தனர். தள்ளுகின்ற உயிரையுடையராய்த் தலைவ னீங்குவதனல் நள் ளிரவில்நடுக்க நீங்காமல் கூட்டமாக அலர்கின்ற குவளைப்பூக்கள் கள்ளொழுகு வனபோல அழுகின்ற கண்ணியராயிருப்பர், சிலமாதர் மலர்ப்படுக்கையி லாடலை நீங்கிப் பணைகளைத் தழுவிய பவளக்கொடியேபோலத் தங்களிரு கைகளாலும் இறுகத்தழுவித் தங்கள் உயிர்போன்ற தலைவரொடுந் துயில் கொண்டிருந்தனர். வண்டுகள்மதச்சுவடுதொறும் ஆரவாரிக்க ஆய்ந்தகதிர்ஒளி படவுணர்ந்தில, வாயுறங்காநிற்கின்றன, தெளிவில்லாதன, இனியநித்திரைசெய் யும் படுக்கையில் கள்ளுண்டாரையொத்தன, மதயானைகள் அருமையான துறைநிரம்பியிருக்கின்ற உயிரையொத்த கணவரைப்பிரிந்து வசிக்கும் குலமக ளிரைப்போல இல்லங்கடோறும்வைத்திருக்கின்றவிளக்குகளெல்லாம் எரிந்து நெய்குறையாமலு மொளியிழந்திருந்தன. இவ்வாறு அவ்விலங்கா நகரமுழு தும் இரவு ஊடல்முதலியவற்றுல்நிகழ இராவணனே கண்ணுனேக்கி நினை க்கின்ற மனத்தையும் நெருப்பினுற் றீக்கின்றது ; ஆகையால் இது சந்திரனே யாமெனமதித்தான். அப்போது சிலர் இதுவோ சந்திரனல்ல, பச்சைக்குதிரை கட்டிய தேரையுடைய வெங்கதிர் சுடுவதல்லாமல் உடலிற் பொருந்தச் சந்திரனது தண்சுடர் சுடத்தகாதென்று சொல்லினர். நீலமலைபோன்ற இரா வணன்காய்கின்ற சூரியனைப்பார்த்து இச்சூரியனே ஆலகாலவிடத்தினும் கொடியனு யிருக்கின்றுன். மேலும் விடாமலே சத்திக்கும் கடலோசையையு மகற்றிவிடுங்கள், விரைவாக மாலைக்காலத்தில் தோன்றும் பிறையையழையுங்க ளென்றுசொல்ல, அப்போது நிரம்பிய சோடசகலைகளையுடையனு யிருந்த சந் திரன் மூன்றும்பிறைச் சந்திரனைப்போலத் தோன்றியதென்றுல் தவமேயல் லாமல் இப்படிப்பட்ட காரியமெல்லாம் கைகூடுமோ ? மேற்றிசையில் மூன் றும்பிறை தோன்றக்கண்ட குணக்கேடனுகிய இராவணன் இதுவடவாமுகாக் கினியல்லவென்றுல் மண்ணைப் பிடர்மேல்வைத்த அனந்தனது விடத்தை யுடைய பல்லன்றெனின் என்னைக் கோபிக்க மாலையானது வாளுருவிக் கொண்டு தோன்றியதாகும். மகரந்தங்தங்கிய சடையினிடத்துக் கங்கைவைத் தது மோதுகின்ற கடலில் முன்னைநாளிற் பிறந்தபோது விடத்தைத் தன்கண் டத்தின்கண் வைத்த பெருமான் இதுவும் விடமென்றே எண்ணிய வெண்ண மாகும், இடியைப்போலவருந்தி உயிரைவருத்திய சந்திரனேடியும் சிறிய

பிறையானது குறைந்ததேயில்லை; கடுமையாகிய கறையினையுடைய நெஞ்சினிடத்தே நஞ்சுகலந்த பாம்பின்பெருமை சிறுமைகட்கு ஒரு தன்மைகுறைந்ததுண்டோ? கருமைகனிந்த இருளையும் காண்போமன்றே முன்னைக்கதிரோனல்லது இதையு மகற்றுவீர்கள். முன்பு நிரம்பியது என்னைச் சுடுமென்னின் இவ்வேழுலகத்து வாழ்வோரிற் பின்னைச் சிலருய்வாரொன் றங்கொருவார்த்தையுண்டோ? அங்கே அந்தப்பிறை நீங்கிவிடலும் அந்தகாரமெய்தியது! அதுஉண்மையாகிய திங்கில்லாத கேள்வியாகிய ஒளிபுகுந்துவழங்காமல் குருடிதென்று சொல்லும்படிகுறிக்கொண்டு கண்ணோட்டங் குறைந்து அருளில்லாத நெஞ்சினும் கரியநிறமுடைய தென்பர். கடலிடத்து வந்து ஒருவன் வலியால் விழுங்கும் ஆலவிடத்தி னடங்குவதன்றிது; உலகத்தினோடு விண் முதலாகிய எவற்றையும்விழுங்கும் உகாந்த காலத்தீ பசியவிடமுண்டேகருத்தது; மருளால் வந்தமயக்கமோ? மதிமற்றுமுண்டோ? தெருளாமல் இதென்ன திணிந்தமையிழைத்தாலு மொத்திராத இருளில் இருகுண்டலங்கள் கொண்டும் இருண்ட நீலச் சுருளினோடும் வந்தடைந்து ஒருபிரகாசமுள்ள சந்திரன் தோன்றா நிற்கின்றனன். புடைபரந்தெழுந்த கொங்கையும் அல்குலும் பொருந்திநிற்கும் இடையைக் கண்டறியே மல்லாமல் எல்லா வடிவத்தையும் அறிந்தாம், விடம் பொருந்திய கண்ணுடையாளாகிய இவர் மெல்லமெல்ல மடப்பத்தை யுடைய மாதராயினார். முன்னாளிலே ஈரேழுலகத்துமுள்ள படைபோன்ற விழியையுடைய மாதரைக் கண்டிருக்கின்றேன், இவளைப்போல ஓர் பெண்ணுருவத்தைக் கண்டறியேன். வேறினி யுண்டானால் என் தங்கை யறிவித்திருந்த வண்டுக ளடர்ந்த கூந்தலையுடைய மாதரிவராகும், நான் இப்பிணியால் வருந்துவது பொறாமல் தேடிவந்தார் போலும்! இனிச்செய்வதாகிய கைம்மாறுமுண்டோ? காண்பதற் கினியவராகிய அம்மாதருடைய உருவத்தைக் கண்டு அவரைக்கேட்டே விரகத்தால்வருந்திய அந்தக்ஷணமே சூர்ப்பநகையை அழையுங்கோளென்றான்.

அவ்வாறு சொல்ல அங்கே அருகே யிருப்பவர்கள் விரைந்து கூவிய காலத்தில் சூர்ப்பநகை இராவண னிருக்குமிடத்தை நோக்கி வந்தாள். அப்படிவந்த சூர்ப்பநகையை நோக்கி தங்காய்! மையுண்ட வாட்கண்ணும் மயில் போலும் சாயலுமுடையா ரிவரோ சீதையாகுமென்றான்; செந்தாமரைக் கண்ணும் செங்கனிவாயும் சந்தணிந்த தடந்தோளும் தாழ் தடக்கையும் அழகிய மலர்மாலை யணிந்த மார்பு முடையனாய் அஞ்சன மலைபோல் நின்ற இவனே இராமனாமென்றுசொன்னாள்; அதற்கிராவணன்நான்பெண்ணுருக்கண்டிருக்கப்பேதையே நீ யென்ன ஆணுரு வென்கின்றாயே உலகத்தில் பிறரை மயக்கக்கற்ற நமக்கு மண்ணிலுள்ளாரோ மாயையை விளைப்பவ ரென்றான். ஊன்றுகின்ற உணர்ச்சியு மப்புறமோடாமல் மிக்க வாசையால்வருந்த நின்ற உனக்கிசைந்து உன்னெதிரிலேகாணும் இடங்கடோறும் அவள் தோன்றுவாள், இது தொன்னெறியதாகு மென்றாள். அவளது சொல்ல அரக்கனாகிய இராவணனு மதுவாகுக; உன்னாலே யவ்விராமனைக் காணுந்தன்மை யென்ன வென்றான்; எந்தநாள் எனக்கு இந்நீங்காத துன்பத்தைச் செய்தானோ அந்த நாள்முதலாக யானு மவனை யயர்த்திலேனென்று சொல்லிவிட்டு நீ அச்சானகியைக் கொணடுவரப்போவென்று அச்சூர்ப்பநகை அகன்றுபோனாள்.

இவ்வாறு சொல்லிய சூர்ப்பநகை சொல்லைக்கேட்டு இராவணனு மிடழிந்து ஒன்றையு முணரானாய் உயிர் வருந்திச் சோர்ந்து நின்றான். இது நிற்க, இறந்தவர் பிறந்தாரென்று சொல்லும்படி உயிர்பெற்ற தசமுகன் தன்னருகே யிருந்தாரைத் தெண்ணீர் சுரக்கும் சந்திர காந்தக்கற்களால் நிறைந்தமைந்த மண்டபமொன்று கட்டவேண்டுமென்று கட்டளையிட்டான். அப்படிசொல்லி யானவுடனே தெய்வத்தச்சன் மனத்தினறிந்து ஆயிரந்தூண்கள் அமைந்த மணிமண்டபமொன்று பிரமனும் நாணங்கொள்ளத் தன் கைத்தொழிலானும் மனத்தொழிலானுஞ் செய்துமுடித்துத் தெரிவித்தான். இராவணனோ அநேகம் தெய்வப்பெண்கள் மணிவிளக்கேந்திவர அம்மணி மண்டபத்தைக்கண்டு அதனருகே யிருந்த காவிலுள்ள பசுமரமுயிர்த்த பைந்தளிர்ப் படுக்கையிற் சேர்ந்தான். அப்போது தென்றற்காற்று மெல்லெனவந்து வீசிற்று. அதனை மலைப்பாம்பொன்று வரக்கண்டாற்போலவே சிந்தித்துத் தன்னருகே யிருந்தாரை நோக்கிச் சொல்லலாயினான். கிணற்றிலுண்டான சிலநீர் உலகினைக் குப்புறச்செய்வதேபோலத் தேவரில் ஒருவன்வந்து எனக்குத்துன்பத்தையுஞ் செய்யத்தக்கானா யிருக்கின்றானே! என்னுடைய ஆஞ்ஞையில்லாமலும் இவ் வழியே வந்துவிட்டானே! விரைவாக நீங்கள் வாயுதேவனைக் கொண்டுவாருங் கோளென்றான். அக்கட்டளையையேற்ற காவலாளர் அவனைப்போய்க்கொண்டு வர அவனைத் தீயெழப் பார்த்துத் தென்றல்வர நீயோ கட்டளையிட்டா யென்று சொல்ல, அதற்கு வாயுதேவனும் நீ ரிப்படி யிருந்தகாலத்தில் அவனுக்கொரு தடையுமில்லையேயென்று சொல்லிப்போனான். இராவணனோ வாயுதேவனைச் சும்மா கோபிப்பதனாற் பிரயோசனமே யில்லை, அவ்வாறு குறுகப் போவதை யோசிக்குமிடத்துச் சானகியாரது மெய்ம்மையான அருள் பெறேனென்றால் எமனோ வந்து குறுகுகின்றவனா யிருக்கின்றான்; ஆதலால் தங்கள் உணர்ச்சியால் எனக்கடுத்ததை யெண்ணு மந்திரிமாரை யழைத்துக்கொண்டு வாருங்கோளென்றான். அப்படிவந்த மந்திரிமார்களுடன் ஆராய்ந்து மனத்தி லெண்ணியதைச்செய்து முடிக்குஞ் செய்கையனாய்த் தெளிவில்லாத நெஞ்ச மெய்தி அந்தரத்திற் போவதாகியதோர் விமானத்திலேறிப் பஞ்சேந்திரிய நிக்கிரகஞ் செய்துகொண்டிருந்த மாரீசனிடத்தையடைந்தான். அதை மாரீசன் அறிந்து தன்பால்வந்த இராவணனைக் கண்டு பயந்து சிந்தை திகைத்து அவனுக்குச் செய்யவேண்டியவற்றைத் திருந்தச்செய்து அவனழகிய முகத்தை நோக்கிச் சொல்வானாயினான்.

கற்பகத்தரு நிழலிலிருக்கும் இந்திரனும் யானு மஞ்ச வரசாண்டுவருகின்ற இராவணனே! இவ்வற்பமான காட்டிலுள்ள என் சிறுகுடிசைக்கு நீ எளியோரைப்போலவந்த கருத்தென்ன? வென்றுகேட்க, அதற்கு இராவணன் சொல்வானாயினான். ஐயா! எல்லாக் காரியமு மாய்விட்டது, நானோ உயிர்தரித் தயர்கின்றேன். என் புகழு மேன்மையும் போய்விட்டன, அதை நான் உனக் கெப்படி சொல்வேன், அதைக்கேட்டால் நாணமடுக்கும், வசையாகும்; மிக்க வல்லமைபடைத்த மனிசர் சிலர் தங்கள்கைவாளால் உன்மருமகளாகிய சூர்ப்பநகை துண்டத்தைத் துண்டமாக்கினர், என் மரபுக்கும் உன் மரபுக்

கும் இதைப்பார்க்கிலும் பெரிதாகிய அவமானம் வேறென்ன விருக்கின்றது ? அம்மனிசரி லொருவன் முதிரமலைந்துகரன் முதலிய உன்மருகரை யெல்லாங் கொன்றேகளைந்தனன். அவர்களுடன் வாழும் சிதையைக் கைக்கொள்ளத் துணையாயிருக்க வெண்ணங்கொண்டே அந்தப்பழி உன்னால் தீரவந்தேனென் றான். இச்சொல்லெல்லாம் சொல்லி இராவணன் எரிகின்ற நெருப்பில் உருக் கிட்டாற்போலும் கிளராமுன்னமே சிச்சி யென்று தன் செவிபொத்தி யுள்ளங் கலங்கி அச்சமகற்றிக் கோபத்தோடுஞ் சொல்லலாயினன்.

அரசனே ! நீ உன் வாழ்வைமுடித்தாய் ! அறிவற்றாய் ! உன்னாலேயல்ல! இது ஊழ்வினையென்றே நான் நினைக்கின்றேன், நானோதுன்பமுடைய மன முடையேன்! இதமான வார்த்தைசொல்வேன் என்று அவனுக்குத்துணிவான சொற்களெல்லாஞ்சொல்லத்தொடங்கினன். இராவணா ! நீ அற்றதாகியகையு டன் தலையையுமிட்டு நெருப்பில் வெகுநாள் யாகஞ் செய்தாயே,பசியால் வரு ந்தி உயிரோய நின்றாயே ! அதனாலன்றோ இப்பெறலருஞ் செல்வம் பெற்றனை. பின்னே அதைஇகழ்ந்தாற்பெறலாமோ ? பிறன்தாரத்தைவிரும்பினானைத்தரும தேவதையுந்தண்டனைசெய்யுமே ; கண்டக ராவாரிற் பிழைத்தவ ரெவர் ? இந் திரனோஅகலிகைக் காசைப்பட் டழிந்தானே. இந்திரனை யொத்தவர் எத்தனை பேர்களோ இழிவடைந்தார்களே. திருமகளைப்போன்றவர் எத்தனையோபேர் உன்செல்வத்தை யனுபவிக்கின்றாரே, நீயோ ஆலோசனையில்லாமலே புத்தி யற்றுப்பிதற்றுகின்றாயே ? நீயப்படி செய்ய முயன்றாலும் தீவினையும் பழியுமல் லாமல் வேறுண்டாக மாட்டாதே, அப்படி யடைந்தாலும் சிராமனோ பிரம விட்டசாபமேபோன்ற தன் பாணங்களால் உன்வலிமுற்று நாசஞ்செய்து விடு வானே ! என்னகாணும் நீ சிறிதுமறியாமலிருக்கின்றாய் ; கரனென்பவன் நமது சேனைக்கெல்லாம் மேலான வல்லமைபடைத்தவனென்ப தியாவருமறிந்தகாரி யமே ! அவன் தன்சேனையுடனேமாள வில்லொன்றாற் கொல்லத்துணிந்த இரா மனேயாவரையுங் கொல்லச்சமைந்திருக்கின்றான். விராதனேபோலும் கொடி யவர்கள் உலகில் ஒருவருண்டோ ? அவனும் ஒருபாணத்தாலே இறந்துபட் டான் என்றால் நம்மவரில் அவன் கைக்குத் தப்பிப்பிழைப்பவர் யாவர் ? இதை எண்ணுந்தோறும் என்மனம் வருந்துகின்றதே,இதை நீசொல்லிக்கெடுதியடை வாயோ ? இதுநிற்க ; என்தம்பியாகிய சுவாகுவும் என் தாயாகிய தாடகையும் படத் தன்கைப்பாணம் பிரயோகஞ்செய்யும் இராமனுக்கும், அவனயலிலே நிற்கும்தம்பியாகிய இளையவனுக்கும் நம்முடைய ஆண்மையெல்லா நீங்கிச்சய முண்டாகும் ; என்மனமோ அவனுயிருக்கலாமென்றே கவலைப்படுகின்றேன். சராசரங்களாகிய எப்பொருளும் நிலையில்லாதனவா யிருக்கின்றன. அவை யெல்லாமழியுமென்னு முண்மையு மறிந்திருக்கிறோம், நீயோ சிறுதொழில் செய்யத் துணிவுகொண்டாய் ; என்சொல்லையுங் கொள்ளமாட்டாய், இனி உயர்ந்த செல்வத்தில் எப்போதும்வாழ்ந்துகொண் டிருவென்றுசொன்னான்.

அதைக்கேட்ட இராவணன் மாரீசனை நோக்கிக் கங்கையைச் சடையில் வைத்த சிவபெருமானோடு கயிலை மலையை ஒ ரங்கையிலெடுத்த எனது

தோளாற்றலை இங்கொருமனிசனுக்கு எளியதென்றனையே யெனத் தன்வெங் கணைறிப் புருவமீதுசெல்லாநிற்கச் சொல்கின்றான். மாரீசனே! நீ நடந்ததைச் சிறிது நெஞ்சில் நினைத்தாயில்லையே, அஞ்சாமலு மிகழ்ந்தாயே! எனக்கினியவளாகிய சூர்ப்பநகை முகமெங்கும் அகழ்ந்தவர்களை நீயும் வாய்விட்டுப் புகழலாமோ; அந்தப் பிழையையும் பொறுத்தேனன்றோ வென்றான். இவ்வாறு தன்னைக்கோபித்த இராவணனைநோக்கி மாரீசன்உன்னைக் கோபித்துக் கொண்டதும் உன் சந்ததியாரைக் கோபித்ததே யல்லது என்னைக் கோபித்ததன்றே; மேலும் நீயெடுத்த கயிலை மலையையே நினைத்தாயாயின் அவ்விறைவன் வில்லாகக்கொண்ட மலையே இது, இதைவலித்தியென்று சொல்ல அதைவாரியெடுத்து நாணேறிட் டொடித்ததையு முலகமறியாததோ! நீயென்ன? ஏதுமறியாதிருக்கின்றாயே! என்சொல்லையும் சிறிதுங்கொள்ளாய் போலும்; இராமனே தன்வில்லில்நாணேற்றி விடுவதற்குமுன்னே உன்னுயிர் போமென்பதை நீயுறுதியாகக்கொள்ள வேண்டுகிறேன், நீ அறியாமையினாலே யேபெண்ணுருவமென்றுநினைத்தே அந்தச்சீதையினுருவைப் பேசிவிட்டாயே! அதுநம்மவரது தீவினையென்றே நினைக்கவேண்டும்; சிவலோகமுதலிய உலகங்களும் மற்றதேசமுழுதும் ஓரிமைப்போதில் உயிர்குடிப்பன கோசிகனாகிய விசுவாமித்திரமுனிவன் அளித்த தெய்வத்தன்மை பொருந்திய படைக்கலங்கள்; அவைகளோ அளவில்லாதன; அவ்விராமனுக்கு எக்காலுங் குற்றேவல் செய்துகொண்டே யிருப்பன. இதுகிடக்க; ஆயிரந்தோளையுடைய கார்த்தவீரியனென்னு மரசனைவெற்றிகொண்ட மழுவாளியாகிய பரசுராமனது போர்த்திறலையறியாதாரு முண்டோ! அவனது வலிமுழுதும் அவன் கையிலிருந்த வில்லோடும் கைக்கொண்ட அவ்விராமனது பராக்கிரமத்தைச் சொல்லத்தான் முடியுமோ! எண்ணத்தான்முடியுமோ! என்னகாணும் வேதனைசெய்கின்ற காமாக்கினி மேலிட வருந்திய நீயோ கொடிய வார்த்தைகளையுஞ் சொல்லிமுடித்தாயே! இப்படிப்பட்ட காரியந்தான் கெடுதிக் கேதுவன்றோ! நானே மாமனும் நமதுமரபில் முன்வந்தோனாயு மிருப்பதனாற் சொல்லிமுடித்தேன், இந்த வெண்ணத்தைமாத்திர மொழித்துவிடென்றான்.

இவ்வாறு சொல்லிய மாரீசனது சொல்லைக்கேட்ட இராவணனும் மாரீசா! நீ என்ன? உன்தாயாகிய தாடகையைக்கொன்ற சீராமனைப் பழிக்குப் பழிவாங்காமல் பயந்துகொண் டிருக்கின்றாயே! உன்னையு மொரு சுத்தவீரனென்றெண்ணப்போமோ? திசையானைகள் ஒளிக்கவும் தேவர்கள்நிலைகெட்டு நடுங்கவும் அவர்களிருக்கும் பதங்களையெல்லாம் நெருப்பிட்டுப் புகையாக்கி எல்லாவுலகத்திலும் என்னுக்கினைச்சக்கர நடத்தவும்வல்ல என்னையோ சாதாரணமான அந்தத்தயரதன்மக்கள் கொல்லவல்லவர். இந்தச்செய்தியோ நன்றாயிருக்கின்றதே. நானே எதிரொருவருமில்லாமல் திரிலோக கண்டகனென்றே பெயரொடுத் திருக்கின்றேன், சத்துருக்கள் கிடைத்தால் அதன்மேலு மினிமையுண்டோ? என்னுக்கினைக்குள் ளடங்கி நடக்கவேண்டியது முன்கடமையே! நீ யதை மறுத்துப் பேசுவையேயானல் உன்னை யென் கைவாளால் வெட்டிக் கொலைசெய்துவிட்டே என் மனக்குறையை முடித்துக்கொள்வேன்; நான்

பொறுக்கத்தக்கதாகச் சொல்லிவிடுவதை விட்டு நீயுயிர்கொண் டுழல்வதானால் என் குறிப்பின்வழி நில்லென்றான்.

இவ்வாறு இராவணன் சொல்ல மாரீசனும் செருவங்கொண்டவர்கள் கெடுவார்களென்பது உண்மையான காரியமன்றே ? செருக்கி லழிவோமென் பாரிலும் யாரே செருக்குடையவரென்று உருக்கியசெம்பில் நீர்வார்த்தது போற் சொல்லத்தொடங்கினான். இராவணா ! உன்னிடத்தேயுள்ள வுறுதியை நோக்கி யுண்மையினாலே இதையறிவித்தேன், நானோ எனக்கு நேரப்போகும் கேட்டைநோக்கி அச்சங்கொண்டு சொன்னேனல்லேன், நாசம்நேர்ந்தபோது நன்மையுந் தீமையாகவே முடியுமன்றோ ? அற்பமான தன்மை யுடையவனே ! ஆயினும் நான் செய்யவேண்டியதைச் சொல்லென்று கேட்க, இராவணனும் அதைக்கேட்டு மனமகிழ்ந்து தான்கொண்ட கோபந்தணிந்து மன்மதபாணத் தால் நான் அழிவதைப்பார்க்கிலும் அவ்விராமபாணத்தால் இறப்பதே புகழுக் கிடமன்றோ! நீ யெனக்குத்தென்றற்காற்றைப்பகையாகச்செய்த சானகியைத் தாவேண்டுமென்றான். அதற்குமாரீசனோசொல்கின்றான்; ஐயா! சிலநாள்முன் நானிரண்டரக் கருடன்கூடிக்கொண்டு அவன் தங்கியிருந்த பஞ்சவடிக்குப் போயிருந்தேன்,அவனோ எனக்குத் துணைவந்தாரையும் தன்வில்லினின்றும் தொடுத்துவிட்ட பாணங்களாலே கொன்றுகளைந்தான் ; நான் அவர்கள் தலைகள் பூமியின்க ணுருளக்கண்டு நெஞ்சு நடுநடுங்கிமீண்டேன். அவ்வாறுமீண்ட நான் செய்யத்தக்க காரியம் யாதிருக்கின்றதென்று சொல்லி முடித்தான். அப்படி சொன்னதை இராவணன்கேட்டு உன்தாயாகிய தாடகையைக்கொன்று களைந்தவனை யான்கொல்லவே சமைந்து நின்றேன், நீபோய்ப் புணர்ப்பது இன்னதென்றே பொருந்தியதன்றோ ! நமதுமாயையாலே வஞ்சித்தேயன்றோ அச்சானகியைக் கவரவேண்டுமென்றான். அதற்கு மாரீசனோ வேறுசொல்ல இனியென்னவிருக்கின்றது; அவ்விராமன் மனைக்கொடியை நம்மாற்றலைக்காட்டிக் கவர்வதல்லாமல் நாம் வஞ்சனையாகக் கவர்ந்து கொள்வதே மிகச்சிறுமையாய் முடியும். நீ போர்செய்து வென்று கைக்கொள்வதே அறத்துறை என்பார்கள்? அப்படி போர்செய்துவென்றே உன்மறத்துறையை நிறுத்தவேண்டுமென்றான். இராவணனோ அவர்களை வெல்லச் சேனையும்வேண்டுமோ ! என்கையிலிருக்கின்ற வாளொன்றே போதுமானதென்றறி ! அவ்விருவரும் போரில் என்கையா லிறந்துபடுவராயின் தன்னந்தனியளாயிருக்கும் அச்சானகியு மிறந்துபடுவளன்றோ ! மான்போன்றவளாகையால் அவளை நீ மான்வடிவாய்க் கவரப்போவென்றான். மாரீசனோ சீதையைக் கைக்கொள்வதற்கு முன்னமே இவன் தலைகள் பாணத்தாற் சிந்திப்போம் வகையைச் செய்வேன் என்று நினைக்கும் எனக்கும் ஆம் வகையானதுமில்லை, யாரே விதிவலிகடப்பவர், நானேவியதுசெய்வதேயல்லாமல்வேறொன்றில்லையென்று நினைத்து யாதுமாயஞ் செய்வது நீ சொல்லென்றுசொல்ல, பொன்மா னுருவங்கொண்டு தசமுகன் பொன்போன்ற அந்தச்சானகியை மதிமயங்கிவிடச் செய்யென்றான். அப்படியேசெய்துமுடிக்கிறேனென்று மாரீசனும் அமைந்துசென்றான் ; இராவணனும் தான் வேறொரு வழியைநாடிச்சென்றான். இதுகிடக்க ;

அம்மாரீசனே முன்னாளில் அவன் வில்லாற்றலைக்கண்டிருப்பவனாதலால் அவ்விராகவன் வீற்றிருக்கின்ற காலைநாடிப் பொன்மானுருக்கொண்டு சென்றான். அதைக்கண்ட கலைமான் முதலிய யாவும் ஆசையின்வந்தடைந்தமை நிலையாத மனமும் வஞ்சனையும் நேயமும் சிறிது செய்தப்பெறாத விலைமாதரிடத்தே யாரும் விழுந்தாற்போலுமிருந்தது. இவ்வாறு அவன் பொன்மானுருக்கொண்டு வந்திருக்கையில் யாவரும் இதுவரையு மெய்தப்பெறாதபெருந்துயரமனுபவிக்கப்போகின்ற சானகியார் அம்மானைக்கண்டு இது கைதவமானெனவே துணியாதிருந்தனர். அதை இராவணன் மாளவேண்டியதனாலும் அவன்விழுங்காலத்திற் பூமியில் தருமப்பயிரோங்கப் போவதனாலும் அம்மான்மேல் ஆசைகொண்டுஇதைப்பற்றிக்கொடுமென்று விண்ணப்பிக்கலாமென்றே கோதண்டபாணியாகிய இரகுநாயகனிடஞ்சென்று விண்ணப்பித்தார். அதாவது இறைவனே!ஒருமானே பொன்னுருவம் படைத்திருக்கின்றது,தன்னொளியால்விசும்பையும் விளக்குவது, செவியும் காலும்மாணிக்கத்தின் சுடர் பரப்பியுள்ளது,அவ்வகைப்பட்ட மானொன்றைக்கண்டேன்,அதைத் தேவரீர்காணத்தகுமென்று வணங்கி விண்ணப்பித்தார். அதைக்கேட்ட இரகுவீரனும் இம்மான் இந்நிலத்திலுமில்லையேயெனினும் அது இன்னவகையான மானென்று தன் சிந்தையிற் சிறிதுமெண்ணாமலே தானு மதன்மே லாசைகொண்டான். இறைவன் அதன்மேலாசைகொண்டா னென்றதையறிந்த இளையபெருமாளும் இரகுவீரனைநோக்கி இதுமாயமானேயல்லது வேறன்றே! அதற்குச்சிறிதும் ஐயுறவேண்டியதில்லையென்றான். இரகுநாயகனும் தம்பீ! இவ்வுலகத்தின்கண் எத்தனையோகோடியுயிர்கள் இருக்கின்றன; அற்றாகலினன்றே உணர்ச்சி யுடையாரும் உலகினிலைமையை யறிகின்றிலர். இது மாயமானென்றும் பொன்னுருக்கொண்டதாகிய மானை எங்கேனுங் கண்டதில்லையென்றுமெண்ணுகின்றனையே; முன்னாளிற் பொன்னுருப்படைத்த அன்னங்களேழும் பிறந்தவென்றுசொல்வதறிந்திலையோ! உலகில்முறையும் முடிவுமுயிர்கட் கில்லையென் றிளையானோ டிறைவனருளிச்செய்ய, அவ்வாறு கூறியதைக் கேட்டுக்கொண் டிருந்த சானகியார் அது பலநெறியிற்சென்று மறைவது கண்டு வருந்தினர்.

அவர் கருத்தை யறிந்து அஞ்சனமலைபோன்ற இராகவன் சானகியே! அதனைக்காட்டென்றுபோயினன். அவ்வாறு போதலைக்கண்டு பொறாதமனத்தையுடைய இளையவன் பின்னடந்துசென்றான்.உடனேஒருவராலும் கடக்கவொண்ணாத வினையேபோல வந்துநின்ற மானு மெதிரேவந்து தோன்றியது. இராமனும் அம்மானைநோக்கித் தன்னெஞ்சினொன்று மாராயாமல் இது நன்றாயிருக்கின்றதென்றான். அவ்வாறு சொல்லிவிட்டுத் தம்பியை நோக்கி தம்பி இதனை நன்றாகப்பார், தன்னையொப்பது பிறிதில்லதாக விளங்குகின்றதே! இதன்படிவங்கண்டமாதர் மைந்தர் முதலானோரில் யாரேதான் இதை விரும்பாதவராவார்! உருகிய நெஞ்சமுடையனவாய் ஊர்வனவும்பறப்பனவுமாகிய எல்லாவுயிர்களும் சுடர்விளக்கைக்கண்ட விட்டிலைப்போல இதைக்கண்டே

விற்கின்றன என்ன ; அதைக்கேட்ட இளையவனும் இது பொன்மானேயாயி னும் நமக்கென்னகாரியம் ! இறைவனே நாம்மீண்டுபோவதே நலமென்றான்.

அவ்வாறு இளையவன் சொல்லி வாய்மூடு முன்னமே அரிந்தமனாகிய அனுலழகனை அழகே பொருதிருவுருவங்கொண்டு நின்ற சானகியார் சக்கர வர்த்தித் திருக்குமாரரே ! அக்குழையுந் தன்மையையுடைய மானை விலா விற் பற்றித் தரவேண்டுகின்றே னென்றார். சானகியார் கேட்டதைக்கண்ட இளையவன் அவர்கேட் டாங்கே இறைவனே செய்யத்தொடங்க மேற்கொண் டனனென்று தெளிந்து அண்ணா ! கொடியவராகிய அரக்கர்கள் வஞ்சனையை மேற்கொண்டு இங்கேவந்திருக்கின்றனர் ; பின்னே இது மாயமானென்ற மெய் மையைக் கடைமுறைமை அணியப்படுமெனவே, அதற்கு இராகவபிரான் தம்பி ! அது மாயாசம்பந்தமான மானெனச்சொல்லி முடித்தாயே, அப்படியே அது மாயமானாயினு மடிந்துபோய்விடு மன்றோ ? அப்படி மடிந்தபோது நாம் அரக்கனைக்கொன்று கடன் கழித்தவர்களாகின்றோம், சரியானமானாயின் கைப்பிடியாகப் பிடித்துக்கொண்டு வருகின்றோம் ; இரண்டி லொன்றாகின்றது, நீயோ நியகாரியத்தைத் தேடியுரைத்தாய், பின்னே நின்றவர் இன்னுமொன் றும் அவர்கள் பிடித்த மாயவஞ்சனை இதுவென்றும் தெரியாதிருக்கின்றோம், யாதோ விதுவென்றும் அறியாதிருக்கின்றோம், முன்னின்றவர்முறையினின்ற வர், முனிபத்தக்க வேட்டையாடலே புகழுடையதாமன் றென்றான். இவ்வாறு இரகுநாயகன் சொல்லிமுடிக்க, சானகியாரும் இரகுநாயகனை நோக்கி இதை நீயே பற்றித்தருகவென்று குதலைச்சொல்லா லுரைக்க, அவருடைய ஊடலை நோக்கி இம்மானை நானேபற்றிக்கொண்டுவந்து கொடுக்கின்றேன் ; அதுவரை யிலும்சானகியாரைக்காத்துக்கொண்டிருவென்று தன்வில்லைஇளையானிடத்து வாங்கிக்கொண்டுவிரைந்து சென்றான். இளையபெருமாளோ முன்னே நம்பால் மகவாகவந்த மூவரிலொருவன் போயினன் ; அம் மாரீசனே இம் மானாகும், யானவனென்றே இம்மானைநோக்கிச் சந்தேகிக்கின்றேன், அதைச் சிறிதுநேரத் திற்குள்ளாகவே யறியலாமென்று இருகைகூப்பிக் கூவியுரைத்துத் தான் அப் பன்னசாலையைக்காத்துக்கொண்டிருந்தான். இது நிற்க ;

இராகவனோ மானை நாடிச் செல்கையில் அது மிதிக்கும் வெறித்துப் பார்க்கும் பயந்து மேலே மிதிக்கும் காதை நீட்டிக் குளம்பினையுடைய பாத த்தை மார்பிற் கூட்டி வாயு வேகமும் மனோவேகமும் பின்னிடையும்படி போம், அதுவேயு மன்றித் தன் கதிக்கு வேறே கல்வியொன்று காட்டுவது போலத் தோற்றும் ; இராமன் மண்ணளந்த திருப்பாதத்தை நீட்டி நடந்து செல்வதனால் அதை யளந்துசொல்ல நம்மான் முடியுமோ ? அவன்போவது எங்கும் பரிபூரணமாக நிறைந்திருக்கும் தன்மையைக்காட்டி நிற்பதொத்திருந் தது. அவன்சென்ற வேகம் நம்மா லளக்கமுடியாதே ! மானோ மலையிலேறும், மேகங்கள் கூட்டமாக விருக்குமிடத்திற்சென்று குதிக்கும், நெருங்கப்போனால் அகன்றுபோய்விடும், தாமசமாக நடந்தால் எட்டிப்பிடிப்பதற் கியல்வதுபோல் விளங்கும், நின்றதேபோல நீங்கும், விலைமாதர் நெஞ்சேபோல அறியப்படா திருக்கும், இவ்வாறு அம்மான் ஓடுவதைக் கண்ட இரகுநாயகன் இதுகாயமும்

வேருகத் தான் செய்யும் காரியமும் வேரு யிருக்கின்றதன்ரே! அது பொரு ந்துமே யென்ருல் முன்னம் இளையவனுக் கிந்த வெண்ண முண்டாயிருந்த தன்ரே? ஆராய்ந்து பார்க்கின் இது அரக்கர் நாடிய மாயமா மெனவே தோன்றுகின்றதே! நான் வீணுகவருந்திய தென்னத்துக்கென்று நினைந்தான். இப்படிநினைக்கையில் அம்மாரீசனே இவன்நம்மைப்பிடிக்க வெண்ணங்கொண் டதாக விருக்கவில்லை, இனித்தன் பாணத்தைவிடுத்துக்கொலைசெய்யத் துணிந் திருக்கின்றனனென்று தன்மனத்தே துணிந்து அதிவேகமாகநடக்க அம்மாரீச னைத்தன்சக்கரத்தாலும்தடுக்க வரிதாகிய பாணமொன்றை யேவ; அப்பாணம் உடனே சென்று அவனுயிரோ யிலக்காக நோக்கி அவன் வஞ்சனை நெஞ்சமே யிடமாகப்பட்ட பொழுது அவன் தன்பகுவாயால் இளையவனே அபய மபய மென்று எட்டுத்திசையினு மதன்புறத்தினுஞ் சென்று கேட்க விட்டழைத்து ஒரு மலைபோலும் விழ்ந்தனன்.

அப்படி வீழ்ந்தவன் தன் சுயரூபத்துடன் விழவே; இது மாயமானென் றும் மாரீசனே இவ்வடிவங்கொண்டனனென்றும் சொன்ன தம்பியைச் சால வும் என்னையன்வல்லான் என்னுருயிரன்னன் வல்லானென்றும் யானுய்ய வந்தவன் வல்லானென்று மதித்து ஆசைநீளத் தாற்றிவிழ்ந்த அந்நீசனுகிய மாரீச னுடமபைநின்று நோக்கி இராகவன் இவன் மாரீசனே யெனத் தேறி இவன்மார்பே இலக்காகச்சென்ற வாளி மார்புருவவே தான் என்குரலிட்டழு தனன், அதைக்கேட்டு சானகியோ மனம்வருந்துவளென்று சிந்தைநொந்து வருந்தி பின்ன தம்பி முன்னறிந்துரைக்க வல்லனுகையால் ஒருவகை தேற்றி யேவிடுவனென்றுந் துணிந்து இவனே தானிறப்பதுகருதியே வந்தானல்லன், யாதோ ஒருதீமையைநாடியே வந்திருந்தனன், அதனுல் தீமையேநேரும்; அது நேருமுன்னமே நாம்மீள்வதே நன்மையென்று மீண்டான்.

மாரீசன்வதைப்படலம்
முற்றிற்று.

---

## சடாயு வுயிர்நீத்தபடலம்.

இப்படி மாரீசன் இரகுவீரனுடைய குரலேபோல் வாய்விட்டார்க்க அது வைதேகியினுடைய செவியிற்சென்று சேர்தலும் அவர் குயில் பூமியில் அடை ந்தகொள்கையேபோலத் தன்வயிற்றிலடித்துக்கொண்டு விழுந்து மயங்கி, அந் தோ! எம்பெருமானை எனக்கம்மானைப் பிடித்துத்தாவென்றுபேதையேனுகிய யான் என்வாழ்வுநீங்கினேனென்று கூந்தல் கொடியிற்படர்ந்ததுபோலவும் இடி யோசைகேட்ட நாகம்போலவு மேங்கியழுது தன்காதலனுகிய சிராமபிரா னுக்கு அரக்கனுல் துன்பமானது வந்து அடுத்திருக்கவும் அப்படி நடந்ததை யறிந்தும் தம்பீ! இன்னமும்வருத்தமொன்று மில்லாமலிருக்கலாமோவென்று சொல்லினர். அதைக்கேட்ட இளையவன் சராசரங்களுக்கெல்லாந் தாயிர்! உலகின்கண் நீர் எம் இறைவனுகிய சிராமனைப்பார்க்கிலும் ஏற்ற முடையார்

பிறருளரெனத் துணியப்படுமோ! தேவரீர் 'பேதைமையென்பதுமாதர்க்கணி கலம்' என்றபடி,பெண்டன்மையால் இவ்வாறு பேசிமுடித்தீர்! என்றே அதி க்தவண்ணம் அவர்க்குணர்த்தலாயினன். தாயீர்! கடலேழும் உலகம் பதினு லும் அவ்வுலகத்தைச்சூழ்ந்த மலையேழும் தொடர்ந்திருக்கிற இப்பூமியின்கண் வாழு மேழையர் சிறுவலிமைக்கு எமது நாயகனது வீரத்தன்மையும் தாழு மோ! பாரொன்றும்தீயென்றும்நீரொன்றும் பிறவென்றும்கூறப்படுகின்றபஞ்சபூத ங்கள் அவர்கோபித்தமாத்திரத்திற் பெயர்ந்து விடுமே ; கார்போலுந் திருமே னியையுடைய அப்பெருந்தகையை யாரென்றேஎண்ணி இவ்விடரிலாக்கினீர்! தன்னைக்கண்டவழி மண்ணைக்கவ்விக்கொள்ளவல்ல அரக்கருக்குஞ்சிராமபிரா னிடைவதுண்டோ! அதற்குவாய்விட்டுமழைப்பதுண்டோ! அப்படியாமாயின் நெருங்கியிருக்கின்ற அண்டங்கள் மேல்கீழாகமாட்டாவோ? அண்டங்கள் உ டைக்தும்போகமாட்டாவோ! பிரமனுதி யுயிர்களெல்லாம் தீயமாட்டாவோ? இராகவனுக்கும் ஒருதுன்பநேருமாயின் மூவகையுலகமு முடியுமே;முற்பட்ட தேவர் முனிவர் முதலாகிய பெரியோர் யாவரும் இறந்துபடுவரே! தருமதேவ தையும் துன்பமடைவளே! இனி விஸ்தரித்துச் சொல்லவென்ன விருக்கின் றது! இராகவன் தன்வில்லினின்றும் பாணத்தைத்தொடுக்க அதனுல் விழு கின்ற சமயத்து அரக்கனெடுத்து எம்பெருமான் குரலேபோலக் கூவியழைத் தான். அதற்காக நீர் இரங்கவேண்டாம் ; இங்கேயேயிருக்க வேண்டுகின்றேன் என்று இன்னவாறு இளையவன் எடுத்துச்சொல்ல,எடுத்த சீற்றமுடையளாயும் கொன்றுலன்ன துன்பமுடையளாயும்கொதிக்குமுள்ளமுடையளாயும் இளைய வனைநோக்கி நீ நின்ற நிலை தகுதியானதன்றே, உலகிலே ஒருநாட் பழகினோர் தம்முயிரையேனுங் கொடுப்பரே, நீ தமையன் மாள்கின்ற தன்மையைக்கேட் டும் சிறிதும் பயப்படவில்லையே! நான் வேறென் செய்வது! இனி நான் அக் கினிப்பிரவேசஞ்செய்தே உயிரிழப்பனென்று தாமரைக்காட்டிலே தாவிச் செல்லு மன்னம்போலப் புகைபடர்ந்த கொடிய நெருப்புப்பற்றியெரியும் காட் டில் நடந்தனர். அவ்வாறு நடக்கின்ற சானகியாரை இளையபெருமாள்கண்டு விலக்கி அவருடைய பாதங்களை வணங்கி நின்று சொல்லலாயினன். தாயீர்! நீர் இறந்துபடத்துணிந்த தென்னகாரியம்! நீர்பேசியசொல்லுக்கஞ்சியேநடப் பேன், மறுக்கமாட்டேன், உமதவலந்தீர்ந்து இனிஇங்கேயேயிரும்,நான்போய் வருகின்றேன், கொடிதாகிய விதிவலியைக் கடக்கவல்லாரு முளரோ ; நான் போவேனேயாயின்கேடுவெகுசீக்கிரமாகவே நேர்ந்துவிடுமே,நீரோ தமையனர் கட்டளையைமறுத்துப்போகவுங் கட்டளையிடுகின்றீர், தனியிருக்கின்றீரென்று விடைபெற்று இங்ஙனே நானிருப்பேனுயின் எரியிடைமூழ்கி யிறந்துபடுவர் ; அரசனிடஞ்சென்று சேர்வேனுயின் கேடுவந்து நேர்வதுதிண்ணம், நான்யாது செய்யக்கடவேனென்று பொருமிவிம்மி அறத்தினுலழிவிலதானுல் ஆக்கலாம், இவர் இறந்துபடுவேனென்று துணிவதைப்பார்க்கிலும் நாம் துறந்துபோவதே நலமென்றுதுணிந்து எப்படி ஆயினும் ஆகுக எதற்குஞ் சடாயுவிருக்கின்றார், சானகியாருக்குக் கேடுவராமற் காப்பரென்றே நினைத்துத் தேவர்கள் செய்த தவத்தால் இளையபெருமாள் செல்லலாயினன்.

இவ்வாறு இளையவர்சென்றபிறகு இவர் அற்றநோக்கிய வளைந்த பற்களை யுடைய இராவணன் வஞ்சனைசெய்யத் துணிந்து முப்பகையாகிய காமம் வெகுளி மயக்க மென்பனவற்றை யொழித்தோமென்பது தெரிவிப்பதற் கறிகுறியாகிய திரிதண்டமேந்திய தாபதவடிவங்கொண்டு ஊணிலனுமென உலந்த மேனியனும் வெகுதூரத்திலிருந்து நடந்துவந்த வருத்தந்தோன்றச் செய்யுஞ் செய்கையுடையனும் பாணியில் நடத்தினைப் படிக்கின்றானென்று சொல்லும்படி வீணையில் இசைதோன்ற வேதம்வாசிப்பானும் பூப்பொதி யவிழ்ந்தா லொத்தநடையை யுடையானும் பூதலம் தீப்பொதிந்ததாமென மிதிக்கும் செய்கையுடையானும் காத்தலருமையான நடுக்குறும் காலையுடை யானும் மூப்பென்று சிறப்பித்துச் சொல்லப்படும் பருவமும் முனியமுற்றின னும் தாமரை மணிகளாலாகிய அழகிய தவமாலை யுடையானும் ஆமையி னிருக்கை யுடையானும் வளைந்த உடலையுடையானும் அச்சம்விளங்கும் நூலணிந்த மார்பினையுடையானும் பரிசுத்தமான சிந்தையை யுடைய சானகியாரிருக்கு மிடத்தை யடைந்தான்.

அவ்வாறு நடந்துவந்து அப்பன்னசாலையை யடைந்து நாக்குழறிட நடுங் குஞ் சொல்லினையுடையானுய் யாவர் இப்பன்னகசாலையி லிருப்பவரென்று தேவரு மருட்சியையடையத் தெரிந்த மேனியையுடைய இராவணன் கேட் டான். சானகியாரும் அவ்விராவணனைக் குற்றமற்ற நோன்பினரெனக் கரு திப் பாகியல்கிளவியுடையராய்ப்பவளக்கொம்பேபோன்று நின்றுஇவ்விடத்தே எழுந்தருள வேண்டுகின்றேனென்றார். அதற்கவன் அவ்வாறே எதிரேவந் தடைந்து யானை மதப்பெருக்குப் பொழிவதேபோல வெயர்க்கும் மேனியனு யும் அன்பின் கரைபுரளு மாசைக் கடலுடையனும் கற்புக்கரசியும் கட் டழகிற் கழகினையும் புகழ்க்கிருக்கையுமாகிய சானகியாரைக் கண்களாரக் கண்டான். அவ்வாறுகண்டவுடனே அவனதுவீரத்தோள்களோ வீங்கிமெலிந் தன. கண்ணுங் கருத்தும் இசைபாடும் வண்டின்கூட்டமேபோற் களிப்பெய் தின, பின்னும்தாமரைமலரைத்துறந்த தையலார்இங்கெய்தியமைகாண்பதற்கு இருபதுகண்கள்போதாவே, ஆயிரங்கண்கள்வேண்டுமேயென்று அல்லற்பட்டே மூன்றரைகோடியாயுளும் யான்தவத்தாற்படைத்தது இவரது காமாலக்கடற் படியப்போதுமோவென்று மனத்திலுன்னியதன்றி தேவரு மவுணரும் தத்தந் தேவிமாருடன் குற்றேவல்செய்யவும் திரிவிதவுலகமும் இவர்முறையினுளவும் யானே யேவற்பணிசெய்து வாழ்வேனென்றுமெண்ணினன். இவர்க்குத்தன் பத்தொடுபொருந்திய முகத்தினொளியிதுவேயாமெனின்முளைக்கின்றபற்களிற் றோன்று மொளியையுடை நகையென்ன பயத்ததாம், இதுகிடக்க ; இத்தன் மையராய கட்டழகினுக்கரசியை எனக்குக் கொணர்ந்து கொடுத்த என் னிளையவளாகிய சூர்ப்பநகைக்கு என்வாழ்வும் அரசுங்கொடுப்பதே தகுதி யென்று மனத்தினினைந்துருகி நின்றான். இவ்வாறு அவன்மனத்தி னினைந்து நினைந் தாசைப்பெருக்கி லலைந்துகொண்டுநிற்கையில் முறைமையல்லாத சிந் தைபடைத்த அவ்விராவணனைக் கண்களாரக் கண்டு எம்பா லெழுந்தருள வேண்டுகின்றேனென்றுசொல்லி அவன் மாதவருருக்கொண்டே போந்தமை

யால் பிரம்பினாலாகியதோ ராசனத்தை விதியிற்கொடுத்து அதிலுட்காரச் செய்ய அதிலவனிருக்கையில் மலைகளும்மரங்களு நடுங்கின; காவடங்கி விலங்குகளும் பறவைகளு மடங்கின; பாம்புகளும் படங்குறைந் தொடுங்கின, இராவணனே சானகியாரை நோக்கி இப்பன்னசாலையி லெழுந்தருளி யிருக்கும் பெருந்தவன்யார்? நீர்யார்! இவ்வாச்சிரமத்திற் கென்னபெயரென்று வினவ, அதைக்கேட்ட சானகியார் சொல்வாராயினர்.

அருந்தவரே! இவ்வாச்சிரமத்தி லிருப்பவர் இவ்வுலகமுழுதாண்ட சக்கரவர்த்தி திருக்குமாரர், அவர் தமது தம்பியுடன் 'தாய்சொற் றுறந்தால் வாசகமில்லை' என்றபடி, தாய் சொன்மறுது தலைமேற்கொண்டு இப்பன்ன சாலையில் வசித்துக்கொண் டிருக்கின்றனர். அவர் பெயர் தங்களுக்கே தெரிய வருமென்றனர்; அதைக்கேட்ட இராவணனே பெண்மணியே! நான் கேட்டிருக்கின்றேன் ஆயிற்கண்டறியேன்; ஒருமுறை கங்கைக்கரைநாட்டிற்கு வந்திருக்கின்றேன், ஆயினும் காவிமலரையும் வாளையும் பழித்த கண்ணாரே! நீர்யாருடையபுத்திரி? இக்காட்டில் பலகாலும்கழிக்கின்றீரேயென்றான். அதற்குச் சானகியாரும் பரிசுத்தமான நல்லொழுக்கம்படைத்த உம்மைப்போன்ற பெருந்தவத்தினரே யல்லது வேறுதெய்வஞ் சிந்தையிற் கருதாத சனகராசன் மகள்; என்பெயர் சானகியென்பர், காகுத்த வம்சோத்தரன் மனைவியென்று கூறி இராவணனைப்பார்த்து இருவினையொழிக்க எண்ணியசிந்தையீர்! நீர் எங்கிருந்துவருகின்றீர்! சொல்லவேண்டுமென்றார். அதற்கிராவணன் சொல்வானாயினன். பெண்மணியே! இந்திரனுக்கு மித்திரன், ஒருவராலு மெழுதலாகாத பேரழகுபடைத்தவன், நான்முகனாகிய பிரமன்வழியில் வந்தவன், இவ்வுலகேயுமன்றி எவ்வுலகையு மாள்பவன், மந்திரங்கள் நிரம்பிய வேதந்தங்கி நாவையுடையவன், பரமசிவ னெழுந்தருளியிருக்கும் கயிலைமலையையூசி வேரோடும்பறித்த பெருந்திறலையுடையவன்; திசையானைகளுடனே போர் செய்து அவற்றின் கொம்புகளைத் தகர்த்த பேராற்றலை யுடையவன் என்பார். ஒருவன் அவன் கடைத்தலைவாயிலில் தேவர்களே நின்று யாது எமக்கிடுங் குற்றேவலென்று இரங்கிநிற்பர். கற்பகம், மந்தாரம், பாரிசாதம், சந்தானம், அரிசந்தனம், சுரபி, சிந்தாமணி முதலியன அவன்பாலுள்ளன, அவன் அரசிற்கிருக்கை இலங்காபுரமெனப்படும். திலோத்தமை, ஊர்வசி, அரம்பை, மேனகை முதலிய மாதர்களே வானநாட்டைத் துறந்துவந்து அவன்செய்த பெருந்தவச் சிறப்பால் அடப்பை முதலியன வேந்திக் குற்றேவல்செய்து திரிவர். சூரிய சந்திரர்கள் அவன் சிந்தனைவழியே தமதுகதியை நடத்துவர். இந்திரனே முதலிய இறைவரெண்மரும் ஆகாயமளாவிய அவனது திருமாளிகையிலே காவலாயிருப்பர், அவனது பெருந்தவத்தாற் பொன்னாட்டினும் நாகர் நாட்டினும் மற்றையநிலத்தினும் சிறந்ததென்று சொல்லப்படும் பொருள்களனைத்தும் அவ்விலங்காபுரத்திலே யொருங்குசேர்ந்திருக்கும். அவனே பிரமனால் அளவிலாக்காலம் உயிர்வாழ்க்கைசெய்ய வரம்பெற்று உமையொருபாகத் தொருவனாகிய பரமசிவன்கொடுத்த வாளைப்பெற்றுடையனா யிருப்பதன்றி நவக்கிரகங்களையுஞ் சிறையிட்டுக் குணங்களிற் சிறந்தவனென்றுஞ் சொல்லத்

தக்கான். மேலுங் கொடுமையல்லாத ஒழுக்கமுடையான், விரிந்த கேள்விச் செல்வம்பெற்றுடையான், மன்மதனும்நாணங்கொள்ளும் பேரழகுடையான், எம்போன்றவர் கடவுளரென் றெண்ணும் மும்மைப்பெருந்தேவர் பெருமிதமுழுதும் பெற்றுடையான், இப்படிப்பட்டவனே தன்னிடத்தே எல்லாவுலகத்தினுமுள்ள மாதர்களெல்லாம் அவனருள்பெறக் காத்துக்கொண்டிருக்க அவர்களுக்கிரங்குஞ் சிந்தையனல்லாமல் தன்மனக்கினியதோர் அழகினுக்கழகியைநாடித் திரிகின்றான். அவனரசாண்டிருந்த அந்நகரத்தினை விரும்பிச் சிலநாள் வாழ்க்கைசெய்து அவனைப்பிரிந்த நெஞ்சினேனாய் மீண்டேனென்று சொல்லிமுடித்தான்.

அதைக்கேட்டசானகியாரும் வேதமும் அவ்வேதமோது மந்தணர்களும் விரும்பாமே உலகுயிர்களை வருத்தித்தின்னும் தொழிலையே மேற்கொண்ட அரக்கருடைய நகரத்தில் நீர்வசிப்பதுந் தகுதியோ! உடம்பொடுகூடி வாழும் வாழ்க்கையையே மிகையெனவாழ்வான் வனத்தின்கண் முற்றத்துறந்த முனிவர்வசிக்கும் ஆச்சிரமங்களில் வசிக்காமலும் புனத்திரு நாட்டி விருக்குமூர்களில் வசிக்காமலும் அரக்கர்வசிக்குமிடத்தில் வசிப்பதுதகுதியாமோ வென்றார். சானகியார் அவ்வாறு சொல்லக்கேட்ட வரம்புகடந்த நடக்கையுடைய இராவணனே குற்றங்களி னின்று நீங்கலாற் கொடுந் தொழிலை யுடைய அரக்கரொன்று சிறிதுமஞ்சமாட்டோம், மெய்ம்மையையாராயும்போதுமதிமுகத்தினையுடையீர்! அத்தேவரினும் எம்போல்வார்க்கும் அவ்வரக்கரே சாலநல்லரொன்றுந் தீயரல்லரொன்றுங் கூறி முடிக்க, சானகியாரோ மனந் தூய்மையுடையார் தீயவரைச் சேரவேமாட்டார்; வேதவொழுக்கேபற்றி நடப்பவரொன்றே மாய வல்லரக்கர் தாம் வேண்டுருக்கொண்டு திரிவரென்பதறியாராதலால் அயலிலே வேறொன் றெண்ணுமலே யெடுத்துக்கூறினார்! இராவணனே தான்சொன்னசொல்லால் தன்பால் ஐயப்பாடெய்துவரென்பதெண்ணி அதைமீட்டுத் துடைக்கக்கருதி மயக்க மகன்றாராய் அவர்நகரத்தில் வாழ்வதனுல் அவர்களாற் செய்யத்தக்க நெறி யாதென்றான்.

அவ்வாறு சொல்லக்கேட்ட சானகியார் எமது பெருந்தகையாகிய இரகுவீரன் அருந்தவஞ்செய்வான் முயலுங்காலத்தில்மறமேசெய்துழலும்வாழ்க்கையுடையாராகிய அரக்கராவாரையெல்லாம் வருக்கத்துடன் கொன்றுகளைவர். பின்னே யோரிடரு முலகமெய்தப் பெறுதென்றார். இராவணனே மானுடர் அரக்கரை யெல்லாம் அவர் வருக்கத்துடன் கொல்வரெனின் யானையினத்தை யெல்லாம் இளமுயல் கொல்லும், பின்னும் கூரிய உகிரையுடைய சிங்கவேற்றை மான்கூட்டம் கொல்லும்போலுமென்றான். அதற்குச்சானகியாரோ மின்றிரண்டாலன்ன மயிரையுடைய விராதனும் கோபமிகுந்து கன்றிய மனமுடைய கரன் முதலானோரும் இறந்துபட்ட போர்த்திறலைச் சிறிதேனும் கேட்டிலீர்போலுமென்ற தன்றி அப்பெருந்தகையால் இலங்கையில்வாழும் அரக்கரென்பார் தம்வருக்கத்துடன் சாதலும் தேவர்கள் ஓங்கி வாழ்தலு நாளையே நீர் பார்க்கப்போகிறீர்; குற்றமற்ற பெருந்தவமுடையீரோ, நீரறியாததுமுண்டோ! தருமத்தைப் பாவமும் வெல்லவல்லதோ வென்றார்.

இவ்வாறு சானகியாரது அமுதளாவிய மெல்லிய சொன்மாலை தன்செவியிற் படுதலும் தளிர்த்துவிங்கும் உளனுலாய உடம்பில் நாணமும் மானமு மூன் றவே மானுடர் வலியரென்றசொல்லாற் கோபமிக்கானுய்ச் சிலைவலி படைத்த அன்னார்க்கு ஒருமனிசனே இறுதியைத் தேடிவைத்தானென்று கூறுவையே யாயின் இருபதுதோளையுடைய அவ்விராவணனுேடு நடக்கும் பெரும்போரில் அவர் பூளைப்பூவெனக் கெடுவதுண்மை யென்பதை நாளையேயறிவை! மேரு வைப்பறிக்க வேண்டினும் விண்ணையிடிக்க வேண்டினும் நீரைக்கலக்க வேண்டினும் நெருப்பையவிக்க வேண்டினும் பாரையெடுக்க வேண்டினு லும் பெண்மணியே! நீர் யாரொன்றேயெண்ணிச்சொன்னீர்! அவ்விராவணனு லும் ஆகாதகாரியமு முண்டோவென்றான்.

அதைக்கேட்ட சானகியாரும் காத்தற்றொழில் அமைந்த திரண்டதோள் பலவுளவென்றாலும் லல்வமையுளதாமோ! கடல்மத்தியிலுள்ள இலங்காதிபதி யாகிய இராவணனைச் சிறையிலிட்ட கார்த்தவீரியனது ஆயிரந்தோளையும் சிறி யபருவத்திலேயே இரண்டுதோளையுடைய பரசுராமனன்றோ மழுவால்வெட்டி யெறிந்து வெற்றிகொண்டானென்று விரித்துச் சானகியார்சொல்லவே; கண்க ளில் தீப்பொறி சிதறின, திரண்டதோள்கள் திக்கிற்சென்றன, மணிமுடியோ வானத்தைத் தீண்டின, திண்ணியகைக ளொன்றோடொன் றடித்துக்கொண் டன, மேகத்தி னிடியேபோலப் பற்கள் வரிசைமென்று கோபமதிகப்பட அவ் விராவணன்கொண்ட மாயையு நீங்கிற்று. அப்போது சானகியாரோ இவன் இருவினையுந்துறந்த மேலோனேயல்லனென்றுகருதி ஐயப்பாடடைந்து யாரோ இவனென்று சிறிதும் தெரியாத நிலைமையுடையாராய் நிற்க, இராவணனே பெரும்பாம்பு மிக்க சினங்கொண்டு படம்விரித்துயர்ந்ததுபோலத் தன்னுருக் கொண்டு விளங்கினன். சானகியாரோ மிக்கத் துயரமுடையாராதலின் பெரு மிதமென்ன நினைக்கலாம், எதிரேயெடுத்துச் சொல்லலாகுஞ் சொல்லு மொன்றில்லை, செய்யுங் காரியமுமில்லை, தென்றிசைக்கரசனுகிய யமன் வந்த காலத்தில் உயிர்களடையும் கொடுந்துன்பத்தை யடைந்திருந்தார்.

அப்போது இராவணனே சானகியாரைப்பார்த்துத் தேவர்கள்குற்றேவல் செய்ய உலகமெல்லாம் வென்ற என்வீரத்தைப்பார், மண்ணினிடத்துப் புழு வைப்போலும் வாழு மானுடரை வலிமைபடைத்தவரொன்று சொன்னுயே! அப்படிச்சொன்ன உன்னைப்பிசைந்தே தின்ன வெண்ணிவிடுவேன், நீ பெண் ணாகையாற் கொல்லாமலே விட்டுவிட்டேன், அப்படி யெண்ணி யிருந்தேனுயி ன் என்னுயிரையு மிழந்தேனவேன், பெண்கள் நாயகமே! மனோதைரியம் விடவேவேண்டாம்,யாரையுங்கும்பிடாத வென்றலைமேன் முடியென்றுசொல் லத் தனித்தனி இனிதுதாங்கிப் பலவாபரணம்பூண்ட அரம்பாஸ்திரீகள் உனக் குக் குற்றேவல்செய்யப் பதினுலுலகத்தையுந் தனியரசு செய்யும்பெருஞ் செல்வத்தில் இருக்கவேண்டுகின்றே னென்றான்.

இப்படி சொன்னதைக்கேட்ட சானகியார் தமது செவிகளைத் தளிர்க் கையாற் பொத்திக்கொண்டு காகுத்த வம்சோத்தரன் கற்பின் வரலாற்றை

யுடைய காதலியாயிருக்கின்ற என்னைப் பூமியின்கண் நல்லொழுக்கம்பற்றி நடவாத பாதகனே! தேவர்கட்கீயும் அவியுணவை நாயானை இச்சித்தாற் போல யாதுபேசினை, புன்னுனியி னீரினுமெய்தாக மிக அற்பமாகக்கழியும் உயிரிழப்பதற்கஞ்சியே இற்பிறப்பழிவ துண்டோ? இராமபாணம்வந்து நெருங்கா முன்னமே உன்னுயிர்க்கே யுறுதியை நோக்கினுல் நீ ஓடிப்போ யொளித்துக் கொள்ளென்றார்.

இரக்கமில்லாத அரக்கனோ சானகியார்சொன்ன சொல்லைக்கேட்டு உன்னுருயிர்த் துணைவனுகிய இராமன்விடும் பாணம் திசையானைகள் மருப்பொடியப் போர்செய்த என்மார்பிற்பட்டாற் குன்றின்மேற் றொடுத்துவிட்ட பூங்கணைபோலாம், தெய்வப் பெண்களுக்கெல்லாம் தலைமையுடையீரோ! மிக்க ஆசைநோய் வருத்த வருந்திய உடம்பினே னுளமகிழ அத்தெய்வப் பெண்களெல்லாம் வந்து வணங்கும் பெரும்பதம் கைக்கொள்ளுவீரென் றுலகந் தாங்கு மலையினும் வலியதோளையுடைய இராவணன் வணங்கினின்றான். தன்னடியில் அவ்விராவணன் தாழ்தலும் சானகியார் கறைதங்கிய வாள்பட ஆவி கலங்கியதுபோல் இறைவனே! இளையோனே! யென்றேங்கியுயிர்போவதுபோற் புலம்புவாளாயினர். அவ்வாறிருக்கையில் இராவணனோசானகியாரைத்தீண்டினுல்தனக்குக் கேடுவருமென்றே நளகூபரனிட்டகொடுஞ்சாபத்தையும்வேதவதிமுதலானோரிட்ட சாபத்தையும் செவ்வேமனத்திற் சிந்தித்துத் தூணெனக் கூறப்படுவதாகிய தன்தோள்வலியால் கீழ்ோடுமேல் ஒருயோசனையகழ்ந்து தன்தேரி லெழுந்தருளச்செய்து நிற்க அதைக்கண்டசானகியாரோ கண்டுதன்னுருயிர்தரியாதாராய் மண்ணிற்பொருந்திய மின்னென மயங்கினின்றார். இராவணனோ ஆகாயமார்க்கமாகத் தேரை விரைந்து செலுத்தவே கொடுங்கனலால்வருந்தும் கொடியேபோற் புரண்டு குலைந் தயர்ந்து துடித்து விழுவார், துயரத்தாலே மீளவு மெழுந்திருப்பார்; என்னைத் தருமதேவதையே காத்தருளென்பார். மலைகளையும் மரங்களையும் மயில்களையும் குயில்களையும் கலைகளையும் பிணைகளையும் களிறுகளையும் பிடிகளையும் நிலையாவுயிர்களையுங்கண்டு அவைகளை விரித்து நிலைதேறிப்போய்க்கெடாத வலிமைபடைத்த தசரதராசகுமா ரிருவரிடத்தும் எனக்கெய்திய கொடுந்துயரஞ் சொல்லுங்கோளென்பார். மேகங்களே! பொழில்களே! வனதேவதைகளே! நமது வீரனது நிலைமை நன்றறிவீர்; என்னை அஞ்சற்கவென்றே கருணைபாலிப்பீராயின் உய்வேன், அவ்வாறுய்வேனெனின் அதுஇழிவாகுமோ சொல்லுங்கோளென்பார். நிருதர் முதலானோர் தங்குலத்தொடுங் கெட்டழிய நீண்டமுகிலேபோற் பாணவருஷம்பொழிந்துகொல்லமாட்டீரோ! வரதனே! இளையவனே! குற்றமெய்தப் பெறாத பரதனே! சத்துருக்கனே! நீங்களும்வழிமேற்கொண்டீரோ! என்பார். கோதாவிரியே! குளிர்ச்சியுங் குழைதலுமுடையையாகித் தன்னையடைந்தாருக்கு மாதாவன்னளாய்த் தெளிவைஎன்பர், நீ ஓதாதுரைக்க வல்லாராகிய எமது தலைவனிடஞ்சென்று என்னிலையைச் சொல்லமாட்டாயோ என்றும்; சுனைகளே சிங்கங்களே நானிருந்த இந்நிலத்தொடு மெடுத்த கைகளிருபதும் தலைபத்து முதிர்ந்துபோகக்கண்டு சிரிக்கவேண்டுகிறேனென்றும் சானகியார்

பல புலம்பாநிற்ப; அதைக்கண்ட இராவணன் தேமல்படர்ந்த மெல்லியகொங் கையையுடைய பூங்குழைபோல்வீர்! அம்மனிசர் என்னைக்கொன்றே உன்னை மீட்கும்வலியுடையராவரோ வென்று தன்கையை யெறிந்து சிரித்தான். அப் போது சானகியாரோ மாயையால் மானென்றையேவி யுன்னுருயிருண்ணும் கூற்றுவனைப்போக்கி இப்போது கவர்ந்துசெல்கின்றாய்! நீ போர்செய்து காத் துக்கொள்வதானால் இப்போதே தேரையோட்டிப் போகாமலிரு, பின்னும் நீ சுத்தவீரனேயானால்விரைவினுன் கூட்டராமரக்கரையெல்லாங் கொன்றுகளை ந்து உன்தங்கையின் மூக்குமுலையுங் காதுமரிந்த மனிசர் இக்காட்டிலிருக்கின் றார்களென்ற அச்சத்தாலேயன்றோ இம்மாயைகளைச் செய்து கவர்ந்தனை யென்றுசொன்னார். அதைக்கேட்ட இராவணனேவலியற்றசரீரமுள்ள இழிந்த மனிசருடனே போர்க்கெழுவேனெனின் நெற்றிமே லொற்றைநாட்டம்பெற்ற நின்மலக்கொழுந்தின் கயிலைமலையை யெடுத்த என்தோளாற்றலுக்குப் பழி வருமென்றும் மாயமே நல்லபயன்விளைக்குமென்றும் இவ்வகையான காரியஞ் செய்யத் துணிந்தேனென, சானகியாரும் தங்குலப்பகைவர்பாற் போவது குற்றம் வாளிற்பொருவது நாணமாம், கற்பினையுடைய மாதரை வஞ்சிப்பது வல்லமையல்லபோலாம், இரக்கமில்லாத அரக்கருக்குப் பாவமும் பழியு மின்றோ? என்றார். அவ்வாறு சொல்லிக்கொண் டிருக்கையில் எங்கடா போவது நில்லு நில்லென் றிடித்த சொல்லையுடையனாய் நெருப்புப்பொரி பறக்கும் கண்ணையும் மின்னொளிவிளங்கும் துண்டமும் பொன்மலை வானின் கண் வருவதேபோலு மெய்யுடையனாய் தன்சிறகினால் வீசும் காற்றில் மலைக ளெல்லாம் ஒன்றோடொன்று புழுதியிலுதிரக் கடலு முலகு மொன்றாயழிய முழுதும்வீசும் ஊழிகாற்றேபோல ஊதைக்காற்றுவீசச் சாகையுடன் மரமுந் தாழ மேகங்களும் விண்ணிற்செல்ல மேலே கருடன் வருகின்றானென்று நாகங்கள் படமொளித் தொதுங்கிவருந்த யானை யாளி முதலிய மிருகங்களும் கானொடு மரத்தினொடும் புதர் முதலியன மேனிறைந்து மூடிக்கொள்ளவும், வானமும் காடு மாறுகொள்ளவும், உத்தமனாகிய இரகுவீரனது தருமபத் தினியை எங்கடா தேரில்வைத்துச் செல்கின்றனை இத்தனைதிசையையும் வா னோடு மறைப்பேனென்று தன் இலைபோலுஞ் சிறைகளைப் பரப்பிஅத்தேரைத் தடைபடுத்தச் சடாயுவாகிய பெரிய உடையார்வருவது செவ்வானமணிந்த கயிலைமலையை யொத்திருந்தது.

அவ்வாறு வந்த சடாயு சானகியாரைப் பயப்பட வேண்டாமென்று சொல்லிவிட்டு இவனோ நமது சானகியாரைத் தீண்டிலன் என்றே சிந்தை தெளிந்து பெருங்கோப மெய்தாமலே சில சொற்களைச் சொல்ல லாயினான். அடா இராவணா! உன் சுற்றத்தோடும் உன் பெருவாழ்வையுங் கெடுத்துக் கொண்ட தன்றிச் சுட்டுவிட்டாய்! என்ன காரியஞ்செய்யத் தொடங்கினை! நீ இறந்து பட்டா யென்றே யெண்ணற்பாலது. இத்தரும பத்தினியை விட்டு விட்டாயாயின் நீ சாகாமலே யிருப்பாய். பேதையே என்ன பிழை செய்துவிட்டனை! உலகுக்கெல்லாம் தாய்போன்றாரை மனத்தில் நீ யாதா யெண்ணி யிவ்வாறு செய்து விட்டாய், உனக்காதாரமினியார்? நீ பிழைத்

துப் போகாமலே போர்செய்து உன்னுருயிரை மெய்மையாக விருந்துசெய்யத் தன் கைகளாரமுகந்து ஐயா! புதிதாக உண்டதறிவாயே! உலகத்தின்கண் விடத்தையுண்டும் உயிர் பிழைத்தவருண்டோ! எல்லா வுலகங்களும் இந்திரனும் இத்தேவர் ஒழிந்த மும்மைப் பெருந்தேவரும் மான் புலியைக் கண்டதுபோற் கலங்குவரோ யல்லது வில்லாளராகிய இராமலட்சுமணரை வெல்லும் வலியுமுடைய ராவரோ? இம்மையிலே யுறவோடிறந் தழியாநின்ற கொடுந்தொழிலோ இதைப்பார்க்கிலு மில்லை, மறுமையினும் கும்பிபாகம் இரௌரவ முதலிய நரகபேதங்களையும் பயக்கும். எவ்வித மானிடனென்றே யெண்ணத் துணிந்தனை? மும்மைப் பெருந்தேவர்கட்கும் முழுமுதற் பொருளாகிய பரம்பொருளே இவ்விராகவனாகத் திருவவதரித்தமையான் இவரை எந்தத் தேவருடனே ஒப்புமை கூறலாம்! அறிவில்லாதவனே! பித்தேறினையாதலால் பிழைசெய்யவே துணிந்தனை! முப்புரம் பொடிபடுத்த புண்ணிய மூர்த்தி யருளால் நீ பெற்றவரங்கள் மற்ற கல்விகள் வலிமைகள் முதலாயின பலவும் இவ்விராகவன் பிரயோகிக்கும் பாணம் படுமளவே உனக்குப் பொருளாகத் தோன்றும்.

சூரியகுலத் தோன்றலாகிய இராகவனோ தன்வில்லைவளைத்துநின்று நேர்படுவானாயின் அவனை யாருமுன்னின்று தடுப்பதோவரிதே, இப்பெண்மணியை நானேகொண்டு சென்று அங்கேவிடுகிறேன் நீ விரைந்துபோவென்று சொல்ல, அதைக்கேட்ட இராவணனோ வாயைமடித்து நீ வெற்றியாளனென்று சிறப்பித்துச் சொல்லப்படுவோனைக் காட்டாயென்று கோபித்துரைக்க அதற்குச் சடாயுவும் நீ யுடல்முழுதும் பாணங்களால் தொளைக்கப்பட்டுப் பெரும்புண்ணுவாமுன்னே இவ்விடம்விட்டகன்றுபோய்விடென்ன, அதற்கிரும்புண்ட நீர் ஒருக்காலத்தின்மீண்டபோதும் என் கையிலகப்பட்ட கரும்பன்ன சொற்காரிகை மீளாளென்பதையும் மெய்யாகவுணர்ந்துகொள்ளென்றான். அச்சமையத்திலே சானகியாரோ முன்னைப்பார்க்கிலு மிருமடங்கு பயமடைந்தனர், அன்னம்போன்ற சானகியார் வருந்துதல்கண்ட சடாயுவோ இவ்வரக்கனுடம்போ சின்னபின்னப்படும், நமது சக்கரவர்த்தித் திருக்குமாரன் இங்கே வராதிருப்பதே அதற்குத் தாமசம், இனி நீ சிறிதும் மனங் கவலற்க; முத்துவடஞ் சிந்தினாற்போலும் கண்ணினின்றும் நீர்த்துளிசிந்தி வருந்தற்க; மனத்தளர்ச்சியொழி, இவன் தலைகள் பனைமரத்திற் றொத்திக்கொண் டிருக்கும் குலைகள் பூமியில்விழுமாறு இவன் வெற்றிகொண்ட பத்துத்திசையிலும்சென்று விழுவதைப் பார்க்கலாமென்று இடிபோன்ற முழக்கத்தினால் தன் பெருஞ்சிறகை வீசியெறிந்து அவனது முடிவரிசைகளைப் பூமியிலிட்டு நாசியினலகாற்கொத்தியெறிந்து விரைவில் வீணை யெழுதியிருந்த கொடியையு மொடித்து விட்டுத் தேவர்கள் வாழ்த்தொலிகொண்டான்.

அந்தச் சமயத்தில் இராவணனோ அரக்கினுருக்கொத்த கண்ணையுடையானாய்இதுவரையும் இவ்வகையான அபசெயம்பெறுமையால் உலகேழு நடுநடுங்க நகைத்து மலைபோன்ற தன்கையிலுள்ள வில்லையெடுத்து வளைத்ததன்

ரித் தன் புருவவில்லையும் வளைத்துநின்று தன் வில்விற் பாணவருஷம்பொழிய அதைக்கண்டசடாயு இவற்றையெல்லாம் தன்சிறகிலெழுங்காற்றால் அடித்தும் சிலவற்றைத்தன்னகத்தால் துண்டப்படுத்தியும் சிலவற்றைமூக்கினலகாற்றுண் டப்படுத்தியும் வருவதல்லாமல் சருப்பங்களையெல்லாம் கண்டதுண்டப்படுத் தும் கருடனேபோல் அவ்விராவணனுடைய தலைபத்திலும் நீட்டு மூக்கினல கென்னுஞ்சக்கரமுடையானாய் அவன்வில்லைவளைக்குமளவிலேஇரத்தினகுண் டலங்களைக்கவர்ந்துசென்றான். இராவணனோஅதைக்கண்டுபுகர்நிறமுள்ள பதி னறுபாணங்களை அச்சடாயுமார்பே யிலக்காகவிட, தேவர்களெல்லாம் இனிச் சடாயு விழுந்தானென்றே யெண்ணி வருந்தினர். சடாயுவோ மிகக்கோப மடைந்து அவனது தோளிருபதையும் வரிசையாகத்தத்தி நகத்தாற்கொத் திக் குடைந்து சிறகாற் புடைத்து முத்தாரமணிந்த மார்பிலிருக்கும் கவசத் தையு முட்டறுத்தான். அப்படி யறுக்கக்கண்ட இராவணன் சடாயுமேல் நூறம்பு அவன்மார்பே இலக்காகத் தொடுத்துவிடத் தேவர்களஞ்சி வெருக் கொண்டனர். அப்படி கொள்வதற்கு முன்னரே சடாயுவும் அவன் வில்லைப் பல்லாற்பறித்தொடித்து விட்டான், தேவர்களும் ஆனந்தக்கடலி லழுந்தினர். உலகந்தாங்கு மிறைவனுடைய ஆற்றலுக்கேற்ற வில்லொடியக்கண்டு கோபி த்தநெஞ்சங்கொண்டு முப்புரம் பொடிபடுத்த முதல்வனது அம்பே போன்ற சூலமெடுத் தெறிந்தான். சடாயுஇராவணனைப் பார்த்து இவன் இதைப்பொறு க்கமாட்டானென்றே யெண்ணலொழி, என் வல்லமையைப் பாரென்று அச் சூலத்தைத்தன்மார்பிலேற்று நின்றான். இப்படியுஞ்செய்யவல்லாருமுண்டோ என்று தேவர்க ளெல்லாம் தம் தோள்புடை கொட்டி யாரவாரித்தனர். சடாயுவோ இராவணன் அம்முத்தலைவேல் இழந்தமையால் படைவேறெடா முன்னே ஆகாய மறையும்படி நீண்டகுதிரைபூண்ட தேரைச்செலுத்தும் பாக னுடைய தலையைப் பறித்துச் சானகியாரை நாடிக் காமாதுரனாயிருக்கின்ற அவ்விராவணனது முகத்தில் வீசியெறிந்தான். அப்படியெறிந்த சடாயுவினது ஆற்றலை இராவணனோ தன்னெஞ்சின் மதித்து அச்சடாயுமேல் ஓர் ஆடகத் தண்டினைவாங்கி மோதி யடித்தான். அதனாற் சடாயுவும் மலைபோல மண் மேல்விழுந்தான். இராவணனோ சடாயு மண்மேல் மூர்ச்சையாய் விழத் தன் குதிரைபூட்டிய தேர்களி னொலியுந் தொடரா வண்ணம் செலுத்தி ஆகாய மார்க்கமாகச் சென்றான். அதைக்கண்ட சானகியாரோ நிலத்திலேயே பசும் புண்ணிற் றீநுழைந்தாற்போலத் துடிதுடித்துப் புரண்டழுதனர். இவ்வாறு சானகியார் வருந்துவதைக்கண்ட சடாயு அவலத்தி லழுந்த வேண்டாம் அன்னா யென்று உயிர்த்தெழுந்து, நீயெங்கடா போவதென்று இராவணன் தேரின்மேல் தேவர்கள் ஆரவாரிக்கப்பாய்ந்தான். அப்படி தேரிற்பாய்ந்த சடாயு தண்டினை யெறிந்து தேரை யழித்துவிட்டுத் தன் மூக்கிலுள்ள அல காகியவாளால் அவனதுதேரிற் பூட்டியிருக்குங்குதிரை அறுபத்துநான்கையும் அழிந்துபோகச் செய்ததன்றி அவன் தோளிற் கட்டியிருந்த அம்பறாத்தூணி யையும் தன்னகத்தாற் பறித்து, சிச்சிரப் பறவைபோலப் பாய்ந்து அவன் மார்பின் மேலும் தோளின்மேலுந் தன்சிறகை யோச்சி நின்று அவனைக்

கடித்து இவ்வளவுதானோ உன்வல்லமையென்முன். அந்தச்சமையத்தில் இராவணனோ அதிகசினங்கொண்டு தன்பானின்றும் விடுக்கும் படைக்கலங்கள் வேறுகாணுனாய் இக்கணமே இவனை யிறந்துபடச் செய்வேனென்று துணிந்து தன்கையிலிருந்த வாளையுறையினின்றும் தீர்த்தெறிந்தான். அஞ்சா நெஞ்சம் படைத்த சடாயுவோ யாவராலும் தடுப்பதற்கரிதாகிய தெய்வத்தன்மை பொருந்திய வாளால் தன்தலை யிழந்து விடுமென்பதல்லாமல் தனக்கு வாழ் நாளும் முடிவாயு மிருப்பதனுல் இந்திரன் தன் வச்சிரத்தினைக் கொண்டெறியச் சிறையகன்ற மலையேபோலப் பூமியில் விழுந்தான். விரிந்த சிறை மேழே மிகுதியாகமண்ணில்விழுந்ததைக்கண்டு தேவர்களெல்லாம் இரியல்போயினர், முனிவர்கூட்டங்களோ சானகியார்துணையிழந்தாரென்று வருந்தினர். சுவர்க்க லோகத்தார் பசும்பொன் மழையைப்பொழிந்தனர். அதைக்கண்ட சானகியாரும் மனநடுநடுங்கினர், போரில் நாணங்கொண்ட இராவணனோசடாயுவிறக்கவே ஆரவாரித்தான். சானகியாரோ கானவர்வலையிலகப்பட்டமானேபோல மனஞ்சோர்ந்து வருந்தி நினைந்து பெருமூச்செறிந்து ஒருதுணையு மில்லாளாய் கொழுகொம்பொடியக் கொடிவீழ்ந்ததுபோல மனங்குலைந்து பின்னும் துணையாகவந்த சடாயும் இறந்துபட்டனன், இனி எனக்குத்துணைவருவார் யார் ? என்றே இனியதுணை பிரிந்தின்னலினுல் மிகவருந்தும் அன்றிற்பெடை போல நின்று புலம்பத் தொடங்கினர்.

இளையவன் சொல்லை மறுத்துப் பேதையேன் அவனை விரைந்துபோக நீக்கினேன் இச்சடாயுவால் சிறைநீங்குமென்றிருந்தேன், விதியார் இன்னமும் என்னசெய்வரோ ! என்றுவருத்தப்பட்டுக்கொண்டிருந்த என்பால்வந்து பயப்படவேண்டாமென்றுசொல்லிய இந்த நல்லவன் தோற்றுப்போவதா ! கொடியவன் வெல்வதா! எனக்குத் தருமதேவதை துணைசெய்யலாகாதா ! நாணங்கெட்ட என் சொல்லைக்கேட்டுப்போன அயோத்தி யரசர்களே ! தருமநெறியில் நிற்பவர்கட் கெல்லாம் உரையாணி போன்றவரும் உம்பிதாவுக்கு உயிர் நண்பருமாகிய இச்சடாயுவைப்பார்க்க வரலாகாதோ ! கற்பழியாதிருப்பது என் கடமையேயாயினும் அழகழிக்கும்படி ஆவலங்கொட்டச்செய்யும் போர்த்தொழிலில்வல்ல எமது நாயகன் வில்லோ பழிபட்டது ; நான்வந்த குடியோபழியேற்றது, சுவர்க்கமே நாடிப்புகுந்த சக்கரவர்த்தியே! உம்மிடத்தில் நட்புக்கொண்ட இச்சடாயு தன் கடமை கழித்துவிட்டனன். ஆதலால் அப்படிப்பட்ட இப்பெரியோனை நீ மார்போடிறுகத் தழுவுவையோ ! என்று சடாயுவைக்கண்டுவருந்துஞ் சீதையினது தன்மையும் தன்னிறகிழந்தசடாயுவினதுதன்மையுங்கண்டுமண்ணொடுமெட்கும் அச்சானகியாரையெடுத்துத்தேரில் வைத்தமையால் அவ்விடத்திருந்தும் அப்பிராட்டியாரைத் தன்தோளிலெடுத்துக்கொண்டு ஆகாயமார்க்கமாகவே நடந்தான். சடாயுமூர்ச்சைதெளிந்தெழுந்து சானகியாரை மண்ணொடும் அரக்கன் தன்றோளிலெடுத்துக்கொண்டே போவதைப்பார்த்து மனம்வருந்திநமது மக்களோ இன்னமும்வந்தாரில்லையே, நமது மருகியாரடைந்ததுன்பத்தைத்தீர்த்தாரென்றபுகழையுங்கைக்கொள்ளாதிருக்கின்றனரோ ; விதியாரோ தருமவேலியைச் சிதைத்தனரோ ; இனிச்செய்

வறியாதிருக்கின்றது? வெற்றித்திருவுடைய இராமலட்சுமண ரிருப்பாராயின் பிராட்டியாருக்கு மிவ்வகைநடக்குமோ? நடந்த விபத்தோ இத்தன்மைய தென்று அறிய வல்லேனல்லேனே; சிறிய தாய்செய்த வஞ்சனை கைவந்தாற் போலிருக்கின்றதே; சர்ப்பப்பரியங்கத்துச் சர்வசுவாமியே சிராமனாகத் திருவவதரித்தா னென்னப்படுவதனால் அரக்கரால் அவன் வெல்லப்படுவனோ? இவன் கள்ளமாயையால் வஞ்சனையிழைத்தே அவர்களையகற்றினான்போலும்; அரக்கனை வேருடன் கொன்றுகளைந்து அன்பனாகிய சிராமனே தன் பழி தீர்த்துக் கொள்ளுவான். அரக்கனோ தாசரதியார்மனைக்கொடியாகிய சானகியாரைத் தீண்டவு மஞ்சுவான்; இவனுக்கோ பிரமனாலிடப்பட்ட சாபமுமிருக்கின்றதேயென்று மனந்தேறித் தன்றெகு உதிரவெள்ளத்தி லமிழ்ந்து போயும் சானகியாரை மீட்காமற்போய் விட்டேனே யென்னு மானமும் இராம லட்சுமணர்கள் மேற்சென்ற அன்பும் நெஞ்சைக் கவரத்தான் உணர்வு நீங்காமற் றெிதயர்ச்சி யடைந்தான். இதுதான் சமையமென்று இராவணனும் விரைந்து இலங்கையிற்கொண்டுபோய்ச் சானகியார் திருமேனியைத் தீண்ட வஞ்சி அரக்கியர் நடுவில் அவரை அசோக வனத்திற் சிறையிட்டான். இது நிடக்க;

மானைத் தொடர்ந்துசென்ற இரகுநாயகன் நிலைமையை யறிவாயென்று தன்னைச் சானகியாரனுப்பச்சென்ற இளையபெருமாளும் சானகியார் தனிமையை யெண்ணி மனம் பதைபதைக்கும் சிந்தையராய் பெருமாளைப் பிரிந்ததனால் வருந்தும் பாதாழ்வானது செய்கையை யொத்துக் கடலிலே செல்லுமாக்கலமே யென்ன விரைந்துசென்று தாமரைக் காடுபூத்து ஒரு கார்மேகந் தாணியிலிழிந்ததென்று சொல்லத்தக்க கோலம் படைத்த இரகுநாயகனை விரைந்து தன் மனமெனக் களிக்கும் சிந்தையை யுடையானுய்க் கண்டான். பெருமாளோ துண்ணென்று மாரீச னிட்டழைத்த ஓசை சென்று மயக்கச் சானகி தன் பெண்டன்மையால் மனமயர்வாளென்றெண்ணிக்கொண்டேவருகின்ற சமயத்தில் இளையவனைக்கண்டனன். அவ்வாறு கண்டு தன் சொல்லைக் கடந்து தளரு நெஞ்சமுடைய என்னிடத்தே என்சொல்லைக்கடந்து மனமுந் தளர்ந்த இளையவன் வருகின்ற நியமம் புன்மையான சொற்களிலே பழகிய பிளந்த வாயையுடைய அரக்கனாகிய மாரீசன் வாய்விட் டழைத்த குரலை என் குரலென்றே நினைத்துச் சோர்ந்து என்சொல்லையுங்கடந்து சானகியேவ என் நிலைமையைத்தேரவந்தமருளேயாம்? என்றுநினைத்து விதியானது இன்னமும் என்னென்ன முடிக்குமோவென்று வருந்துகிற இரகுநாயகனை இளைய பெருமாள் திருவடி தொழுது நிற்க; அவனை மார்போடிறுகத்தழுவி அப்பா! இளஞ்சிங்கமே! என் சொல்லையுங் கடந்து நீ வரவேண்டிய காரணமென்ன? வென்றுகேட்க, அதற்கு உலகத்திற்கேட்டறியாதகொடுஞ்சொல்கூறிச் சானகியாரென்னையேவ, நான் அது மாயவரக்கன் உரையென்று தடுக்க, மீண்டும் அன்னையார்போயறியென்றே வற்புறுத்த நான் தேவரீரது புயவலியையெடுத்துச்சொல்ல அதைமறுத்து நீபோய்ப் பாராவிட்டால் யானெருப்பிலீவிழ்ந்து போவேன் என்று மனங்கொதித்துக்காட்டிலோடக்கண்டுபயங்கொண்டு நான்

போகாதிருந்தால் இறந்துபடுவாரென்றே நினைந்து இவ்வளவு தூரம்வந்தேனல்லது வேறன்றென்று விண்ணப்பித்தான். அதற்கு இரகுநந்தனனே சானகி சாவாதிருத்தலிலள் அவளடைந்ததுன்பமோ தடுக்கமுடியாது; ஐயோதுன்பப் படும் அப்பெண்மணி கருத்தோ மனத்தினளவிடப்பட்ட பெருந்துன்பமேயாகும்; இது அவளைக் கைக்கொண்டுபோகிறவர்கள் செய்தவஞ்சனையேயல்லது வேறல்லவென்று தன் மனந்துணிந்து நாம் குற்றம் ஆராய்வதி லடங்குவதேயன்று; அவரோ தன் மனவருத்தத்தாலே சொன்ன சொல்லாகத் தோன்றுகின்றதே; அது நீங்குமென்று தெரிந்திருக்கின்றாய்! நீ முன்னமேதடுக்க முயலாமல் வந்தமையால் காரியக்கேடாய் விட்டதென்றெண்ணியெண்ணி மனமழிந்து இனி இங்கே நின்று நாம் தாமதிப்பதனால் ஆம்பயனென்ன? சானகியாரைக் கண்டால் நமது துயர நீங்குமென்றே விரைந்து தன் பாணத்தினு மிக்க வேகமாக நடந்துபோய்ச் சானகியாரைவிட்டு நீங்கிய இடத்தையடைந்தான். அவ்வாறடைந்து சானகியாரைக் காணுகிப்பறவைதன் கூண்டைக் காணுது வருந்தியதுபோல நின்று வருந்தித்தான் பெறலரும் பாக்கியம்பெற்று மதுமண்ணெடு மறைந்தாலெப்படியோ அப்படியே தன் சிந்தை மிகவுந்திகைத்துநின்றான்.

அப்போது மண் சுழன்றது மலைகள்சுழன்றன, அறிவுடையோர் நெஞ்சு சுழன்றது, கடலேழுஞ் சுழன்றன, விண்ணும் சுழன்றது, வேத நான்குஞ் சுழன்றன, உலகைச்சிருட்டிக்கும் பிரமனுடைய கண்ணும் சுழன்றது, சூரிய சந்திரரும் சுழன்றனர். இப்படிநிகழ, அறத்தைக்கோபிப்பானே! அருளையே கோபிப்பானே! தேவர்களையேகோபிப்பானே! முற்றத்துறந்த முனிவரையே கோபிப்பானே! யாதோமுடிவென்று சிராமன் வேதங்களையே கோபிப்பானேவென யாவரு மனநடுங்கினர். பிரமகற்பத்தில் எப்பொருளும் ஒடுங்கிப் போவதேபோல் கீழ் மேலும் மேல் கீழுமாகக்கலங்கின; இவ்வாருக ஒரு புறத்தே தேர்ச்சக்கரம் பதிந்திருப்பதாகக் காணப்படுகின்றதே, சானகியாரைத் தீண்டவஞ்சிப் பூமியோடு தோண்டியிருப்பதாகவும் தெரியவருகின்றதே, நாம் அறிவிலார்போல்நின்று யோசிப்பதனால் ஒருபயனுமில்லை; அவர்கள் நெடுதூரம்போவதன்முன்னே நாம்தொடர்வதேகருமமென்று இளையவன் தொழுதுசொல்ல, இரகுநாயகனும் ஆம்ஆம் அப்படிசெய்வதே தக்கதென்று தன்முதுகில் அம்பறாத்தூணிமுதலியவை தாங்கிக்கொண்டு மலை மரம்முதலியவைமடிந்துபோக நிலத்தின்மேல் அவன் தேர்சென்ற வழியைநோக்கியே நடக்க இளையவனும் அவனைப் பின்றொடர்ந்துசென்றான். பூமியில்தேர்ச்சுவடுநோக்கிநடந்து அச்சுவட்டைக்காணுமல் இனி விண்ணின்வழியே சென்றிருக்கலாமெனத் துணிந்து புண்ணிலே வேல்நுழைந்தாற்போல மனம்புழுங்கி நாமினிச்செய்வதென்னென்று இளையவனைநோக்கிச் சொன்னான். இளையவனும் தேரோ தெற்குநோக்கி நடந்ததென்றே தெரியவருகின்றது! உமது பாணத்திற்கது நெடிதன்று; மனம்வருந்தி நிற்பதனலென்னபிரயோசனமென்றான். அதுதான் தக்கதென் றிருவருமத்திசைநோக்கி நடந்துயோசனையிரண்டு கடந்துபோக பூமியில் வீணைக்கொடியொன்று வீழ்ந்திருக்கக்கண்டனர். அக்

கொடியைக்கண்டு அக்கண்டகரோடு நமது சானகிபொருட்டாகத்தேவர்களுக்குப் போர்நடந்ததென்றேசந்தேகித்து இது சடாயுவால்நடந்த போரென்றுணராமல் புண்டரீகம்போன்ற தன்கண்ணில் நீர்வாரச்சொல்லிமுடித்தான்.

அதற்கு இளையவனே மாருட்டமாக யோசித்துப்பார்த்தால் இது உமது பிதாவாகிய சடாயுவினது மூக்கினுல் முறிந்ததென்றே தோற்றுகின்றது, தன் வல்லமையால் மிகவும் தாக்கினுன்போலும்! நடு வடுத்தது தெரியாதிருக்கின்றது, தனித்துப் போர் செய்வதற்கோ வயோதிகராகையால் மிகவும் வருந்தியிருப்பர், மிகவும் வல்லமைபடைத்தவராகையால் நாமும்சென்று கூடலாம் பொழுதெல்லாம்தடுப்பதோ இடம்; வென்றுமீட்கினும்வென்றுமீட்கும், இங்கே தாமதித்துக்கொண்டிருப்பதனுற் பிரயோசனமில்லையென்ன, இராகவனும் காற்றேபோலும் காற்முடிபோலும் விரைந்து செல்கையில் ஒரு வில்லை ஆகாயத்தினின்றும் இந்திரவில் முறிந்தாற்போலவும் கடலினடுவில் மந்தாமலையிருந்ததுபோலவும்தோன்றக்கண்டு இளையவனைநோக்கி இவ்வில்லோதேவர்களாற் கடையப்பட்ட பாற்கடலின்மத்தாகிய மந்தரகிரிபோலத்தோன்றுகின்றதே! நமது பிதாவாகியசடாயுவோ இதைவிரைந்தொடித்திருக்கின்முர். இது கிடக்கின்ற நிலையை நோக்கிப்பாரென்று சொல்லி வெகுதூர நடந்துபோகையில் முத்தலைச் சூலம் பலபாணங்கள் நிரம்பிய புட்டில் இரண்டும்மலைபோலக் கிடக்கக்கண்டு நெருங்கிப்பின்னும் வெகுதூர நடந்துபோகவே ஆகாயத்தில் சுடர்விட்டெறிக்கும் சோதிகள் யாவும் கூடியதென்று சொல்லத்தக்கதாகவும் அக்கானகமெல்லாம் பரந்த சோதியை விளக்குவதாகவும் இராவணனது மார்பினின்றும்பறித்த கவசத்தைக் கண்டார்கள்.

பின்னு நடந்துபோகையில் அக்காடுமறையும்படி குதிரைகளும்சாரதிகளுமிறந்துகிடக்கக்கண்டார்கள். பின்னு மவ்வாறுசெய்கையில் சூரியமண்டலம் பல மண்ணிற்கிடந்தாற்போல மணிக்குண்டலங்கள் பல பூண்களின் குவியலுடன் தோளணிகளும் இரத்தினகிரீடங்களும்இருக்கக்கண்டு நமதுபிதாவோ வெகுகாலங்கண்டவர், அவருடன் பலபேர் நெருங்கிப் போர்செய்திருக்கலாமென்று இரகுநாயகன்சொல்ல, சுமுத்திரா சிங்கமாகிய இளையபெருமாள் தோள்பலவும் தலைபலவும்தோன்றுமாயின் இவ்வளவுதூரம் நமதுதந்தையுடன் போர்செய்ததாகத்தோன்றுவதனுல் அவன்இராவணனுகவே யிருக்கலாமென்றுசொல்லிக்கொண்டேதானும் பின்னுநடக்க; இருவரும்கடலினுட்டிய மந்தரவரைபோல உடலினின்றும்பெருகுகின்ற உதிரக்கடலினடுவிலேவிழுந்துகிடக்கின்றசடாயுவாகிய பெரிய உடையாரைக்கண்டார்கள். இரகுவீரனே சடாயுவைக்கண்டவுடன் தாமரைமலர்போன்ற கண்ணினின்றும் நீர்த்துளிசிந்த வெள்ளிமலைமேல் அஞ்சனமலைவிழ்வதேபோலவிழ்ந்து உயிர்ப்படங்கியொரு நாழிகைவரையிலுமுணர்வில்லாமல் இருக்க அதைக்கண்டதம்பியாகியஇளைய பெருமாள் அருவிநீரைக்கொண்டுதெளிக்க அயர்வுநீங்கிச்சொல்வானுயினன்.

உலகத்தின்கண் தம்பிதாக்களைக் கொலைநேர்ந்தவர் முன்னுளில் யாவரோ யுண்டு, முன்னே ஒருவன் என்பிரிவால் இறந்துபட்டான், என்பொருட்டாக

இந்நாளில் நீ இறந்துபட்டனை! உங்களுக்காக நானே நமனாகத்தோன்றி னேன். பெண்பேச்சைக்கேட்டுப் பின்னடப்பதறியாமலே மதிமயங்கிப்போ னேன், அவளடைந்த துன்பத்தைத்தீர்க்க நினைத்தே யுன்னுறவுநீங்கினாய்! ஒருறவுமில்லாதவனாகிய யான்எதையடையவேண்டித் துன்பமடைகின்றேன். மாண்டேனேயல்லவோ! அந்தணர் குறைதீர்க்க விரதமேற்கொண்டதனால் உயிர்பொறுத்திருக்கிறேன்; மரம்போலநிற்பதானேன், புன்றொழிலையுடைய யான் இனி மாயப்பிறப்பினை வைத்துக்கொண்டிருக்க விரும்பமாட்டேன். சொல்லையுடையவ ரென்போலினியாரிருக்கின்றனர்; என்மனைவியாகிய சான கியின்பொருட்டு இறகினையும் எண்ணிலாதபற்களையுமுடையவனே! உன்னைப் படைகைக்கொண்டொருவன் கொன்றுபோக வில்லைக் கையிலேபடைத்த யான்வலிமைபெற்றவ னாவேனன்றோ! என்று இரகுவீரனழுதுபுலம்ப இளை யவனும் அத்தன்மையனாயிருக்கக் கழுகுகளுக்கரசனாகிய சடாயுவுக்குச்சற்று தன்னறிவுதோன்றக்கண்டுஉணர்வுசிறிதுதோன்றச்சடாயுதுன்பத்தால்வருந்து முயிர்ப்புடையவனாய் இராமலட்சுமணரிருவரையும்பார்த் துள்ளமகிழ்வடை ந்து அறுபட்ட சிறகு முயிரு மேழுலகும்பெற்றதொத்து நான் பழியினின்று நீங்கினேனென்று சொல்லிக்கொண்டே யான்செய்த பாக்கியத்தால் இப்பய னில்லாதஉயிரைப்போக்குகின்றசமயத்தில் உங்களைத்தரிசித்தேன், புண்ணிய வடிவினரே! வாருங்கோளென்று இராவணனது பொன்முடியையுடைத்த மூக்கினாலுச்சிமோந்து இதுவஞ்சனையால்வந்தவருகையென்றே என்மனமுன் னமே நினைந்ததாயினும் அருந்ததியையொத்த சானகியாரை நீங்கி னீரோ நீங்களிருவருமென்றுசொல்ல, இளையபெருமாளும் ஒன்றுமொழியாமல் மாய மான்வந்ததுமுதல் அச்சடாயுவிழுந்திருக்கக்கண்டதனைத்து மெடுத்துச்சொல் லினன். அதைக்கேட்ட சடாயுவும் அவர்கள் மனத்திலே துன்பமடையாத வண்ணந்தேற்றுவது நல்லதென்றுதுணிந்து அதிசயமொருவராலும் அமைக்க லாகுமோ! பிறவியின்கண் இன்பத்துன்பங்கள்வருவன விதிவசமென்றே மேற் கொள்ளாவிட்டால் மதியை விதியாலும் வெல்லப்போமோ! துன்பம்வந்து மனத்திற் பொருந்துங்காலத்தில் கலக்கங்கொள்வது அறிவின்மையேயாம்; உலகத்தையெல்லாம்படைக்கும் பிரமனுக்கும் தன்றலைநீங்கியதுந் தெரியாத காரணமோ! துன்பமுமின்பமும் அணுகும்போது விலக்கமுடியுமோ! திரி புராந்தகனாகியபரமசிவன் தலைக்கலனால் இரந்துண்டதுதவத்தின்பாலதாமோ! ஆகாயத்தில் சஞ்சரிக்கும் சூரியனும் இராகுவினால்பீடிக்கப்படுகின்றது அறி யாததோ! உலகத்தினிருணீக்கும் சந்திரனும் வளரவுந்தேயவு மிருக்கின்றா னன்றோ! துன்பம்வருவதும் அது நீங்குவதும் தொன்மை நீர்மையேயாகும், தேவகுருவால் இந்திரனடைந்த சங்கடங்கள் எண்ணிமுடியாவே! எட்டி லடங்காவே! சம்பரனென்னும் அரக்கனால் இந்திரன்பட்டபாடு தான்சொல்லி முடியுமோ! அது உமது பிதாவாகிய சக்கரவர்த்தியாலல்லவோ நீங்கியது, நீங்களுஞ்சானகியாரைப்பிரிந்தமைநினைக்குமிடத்தேதருமதேவதையுந்தேவர் களும் பட்ட துயரந் தவிரும்பொருட்டென்றே யெண்ணவேண்டும், நீங்கள் அரக்கரொன்னும் களைகளைந்துவாழ வேண்டுகிறேன். இராவணன் சானகி

யாரை அவரொழுந்தருளியிருந்த பன்னசாலையோடும் தூக்கிக்கொண்டுபோனான். அப்படி போகக்கண்ட யான் என்னாற்றலால் என்னாலானவகையெல்லாமுழுதுந்தடுத்தேன்; அவனோ தான் சிவபெருமானிடத்தேபெற்ற வாளாற்கொன்றான்,இங்கேவிழுந்தேன் இதுதானடந்தசெய்தியாகுமென்றான். இப்படிசொன்னசொல்காதிற்படாமுன்னேகண்ணோ உதிரமயமாயின; நெருப்பேபோலப் பெருமூச்செறிந்தது, புருவமேல்மேலேறின, சுடர்களெங்குமிழிந்தன, அண்டகோளங்கலங்கியது, மலைகளெல்லாம்பிளவுபட்டன, மண்ணுலகம்திரியவும்பெரியமலைகள் திரியவும் மற்ற பூதமைந்தும் திரியவும், சூரியசந்திரர்திரியவும், விண்ணுலகம் திரியவும்பிரமனுந்திரியவும் நின்றதனால் இரகுநாயகன் எப்பொருளுந்தானே யாமென்பது விளங்கக்காட்டியது, இவன் கொண்டகோபம் யார் பாலதோவென்று பயந்து வெறித்துநின்று வருந்துகின்ற சமையத்தில் இராகவபிரான் கோபநகையுடன் சொல்லலாயினான். பெண்மணியொருத்தியை அறிவில்லாத அரக்கன் கைப்பற்றிச் செல்லவும் நீர் இவ்வகையான துன்பத்தையடையவுமாய் விட்டதனால் எட்டுத்திசையுமடைய உலகமெல்லாம் தேவர்களுடனே இப்போதே யழிக்கின்றேன், நக்ஷத்திரங்கள் உதிர்வதும் சூரிய சந்திரர் பிதிர்வதும் வானமெங்கும் எரிதோன்றுவதும் நீர் நிலம் காற்று முதலிய பஞ்சபூதங்கள் அழிவதும் தேவர்களிறப்பதும் சத்தலோகங்களழிவதும் அண்டகோளமும் அப்புறத்ததாகிய இடமுந் தீர்ந்து நீர்க்குமிழிபோலழிவதும் பார்க்கப் போகிறீரென்று கோபிக்குங் காலத்தில் சூரியனும் மேருவில் மறையலானான், அட்டதிக்கயங்களும் வலசையுற்றோடின, உலகமெல்லாம் அழிந்துவிடப்போகிறதென்று துணிந்த நெஞ்சினை யுடையவனாய் இளைய பெருமாளும் வருத்தங்கொண்டனன், இவ்வாறு கோபங்கொண்டதையறிந்த சடாயுவும் இராமா! நீ கோபிப்பதுந் தருமமா! தேவர்களும் முனிவர்களும் இராவணனை உன்னால் வெல்ல வெண்ணியிருப்பார்கள்; அவனுக்குப் பிரமனாற் கொடுக்கப்பட்ட வரத்தாலாகிய தோளின் போராற்றல் என் யுத்தத்திற் கண்டிருப்பையானால் வேறு சொல்லவேண்டுவது முண்டோ! அந்தப் பிரமன் முதலாகிய தேவர்கள் அவனுக்குக் குற்றேவல் செய்வதே யல்லாமல் அறஞ்செய்து வருகின்றார்களோ! நீங்களுஞ் சானகியாரைத் தனியே விட்டுவிட்டு மான்பின்சென்று பழியைத்தேடிக் கொண்டீர்களே! இதுநீங்கள்செய்துகொண்ட பிழையே யல்லாமல் உலகம்செய்த பிழையுண்டோ! ஆகையாற் கோபிக்கவேண்டாம், அருந்ததிபோன்றகற்பினையுடைய சானகியாரதுதுயரத்தை நீக்கித்தேவர்கள் கருத்தை முடித்து வேதமார்க்கத்தை நிலைநிறுத்தித் தீமையைத் தவிர்க்க வேண்டுமென்று சொல்லி முடித்தான்.

இராகவனோ அச்சடாயு சொல்லிய சொல்லைத் தன் பிதாவாகிய தயரத மகாராசன் கட்டளையேபோலச் சிந்தையிலெண்ணி அயலிற் கோபித்தாவதென்ன? அரக்கனை வருக்கத்தோடுகொல்வதே கடமையென்று கோபநீங்கி நின்றான். சீராமனோ சடாயுவை நோக்கித் தேவரீர் கட்டளையிதே செய்வதல்லது வேறொன்றுண்டோ! அவ்வரக்கன்போன தெவ்வழி யென்று கேட்க, அவனும் அறிவுகலங்கியுரையாடாமல் உயிர்நீங்கினான். அதைக்கண்ட

இராமலட்சுமண ரிருவரும் அழுது சோர்ந்தனர்; பூமியினுள்ள மரங்களு மிருகங்களுங் கரைந்துருகின, இரகுநாயகனே அறந்தலைநிற்காத அரக்கனால் ஆண்மை யொழிந்தேன், துறந்து தவஞ்செய்வேனே! உயிரைத் துறப்பேனே! தாதைமார்கள் இறந்தபின்னரும் இன்னுமுயிர் கொண்டிருக்கிறேனன்றே; என்னசெய்வேன்! இளையவனேயென் றுசொல்லிமுடித்தான். இப்படிசொன்ன சொல்லைக்கேட்ட இளையபெருமாளும் இராகவனை வணங்கி விதியின் றன்மையால் விளைந்ததொன்றே! நாம் இங்கு நினைவதனால் என்னபயன்! நாம் அரக்கரை வருக்கத்தோடும் கொன்றபின்னன்றோ நமது கொடுந்துயரநீங்கும்? தேவரீரோ சானகியாரையும் பிரிந்திருக்கின்றீர்! அதுவுமல்லாமல் உமது பிதாவை யுயிர்கொண்ட இராவணனை யுயிர்வாங்காமலிருந்தே தவஞ்செய்வதென்னகாரியம்! என்று இளையபெருமாள்சொல்லக்கேட்டு இராகவனு மயர்ச்சிநீங்கி இவ்வாறு எண்ணிக்கொண்டிருப்பது மதியீனமென்றெண்ணித் தன் கண்ணீரைவிலக்கி இறந்த பிதாவுக்குச்செய்யவேண்டிய உரிமைக்கடன்களையெல்லாம்செய்துமுடிக்கவேண்டுமென்றனன்; அதற்கு அகிற்கட்டை சந்தனக்கட்டைமுதலியவை சிதையாக அடுக்கித் தருப்பைமுதலியகொணர்ந்து திருத்தி மவரையுஞ்சிந்தி இளையவன் மணல்மேடையிலேற்றி நீராட்டத் தன் னிருகையா லீமத்திலேற்றிச் சாந்து மலருந்தூவி நெருப்பிட்டுச் செய்யத்தக்கவற்றையெல்லாம் வரன் முறையாக இரகுநாயகன்செய்து முடித்தான். சூரியனும் தன்குலத்தலைவனுகிய இரகுவீரன் துன்பத்தால்நீராடிச்செய்யத்தக்கவை செய்தாற்போலத் தானும் மேற்றிசைக்கடலின் மூழ்கினன்.

சடாயுவுயிர்நீத்தபடலம்

முற்றிற்று.

---

## அயோமுகிப்படலம்.

அந்திக்காலம்வரவே அச்சடாயுவுயிர்நீங்கிய இடத்தைக்கடந்து மேகந் தவழும் மலைச்சிகரத்திற்றுயில்கொண்டனர். இந்திரனுக்கடங்காத இராக்கத சேனை யெங்குஞ்சூழ்ந்துக்கொண்டாற்போலக் கொடுந்துயரத்திற் கூன்று கோலேபோன்ற விரிந்த இருள் எங்குநெருங்கியது. இராகவன்படுந் துயரத்தைச்சகியாமல் மலைகளருவிபாயவும் மரங்கள் தேன்சிந்தவும் கண்ணீர்போலத்தோன்றின. மானமுங் கோபமும் தாதைமரணமும் இராமலட்சுமணர் சிந்தையில் ஞானமும் துயரமு மலைபோலநின்று வருத்தியது. மெய்யுணர்ச்சியிற்செல்லாத அறிவைவினையிற்செலுத்தும் பொய்ப்பிறவிபோலப் போக்குதற்கரிய இரவும் நெய்விட்ட நெருப்பேபோல மிகுந்தோங்கப் பெருமூச்செறிந்து செயலின்மை யடைகின்றவராற் காண்பதற்காம் கரையைப்பெற்றிலாததாக விருந்தது. இதுகிடக்க;

இரகுவீரனது தாமரை மலர்போன்ற கண்கள் இரவிலும் குவியாதிருந்தமை * சானகியாராகிய திருமகளை நீங்கியதனாலோ அல்லது அவரது முகமாகிய சந்திரனைக் காணாமையாலோ இன்னதன்மையாலெனத் துணியக் கூடாமலிருந்தது ; அரக்கனோ சானகியாரைப் பிரிந்தமையே இன்னது கருதியென்றே தோன்றவில்லை ; இரகுநாயகனுடைய கண்களும் தம்பி கண்களே போல் இமைத்தலொழிந்தன. சானகியார் முகம் வானின்கண் தோன்றுதலால் அவனுக்குக் காதலையாங்குக் காட்டுவதேபோலத் தமிழ் நாட்டிலிருந்து தோன்றுகின்ற வசந்தக்காற்றென்னும் வலியபாம்பானது தவழுகின்ற மலைச்சாரலிலே வெண்மதி விரிந்தது, களிப்பையுடைய மன்மதனாகிய கள்ளனோ, மறைந்து வசிக்கின்ற இராக்காலத்தைவெளிப்படுத்தி யுலகமனைத்தும்விளக்குகின்றநிலாவெள்ளமானது இருட்பிழம்பாகியவிடத்தையுடையநாகத்தினதுபல்லால் ஊன்றியதுபோலச் சுட்டது. மானமாகிய துன்பத்தை யிருளானது தா விடம்பரந்தாற்போன்ற வெண்ணிலாவானது தன்னை வருத்தப் படம்போன்ற அல்குப் பரப்பையும், பால்போன்ற இனிய சொல்லையும் தடங் கண்ணையுமுடைய சானகியாரை நீங்கியிருக்கின்ற தனிமையை நினைப்பானாய், மடித்த வாயும் பெருமூச்சும் துடித்துவிங்கி யொடுங்குந்தோளுங் கொண்டு வாங்கிய வில்லையுடையவனாக நமதுகணவன் வருவானேயென்று சானகியார் நாம் வருகின்ற வழியைப் பார்த்துக்கொண்டே போனாளோ என்பான், மின்னலைப் போன்றவளைத்த பற்களையுடைய அரக்கன் நில்லுநில்லு என்று நெருங்கிய காலத்தே அவள் தன்னுடைய சிந்தையிலே என்னத்தை நினைந்தாளோ வென்பான், நஞ்சையுடைய பாம்பாகிய இராகுவினால் வருந்துகின்ற சந்திரன் போல மண்ணொடு மண்ணாய் மட்குவாளாகிய நமதுசானகி அரக்கனது கொடுமையை நோக்கிப் பயந்தாளோ வென்பான், மேற்கொண்ட நாணமும் நீங்குவதற்கரிய காதலும் தன்னைத்தூண்ட ஆருயிர்வருந்துகின்றமையால் எனக்கு இன்னமும் வேண்டுமோ, இதைப்பார்க்கிலுந் துன்பமென்பதென்னென்று நெஞ்சினினைப்பான். பின்னும் இரகுநாயகனோ தன்வில்லைநோக்கிச்சிரிப்பான், மலைபோன்ற புயத்தைநோக்கிச்சிரிப்பான், பிரசண்ட வாயுவேபோலத்தோன்றும்சொல்லைநோக்கி வருந்துவான், கூதிர்க்காற்றாகிய யமனை நோக்கி வேதத்திற்கூறப்பட்ட யாகத்தில் விதிமுறைதோன்றிய என் காதன் மனைவியாகிய சானகிபிரிந்தாளோவென்பான். எவ்வுயிரையும் பாதுகாக்கநேர்ந்தநான் எனக்குத்துணையாயிருந்த ஒருபெண்ணடைந்த துன்பத்தைத் தவிர்க்காமற்போவேனாயின் என்புயவலிநன்றாயிருக்கின்றதென்பான், அன்புகொண்டு தம்பிகொணர்ந்த காய் கனி வருக்கங்களை விருந்துண்ண வருவோரைப் போய்விடுங்கோளென்று சொல்லவுமாய் விட்டதேயென்றுயிர் புழுங்க வருந்துவான். வாயு நெஞ்சமும்புலர்வான் அவனுக்குச்சீதைபிரிந்த வேதுவினாலேயோ அபிமானத்

* சானகியாராகிய திருவை நீங்கினதினாலோ அவரதுமுகமாகிய சந்திரனைக்காணாமையாலோ ஸ்ரீராமபிரானது கண்ணாகியதாமரைமலர் இரவிலும் குவியாதிருந்தன என்ற கருத்து திருவிராத தாமரைமலராதவின் குவியா திருந்ததன்றிச் சந்திரனைக்கண்டால் தாமரைமலர் குவியவேண்டுமென்பதுவேயாக இவரதுமுகமாகிய சந்திரனைக் காணாமையால் கண்ணாகிய தாமரைமலர் குவியாதிருந்தன என்பது.

தாலோ தெரிந்ததேயில்லை, செந்தாமரைமலர்போன்ற கண்ணிமைகள் பொருந்தாமல் ஆயிரங் கற்பகாலம்போலத்தோன்றுவதனால் இரவுவிடியும் காலத்தை இன்னதென்று காணுதவனுயிருந்தான்.

இவ்வாறு காணுமலிருந்து தன் தம்பியைநோக்கி இற்றைப்போல ஒவ்வொருநாளும் இரவும் பகலுமாகக் கழியப்பார்த்திருக்கின்றுயல்லவோ, இவ்விரவு மாத்திரம் இன்று நீடித்திருக்க வேதுவென்னவென்று கேட்பான், மாலைக்காலத்திலே தோன்றுகின்ற சந்திரனைநோக்கி நீ தினமு மீண்டு மீண்டும் மெலிந்து வெள்குகின்றுயே, எங்கள் சானகியார்முகம்போல இப்போது நன்றாகத் தோன்றுகின்றுயே யென்பான், நிலவே போலும் பரந்த கீர்த்தியையுடைய உன்குலத்துக் காணியாகியபழிவந்ததே என்பதற்கு நாணங்கொண்டு நாடுகடந்து நடந்துபோனுனே ஆகாயத்திற்செல்லும் சந்திரனென்றுஞ்சொல்லுவான். பின்னும்தன்னைச்சுட்ட கங்குற்போதோகொடியதென்றுவருந்துகின்ற இராகவனே சனியோடு சூரியனையுங் கட்டி இராவணன் சிறையிட்டானே வென்று நினைப்பான். சானகியாரோ தோன்றமாட்டாரெனிற் கொடியகாரிருளாகிய கற்பகாலம்போய் முடிந்தால் இக்கடல் சூழ்ந்த வுலகமெல்லா முடியுமென்றே நினைப்பான், தீமைகளைச் செம்மையானதவத்தோரடைய உலகத்தை வருத்தி யுயிர்களை யுண்டுழல்கின்ற பாவிகள் வலியாரேயாக வாழ்வாரென்றால் அறத்தினல் பயன்யாதென்பான். தக்ஷணுமூர்த்தங்கொண்ட பரமசிவனது கோபத்தால் இழந்த உடம்பையும் பழந்துயாத்திற்குப் பரியும் தன்மையால்வன்மையொன்றுகிடைத்தாலே முடியுமென்றுஇரகுவீரன்மேலெய்யப்பூங்கணைகொண்டுகருப்புவில்லால்வெற்றிகொள்கின்றமன்மதனும் எண்ணியிருந்தான். நீலநிறங்கொண்ட இறைவனது உந்தித் தாமரைப் பூவிற்றேன்றியநான்முகக்கடவுளாகிய பிரமன்முடிகின்ற கற்பாந்த காலம்போல கங்குலாகியஇராத்திரிகாலம் கழிந்துவிட்டது.இப்படி இராக்காலம்கழிந்துபோகையிலே, வெள்ளம்பரந்த பாற்கடலில் விரும்பும் துயிலைவெறுத்து வண்டுகள் மொய்க்கின்ற தேன் மணங் கமழுகின்ற மலர்மாலையணிந்த குழலையுடைய சானகியாரது கற்பாகிய கடலிலே படிகின்ற இரகுவீரனுக்குப் பறவைகளும் சத்தித்துக் கொண்டிருந்தன, சோலைகளு மொழியாத வோசைகொண்டிருந்தன, நீருமொலி நீங்காதிருந்தது. சானகியாரது தோற்றம்தன்னுள்ளத்தே தோன்றுவதனல் அவனுக்கு உயிர்வருந்தும் வகையுமுண்டோ; இதுகிடக்க;

மயிலும் பெடையுமுடனேதிரியவும்,மானும்கலையுமருவி வரவும்; பிடியும் களிறும்வந்து திரிவதைப் பார்க்கின்ற இரகுநாயகன் குயிலையும் கரும்பையும் தேனையும் புள்ளாங்குழலையும் யாழையும் பாகையும் அமுதையும் சுவையிற் பழித்த மொழியையுடைய சானகியாரைப்பிரிந்ததனல் வருந்திக்கொண்டிருந்தான். இவ்வாறு நடக்க, இரவுகழியும் வரையிலும் கிளிபோலு மொழியையுடைய சானகியாரது சொல்லைக் கேளாத இராமனைநோக்கி முன்னுளில் செந்தாமரை மலரிலோதுங்கும் அன்னம்போல்வாராகிய அன்னையாரிலர்,

கானடைத்த செந்தாமரைமலரை நன்றாகப் பாருமென்று அம்மலரையவிழ்த்துக் காட்டுவான்போலச் சூரியன் உதயமலையிற் றோன்றினன். கூந்தலையும் தனபாரத்தையும் அதன் றொழிலையு நோக்கியும் தன்றோளை நோக்கியு நாளைக் கழிக்கின்ற இரகுநாயகன் சோலையையும் அச்சோலையில் வசிக்கும் பறவைகளையும் பூங்கொம்பினமுகையும் இளமயிலின் சாயலையும் பார்ப்பான்; இப்படி பார்த்துக் கொண்டிருப்பதைக்கண்ட இளையவன் இராகவனைநோக்கி நாம் சானகியாரைத் தேடிப்போகாதிருப்பது தகுதியோவென்று சொல்ல இரகுநாயகனும் நாம் அவ்வரக்கன் கொண்டுபோய் வைத்திருக்குமிடத்தைத் தேடித் திரிவோமென்று பலகாடுகளையுங் கடந்து பதினெட்டு யோசனை தூரஞ் சென்றனர். இப்படித் தேடித்திரிந்தும் சானகியாரைக் காணமற் போயினர், சூரியனும் மேருவை வலங்கொள்ள மறைந்தான். பத்துத்திசையு மிருள் மூடிக்கொண்டது. இரகுவீரன் பளிங்குக் கற்பாறையைக்கண்டு அதிற் சயனித்துக்கொண்டு நீர்வேட்கை மிகுதியு முடையானாய் இளையவனைநோக்கி கானருந்த நீர்கொண்டுவர வேண்டுகின்றேனென்றான். இளையவனே எங்குந் தேடியு நீரைக்காணாமல் திரிகையில் அயோமுகியைக் கண்டான். அவளோ மந்திரத்திற் றடைபடாப் பாம்பேபோலத் தொடர்ந்து இவன் மன்மதனே வென்றெண்ணிக் காதலால் எதிரோகின்று என்னைவருத்தும்நோவா லிவனை யணைவேனோ அல்லது விழுங்குவேனோவென்றும், இவனைக் கேட்டுப்பார்ப்போம் இவனிணங்காவிட்டால் நமதுகுகைக்குக்கொண்டுபோய்க்கட்டித்தழுவுவோமென்றுந் திடங்கொண் டெதிரே நின்றாள். அவளை இளையவன் பார்த்து மூக்கு முலையுமிழந்த சூர்ப்பநகை, தாடகை முதலிய அரக்கியர் கூட்டத்தைச் சேர்ந்தவளே இவள்; இப்படிப்பட்ட செய்கையையுடைய அரக்கியோ நம்மை நாடிவரக்காரண மென்னவென்று நீயாரடி! இங்கேவந்தா யென்றான். அதைக்கேட்ட அயோமுகி நாணமல் ஊசல் வடம்போல மனமுடையாளாய் உன்னிடத்தே காதல்கொண்டுவந்த அயோமுகி என்பவள்நான், இன்னுமொருவரையும்விரும்பாத என்னையணைந்தூஎன்னுயிரைத் தரவேண்டுமென்றாள். தன்னிடத்தே இவ்வாறு சொல்லிய அயோமுகியை நோக்கி இளையவன் கண்சிவந்து இவ்வகையான சொல்லை வாயினாற் சொல்வையேயானால் உன்னுடம்பை என்பாணத்தாற் கூறிடுவே னென்றான்; இளையவன் சொன்னதைக்கேட்ட அயோமுகி கோபங் கொள்ளாமலே தன்மேற் கைகளை யஞ்சலியமைத்து என்னுயிர் கொள்ளப்பெற்றால்இன்றுநான்பிறந்ததனலாகிய பயன் பெற்றேனவேன், நீர் நீர்வேண்டித்திரிகின்றீர், அழகியகையையமைத்து என்னை யஞ்சவேண்டா மென்றால் கங்கையின் நீரையேனும் கொண்டுவந்து கொடுக்கின்றேனென்றாள். சுமித்திரைசிங்கம் அதைக்கேட்டுப் பொறாது நான் உன்காது மூக்கு மரிவதற்கு முன்னமே நீயோடிப்போய்ப்பிழை யென்றான்; அயோமுகியும் இமைக்காமனின்று இவனை நாமெடுத்துக்கொண்டு போய்க் குகையிலடைத்தாற் இவன்கோபமகன்றபினுடன்படுவானென்று சிறிதுதூரஞ் சென்று மோகனமந்திர முச்சரித்துக்கொண்டு சந்திரனோடு செல்லுமேகம் போற் கைக்கொண்டுசென்றாள். இதுகிடக்க;

இப்பால் நீர்வேட்கைக்காக நீர் கொண்ரச்சென்ற தம்பி வாராமையை நோக்கி இரகுநாயகன் இக்காட்டில்நீரில்லாமையாலோ? வேறென்னநடந்தோ? அவன்விரைந்து வாராதிருக்கின்றான்; இது என்ன? அங்கேசானகியையெடுத்துக்கொண்டு போன அரக்கரோடு சண்டை நடக்கின்றதோ! அல்லது நமது தம்பியையும் அவ்விராவணன் கைக்கொண்டு போனானோ! விதிகூட்ட அக்கொடியவன் தீச்செயலாற் கொலையுண்டானோ! நான் சானகியில்லாது வருந்துவது நோக்கித் தன்னாவி யிழந்தானோ! என்னருமையான உயிர் போன்றவனே! நீயுமொளித்துக் கொண்டாயோ! நீ பிழைசெய்தமை மிகக் கொடிது! இதையுலகமுங் கொள்ளமாட்டாதே! உன்னாலே என் தந்தை யிறந்தமையும் தாய்மாரையும் சானகியையும் பிரிந்தமையு மறந்திருக்கின்றேனே! இதுவரையிலும் சானகியாரைத்தேடி வருந்துவதிலே முயன்றேன், இனியுன்னையுந் தேடிவருந்த நிரப்பிவிட்டாயே! நானோ இன்றே சாகாதொழியேன், நம்மவரோ இறவாதொழியார், உன்சுற்றத்தாரை யெல்லாங் கொல்லச் சமைந்தாயே! இதுவுங் குணக்கேடல்லவோ! மாந்தாதா முதலிய அரசர்களெல்லாந் தருமநெறிதவறாதவர்களாயிருந்தார்களே; அவர்கள்சந்ததிக்குஅரசனாக மகுடாபிஷேகஞ்செய்ததைத் தவிர்ந்தல்லாமலுறவினரையும் விட்டுவந்த என்னுடனே நீயிவ்வளதூரம் வந்தும் இப்போதென்னை விட்டுப்பிரிந்துபோகலாமோ! என்று சொல்லி வருத்தப்பட்டுத் தம்பி தம்பியென்று பரதவித்துத் தேடிக்கொண்டே வாடிச்சோர்ந்து மதிமயங்கி தருமங்கைகூடுவதாயிருந்து நான் பிறப்பதாயின் அவனுக்குத் தமையனாகவேவந்து பிறக்கவேண்டுமென்று தன்னுடைய வுயிரைத்துறக்க நினைத்து உறையினின்றும் வாளைக்கழற்றுஞ் சமையத்தில் அயோமுகியினது மோகனமந்திரத்தினின்றும் தான் பெயர்ந்து அவளைப்பிடித்து மூக்கையரிய அவள் அழும் பேரோசை தன்செவியிற்பட்டு இது அரக்கியினது குரலாகவே தோன்றுவதாகக்கண்டு தன்வில்லையெடுத்து வளைத்து ஆக்கினேயமந்திரம் பிரயோகிக்க அவ்விருளும் பகற்போதாகவே தோன்றியது. பின்னை விரைந்துநடந்து தம்பியையெதிர்ந்தான். அதைக் கண்ட இளையவனோ அண்ணா! வருந்தவேண்டாம் வருந்தவேண்டாம்! இதோ வந்தேன்வந்தேனென்று இழந்தகண் மீண்டும் வந்தாற்போலத் தாசரதியை வந்தடைந்தான்.

தன்னைப்பிரிந்த தம்பியைக்கண்டதாரசதி அவனைத்தழுவி உச்சிமோந்து முத்தமிட்டுத் தன்கண்ணீராட்டி நடந்தவரலாறென்னவென்றுகேட்க, இளையவன் அயோமுகி வந்ததும் அவள்தன்னைக்கொண்டு சென்றதும் அவளைத்தான் நாசியரிந்தது மொன்று மொழியாமற்சொல்ல அவள்கைக்கொண்டுசென்றமைக்கு மனம் வருந்தமும் நாசியரிந்து மீண்டமைக்கு மனமகிழ்ச்சியுங்கொண்டு தம்பியை நோக்கி மும்மைப்பெருந்தேவரும் உலகமூன்றும் என்னை வெல்ல வல்லரோ! எனக்குப் படைத்துணையாக நீயிருக்க அவனும் வேண்டுமோ! பிரிபவரெல்லாம பிரியட்டும், எனக்கு வருந்துன்பமெல்லாம் வந்தேதீரட்டும், அவையெல்லா முன்னாலே நீங்குமல்லது எனக்குத் துன்பமென்பது நேருமோ! என்று சொல்லிவிட்டுப் பின்னுந்தம்பி அவளைவென்று மீண்டேனென்

ரூயே! அவளைக் கொல்லாமல் விட்டாய்போலுமென்று இரகுவீரன் கேட்க, இளையவனும் அவளை நான் மூக்கு முலை காதென்னும் இவ்வுறுப்புக்களையரிந்து களைந்தேன், அப்போதவளிட்ட பேரோசையே தேவரீருக்குக்கேட்டதென்று தன்னிருகரத்தையு முச்சிமேல் அஞ்சலியாக வைத்துச் சொன்னான். இப்படிப்பட்ட விருளில் உன்னைக்கொல்லத் தொடர்ந்தாளையும் நாசி முதலியவை யே கொய்து நீக்கினாய்! மனுமுதலிய பெரியோர் வழியைப் பெருமைப்படுத் தவெபிறந்தபெரியோனேயென்று மார்போடிறுகத்தழுவித் தம்பியுடன்நடந்து சென்று விடிவை நோக்கியே யெண்ணி, அங்கேயொருமலையிற்றங்கி யிருந்து தம்பி கால்பிடிக்கச் சானகியைப்பிரிந்த வருத்தத்தால் சாய்ந்தான். இவ்வாறு வருந்துவதைக்கண்டு பொறாது வருத்தந் தணிப்பான்போலக் கீழ்த்திசையிற் சூரியனு முதயமானான்.

அயோமுகிப் படலம்

முற்றிற்று.

---

## கவந்தப்படலம்.

சானகியாரைத் தேடிவருந்திப் பறவைகளும் விடியற்காலத்திலேயழுவன போலத்தோன்ற இராமலக்ஷ்மணரிருவரும் தேடி இருபத்தஞ்சு யோசனை தூர நடந்துசென்றனர். சூரியனும் உச்சியில்வந்தான், அப்போதவ்விருவரும் கவந்தன் வசிக்கும் வனத்தையடைந்தனர், யானைமுதல் எறும்பு கடையான எல்லாஉயிர்களும் கெட்டொழிந்தன, அவைகள்கிட்டப் பயப்படுகின்றனவாகிப் புகிக்கக்கூடாத வலையிற்பட்ட தன்மையவாயிருக்கும். அங்கேயிருந்த உயிர்கள் கொடுங்கோன்மன்னன்வாழுநாட்டில்வசிக்கும்குடிகளேபோலப்பயந் தோடிப்போய் மயங்குமியல்பின, பெரியமலைகளுருள்வனபோலப் பெருமரங் களுருண்டுவருவனவும் காட்டாறுகள் கால்கள் பறிந்துவருவனவும், மேலுள்ள திசையினோடுவெளியையுமறைத்துச்சூல்கொண்டமேகங்கள்சுருண்டுவீழ்வன வும் பார்த்துப்பின் நாற்கடலும் கற்பகத்தத்திற்றோன்றுங்காற்றேபோல வுலகத் திற்காற்றுமோதிச் சூரியன்திக்குமாறிவந்திடுங்குவனபோலத் திசையனைத்தும் சுற்றியகையிலே இராமனும் இளையவனும்புகுந்தனர். அவர்கள் சானகியைக் கைக்கொண்டுசென்ற அரக்கர்சேனை நம்மைவந்து சூழ்ந்துகொண்டதென்று களித்துச் சக்கரவாளகிரியேவந்து நெருங்கியதென்னும்படியான அம்மதிற் குள்ளாயினர். இப்படியிருக்க, இரகுநாயகன் இளையவனைப்பார்த்து சானகி யைக்கவர்ந்துபோன இராவணன்வாழுநகரமுமிவ்வளவினதாகும், ஆகையால் நமது பெருந்துயரமு மொழிந்ததென்றேதுணி; இது அரக்கருடைய சேனை யானால் முரசொலியும் சங்கொலியும் பெற்றிருக்கக்காணவில்லையே, இதனால் இது வேறொன்றெனத்துணிகின்றேனென்றான். இச்சொற்கேட்ட இளையவன் தாசரதியை நோக்கி இதை நோக்குமிடத்துத் தேவர்க ளமுதெழக்கடைந்த போது அடைகயிறாயிருந்த வாசுகியாவது, அல்லது வேறொருபாம்பாவது வாலொடுதலையினால்வளைத் துள்ளேகொள்ளத்தொடங்கியதுபோ லிருக்கின்ற

தென்றான். இவ்வாறு தம்பிசொல்லக்கேட் டவனுடன் இராகவனு நன்றென்று நடந்து இரண்டுயோசனை யுள்ளேபுகுந்து மலைநின்றாற்போலிருந்த கவந்தனைக் கண்டனர். மேருமலையானது இரண்டுசூரியனைத் தன்பா லமைத்துக் கொண் டாற்போலும் கோபக்கண்ணையும் பல்லிற்குக்கீழிரண்டுகாதம் அமைந்தவயிற் றினையுமுடையகடல்போன்றவாயையுடையவனும்தேவரோடவுணர்கள் சந்தி ரனைத் தாழியாவும் மந்தரகிரியை மத்தாகவும் வாசுகியைக்கயிறாகவும்கொண்டு கடைந்தபோதமைந்த விடம்போன்ற கையையுடையானும், கருமான் உலைக் கூடத்துண்டாம் புகைபோலப் புகையுண்டாகு மூக்கையுடையானும், கடலைப் பருகும் அக்கினிதேவனது சிகைக்கொழுந்தெனப்படும் நாவினையுடையானும், வேதநூல்முதலாகிய ஆப்தகலைகளிற் கூறப்படாத பெரும்பாதகமே திரண் டுயிர்படைத்தாலொத்த பண்பினையுடையானும், சூரிய சந்திரரை விழுங்கும் இராகுகேதுக்கள் செய்கை இதுவென்னப்படும் செவித்தொளை யுடையானும், எல்லாவுயிரையும் கைக்கொண்டுசெல்லும் தன்மையால் நமனது கோட்டை வாயிலேபோன்ற வாயையுடையானும், கடலோசையேபோன்ற குரலையுடை யானும், ஆலவிடமேதிரண்டாலொத்த தேகமுடையானும், கள்ளமாமாயப்பிரா னது சுதரிசனப்படையால் தலைநீங்கியகாலநேமியென்னும் அரக்கனேபோலக் கவந்தத் தோற்றமுடையானுமாய், காற்றால்மோதப்பட்டு முன்னேசிகரமிழந்த மேருமலைபோலும் விளங்கிக்கொண்டிருக்கும் அந்தக் கவந்தனைநன்றாகக்கண்டு உலகமுழுதுமடங்கும் பிளந்த வாயினைப்பார்த்து இது அரக்கரது நகரவாயி லோவென்று இருவரும் நினைந்தனர். பின்பு இளையவன் நன்றாகச்சிந்தித்து அண்ணா! இதுபூதமேயாம், கடல்சூழ்ந்தபூமியினிடமோ அரிதென்றுசொல்லப் பரந்த மெய்யையுடையது, பூமியிடம் வலம்வரப் பரந்த கையையுடையது, பூமி யை முன்னாளிலிடந்தெடுத்த ஆதிவராகம்போலு மாற்றலையுடையானே! இக் கொடியபூதநம்மைக்கவர்ந்துவியப்பெய்துக்கொள்ளத்தொடங்கியிருக்கின்றது, நாமென்செய்வது? சானகியும்பிரிந்தாள், நமது பிதாவோ இறந்துபட்டனன், நானோ பழிக்காளாய் உடல்கொண்டுதிரிய விரும்பேன், இதற்குணவாய்விடு கிறேன், நீபிழைத்துப்போ, என்னைப் பெற்றதாய்மார்கள்வருந்தவும் என்தம்பி துன்பப்படவும் பெரியோரெல்லாம் வருத்தப்படவும் பழிக்குச்சார்பாயிருப்ப தைப்பார்க்கிலும் என்னுயிரைத்துறப்பதேநலம், இல்லாவிட்டால்வந்திருக்கும் பழி நீங்கிவிடுமோ! நீர் தாரைநீர்வாரித்தளித்த சானகியோஅரக்கர் மனையி லிருக்கின்றாளெனச்சொல்லித்தூணியைச்சுமந்தும்வில்லைச்சுமந்தும் மிதிலைநா ட்டரசனிடத்தே போகலாமோ! சானகியொருத்தியையேகாவாதொழிந்தேன், தம்பிவிரும்பி யளிக்குங்காய்கனிகளை நுகர்ந்து காலங்கழிக்கின்றேன் என் னுஞ் சொல் நிகழ்வதைப் பார்க்கிலும் இறந்துபடுவதே நல்லதென்று இரகு நாயகன் சொல்லிமுடித்தான். அதைக்கேட்ட இளையவனோ தேவரீர் பின்னே வந்தபிறகு இத்துன்பம்வந்து மூண்டால் முன்னே என்னுருயிரைத்துறக்காமல் மீண்டேபோவது நன்றென்று சொன்னால் என்னடிமைத்தொழில் நன்றாயிருக் கின்றதே, வீரரெனப்படுவோர் துன்பத்தை அறக்கடிந்தவரேயன்றோ! பகை வரேபோலத் தன்தாய் தந்தை தமையன் என்னும் தன்மையருக்கு முன்னே

சாவானுயின் புகழ் நீங்குவதல்லவோ, சானகியாருடன் தேவரீர்மலைகளடர்ந்த காட்டில் தங்கியிருக்கக் கண்டோமாகில் அபலேகின்று காத்துக்கொண்டிருக் கலானேன், இது என்னேயென்றவர்முன்னே யவளைவிட்டு நானுந் தன்னந் தனியே வந்தேனென்பதைப்பார்க்கிலும் வேறு தவறுண்டோ; என் தாயாகிய சுமித்திரையோ தேவரீர் ஏவிய ஏவற்றொழிலனைத்தும் பின்னிடாமற் செய்து வரவேண்டுகிறேன், அவர்களுக் கழிவு நேர்ந்தால் அவர்களிறந்து படுவதற்கு முன்னே நீ இறக்கவேண்டுமென்றாள். அவள்சொல்லுக்குப்பழுதுவாராமல் நடப் பதனுலன்றோவாய்மை யெனப்படுவதுமிலைபெற்றிருக்கும். என்னையீன்ற சுமித் திரையும் யானுமெவ்விதமு மும்மைக்கு மும்மைப்பெற்றோருக்கு மனக்கோணலில் லாமல் குற்றேவல்செய்துவருகிறோம், நல்லவர்விரும்ப மிகவும் நிற்கும் சொல் லைப்பெற்றாலல்லாமல் உயிரைவிரும்பித்துறக்கமாட்டேன்! எல்லாப்பொருள்கீ ளும்முடிந்து மும்மைப்பெருந்தேவருமழியுங்காலத்தும் அழியாதவனே! யானை களைத்தின்று இக்காட்டிலே வாழும் பூதத்தாலே நீ கொல்லப்படுவாயோ! இதைக்கேட்டவரும்கொள்ளமாட்டார்கள், கண்டவரும்விரும்பார்கள், போர் செய்து சானகியார்வருத்தப்படாத வண்ண மீட்டாரென்னும் பெரும்புகழ் கொள்ளாமல் இறந்தாரென்றபிறகும் வசையிருக்கிறதல்லவோ! இன்றுதாமதப் படாமல் இப்பூதம் பிணித்தகையையும் பிலம்போன்ற வாயையும் தவறாமல் துணித்துத் துன்ப நீங்கவேண்டுமென்று சொல்லிக்கொண்டே இளையவன் இரகுவீரன் முன்னேநடக்கவும் இராமன் இளையவன்முன்னேநடக்கவும் இவர் களைத்தடுப்பார் பிறரில்லாமல் தேவர்கள்கண்டு அழுதனர். இவ்வாறிருவரும் அணுகக்கண்ட கவந்தன் வினையால் வந்தடைந்த வீரர்களே! நீங்கள் யாரென் றுகேட்க, இருவரும் கண் இமையாமற் கோபித்து நின்றனர். அதைக்கண்ட கவந்தன் இவர்களழிவாருமல்லர், என்னை இகழ்ந்தனரென்று கோபங்கொண்டு விழுங்குவேனென மோதிய அவனது தோள்களை இருவரும் உடைவாளால் வெட்டியெறிந்தனர், இறைவன் கைப்பரிசம் பட்டமையால் தனக்கு முன் னுண்டான தன்சாபமுழுது நீங்கி ஆகாயத்தில் தெய்வவுருவங்கொண்டுநின்று பிரமன்முதலிய தேவர்கட்கும் அறிவின்கண் விளங்கின்றவன், இவ்விராம னென்று தன் கருத்திலே தெளிந்து அளவைபடாத அவன் குணாதிசயங்களை யெடுத்துப் புகழத்தொடங்கினன்.

* ஈன்றவனோ வெப்பொருளு மெல்லைதீர் நல்லறத்தின்
சான்றவனோ தேவர் தவத்தின் றனிப்பயனோ
மூன்று கவடாய் முளைத்தெழுந்த மூலமோ
தோன்றி யிருவினையேன் சாபத்திடர் துடைத்தாய்.

* * * * *

மாயப் பிறவி மயனீக்கி மாசிலாக்
காயத்தை நல்கித் துயரின் கரையேற்றிப்
பேயொத்தேன் பேதைப் பிணக்கறுத்த வெம்பெருமான்
ஈயொத்தே னென்ன நலனிழைத்தே னென்றான்.

கவந்தன் பலதுதிகளை இரகுவீரனைநோக்கிச் சொல்லிக்கொண்டே இவனை யுள்ளமறியக்கூறுவனேயானால் தேவகாரிய முடிவுபெறுமென்று நினைந்து தன் தாய்ப்பசுவைக்கண்ட கன்றைத்து விம்மியழுதுகொண்டு தான் நேரே நின்றான். இப்படி நின்றவனைப்பார்த்து நம்மாற்கொல்லப்பட்ட இவன்வேறோர் பெருமித முடையானாய்த் தெய்வவுருப்பெற்று ஆகாயத்தில் நமக்கு நேரேநிற்கின்றான்; நீஇவனையாரென்றுகேளென, அதற்கவன்சொல்வானாயினன். வீரனே! நான் தனுவென்னும் பெயருள்ள கந்தருவன், சாபத்தாலிக் கடையான பிறவி கொண்டிருந்தேன், என்மேல் உங்கள் கைப்பரிசம் பட்டமையால் முன்னை வடிவம் பெறலானேன், எந்தை தந்தை தந்தையாயிருக்கு மிறைவனே! வில்லாளிகளாயுள்ள உங்களைக் காப்பவரில்லையேனும் சானகியாரைத் தேடத் தருவதற்குக் கடலைப் புணைகொண்டு நீந்தினாலன்றி முடியாததேபோற் பகைவரை வெல்லுவது துணைகொண்டேயாகவேண்டும்; உமதாண்மையோ சொல்லுந் தரமல்ல, பிரமசிருட்டியிலகப்பட்ட எப்பொருளையுமழிப்பதற்கான இறைவனும் பல பூதகணங்களுடன் வசித்துக்கொண்டிருப்பதை நீங்களுமறிவீர்கள். இது அறத்துறை யென்றெண்ணிக் கொடியவரைச் சேராது தக்காரைச்சேர்ந்து சவரியைக்கண்டு அவள் சொன்னவழியே சென்று இருசிய சிருங்க மலையிலேறிச் சுக்கிரீவனை நட்புக்கொண்டு சானகியாரைத் தேடுவதே நலமென்றனர்; அதுவே தக்கதென் றிருவரும் சொல்ல, அவனு மவர்களிடம்விடைபெற்றுச்சென்றனன். இருவரும் காடு மலைமுதலியவைகடந்து மதங்காச்சிரம மடைந்தனர்.

கவந்தன்படலம்.

முற்றிற்று.

---

## சவரிபிறப்பு நீங்குபடலம்.

வேண்டிய வேண்டியாங்களிக்கும் கற்பக தருவேபோல உண்ணக் கனிகள் குறையாத சோலைகள் இன்பமேயன்றித் துன்பங்களில்லையாக அக்காடு புண்ணியம்புரிந்தோர் வசிக்கும் துறக்கநாட்டை யொத்திருக்கும். அப்படிப் பட்டவிடத்தைத் தனக்கு வசிக்குமிடமாகப்பெற்று அங்கே யிருந்துகொண்டு அளவில்லாத காலம் தன்னைநினைந்துதவஞ்செய்யும் சவரியைக்கண்டு அவளுக்கின்சொற்கூறிச்சுகமாக விருக்கின்றாயோவென்றான். அதைக்கேட்டசவரியும் அன்பாகச்சிராமபிரானைத் துதித்து வணங்கி யானந்தக் கண்ணீர் பொழிந்து என் மாயப் பாசமாண்டது, பலகாலமு நான்செய்த பெருந்தவத்தால் என் பிறவிவேரறுத்தேனென்று சீராமனுக்கு வேண்டுவனவற்றைக் கொண்டுவந்து கொடுக்க அவனும் நல்விருந்தாக வமைந்தான். அந்தச் சமையத்தில் உருத்திரனும் பிரமனும் இந்திரன் முதலிய மற்றதேவரும் நெருங்கிவந்து சவரியைப்பார்த்து, உன்னுடைய குற்றமற்ற தவமோ இப்போதுபூரணமாய் விட்டது, சீராமனுக்கான பூசனையைவிரும்பிச்செய்து எம்மிடத்திலேவரவேண்டுகின்றோமென்றனர். அவர்கள் போனபின்பு சவரியோ இரவிகுலதிலகனை நோக்கி

இவ்விடத்தில் தேவரீர் எழுந்தருளியதனால் என்தவமோ பலித்துவிட்டதென்று சொல்லினாள். அவ்வருந்தவத்தியைப்பார்த்து தாசரதி எம்பாலன்பாக நாங்கள்வந்தவழி வருத்தநீக்கினை நீவாழியென்றான். அவள் இராகவனையும் தம்பியையும்பார்த்துச் சூரியகுமாரனாகியசுக்கிரீவன்வசிக்கும் இருசிய சிருங்க மலைக்குப் போம்வழியை நன்றாக எடுத்துச்சொல்ல, மேலோரெடுத்துக் கூறும் மெய்ம்மைப்பொருளேபோல அவள்சொன்னதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்தனர். பின்பவள்தாளிது வரையிலும்செய்தயோகப் பயிற்சியாலே தன்னுடம்பை நீங்கிச் சிந்தையுமொழியுஞ் செல்லா நிலைமைத்தாகிய அந்தமிலின்பத்தழிவில் வீட்டையடைந்தாள். அதன்பின்பு அவ்விருவரும் அதைக்கண்டு மகிழ்ந்து அவள்சொன்னவழியே தொடர்ந்துபோய்க் காடுமலை வனம் வனாந்திரங்களைக்கடந்து தன்பால்வந்து நீராடுவோருக்குப் பாவத்தை நீக்கிவிடும் புண்ணியம்பழுத்தாலொத்த பம்பை யென்னும் பொய்கையையடைந்தனர்.

சவரிபிறப்பு நீங்குபடலம்

முற்றிற்று.

---

மூன்றாவது

ஆரணியகாண்டம் - முற்றுப்பெற்றது.

---

உ

ஸ்ரீராமஜெயம்.

# கிட்கிந்தாகாண்டம்.

## பம்பைப்படலம்.

### காப்பு.

மூன்றுரு வெனக்குண மும்மை யாமுதற்
றோன்றுரு வெவையுமிம் முதலைச் சொல்லுதற்
கேன்றுரு வமைந்தவு மிடையினின்றவர்
சான்றுரு வுணர்வினுக் குவந்த தாயினுன்,

அப்பம்பையென்னும் பொய்கை வண்டுகள் நெருங்கு மலரையுடையது, கோபக்கண்ணையுடைய வேங்கைகள் படிவது, தெளிவு நிரம்பியது, மின்னல் படிகிற மேகம்படியக் கடல்நீர் வானிற்படிந் துலகிற் கிடக்கின்ற மாட்சிமையுடையது, பிளந்த நுண்ணிய படிகக் கல்லேபோலத் தெளிந்த நீர் மணிகள் படர்ந்த பித்திகையிற் சேர்ந்துழித் தன்னிறத்தை யடைவதனுல் அறிந்துமுணர்வில்லாருள்ளமே போல்வதும்; மணலையுடைய தடாகங்களில் பவளம் போலுங் காலையுடைய அரசன்னமும் பேடையும் காண்பதனுல் நெடிய வானில் விளங்கும் நாள்களுடனே யுவாமதியளவில்லாதன தோன்றுவன போல்வதும்; கடல்சூழ்ந்த உலகத்தையும் உயிர்களையும் வேதபாரகரையும் விதிக்கத் தொடங்கிய காலத்தில் குளிர்ந்த கடலையும் வெற்றிகொள்ள விசுவாமித்திரமுனிவனுல் படைக்கப்பட்ட கடலெனப்படுவதும்; நாகர் வசிக்குமிடமெனத் தோன்றுவதாயினும் மிகவாழ்ந்து கற்பகத் தருவேபோன்ற அத்தெய்வப் புலவர்களால் நாட்டப்பட்ட சொற்பொருளேபோலும் தோன்றத் தருவதும்; அன்னமே முதலிய பலபறவைகள் அங்கே நெருங்கிக்கூவ அவை இன்னது கூவிய தெனத்தோன்றலாகாமையினுல் அயோத்தி நகரத்தின் ஆவணம்போல விளங்குவதும்; அரதன லயமெனச் சொல்லக்கிடந்த தாயினும் நல்லுணர்வைப் பேதைமை மறைத்தாற்போலப் பசிய இலைகள் அடர்ந்திருப்பதும்; சானகியிருந்த இடங்காண்ப தரிதாகையால் நம் இரகுவீரன்திருமுகத்தை நோக்குவதோகன்றன்று, நாம் துணிந்துஇறந்து படுவதேநலமென அன்னங்களெரிபுகுவனபோல வண்டுகள் நெருங்கிய தாமரை மலரிலொளித்துக் கொள்வதும்;நம்மை அச்சானகியினுடைய கண்ணினமேயென்று கருதியொருக்காலும் கண்ணீர்விடாத இரகுவீரன் கண்ணீர் விடுவானென்று ஒளித்துக்கொள்ளும்மீன்களையுடையதும்;மூங்கிலிலுண்டாகுமுத்துகளையும்யானைக் கோட்டிற்றேன்று முத்துகளையு மணியுடன் வாரிக்கொண்டு இழைகள் நெரு

ங்கியதேபோல் அருவியாறடைவதனால் மாதர்கள் செய்துகொண்ட அலங்காரமே போலத் தோன்றுவதும்; யானைகள் பொதுவாக நீரைக் கலக்குவதனால் இரவிலெதிர்ந்த கலவிப்போரில் உடல்வருந்திய விலைமகளிர் வடிவமேபோல வருந்து மெய்யையுடையதும், ஆகாய மளாவிய மலையினின்றும் தேனும் யானையின்மத மழையு நெருங்கிப் பாய்வதனால் அந்நீரையுண்டார் பெருங்களிபெய்துவது நோக்கி மாதர்களி னிதழேபோலத் தோன்றுவதும், வடமொழியே முதலான பலபாடையும் வல்லரல்லரான மூடர்கள் ஒருவழி புகுந்தாற்போன்று அறியப்படாத வச்சொற்களுந்தோன்றுதனவாய்ச் சோர்வில்லாமலே பறவைகள்தோன்றுவதும்; தன்னுயிரெனத்தழுவிக்கொண்டிருந்தபெடையைத் தன்னுயிர் பிரிந்தாற்போலும் பிரிந்த அன்னம் அரமகளிர் காற்சிலம்போசைகேட்டு அதைத் தேனினைச் சிந்தும் மழலைச்சொல்லேபோலக் கேட்பதும்; மலையினின்றும் ஈர்த்திழிகின்ற ஆற்றிலிடுகின்ற வாசனைகமழும் அகில் சந்தனமுதலியவற்றின்சேற்றினாலாகியநீர்போலவிளங்கும் தன்மையதுமாகிய அத்தடாகத்தைக் கண்டான்.

மான்போன்ற கண்ணையுடையார் இதழ்போன்ற செவ்வாம்பலுள்ள பொய்கையில்தேனையுண்ணும் மாதரேபோல மயக்கமடையுமகரமீன்கொக்குகள்துன்பநீங்கியபிறப்பினோடிறப்பென்றுசொல்லக் கடிதுமீனோடு முழுகியெழுவன கொக்குகள் கவளங்கொள்ளுகின்ற யானைபோன்ற சிராமனுக்குச் சானகியாரையும் கொடுத்தோமில்லை, நம்மாலான காரியத்தையேனும் செய்வோமென்று அன்னங்கள் நடையைக் காட்டுவன, குவளை மலர் கண்ணைக்காட்டுவன, இதழைக் குமுதமலர் காட்டுவன, அணிந்த ஆபரணங்களில் விளங்குமொளிபுறத்தேதோன்ற என்றும் அரமகளிர் அங்கே நீராடுவார்கள், செய்கையன்னங்கள் அவ்வாபரணங்களை யேந்திக்கொண்டிருக்கும் நிழல் இடையிடையே வீசுவதனால் படிகம்போலும் நீர் புகுந்ததென்றே பொங்கி மீன் கூட்டமேயஞ்சும், மாமரத்தில் இருஞ்சிறகைக்கொக்குகள் புலர்த்தும், அத்தடாகத்தின் ஒருபாகத்தில் நீலமணி நிழலெறிப்பதனாலும், ஒருபாகத்தில் பதுமராகம் ஒளிபரப்புவதனாலும் இரவும் பகலுமெனத் தோன்றும் கரையையுடைமையால் மாதர்முலையேபோலச் சக்கரவாகப் பறவை விளங்கும், வாள்போல வாளைமீன்கள் பாயவும், அலைகளில் நீர்நாய்கள் உருள்வன குழைக்கூத்தரேபோலத் தோன்றும். தேரைகள் சத்திப்பன அதைப் புகழ்வதுபோலத்தோன்றும். அப்படிப்பட்ட தடாகத்தைக்கண்டு அன்னம் குவளைமுதலியவற்றை நோக்கிக்கொண்டே தன்னைவிட்டுநீங்கிய சானகியார் பிரிவைக்குறித்துள்ளங் கலங்கி யுணர்வொழியத் தன்னந்தனியே இரகுநாயகன் புலம்பலாயினான்.

சக்கரவாகப் பட்சிகளே! அன்னங்களே! என்னைநீங்கிச்சிறிதும் தரியாத சீதை நடந்தாள் இல்லாவிட்டால் தளர்ந்துமோதும்தகுதியோ! வருந்துகின்ற உயிருக் கிரங்கினால் இசையல்லவோ! பிரியாதிருந்த எனக்கொரு சொல்லைச் சொன்னால் சண்டை விளையுமோ! என்றும்; தாமரைமலரும் குவளைமலரும் புண்ணினெரியும் நெஞ்சினை வருத்தாமலிருக்க மருந்தேபோலுதவப்பட்ட

பொய்கையே! கண்ணு முகமும் காட்டுகின்றனையே! வடிவத்தையு மொருகா லத்திற் காட்டாயோ! அப்படி கூடுமாயின் அதை யுதவாமலேஉலோபப்பட்ட வரும் உய்ந்தார்களோ! என்றும், குவளை கெண்டை ஆம்பல் அலை தாமரை வள்ளை வரால் ஆமை இவைகள் முறையே கண்ணும் வாயும் முகமும் காதும் கணைக்காலும் புறவடியுமாத்தோன்ற அவைகளை நோக்கி மருந்தேபோன்ற சானகியார்திருவுருவத்தை உங்களிற் கண்டேன், கொடியவரக்கன் கைக்கொண்டு செல்கையில் அவனுண்டுபோனனே அப்போதுசித்தியனவோவழியேனென்றும், மயிலே! அச்சானகியினுடையசாயலுக்கொதுங்கியுள்ளழிந்து கூடாதிங்கே, திரிவதுபோல நீயுமனம் குளிர்ந்தாயோ என்றும், அப்படி நீ தேடினும் நீ அவளை நன்றாக வழிவாய் மனமகிழ்ச்சி யுடனுடா நின்றாய் ஆயிரங்கண்ணையுடைய உனக்கொளிக்கும் வகையுமுண்டோ வென்றும், நாங்களடையவில்லையென்னு மொரு சொல்லையேனு மறிந்த வண்ணம் சொல்லுங்கோள். அன்னப் பேடைகளே! சிறிதும் பேசப்படாதா! அவருக்கேதாவது பிழையைச் செய்ததுண்டோ! நடை நீங்களழியச் செய்தாரோ நடுவிலாதவர் அவருடன் பகைகொண்டிருக்கின்றீர்களே! உங்களைப் பார்த்து மகிழுமென்னையும் கோபிப்பீரோ வென்றும், வண்டுகள் இசைபாடும் தாமரையே! என்பாலுமில்லை, அப்பாலு மிருப்பாரு மல்லர், விருப்ப மென்பாலுள்ள உன்னிடத்தே இல்லையென்றால் ஒளிக்கின்றவரோடு முறவுண்டாமோ வென்றும்; ஆம்பற்கயலே இருக்கும் செங்கிடையே! அவள் கனிவாயைப்போலத் தோன்றுகின்றாயே; அவ்வாய் தரும் அமுதையும் சொல்லையுந்தருவாயோவென்றும், வள்ளையே! நீ சானகியாரது காதேயல்லது வேறுவமையாக மாட்டாய், நீ பொன்னாலாகிய குண்டலமும்குழையும்முத்தினாலாகியதோடும் விலக்கிவந்திருக்கின்றாயே, நீசொல்லாம லிருந்தே நின்றுமன வருத்தஞ் செய்யலாமோ வென்றும், செம்பஞ் சூட்டிய காலாகிய பவளம்பூத்த பதுமவடியையுடைய சானகியே! நீ என்மனத்தாமரை வீட்டி லெப்போதும் வாசஞ்செய்து கொண்டிருப்பவளாம்; மேகம்போன்ற மலர்புனைந்த கூந்தலையுடைய அச்சானகி கண்ணேபோலும் அழகிய குவளை மலரோ! நஞ்சு பூத்தாற்போலும் விளங்குகின்றாய், என்னைக்கண்டுவருந்துவையோ என்றும் பெருமூச்செறிந்து நிற்கும் இரகுநாயகன் இவ்வண்ணம் புலம்பி வருந்திக்கொண்டே ஒருபுறத்தேகளிறு தன்பிடிக்குவாயில் நீரையளிப்பதுபார்த்துக்கொண்டிருந்தான். இவ்வாறு நின்றசிராமபிரானை அன்பென்னுமருமையான ஆபரணம் பூண்ட இளையபெருமாள் இறைவனே பொழுதுபட்டது; நீர் இத்தடாகத்தி னீராடி நுமதிசையென நீண்ட கள்ளமாமாயப்பிரானை வணங்க வேண்டுமே யென்றான். அதைக்கேட்ட இரகுநாயகன் அரிதாக நடந்து சென்று அத்தீர்த்தஞ்செய்த மாதவத்தினால் மதயானையு நாண நீராடினான்; அவ்வாறு நீராட்ட யர்ந்ததான் சானகியாரைப் பிரிந்த வருத்தத்தாலாகிய தீயால் உலையிற் காய்ந்தஇரும்பை நீரிலே தோய்த்தாற்போலும் விளங்கிற்று. இவ்வாறு அத்தீர்த்தத்தில் நீராடி அன்னமாய் அருமறையைப் பிரமனுக்குபதேசித்த ஆயிரமோலி ஆராவமுதனை வணங்கி அவன் சேவடிசென்னியிற் சூடி முற்றத்துறந்த முனிவர்கூட்டஞ்சேர்ந்துள்ள ஓர் சோலையினிடத்தேஎழுந்தரு

ளினன்; உடனே பொழுதும் பட்டது. அந்திவரவே சானகியார் பிரிவை யெ ண்ணி வருந்தும் இரகுநாயகன் சிந்தித்துத் தேயும்பொழுது வானிலுள்ள சந்தி ரனும் சூரியனைப்போல இருந்தது. இராத்திரி காலமாகவே மலர்களொடுங்கின, சோலையில் பறவைகளடங்கின, வண்டுகளும் பாடலொடுங்கின, கிளிகள் இலையி லொடுங்கின, மயில்கள் நடத்தை யொழிந்தன, குயில்கள் கூவுதலொழிந்தன; களிறுகள் பிளிறுத லொழிந்தன, மண்ணும் கண்ணுறங்கின. மலையும் கண்ணுறங்கின, இரவிற் பண்ணும் பாடா தொழிந்தன, பேய்களும் கண்ணுறங்கின, இரகுநாயகனே கண்ணுறங்காமலே யிருந்தான். மீண்டு முணர்வுகைவர இரவுநீங்கியது. கமலமலர்களுந்தலையெடுத்தோங்கின, கீழ்க் கடலின்கண் சூரியபகவானு முதயமானன். யாவருந்துயர் தீர்ந்தனர். இவ்வாறு காலையாகவே கடல்போன்ற சோலைகளையும் மலைதழுவும் காடுகளையும் கடந்து இரகுவீரனும் இளைய பெருமாளும் அமுத மொழியையுடைய சானகியாரைத் தேடித் திரிவாராயினர்.

பம்பைப் படலம்
முற்றிற்று.

---

## மராமரப்படலம்.

இராமலட்சுமண ரிருவரும் சவரிசொல்லிய வழியேசென்று இரிசிய சிரு ங்கமலையி லேறினர். அதையறிந்த மகாராசாவும்செய்வதறியாமேஇவர்பகை வர மென்றெண்ணி அம்மலை முழையிலோடிப் புகுந்தான். அவ்வாறு புகு ந்த அம்மகாராசாவாகிய சுக்கிரீவனும் வாயு புத்திரனகிய அனுமானை நோக்கி இதோ வருபவர் வாலியேவலால் வருபவரா யிருக்கின்றனர்; வில்லேந்திய மலைபோல விளங்குகின்றனர், இவர்கள் வரும்காரணமோ தெரியவில்லையே என்று சொல்லிச் சுக்கிரீவமகாராசனும் தன னருகிருந்த நீலன் மாருதி முத லான பேருடன் ஆலோசிக்கையில் அனுமான் சுக்கிரீவனைநோக்கி நானறிந்து வருகின்றேன், நீங்களிங்கிருமென்று சொல்லிவிட்டுத் தான்பிரமசரியவொழுக் கமேற்கொண்ட அந்தண ருருவங்கொண்டு ஒருமாச்செறிவி னிழலிலிருந்து கொண்டு இவர்கள் மும்மைப் பெருந்தேவராகிய முதன்மைப் பொருளா மென் றால் அவர்கள் மூவரோ, இவர்க ளிருவரன்றோ! உலகின்கணிவரை யொப்பா ருமிக்காரும் யாரிருக்கின்றனர்; இவர்க்கரிய பொருள் யாது? எதனல் இவர் நிலைமையையாமறிய வல்லேம்! சிந்தையில் சிறிதுதுயரநேர வருந்துகின்றாரோ னும், பிறரால் நோவடையத் தக்காரு மல்லர்; இவரோ வானவரு மல்லர், மானிட யாக்கையை யுடையராயிருக்கின்றனர்; சிந்தையிலோர் பொருடேடி வருந்துகின்றனர். தனமும் தருமமும் பெருமையு மிவரோயாம், கருமமும் பிறிதொன்றைக் கருதியேயன்று, நினைக்குமிடத்து அருமருந் தன்னதோர் பொருளை இடையி லிழந்தனர்போலத் தோன்றுகின்றது; அதை இருபுறமுந்

தேடி வருந்துகின்றனர். கோபமென்பதே யில்லாதவர், கருணையின் கடல்
போல்பவர், யாவருக்கு நன்மைசெய்வதே இயற்கைக் குணமாக வுடையவர்,
இந்திரனும் அஞ்சு நிலைமைபடைத்தவர், கூற்றுவனு மஞ்சத்தக்க சரிதமுடை
யவர், மன்மத னஞ்சும் பேரழகுகொண்ட திருவுருவ முடையவர், மறலியு
மஞ்சும் பராக்கிரம முடையவர். இவ்வகை யெல்லாம் பலபல வெண்ணிக்
கொண்டு அவ்விருவரையும் ஏறப்பார்த்து முன் பிரிந்தாரைப் பின்னுமெதிர்
கண்டாற் போலும் அன்பினா லுருகின்றவனாய்ச் சிங்கங்களும் யானைகளும்
தமதுகன்றைக் கண்டாற்போலு மனமுருகுகின்றன. பேய்களும் மன
வருத்தப் படுகின்றன; மயில்முதலிய பறவைகள் தஞ்சிறகைப் பந்தர்போ
லமைத்து இவர் அழகிய மேனிமேல் வெயில் படாமற் செய்கின்றன. மே
கங்களும் சிறுதிவலைதூவி இருபுறமும் நெருங்கி வருகின்றன. எரிபோற் சுடு
கின்ற கற்களும் இவர் வரவை நோக்கிக்களையுடைய தாமரைமலர்போன்ற
பாதந் தோயுந் தோறும் குழைந்து தோன்றுகின்றன.

இவர்கள் போமிடமெல்லாம் புல்லொடு மரமெல்லாம் சாய்ந்து தொழு
வதுபோலத் தோன்றாநின்றன. இவர்களோ தருமமே வடிவானவர், இதுவு
மல்லாமல் இவர்கள் பிறவிப்பிணி நீக்கி என்றும் அழியாத முத்தி நிலையை
யளிப்பதற்கு இடமானவராய்த் தோன்றுகின்றனரே! எனக்குள்ளம் இன்று
நெக்கு நெக்கு நீராய்க்கசிந்துருகுகின்றதே! அன்பிற்கோர் அளவு தோன்றா
மலிருக்கின்றதே, இனியாவ தறியேன் என்றே அனுமான் எண்ணிக் கொண்
டிருக்கையில் இராம லட்சுமணரிருவரும் நெருங்கிவிட, அனுமானும் தான்
அவர் முன்னே நெருங்கிச் சென்று உங்கள் வரவே நல்வரவாகவென இறைவ
னும் அனுமானைப்பார்த்து நீயார்? நீயெங்கே வழிதப்பிப் போனாய் என்றான்.
அதைக்கேட்ட அனுமான் யான் காற்றின் மகன், அஞ்சனை வயிற்றிற் பிறந்
தேன், என்பேரோ அனுமானென்பர். இம்மலையில் வசித்திருப்பவர் சுக்கிரீவ
மகாராசா, அவர்சூரியபகவானதுகுமாரர், நான்அவருக்குக் குற்றேவல் செய்
வேன். இறைவர்களே! உம் வரவுநோக்கி இவ்வளவுதூரம் காணவந்தேன்;
அவர்கட்டளையால் பிறந்தசெய்தியிதுதானென்றான். அதைத்திருச்செவி சா
த்தியருளியசிராமன் இளையவனைப்பார்த்து இவனைப்போலுஞ் செம்மையுடை
யார் பிறரிலர்? ஆற்றலு நிறைவும் கல்வியமைதியும் அறிவும் வேறுபாடாகவே
தோன்றுது; இவனறியாத கலைகளும் வேதங்களுமில்லை; அப்படிப்பட்ட தன்
மையுடையானென்பது இவன் காட்சியினாலே விளங்குகின்றது; இவனைப் பிர
மனென்னலாமோ! இந்திர னென்னலாமோ! இவன் பிரமசாரியாக வுருக்
கொண்டிருக்கின்றா னென்று நினைக்கின்றாயோ! இவ்வுலகத்திற் குளாயாணி
யென்றே சொல்லவேண்டும். இவன்பெருமையும்ஆற்றலும் முற்றுமறிந்தேன்.
இதை யெல்லாம் பின்னே யறியலாமென்றுசொல்லிவிட்டு அனுமானைநோக்கி
நீ சொன்ன கவிக்குலத்தரச னெங்கிருக்கின்றான்? நாங்கள் அவனைக்காண வே
ண்டு மென்னும் பேராதர வுடையோம்; இங்கே அவனைக்காணவருகின்ற எங்
களுக்குத் 'தேடப்போன மருந்து குறுக்கே யகப்பட்டாற்போல' நேரிட்டனை;
அவனிருக்குமிடத்தைக் காட்டவேண்டு மென்று சொல்லியருளினான். அதற்

கனுமான் இவ்வுலகத்திலும்மையொப்பார் யாவரிருக்கின்றனர், அவனைக்காண்
பதற்கே யனுகினீர்கள். அவனுநிமையனைத்துந்தீர்ந்துபெருஞ் செல்வமுடை
யனானன். அந்தச் சூரியபகவான் மகனாகிய மகாராசா இந்திரகுமாரனாகிய வா
லியோ, அன்பில்லாமற்பகைத்ததனால் துன்பத்திற்கொருவனாய் வருந்திஎன்றெ
ழும் இவ்விருசிகசிருங்கமலையி லிருக்கின்றனன். அவனுவாழ்வடையவேளமூந்
தருளினீர்கள். இனிச்சொல்லவேண்டியதென்ன? இருக்கின்றது, கடல்புடைசூ
ழ்ந்த வுலகமுழுதும் உவந்தனவற்றை யுதவி வேள்விமுயன்று செய்து மற்ற
தொல்லற நிரம்பவுஞ் செய்யத்தவறினும் அபயதானங்கொடுத்தார்பெறும்பேறு
மிகச் சிறந்ததெனப் பெரியோர் கூறுவர். எங்களைக் காக்க வேண்டுமென
வேண்டியதும் எளிதோ, உங்களைப்புகலிட மென்றடைந்த எங்களுக்கிதனினு
முறுதி வேறுண்டோ? நான் சென்றடைந்தால் தேவரீர் இன்னதொன்றுரை
க்க வேண்டுமாதலால் உம்மை எமதரசனுக் கின்னதொன்றுரைக்க விளக்க வே
ண்டுகின்றேனென்று கேட்க; இளையபெருமாள் சோர்வின்றித் தங்கள் வரலா
ற்றையும் சொல்லலாயினன்.

சூரியன் குலத்துத் தோன்றி யுலகமுழுதாண்ட அயோத்தி நகரத்துத்
தயரதமகாராசன் செய்த தவவேள்வியிற் பிறந்த ஆண்டகை இப்பெருமான்,
இவன் தன் சிற்றன்னை யேவலால் இக்கானை யடைந்தனன், இவன் பெயரோ
இரகுராம னென்பர், இவன் தன்னரசுரிமை முழுதுந்தம்பிக்களித்தானாயினும்
இவனுக்கேவல்செய்யும்கடமை பூண்டொழுகாநிற்பவன்யானென்றுஇராகவன்
திருவவதாரமுதல்இராவணன்சைக்கொண்டுசானகியைக்கொடு சென்றவரை
யினு முள்ளவரலாற்றை முழுது மொழியாம லெடுத்துஇளைய பெருமாள் சொ
ல்ல, அனுமான் கேட்டே அரிந்தமன் மலரடியிற்குழ்ந்தான். அதைக்கண்ட
இராகவன் நீ தகாத காரியம் செய்வதற்கமையுமோ வென்ன, அனுமானும்யா
னும் அவ்வனசாத்தி லொருவனேயென்றதன் நிமின்னுருக்கொண்ட நூலோர்
வியப்பெய்த வேதமாகிய ஆப்தகலைகள் பின்னுருக்கொண்ட தென்னும் பெரு
மையாம் பொருளுந் தாழ்வெய்தப் பொன்னுருக் கொண்ட மாமேரு தன்றோ
ளிணைக்கு முவமமாகாத தன் மோட்டுருக் கொண்டு அனுமானிற்க, வேத
முதலிய ஆப்தகலைகளைமுன்னேபரிதியங் கடவுளறிவிக்க அறிந்த அனுமானது
மோட்டுருவைக்கண்டு தன் தம்பியை நோக்கிக் கீழ்பட்டவைகளை யெல்லா
நீக்கிக் கிளரப் பட்டாதாகி யென்றும் மறைகளாலும் ஞானங்களாலும் குறிக்கப்
படாத பெரும்பதமே இக்குரங்குருவென் றுணரவேண்டும், நாமோ நல்லன
வாகிய நிமித்தமும் பெற்றோம், இவனையும் துணையாகப் பெற்றோம், துன்ப
மென்பதி னியறக்களைந்தோம், இவனைப் போன்றவன் அம்மகா ராசாவுக்குக்
குற்றேவல்செய்வானானால் அவனிலைமைசொல்லும்தன்மையோ! என்றகமிக
மகிழ்ந்து அழகிய முகமலர்ந்துநின்ற அவ்விருவரையும்பொருந்தநோக்கி அனு
மான் நான்சென்றவனையிங்கே கொணர்கின்றேன், தேவரீர் இங்ஙனே யிருமி
னென்று விடைபெற்றுச் சுக்கிரீவமகாராசனிருந்த சூழலைவந்தடைந்தான்.

அவ்வாறுவிரைந்தடைந்தஅனுமான்யானுமுன்குலமும் இவ்வுலகமுமுய்
ந்தோமென்று இரகுவீரன் வரலாற்றை முழுதுமெடுத்துச் சொல்லி வாலிகால

னைத்தேடிக்கொண்டேனென்றான். அவ்விராமன் மானுகர் தாழுமாழினக்கப் பெருந்தகையே யல்லது மானிடனென்று துணியத்தக்கதோ! நீயவனைக் காணவா வென்றவனை யழைத்துக்கொண்டு இரகுநாயகன் சந்நிதியை நோக்கி யழைத்து வந்தான். அவ்வாறழைத்துவர அவன் இராகவனது திருமேனியைக் கண்டு உலகஞ் செய்த பாக்கியப்பயனே இப்படி இரண்டுருக்கொண்டு சமைந்ததென்றே சொல்லிப் பின்னுமிவரோ மானுடால்லர்; மும்மைப்பெருந் தேவரே இப்படி யுருக்கொண்டு வந்தனரென்று துணிந்து காதல் வெள்ளம் புரண்டு மீப்பாயக்கண்ணிணை களிப்பக்கண்டு அவனைக் குறுகினார். இரகு நாயகனும் அம்மகாராசாவைக் கையை நீட்டி அங்ஙனே யிருவென்று சொல்ல, அவனு மங்கிருந்தான். இதனால் அரக்கரென்னும் இருட்பகையைக் கடியுங் காலத்தின் குறிப்பேபோலவும் சூரியனும் சந்திரனும் கூடும் கூட்டம் போலவும் அரக்கரென்னும் தீயவினையை வேரின்வாங்கக் கேட்டறியுங் கல்வியுடன் ஞானமுங் கிடைத்தது போலவும் விளங்கினர்.

அச்சமயத்தில் சுக்கிரீவ மகாராசாஇரகுநாயகனைநோக்கிஎன்னைப்பார்க் கிலும் தீவினையைதீரநோற்றார் யாவர்? உலகுக்கெல்லா நாயகமாகியஉம்மை விதியே கூட்டுமோயின் யானடையத் தக்கது யாது! என்றான்; குற்றமற்ற தவத்தின் முதிர்ந்த சவரிநின்நல்லொழுக்கத்தையும் நீஇம்மலையி லிருப்பதையு மெடுத்துச் சொன்னாள். யாமோ எங்கள் துயர நீங்கவே யுன்னை நாடி வந்தோம்! என்ற இரகுநாயகனைச் சுக்கிரீவ மகாராசன் கைகூப்பி வணங்கி எனக்கு முன்வந்த வாலி என்னை இருணிலைப் புறத்தின்காறும் உலகமெங்கும் தொடர நான் விரைந்துஇம்மலையில் அவனேற மாட்டானென்றே இம்மலையே புகலிடமாக வெண்ணி யுயிர் பிழைத்திருந்தேன்; உம்மை புகலிடமாக வடைந்தேன் என்னைக்காப்பது தருமமென்றான். அவ்வாறு சொல்லிய மகாராசாவை இராகவனு மிரங்கி நோக்கி உனக்குள்ளஇன்பத்துன்பங்களெல்லா மெனக்குரியனவென்றே எண்ணவேண்டும், இனிச்சொல்ல யாதிருக்கின்றது, இன்றுமுதல் உனக்குப் பகைவராவார் என் பகைவரே! கொடியவரேயா யினும் உன்னை யடைந்தவரே என்னை யடைந்தவர், உன் சுற்றமென் சுற்றம்; நீயே யென்னுருயிர்த் தோழ னென்றான். இவ்வாறுசொல்லவே குரக்குச்சேனை யாரவாரித்தது, அனுமான் மேனி புளகம் போர்த்தது. தேவர்கள் மலர்மாரி பொழிந்தனர். அதைக்கண்ட அனுமானும் நீயும் நின்னுருயிர்த் தோழனும் வாழியென்றுகூறி இதுஎன்றும் நிலைபெற்றிருக்கவேண்டு மென்றான்; அங்ஙனமே யாகுகவென்று இரகுநாயகனும் எழுந்தருளத் தம்பியு மகாராசாவும் மற்ற வனசர வீரரும் தொடர்ந்து சென்றனர். இவ்வாறு தொடர்ந்து செல்லச் சந்தன மரங்களும் அகின் மரங்களுமடர்ந்து பளிக்கறை யளாவித் தெய்வமகளிர் ஊசலாடு மிடங்களையெல்லாம் பார்த்துக்கொண்டே ஒரு சோலையை யடைந்தனர்.

அச்சோலையை யடைந்தபின்பு மகாராசாவும் சிராமபிரானு மொருவரோ டொருவர் பூவணையி லுட்கார்ந்துகொண்டு அளவளாவிக் காய் கனி யிலை முதலியவற்றை விருந்துண்ண வானரங்கள் கொணர அவற்றைச் சிராம

பிரான் மஞ்சனமாடி மிசைந்து மகாராசாவை நோக்கி நின்னில்லறத்திற்குரிய நின்மனைவியை என்போலு நீயும் பிரிந்திருக்கின்றனை யன்றோ வென்ன, அத்தருணத்தே மாருதி யெழுந்து நின்றுவாய்பொத்திக் கைகட்டிக்கொண்டு வின் அஞ்சலி முகிழ்த்து யான் தேவரீர் சந்நிதானத்திற்கொருவிண்ணப்பஞ்செய்து கொள்ளப் போகிறேனென்று பின்வருமாறு சொல்லத் தொடங்கினன். இறைவனே! அதோதெரிகின்ற கிட்கிந்தை மலையின்கண் சிவபெருமானருள் பெற்றுள்ளனாய் வரம்பில்லாத வாற்றல் படைத்த வாலியென்பவ னொருவனுண்டு, அவன் தேவர்கள் பொருட்டொரு புறத்தே நின்றுமந்தரகிரியிட்டுப்பாற்கடலை கடைந்து வாசுகி வருந்தமுன்னுள்அமுதங் கொடுத்தவன். பஞ்ச பூதங்களில் ஆகாய மொழிந்தமற்ற நான்கு பூதங்களின் வல்லமை பெற்றுள்ளவன். சக்கரவாளகிரியினின்றும் இங்கே வந்துபாயும்போராற்றலும் படைத்தவன். தன்னெதிர்நின்று யார்போர்செய்தாலும் அவர்கள் வரத்திலும் உரத்திலும் பாதியடையத்தக்க பெருவரம் பெற்றுள்ளவன். அவன் முன்னே காற்றும் வேகமாகவோடவாது, அவன் மார்பிற்சண்முகங்கொண்ட சதுரப்பெருமான்வேற்படையுறுமையாது அவனேஎட்டுத்திசைகளையுந் தினந்தோறும்திரிந்துசென்று சிவபூசை செய்து வருபவன். இவன் வால் செல்லாத விடத்திலே தான் இராவணன் செங்கோல் செல்லும்; இவன் பெயர்ந்து நடந்தால் மேருமலை முதலாகிய மலைகள் எல்லாம் பெயர்ந்து செல்லும். இவன்தோள் வீச்சினல் மேகமும் வானமும் கதிர்களும் நாகங்களும் தூர்ந்துபோம். ஆதிவராகம் வாசுகி யென்பவற்றைப்போல வலிமைபெற்றவன், தூணிற்றோன்றியஇரணியனை மார்பிடந்த அழகிய சிங்கப் பெருமானும் இவன்முன்னே நின்று போர்செய்ய வல்லானல்லன். உலகமுழுதும் அனந்தன் தன்சிரங்கொண்டு தாங்குவான்; அதனை இவனே நடந்தே தாங்குவான். கடல் உளைப்பதும் காற்றுச் சலிப்பதும் பன்னிரு சூரியர் தேர் ஆகாயத்திற் செல்வதும் தொடர்ந்து அவனெற்றுவதனுலல்லது வேறொன்றுலாவதன்று, எழுபத்திரண்டு வெள்ளம் வானரங்களுக்கும் அரசனாக விருக்கின்றனன். அவன் சார்விடத்தில் தம்மிறுதியை நோக்கி மழையு மடியாது, சிங்கங்களும் தம்முழையி விருந்துகொண்டு கர்ச்சிக்காது, காற்றும் சலிக்காது, இவன் வாலினற் பிணித்து இராவணனைக் கொணர்ந்த காலத்தில் அவன் உதிரஞ் சிந்தாதவெற்றிடமே கிடையாது, இவ்வண்ணமான அக்கொடியவன் இந்திரனுக்கு மகனாகத் தோன்றினவன்; சந்திரனைப் போலும் வெண்ணிறம் பெற்றுள்ளவன். கூற்றுவனு மஞ்சத்தக்க ஆணையுடையவன், இச்சுக்கிரீவ மகாராசாவுக்கு ஓர்தாய் வயிற்றிலே முன்னேதோன்றிய முற்றோன்றல், அவனே எங்களுக்கரசனாக இம்மகாராசா இளவரசாக விருந்து அரசாண்டு வருங்காலத்தில் மாயாவியென்னு மரக்க னொருவன் இவனுடன் போர்செய்ய வந்தான். அவனை யெதிர்ந்து மார்பினோமோத அவன் ஓர்மலையின் பிலத்துவாரம் புகுந்தோடினன். அவனை நான் கொணர்ந்து விரைவில் வருகிறேன், அதுவரையிலும் நீ வானரங்களைக் காத்திருவென்று தம்பிக்குக் கட்டளையிட்டுக்கோபத்துடன் சென்றுதான். அவனுடன் ஒன்றரையாண்டு போர்செய்து வெற்றியைநாடி யிருக்கையில் இம்

மகாராசாவும் அவன் சோகத்தைநோக்கி மனமுருகியழுது நின்றான். அப்படி வருந்தி நின்ற இம்மகாராசாவை நாங்களழைத்துவந்து அரசு செய்வாயென்று வேண்டினோம், இவன் அவனைக் கொன்றானைக் கொல்லவேண்டும்; அவ்வாலியையா விட்டால் யானு முடிவேனென்று தானு மப்பிலத்தைநாடிச் சென்றான். இவனை நாங்கள் எங்களா லானவளாயிலும் தடுத்து அவன் வருத்தந் தணியாமல் ஒருவாறிசைந்து எங்கள் அரசை யாங்கள் கொடுக்க வரசாண்டு வந்தான். நாங்களோ ஒருவேளை அம்மாயாவி அப்பிலத்தின் வழியே வந்து எங்களைக் கொன்று விடுவானென்றே அநேகம் குன்றுகளையடுக்கி அப்பிலத் துவாரத்தை யடைத்துச் சேமித்தே இவனைக் கிட்கிந்தைக் கழைத்துவந்து விட்டோம். அவ்வாலியோ மாயாவியைக் கொன்றுகளைந்து விரைந்து அப்பிலத்துவாரம் குன்றுகளடுக்கிச் சேமித்திருந்தமைநோக்கி இளையோன்செய்த காரிய நன்றாயிருக்கின்றதென்று வால் விசைத்தோங்கி யடிக்க அக்குன்றுகளெல்லாம் தகர்ந்து பொடிப்பொடியாயின. பின்னே வாலி கிட்கிந்தையில்வரவே, இம்மகாராசா அவனை யெதிர்சென்று வணங்கி நின்வரவிலாமை நோக்கி நீசென்றவழிப் படர நினைத்தேன், என்னை இவர்கள் தடுத்து நீர்வருமளவும் இவ்வரசாண்டு வரவேண்டினர்; உம்மாணையை மேற்கொள்ளாத செய்தியாலாகிய என்குற்றம் பொறுக்கவேண்டுமென்றுவேண்டிக்கொண்டான். அச்சொற்கிரங்காமல் இம்மகாராசாவைப் பற்றிக் கடலைக்கடைந்த தன்தோளால் உடலையும் கடையத்தொடங்கவே இவன் இரிந்தோடி எழுகடலையுங்கடந்து அண்டச்சுவரையு மடைந்து அங்கேயும் அவன் தொடர்ந்து சென்றமையால் அங்கேநின்றும் பெரும்புறக்கடலைத் தாவினனென்றுசொல்ல, இரகுநாயகனும் அன்றுதானே இவன் அவ்வாலியினால் தாவியோடக் கற்றுக்கொண்டானோ வென்றுசொல்லி அவன் செய்தமையைப் பின்னுஞ் சொல்லவேண்டுமென்ன மாருதி சொல்லத்தொடங்கினன்.

அப்பெரும்புறக் கடலிற்புகுந்த காலத்திற் சூரியனும் சென்றடையாத அச்சக்கரவாளகிரியி னுச்சிக்கு மந்தப்பக்கத்தை யடைந்து விரைவாகப்பற்றி யஞ்சாமல் மிக்க கோபங்கொண்டு தன் வலிய கையால் எற்றும்படி எழவே, இவன் தப்பித்துக்கொண்டு ஒருவழியாக வகன்றான். எம்பெருமானே! அவன்பல்லைக் கடிப்பானாயின் யமனுக்கு மோராணங்கிடையாது; அவனுக்கு இருசிகமுனிவன் சாபமிருப்பதனால் இம்மலையைவந்தடைந்தான். இதுகிடக்க; இம்மகாராசாவினுடைய மனைவியையும் கவர்ந்து கொண்டிருக்கிறான். இம்மை மறுமையென்னுமிரண்டையுந் துறந்திவ ணிருக்கின்றான். இதுதானடந்த செய்தியென்று சொல்லி முடித்தான். இவ்வாறு மாருதி சொல்லி முடித்தவுடனே கோதண்டபாணியாகிய இரகுநாயகன் கோபங்கொண்டு ஒருவன் தன்னிளையோன் தாரம் வெளவினனென்றசொல் தரியாமல் ஈரேழுலகமும் ஒருசேரவந்து அவனுயிர்க் குதவிசெய்தபோதிலும் என்வில்லினின்றும்பொழிகின்ற பாணத்தாற்கொன்று அரசுடன் இவன்தாரத்தையு மின்றேதருகிறேன், என மாருதியை நோக்கி அவனிருக்குமிடங் காட்டென்றான். அதைக்கேட்ட மகாராசா பேருவகைக்கடலின் பெருந்திரையினாப்ப இதுவரையிலும் அழுந்தி

யிருந்த துன்பக்கடற் கரையேறங்கண்டானாய் இனி வாலி வலியிறந்துபட்டானே யெனத்துணிந்தும் இவ்விராமனுக்கு யாம் நினைப்பதொன்றுண்டென மாருதியே முதலான கல்வியு நீதியுஞ் சூழ்ச்சியும் கற்றுத் துறைபோயமந்திரிமாரை வேறழைத்துச்சென்று சொல்ல அதற்குமாருதி சொல்வானாயினான்.

மகாராசாவே! நானுன்னுள்ளத்தை நன்றாயறிந்து கொண்டேன். அவ்வாலியைக் கொல்லும் பேராற்றல் இவரிடத்தில் இல்லையெனவே துணிந்தனை, நான் சொல்லப்போகிற விஷயங்களைக் கடைப்பிடி; கையிலும் பாதங்களிலும் சங்குசக்கரக் குறிகளிருக்கின்றன, எங்கும் இவ்வகைப்பட்ட இலக்கணங்கள் யார்க்குமே கிடையாது, அறத்தை நிறுத்துதற் பொருட்டே அரவாழியந் தணனுகிய இறைவன் ஆதியஞ்சோதியுருவை யங்குவைத்து இங்குத் தயரதன் மகனாகத் தோன்றினான்; திரிபுரங்களைத் தீயெழக்கோபித்துக் காலனைக் காலாற் கடிந்த கண்ணுதற்பெருமான் கரத்தேபிடித்த பினாகத்தை இவனொடிப்பதானால் அம்மாயவனையல்லது பிறரால் ஒடிக்கும் வன்மையுண்டோ! என்னைப்பெற்ற வாயுபகவான் இவ்வுலகங்க ளனைத்தையுமீன்ற செந்தாமரைமலரிலிருக்கும் நான்முகப்பெருமானை யுந்தியினீன்ற ஆதிபகவனுக்கு அடிமைத்தொழில்செய்யும் செய்தவமெய்தப் போகின்றனை! அதுவே உன்னைப்பெற்ற எனக்கும் பெறலருங்கதியை யடைவிக்கும்; இன்னும் அதற்கேதுவுமுண்டு சொல்கின்றேன் கேள்! அவன் துன்பந்தோன்றியபோ துடன்றோன்றுவானென, அப்பெருந்தகையை யானறியுமாறெவ்வண்ண மென்றேன், அதற்கவன் அன்பே சான்றாகுமென்றான்; எனக்கிங்கு யாக்கையில் என்புமேதானில், நெக்குப்பட்டுருகாநின்றன, அவன் பெருவலியைப் பரீக்ஷித்தறியவேண்டுமென்றால் ஒருஉபாயஞ்சொல்கின்றேன்; கேள்! அதோபார்! மராமரங்கள் ஏழு நாம்செல்லும் வழியில் மாறிநிற்கின்றன, அவற்றிலொன்றில் இவன்பாணமெய்வானாயின் அறியலாமென்றான். மகாராசாவும் இதுவே சரியானபரீக்ஷையென்று தன்றோள்களால் அம்மாருதியைத் தழுவிக்கொண்டு சிராமனிடத்திலடைந்து யான் செப்பவேண்டுவ தொன்றுண்டென்றான். சிராமனும் அதென்ன சொல்லவேண்டு மென்றான். நாம் இவ்வழியே செல்லவேண்டுமென்று அச்சிராமபிரானை இளையவனோ டழைத்துக்கொண்டு ஆகாயமளாவிய அம்மராமரங்களினருகேசென்று இவற்றினொன்றில் நின்னம்பு செல்லவேண்டும், சென்றால் என்மனத்திடர் போமென்றான். இவ்வாறு சுக்கிரீவன் சொல்ல, இரகுநாயகன் கேட்டுப் புன்சிரிப்புக்கொண்டு இவனெண்ணிய வெண்ணமறிந்து தன்கோதண்டத்தில்-நாணேற்றி அவற்றி னருகேசென்று பாணத்தைத் தூக்கவெண்ணி வில்லைக்குணத்தொனிசெய்தான், அவ்வோசை கேட்ட மாத்திரத்தில் திக்கயங்களுமயங்கின, திசைகளும் திகைத்தன, பிரமலோகத்தும்போய்ச் சலிப்பறக்கேட்டது. இவ்வாறு தூரத்தேயானால் பின்பக்கத்தே நின்றவருக்குநடந்தது சொல்லவேண்டுமோ! சிராமபிரான் வில்லைக்குணத்தொனி செய்தவுடன் தேவர்களும் பயந்தோடினர். கற்பாந்த காலமென்று திகைத்தனர். தன்பாலன்புள்ள தம்பியோ பக்கத்திருந்தான். மற்றையோர் பட்டபாடு சொல்லவேண்டுமோனால் அவரைப் பழிவந்துபுணரும். இவ்

வாதிருக்க அனுமான்முதலியோர் பாணமெய்தலைப்பார்க்கலாமென்றறிது வந்தெய்திச் சிராமபிரானைப் புகழச் சிராமபிரானும் நாணிலை முறையாக வாங்கி வில்லினின்றும் பாணத்தையெய்தான், அவ்வாறுவிடவே அதுவெழுமராமரங்களையு முருவிக் கீழுலகமேழெனப்படும் அவற்றினூ மூடுருவிச்சென்று பின்னேழெனப்படும் கணக்குள்ள பொருளில்லாமையால மீண்டது; எழுகண்டபின்னுருவு மின்னு மொழிவதுமன்று, எழுகடலும் மேலேழுலகமும் எழுமலைகளும் ஏழுமுனிவரும் ஏழுகுதி[illegible]தா[illegible]ழுமாதரும் நடுக்கமுற்று அங்கே ஏழென்பதுதான் இக்கணக்கிலடங்க[illegible]ா வென்றேங்கினர். அவ்வாறாயினும் அறத்தினுக் காருயிர்த்துணைவ னிராமனென்பதை யெண்ணி யாவரு மனுகியிருந்தனர். சுக்கிரீவனோ அழகிய செந்தாமரை மலர்போன்ற சேவடியை முடிமேற்புனைந்து இவை சொல்லலாயினன்.

உலகமுந்துதவிய இரகுநாயகன் நீயேவையமும் வானமுமற்று மாகாசின்றனை, மலர்மேல் வசிக்கும் பிரமனு நீயே! கடலுமே நீ! அக்கடலிற் கண்வளரும் தண்டாமரைக் கருஞாயிறு நீயே! யாங்கள்செய்த தீவினை வேருடன்களையுந்தேவு நீயே என்னும்படி எழுந்தருளினை யல்லது வேறில்லை; எனக்கருமையான பொருளொன்றுமேயில்லை, எனக்கெல்லாமெளிதே! யான் செய்துகொண்ட நல்வினைப்பயனே தேவரீரை என்பாற் கூட்டிவிட்டது; தாயைப்போன்ற உன்னடியருக் கடியவனாகத்திரிவேன்; அந்த அறவாழியந்தண்னே நீயென்று வணங்கினன். அங்கிருந்த வானரரெல்லாம் ஆடியும் பாடியுமங்கு மிங்குங் கலந்தோடியு மகிழ்ச்சி யென்னும் கரையிலாக்கடலி லாழ்ந்து பரவசப்பட்டு வாலி காலனைத் தேடிக்கொண்டோமென்று அதுவரையிலும் வாடியிருந்த தோள்களெல்லாம் அவர்கட்கு வளர்ந்தன. பின்னே அண்டமும் அகிலமும் முழுதும் அன்றனலில் முன்னாளில் வெந்து நீறாகிப் பசையற்றுவானைத்தொடுவதாக விருக்கின்றதென்று சொல்ல எற்புடம்பு அம்மலையின்மேல் மலையென இருக்கக்கண்டு இது எமனது எருமைக்கடாவாகனமோ! திசைக்களிறிறந்து கிடக்கின்றதோ! மகரக்கடல் என்புபட வுலர்ந்ததோவென்று ஐயமுற்று அன்பிற் சிறந்தானே எனக்கிதைத்தெரியச் சொல்ல வேண்டுமென்று இரகுநாயகன் கேட்கச் சுக்கிரீவன் சொல்லலாயினன்.

மராமரப் படலம்
முற்றிற்று.

## துந்துபிப் படலம்.

இது துந்துபி யென்னும் பெயரையுடைய தானவனுடம்பு, அவனோ வானிலே செல்லுகின்ற சந்திரனைத்தொட நிமிர்ந்தெழுந்த தந்தங்களை யுடையவன்; மந்தரகிரியெனப் பெருங்கடலைச் சிதறச்செய்து, கருநிறத்துக் கள்ள மாமாயனை வேண்டிப் போருக்கழைத்தான். பொருவரிய அக்கராவைக்கடிந்த கருமுகிற்சோதி அவன் கண்முன்னேதோன்றிக் கங்கையைச் சடையிற்கரந்த கண்ணுதற் பெருமானே உம்போல்வார் பெருவலியை யடர்த்தழிக்க வல்லானென்றான். அவ்வாறு சொன்னதைக்கேட்ட அத்துந்துபியும் திருமாமகள்

கொழுகனையகன்று கைலைமலையை யடைந்து அம்மலையைத் தன் தந்தங்களாற் பெயர்த்தெடுத்தான்; இத்தீயசெய்கையைக் கண்ணுற்ற கறைமிடற்றிறைவன் அவன் முன்னேதோன்றி நின்குறை யாதென்றான்; அவனும் என்னொடு போர்செய்ய வேண்டுமென்றான். வீரமே வடிவங்கொண்ட உன்னொடு போர்செய்ய நானல்லாது, நீ தேவருடனே போர்செய்வது தக்கதென்று விடுக்க அவ்வாறே அவன் இந்திரலோகஞ்சென்று இந்திரனைக்கண்டு போர்செய்ய வேண்டினன். இந்திரன் நீ பலநாள் போர்செய்ய வேண்டினால வாலியிடஞ்சென்றே போர்செய் யென்றான். அதைக்கேட்ட துந்துபி இந்திரனிடம்விடைபெற்று வனசராதிபனாகிய வாலியிருக்கும் அக்கிட்கிந்தமலையைச் சென்று பின்னம்படச்செய்ய எனக்கு முன்னவனாகிய வாலியும் அவனொடு முனைந்து ஒருவரை யொருவர் முட்டியு மோதியும் போர்செய்தனர், தானவர் வானவர் முதலியவர்கள் அவர்களை நெருங்கவு மஞ்சினர். அவர்கள் செய்த போரினால் ஆகாயமுழுதும் தீயெழுந்து திசைமுழுதும் போயடைந்தது. புகை மூடிக்கொண்டதனால் உடனே முழக்கமு மெழுந்தது. சமுத்திரமும் மலைகளும் அடித்தல மெடுப்பதனால் தம்பெருமை யழிந்தன, மேகமும் வானும் கடலும் கடல்சூழ்ந்த இடமும் விழுகின்ற தூளியாலறிவதற்கே யரிதாயிருந்தன. மயன் மகனாகிய அத்துந்துபியும் வாலியும் பதினறு மாதம் போர்செய்தனர். அப்படி அவர்கள்போர்செய்யுங்காலத்திலே வாலியும் அவ்வரக்கனுடைய தந்த மிரண்டையும் பிடுங்கி மோத அவனோ வானத்திடிபோல முரறிநடுங்கி தலைமேல் மோதிய அவ்வடியால் விரைந்து சாய்ந்து தாள்கள்வருந்த வாயாகிய முழைதிறந்து உதிரவாறொழுக மலைமேல்இடியிடித்தாற்போல வானுமண்ணும் குலைய எண்டிசையுஞ் செவிடுபடக் கதறினன். கவரி யிதுவென்னும்படி தன்கையை நோக்கிச் சுழற்றிடுவதனா லுண்டாகின்ற உதிரம்பட்டு எண்டிசைக் களிறுகளும் பவள மணிந்தாற்போலத் தோன்றும்படி விளங்கின. மேகங்களைக்கடந்து சூரியமண்டலமுங்கடந்து அயலுள்ள நட்சத்திர மண்டலமுங் கடந்து மேல்வச்சிரம்போன்றகையால் அன்றவனுயிரும் நீங்கிற்று, உடம்பு மிக்கதியாகிப் பின்னு முட்டி வானின்முகட்டினும்போய் இம்மலையில் வீழ்ந்தது. இம்மலையில்தவஞ்செய்துகொண்டிருந்த இருசிகமுனிவர் இம்மலையில் வாலிவரி னவன்தலை பொடிப்பொடி யாகுகவெனச் சாபமிட்டனர். அச்சாப மென்னுயிரைக் காத்தது என்று சொல்லி முடித்தான். இராகவபிரான் சுக்கிரீவன் சொன்னதை யெல்லாம் கேட்டுத் தம்பியை நோக்கி இதையோட்டென அவனும்தன் காற்சிறுவிரலா லுந்தினன். அது சத்தியலோகஞ்சென்று மீண்டது, அப்போது வானரங்கள் எல்லாம் இடியும் நாண ஆரவாரித்தன. சுக்கிரீவனும் நான் தேவரீருக் கறிவிப்பதொன்றுண்டென்று சொல்லத் தொடங்கினன்.

துந்துபிப்படலம்
முற்றிற்று.

—

## கலன்காண்படலம்.

இவ்விடத்தில் நாங்கள் வசித்திருக்கையில் இராவணன் சானகியாரை யெடுத்துக்கொண்டுபோகையில் அவ்வன்னையோ மிகத் தூரத்திலிருந்துகொண்டே துன்பத்தால் அழுதிரங்கித் தூதாலழிவிப்பா மென்றோ வழியேம், தன்னாபரணங்களெல்லாம் கழற்றி கண்ணீரோடும் அங்கிருந்தபடியே உன்னையும் இளையவனையுங் கூவிக்கொண்டேயெறிந்தாள், நாங்களதை யேற்றோமென்று கொணர்ந்து கொடுத்தான். பின்பு இரகுநாயகன் செவ்வையாகத் திருவாபரணங்களையெல்லாம் கண்களாரக்கண்டு மெழுகினாலாகிய உடலே போலுருகினனென்போமோ, உயிர்க்கூற்றமாய்ப் பருகினானென்போமோ வேறென்னசொல்வோம், சானகியாரணிந்திருந்த திருத்தனபாரத்து ஆபரணங்களெல்லாம் திருத்தனமேபோல் விளங்கின, கையிலணிந்த வாபரணங்கள் கைபோலவிளங்கின, அல்குலிலணியுமேகலைமுதலிய ஆபரணங்களெல்லாம்அதைப்போலவிளங்கின, பல்கலன்பிறவு மவ்வவ்வடிவமாகவேவிளங்கின, அவ்வாபரணங்க ளொவ்வொன்றும் அவனுணர்வைச் சூறையாடிய தென்பேனோ, உயிரைத்தான் சூறையாடியதென்பேனோ, அவனுடம்பைச் சுட்டதென்றே சொல்வேனோ வேறென்னவென்றேதான் சொல்வேன், அது மோந்திட நறுமலரேபோல் விளங்கிற்று, தோளில்தாங்க உத்தரீயம்போலும் விளங்கிற்று, சாந்தமும் ஒளியால்விளங்குவதனால் துகில்போலவும்தோன்றியது. கண்ணிற்றொடுமணற் கேணியிற்சுரந்து நீர்பாய உடல்முழுதும் புளகம் போர்த்தது, மயிர்க்குச்செறிந்தது; தோள்கள் வேர்த்தன வென்றே சொல்வேனோ வெதும்பினானென்றே சொல்வேனோவேறென்ன வென்றே சொல்வேன், விடங்கரந்தூற்றினாற்போல் வெப்பமேற்கொள்ள வெகுநேரம் உணர்வுமுயிர்ப்பு நீங்கிஅவசமாயிருந்த அவ்விராமனைத் தன்னுடம்பிலிருக்கும் மயிர் சுருக்கென்றேறத்தாங்கி யிருக்கச்செய்து அத்துயரங் கண்டுபொறாதுஏங்கியநெஞ்சினனுயிரங்கி விம்மி இறைவனே! இவ்வாபரணங்களை வருவித்தே தேவரீரைவருந்தச் செய்தேனென்று சொல்லிவிட்டு அவ்விராவணன் சானகியாரைச் சத்தியலோகத்திற் சென்றொளித்து வைத்துக்கொண்டிருந்தாலும் மயக்க மறத்தேடி என்வலியையும் காட்டி உமது தேவியாரையு முதவவல்லேன் நின் மனத்துயர மகலவேண்டுமென்று வேண்டி நின்றான். பின்னும் அவன் திருமகளையேயொத்த அச்சானகியாரைப்பயப்படச்செய்துவிட்ட திண்ணியதோளிருபதும், தலைபத்தும் நீர்விடுமொருபாணத்திற்கே இலக்காகுமோ, அஃதிருக்கட்டும், நானீரேழுலகும் போய்த்தேடி அவ்வரக்கனையும்கொன்று தேவியையும் கொண்டுவந்து சேர்த்தே விடுகிறேன்; என்கைத்தொண்டைப்பாரும், நாங்களோ உமக்குக் குற்றேவல்செய்யும் துணைவரோம், இங்கே நிற்கும் தம்பியோ கெடலரும் வலியுள்ள மகாபுருடன், உம்மாண்மையே இதுவாமென்றால் நீர் சிறுகநோக்கி என்னபயன்? பெருமையோரானாலும் பெருமையைப்பேசார்கள். கருமமேயல்லது வேறுகண்டது யாதிருக்கின்றது, தருமமுநீரோ யல்லது தனித்து வேறொன்றிருப்பதுண்டோ! உமக்கருமையான தியாதிருக்கின்றது, நீர் பிறரைப்போலவே நின்று அவலமாய்

வருந்தலாமோ! பிரமனும் முருகனையீன்ற உமையொருபாகத் தொருவனும் திருமாலும் கூடி யொன்றுவரோ யல்லது தனித்தனி துணையாகக் கிடைப் பரோ! என் சிறுகுறை முடிப்பது பின்னேயாகட்டும், முன்னே சானகியாரை விடுவிப்பதே நலமென்று சொல்ல இரகுநாயகனு மொருவா றுணர்வுகூடச் சொல்லலாயினன். மகாராசாவே! நானும் என் கையில் வில்லைவைத்துக் கொண்டிருக்கையிலேயே தன்னுபரணங்களைக் கழற்றிவிட்டெறிந்தாளே, இப் படி கற்புடைய மாதர்களில் செய்தவர் யாவர்? என்வரவு நோக்கிச் சானகி வருந்திக் கொண்டிருக்கவும் நான் மலைகளிலும் காடுகளிலும் தேடிக்கொண் டலைபவும்வில்லைச்சுமந்துகொண்டு நாணமில்லாமலே காலங்கழிக்கின்றேனே. இஃதிருக்கட்டும்; வழிச்செல்வோர் யாரேனு மொருமாதை யொருவன் வருத்தினால் தனக்கிடையூ றுண்டானாலும் தன்னுயிரையேனும் கொடுப்பர். எங்கள் மூதாதைகளோ கடலைத்தோண்டினர், கங்கையைக் கொண்டுவந் தனர், புலியு மானு மொருதடாகத்தில் நீருண்ணச் செய்தனர். நான் எனக் குத் தலைவியாகநேர்ந்த சானகிதுயரத்தைத் தீர்க்காம லிருக்கின்றேனே. முன் னாளிலே இந்திரனைத் துன்பஞ்செய்து கொண்டிருந்த சம்பரனென்னு மசுர னைக் கொன்று அவனுக்கே கழிபெருஞ் செல்வ மளித்தான்; என்னைப் பெற்ற தந்தையாகிய தசரதச் சக்கரவர்த்தி யென்று சொல்லிக் கொள்ளு கிறார்கள். நானவனுக்கு மகனாகப்பிறந்தும் வில்லைத் தாங்கியும் பெரும்பழி தாங்கி யிருக்கின்றேன். என்தந்தை சொல்லை நிறுத்தும் பொருட்டேநான் மகுடந்தாங்காமலே காட்டில் வந்து விட்டேன்; சானகியைப் பகைவன் கைக்கொள்ளப் பெரும்பழியை மேற்கொண்டேன், இனி நான்பிழைத்தென்ன பலன்? என்று இவ்வாறு பலவிதமாகச் சொல்லியிடழிந்து துயரத்தால்வருந்து கின்ற சிராமபிரானைச் சுக்கிரீவன் மிகவுந் தேற்றத் தெளிந்தான். அப்பால் இரகுநாயகன் நீ யாற்றுவதனால் ஆறினேன், அல்லாமற் பிழைப்பேனோ; எனக்கிதைப்பார்க்கினு முறுதியுண்டோ? பூமியில் இப்பழிதீர மாய்வேன், அதுவும் உன்குறை முடிந்தல்லாமற் செய்யே னென்றான். அந்தத்தருணத் தில் அனுமான் இரகுவீரனை வணங்கி நான்சொல்வ தொன்றுண்டு, அதைக் கேட்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டான். இறைவனே! கொடுந்தொ ழிலை யுடைய வாலியைக் கொன்று சுக்கிரீவனுக்கு முடிசூட்டி மிகுந்த சேனை களைக் கூட்டினாலல்லாமல் அரக்கரிருப்பிடமறிவதரிது; எல்லாவுலகங்களையு மிமையோரளவில் அடைவர், அவ்வழியில் மகிழ்ந்த பொருள்களையும் வவ் வுவர், கொடியவினை வந்ததுபோலவு மீள்வர், அவர்கள் உறைவிடத்தை யறி யும் பான்மையோ! ஒருமுறையாகவே பரவி உலகம் யாவையுஞ் சென்று சானகியா ரிருக்குமிடத்தை யாராயவேண்டும், உலகத்தை வரன்முறையாக நாட வரம்பில்லை, அருமையுமுண்டு, நாம் தேடவளவிடற்கரிய வாண்டுகள் வேண்டும், எங்கள் படையோ எழுபதுவெள்ள மென்பர், ஊழியிற்கடல் உல கைப் போர்ப்பதுபோற்போர்க்கவல்லது, ஆழிநீரையுங்குடிக்கவல்லது, பிரமன் படைத்த இவ்வுலகத்தையும் கீழ்மடுத்தெடுக்க வல்லது, இன்னுங்கிடைத்தவற் றையுஞ்செய்யவல்லது, ஆகையால் அதுவே அமைந்ததென இறைவனேஎன்

மனத்தே நினைத்தேன் என்றான். இராகுநாயகனும் நாம் வாலிபாற் செல்வோமென்று சொல்ல யாவருமுடன் போயினர். அவர்களும் அம்மலையினைக்கடந்து சென்று ஒரு யோசனைக்கப்பாற் பொன்னாடு பூமியில் இமிந்தாலொத்த வாலியிருக்கின்ற அக்கிட்கிந்தமலையை யடைந்தனர்கள்.

கலன்காண்படலம்

முற்றிற்று.

---

## வாலிவதைப்படலம்.

---

இராகவனவர்களுடனடைந்த பின்பு சுக்கிரீவனையழைத்து நீ வாலியுடனே போர்செய்யும்பொழுது வேறாகநின்று பாணம்விடத் துணிந்திருக்கின்றேனென சுக்கிரீவனு மப்படியே நல்லதென்றுசிந்தித்து வாலியையணுக நீலமேகமும் நாண மண்ணுளோரிரியல்போகவும் விண்ணுளோர்கள் விபமுதலடையவும் நின்றேயாரவாரித்தான்; அது உலகமுண்ட பெருவாயனுண்டவண்டமுற்றுமுண்டது; சுக்கிரீவனும் இடித்துரப்பிப்போர்செய்யவந்து எதிர்ப்பாயானால் அடர்ப்பேனென்று அடித்தலங்கள் கொட்டி வாய்துடிதுடித்துத் தோள்புடைத்து நின்று செய்த ஆரவாரமிங்கே புகுந்தது, தனக்குவலந்துடிக்க அங்கேயுறங்கும் வாலி செவித்தொளையில் யானையினது பிளிற்றோசையைச் சிங்கம் தன்செவியில் எற்பதுபோலக்கேட்க,படுக்கையில்ஒருபாற்கடல்கிடந்ததேபோலத் தோன்றுகிறதைக்கண்டு கோபமாய்த் தன்னுடன் போர்க்குவந்தமையை நோக்கி மனத்திலெண்ணிச் சிரித்தனன்,அச்சிரித்தவோசை அவ்வுலகமேழிலும் சென்றுபட்டது, வாலியோ விரைந்தெழுந்து ஊழிக் கடல்போலக் கிளர்ந்துசெல்ல அம்மலையோ பூமியிலழுந்திவிட்டது. அதன்பின் தோள்வீச்சினாலாகிய காற்றினால் மால்வரைகளெல்லாம் விழுந்தன, மயிர்ப்புறம் பொடித்தன, வடவைக்கனலும் கண்கெட்டது. கைதட்டி நிற்பதனால் திக்கயங்களும் மதச்செருக்கைச்சிந்தின, தேவர்களும் வருத்தமடைந்தனர். மலைகளெல்லாம் நெக்குப்பட்டழிந்தன. இதோவந்தேன்வந்தேனென்றுசொல்வதனால் சந்திரன்முதலிய நக்ஷத்திரக் கூட்டங்கள் சிந்தின, வீசினகாற்றால் வேர்பறிந்த மலையின் கூட்டங்கள் திசைகளைச் சென்றடைந்தன, வெண்ணிறத்தினை யுடைய மயிரினின்றும் பொடித்த தீப்பொறியால் அண்டப்பித்திகை பூசப்பட்டன. கூற்றுவனு முள்ளங்குலைந்தான். கடித்தவாயினின்று முண்டாகிய தீப்பொறிகள் மேகத்தினின்று முண்டாகிய இடியினைப்போலச் சிந்தின, வாகுவலயத்தினின்றுஞ்சிந்தும் இரத்தினங்கள் மின்னல்விழ்வதேபோலத் தோன்றின, அவனே உலகமும் நாற்கடலும் நாகரும் மூலமும் முற்றமுடிவிலே தீக்கும் அக்கற்பகாலத்தை யொத்தான். அதுவேயு மன்றி அக்கடலைக்கடைந்த காலத்தில் தோன்றிய ஆலவிடத்தையுமொத்தான். அப்போது தாரையென்னும்அமுதேபோலத் தோன்றிய வேய்த் தோளையுடையாள் தடுக்க அவன் வாயிடையே புகைவரக் கண்ணில்வருந்தீயினால் தன்கூந்தலுர்தீய நின்றாள், அதைக்கண்ட வாலி என்னை விலக்கவேண்டாம்விட்டுவிடு, இங்கேவந்துபோருக்கழைக்கின்ற

சுக்கிரீவனுடைய உரத்தைக்கலக்கி அந்நாளில் கடலைக்கலக்கிஅமுதுகண்டாற் போலவருந்தும்படி அவனுயிரைக்குடித்து விரைந்துமீள்வேன் என; அதைக் கேட்டமலைக்குல மயில்போல்வாளாகிய தாரை சொல்லத் தொடங்கினுள்.

இறைவனே! நின்புயவலிக்கு அவன் இக்காலத்தவ னல்லன், முன்னாளில் உன்னாலே உதையுண்டேவருந்தினவனுயிருந்தாலும் அவனுக்கு நெடுந்துணை யுடைமையால் போர்க்கு வந்திருக்கின்றான் என்றாள், அதைக்கேட்ட வாலி மூன்றுலகமு மெனக்கு நேராக வந்தெதிர்ப்பினும் அவை தோற்றுத் தொலையு மெனின் சான்றுவேண்டுமோ? அதற்கேதுவுங்கேள்! மந்தரமலையே மத்தாக வாசுகியே கயிறாக, அடைகல் கள்ளமா மாயப்பிரானாக, சந்திரனே தூணாக, எதிர்தருக்கி வாங்குவோர் இந்திரன் முதலிய தேவரேயாக, பெயரவலிக்கவும் அவர்களுக்கு மிடுக்கில்லாமையால் நானதை நோக்கித் தயிரெனக் கடைந்து அமுதந் தந்தேன். அதுமறக்கத் தகுந்ததோ, தேவரு மவுணரும் என்னுடன் போர் செய்தே தோற்றனரென்றால் அதைச்சொல்லவுமாமோ! எமனு மென் பெயர்சொல்ல நடுங்குவானே, எனக்கார்தான் நிகர்! என் தம்பிக்குயார் துணை யாக வந்துபோர்செய்வர், அறிவில்லாதவ ரென்னுடன் போர்செய்வாரெனின் அவர்கள் பெற்றுடைய வரமும் உரமும் பாதியென்பால்வந்தேசேர்ந்துவிடுமே, அதனாற் பகைப்ப தெப்படி? நீ அபாமொழிந்து விடென்றான். இவ்வாறு சொல்லிய வாலியை நோக்கித் தாரை இறைவனே! அச்சுக்கிரீவனுக்கு ஆருயிர் நண்பனாக சிராமனென்பவன் உன்னுயிர்கொள்ள வந்திருக்கின்றானென்று சில அன்புடையார் என்னிடத்தே சொன்னா ரென்றாள், அதற்கு வாலியும் இருவினைக்கூறு காணாதலமந்தேயயரு முலகத்தினுக்கு அறத்தாறெல்லாம் இழைத்துக்காட்டிய சிராமனுக்கு இயல்பல்லாதனசொல்லி யென்செய்தாய்! பாவீ! உன்பெண்டன்மையால் பிழைத்தாயே, இம்மை மறுமை யென்னு மிரண்டனையு நோக்குமியல்பினை யுடையார்க்கு இதுபெருமையாமோ! இங்கே இதனாற் பெறுவதென்னோ? அருமையாக நின்று உயிரைக்காக்கும் தரும மே தன்னைத்தான் தவிர்க்குமோ, உலகமுழுதும் தன்னுரிமையாகப் பெற்று அதைத் தன் மாற்றவளாகிய சிற்றன்னையேவலால் அவள்மகனாகிய பரதனுக்கு மனமகிழ்ச்சியோடுஅவ்வுரிமையெல்லாம்கொடுத்துவிட்டே வனசஞ்சாரியாக வந்த அச்சிராமனைப் புகழ்ந்துபேசாமல் இப்படிசொலலத்தகுமோ! உலகமுழுதும் தன்னை யொருங்கு நின்றுபொருதாலும் வெற்றி யடையு மக்கோதண்டமேயன்றி வேறுதுணை வேண்டுவனோ? தன் துணை யொருவருந் தன்னில் வேறல்லானாகிய இராகவன் புன்றொழிற்குரங்கோடு பொருந்து நட்பினையுடையானுவனே! தன் தம்பியரல்லது வேறுயிர்தனக்கு இவ்வுலகத்திலில்லை யெனத் துணிந்திருக்கின்ற அவ்விராகவன் என் தம்பியும்நானும் போர்செய்வதற்குடன் பட்டபொழுது இடையில் அருளாழிபோல்வானுயிருந்தும் அம்பினைத்தொடுப்பானோ, நீ சிறிதுபோதிரு, இமைக்கும் நேரத்திற்குள்ளாக நான்கோபித்துச் சென்று அவனுயிரைக்குடித்துத் திரும்புகிறேன். அவனை உயிர்குடித்துவருவ தல்லாமலும் அவனுக்குத் துணைவருவாரையும் கருத்தழித்து வருகின்றேன், கலங்கவேண்டாமென்றான்; அதற்கவளோ வேறுரைசொல்ல அஞ்சிநின்றாள்.

பின்பு வாலியோ போரென்று சொல்லவே பூரிக்கின்ற தோள்களுடன் கீழ்த்திசையி லுதயஞ்செய்கின்ற சூரியன்போல யாவருங்கண்டு பயப்படத் தூணிற்றோன்றிய அழகிய சிங்கனைப்போலப் புறப்பட்டு அக்கிட்கிந்தை மலையினோர்புறத்திலே நின்றான். அவ்வாறுலகத்தைத் தாவியளந்த கள்ளமாமாயனாகிய திரிவிக்கிரமனேபோல ஆகாயமளாவிய வடிவுடன் நிற்கின்றவாலி தன் தம்பியைக் கண்ணுற்றுக் கொக்கரிக்க எல்லாவுலகங்களுஞ் செவிடுபட்டன, அந்தத்தருணத்திலே வாலியைப்பார்த்து இரகுநாயகன் அருகினின்ற தம்பியைக் கடாட்சித்து அப்பா இலக்குமணா! அசுரரும் அமரருமிருக்கட்டும். எக்கடல், எம்மேரு, எச்சண்டமாருதம், எக்காலாக்கினி, இவன் சரீரத்தையொக்குமென்பதனை நீயே நன்றாகப்பார் ? என்றனர். அதைக்கேட்ட இளைய பெருமாள் அண்ணா! இப்படிப்பட்ட தமையனைக் கொல்லவும் நமனைத்தேடிக் கொண்டு வந்துவைத்து தம்பினச் சண்டைசெய்ய நேர்ந்தானே! சிறிதும் மனவருத்தங் கொள்ளாமலு மிருக்கின்றானே யென்று சகியாராய் அறநெறி தவறும்படி தேருமல் நடப்பவர்களை நாம் நம்பித்தேறுவது நலமன்று, தன் தமையனையே கொல்லச்சமைந்த இவன் நம்மைப்போன்ற பிறருக்குச் சகாயமாக எவ்வாறமைவான் என்றனன். அச்சொல்லைக்கேட்ட இரகுநாயகன் அப்பா! நான் சொல்வதொன்றுகேள்; இப்பித்தாகியகுணத்தையுடைய மிருகவொழுக்கத்தைப் பேசவும் வேண்டுமோ! எத்தாய்வயிற்றிலும் பிறந்த தம்பிமாரெல்லாம் முன்பிறந்த தமையன்மாரோ டொத்திருப்பாராயின் நமது பரதன் மிகவுத்தமனென்று வழங்குகின்ற சொல்லுமுண்டோ? உலகத்திலே நல்லவர் சிலரும்தீயர் பலருமாயிருக்கின்றனர், இஃது உண்மைதான்.காரிய சாதகத்தை நோக்குகின்றவர்கள் ஒருவரிடத்துள்ள குணத்தைமாத்திரம்பார்த்துக் கொண்டு நடக்கவேண்டுமே யல்லாமல் அவர்கள் குற்றம் பார்க்கவேமாட்டார்கள். அவ்வாறுபார்த்தால்குற்றமில்லாதவரோஒருவருமிலர். இக்கருத்தேபற்றியே பெரியாரும் 'குணநாடிக் குற்றமுநாடியவற்றுள் மிகைநாடி மிக்ககொளல்' என்றுஞ் சொல்லியிருக்கின்றனர் என்றனர். இவ்வண்ணம் மைவண்ணமேனி மரகதமலைபோன்ற இரகுநாயகன் சொல்லிக் கொண்டிருக்கையில் வாலியும் சுக்கிரீவனும் இரண்டுதிசை யானைபோன்ற மலையுமலையும் எதிர்த்ததுபோலவும் சிங்கமும் சிங்கமுமெதிர்த்தது போலவுமெதிர்த்து நின்றுந்திரிந்தும் மிக்க வேகமாய்ச் சாரிகைவந்தனர். அப்போ துலகமோ குலாலனது சக்கரம்போற் சுழன்றது. தோளோடு தோள்மோதியும்காலொடுகால்பின்னியும்கோபாக்கினி மிகுதியுங் கொண்டுடம்புதெரியாமல் வீராவேசமாய் போர்செய்துவந்தார்கள். இவர்கள் ஒருதாய் வயிற்றிற்பிறந்து அரம்பையின் பொருட்டுப் போராடி முடிந்த சுந்தோபசுந்தரை யொத்துப் பின்வாங்காமற் போர்செய்தனர். இவ்வாறு போர்செய்கையில் மேருவோடுமேருவும் கோபந்தானே இரண்டுருவங் கொண்டது போலவும் போர்செய்துவருகையில் இவரிருவரும் கோபிப்பதனாலுண்டாகிய தீயினால் மேகங்கள் கரிந்துபொரிந்து போயின, மலைகளெரிந்து போயின, திசையானைகள் நடுங்கின, உலகவடுக்குகள் குலைந்தன, இவர்கள் யுத்தவேடிக்கையைப்பார்க்க ஆகாயத்தில் நின்றுகொண்டிருந்த தேவர்களும்

நடுநடுங்கி மறைந்துபோயினர். இவ்வாறு போர்செய்யும் வாலிசுக்கிரீவர்க ளிரு வரும் இருந்தாற்போலிருந்து ஆகாயத்திற்செல்வர்; மலைச்சிகரத்திற்குதிப்பர்; பூமியில்வருவர் திக்குகளி லோடித்திரிவர், சகலவுயிர்களின் கண்ணிலுமிருப் பாரேபோல அங்கங்கேதிரிவர், ஒருவரையொருவர் உதிரம் கக்கும்படிகடிப்பர் பத்துத்திக்கிலும் சென்று முட்டுவர் சத்தசாகரவோசையிலும் ஐந்துபங்கதிக மாகக் கர்ச்சிப்பர் ; இவர்கள் உடம்பிலிருந்து வடிகின்ற உதிரம்பாய்வதனால் ஆகாயத்தில்தோன்றுநக்ஷத்திரங்கள் எல்லாம்செவ்வாயென்னும் கிரகம்போல விளங்கின, மேகங்களெல்லாம் செவ்வானம்போல் விளங்கின, ஒருவரோடொ ருவர் இரணகளத்தில் கருமானுலைக்களத்தில்வெந்த இரும்பைப்பாறைமேல் வைத்துச்சம்மட்டியினால் அடிக்கத்தீப்பொறி சிதறுவதுபோல்தீப்பொறிசிதற வாலியினுடையதோளும் சுக்கிரீவனுடைய மார்பும் சக்கைசக்கையாய்ப் பேர் ந்தன. அவ்விருவரும்ஒருவரையொருவர்மார்பாலுந்தியும்காலாலுதைத்தும்கை யா லெடுத்தெறிந்தும் கடித்தும் இடித்தும் மரங்களை வேருடன்பிடுங்கியடித் தும் மலைகளைப்பிடுங்கித் தலைமேல்வீசியும் அதட்டியும் களைத்தும் கண்ணில் தீயெழவிழித்தும் பின்னும் ஒருவரையொருவர் நெருக்கிப் பிடித்துத்தூக்கியும் வெகுநேரம் போர்செய்தனர். இவ்வாறு போர்செய்கையிற் சுக்கிரீவன் மிகவு மெலிந்து இரகுநாயக னிடத்தேவந்து முறையிட்டுக்கொண்டனன். அத ற்கு இரகுநாயகன் நீங்கள் இருவரும் போர்செய்கையில் உங்களிருவருக் கும் வேற்றுமை தெரியாமையால் அம்பெய்யாமலிருந்தேன். இப்போது இம் மலரைத் தரித்துக்கொண்டுபோனால் நானிடையே யம்புதொடுக்கிறேன் போ வென்றனன். அதைக்கேட்ட சுக்கிரீவன் அவ்வாறே அம்மலர்புனைந்து சென் று வாலியிடமணுகி யுருமுநாணக் கர்ச்சித்துப் பலமுறைபோர்செய்தனன். வாலியோ சுக்கிரீவன் வருந்த உயிர் நிலைதோறும் தன்னுடைய வயிரமாகிய கைகளாற்குத்த அதனாற் பெருமூச்சு விட்டுக்கொண்டுயிர்நீங்கியவன்போன்று மூர்ச்சையடைந்தனன். பின்னும்அவன்செவியின்வழியாகவும் கண்ணின்வழி யாகவும்உதிரங்கான்றது. இவ்வாறுஅடிபட்டுநொந்துவருந்திஇரகுநாயகனிருந்த இடநோக்கி யோடவே, அதைக்கண்ட வாலியோ ஓடிவந்து தோள்பிடித்துக் கொண்டு மடல்நெரிய நெருக்கி யரையிலொருகையும் கழுத்திலொரு கையுமா கக்கொடுத்து நிலத்திலறையும்படி துணிந்தனன். அத்தருணத்தில் இரகுநாய கன் இவ்வாலியோ, சுக்கிரீவனைத் தப்பாமற் கொல்வானென்றெண்ணித் தன் கோதண்டத்தைவளைத்து நாணேற்றித் தோளளவும்வாங்கி யொருவாளியைப் பிரயோகிக்க, அது வாலியினது மார்புக்கு நேரேவந்தது ; அவ்வாறு இலட்சிய மாக அதுமார்பையே நோக்கி வரக்கண்டுவாலி தம்பியைக் கொல்லத் துணிந் ததை விடுத்து நின்றனன்.

அந்தப்பாணமோ பஞ்சபூதங்களின் பேராற்றல் முழுதுமொரு சேரத்திர ண்ட வாலியினது மார்பிலே கதலிக்கனியிலூசி நுழைவதுபோல் தடைபடா மல் நுழைந்தது. அப்போதுதனக்குத் தோற்றோடிய தம்பியைக் கொல்லத் துணிந்திருந்த வாலிமனங்கலங்கி ஊழிகாற்றால் வேர்பறிந்துவிழ்ந்த மகாமேரு வேபோல விழுந்தான், அவ்வாறு இடிவிழுந்த மலைபோலவிழுந்த வாலி தன்

தம்பியைக் கொல்லத்துணிந்ததை விட்டுவிட்டுத் தன் மார்பிலுருவிப்போ கின்ற அவ்விராம பாணத்தைத் தன்போராற்றலால் அம்மார்பில் நுழைந்து போகாமல் தடுத்துத் தன்கையாற் பிடித்துக்கொண்டு ஆகாயமட்டுங் கிளம்பி அண்டகடாகத்தையு முடைத்துவிடுகிறேனென்று கர்ச்சித்து எழுவான். ஒரு ஞூந்துருளு மளவில் திக்குகளையெல்லாம் நிர்த்தூளியாகச் செய்கிறேனென்று கோபிப்பான். மீளவும் விழுந்து பூமியிற்புரண்டு நிலத்தைவேருடனே பறிக் கின்றேனென் றுறுக்குவான். இப்பாணத்தை யென்மார்பே யிலக்காக வெய் தவன் யாரென்றே யையப்பட்டு அதிசயமாய்ப் பூமியைத் தன்கையாலறை வான். நாற்றிசையையும் சுற்றிப்பார்ப்பான், அந்தப்பாணத்தைத் தன்கையா லும் வாலினாலு மிறுகப் பிடித்துக்கொண்டும் பறிக்கக் கூடாமையால் நிலத் திலே யொருமலையுருள்வதுபோலுருள்வான். இக்கரந்த செய்கையைச் செய் தார் தேவர்களோ வென்றையப் படுவான். மற்றும் அத்தேவர்கள் இச்செய் கைக்குத் தக்கவரோ அன்றே யென்றும் நினைப்பான். அவர்களுக்கும் இவ் வளவு பேராற்றலுண்டோ வென்றும் சிந்திப்பான். உடனே சிரிப்பான். பின் னும் மும்மைப் பெருந்தேவருக்கு மொப்பானவனன்றோ இச்செய்கையைச் செய்திருக்க வேண்டுமென் றெண்ணுவான். என்மார்பிற் பட்ட படைக்கலம் விஷ்ணுவினது சக்கரப்படையோ, முக்கண்முதல்வன் சூலப்படையோ, குமர நாயகன் கைவேலோ, இந்திரனுடைய வயிரப் படையோ, எப்படிப்பட்ட படைக்கலங்களும் என்மார்பிற் சென்றாடுருவ மாட்டாதே, ஆயினும் இது மற்றெதுவோவென்று திகைப்பான். இதைமுற்றத்துறந்த முனிவர்கள்தங்கள் வல்லமையாலேவினரோவென்றுஞ் சிந்திப்பான். தன் பற்களாற்பலமுறைகடித் திழுத்தும் பறிக்கக் கூடாமற்செல்லுகின்ற அப்பாணத்தைவிடுத்தவன் இன்னா னென்றறிவோமென்றும், இதுவோபாணமேயென்றும்துணிந்துஅதைமீண்டும் வாலையும் இரண்டு கையையும் காலையுங் கொண்டுறுதியாகப் பிடித்துக் கொண்டு இழுத்துப் பறித்தான். அதைக்கண்ட தேவர்கள் அசுரர்கள் முத லானவர்களும் வாலியைப் புகழ்ந்தனர். உலகத்தில் வீரர்களைப் புகழாதவர் கள் யாரிருக்கின்றனர். அவ்வாலியினது மார்பாகிய மலையிலிருந்து உதிரப்பிர வாகமெழுந்தது. அது அருவியாறுபோல விளங்கிக் கிடந்தது. அதைக் கண்ட சுக்கிரீவனும் உடற்பிறப்பென்னும் பெரும்பாசத்தாற் பிணிக்கப்பட் டுக் கண்களினின்றும் நீர் தாரை தாரையாகப்பெருக நிலத்திலே விழுந்தான். இதுகிடக்க;

வாலி தன்மார்பிற்சென்றுதைத்த பாணத்தைபறிக்கின்றேனென்று துணி ந்தும் கூடாமையால் நான் மகாமேருவையும் பறிக்கத்தக்க பேராற்றல்சமைந் தவனாக விருந்தும் இப்பாணத்தை முறிக்க என்னாலாக வில்லையே யென்று சிந்தித்து இதில் யாருடைய பெயரெழுதி யிருக்கின்றதென்று பார்க்க மும்மை யுலகங்கட்கு மூலமந்திரமாயும் தியானஞ் செய்பவருக்குத் தற்சுவரூப மளிக் கின்ற தாரக மந்திரமாயும் இம்மை மறுமை யென்னுமிரண்டனையு மளிப்ப தும் பிறவி நோயைகெடுக்குமருந்துமாகிய சிராமனென்றெழுதியிருக்கக்கண்டு கொண்டான். அதைக்கண்ட வாலி எப்போதும் வேதமுதலிய கலைகளினாற்

சொல்லப்பட்டுள்ள இச்சூரியவமிசத்தில் இந்தராமன் பிறந்து இல்லறந்துறந்து வானப்பிரத்த மடைந்தும் எங்கள்பொருட்டு வில்லின் தருமத்தையுமிழந்தே நெறியிற்கோணினானென்று நாணங்கொள்வான். தன்தலையை யசைப்பான் அதிக வார்ப்பாடமாய்க் கலகலவென்று நகைப்பான். மீளவுஞ் சிறிது நேரஞ் சிந்திப்பான். இதுவும் ஒரு தருமமோ வென்பான். காலிற் பூட்டிய விலங்கோடு குழியில் விழுந்த மதயானை போலுழைத்துக் கொள்வான். பின்னரும் தன்மெய்ம்மறந்து சோர்ந்து கிடப்பான். உலகங்கட்கெல்லா மிறைவனாகிய இரகுநாயகனே தருமவிரோதமாக நடப்பானானால் மற்றவர்கள் எவ்வாறாக வேண்டுமென்று சிந்திப்பான். இரகுநாயகனும் தன்செய்கையில் மாறுபட்டானல்லவாவென்று சொல்லும் வாலிமுன்னே அப்பெருந்தகையு நடந்து போக அவனை வாலியும் நீலமேகம் கமலமலர்பூத்து மண்ணிலடைந்து கட்டமைந்த வில்லையேந்தி வருவதேபோலும்கண்டு என்னகாரியஞ் செய்துவிட்டாய் என்று சொல்வானாயினான். அப்பா இரவிகுலதிலகனே! நீ மெய்ம்மைக்குயிர்விட்ட தயரதன் மகனேயன்றோ! எல்லாநற்குணங்கட்கு மிருப்பிடமாகிய பரதனுக்கு முன்றோன்றலேயன்றோ! தீமையென்பது பிறர்செய்யாமல் தான் செய்வதோ! குலம் கல்வி வெற்றி நலம்பெற்றிருப்பதன்றி இம்மும்மையுலகங்கட்கு நாயகமுநீயன்றோ! கடலையாடையாகவுடுத்த உலகத்தைத்தாங்கும்வல்லமை யிதுவென்றால் உன்னுண்மையை இப்படியுங் காட்டலாமோ அறிந்திருந்துமயர்ந்தவர்போல வென்றுசொல்லிவிட்டுப் பின்னுஞ்சொல்லுகின்றான். சானகியைப் பிரிந்தபின்பு நின்செய்கையில் மாறுபட்டனைபோலும்! அரக்கர்கள் ஒரு தீயகாரியத்தைக் செய்துவிட்டால் அதன்பொருட்டு ஒரு குரங்கைக் கொல்லும்படி உங்கள் மனுநூலிற் சொல்லியிருக்கின்றதோ! நீயெங்கே யிரக்கத்தை விட்டாய்! என்னிடத்தே என்னபிழை கண்டாய்! நீயே மிக்க தீமையான காரியங்களைச் செய்துவிட்டால் புகழை யார்தான் பரிப்பவர்கள். இவ்வுலகத்தில் ஒருகுரங்கு நிமித்தமாகக் கலிகாலந்தோன்றியதோ! ஒழுக்கமும் விழுப்பமும் எளியவரிடத்திலேயோ! வலியார் மெலிய காரியங்களைச் செய்தாற் புகழே யல்லாமல் வசையு முண்டாமா! துணையொருவரையும் வேண்டாத சிராமா! உன் தந்தைகொடுத்த இராச்சியபாரத்தைத் தம்பியாகிய பரதனுக்கே கொடுத்து நாட்டிலொருகருமத்தைச் செய்தாய்! என்தம்பிக்கிந்த அரசைக் கொடுத்துக் காட்டிலொருகருமஞ் செய்தாய்! கருமமென்பதிதன்மேலுமுண்டோ? என, அதற்கு இரகுவீரன்சொல்லத்தொடங்கினான். நீ முற்காலத்தில் பிலத்துவாரவழியே சென்று வராமலிருந்தனை! அப்போதுஉன் தம்பியாகிய சுக்கிரீவன்துன்பமடைந்து தானும் அப்பிலத்துவாரத்துக்குள் உன்னிடம் வரப்புறப்பட்டான். இவனை உன் குலத்து முதியோரும் படைத்தலைவரும் பிடித்துக்கொண்டு நீயும் போதியேல் எங்களுக்குயார் கதி! இனி நீயேனும் அரசுபுரியென்று வேண்டினர். அவர்கள் அவ்வாறுரைத்தும் கேளாமல் என்தமையன் இறந்து பட்டும்யான் உயிருடனிருப்பது தகுதியோவன்றே, நானும்இறந்துபடுகிறேன். நானரசும்புரிவதில்லை; என்ன வார்த்தைபேசினீர்கள்! என்றுமறுத்தான். அவர்கள் மீட்

டும் இணங்கும்படி சொல்லக்கொண்டு அரசுபுரியச் சம்மதித்தான்; பின்னிவந்த
போதுன்னைப் பணிந்துன்னரசைக்கொடுத்து விட்டதன்றி நடந்த செய்தியை
யும் தெரிவித்தான். நீ இவனிடத்திரக்கமின்றிக் கறுவுகொண்டு உபத்திர
வஞ் செய்தனை, அப்போதிவன் 'சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம்
பெரியோராயிற் பொறுப்பதுகடனே' என்றபடி என்பிழையனைத்தும் பொ
றுத்தருள வேண்டு மென்றும் கெஞ்சிக் கேட்டான். அவ்வாறு கேட்டும்
தம்பியென்பதை யெண்ணாமல் இவனைக்கொல்லத்துணிந்தனை. நாற்றிசையி
லுமோட்டெடுக்கத்துரத்தினை. உனக்குச் சாபநேர்ந்த இம்மலையையடைந்து
இவன் தன்னுயிரைக்காத்துகொண்டான். அம்மலையில் நீயேறக்கூடாமை
யால் இவனுயிர்பிழைத்தான்; என்று மறிவினையுடைய மேலோர் பிறன்றாரத்
தை நச்சார்கள் தருமநெறிதவறுவதாவது பிறர் மணஞ்செய்து கொண்ட
பெண்ணைக்கைக் கொள்ளுவதென்றே துணி. அது அன்பும் உயர்குடிப்பிறப்
பும் வீரமும் கல்வியும் மெய்மையும் நீதியுஞ் சிதைக்கும். நாம் பேராற்றலுடை
யோமென்றே தகாதகாரியத்தைச் செய்யவு மொண்ணாது. நீ தருமத்தைச்
சிந்தியாது இம்மைமறுமையிரண்டனையு நோக்காது உனக்குரிய பெருமையுங்
கைவிட்டு உன்னருமைத், தம்பிக்குரியதாரமாகிய உருமை யென்பவளையும்
கைக்கொண்டதனாலும் நானிவனுக்குப் பிராணபதமாகிய நண்புடையனாத
லானும் அன்னியரோனும் எளியாரோனும் அவர்க்கெய்திய துன்பந்துடைப்
பதே யான்கொண்டவிரதமாதலானும் இவ்வாறுசெய்தேனென்றான். அதைக்
கேட்ட வாலி இரகுநாயகனை நோக்கி நீர் தகாதசெய்கையென்ற இத்தனையும்
நாங்கள்விலங்காகையால் எங்களுக்குரிமையென்று சொல்லிவிட்டுப் பின்னுஞ்
சொல்லத்தொடங்கினான். உங்களைப்போல நான்முகக்கடவுள் எங்களுக்கும்
விதித்தானில்லை. எங்களுக்குத் தாயென்றும் தங்கையென்றும் தமக்கையென்
றும் தம்பிமனைவியென்றும் தன்மனைவியென்றும் அயலான் மனைவியென்றும்
பேதமே கிடையாது. நாங்கள் கலியாணஞ் செய்துகொள்வதுமில்லை. நாங்
கள் விலங்கின்சாதியாகையால் மனம்போன வழிநடப்பதேயெமதுகொள்கை.
எங்களுக்குவேதமோ தாரிற்குநெறிகிடையாது. ஆதலால்என்பாற்சிறிதுங்குற்ற
மில்லையென்றனன். அதற்குக்காகுத்தன்சொல்லத்தொடங்கினான். நீங்களிரு
வருமெவர்க்குமேலாகிய தேவர்களுக்கு மக்களாகப்பிறந்துதருமநெறியுணர்ச்சி
யுடையராயிருப்பதனால் உமக்குவிலங்கின் றன்மையேயில்லை. ஆதலால் நீங்
கள்அதருமநெறியி லொழுகுவது அடாது. அறநெறியொழுகும் புலனிற்செல்
லாததுசடமாகியதேகமேயன்றோ! ஆன்மாவன்றே! எல்லாத்தருமங்களையுமறிந்
திருக்கின்ற நீயே பாவத்தைச் சுமையாகக் கட்டிக்கொள்ளலாமோ! முதலை
பிடித்திழுக்கத் தன்னைக் காத்தருள வேண்டுமென்று மூலப்பொருளைக் கூவி
யழைத்தது யானையேயன்றோ! அக்கயேந்திரனும்விலங்கினுருவமுடையானே
யன்றோ! தரும சிந்தனைமேற்கொண்டு சானகியின்பொருட்டு இராவணனோடு
போர்செய்து உயிரைத்துறந்த எமது பிதாவாகிய சடாயுவும் கழுகுகட்கிறை
வனேயன்றோ! ஆதலால் அறிவென்பதே சிறந்தது. இதுநன்மை இதுதீமை
யென்றுணராது நடப்பவரேயன்றோ;விலங்காவரெனவேதநூல்முறையிடுகின்

றன. இதெல்லா நீ யறியாததுமன்றே, இது தக்கது இது தகாததென் றுணரா தாரெல்லாம்மனித யாக்கையை யுடையாரேனுமவரை மனிதரென்றேகொள் ளற்பாற்றே, விலங்குருவ முடையாரேனும் நீதிநெறியொழுகுவரேல் அவ ரைத்தேவரோடொப்பக் கொளல்வேண்டும், நீயோகாலனைக்கடந்தகறைமிடற் றிறைவனைப் பூசித்து ஆகாயமொழிந்த மற்ற நான்குபூதங்களின் வல்லமையும் பெற்றிருக்கின்றனை, உலகின்கண் அநேகர் அறநெறி யொழுகா நிற்கின்றனர். அநேகர் அறநெறி யொழுகாதிருக்கின்றனர். தேவரினுந் தீமைசெய்து திருத் தப்பட்டிருக்கின்றவர் பலர், எந்தக் குலத்திற்பிறந்த எப்படிப்பட்டவராயினும் 'பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்-கருமமே கட்டளைக்கல்' என் றபடி பெருமையுந்தாழ்வும் அவரவர் செய்கையால் உண்டாகின்றன. அதனை யறிந்திருந்தும் நீ இல்லறவொழுக்கங்கடந்து நடந்தனையேயென்றான். அதற்கு வாலி நீர் வேடரம்பெய்வதுபோலவே மறைந்திருந்து அம்பெய்யலாமோ வெ ன்றான்.

அதைக்கேட்டருளிய இராமநுசன் சொல்லத் தொடங்கினன். முன் னேவந்துஉன்பின் றோன்றலாகியஇச்சுக்கிரீவன் புகலென்றடைந்தனன். அது போது என் தமையனாகிய இரகுநாயகன் முறைதவறிய உன்னைக் கொன்று தீர்த்து இவனைக் காப்பேனென்றனன். எம்மிறைவன் உன்னெதிரே வருவ னேல் நீயும் அவன்பால் 'தன்பிராணன்தித்திப்பு' என்றபடி உன்னுயிர்மே லா சைவைத்து அடைக்கலம் புகுதியேல் தன்சொற் பிறழுமேயென்று நினைத்து மறைந்திருந்தே யம்பெய்தனனென, அதைக்கேட்ட வாலியுந் தான்கொண்ட கோபந் தணிந்து அறவாழியந்தணனாகிய இரகுநாயகன் பிழைபட வொழுகா னென்பது துணிந்து கேள்விச்செல்வத்தாற் றேட்கப்பட்ட செவியையுடைய வாலி மெய்யுணர்ச்சியுடையனாய் அப்பெருந்தகையைப் பணிந்துதுதிப்பானாயி னான்.

தாயெனவுயிர்கட்குக் கருணைசெய்து தருமமும் தகவும் சால்புடைமை யும் நீயெனநின்ற இறைவனே! நெடிது நீநோக்கு மாற்றலுடைமையனா யிருந்தும் நாய்த்தன்மையுடைய என்பாற்குற்றம் அறியலாமோ! தீயவற்றைப் பொறுத்தியென்று சொல்லிப் பின்னும் இவன் குரங்குதானேயென்று நான் கூறிய பிரிய அபராதமொழிகளையுமனத்திற்கொள்ளவேண்டாம். பிறவிப்பிணி க்கு மருந்தே போன்றவனே! யான் சொல்வதைக்கேளென்று சொல்லத் தொடங்கினன்.

எவுகூர் வாளியா லெய்துநா யடியனேன்
ஆவிபோம் வேலைவா யறிவுதந் தருளினாய்
மூவர்நீ முதல்வநீ முற்றுநீ மற்றுநீ
பாவநீ தருமநீ பகையுநீ யுறவுநீ.

*  *  *  *

உண்டெனுந் தருமமே யுருவமாய் நின்றநிற்
கண்டனன் மற்றினிக் காணவென் கடவனே
பண்டொடின் றளவுமே யென்பெரும் பழவினைத்
தண்டமே யடியனேன் றகுபதந் தருமதே.

என்றுதுதித்து என்தம்பி என்னைக்கொல்ல உன்னைக்கொண்டுவெகுவிடத்துச் சிற்றினமாகிய குரங்கினத்துள்கூடியிருந்தாராய்ந்து அரசாண்டுவரும் வெற்றா சினைத்தானேற்றுநிரதிசயவின்பத்தைத்தரும்சிந்தையுமொழியுஞ்செல்லா நிலை மைத்தாகிய அப்பேரின்பவீட்டையெனக்குக் கொடுத்துவிட்டானே. இதைக் காட்டிலும் பெரிதாகிய உதவி வேறுண்டோ! உம்மிடத்தில் நானொருவரங் கேட்கத்துணிந்திருக்கிறேன். அது என்தம்பியாகிய இச்சுக்கிரீவன் குரங்கினத் தியல்பாற் கள்வெறிகொண்டு அறிவுமயங்கி உம்மிடத்தே யாதேனும்குற்றமே செய்துவிடினும் என்மேலேவிய பாணமாகிய கூற்றுவனை அவன்மேலேவ வேண்டாம். இன்னமொன்றுண்டு; அதாவது என்தம்பியைத் தேவரீர் தம்பி மார் தன்தமையனைக் கொல்வித்தவனென்று இகழ்ச்சிசெய்யாவண்ணம் பாது காக்க வேண்டுகிறேன். நீரோ அவனுக்கு முன்னம் அபயங்கொடுத்தே யுன் குறையை முடிக்கிறேனென்று சொல்லியிருந்தீர்; அதைக்கர்மானுகுணமாய்க் கடக்கக்கூடுமோ! நானம்மாயாவியாகிய அவ்விராவணனைப் பிடித்துவந்து தேவரீருடைய சந்நிதானத்தில்விடுத்து என் குரங்கின்றொழிலைக் காட்டாமற் போய்விட்டேனே. இனி அதைச்சொல்வதனாற்பயனென்ன? ஆயினும்இங்கே நீர் நினைத்ததைச் செய்யவேண்டுமென்றால் இவ்வனுமானே செய்யவுரிமை யுடையான். இவனைத் தேவரீர் கையிற்பிடித்திருக்கின்ற கோதண்டம்போ லெண்ணவேண்டியதன்றி இவனைத் தேவரீர் திருத்தம்பியைப் போலவு நினைக்கவேண்டும். இவனுக்கொப்பானதுணை யுமக்கொருவருமிலர்! இவனால் நமது சானகியாரைத்தேடிக் கண்டுபிடித்துக்கொள்ளுமென்று சொல்லினன்.

பின்பு தன்னருகே யழுதுகொண்டுநின்ற சுக்கிரீவனைநோக்கி தம்பீ! தழுநீ வருந்த வேண்டாம்; என்னருகே வாவென்றழைத்திறுகச் சேர்த்துத் விக்கொண்டு வேதமும் முற்றத்துறந்த முனிவரும் பிரமன்முதலிய கடவுள ரும்சமஸ்தகலைகளும் எடுத்துச்சொல்லும்பரம்பொருளே இங்கு கோதண்டங் கையிலேந்தி இராமனென்று திருப்பெயர்கொண்டு அறத்தைநிறுத்த அவதரித் திருக்கின்றது. இதற்கெவ்வளவு மையமேயில்லை. நிலைபேறுடைய நிரதிசய வின்பத்தைவிழைந்து அதற்கியைந்த வழியில் நிற்கின்ற சேதனர்களெல்லாம் இவனது திருநாமத்தையே கற்கின்றனர். இவனையே யுள்ளத்திற்சிந்திக்கின்ற னர். இதற்குச் சாட்சிவேண்டுமாயின் என்னைக்கொன்றவொன்றே அதற் கத்தாட்சி. என்றென்றும் இவனுக்குத் தீயகருமங்களைச் செய்பவரும் வீடு பேறெய்துவரொனின் இவன்றாட்கே குற்றேவல் செய்தொழுகுபவரடையும் பேறு எண்ணத்தான்வேண்டுமோ, அதைச்சொல்லத்தான் வேண்டுமோ! உன க்கு விதியாரோ இவ்வுதவிசெய்தாரெனின் அருமையென்பதியாதிருக்கின்றது. இனி செய்யத்தக்கதுமென்ன! திருமறுமார்பனாகிய கள்ளமாமாயப்பிரானது திருவவதாரமெனப்படும் இவ்விரகுராமனுக்குக் குற்றேவல்செய்துகொண்டு சிந்தையை யொருவழியே நிறுத்தி மும்மையுலகத்தவரினு முயர்ந்திருக்கக் கடவை. மதத்த குரங்கினறிவைக்காட்டாமல் உன்பாற்செய்த நன்றியையே நினைந்து இவற்காபத்து நேர்ந்தபோது உன்னுருயிரோனுங்கொடுத்து யாவருக் கும் பரமபதத்தைக் காணியாகத்தரும் இவனது கட்டளையைத் தடுக்காமற்

செய்து என்றுமொழியாத பிறவிப்பெருங்கடலைக் கடந்துவிடவேண்டும். அரசாட்சியின் பெருக்கத்தாற் களிப்படைந்து மறந்தும் இகழ்ச்சிசெய்யாமல் இவனது பாதசேவையை நீங்காமற்செய்துவாழ வேண்டுகிறேன். அரசரும் எரிதியுமொப்பொன்றேயே. இதுபற்றியே பெரியாரும் 'அனுகாதகலாது தீக்காய்வார்போல்க, விகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகுவார்' என்றுஞ்சொல்லியிருக்கின்றனர். அரசர்களோ தம்மடிமைகள் செய்தகுற்றத்தைச்சிறிதேனும்பொறுக்கவேமாட்டார்கள் என்று பல நீதிகளையெல்லாம்போதித்து இரகுநாயகனைநோக்கி இறைவனே! இவனும் இவன் சுற்றமும்இன்றுமுதல் தேவரீரது அதீனம்; இவன்சுற்றமும் உமது அடைக்கலப்பொருளென்றேயொப்பித்துஅவனையும் இரகுநாயகனிடத்திற் கையடையாகக்கொடுத்துத் தம்பியைநோக்கி இனி உன்மகனாகிய அங்கதப்பெருமானை யழையென்றனன். அவனுமொருபடைத்தலைவனைக்கொண் டழைப்பித்தான். அத்தருணமே அங்கதப்பெருமான் இளஞ்சந்திரனேபோலவந்து சேர்ந்து இதுவரையிலும் துன்பப்படுமவரைக் கனவினுமறியாதானதலால் பூவணைதுறந்து நிலக்கட்டிலிற் படுத்துக்கிடக்கின்ற தன் தந்தையைக்கண்டு கண்களில் மலையருவிபோலத் துன்பக்கண்ணீர்சொரியநின்று தன் மண்டலத்துடன் வீழ்ந்துகிடக்கும் பூரணசந்திரன்மேல் வானினுள்ள ஓர்காண்மீன் வீழ்வதுபோல் வீழ்ந்து புலம்பத்தொடங்கினன்.

எந்தையேயெந்தையேயிவ்வெழுதிரைவளாகத்தியார்க்கும்
சிந்தையாற்செய்கையாலோர்தீவினைசெய்திலாதாய்
நொந்தனையதுதானிற்கநின்முகநோக்கிக்கூற்றும்
வந்ததேயன்றோவஞ்சாதாரதன்வலியைத்தீர்ப்பார்.

* * * *

பஞ்சின்மெல்லடியாள்பங்கன்பதமலரலதியாதும்
அஞ்சலித்தறியாச்செங்கையாயாணையமாரியாரும்
எஞ்சலிருந்தாருன்னாலின்னமிர்தீந்தநீயோ
துஞ்சினைவள்ளியோர்களின்னில்யார்சொல்லற்பாலார்.

இவ்வாறு புலம்புகின்ற தன்மகனாகிய அங்கதப்பெருமானைத் தன்கண்களாரக்கண்டு அவனைத் தன்மார்போடிறுகத் தழுவிக்கொண்டுஇதுஎனக்குளப்பொருட்டு மிறைவனாகிய இரகுநாயகன் செய்தநன்மை. பிறப்பிறப்பென்பன உண்மையாகத்துணிந்து பார்க்குமிடத்து மும்மை யுலகத்தினு மிருக்கின்ற சேதனர்களுக்கும் அனாதியிலேயேசெய்த ஏற்பாடென்றே விளங்குகின்றது. முன்னே நான்செய்த நல்வினைப்பயனாலே எனக்கிவ்வகையான நன்மரணங் கிடைத்தது. நானிறக்குஞ்சமயத்தே ஆதியஞ்சோதியுருவை யங்குவைத்திங் குப்பிறந்த அப்பரம்பொருளே தெரிசனங்கொடுத்தனன். நீபேதைமைக்குணத்தைவிடுத்துப் பாரமார்த்திகமே மேற்கொண் டொழுகவேண்டும். யான்கூறியதை யுறுதியாகக்கைப்பிடி; தனக்கொப்பாரு மிக்காருமில்லாதஅப்பெருந்தகையே கோதண்டங்கையிலேந்தி இரகுநாயகனாகத்தோன்றி நிற்கிறான் மேலும் பேதைமை தாவிவரும் பிறவிப்பிணிக்குமருந்து மிவனேயாம்,

என்னருமை மகனாகிய அங்கதனே! இவனையே துணையாகப் பற்றிக்கொள். என்னைக் கொலைநேர்ந்தானென்று சிறிதேனுங்கொள்ளலை. உன்னுருயிர்க்குறுதியைத் தருமற நெறியிலொழுகவேண்டும், இவனுக்குப் போர்நேர்ந்ததாயின் இவனுடன் போவதே உன்னுருயிர்க்குறுதி, இப்பெருமான் அறநெறியொழுகுவார்க்கேயுற்ற துணையாவான், இவனதுபாத தாமரைகளைத்தலைமேல்தாங்கி வாழ்ந்திரு என்று சொல்லி இரகுநாயகனைப் பார்த்து இவ்வங்கதனே அரக்கரென்னும் பஞ்சினைத்தீக்கின்ற செந்தீயையொத்த புயவலியுடையான். குற்றமற்றசெய்கையுள்ளவன்.இவனும்உம்மடைக்கலமென்றுகாட்டிக்கொடுத்தான். அப்போது அங்கதன் இரகுநாயகனது பாதங்களையெட்டுறுப்புநிலமுறப்பணிந்தான். உடனே புண்டரீகக் கட்புரவலனாகிய இரகுநாயகன் தன்னுடைய வாளை அவன்கையிற்கொடுத்து நீ இதைத் தாங்கிக்கொண்டிருவென்றுகட்டளையிட்டனன். அவ்வாறவர்சொல்ல, ஏழுலகத்தவரும்"இவ்வங்கதன் இறைவன் கருணைக்கிடமானது கண்டு மிகவதிசயமென்று புகழ்ந்துநின்றனர். பின்னே வாலி தன்கையிற்பிடித்திருந்த இராமபாணத்தை நெகிழவிட அது அவ்வாலியினது மார்பைத் தொளைத்துக்கொண்டு உயரவெழும்பிச்சென்று நன்னீர்க் கடலினீராடி இராகவன் அம்பறாத் தூணியில் வந்துசேர்ந்தது, பின்னே இந்திரன் மகனாகிய வாலியும் இறந்துபட்டு தேவர்க ளுலகுக்கெல்லாம் அப்பாற்பட்ட"பரமபதமடைந்தான். இதுகிடக்க.

வாலிக்கு யாவருமடைதற்கரிய பரமபதங்கொடுத்த இரகுநாயகனும் சுக்கிரீவனுடன் அங்கதப்பெருமான் முதலிய வானரர்சூழ்ந்துவர அதைவிட்டு அப்பாற்சென்றிருந்தனன். அப்போது தாரையென்பவள்இச்செய்தியைக் கேட்டுப் புலம்பிக்கொண்டே அவனிறந்துபட்ட இடத்தையடைந்து அவ்வாலிமேல்விழுந்து அவனுதிரம் தன்னுடம்பிற் குங்குமப் பூச்சுப்போற்படிய தலைமயிர் சிவப்பேறஅவன்மார்பின்மேற் புரண்டழுதாள். அது எப்படியிருந்ததென்றால் செவ்வானத்தின் மின்னற்கொடி விளங்குவதேபோல் விளங்கிற்று. பின்னும் அவள்புள்ளங்குழலும்யாழும்வீணையுநாணத்தலைமயிர் அவிழ்ந்து நிலத்திற்படியப் புலம்பியழத் தொடங்கினாள்.

வரைசேர் தோளிடை நாளும் வைகுவேன்
கரைசே ராவிடர்வேலை கண்டிலேன்
உரைசேரா ருயிரோ யென்னுள்ளமே
அரைசே நானிதுகாணவஞ்சினேன்.

துயராலே தொலையாத வென்னையும்
பயிராயோ பகையோடு பண்பினோய்
செயிர்தீராய் விதியான தெய்வமே
உயிர் போனாலுடலாரு முய்வரோ.

* * * *

தகைநேர் வண்புகழ் நின்றுதம்பிமார்
பகைநேர் வாருளரான பண்பினால்
உகநேர் சிந்தியுலந் தழிந்ததால்
மகனே கண்டனையோ நம்வாழ் வெலாம்.

அருமந்தற் றமகற்றும் வில்லியார்
ஒருமைந்தர்க்கு மடாததுன்னினார்
தருமம்பற்றிய தக்கவர்க்கெலாம்
கருமங் கட்டளை யென்றல் கட்டதோ.

அவள்இவ்வாறு புலம்பிக்கொண்டுமூர்ச்சையடைந்தாள்; அவளவ்வண்ணமயர்ந்திருப்பதை அநுமான்கண்டுமகாராசாவினுடைய ஆக்கினையால் அவளுக்குத்தேறுதல்சொல்லிவானரமாதருடனே அவளுடையமாளிகைக்கனுப்பிவாலிக்கு நடத்தவேண்டிய கருமங்களை அங்கதப் பெருமானைக்கொண்டு நடத்திச் சக்கரவர்த்தித் திருமகனுரிடத்தே அதையெடுத்துச்சொல்லினன். அப்போது இருள்வேரற்றுப் போகக் கதிர்களைப் பரப்புகின்ற சூரியன்மேற்கடலிலுள்ள அத்தமான மலையையடைந்தான். அச்சூரிய பிம்பமோவாலிமுகமேபோலச் சிவந்தது. அவ்வாறுசூரியன்மறைந்துஇரவுண்டாகவே இரகுநாயகன்சானகியாரைநினைந்துதுயரமடைந்துஅவ்விரவென்கின்றகடலையுங்கடந்தனன். சூரியனோ தன்மகன்பொன்மகுடந்தாங்கும்பெருவகைக்கு முற்படுவானுகி யாவருக்கும் எல்லாச்செல்வமுமளிக்கும் திருமகள்சேரும்படி அவ்வன்னையெழுந்தருளியிருக்கும் தாமரைமலராகிய வீட்டைத் தன்செங்கையாகிய கதிரால் தாழ் நீக்கினன். அப்போது அருட்குநாயகனுகிய சக்கரவர்த்தித் திருமகன் அறிவிற்சிறந்த தம்பியை நோக்கிச் சூரியன்மகனுகிய சுக்கிரீவனையுன்கைகளால் விதிமுறையே மகுடாபிஷேகஞ்செய்துவாவென்றுகட்டளையிட்டனன். இளையபெருமாளும் அநுமானைநோக்கி அம்மகுடாபிஷேகஞ் செய்வதற்குரிய பொருள்களையெல்லாஞ் சித்தஞ்செய்யென்றலும் அநுமானும் சுத்தோதகமுதலிய தீர்த்தமும் பொன்முடிமுதலியவும் பிறவும் கொணர்ந்து வைக்கவேதியர்களாசிவழங்க தேவர்கள் மலர்மாரிபொழியத் தான் அச்சுக்கிரீவனுக்குப்பட்டாபிஷேகஞ்செய்தான், அவ்வாறு செய்யவே சுக்கிரீவனும் அவ்விராகவனையடைந்து அவனது பாதங்களைவணங்க அதைக்கண்ட அவ்விராகவனும் அவனை மார்போடிறுகத் தழுவிக்கொண்டு வேண்டிய புத்திமதிகளையும் சொல்லியருளினன்.

அப்பா! சுக்கிரீவா! இங்கிருந்து நீ கிட்கிந்தைக்குச் சென்று வேண்டுவனவற்றை மரபினெண்ணி விதிமுறைசெய்து நீமேற்கொண்ட அரசியற்கேற்ப யாவையுஞ் செய்துமுடித்துப்போரின்மாண்ட வாலி குமாரனுகிய அங்கதனோடு பெருஞ்செல்வத்துடன் வாழவேண்டுகிறேன், மேலும்வாய்மை நிரம்பிய நட்பமைக்துகுற்றமற்றதொழிலையுடையையாய்ச்செய்மையோடு அணிமையின்றித் தேவரைப்போல யாவருக்கும் தெரிய நிற்கவேண்டுகிறேன். யாண்டுப் புகையுண்டோவாண்டுத் தீயுண்டென்னும் அநுமானப் பிரமாணமாய் உன்பால் கருணையுண்டென்பது தோன்றப் பகைவருடனும் கடுமொழிகூறுமல் நகைமுகத்துடன் இன்சொற்கூறும் பெரியோர்கள் அநுசரிக்கும் நற்செயலைத் தழுவவேண்டும், தேவருமதிமயங்கத் தக்கசெல்வமோ உன்பால்வந்திருக்கின்றது, அதுவோ உன் அரசாட்சிக்குரிய தென்றால் அதனையு நீயே யோசித்துப் பார். யாவரிடத்து இனிய நட்புமேற்கொண்டவனுய் இம்மூவுலகினுள்ளும் நட்பினரொழிய அயலவர் பகைவரென்பதின்றிநடந்துகொள். செய்யத்தக்ககாரியங்களையேசெய்யவேண்டும். தீயகாரியங்களையோயாண்டுஞ் சிந்திக்கக்கூடாது. யாரேனுநிந்திக்கநேர்ந்தபோதும் இனியவை கூறவேண்டும். மெய்ம்மைமொழிகளையே கூறவேண்டும். தம்மால் விரும்பத்தக்கபொருளைவிரும்பக்கூடாது.

சிறியவரென்றிழந்து தாழ்ந்த காரியங்களைச் செய்துவிடவேண்டாம், இந்நெறியைக்கடந்துகூனிவிஷயமாய்ஒருதீமையைச்செய்துவிட்டமையால்நான்வனப்பிரவேசமாய்வந்துவிட்டதைத் தெரிந்துகொள். மாதர்கள் பொருட்டால்மனிதருக்குமரணமுண்டாமென்பதனைச் சங்கையில்லாமல் வாலியிடத்தே கண்டுகொள். அவர்களால் அல்லலும் பழியுமடைதலை எங்களிடத்தேகண்டுகொள். இதற்கேதுவேறியாது. உன்னை வந்தடைந்தவர்கள் இவன் நமக்கரசனல்லன்; நம்மை மிகவுமன்பாய்ப்பெற்றெடுத்த தாயென்று எண்ணுவாராயின் அவர்களைத் தாங்கவேண்டும். இதுநிடக்க; தீயோராயின் அவர்கள் அறநெறிகடந்தால் தீயனகண்டவழித் தண்டிக்கவேண்டும். இக்கருத்து நோக்கியே பெரியோரும் 'கொலையிற்கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ் களைகட்டதனொடு நேர்' என்றுஞ் சொல்லியிருக்கின்றனர். உலகின்கண் பிறப்பிறப்பென்பன முறைமையாக யோசித்தால்உயிர்கள்செய்தவினைப்போகமேதேகம்,அஃதொழிந்தால் இறப்பு நிகழுமென்றறி, இதுபற்றியே 'வினைப்போகமே யொரு தேகங்கண்டாய் வினைதானொழிந்தால் தினைப்போதளவு நில்லாது கண்டாய்' என்றும்பெரியோர்சொல்லியிருக்கின்றனர். புறத்தினினிச் சொல்லுவதியாதிருக்கின்றது,தாமரைமலரிலிருந்துலகத்தைப்படைக்கும்பிரமனுக்கும்கற்பாந்தகாலத்தில்மரணமுண்டென்பதுதெரிந்தவிஷயம். ஒருவர்செல்வம்பெறுவதுமிழப்பதும் அவரவர்செய்தநல்வினை தீவினைப்பயனென்றறி,இவற்றையெல்லாம்ஆராய்ந்தே யுத்தாயுத்தங்களைக் கண்டுபிடித்து அரசுசெய்து வரவேண்டும். இப்போது மாரிகாலஞ் சமீபித்திருக்கிறபடியால் இந்த இரண்டு மாதபரியந்தம் உன்கடல்போன்ற சேனையுடனே நீகிட்கிந்தையே போய்ச்சேர்ந்துமாரிகாலங் கழிந்தவுடன் இங்கேவாவென்று திருவாய்மலர்ந்தருள; அதைக்கேட்ட மகாராசாவும் எங்கள் கிட்கிந்தையோ குரங்குவசிக்கு மிடமென்பதல்லது நாடகசாலைகள் மிக்க இந்திரலோகத்துக்கு இராசதானியென்றே சொல்லத் தக்கதாகவிருக்கும், அங்கே மரங்களடர்ந்து அருவிசொரியு மலைகளும் சூழ்ந்திருக்கும், அவ்விடத்தில் தேவரீர்திருத்தம்பியுடனே எழுந்தருளியிருந்துகொண்டு எங்களாற்செய்யப்பட்ட குற்றேவல்களையங்கீகரித்துக்கொண்டுஇருக்கவேண்டுகின்றேன். பின்னும் உம்மையடைந்து உமது கருணைக்குப் பாத்திரனாகியும் உம்மைப் பிரிந்துநின்று வேறுகவடையும்செல்வமானதுபெற்றும் பெறுமை போலாம். உலகமாதாவாகிய சானகியாரைத் தேடுதற்குரியகாலஞ்சமீபிக்கிறவளவிலும் எம்மோடிருக்கவே வேண்டுமென்றுஇராகவனதுபாததாமரையை வணங்கிக்கேட்டுக்கொண்டான். இவ்வாறு சொல்வதைக்கேட்டதாசரதிகுறுநகைபுரிந்து வேந்தர்களிருக்கும்திருமாளிகையில் எம்போன்றவிரதியரிருக்கக் கூடாது. அப்படிநானங்கேயிருப்பேனானால் என்னைப் பாதுகாப்பதிலே உனக்குக் காலப்போக்காம். உனக்கும் இப்போதுண்டான அரசியல் நடத்தவுமுடியாமற்போய்விடும், நானோ பதினான்குவருஷம் வனவாசஞ்செய்து வருகின்றேனென்று தாய் சொல்மேற்கொண்டு வந்திருக்கின்றேன். நானோ அரசிருக்கும் வளநகரத்திற்சென்று வசிப்பதடாது. நான் சானகியைவிட்டுப் பிரிந்திருப்பது பற்றி யெனக்கிங்கேயென்ன சித்தமகிழ்ச்சி, சானகியோ அரக்கனிட்ட

கடுஞ்சிறையிலிருக்க என்னுருயிர்போன்ற துணைவரோடும் அளவிடப்படாத இன்பத்தைப்பெற்றுக் கொண்டிருக்கிறு னிராமனென்ற கொடுஞ்சொல் மும்மையுலகத்தினிடத்துக்கற்பாந்தகாலம்வரையினுமுற்றலாமோ! அப்பா! பின்னும் இல்லறந் துறவாதவர்களுடைய இயல்பையெதிர்ந்து போரில்வில்லின் தருமத்தைத்துறந்து வாழ்கின்றேனென்றஉண்மையேயல்லாமற் துறவறமேற்கொண்டு இப்போதடைந்த தீமைகளெல்லாம் திரும்படி இல்லைத்துறந்தமையால் வந்தகுற்ற மறத்தவஞ் செய்வேனென்று சொல்லிவிட்டுப்பின்னும் உன்னரசாட்சிக்குரிய காரியங்களையெல்லாம் செய்யத்தக்க வண்ணமாகச் செய்துவிட்டுஉன்கடல்போன்ற நெடுஞ்சேனையுடனேஇங்கேவந்து சேரவேண்டுகிறேனென்று கட்டளையிட, அதைக்கேட்டுச் சித்திரப்பதுமைபோற் கேட்டிருந்து கண்ணீர் விட்டுக்கொண்டே சுக்கிரீவன்கிட்கிந்தையைநோக்கிநடந்தான்.

பின்பு அங்கதப்பெருமான் இரகுநாயகன் சேவடியைவணங்க அவனைக் கார்முகில் பொருவும் கருணைக்கடல் அருளால் நோக்கி நீ மிக்கவொழுக்கமுடையை யாதலால் நீ இவனைப்பெற்ற தாதையினும் பெரிய தாதையேயாகவெண்ணி நடந்து கொள்ளென்ன, அவனு மதைக்கேட் டகன்றுன். பின்பு அனுமானை நோக்கி நீ சுக்கிரீவாக்கினைக்குத் தக்கபடி நின்று அமைச்சுத்தொழில் மேற்கொண் டிருவென்றுன். பொய்யிலா வுள்ளத்திலன்பு பொழிகின்ற அனுமானும் இவ்விடத்திலிருந்து தேவரீருக்குக் குற்றேவல்செய்து கொண்டிருக்கிறேனென்று தன்கருத்தைக்காட்ட,இரகுநாயகனே இனி வாலியாலே யாளப்பட்டுவந்த வரசைவேறெருருவனுகிய சுக்கிரீவன் வலிதிற்கொண் டாளப் போகின்றுனே!அதில்நன்மையுந்தீமையுந்தோன்றும்ஆகையால்அப்பா! உன்னையொத்த சிறந்த வறிவுடையவர்சகாயமிருந்தாலொழிய வேறுவகையாலரசு நிலைபெறமாட்டாது. நீதான்சுக்கிரீவனுக்குரிய அரசகாரியத்தைநடத்தி எனக்கிசைந்து சானகியைத் தேடுங்காரியத்திலும் தலையெடுத்துக்கொண்டு கண்டுபிடிக்க வேண்டுமே யொழிய வேறெருருவராற்சாத்தியப்படுங்காரியமுமன்று, அறத்துருவம் போன்றுனே!நீயேபோகவேண்டுமென்றுன். அதைக்கேட்டமாருதியும் தேவரீர் ஆணையே நான் போகவேண்டுமென்றுல்நானப்படியே செய்வது என்கடமையென்று விடைபெற்றுச்சென்றுன்; பின்பு இரகுநாயகனும் தம்பியோடும்வேறொருமலையையடைந்தனன். இவ்வாறுதாசரதிகட்டளையினுற்சென்றசுக்கிரீவன் தன்படைமுதலியவற்றுடன்கிட்கிந்தையிற்சென்றுதாரையைவணங்கி அவளைத் தாயாகவும் இராகவன்திருவாக்கே தந்தையாகவும் கொண்டு தானரசுசெலுத்தியாவருஞ்சுற்றம்போலுதவவானரராச்சியமுழுதும் தன்செங்கோல்செல்ல அங்கதப்பெருமான் இளவரசுநடத்தவிருந்தான்.

அரசியற்படலம்.

முற்றிற்று

---

## கார்காலப்படலம்.

இவ்வாறுஇராகவன் திருத்தம்பியுடன்அவனாற் சமைக்கப்பட்ட பன்னசாலையில் இனிது வீற்றிருக்கையில்பெருமையை யமைந்தவட திசையினின்றுசூரியன் பதுமைபோல மிக்க பேரழகினையுடைய சானகியாரைநாடி முன்னே தென்றிசைக்கேவிய தூதனென்னச் சென்றான். ஆயிரம் பணாமகுடங்களாலும் அனந்தன் தாங்கப்பட்ட நிலமே தகளியாகவும், கடலே நெய்யாகவும், சூரியனே விளக்காகவும், மேருமலையே அழகிய திரியாகவும், அதில் தங்குமிருள்போல மேகமானது தோன்றியது. பொருந்துதலருமையான ஆலவிடத்தையமுதாகவுண்ட இறைவனது கண்டம்போலக் காட்சியிற் பொலிந்துவிண்ணகமிருண்டது. சூரிய கிரணங்கள் தண்ணியவாகி மெலிந்தன. மேகமெங்கும் படர்ந்தது. மேலும் அதுவிடமேபோலும் நெடுங்கடல்போலும் மாதரார்மையுண்ட கண்ணேபோலும் அவிழ்ந்த கூந்தலேபோலும், வஞ்சனையுள்ள அரக்கர் மேனியேபோலும் அவரது செய்கையேபோலும் அவர் நெஞ்சேபோலும் இருண்டது. வான்மீன்போலப் பெரியகடனீர்நாவின்மிகஇச்சையாலுண்டமேகங்கள்மின்னுவன, வாளாற்றங்கைகளிற்கலந்த போரில் மதமொழுகும்யானைகளில்நிறைந்த புண்கள்திறப்பனபோலுமிருந்தன. நீலநிறமிகுந்தயானைகள் நிரைபடவைத்த தன்மையேபோலச் சூற்கொண்டமேகக்கூட்டங்கள்நெருங்குவன அலைகளை யெறிகின்ற கடலையேயொத்து வான்மேல் நிரைத்தாற்போலுமுழக்கமிகுந்தது. மின்னல் தோன்றியது திருமால் முதலிய தேவர்களினுடைய ஆபரணங்கள்விரித்திருப்பதுபோலும்மலைமேல்தீத்தோன்றுவதுபோலும்திசைகள் சிரிப்பனபோலுமிருந்தது. திசையாகிய கம்மாளன் மேகத்தாலிருண்ட ஆகாயமாகிய கரிக்குவியலில் வாடைக்காற்றாகிய துருத்தியிட்டூதவே, செந்தீ உமிழுமுலையுமொத்தது. மேலும் அம்மின்னலெல்லாம் கணவனைப்பிரிந்துழலும் மாதர்களும் பிலத்துள்ள பெரும்பாம்புகளும் வருந்தி யுயிர்நடுங்கும்படி சூரியகிரணங்களையரிந்தாற்போலவும்இடியினதுநாவேபோலவும் எட்டுத்திசையிலும்விரிந்ததன்றிச் சூடிக்கொண்டமணிமுடியையுடையகுற்றமற்றவித்தியாதரர் கூடாகிய உறையினின்று நீக்கிய உதிரந்தோய்ந்த வாட்களும் திக்குப்பாலகர் பெயருந்தோறும் அவர்களேறிச் செல்லும் திசையானையின் நெற்றிப்பட்டத்தினொளி பிறழ்வதும் போலிருந்தன. அட்டமா நாகங்கள் எட்டுத்திசைகளிலும் நின்று தங்கள்நாவைவளைத்தாற்போல் மின்னல்தோன்றக் கண்ணன் திருமேனியேபோல நிறங்கருகிய கரியமேகங்கள் உள்ள நிறைந்த உயிர்ப்பென்னும்வாடைக்காற்றை வீசியும், தலைமையுங்கீழ்மையுந்தவிராமல்மலையினுமரத்திலுமற்றும்பலவற்றிலும்விலையையெண்ணிப்பொருளுள்ள வழிப்பிரிந்துவிடும் வேசையருள்ளமேபோலஅவ்வாடைக்காற்றுலாவியது.மேலிடம்ஆரவாரித்தெழுகின்றதுகள் ஆகாயத்தையடைத்தலானும்மின்னல் மிகுத்தெழுகின்றவாள்போலத் தோன்றும் கொள்கையாலும் சேனையிலடிபடுகின்ற முரசவாத்தியம்போல விண்ணில் சத்திக்கின்ற வலியினாலும் போர்க்களமேயென்றுசொல்லச் சிறந்தது. இனிய நகையுடைய சானகியாரைப் பிரிந்த

இராகுநாயகன்மேல் மன்மதன் பஞ்சபாணங்கள் வழங்கினாற்போலப் பொன்மலைமேற் பொழிந்த தாரைகள் மின்னலோடு நெருங்கின. மலையிற்றோன்றும் நீர்த்துளியாகிய நிவலைமேகத்திலிட்ட வில்லினின்றும் பெய்கின்ற பாணமே போல விசையாய் விழுந்தன எதுபோலிருந்ததெனின் இரவில் மணிகள் சிதறி அழலைச் செய்வதுபோலும்மேகத்திற்பிறந்தசெங்கனலேபோலும்விளங்கின. பகைவருடைய மாறுபட்ட சேனையாவது பெருமிதமுள்ள யானைமேல் வெள்ளிவேலை யெறிவதே போலிருந்தமேகத்தின் தள்ளுதற்கருமையானநீர்த்துளிபடத்தகர்ந்து சாய்கின்றமலைகள் புள்ளிபெற்ற வெம்மையாகியமதயானை புரளாநிற்பனபோலும்.

வானவில்லே மன்மதன் கையிற்பிடித்த கரும்புவில், மழையோ பஞ்சபாணம், அம்மழைத்துளியோ பெருஞ்சார்பாகியதுணைவரைப்பிரிந்த தன்மையையுடையவர் ஊனுலாகிய உடம்பிலெல்லாம் அப்பாண மூழ்குவதுபோலும். இது நிடக்க இராகவனும் கவிகளுமாகச் சேர்ந்துகொண்டு நம்பகையையொழித்தனரென்று சொல்லிக்கொண்டு தேவர்களெல்லாமாரவாரித்தாற்போலமேகமாரவாரித்தன; அவர் பொழியுமலர்மழைபோலநீர் மழைபெய்தன. அழகிய வில்லைக் கையிலேகொண்டு வாட்படையேந்தி ஆகாயமார்க்கமாகப் பெண்ணருங்கலமாகிய சானகியாரைக் கவர்ந்துபோகையில் அப்பெண்ணமுது கண்ணீர்விட்டுக் கதறியழுததுபோலக் கார்மழைபெய்தது, தலையில் விளங்கும் சந்திரனையணியும் பரமசிவன் ஆகாயத்தி லுலாவிக்கொண்டிருக்கும் முப்புரங்களையு மெரிக்கவரும் பாணத்தையொக்கும்மின்னினம். அது அரத்தாலராவுகின்றபோதுதீப்பொறிசிதறும் வேலினால்ஆடவர்மார்பைவருத்துவதைபோலப் பிரிந்தவர்கட்கெல்லாம் வருத்தமுண்டாக்கும். அம்மழை பொருள் வயிற்பிரிந்த தலைவனைத் தன்தேரி லேறிவரச் செய்கின்றமையால் மயக்கத்தைத்தரும் பிரிவென்னும் பெரும் பாம்புகெடக் கருடனைப்போலவும் விளங்கும். பாதிரிமலர் வறுமையடையவும் சூரியன் தன்காந்தியிழக்கவும் கோடல்கள் பூக்கவும் குவளைமலர் சிறுமையடையவும் ஆடுகின்றமயில்கள் பேசாமலடங்கின, குயில் தன் கணவனைத்தேடித் தளர்ந்தார்போலும் செல்வமுண்டாகக் கிளர்ச்சியடைந்தார்போன்றும்விளங்கின, பலவகையானவண்டுகளுடன்மலைச்சாரலில் தேன் சிந்தமலர்ந்து சாய்ந்த சிவந்த விதழையுடைய காந்தண்மலர்களிருந்த தோற்றம் வேனிலைக் கார்ப்பருவம் வென்ற தம்மாவென்று வியந்து பார்த்துநிலமகள் கையைமறித்துக் காட்டுவதுபோன்று விளங்கிற்று. நீண்ட பற்களையுடைய பாம்பேபோல்தன் வன்மையான தலைகான்ற பெரியதாள்களையுடைய கோடல்கள் தம்மைத் தழுவிக் கொண்டிருந்து காதல்மிகுதியால் மீளாதனவாய் விழைவினா லுணர்வொழிந்து அப்பாம்புகளே போல வொன்றோடொன்று பின்னிக்கொண்டு குழைந்து சாய்ந்திருந்தன. எள்ளிட விடமில்லாமல் எழுந்த இந்திரகோபங்கள் அன்புடையதலைவர்தம்மைத்தழுவிப்பிரியப் புகையூட்டிய கூந்தலையுடைய மாதர்கள் பலமுறை துப்பிய எச்சிற் றம்பலம்போல விளங்கின, மேருமலையில் நாவல்மரத்தின் சாறொழுக அதனாலுண்டாகிய பொன்னை யருவியாறடித்துக் கொண்டுவரும்,

அதைச் சாம்புநதமென்று சொல்வார்கள். அந்தச் சாம்புநதம்போன்ற வேங்கை மலரையும் கொன்றை மலரையு மருவியடித்துக்கொண்டுவரும். காந்தண் மலரில் கொன்றை மலர் இந்திர கோபத்தோடும் தோன்றுவது வண்டுகள் இசைபாடக்கண்டு பூமியானது தன்மலர்போன்ற கையை யேந்திப் பொன்னையும் இரத்தினங்களையும் தேடிக்கொடுப்பதுபோல் விளங்கும். வண்டுகள் கின்னரம் போன்றன. மேககர்ச்சனை தூரியமடிப்பது போன்றன. மயில்கள் மாதர்நடிப்பது போன்றன. செந்தோன்றிப்பூமலர்ந்திருப்பது விளக்கினம் போன்றன. விளையின்மலர் காண்போர் விழிகளைப் போன்றன. பேடையும் ஸ்ரீமிறும் பாய்வதனாலுண்டாகிய வொலியானது மாதர்கள் ஆட்டுக்குரிய இயலையுடைய பாணிக் கொத்திருக்கின்றன. பாடற்குரிய தாளங் கொட்டுதற்குக் கூதாளமலர் மலர்வதொத்திருக்கும். கான்யாறு பெருகி வருவது மாநிலமாகியபெண் தன்மக்கட்குக் கொங்கையினிடத்துச் சுரந்த பாலொழுக்கை யொத்திருக்கும். விருப்பமிகுந்து கேட்டவர்க்கு என்றும் வேண்டித் தளிர்களோடும் கொன்றைபூத் தோங்குவன கற்பகம்போலும் விளங்கும். ஆருயிரன்ன தன்கணவன் தேர்மேற் செல்லச் செருக்கழிந்தொடுங்கு மாதர்கள்கண் குவளைபோற் குவிந்தன. மன்மதன்போன்ற தன்கணவன் வரவைக்கண்டு மனமகிழு மாதர்நகையேபோல முல்லை மலர்ந்தன. மயிலினங்களைக் கழைக்கூத்தரின மெனக்கண்டு மனமகிழ்ந்து அவர்க்குப் பரிசிலைக் கொடுக்கும் மன்னர்போல மழையருவிவழங்கின. விருந்தினர்வரஉள்ளமகிழ்கின்ற மாதர்கள் முகமேபோலக் கார்விருந்தெனக் கமலமலர் மலர்ந்தன. சரதநாண்மலர் யாவையுங்குடைந்து தடவிக் காமநூலறிந்த விடர்போலத் தேன்கொண்டு சேகரிக்கவும், பரதநூற்படி நாடகம் பயன்படப் பகுப்பான் இரதமீட்டுகின்றகவிஞரையு மொத்தன தேனீக்கள். பார்வையால் நம்மை வெற்றிகொண்ட சானகியாருக்கு மிக்கதுயரத்தை யுண்டாக்கி விட்டான் நம்முருக்கொண்டே மாரீசனென்று அம்மகிழ்ச்சியைப் பேசவடங்காததுபோற் களிப்புக் கொண்டனமானினங்கள். நெஞ்சின் மிகுந்த அன்பால் பெரிதும்பிரிந்து வாடுகின்றனவாகி மயக்கத்தைத்தரும் காதலால் மயங்கி ஆற்றிடந்தோறும் நீராடப்படிந்தாடுகின்ற அன்னம் நாயகரை யொத்திருந்தன. மேகமென்னும் திருமால் மார்பிலணிந்த ஒளியுள்ள முத்துமாலையையும் போன்றன கடலிலுள்ள நீரையுண்டு மாலைபோன்று ஒழுங்காகப் பறக்கும் கொக்குகள். நாரையினங்கள் நெருங்கி மாலைபோல மேகங்களினருகே செல்வதனால் பரம்பொருளென்றே வேதமளந்து சொல்லும் கள்ளமாமாயப்பிரானது உத்தரீயம் போல விளங்கும். கொடுந்தொழிலையுடைய வேனிற்பருவ மொழியக் கார்ப்பருவமென்னும் நல்லோன் சேரமகிழ்ச்சியால் நிலமாதினுடைய உடம்புமுழுதும் புளகம் போர்த்தாற் போன்று புற்கள் விளங்கின. மயில்கள் இரகுநாயகன் வருந்துவதனால் அவன் விரும்புகின்றசானகியாரைநாடி அக்கானமுழுது கண்முழுதும் பரப்பி நின்றழைப்பன போலிருக்கும். வீரர்கள் குடுமியிடத்துச் செந்நிறந்தரும் மாதர் பஞ்சடிபோல் தாமரை மலர்ந்து விளங்குவன. அம்மாதரிடையேபோற் கொடிகள் அசைந்தன. நீங்கள் அவர்களுடைய குநலை

போன்ற மொழியை யுடையீராதலால் என்னைவிட்டு நீங்கிய சானகியாரைக் கொணர்ந்துதா வேண்டுமென்று இராகவன் சொல்லத் தேசமெல்லாந்திரி ந்துவந்து கூவிக் கூவிக்குரலடங்கியவாறுகுயில்கள்போல விளங்கும். மாநிலம் புல்லைத்தாக்குமட்டியன இளங்கன்று; அங்கேயுள்ள ஆம்பிகள் கட்டித்தயிரை யொத்திருந்தன, பிடவமலர்பாலின் நுரையென்று விளங்கும்; வேங்கை மலர்குறமாதர்கூந்தலில்விளங்கும், நுளைமாதர்கூந்தலிற்புன்னை மலரிருக்கும், இடைச்சியர்கூந்தலில் முல்லைமலரிருக்கும். பள்ளச்சியர் கூந்தலில்நீலோற்பல மலரிருக்கும், இராமன் சானகியினதுதிருமுகத்தைக் காணுமையாரைக்கண்டு தான் உயிரையாற்றுவான், மெய்யுணர்ச்சியைநீங்கியிருக்கின்றான். மன்மதனுக்கு எண்ணிலாத பாணங்களைவகுத்துக்கொடுத்த கார்ப்பருவம்வரக்கண்டு வெம் மையானதுயரத்திற்கவனோர் துறைகாணுமலிருந்தான். அளவிடப்படாதகாலெ ன்னும் அப்பருவம்வந்தடைந்தால்மனத்தளர்ச்சியுடையவராவரென்பதுதவஞ் செய்வார்க்குந்தகுந்ததே, தேனினும் அமிழ்தினும்சொல்லமைந்துவேய்போல் நின்ற தோளையுமுடையாராகிய சானகியாரைப் பிரிந்திருப்பதனாலவன் வரு த்தமடைவனென்பதும்சொல்லவேண்டுமோ! காவிமலரையுங்கருங்குவளைமல ரையும் நெய்தன்மலரையும் காயாம் பூவையும்போல்பவனாகிய இரகுநாயகன் சிறிது மனந்தளர்ந்து புலம்பி ஆவியுஞ் சிறிதுண்டென்னும்படி சந்தேகிக்கச் சானகியார் பிரிவைநோக்கிப் பின்வருமாறு புலம்பத் தொடங்கினான்.

நமது சானகியாரை மறைத்துவைத்திருப்பவராரோவறியேன்; காணுமுயி ரோடுழல்கின்றேன். நீரேயுடைய என்னிடத்தே யருளில்லாம லிருக்கின் றனையே! மழையே என்னுவியைக் கலங்கச் செய்யலாமோ! நீ வெப்பமிகு ந்த மின்னலைப் பற்களாகப் பெற்றிருக்கின்றனை, எப்பக்கமும் கோப மிகுந்து ஆகாயத்தி லிருண்டெழுகின்றனை, அப்பாதகராகியவஞ்சமிகுந்த அரக்கரையு மெல்லா விதத்தாலு மொத்திருக்கின்றனை, நீ என்னுயிர்கொண்டா லல்லது போகாய்போலும். வேல்போலும் கண்ணையும் அமுதம்போலும் குயில்போ லும் சொல்லையுமுடையாராகிய அச்சானகியாரைக் கொண்டுவரவேண்டும்; அவரைக் காணுமல் நான் கண்ணுறங்கேன், என்னுயிர் சோர்வதையுமறிவாய், மயிலே நீ யென்னுடன் வாதாடுவது நன்றோ! வாடைக்காற்றோ டாடிவலிந்து என்னுயிர்மேல் நுழைகின்ற கொடியே! எமது சானகியாரதுஇடைபோலிடை யே குழைகின்றனை, நீயுமென்னுயிரைக் குழைப்பாய்போலும். எனக்கு விரு ப்பமானவற்றை நானும் விரும்பேன், மேன்மையினின் றிழைக்கேன், உணர்ச் சியுமுடையேன், அவையில்லாமையால் பிழைக்க மாட்டேன். அச்சானகி யாரோ என்னுயிரோடு பிரிந்துபோயினர், மானே அவரெங்குள்ளார் சொல்ல வேண்டும். பாடகமணிந்த மெல்லடி பஞ்சியூட்டி யிருக்கத்தக்கார், என் பாற் கோபஞ் சிறிதேனு மில்லாதார், நீயுமவருடன் போகின்றனையோ! சந் தேகியாமல் உடனே போவாயலையோ! உயிரோ என்னுறவைச் சிறிதேனுமறி யாய்போலும். ஒன்றைச் சொல்லவேண்டும். நீயோ குழலுக்குத்தோற்றுப் போகின்றனை! வயிரம் பெற்றிருக்கின்றனை, கொன்றையே நீயும் சானகியா ரைக்கொணர்ந்துகாட்டமாட்டாயோ! நீஎன்றைக்குந்தானென்னோடுறவானாய்,

குராவரும்பே போன்றகூரிய பல்லையுடைய நாகம்விடத்தாற் கொல்வதுபோ
லும் முல்லைமலர் துயரமூட்டி நீங்காது வருத்துவதுதானோ இராவண கோப
நிற்க இந்திரகோபமென்னோ! சானகியாரை யொளிக்குமுபாயந்தேடி மாரீச
னும் பொன்மானுருக்கொண்டு வஞ்சித்தானே! வாடைக்காற்றாகிய யமனும்
தன்னுருவமாற்றிய வந்திருக்கின்றானே. கேடுநினைப்பவர்க்கு வேண்டிய
வுருவமெல்லாமெடுக்க இயைந்ததல்லவா! என்றும் தீயவரக்கரென்னும்படி.
ஆகாயத்தில் யாவருமயங்கும்படி முழங்குகின்ற மேகமே! நீயுமின்னுகின்றா
யோ! தருவேனென் றிரக்கங்கொண்டாயோ நீயும் சானகியுருவத்தைக்கா
ட்டி காட்டி மறைக்கின்றாயே! உள்ளே நிறைந்து பெருமூச்செறியும் வெப்
பம் உடலையுயிருடன்வருத்தி உள்ளமே புண்ணாகப்பாணங்கள் தூர்க்கும்
தன்மை பழுதாகும் இனி மன்மதனேபோ! உன்னைச் சகலகலாபாரங்கத
னாகிய இளையவன் காண்பானானால் அவனது கோபத்தையடக்க வல்லவரா
ரிருக்கின்றனர். வீரர்கள் போர்க்கஞ்சினார் மேல் வில்லும் கணையுங்கொண்டு
போர்செய்யார்கள். அவ்வாறு செய்வது வீரம்வேண்டாதார் வாழ்க்கையே
யாகும், இரவும்பகலுநீங்காமல் என்னுடன் போராடுகின்றாயே! அருள் சிறிது
மில்லாதிருக்கின்றாயே! நீர் போமென்றெளிதாக வேண்டிக்கொள்ளும் எம்
மையுமிப்படி வருத்தலாமோ என்று இவ்வாறு பலபலதன்பெருமைதானறி
யாத் தன்மையனாய் வருந்துகின்றஇரகுநாயகனை நோக்கிச்சாலவருந்தியதம்பி
நின்னையென்ன தன்மையனென்றெண்ணி வருந்துகின்றனை! என்றுதலைமேற்
கைகூப்பிப்பின் வருமாறு சொல்லலானான்.

மாரிகாலம் வந்ததென்ற கவலைக்கோ! அரக்கர் வல்லமையை நினைந்து
வருந்திய தன்மைக்கோ! வாலிசேனை எமதன்னை இருக்கும் இடமறிந்து நாடி
வரமாட்டாதென்பதற்கோநீயெண்ணி வருந்தலானாய்! வேதமேகலங்கினாலும்
சந்திரன் நிலைகலங்கினாலும் வானும் கடல்சூழ்ந்த உலகமும் நிலைகலங்கினாலும்
நீ நிலைகலங்குவது மியற்கையோ! அரக்கர் பெருமைமுழுதும் நீசிறிது புருவத்
தை வளைப்பாயானால் இருக்கும் பரிசாமோ! அநுமனென்பவன் அளவறிந்
திருக்கின்றோம்! அங்கதன் முதலானவர் எத்தன்மைய ரென்பதாகிய முடிவறி
யாதிருக்கின்றோம். மாரிகாலமோ கழிந்துவிட்டது! சானகியாரோ இனிவந்து
சேரப் போகின்றனர். உன் துயரத்தை நீங்கிவிடு முன்னாளில் தண்டகாரணிய
த்தில் முற்றத்துறந்த முனிவர்கள்எல்லாம்வந்து எங்களைவருத்துகின்றஅரக்கர்
பயம்கெடுக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்ள நீங்கள்பயப்படவேண்டாம்,
அந்தவஞ்சகரை வழியோடு மழிக்கின்றேனென்று அபயங் கொடுத்திருக்கின்
றீர்! அதுவும்தானே வந்துநேர்ந்தது. அவர்களையெல்லா மொருசேரமுடித்துக்
கீர்த்திபெற்று தேவர்களையும் தத்தம்பதவிகளிலும் வாழ்விக்கவேண்டுகின்
றேன். வெற்றியுமக் கல்லது அரக்கருக்குமுண்டாமோ! நீர்வேதனைக்கிடமாக
வருந்துவது உமது வீரத்தன்மைக்கடுக்குமோ! உம்மால் முடியாதகாரியம்யா
திருக்கின்றது. வருந்தவேண்டாமென்று தம்பிசொல்ல அதைக்கேட்ட இரகு
நாயகன்கொண்ட வருத்தமீண்டு மதிகரிக்கமீண்டு மழைபெய்யத் தொடங்கி
யது.

அத்தருணத்தில் குளமெல்லாநிறைந்தது. அலைகள் நெருங்கின, கருங்குயில் வாயடங்கின. உயர்ந்தமலைகளுங் குளிர்ந்தன,திசைகளெல்லாம்மறைந்தன. தலைவரைப்பிரிந்த மாதர்கள் வருந்தினர். அன்றிலுடன்அன்றில் உயிர் பொருந்தத் தழுவிக்கொண்டிருந்தன.மாதர்கள் ஆடும்ஊசலைத்தொடர்ந்துவாடைவீசியது. அவ்வாடைக்காற்று ஆசைமேற்கொண்டார்மேற் கூரிய அம்பு போற்பட்டு வருத்தியது. கடலும்நிறைந்தது, வெப்பமுள்ள சூரியகிரணங்களும் தண்ணியகிரணமாக விளங்கின, கன்னலாலல்லாமல் மாலையும்பகலுமறிவரிதாயிருந்தன. நெற்கிழியும்படி நெற்பொதி நிரம்பின, கிளிகள் நிரம்பாத சொல்லிழியவும், முத்துகள் பற்கிழியவும், பாதர்முற்றத்தில் கிளையொடு கூடிய புன்னைமரங்கள் பொற்கிழிவிரித்தன. நிறங்கருகுகின்ற கங்குல்பகலினின்றன, அறங்கருதுகின்ற சிந்தையையுடைய அந்தணர்போல ஆலங்கட்டிகள் நெடுந்துளிசிதறின. மலைகளில்யானைகள் உறங்காமல் விலகாதிருந்தன. சந்தனவிலையாலாகிய வேதிகை யிடத்திலெல்லாம் அந்திக்காலத்தி லிடுகின்ற அகிற்புகையால் நடக்தகுளிரையுடைய அன்னம்மந்திதுயிலும்குகையில்இந்தியமலித்த யோகியர்போலிருந்தன. சுனைகளிலும்அருவிகளிலும் மாதர்கள்கூந்தலின்மணந்தோன்றாதிருந்தன. தினைப்புனத்தில்கவணினின்றுமணிகள் மேகம் நெடு மழைத்துளிவீசுவதனால் வீசாதொழிந்தன. தாழைமடல்களில் காதல் தருந் தன்மையையுடைய மலர்கள் கிளைகளில் பொருந்திவிளங்க, நாரையின் பெடைகள் ஆடவரைப்பிரிந்த மாதரேபோலும் சிறையொடுங்கி யுடல் பேராதிருந்தன. பதங்கள் முழவொத்தன. சுரும்பும், ஞிமிறும், வண்டும், தும்பியும் பாடிக்கொண்டிருந்தன, மயில்கள் மதங்கியரையொத்து நடித்தன. மரத்தின் மேகங்கள் முழங்கவொதுங்கின, விளக்கொளியை யகிற்புகைவிழுங்கப் படுக்கையில் மெல்லியபூங் கொம்பேபோலவருந்தும் இடையையுடைய மாதருமாடவருமேறவும் மலர்த்தவிசை நீங்கி சந்தனமரத்தொளையில் துயில் செய்துகொண்டிருந்தன, தாமரைத் தவிசை நீங்கி அன்னங்கள் மாமரங்களின் பொதும்பரில் நுழைந்துகொள்ள மரங்களினடுக்கினாலாகிய பரணிடத்திலிருந்தகுடிசையிற் குறமாதரும் ஆடவரும் துயில்செய்துகொண்டிருந்தனர். வள்ளிக்கொடி பக்கங்களிற் சுற்றிக்கொண்டிருக்கு முயர்ந்த பச்சிலைமரந்தோறும் ஆடுகளொடு மிடையர்கள் வசித்திருந்தனர், கள்ளரைப்போல் ஒளித்துழல்கின்ற பேயுமொடுங்கிப் பல்லைக் கடித்துக்கொண்டுபசியினால் வாடியிருந்தன. மழைத்துளியை வீசுமேகங்கள்சாரவானைகள் ஒளிக்க நினைந்து பிலத்துவாரத்தில் நுழையும். இவ்வகையான மாரியினா லிருளடையச் சானகியார்மேல்வைத்தசிந்தையறாது நெட்டுயிர்ப்புடையானாய்இளையவனைநோக்கிச் சொல்லலாயினான். இராக்கதமாயை யென்று தெரியாமல் சானகியாரும் தெரியாம லகப்பட்டுக்கொண்டு துன்பத்தினால் மிகவும் வருந்துவாள். உயிரையும் விடுவாள். எனக் கொன்றாலும் பிழைப்பில்லை, இதென்ன தன்மை? மேலும் வில்லுங்கையுமாக நானிருக்கலாமோ! மன்மதபாணத்தால் வருந்துகின்ற மனமுடையனாய் மிக்க வருத்தத்துடனு மிருக்கலாமோ! சாதாரணமாக மின்மினி விளக்கெரியத் தூக்கணங்குருவிகள்

பெடையுடன் கூண்டில் தூங்காநிற்கின்றனவே, மேகமின்னுவதையும் இடிமுழக்கத்தையும் கேட்டு என்மனம் வருந்தா நிற்கின்றதே! காட்டிற்குவந்துநான் செய்துவிட்ட காரியத்தைக்கேட்டு மேலுலகமும் கீழுலகமுஞ் சிரிக்குமே! இனி என்னசெய்யவேண்டியிருக்கின்றது. மறந்திருந்துய்வேனோ! இப்படிப்பட்ட மழைக்காலமென்றால் நானிறப்பதுமெய், இப்பழியுடன் உயிர்வாழ்வதும்தகுதியோ! நான் அங்கேயிருந்து போய்ச் சானகியை யொளித்து வைத்திருக்கும் அரக்கரிடத்தைக் கண்டுபிடிக்க வந்தனேயோ, பலயுகங்கள் வேண்டுமே! அப்படி வேண்டியதைப்பார்க்கிலும் நோயால் மாண்டானென்றபேர்பெறுவதுமிகவுநல்லதல்லவோ! செம்பையுருக்கினாற்போன்ற இம்மழைத்துளிவெப்பமுறத்தேகத்தைச்சுடவெந்தழிவதோ! அக்கினி சாட்சியாக நிறுத்தி இச்சானகி உன் கையடையென்ற அந்தச் சனகராசன் உறுதிமொழியைப்பொய்யாக்கிய யானு மெய்மையடையாமாட்டாமையால், இனி இறப்பதே நல்லது! மேலும் தேற்றுகின்றவனீயிருக்கின்றாய், நகத்தேநின்று துன்பமாகியிருக்கின்றேனாகவும் சானகியும்என்கண்ணுக்குத்தோன்றுவாளல்லள்; இத்துன்பத்தை யார்தான் மாற்றுவார்கள். துயரத்திற்கோரெல்லையுமுண்டோவென்று தம்பியைநோக்கிச்சொல்ல, அதைக்கேட்ட இளையபெருமாளும் நீரெண்ணுகின்றதென்ன! மழைகாலமும் கழிவதாயின, நாமும் தேடுதற்குரிய காலமுங் கிட்டிவிட்டது, ஆதிபகவன் அமுதத்தைக் கடலினின்று பெறுவதாயினும் அத்தொழிலை விரும்பாது மந்திரகிரிமுதலிய உபகரணங்களைக்கொண்டு கடலைக்கடைந்து தன்கையா லமுதம்பெற்றுச்சிறந்தான். மனத்தினால் உலகத்தையெல்லாம் வகுத்து வாயிற்பெய்யும் நினைப்பினையுடையனாயிருந்தாலும்அவன் அனேகம் படைக்கலம்கொண்டு யாரையும்வெற்றிகொள்வான். நெற்றிமேலொற்றை நாட்டம்பெற்ற கடவுட்பெருமானும் திரிபுரதகனஞ்செய்யத் தொடங்கியகாலத்தில் எண்ணிய எண்ணங்களும் தான் தேடிக்கொண்டனவும் ஒருவரு மறியாததோ! ஆகத்தக்கபேரையும்துணைவர்களாக்கிப் பின்னேருங்காலத்தி லெண்ணித் துணிவதாயின் வெற்றி கொள்வதும் வழுவிப்போமோ! தருமமார்க்கத்தையுங் கடந்தவர்கள் வல்லமையு முடையவர்கள் வீரத்தொழிலே நமக்கென்றெண்ணும் தன்மையர்; அவ்வரக்கர்கொடுஞ்செய்கை முன் நன்னெறியே! திரும்புமானால்பார்க்குமிடத்தே வெற்றியமையும் என்று சொல்லிக்கொண்டிருந்த அம்மழைகாலமும் கழிந்தது. பின்னுமது அழியாத பெருங்கொடை மருவி சான்றோர் வேண்டிய பொருளையெல்லா முதவி தம் கைவறண்டபோது யாசகர்க்கு ஈவதில்லாமையால் வெட்கமடைந்த மனிதர்போல மேகங்கள்வெளுத்தன, தீவினை நல்வினையென்னும்படி தோன்றியவினைகளை யறிந்து தாம்பெற்ற ஆராய்ச்சியாகிய மெய்யுணர்ச்சியனுகக் குற்றமுறு மாயைபோல் மழையிருண் மாய்ந்தது. போர்க்களத்தில் யுத்தமொழியவே முரசத்தின் ஒலியடங்கினாற்போல மேகங்கள் குமுறலொழிந்தன. போரில் விடுமம்புகளேபோலத் துளியு நீங்கின. வாளுறையடைந்தாற்போலமின்னலு மறைந்தன. மேகங்கள் பெரிய மலைகளின் புறத்து வீதலால் வானுருவருவாயற்றன மிகமுயன்றரிதிற்றேடிய நற்பொருள்

போய்விட நல்வழியில் ஒழுகாதவன் செல்வத்தை யொத்திருந்தன. மதச்சுவ டழிந்து எழுகின்றமேகங்கள் இடநீங்கிச் செல்வதினால்சந்திரனும் விளங்க மா டந்தோன்றியது கடத்தினிலக்கணம் பயில்கின்ற மாதர்கள்முகம் திரையினி ன்று நீங்கத் தோன்றியதுபோல விளங்கியது, பொன்னாபரணமணிந்த மாதர் கள் முலையிற்பூசிய சாந்தினைப்புலர்த்துகின்ற குங்குமம் நெருங்கி மட்சேறொ ழிய மொண்டு கருமலரைவிண்டு வாடைக்காற்றுவீசிற்று. மன்னவன்மகனாகிய தாசரதியினது வருத்தத்தை நீக்கும்படி அப்பருவம்வந்தமையால் சானகியா ரைத்தேடுகின்றோமென்பதுபோல் அன்னம் பலதிசைகளையு நாடிச்சென்றன. தங்கள் சிறையொடுங்கித் துன்பத்திற்கிடமாய் நெஞ்சிற்பயனற்றனவாய் வினை ப்புமிருந்ததாய் மழைபோகவேநீலமயில் மிதிலைநாட்டன்னம்போற் பிரிந்து போயின. வஞ்சனையுந் தீவினையு மறந்த பெருந்தவத்தவர்கள் மனமேபோல நீர் தெளிந்தது. நீர்தோறும் பஞ்செனச்சிவக்கும் மெல்லிய பாதங்களை யுடைய பேதைகள் அஞ்சனந்தீட்டிய கண்ணேபோல மீன்பிறழ்ந்தன. முதிர்ந்த தாமரைகள் வாடியமாதர்கள் முகத்தைப்போன்றன. முகைவிரிந்த செங்கிடை உடல்நீங்கிப் புணர்ந்த மாதர்களுடையபவளம்போன்ற இதழ்க்கோ லங்கண்டன. கல்வியை முன்னே பழகும் கணக்காயர் முன்னே கற்பிக்கும் பலவகையான சிறுபிள்ளைகளைப் படிப்பிப்பதுபோலத் தவளைகள்சத்தித்தன. செல்லிடத்திலேயல்லது ஒன்றையுமறிவிக்காத நல்லறிவாளர்நாவடங்கின. மிக் கநீராலாகிய பூந்துகிலே அலைகளாகிய கைகளாற்சிறைத்துக் கான்மடுத்தொத் ததுபோன்ற ஓதநீர்க்கடலாகிய கணவனையடைந்து ஆறுகளெல்லாம் முத்து களை யீனுவது முறுவலிப்பதுபோலிருந்தன.

கார்காலப்படலம்

முற்றிற்று.

---

## கிட்கிந்தைப்படலம்.

---

அக்கார்காலமொழிந்தவுடனே இரகுநாயகன்இளையவனைநோக்கித் தம்பி நான்சொன்னதவணைகழிந்தும் மகாராசாவரவில்லையே! நாம் செய்கின்றவகை யென்ன? பெருஞ்செல்வம்பெற்றுதவியைச் சிறிதேனு மறியாம லிருக்கின் றான். சிறப்பினின்று நீங்கினன். அறத்தைமறந்தனன், அன்புகிடக்க நம்வீ ரத்தன்மையுமறியாம லிருக்கின்றான், வாழ்வின் மயங்கிக் கிடக்கிறான். நன் றியைமறந்து நட்பினாலாகிய அன்பினையொழித்து மெய்மைசிதைத்து சொ ற்றவறியவனைக்கொன்று களைதல்குற்றத்தினீங்கும்; நீ சென்றவனெண்ணத் தை யறியவேண்டுகிறேன். கண்டகர்கள் விண்ணிற்புகவேரறுத்து இவ்வுல கத்தில் அறத்தை நிலைநிறுத்தப்பிடித்த வில்லாகிய கொம்புண்டு, கூற்றுவ னுமிருக்கின்றான், உங்களம்பு மிருக்கின்றதென்று நம்மாணையைத் தெரிவி. கொடியவரை வருத்தினால் அது வஞ்சகத்தன்மையேயன்று மனுவழக்கே யாம். அஞ்சிலறியாதவன் ஐம்பதிலொன்றறிவானா? அவன்நெஞ்சிற்பொருந்தவறி

விக்கவேண்டும். ஊரும் அரசும் சுற்றமும்நீயாண்டுவரவேண்டுமென்றுசொல்ல நம்பாலவன்விடைபெற்றுப்போனசமயத்தில் வைத்ததவணையைமறந்தமையால்குரங்கென்னும்பேரோாதவ இன்னம் செய்துவிடுவேனென்பதையும்உறுதியாகச்சொல்லு. நம்மைப் பார்க்கினுமிக்க வலியுடையாரைத் தேடிக்கொள்வோமென்றெண்ணுவானேயானால் உன்னைவெல்லஇம்மும்மையுலகத்தும்நீயல்வாமற்பிறரின்மையையுமறிவிக்கவேண்டும். நீதியாகவெடுத்துச்சொல்லு, அதற்கு அவனிணங்காவிட்டால் அவன்மேற் கோபியாமல்அவன்சொன்ன சொல்லைமீண்டுமெனக்குத்தெரிவிக்க வேண்டுகிறேனென்று கட்டளையிட்டான்.

அதைக்கேட்ட இளையவனே அவ்விரகுநாயகன் சொல்லைத் தலைமேற்கொண்டு சிறிதும் தாமதியாமல் அக்ஷயதூணீர முதுகிற்கட்டிக்கொண்டு வில்லையெடுத்துக்கொண்டு அவனைச் சிந்தையினீங்காதவனே யாயினும் வெகுதூரஞ்சென்றான். இவனேதமையன் கட்டளைபெற்றுச்சென்று மரமலைமுதலியவற்றையெல்லாங் கடந்து அவனிட்டிருக்கும் வழியேசெல்லாமல் வேற்றுவழிச்சென்று தன்முன்னோனாகிய அவ்விரகுநாயகன் பாணமேபோல் விரைந்துவருவதைக்கண்டவானரவீரர்கள் எமனைக்கண்டாற்போல் நெஞ்சங்குலைந்து அங்கதப்பெருமானையடைந்து ஐயா ! இளையவனே மிக்க கோபத்துடன் வருகின்றானென்று பயந்து கூறினர். அதைக்கேட்ட அங்கதப்பெருமானும் இன்னதென்று சொல்லாமுன்னே யறியவல்லமாருதியை யடைந்து இளையவன்வரவைத் தெரிவிக்க, அவனும் அங்கதப்பெருமான் கருத்தறிந்து தன் தந்தையாகிய வாயுசெல்லும் வேகத்தினுமிக்க வேகமாய்ச் சென்றான். நளனியற்றிய கோயிலுள் பூஞ்சேக்கையில் மாதர்கள் கடல்மூயிருக்கத் தூங்கிக்கொண்டிருக்கின்ற மகாராசாவைக் கண்டுநின்று; மகாராசாவோ சிராமபிரானுதவியபெருஞ்செல்வத்தைப்பெற்று மெய்ம்மறந்துகிடக்கின்றான். கள்ளையுங்குடித்துக் கலங்கியிருக்கின்றான் ; இக்கள்ளேயல்லாமல் மாதர்கள் இன்பக்கள்ளையுங்குடித்து மிகவுமயங்கியிருக்கின்றான். நான் என்செய்வேனென்று எண்ணி அப்படி தூங்கிக்கொண்டிருக்கின்ற மகாராசாவைநோக்கி இரண்டுகைகளையும் தலைமேற்குவித்து வணங்கி அங்கதப்பெருமான் துயிலெழுப்பிச் சொல்வானாயினான். எமது பிதாவாகிய மகாராசாவே ! அந்தச் சிராமனுக் கிளையவனாகிய இளையபெருமாள் மிக்க கோபத்துடன்வெகுவேகமாய்வருகின்றான்,உன்மனக்கருத்தியாதென்றான். இந்தமொழிசொன்னானென்ற எண்ணமே யில்லாமல் மிகுந்த செல்வச்செருக்கால் கள்ளுண்டுமயங்கித் தன்னையுமறந்திருந்தது கண்டு சிறிதும்வேறுசொல்லாமல் அனுமானையழைத்துக்கொண்டு அவனோடும் பல படைத்தலைவர் சூழ்ந்துவரத் தன் தாயாகிய தாரையினது திருமாளிகையை யடைந்து இனிச் செயத்தக்கது யாதென்று நடந்ததெல்லாந் தெரிவித்துச் சொன்னான். அவ்வாறு சொல்ல அதைக்கேட்டதாரையோநீங்கள்மிக்க பொல்லாங்கெல்லாமிப்போதுதேடிக்கொண்டீர்கள். அவற்றை நீக்கவும் வகைபார்க்கின்றீர்கள், உதவியையும் கொன்றீர்கள், இனிப்பிழைப்பீர்கள்போலுமென்றுசொல்லிவிட்டுப் பின்னுஞ் சொல்லத்தொடங்கினாள். உங்களைப் படைகூட்டுங்களென்று அவர்கள் சொல்லிய நாள்திறம்

பிறுல் உங்கள் நாள்நிறம்புமென்று கேட்டிருக்கின்றீர்கள்; இனிக் கிடைப்பதைப் பாருங்கள். வாலி யாருயிர்வாங்கிய ஸ்ரீராமனும் கோதண்டத்தை வளைத்துக்கொண்டே உங்கள் அருகேயிருக்கின்றனன். உம்போன்றவருக்கெல்லாம் செல்வமுங் கொடுத்துவிட்டிருக்கின்றனன். தானோ தேவியாகியசானகியை நீங்கி ஆவிநீங்கினான்போல வருந்துகின்றான், அதைச் சிறிதுமெண்ணாமல் உங்கள் மனைவியரோடுகூடி இன்பநுகர்ந்துகொண்டிருக்கின்றீர்கள். மெய்யினின்றும் திறம்பினீர்கள். நன்றியையுகொன்றீர்கள், உங்களுக்குத் தீவினை நேர்ந்துவிட்டது, புகழ்பெற வாழவு மாட்டீர்கள் அவன் போர்க்கெழுந்தானையின் ஒருங்குமாள்வீர்கள், இனிச் செய்யப்போவது யாதிருக்கின்றதென்று சொல்லிக்கொண்டிருந்தாள்.

இப்படிச் சொல்லிக்கொண்டிருக்கையில் சில வானரவீரர்கள் நீண்ட தூணடர்ந்த நெடுவாயிலைத் தாளிட்டும் பெருமலைகளைக் கொண்டுவந்தடுக்கிச் சேமித்தார்கள். அதைக்கண்ட இளையவனோ தம்மைக் காத்துக்கொள்ளவே இத்தனையுஞ் சொன்னார்களென் றெண்ணி நகைத்து தன்காலினாலெட்டியுதைத்தான். இவ்வாறுதைக்கவே பாவம் பற்றொழிந்து போனதுபோலுஞ் சென்றன. முதுவாயிலும் கதவும் கன்மதிலும் பத்துயோசனை தூரம் போய் விடவே வானரவீரரெல்லாம் பயந்தோடினர். இவ்வாறாகவே பயந்தோடி அவர்கள் மலையைவிட்டுக் காட்டிற்செல்லத்தொடங்கினர். கிட்கிந்தையோ நக்ஷத்திரங்கள் நீங்கிய வானேபோல விளங்கின. அத்தருணத்தில்இளையபெருமாளோ அக்கிட்கிந்தையின் வீதிவழியே நடந்துபோனான். அத்தாரையுடன் பேசிக்கொண்டிருந்த அங்கதன் முதலானோர்கள் திகைத்து இனி யென்னசெய்வதென்று சொல்லிக்கொண்டனர். அதைக்கேட்ட தாரையோ அவன் கருத்தறியலாமென்றெண்ணி அவ்விளையவன் வருவழியை மாற்றினாள், இளையவனோ அவ்வழியை நோக்காமலிருந்தான். தாரையோ நீங்கள் எல்லாம் அயலிற் போய்விடுங்கோள், இளையவன் கருத்தறிகிறேனென்றாள், யாவரும் பெயர்ந்துபோயினர். தாரையோபெயராமல்வானரமாதருடனேநடந்துபோகஇளையவனேஇராசவீதிகடந்துசுக்கிரீவமகாராசன்மாளிகையைக்கிட்டினான். அதைத்தாரையும் விலக்கிநிற்க, அதைக்கண்ட இளையபெருமாளோ தன்முகத்தைச் சாய்த்துக்கொண்டு வில்லைத் தரையிலூன்றி மாமிமார் கூட்டத்தில் வந்தமருகன்போல் நின்றதைக்கண்ட தாரையு நடுங்கிப்பின் வருமாறு சொல்லத்தொடங்கினாள்.

இளையபெருமாளோ! பலகால மருந்தவஞ்செய்தபாக்கியத்தால் பெறுவதன்றிஇந்திரன்முதலானோரும் உன்பாதசேவைபெறுவதுதுர்லபம்! நாங்களோ உன் பாதங்கொண்டு எங்கள்மனையில் வரப்பெற்று வாழ்ந்தோம். நாங்களும் பிழைத்தோம், இதைப்பார்க்கிலும் உறுதியுண்டோ? நீர் கோபமாகவரக் கண்டே உமது சேனை பயப்பட்டது. தாசரதியைப் பிரியாத நீரோ இப்போது பிரிந்து இங்கேவரக் காரணமென்னவென்றாள். அதைக்கேட்ட இளையபெருமாளும் நம்மை யார் வினவினதென்று கோபந்தணிந்து பூரணசந்திரன் பகலிற்றோன்றிய காட்சிபோலுமுகத்தியளையுடையதாரையினதுமுகமேறவெ

டுத்துப்பார்த்து தன் தாய்மாரை நினைத்து மிகவும் வருந்தினன். அத்தாரை யோ மணிப்பூண்கள் துறந்து மலர்மாலைநீங்கிக் குங்குமமுஞ் சாந்தமு மப்பி யமுலையுடன் கமுகுபோன்ற கழுத்துமறையப் போர்த்தபடியே விளங்கி னள். அவளைக்கண்டு கண்ணீருகுத்துப் பெருமூச்செறிந்து சொல்லலாயி னன், தானும் சேனையுமாகச் சானகியாரைத்தேடித் தருவோமென்றவார் த்தையை மறந்தமையான் தாசரதி நீபோயறிந்துவாவென்று கட்டளையிட அக் கட்டளையால் இவ்வளவுதூரம் வந்தேன். இதுதான் சரியானசெய்தியென்று சொன்னன். அதைக்கேட்ட தாரை இளையபெருமாளைப்பார்த்து இனிமேல் நீர் கோபிக்கவேண்டாம். 'சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம் பெரியோ ராயிற் பொறுப்பதுகடனே' என்றபடி நீர்பொறுக்கவேண்டும். நீர்பொறுப்ப தன்றிவேறியார்பொறுப்பர். சுக்கிரீவமகாராசனோ உதவிகொன்றனல்லன், வேறுவேறிடங்களுக்குத் தூதரைவிடுத்து வானரங்களை வருவிக்கத் தாமதித் திருக்கின்றன். தூதர்களும் இன்னும்வந்து சேர்ந்தாரல்லர். அவர்களும் வானரங்களை யழைத்துக்கொண்டு வந்துவிடுவார்கள். உம்மை யடைக்கல மடைந்தவரைத் தாயினுமன்புடைய நீரே கோபந்தணியவேண்டும். இதுவே அறநெறியென்று சொல்லப்படும். சானகியார் பொருட்டுநேரும் போர்க்க ளத்தில் மாண்டுபோகத் துணியாராயின் நட்பென்பது நிலைபெற்றிருக்கு மோ! நீங்கள்செய்த பேருதவி நீங்காத கொடுமையமைந்த பகையைமாற்றி அவனுக் கரசுங்கொடுத்து விட்டீர்கள். உம்மையே இகழ்வானென்றல் எளி மையாகப்போய்விடுமோ! இம்மையில் வறுமையடைந்து மறுமையு மிழந்து விடுவார்களன்றோ! வாலியையே வெற்றிகொண்ட உங்களுக்குத் துணையும் வேண்டப்படுமோ! நீங்கள் சானகியாரைத் தேடும்பொருட்டுத்துணைவேண்டு கின்றீர்கள். உங்களை யடைக்கலம்புகுந்தவரும் அதனைமேற்கொண்டு நின்று செய்யவேண்டி யிருப்பவரேயல்லது வேறல்லவென்று சொல்லிமுடித்தாள். இவ்வாறு பேசிக்கொண்டிருக்கையில் அவற்றையெல்லாம் நன்றகக் கேட்டுக் கொண்டிருந்த இளையபெருமாளும் அருள்ததும்பு முகமுடையானய் நாணுட் கொண்டான். அத்தருணத்தில் இளையபெருமாள்கோபநீங்கினனென்றுமாருதி அவ்விளையபெருமாளருகேவந்து மும்முறை வலம்வந்துபணிந்துநிற்க, அவனை நோக்கி நீயும்காலப்போக்காயிருந்தனையன்றோவென்று இளையான்கேட்டான். அதற்கு மாருதி தாயையும் தாதையையும் குருவையும அந்தணரையும் பால ரையுமாதரையும் கொன்றவர்களுக்கு கழுவாயுண்டு;உதவிகொன்றார்க்குக்கழு வாய் கிடையாதே. இதனலன்றோ பெரியாரும் 'எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை - செய்ந்நன்றி கொன்றமகற்கு' என்று சொல்லியிரு க்கின்றனர். உங்களுக்கும் எங்கள் மகாராசாவுக்கும் நட்பினை யுண்டாக்கின மையும் என் செய்கையன்றோ! அது கெடுமாயின் உய்வகை யெவர்க்குமுண் டோ! உணர்வு மாசுண்டதேயன்றோ! தேவரும் தவமும் அறமும் மற்று முள்ளனபிறவும் நீரேயென்று என்பாற்கிடந்த மெய்ம்மை மும்மையுலகத்தை யும் காக்கின்ற பேராற்றலையுடைய சேனைகள்வரவே தூதரை யனுப்பியிருக் கின்றன். அறத்தின் துணைவராகிய உங்களுக்குத் தன்வாய்மையை யழிப்பா

றுயின் பிறந்தவனல்லவல்லவா! அவனை நரகமும் விடாதே! என்றுசொல்லிச் சுக்கிரீவமகாராசனைக்காணலாமென்றழைத்துக்கொண்டுபோனான். அப்போது இளையபெருமாளோ இவர்கள் நன்றிமறந்தவரல்லரென் றெண்ணிக்கொண்டு சென்று பின்னும் அவனிடத்துச் சானகியார்பிரிவும் மானத்தீயும் சிராம பிரானை வருத்தா நின்றன. அப்பெருமானை யானுற்றிக் கொண்டிருப்ப தற்கேசாலநாள்கழிகின்றனவே. அப்படிநானுற்றுவிட்டாலுமும்மையுலகமும் அழிந்துவிடுமே. தேவர்களு மழிந்துபோவரோ, தருமமு மழியுமே; விதியினை விலக்கவல்லவர் யாரிருக்கின்றனர். நீங்கள் தவணையைக்கடந்து துன்பத் தைத் தேடிக்கொண்டீர்களே என்று சொன்னார். இப்படி சொல்லிக்கொண்டு போகையில் தாரையும் தன்னைமாதர்கள் புடைசூழத் தன்றிருமாளிகையை யடைந்தாள். தாரைபோனபின்பு அங்கதன்வல்லமையுள்ள மந்திரிமார்கள் தன்னைப்புடைசூழ்ந்துவர இளையபெருமானைக்கண்டுவணங்கி நின்றான். அதற் கிளையபெருமாள் நீ விரைவாகச்சென்று என்வருகையை உன்தாதைக்குத் தெரிவிக்க வேண்டுமென்றான். உடனே அக்கட்டளையை யேற்றுத்தன் தாதையினது திருமாளிகையையடைந்து அவனை மும்முறை வலம்வந்துபணி ந்து இளையபெருமாளோ நமது தலைவாயிலில் வந்திருக்கின்றனன். மிகக்கோப மாயுமிருக்கின்றன னென்றான் அங்கதன் சொல்லவும் கள்ளின் வெறியாலும் மாதர்கள் நெருக்கத்தாலும் ஒன்று மறியாமலிருக்க அவனும்உபசாரஞ்செய் யத்தெளிந்தான். அப்போது சுக்கிரீவமகாராசனுக்கு அங்கதன் நடந்தசெய்தி யெல்லாம் சவிஸ்தாரமாகத்தெரிவித்தான். அதைக்கேட்ட சுக்கிரீவமகாராசன் இளையவன்வருகையையெனக்குத்தெரிவிக்காமலேயிருந்தது! என்னமதிமோச மென்றான். அங்கதப் பெருமானே அப்பா! தங்களுக்குநானேவந்துதெரிவித்தே ன். நீர் சிறிது முணர்ச்சியில்லாம லிருந்துவிட்டீர். நீர் விரைவாகவந்து இளைய பெருமாளைக் காண்பதே நல்லசமயமென்றான். அதற்குச் சுக்கிரீவமகாராச னும் எனக்கு அவரால்நேர்ந்த உதவி ஒருவராலும் பெறுதற்கரிய தல்லவா! நானிதுவரையிலும பட்டதுன்பத்தைக் கள்ளுண்டுமயங்கி மறந்தேனே, நா னும் அவரைப் பார்க்க நாணமாயிருக்கின்றதே. இதுநிற்க;

மேலும் ஏவிய இதுவேயல்லாமல் மற்றுமேழைமை யாதிருக்கின்றது, தா யிவள்மனைவியிவள், என்னும் தருமமென்னும்? பஞ்சபாதகங்களி லொன்றாகிய கள்ளுண்டு களித்திருந்தேன், மாதர்சையோகத்தின் மயங்கினேன். தெளிந்து தீவினையை நீங்கினோர் பிறவியைத் தீர்வரென்று மெய்யுணர்ச்சி யுடையாரும் வேதமுதலிய ஆப்தகலைகளு மெடுத்துச்சொல்லவும் புழுக்கள் நிரம்பி நெரு ங்கியிருக்கும் கள்ளுண்டு களிக்கின்றேன். தன்னையும் தனக்கிறைவனையும் கண்டால்பிறவியொழியுமென்பது வேதாகமமுதலிய மெய்ந்நூல்களின் துணி வென்பர். முன்னையே தன்னையுந் தலைவனையு மறியாத பெரும்பிணியுடனே கள்ளின் மயக்கமும்கலந்து பெரும்பித்தாக்கி விட்டதே! என்று பலபல சொல்லி இளையபெருமாளைக் காண்பதற்கு வேண்டுவனகொண்டு நடவென்று கட்டளையிட்டு அத்தலைவாயிற் கடையில்தானேஎதிர்கொள்ளும்படி நின்றான். பின்னே அங்கதப்பெருமானே மங்கலவாத்தியங்கள் இளையபெருமாள் வரு

கிற வீதிகளில் முழங்கக் கட்டளையிட்டுத்தான் இளையபெருமாளைப் போய் வணங்கினான். அவனைநோக்கி உன்தாதை யெங்கிருக்கின்றான் சொல்லென்ன,அவர்தங்களை யெதிர்கொள்ளத் தலைவாயிலிற் காத்துக்கொண் டிருக்கின்றாரென்றான். இவ்வாறு சொல்லிக்கொண்டு யாவரும் போகையில் சர்வாடம்பாங்களுடன் சுக்கிரீவ மகாராசன் இளையபெருமானை யெதிர்கொண்டான். அவ்வாறெதிர்கொண்டு தழுவி அவனை யழைத்துக்கொண்டு இராச மாளிகையை யடைந்தவுடனே ஓர் அழகிய பீடத்திலிருக்கச் சொன்னான். இளையவனோ எமதுபெருமான் புல்லணையிற்கிடப்ப எனக்கிச்சிங்காதன முரியதாமாவென்றான். அதைக்கேட்ட சுக்கிரீவனு மின்றுவிம்மிக் கண்கணீருகக் கசிந்துருகிக் கற்படுத்த விடத்திலேதான் தம்பியுடன் உட்கார்ந்த பின்பு நீர் நீராடியென்றால் செய்யப்பட்ட விருந்தருந்தவேண்டுமென்றான். அதற்கிளையவர் மகாராசாவே!வருத்தமும் பழியும் வயிற்றில் நிரம்பியிருக்க இங்கே எனக்கு விருந்துஞ் செய்யவேண்டுமோ! எம்மை வருத்துகின்ற பழியென்னும் தீயை யவித்து விடுவாயாயின் கங்கை நீராட்டினைபோலாம், எங்கள் சானகியாளையும் காட்டினையாயின் தேவாமிர்தமுண்டதுபோலாம். நானோபச்சிலை,காய்,கிழங்கு கனிமுதலியவை நம்பெருந்தகையாகியசிராமன் உண்டபின் எஞ்சியவற்றை நானுண்பதே நோன்பென்பதன்றிவேறுண்ணவிச்சித்தேனாயின் அதுநாயுண்ட எச்சிலே, அதற்குக்காரணமொன்றுங் கிடையாது. அல்லாமலும் வேறொன்றுண்டு. இனிமேல்தாமதித்திங்கிருப்பதனாற் பயனில்லை,நான் போய்க்கனிகாய் கிழங்குகளைக் கொணர்ந்து திருத்தினாலல்லது நம்பெருமானுக்குத் திருவமுதாகாதே! நான்விரைந்து போகவேண்டுமென்று சொல்ல, சுக்கிரீவனுமதை நினைந்து மனம்வருந்தி விரைந்தெழுந்து மாருதியைக் கூவியழைத்துத் தூதர்கள்சென்று அழைத்துவரும் சேனையை நீ யழைத்துக்கொண்டு வாவென்று கட்டளையிட்டு அவனை யங்கேயிருக்கச்செய்து தான் இளையபெருமாளுடனே அங்கதப்பெருமான் முன்செல்ல மற்றவானவீரருமுடன் செல்லப்புறப்பட்டு நடந்து இரகுநாயகன் வீற்றிருக்கின்ற மலையையடைந்தான். அடைந்தவுடனே சேனையைப் பின்வரக் கட்டளையிட்டுத் தானும் தம்பியும் அங்கதனுமாகச்சென்று வணங்கினர். தன்னை வணங்கியமகாராசாவை முன்புகொண்ட கோபம் நீங்க இறுகப்புல்லி நீ காக்கும் யாவரும்சுகமே யிருக்கின்றனரா! வெனக்குசலத்தை வினவியபோது அதற்குச் சுக்கிரீவனும் நின்னருள்பெற்றேயான்காக்கும் காலேஇடரொன்பதனுளுகுமோவென்றான். பின்னும் விலங்கறிவால் யான்தாமதித்திருந்துவிட்ட புன்மையைத் தவிர்த் தருளவேண்டும். நீர்வருந்திக்கொண்டிருக்கவும் யான் பொய்வாழ்வால் மயங்கிவிட்டேன், இனியான் செயத்தக்கது யாது? கட்டளையிட வேண்டுமென்றான். அவ்வாறு சொல்லிய சுக்கிரீவனுக் கிராகவ னினிய வார்த்தைகளைச் சொல்லி மாருதியெங்கேசென்றனனென்று கேட்க,அவன் உம்முடையசேனையுடன் வருவானென்பதன்றி நான் கோடி தூதரை யனுப்பிச் சேனைகளைக் கொண்டுவரும்படி யனுப்பியிருக்கிறேன், இன்றேனாளையோ வந்துவிடுமென்றுந் தெரிவித்தனன். பின்புசிராமபிரான் அங்கதனோடு மளவளாவி அவனைச் சுக்கிரீவனோடு மனுப்பிவிட்டுத்

தம்பியை யழைத்து நீ சுக்கிரீவனிடத்தே போனபோது நடந்த செய்தியை யெடுத்துச் சொல்ல வேண்டுமென்ன, இளையவன்நடந்ததை யெல்லாம் ஒன்றுமொழியாமல் சொல்லி முடித்தான். ஸ்ரீராமன் இளையபெருமாளுடனே இனிது விற்றிருந்தான். இவ்வாறு இருக்க, இனிச்சேனைகள் வரவு சொல்வாம்.

கிட்கிந்தைப் படலம்

முற்றிற்று.

---

## தானைகாண்படலம்.

சதவலியென்னும் படைத்தலைவனே ஆயிரமாயிரம் யானைபலமுள்ள இரண்டாயிரகோடி வானரசேனையுடனும், சுசேடணனென்னும் படைத்தலைவனே மேருமலையையும் பிடுங்கியெறியும் வலியுள்ளனவாய் தேனை யாராய்ந்துண்டு தெளிந்த வானரங்கள் பத்துநூறுயிரகோடி சேனையுடனும், உருமையைப் பயந்தவனாகிய படைத்தலைவன் கடலையு மிமைப்போதிற்கலக்கிச் சேறுகாணும் நாற்பத்தென்னூயிரகோடி சேனையுடனும், அனுமனைப்பெற்ற கேசரி ஐம்பதினாயிரகோடி சேனையுடனும், இரண்டாயிரகோடி காடிக்கூட்டங்களுடன் இடும்பனும், ஆயிரகோடி வானரசேனையுடன் கவயாக்கனும், பன்னீராயிரகோடி வானரசேனையுடன் பனசனென்பவனும், பதினைந்துகோடிவானர சேனையுடன் நீலனும், முப்பதுகோடி வானரசேனையுடன் ததிமுகனென்பவனும், முப்பதினாயிரகோடி வானரசேனையுடன் கயனென்பவனும், ஆயிரத்தறுநூறுகோடி சேனையுடன் சாம்பனென்பவனும், இருபதுகோடி வானர வீருடன் துன்முகனும், கோடி கோடி நூறுயிரமென்னு மெண்கொண்ட சேனையுடன் துமிந்தனும், பத்துநூறுயிரப் பத்துக்கோடி வானரவீருடன் மயிந்தனும் மற்கசகோமுகனும், ஒன்பதுகோடி சேனையுடனே குமுதனும், பதினான்குநூறுயிரகோடி வானரசேனையுடன் பதுமுகனும், தொளாயிரகோடி சேனையுடன் இடபனும், தீர்க்கபாதனும் வினதனும், சரபனும், அநேகமாயிரகோடி சேனைகளுடன் வந்தனர். இவ்வாறிருக்க கைகளாயிரங்கொண்ட சூரியபகவானைக்கண்டும் மெய்யெஞ்சாதவனாகிப்பத்துத்திசையும்சிறிதென்னும்படி நீண்ட மாருதி இருபத்தையாயிரம் சேனையுடனேவந்தான். நூறுயிரகோடி வானர சேனையுடனே நளனும் வந்துசேர்ந்தான். கும்பனும் சங்கனும் பன்னூறுயிரகோடிசேனையுடனே வந்து சேர்ந்துவிட்டனர்.

அப்படிவந்தசேனைகள்எண்ணிப்பார்க்க எழுபதினாயிரம் பிரமாலு முடியமாட்டா. அவைகட்குஅண்டங்களெல்லாம் உண்ண ஒரு கவளத்திற்குமடங்கமாட்டா? கண்ணினாற் பார்க்க உருத்திரமூர்த்தியாலுமுடியா; அவைகளில் ஒவ்வொன்றும் மேருவை வேருட னொடிக்கவேண்டினு மொடித்துவிடும், இடிக்கவேண்டுமானாலும் வான் முகட்டையுமிடிக்கும், பிடிக்கவேண்டுமானாலுங் காற்றையும்காலனையும் பிடிக்கும், குடிக்கவேண்டுமானாலுமெழுகடலையுங் குடங்கையிற் குடித்துவிடும், வானராதிபரோ அறுபத்தேழுகோடிபேர், அவர்களோ

திசைப்பத்திலும் குதிக்க வல்லமையுடையவர், மகாராசா நினைத்ததை முடிக்கு மியல்புடையவர், இப்படிப்பட்ட சேனையுடன் வந்து சேரவே சுக்கிரீவமகாராசாவும் விரைவாய்த் தாசரதியையடைந்து மும்முறைவலம்வந்து பணிந்து உமது சேனைகள்வந்து சேர்ந்துவிட்டன; கடாட்சிக்கவேண்டுமென்றான். அதைக்கேட்ட சிராமபிரானே அகமுமுகமுமலர்ந்து சானகிவந்த சந்தோஷமேபோலக் களித்துத் தானங்கோர்மலைச் சிகரமேறினன். மகாராசாவோ அச்சேனையிருக்குமிடத்தேவந்து சேர்ந்தான். அச்சேனை ஐம்பதியோசனையகலமாய் வடதிசையினின்றும் தென்றிசைநோக்கிச்செல்லக் கட்டளையிட்டுத் தானும் படைத்தலைவருடன் மீண்டான். அவ்வாறு மீண்டு சிராமபிரானையடைந்து அவற்றை வான்முறையேகாட்டி யருகிருந்தனன். அச்சேனையும் பாற்கடலேபோலப் பரந்துநின்றது, இச்சேனையினுலெழுந்த புழுதிசென்று எத்திசையும்போய்மூடி யப்புறத்தண்டத்தையும் செப்புருவாக்கிவிட்டது. பின்னும் சுக்கிரீவன் இச்சேனையைப் பார்க்கவேண்டுமென்று இருபதுநா ளிரவும்பகலு மிடைவிடாமற் பார்த்தால் ஒரு சிறிதுதான் பார்க்கவியலும், முழுதுமுடியாதே, இதைக் கடலென்றே சொல்லவேண்டுமெல்லது வேறுசொல்லப் படுமோவென, மும்மையுலகத்தும் தன்னல தொப்பில்லாத சிராமபிரான் கண்ணினுலும் சிந்தையினுலும் கல்வியினுலும் ஞானத்தாலு மெண்ணித் தம்பியை நோக்கிச் சொல்கின்முன்.

அப்பா தம்பி இலக்குமணா! இப்பெருஞ்சேனைக்கு அறிவால் உடல்கண்டோம், இனி முடிவுங் காண முடியுமோ! கடலைப் பார்க்கக்கூடும், அதை முடிவுகண்டாரு முலகிலுண்டோ? உலகத்தில் இறைவன்மேனியையும் பத்துத்திசையையும், இச்சேனையையும், ஐம்பெரும்பூதத்தையும், அறிவையும், பேசும் பேச்சினையும், சமயப்பிணக்கையும் யார்தான் முடிவெண்ணவல்லவர்! நாம் செய்யத் துணிந்த காரியத்திற்கேவுவதே சரியானகாரியம்! என்றான். அதைக்கேட்ட இளையவன் சொல்லுகின்றான். இவர்களாலாகாதகாரியமுமுலகத்தில் ஒன்றுமில்லையாகவே தோன்றுகின்றது. அண்ணா! இவர்கள் சானகியானா நாடவருவது சிறியகாரியம்! பாவந்தோற்றது தருமமேவென்றது என்றதிச்சேனையாலே யறியலாம், இவை பிரமனுல் படைக்கப்பட்ட உலகத்தில் மலைகள் உயிர்பெற்றெழுந்ததொக்கும். குரங்கின் சேனையுறையிடவும்போதா! இனித் தாமதிப்பதென்ன; இனி விரைந்து என்தாயை நாடக் கட்டளையிடுவதே சிறந்த காரியமென்றான். அதைக்கேட்ட தாசரதி சுக்கிரீவமகாராசாவைநோக்கிச் சொல்லலாயினன்.

தானைகாண் படலம்

முற்றிற்று.

---

## நாடவிட்டபடலம்.

அப்பா சுக்கிரீவா! இச்சேனையோ உறைவிடப்போதாதிருக்கின்றனை;இதற்குத் தொகையுமுன்பேசொல்லவேண்டுமென்றான். அதைக்கேட்ட சுக்கிரீவ மகாராசன் இச்சேனைக் கெண்ணிக்கை எழுபதுவெள்ள மென்பார்கள். அறுபத்தேழுகோடிபேர் இதன்படைத்தலைவர்கள்; இவர்களுக்கெல்லாம் நீலனென்பவனே சேனாதிபதியென்றுசொல்லப்படும்,அவன் யமனையும் புறங்காண வல்லமை யுடையவன் என்றான். அவனைப்பார்த்து இரகுநாயகன் நாம் பேசிக்கொண்டிருப்பதனால் என்னகாரியம்! இனிச் சானகியாளை நாடுவதே நமக்குக் காரியமென்றான். அவனும் அனுமானைப்பார்த்து நீயோ உன்தந்தையாகிய வாயுவைப்போல் எங்குஞ்சென்று சஞ்சரிக்கும் வல்லமையுடையை! நீ சிறிது மறியாமல் தாமதித்துக் கொண்டிருக்கின்றனை! நீயும் குரங்கின் செயலைக் காட்டிக்கொண் டிருக்கின்றனையோ!சீவிரைந்துபோய்ச்சானகியாரிருக்குமிடந் தேடவேண்டுமாதலால் எங்கும்போய்த் தேடிப்பார்க்கவேண்டும். உன்வேகத்தை இப்போதுதான் காட்டவேண்டும். இராவண னிருக்குமிடம் தென்றிசையென்று தோன்றுகின்றது. நீயல்லாமல் வேறியார் அத்திசையிற்சென்று காண வல்லவர். அவன் சானகியாளைக் கொண்டுபோகையில் நமக்கெல்லாம் தெற்குநோக்கியேபோனானென்பது தெரிந்தவிஷயம்! நீயுமறிவாய். நீ அங்கதனோடும் சாம்பவனோடும் நீலனோடும்சேர்ந்துகொண்டு இரண்டாயிரவெள்ளஞ்சேனையுடன்போகவேண்டுமென்றேன்;மேற்றிசைக்குச் சுசேடணனும்,வடதிசைக்குச் சதவலியும், கீழ்த்திசைக்கு வினதனும் இவ்விரண்டாயிர வெள்ளம் படையுடன்செல்லவேண்டும்; அப்படிசெல்பவர் ஒருமாதத்திற் குள்ளாகவே வந்துசேரவேண்டும். மேலும் அனுமானே! நீ தென்றிசையில் போவாயாயின் ஆயிரங்கோடிமுடியுடன் விளங்கும் விந்தமலையையடைந்து நருமதையைக்கடந்தேமகூடத்தைத் தாண்டி விதர்ப்பதேசத்தைக்கண்டு நீங்கித் தண்டகங்கண்டொழிந்து முண்டகமலர்ந்தசோலையைத்தேடிப்போய் பாண்டுமலையைப்பார்த்துக் கழித்துக் கோதாவிரியைக்கடந்துச்சூர்முதறடிந்த சண்முகப் பெருமானெழுந்தருளிய சுவணத்தைத் தெரிசித்து அருந்ததிமலையையகன்று நாகராசர்களுக்கமுதங்கொடுத்துத் தாயையேவற்றொழிலினின்றுங்கருடனீக்கியமாகதப்பொருப்பைவிட்டுப் பின்பு வடசொற்குந்தென்சொற்கும்வரம்பாகினான்மறையு மற்றநூலும் சொன்னபொருட்கெல்லா மெல்லையாய்த் தருமத்திற்கு முடிவாய்த் துணையின்றிப் புகழ்பொதிந்த மெய்ம்மைபோலச் சாரலையுடைய வடவேங்கடத்தைக்காண்பீர்கள். அம்மலையிலோ அநேகர் அருந்தவஞ்செய்வர், அவர்களோ நாமிங்கிருந்தேவணங்கத்தக்க சீலமுடையார்கள். அம்மலையில் மெய்யுணர்ச்சியையுடைய அருமறையந்தணர் நீராடுகின்ற கோனேரியும் மாதவர்களாச்சிரமங்களும் தடாகங்களுமுண்டு, தேவமாதர்கள் கீதமொத்த கின்னரங்களின் இனிய நரம்புகளை வருடும்போதெல்லாம் தோன்றுமோசையால் யானைக்கன்றும் புலிப்பறழும் வேற்றுமையின்றி யுறங்குமிடமுண்டு. அம்மலையையடைவீரானால் நீங்கள் பிறவிப்பிணி நீங்கிவிடுவீர்கள், ஆதலால் அம்மலையை

நெருங்காமலே தூரத்தேயிருந்து வணங்கி அப்பாற் செல்லவேண்டுமென்றேன். செல்வீராகில் இராமகாரியம் பங்கமாய்விடும். அதன்பின்பு அம்மலையை வடவெல்லையாகவுடைய தொண்டைநாட்டைக்கண்டு சோழநாட்டையுங் கடந்து மலைநாடுசேர்ந்த பின்பு செந்தமிழ் நாடாகிய பாண்டிநாட்டைக் காண்பீர்கள். செந்தமிழ்நாட்டில் அகத்தியமுனிவன் எழுந்தருளிய பொதியினையடைவீர்கள், அதையகன்று சென்று தாமிரவருணி நதியையுங்கடந்து மகேந்திரமலையுங் கடலுங் காண்பீர்கள். இப்படிபோய் ஒருமாதத்தவணைக்குள் வந்து சேரவேண்டுமென்றான்.

இப்படி சொல்லிக்கொண்டிருக்கையில் இராமநாயகன் நிறைந்த கருணையோடும் அனுமானை அழைத்துவேற்றிடத்திலிருத்தித் தேடிச்செல்கையில் சானகியாருக்குரிய இலக்கணங்களை யெல்லாஞ் சொல்கிறேனென்று சொல்லத்தொடங்கினான். அப்பா அனுமானே! பாற்கடலிற்பிறந்தசெம்பவளத்தைப்பஞ்சியூட்டி மேலே சந்திரனையுஞ் சூட்டினாற்போல விளங்கும் கால்களுடன் விரல்கள் கமலமும் பிறவும் உவமமாகக் கூறப்படும். அவையே ஏற்பலவென்னின் அப்பாதங்களுக் குவமையாக வெவற்றைத்தான் கூறலாம்! புறவடிக் குவமையாக அறிவுடையவர்கள் ஆமையென்றே சொல்வர்; அதுவுமாகாது! கணைக்காலுக்குவரால் மீனையே யுவமையாகக்கூறலாம்! நெற்சினையென்றும் கூறவமையும்; மாதர்கள் தொடைக்குவாழைத் தண்டென்றே சொல்லலாம், அல்குலாகிய தடங்கடற்குவமை பூமியைச் சுமக்கும் அனந்தனையேயல்லது சூரியனுடைய ஓராழித்தேர்ச் சக்கரம்கண்ட உனக்குநான் வேறு சொல்வதுமுண்டோ! இடைக்குவமையையெடுத்துச்சொல்ல யாவருக்குமரிது, வயிற்றினுவமையாக ஆலிலை, அச்சுமானபலகை, தட்டு, வட்டமாகிய கண்ணடி முதலியவற்றைச்சொன்னாலும்அவையுமுவமமாகா, சிறுகூதாளப்பூ, நந்தியாவட்டப்பூ, அவற்றினுடையதொளையென்றாலும் உவமையாகமாட்டா, ஆயினும் கங்கைச் சுழியென்பர், அதை நீ கங்கையிற் சென்றறியலாம். மயிரொழுக்கிற்குவமமாகச்சிறுகொடியினுடைய நுடக்கந்திரச்செய்யவைத்ததாகக்கொள். வயிற்றினிடத்தில் மூன்றிரேகையிருக்கின்றன; அவை மன்மதன்மூன்றுலகில் வாழுமாதரைவென்ற மெய்ம்மையை யெடுத்துரைத்துச்சொல்லிய வாம்வெற்றிவரையெனத்தோன்றும், முலைக்குவமையாகவோ செப்பென்றுசொல்வேன் கலசமென்றுஞ்சொல்வேன், செவ்விள நீருமென்றுணர்வேன், பவளத்தாலாகிய சூதாடுகருவியென்றுசொல்வேன், தப்பில்லாமல்பகலில்வந்த சக்கரவாகப்பறவையென்றுசொல்லவறிவேன், பலபல நினைந்தின்னும் வருந்துவேன். கரும்பைக் கண்டாலும் மூங்கிலைக்கண்டாலுங் கண்ணீர்சோர வருந்துகின்ற யானறிவதுண்டோ! அவளுடையதோளை நினைந்துவமை சொல்ல இரும்பையொத்த நெஞ்சமுடைய எனக்கில்லையாயின்யாதுசொல்லவல்லேன், முன்கையைக் காந்தளென்று சொல்வார்கள், யாழின்கையென்று சொல்லுதல் மற்றொன்றினையறிவித்தாலன்றிச் சானகியாரது தடங்கையாமோ! மேலுநலத்தின்மேலு நலமுண்டோ! அசோகந்தளி ரிருக்கட்டும்; கற்பகத்தின் அழகிய தளிரும் ஒப்பாகவேயிராது, கமலமலரும் அவள் காலுக்கொப்பே யாகாவிட்டாற் கைக்கொப்

பாகத் தானெடுத்துச் சொல்லலாமோ! அவளுடைய உகிருக்கு நீங்களே மூக்கை யிகழுகின்றீர்களென்று பின்னும் கிளிப்பிள்ளைகள் முருக்கம்பூவைக் கிழிக்கும்; இதையழிக்கலாமோ! அங்கையும் மடியுங்கண்டால் தாமரைமலரை நினைப்பதுபோற் செம்மையான களிப்பைச்சிதறி நீலஞ்செருக்கி வாட்கண் மங்கையினுடைய கழுத்தை நோக்கின்கமுகுங்கடற்சங்கமும்நினைவையானல் அவையென்று துணியவேண்டும். பவளமும் செங்கிடையும் கொவ்வைப்பழமும் ஆம்பன்மலரும் இலவங்கமலரும் இந்திரகோபமு முருக்கமலருமாகிய இத்தொடக்கத்தனசாலவும் உவமமென்று சொல்லும்வண்ணம் சிவந்துதேன்றதும்புமானல் குவளைமலர் போன்றமையுண்ட கண்ணையுடையாய் வாயாகும், அதன்குறியுமதுவே, உலகத்தினிடத்தில் சிவந்ததாகிய அமுதமுங் கிடையாது, தேனில்லை, அவையுண்டென்றாலும் உண்டபோ தல்லாமல் அவையெண்ண இனிக்கமாட்டா? முல்லையுமுருந்துமுத்துநகையுமென்றபோது சொல்லை அமுதும்பாலும் தேனுமென்றுரைக்கத் தோன்றுமல்லாமல் வேறென்றுவதில்லை, அமுதுக்குமுவமை சொல்லப்படுமோ! இல்லையேயாயின் மாறில்லாதவகை யறிந்துகொள். ஓந்தியும் எள்ளினிளம்பூவும் தொளையையுமுடைய குமிழமலரு மூக்குக்கொப்பாகச்சொல்வார்கள். வள்ளைகத்திரிகை மயிர்வினைக் கருவியென்று சிறுவர்கள் சொன்ன வுவமையைப் பெரியவருரைத்தாற் பித்தாம். தோடுசெய்த பாக்கியமென்றே யெண்ணவேண்டும்; உலகத்தில் உவமைக்குவமை யுண்டோ! பெரியவாய்க்கடலை யொப்பாகா, வேறென்று நினைந்து பேசவரியவாய் ஒருவருள்ளத் தடங்குவனவல்ல, தெரியும்படி ஆயிரவிசை நோக்கினுல் தேப்பெருமாள்போலக் கரியவாய் வெளியவாகித் தோன்றுங்கண்கள். மேலும் அவள் புருவத்திற்கொப்புக் கூறவேண்டுமானல் தாளொத்திங்கேவளைந்து நிற்குமன்மதன் வில்லிரண்டில்லையாகையால் அதற்கொப்புக் கூறவரிதாயிருக்கும், முகத்தினையு நெற்றியையுநாடிப் பலநாளுஞ் சொல்லி யாற்றுத மதியென்னும் பண்பினையுடையதாகி முன்னுள்முளைத்த வெண்டிங்கள் முறைநாளுங் குறைவாய், எந்நாளு வளர்ந்ததென்று சொல்லி விடுவோமானல் நிறிதொத்திருக்கு மியல்பினையுடையதோ! மேகம் ஆம்பல் வில் வள்ளைகெண்டை முத்து இவற்றையுடையசந்திரமண்டலமிருக்குமானல் அவள் முகமென்று சொல்லலாம், தாமரைமலரும் அதற்கொப்பாகும். அவள் கூந்தலோ மேகத்தைக்கொண்டுவந்து புகையூட்டி இருட்பிழம்பு தோய்ந்து இருப்பதொத்திருக்கும், முழவும்யாழும் படைத்து குயிலொடுகிளியுங்கூட்டி மழலைமுதலியவற்றைத்தந்து பிரமன்அவளுடைய சொல்லைச் செய்தானன்றி வேறல்ல, உவமையைக்காட்டப்பெற்றிலான் எனின் இன்னும்பெறுவனே! வாய்ச்சுவையை யமிழ்தன்றி வேறுசொல்ல இயையாது! அவள் மொழிக்குவமை சொல்ல வேண்டுமானல்தேனே அமிழ்தோ வென்போமாயின் அவை செவிகளுக் கின்பத்தை விளைவிக்கமாட்டா! அவள் நடைக்குவமையாக அன்னப்பெடை, பிடியானை யென்பனவும் விரும்பியடையுமென்றே சொல்லவேண்டும். அவள் நிறத்திற்கொப்பாக மாந்தளிரினிறமும் மற்ற பொன்னுங் கறுக்குமென்றால்மணிநிறமுமொப்பாகுமா! மின்னிறமோநாணத்தால்வெளிப்படாமல்

ஒளித்துக்கொள்ளும், உலகத்தில் மாதர்களில் அவர்க் கொப்பாவாரில்லை யென்பது கொண்டு அவள் நிலைமையனைத்தும் அளந்தறிந்து அருகே சென்று சொல்ல வேண்டும்.

மேலும் நான் விசுவாமித்திர முனிவனோடு மிதிலைக்குச் சென்றபோது சானவளைக் கன்னிமாடத்திற் கண்டதைச்சொல்லவேண்டும்; அதன்பின் நான் இராசசபையிற் பினாகவில்லை யொடித்தபிறகு இளங்கொடி அவள்வருபோல வந்ததையும்சொல்லு, பின்னுமவள்முனிவனோடுகண்டகாளையே பினாகவில்லை யொடித்தவ னாகானென்றால் நானுயிர்விடுவேனென்று தோழிமாருக்குச் சொன்னதையுந் தெரிவிக்கவேண்டும். நான் தாய் சொன்மேற்கொண்டு காட்டுக்குவருகையில் என்பின்னேவா நினைக்கின்றாயே, உன்னுயிர் தித்திப்பாக வெண்ணுகின்ற நீ காட்டிலென்னுடன் வந்தால் வருத்தப்படுவையே! என்றலும், அக்காட்டில் யானில்லாத பொருள்கள் உனக்கினியவோ வென்று கண்களினீர்விழ வருந்தியதுஞ் சொல்,நாங்கள் அயோத்திநகரத்தை நீங்கிவருகையில் கோட்டைவாயிலைக் கடவாதமுன்பே காடெதுவென்று கேட்டாள், அதையுமெடுத்துக்காட்டு; இவற்றையெல்லாம் அவளுக்கு அடையாளமாகத் தன்னுமமந்திரமெழுதிய முத்திரைமோதிரத்தையுங் கொடுத்து விடையையுங் கொடுத்தான். அனுமானோ நீலன் சாம்பன் அங்கதனிவர்களுடனே இரண்டு வெள்ளஞ்சேனை சூழ்ந்துவரத் தென்றிசைநாடிச் சென்றான்.

நாடவிட்டபடலம்

முற்றிற்று.

---

## பிலநீங்குபடலம்.

---

இப்படி அனுமானும் சாம்பனும் அங்கதனும் நீலனும் இரண்டுவெள்ளஞ் சேனையுடனேதென்றிசையைநாடிப்போனபின்பு சுக்கிரீவன் சுசேடணனைமேற்கும்,சதவலியைவடக்கும், வினதனைத் தெற்குமாகப் போகவனுப்பிவிட்டுச் சீராமபிரானோடிருந்தான். இப்படிபோகத் துணிந்த அனுமான்முதலியோர் வெகுதூரநடந்து விந்தைமலையையடைந்து நருமதையாறுசேர்ந்து அங்கே அன்னமாடுமிடங்களும் அரமகளிர் நீராடுமிடங்களும் தேவர்கள்வசிக்குமிடங்களும் தேன்பாடிநிற்கும் சோலைகளும் சுற்றித்திரிந்து காணமல் அதையுந்தாண்டி ஏமகூடத்தைக்கண்டு அதனருகேயிருக்கும் குன்றுகளையு மரங்களையும் பார்த்துக்கொண்டே அதிகவுயர்வாயிருக்கும் ஒருமலையைக்கண்டனர். அது வித்தியாதரர் பாடலும் அரமகளிர்பாடலும் மேகமுழக்கமும்பேரிகைமுழக்கமும்மிகுந்திருந்தது. அதைக்கண்ட அனுமானேமுதலிய வானரவீரர்கள் இது இராவணனிருக்கு மலையேபோலும் தோன்றுகின்ற தென்றெண்ணி மிகக்கோபித்துக்கொண்டு அம்மலையிற் சென்றேறினர். யானைகளும்பாளிகளும்வலசைவாங்கிப்போயின. சிங்கங்களும் பயந்து மறைந்தோடின, அவர்கள் எங்கும்

திரிந்துஞ் சானகியாரைக்காணாமல் ஐம்பத்திரண்டு காதவழியகன்று வானளாவிய நகரத்தையுடைய அம்மலையை ஒருகணத்திற்சென்று தேடியுங்காணாமல் மிகவுமயர்ந்தார்கள்; அப்படியே வானரவீரர்இரண்டுவெள்ளமும் சானகியாரைத்தேடியுங்காணாமற்போயின. பிறகு அவர்களைத் தனித் தனிசானகியாரைத் தேடிக்கொண்டுவரக் கட்டளையிட்டு ஆகக்கடைசியில் தென்கடலுக் கருகேயுள்ளமகேந்திரமலைக்குவந்து சேரவேண்டும். அவர்களு மவ்வாறே விடைபெற்றுசென்றனர். அனுமான்முதலோர் நீரொன்றும் பெயரோயடையாத ஒருபாலைவனத்தைக்கண்டார்கள். அதில் பறவைகள் வந்துசாரா, விலங்குகளும் வசிப்பதரிது, புன்முதல் மரங்களிறுதியாக வொன்றுங்கிடையா, கற்களும் வேம்; மலையில்வசிக்கும் பாம்பும் புழுதியொட்டுதலான் இறந்துபோமே யல்லாமல வேறொன்றில்லை. அப்படிப்பட்ட பிலத்தையடைந்து தென்புலத்தில் எரிநரகத்திலகப்பட்ட ஆருயிர்போலவெப்பமடைந்து அந்தப்பிலத்தினந்த மடைந்தார்கள், அதனால் எழுந்திருந்து நடக்கமுடியாமலும் வழியுண்டென்னு மெண்ணமேயில்லாமல் இழுகிய நெய்போன்றவிருள் மிகுதியுமுடைய பிலத்தையடைந்தார்கள். அப்படியடைந்துசெய்யும் வகையறியாமல் இறந்துவிட்டோமென்ற வெண்ணமேமிகுந்து அனுமானைநோக்கி இன்று எங்களைக் காக்கவேண்டுமென்று முறையிட்டார்கள். அதைக்கேட்ட அனுமானும் தன் வாலையுறுதியாகப் பிடித்துக்கொள்ள வேண்டுமெனக் கட்டளையிட்டுக் கையினால் தடவிக்காற்றேபோல அவ்வழியைக் கடந்தான். எப்படி கடந்தானென்றால் பன்னிரண்டு யோசனையளாவிய மேனியும் மின்னிரண்டேபோலக் குண்டலங்கள் தோன்றவும் இருளுடையவும் தோன்றி அவ்விருள்நெருங்கிய பிலத்துவாரங்கடந்து அப்பால் விண்ணுலகுநாணத் தகுந்ததாயும் திருமகள் முகம் போல்வதாயும் கற்பகக்காடுடையதாயும் கமலமலர்த் தடாகமுடையதாயும் கோபுரங்களும் மதில்களுடையதாயும் அற்புதமாகத் தேவருமடையத் தக்கதும் இருள்களைக் கெடுத்தோங்குவதும் சோழமகாராசனைப்பாடிப்பரிசுபெற்ற கவிராசர்கள் மலைபோலச் சொர்னராசியும் ஆடைமுதலியவற்றின் குப்பைகளு நிரம்பியதுமாயிருந்தாலும் மாதர் ஆடவரென்பவர் சஞ்சரிப்பதில்லாமையால் துயிலவும் பார்க்கவும் துணையதில்லாமல் உயிரில்லாத பாவையென்றே சொல்லச்சிறந்தது. அப்படிப்பட்ட நகரத்தைத் தங்கள் கட்புலனாகக் கண்டு இது இராவணனிருக்கு நகரமாமென்று துணிந்து சொல்லிக்கொண்டு உவந்துவியந்தார்கள். அந்நகரவாயிலின் வழியேபுகுந்தார்கள். அந்நகரத்திலே மக்கள் தேவர்களைச் சித்திரத்திலே கண்டிருப்பதொழிய அந்நகரத்திலொருசேதனப்பொருளுங்கிடையாது. அங்கே தடாகங்களும் பொய்கைகளும் சோலைகளும் மாதர்கள் சொல்லேபோலக்கூவுகின்ற கிளிகளும் நாகணவாய்ப்பறவைகளும் குயில்களும் அன்னங்களுமுண்டு; ஆனால் சுவடுமாத்திரம் கிடையாது. அந்நகரத்தி னியல்பையறிந்து இதுமாயையோவென்று நினைந்து பிலத்திலகப்பட்டு வருந்தினோமே, அதினினும் துறக்கம் தூயதெனத் துணிந்தனர். நாமுமிறந்தோமில்லை, இதற்குரிய தெண்ணிலம், எதுவுமறந்தோமில்லை, பிறந்தவர் செயற்குரிய செய்தல்பிழையே யின்றென்று திகைத்தார்கள். இவ்வா

திருக்கையில் சாம்பனென்றுரை செய்வான். சானகியாரைக் கொண்டுபோன கள்ளன் நாமெல்லாம் அகப்பட்டுக்கொள்ள அமைத்த பொறிபோலிருக்கின்றது. இதற்கு முடிவும்கிடையாதே? விதிப்படியே யாவுநடக்குமென்றான். இதனை நாம் சகரர் முன்னே மண்ணைத்தின்றுகொண்டு பாதலஞ் சென்றவர் போலக் கடந்து விடுவோம், அப்படியில்லாவிட்டால் வஞ்சனையுள்ள அரக்கரையடங்கக்கொன்று களைவோ மஞ்சவேண்டாமென்று சொல்லி மாருதி கோபித்தான். மற்றவரும் அப்படியே செய்ய ஒருப்பட்டார்கள். இப்படி சொல்லிச் செல்லும்போது நல்லதவமெல்லா மோருருக்கொண்டா லொத்துக் கற்றையாகவிரிந்த அழகிய சடையையுடைய பெண்ணருங் கலத்தைக் கண்டார்கள்; அவளோ மரவுரிதரித்துக்கொண்டு சக்கரவாளமும் கலசமும்போன்ற முலைத்தடமாசடைந்து கலையொடுகூடிய மதிமுகமுடையளாகிக் கண்ணுகிய கயல்மீன்களிப்படைய மூக்கினுதிமேல்வைத்த கண்ணையுடையளா யிருந்தாள். அப்படியிருந்தவளைச் சானகியாரென்றெண்ணி வணங்க நின்றெண்ணினர். இப்படி வானரவீரர்களெண்ணி அனுமானை நோக்கி இவர் குறியனைத்து மாராயவேண்டுகின்றேம், இவரோ சானகியாரென்றுசொல்ல, அதைக்கேட்டமாருதி எந்தக்குறியுடன்எந்தக்குணத்தை யெடுத்துச்சொல்லுவேன், இக்குறியையுடைய பெண்மணி சானகியாராவரோ அக்கின்மணி முத்துமாலையை யொக்குமென்றால் ஒருவேளை யொப்பாகலாமென்று மாருதிசொல்ல மற்ற வானர வீரரும் அவளிருக்குமிடத்தை நாடிச்சென்றனர், இவர்கள் வரவை அம்மாதும் ஞானதிருட்டியாலறிந்துகொண்டு தன்முன் அவர்கள்வருவதுகண்டு நீங்கள் விண்ணவருமல்லர் நீங்கள்வந்தகாரியமென்ன! நீங்கள்இன்னாரென்றுஞ் சொல்லுங்களென்றுகேட்டாள். அதற்கிவ்வுலகின்கண் துன்பஞ்செய்துகொண்டிருக்கின்ற அரக்கர்கள் மாயையால் சானகியாரையொளித்தார்கள். அவர்கள் ஒளித்தவிடத்தைத்தேடி யறியவே நாங்கள் புறப்பட்டுத்தேடுகின்றோம். நாங்கள் சிராமபிரானால் அனுப்பப்பட்டதூதர்களென்றுஞ்சொல்லினர். அதை அம்மடந்தைகேட்டுச் சாலமனமகிழ்ச்சியடைந்து ஆனந்தக்கூத்தாடிப் பரவசமாய் இன்பக்கண்ணீர்பொழிந்தனள். அந்தப்பெண்மணி எங்கே இரகுநாயகனிருக்கின்றனன், தெரிவிக்கவேண்டுமென்றாள். அப்படிகேட்ட அம்மாதறிய யாவு மாருதிவிடுத்துச்சொன்னான். அம்மொழிகேட்ட அப்பெண்மணி யான்செய்த பெறலருந்தவத்தினால் நீங்கள் வரப்பெற்றேன். அதனால்வீடுபேறுகாணப்பெற்றேனென்று அவரைக்கான்யாற்றுநீரால் நீராட்டி அமுதன்ன சுவையொடுகூடிய உணவையளித்து மனங்குளிரச் சிலவார்த்தைகள் சொல்லிமுடித்தாள்.

மாருதியும் அவள் பாதங்களை வணங்கி இந்நகருக்கரசன்யார்? உன்இயற்பெயரென்ன? சொல்லவேண்டுமென்றுகேட்க, இந்நகரமோ மயனால் படைக்கப்பட்டது. ஒருதானவன் அரமகளிரில் ஒருபெண்ணை விரும்பிநிற்க; அதையறிந்த நான் அவளை இசைந்து இங்கே கொண்டுவந்தேன், அவ்விருவரும் அன்றில்விழைபோகமயர்ந்து பெரும்பகல்கழித்தார்கள். நானே அப்பெண்மணியினிடத்தே அருந்துணையாய் அருகிருந்தேன். இப்படியவளின்பக்

கடலிலழுந்தி அவன் வெகுநாள்கழிகையில் இந்திரன் அவளைத்தேடி எங்
குங்காணுமல் இங்கேகண்டு அவ்வரக்கனேடவளிருக்கு மலங்கோலத்தையுங்
கண்ணுற்று அவனையுங்கொன்று களைந்து அவளெதிரேநின்றுகொண்டிருந்த
என்னையும்பார்த்தான், அவள் கண்சைகையால் இவளால் இந்த நிந்தைமுடிந்த
தென்றுதெரிவித்தாள், அதைநோக்கிய அவ்விந்திரன் என்னை இங்கேயிருத்தி
இந்நகரமுன்காவலென்றான். இவ்வாறு சொல்லிவிட்டு இவ்வழியிருளாகவென்
றதன்றி மிக்க வல்லமையுள்ள வானரங்கள் இராகவனணையால் வரும், அத
னல் உன்னிடர் நீங்குமென்றான். இந்நகரிலே உண்ணவுணவுண்டு, பூசப்பூச்
சுகளுண்டு, சூடுதற் காபரணங்களுண்டு, புனைய ஆடைகளுண்டு, இவற்றைப்
பெற்றுக்கொண்டிருந்தேன். இதுவோ ஐயிருபதுயோசனையமைந்த பிலத்தில்
உய்யுநெறியாகியவுபாயத்தையுண்டாக்கநினைக்கவேண்டுமென்றாள்; இவ்வாறு
அப்பெண்ணமுதமன்னவள் சொல்ல அவளைவணங்கி உனக்குதேவர்கள் சேர்
ந்து வசிக்கும் பொன்னுலகந்தருகின்றேனென்று சொல்லிவானரர்களையுமஞ்ச
வேண்டாமென்று அப்பிலத்தையிடந்துபூமியோடுமேற்கடலைநோக்கி விட்டெ
றிந்தாலாரித்தான், இன்றும் அது மேற்கடலில் பிலத்தீவென்று சொல்லவிள
ங்குகின்றது. இப்பால் அவ்வானரர்கள் அநுமானுடன் விடைபெற்றுச்
சானகியாரைத் தேடச்சென்றனர். அவளும் அவர்களிடத்திலே விடைபெ
ற்று ஆகாயமார்க்கமாகவே போய்விட்டாள். அவளும்போய்விட்டபின்னர் வா
னரரெல்லாம் அநுமானுடைய பராக்கிரமங்களையெல்லாம் புகழ்ந்துகொண்டு
பூமியில் தேடிச்சென்று நீர்வளம்பொருந்திய நேமியென்னும் பொய்கைக்
கரையினைக்கண்டுதங்கினர்; சூரியனுமத்தமானமடைந்தான். இதுநிற்க;

பிலநீங்குபடலம்
முற்றிற்று.

## ஆறுசெல்படலம்.

அவர்கள்அப்பொய்கைக்கரையையடைந்துதேன் கனிகாய்க ளுண்டுநித்
திரைசெய்தனர். அப்போது மலையையும் கடலையும் போன்றவனும் யமனைபோ
ன்றவனும் கொடுமைக்கிடமானவனும் குணக்கேடனும் பிறையேபோலும்
தந்தமுடையவனும் கோபக்கண்ணையுடையவனும் மின்னலு முழக்குமுதலி
யவற்றின் மிகுதியையுடைய மேகம் கைகளைச் செலுத்தி மேலிடத்தில் நேரா
கத் தன்மேனி சென்றுலாவியொற்றலா லருவிபாயு மலையேபோன்றவனும்
வானவர்கட்கு மற்றவர்க்கும் நோகியதானவர்க்கு மெய்வலிமையிற் சிறந்த
வனுமாகிய புட்கலவனனென்னும் தானவனொருவன் கறங்கேபோலும் எங்
கெங்குஞ் சுழன்றும் செம்பட்டமயிர்பெற்றுப் பிசையும் கையையுடையானு
ய்ச் கருமசிந்தனையைப்பெற்றுத் தேடியலையு முயற்சியாலயர்ந்து படுத்துறங்
கும் வானரவீரரிடத்தில் வந்தணைந்தான். அவன் அங்கணைந்து அவர்களை
நோக்கி இந்தப்பொய்கை யென்னுடையதென் றறிந்திருந்தும் யாரோசில

அற்பர்கள் வந்தடைந்தனரென்று காலனேபோல நெருங்கி ஐயனாகிய அங்க தப்பெருமான் மார்பிலறைந்தான். உடனே நித்திரைதெளிந்து இவனே தான் அவ்விராவணனென்று சிந்தித்துத் தன்னைமோதிய அத்தானவனைத் தானு நேரேமோதியடிக்க அதனால் அவன் தளர்ந்து விழுந்தான். அவ்வோசை யைக்கேட்ட வானரவீரரெல்லாம் விழித்துக்கொண்டு யாரிங்கேவந்தது! இங்கே நடந்தகாரியமென்னேயென அநுமான் தனியே வினவ; அறிவிற் சிறந்தவனே யானென்று மறிந்திலேனென்றான். அதற்குச் சாம்பனும் யானிங்கே வசிக்கின்ற தானவனையறிவேன் அவன் பெயரோ தூமிரனென் னும் பெயரோடுகூடிய தானவனென்றான், வேறும் போர்செய்பவருண்டோ வென்றார். பின்பு அப்பொய்கையைக் கடந்தப்பால் சானகியாரைத் தேடு முயற்சியையுடையராய்நின்ற சிந்தனையை மேற்கொண்டு பெண்ணையாற்றைக் கடந்தார்கள். அந்தவிடத்திலே தண்ணீர்த் துறைகளையும் மயில்கள்நின்று நடனஞ்செய்கின்ற சோலைகளையும் புட்பத்தடாகங்களையும் பளிக்கறைக ளையு தேடிக்கொண்டே சானகியாரைக் காணமல் பெண்ணையாற்றையுங் கடந்து காடுமலைகடந்து பிராமணர்கள்போல வடிவங்கொண்டு விதர்ப்பதே சஞ்சென்று அங்குந் தேடிக்காணமல் தண்டகமடைந்து மூண்டகத் துறையையுந் தேடிப்பார்த்துப் பாண்டுமலையைப் பார்த்துத்திரிந்து தேடிக் கோதாவரியையுங்கண்டு சுவணத்தையடைந்து குலிந்தத்தையுங் கடந்து அருந்ததிமலையைத் தரிசித்துத்தேடி மரகதமலையைக்கண்டு தேடி வடவேங் கட மலையையடைந்து பின்னும் பிராமணர்வடிவங்கொண்டு தேடியுங்காண மல் தண்டகாட்டைத் தேடியடைந்து கடந்து பொன்னியாறுசூழ்ந்த சோ ணாட்டிலுந் தேடிக்காணமற் கடந்து செந்தமிழ்நாட்டிற்றேடி யெங்குங்கண் டறியாமல் மகேந்திரமலையையடைந்து தென்கடற்கரையைக் கண்டார்கள்.

ஆறுசெல்படலம்
முற்றிற்று.

---

## சம்பாதிப்படலம்

---

இவ்வாறு தென்சமுத்திரக் கரையைக்கண்டு அங்கிருக்குங்காலத்தில் எம்மருங்குஞ்சென்று துருவித்தேடிவந்து மகேந்திரமலையை யடையுங்களே ன்று அனுப்பப்பட்ட வானரசேனையும் வந்துகூடிற்று; யாவரும்வந்து சேர்ந்த வுடனே அவர்கள் சானகியாரைக்காணுதாராய் இன்னதைச்செய்யலாமென்ப துந் தோன்றாமல் நாக்குழறச் சொல்லத்தொடங்கினர். நமக்குச்சொல்லியனு ப்பிய தவணையும் கழிந்துவிட்டது; நாமோ சானகியாரையுங் காணுதிருக்கின் றோமே. இராகவனுயிரும் போன்றுமே! சுக்கிரீவாக்கினையுஞ் சும்மாவிடாதே! நமதுசெய்கையறக்கெட்டது, நாம் அருந்தவஞ்செய்வோமோ! அப்படியல்லா விட்டால் ஆலவிடமுண்டேனுமாய்வோமோ எனத்தங்களுயிரைவிடத் துணிந்த வராய் என் செய்வோமென்று மெண்ணினர்கள். இப்படி வானரவீரரெல்லாம்

சொல்லிக்கொண்டிருக்கையில் அங்கதப்பெருமான் சொல்லத்தொடங்கினான். நாம் சானகியாரைத்தேடிக் கண்டுபிடிப்போமென்று இராகவனிடத்திலேஇடம்பமாகப் பேசிவந்தசெய்திபொய்யாய்ப்போய்விடுகின்றதே! நாம்செய்துமுடிப்போமென்பதைசெய்யாதிருக்கின்றோம்,வெறுங்கையாய்நாங்கள்கண்டுபிடிக்காமற்போய்விட்டோமென்றுசொல்வதுமாகாது,எந்தையாகியமகாராசாவும் கோபிப்பார், சீராமபிரானுஞ் சிந்தைவருந்தித் திகைப்பான், அச்செய்கையைப் பார்த்துக்கொண்டிருப்பதழகல்ல, நானுயிர்விடத் துணிவதேநல்லது, நீங்கள் யோசித்துச் சொல்லவேண்டுமென்றான். அதைக்கேட்ட வானரவீரருள் சாம்பன் நீ சிறந்த சொல்லையே சொல்லினாய்! நாமழுதுகொண்டிருப்போமோ! நம் மன்பு பாழ்படப்போய்த் தொழுதுமோ வென்றதன்பின் பின்னுஞ் சொல்லுகின்றான். நாம் மாண்டுபோவதே நல்லது, அதைவேண்டுவது உயிர்க்குறுதி வேண்டப்படுவதென்றான். அதைக்கேட்ட அங்கதப்பெருமான்நீங்கள் இறந்துபடநான்மாத்திரம்போவேனானால்அதுநல்லதோ, அது உலகம் விரும்புஞ்செய்கையா! அல்லவே; பெரியோராற்பழிக்கப்படுஞ் சொல்லுக்கஞ்சித்தன்னுயிர் போன்றவர் இறந்துபடப்போனவனெனஉலகத்தார்சொல்லுவதற்கு முன்னே நான் இறந்துபடுவதேநல்லது,நான் இறந்துபட்டோமென்று கேள்விப்பட்டால் என்தாயும் தந்தையும் இறந்துபடுவர், அதைக்கண்ட இரகுநாயகனும் இளைய பெருமாளும் இறந்துபடுவர், இச்செய்தி அயோத்திக்கெட்டினால் பரதனும் சத்துருக்கனும் இறந்துபடுவர்; அயோத்தியிலுள்ள கோசலையன்னையை யுள்ளிட்ட தாய்மாரும் நகரமாந்தரு மிறந்துபடுவர், சானகியாரென்னும் தவக்கொழுந்தினால் உலகத்திற்குநேர்ந்த ஆபத்துசொல்லற்கிடம்பெறாதே என்றுஅங்கதகுமாரன் சொல்லச் சாம்பன் பின்வருமாறு சொல்லுகின்றான்.

அப்பா அங்கதா! நீயும் உன்குலத்தாருமொழிய உன்குலத்துரிமைக்கு வேறொரு மகன்கிடையாதே. அதையெண்ணியே நாங்கள் இறந்துபடுவதாகச் சொன்னது சுக்கிரீவாக்கினைக்குப் பயந்தேயாம். அப்படியல்லாவிட்டால் நாயகிறுதியையுஞ் சொல்லத் தகுந்ததா! நீயிங்கிருந்தும் புறப்பட்டுப் போய்விடு! போய் அங்கே நாங்கள் சானகியாரைக்காணாமையும் எங்கள்மரணத்தையும் தெரிவித்துவிடு, சோகங்கொள்ள வேண்டாமென்றான். அங்கே சாம்பன் இப்படிசொல்ல அருகேநின்றஅனுமான்சொல்லுகின்றான். இம்மூன்றுலகினுள்ளும் ஒருபக்கத்தினும் சானகியாரைப் பார்க்கவில்லையே! வேகமாண்டவர்போலவும் தருக்கிலாதவர்போலவும் மிக்க வேகத்தினையுடைய நீங்கள் கழிந்துவிடலாமோ, நாம் பிலத்திலும் வானத்திலும் மலைகளினுச்சியினிலும் புறத்திலும் அண்டத்திலும் சானகியாரைக் காணத்தேடித் திரிவோமென்றால் தவணையைக்கழிந்து வந்தார்களென்று நமது சுக்கிரீவமகாராசா சொல்லுவாரோ! நாமோ இன்னும் சானகியாரைத் தேடித்திரிவதே நல்லது, அப்படி தேடித்திரிவது சானகியார் பொருட்டுப்போரின்மாண்டுபோனசடாயுவைப்போல்இறந்துபோவேமானாற் பெருமிதமல்லதுபழியென்று சொல்லப்படுமோ!என்றான். இப்படிசொல்லிக்கொண்டிருக்கைபி லதைத்தூரத்தேகேட்ட சம்பாதி அவ்வாறு தன் தம்பி யிறந்துபட்டமையால் மனநெக்குருகி வருந்திப் புலம்பிக்குன்று

போல நடந்து அவர்களை யடைந்தான். அதைக்கண்ட அனுமான் கண்குளிரக் கண்டுந் தீப்பொறியெழக்கோபித்துஇதுகள்ளமாமாயக்கசட்டரக்கருருவமென் றே யெண்ணிநின்றான். இப்படிநின்ற அனுமானை இங்கிதமாகச்சம்பாதி நோக்கி வாக்கினால் வேறொன்றுஞ் சொல்லாமல் சடாயுவை யுயிர்வாங்கினவர்கள் யார்! அதையுண்மையாகச் சொல்லவேண்டுமென்று கேட்டான். அதற்குஅனுமான் நீ உன்னையுள்ளபடி இன்னானென்று தெரிவிப்பாயானால் பின்னேசொல்வேனென்றான். சம்பாதியும் நீங்கள் சொன்ன சடாயுவுக்கு நான்முன்பிறந்தவன், என்பேர் சம்பாதி யென்பாரென்றான். அதற்கனுமான் தனக்கும் இராவணனுக்கு நடந்தபோரில் அவன் கைவாளாற் கொலையுண்டிறந்தானென்று தெரிவித்தான். அப்பால் சம்பாதியும் சடாயுவை யெண்ணிப்புலம்பியழுது நின்று எவ்வாற்றானும் கொல்லப்படாத என் தம்பியாகிய சடாயுவை இராவணன்வாளாற்கொன்றவகையெப்படியென்றுசொல்ல,இராமகாரியத்தின் பொருட்டு இராவணன்கைவாளாற் கொல்லப்பட்டானென்றான். பின்பு சம்பாதி தம்பியை நோக்கிப் புலம்பியழுது தம்பி மரணத்தைச் சவித்தாரமாக அனுமான் சொல்லக்கேட்டான். பின்பு சம்பாதி தருமசொரூபியாகிய இராமனோடு சிநேகஞ்செய்து சானகியார்பொருட்டுயிர் துறந்தானென்பதனால்அவனிறந்தவனேயல்லன், பெறுதற்கரியவீடின்பமடைந்தான். இதைப்பார்க்கிலும் அவன் பெறவேண்டிய பேறென்னவிருக்கின்றதென்று சொல்லி அருகேயிருந்த தீர்த்தத்திற்சென்று நீர்டிமெல்லெனநடந்துவந்து அனுமான் முதலானவர்களை நோக்கி இன்னே நீங்களெல்லீரும் அவ்விராமதாரகமந்திரத்தை யொருங்கே பாராயணஞ்செய்யவேண்டுகின்றேனென்றான். அவர்களப்படியே அவ்விராமதாரகமந்திரத்தைப் பாராயணஞ்செய்தனர். உடனே அச்சம்பாதிக்கு ச்சிறகுமுளைத்து வானளவுந்தாவியது; இவ்வாறுசிறைகளைப்பெற்று விளங்குகின்ற மேனியையுடைய சம்பாதியுலகெங்கு மூடி நின்றான். அதைக்கண்ட வானரவீரர் நீ முன்னுளுற்ற தன்மையாதென்று கேட்கச் சம்பாதி சொல்லத் தொடங்கினான். அருணனுக்குச் சம்பாதியென்றும் சடாயுவென்றும்இருமக்கள் தோன்றி அதுமுதல் கழுகுகளுக்கரசாக வரசு செலுத்திவந்தோம். ஒருநாள்மேலுலகங் காணவேண்டுமென்னு மவா மிகுதியால்சூரியமண்டலம் வரையிலும்போய்ச்சூரியன்தேரைப்பார்த்துத்திரும்பினோம். எங்களைப்பார்த்த சூரியன் கோபித்து எவ்வகைத்தீயையும் வெதுப்புகின்ற தன் கட்டியினால் எங்களைத்தீயெழநோக்கிப்பார்த்தான்.என்தம்பிவருத்தப்பட்டு அவ்வக்கினியினால்தன்சிறகுவருந்தலானாகி என்னைக்காப்பாற்ற வேண்டுமென்று புலம்பியழுதான். அதைக்கண்ட நான் அவனை என்சிறகினால் காத்தேன். அதில்அவன் மறையப்போனான்.நான்என்னுடம்புமிறகும்வெந்து தீந்துவிழுந்துவிட்டேன். விழுந்துமிறவாமலிருந்தேன். என்னைக்கண்டசூரியனும் சற்றே இரக்கமாய்ச் சானகியாரைத் தேடிவருகின்றவானரங்கள் இராமதாரகமந்திரபாராயணஞ்செய்யுமானால் அதைக்கேட்டு உனக்குச்சிறகு மெய்யுமுன் போலாமென்றுவரங் கொடுத்திருந்தான். நானேஉலோகசாரங்கமுனிவனாச்சிரமத்தில் விழுந்ததனால் என்னுருயிர்விடத்துணிந்தேன். அவ்வருந்தவன்என்னைநோக்கி நீயேன்வருத்

தப்படுகின்றனே. உனக்குச்சிலகாலைக்குள் இறகுமுளைத்துவிடும்,இனிவருந்த வேண்டாமென்றான். நானுமுயிர் நீங்காதிருகாறுமிருந்தேன்,அவ்விராவணன் கெட்டொழிவதுமெய், என்தம்பிவிழ்ந்தமையால் நான் கழுகுகளைக்காக்கச் செல்கின்றேன். இதனை தசரதராமனுக்குத் தெரிவிக்கவேண்டுமென்றான். பின்பு அனுமான் சம்பாதியைநோக்கிநாங்கள்இராவணன்சானகியாரைக்கொண் டுவந்தது தென்திசையாகையாலெங்குந் தேடிப்பார்த்தோம், எங்குங்காண வில்லையே, என்செய்வோமென்றனர். அதைக்கேட்ட சம்பாதி சொல்லுகின் றான். அப்பாதகனாகிய இராவணன் சானகியாரைக் கொண்டுவருகையில் பார்த்தேன். அவனெடுத்துக்கொண்டுவந்து சிறையில் வைத்திருக்கின்றான். இன்னுமச் சிறையிலேயே கிடக்கின்றாள். இந்தச் சமுத்திரத்தில் நூறு யோசனை தூரங்கடந்து சென்றால் இலங்காநகரந்தோன்றும். அந்நகரத்தில பாசக்கயிற்றால் உயிரனைத்துங் கட்டிக்கொண்டு செல்லும் காலனும் புகவஞ்சு வானென்றால் யான்சொல்ல வேறென்னவிருக்கின்றது. நீங்களெவ்வாறு அந் நகரத்தையடைய வல்லீர்கள். நான்முகங்கொண்ட பிரமன் உமையொரு பாகத்தொருவன் இவர்கள் நிற்க, பாற்கடலில் யோகநித்திரை செய்யும் கள்ள மா மாயப்பிரானே வலினால் அந்நகரத்திற் செல்வதாயிருந்தாலும் தக்ஷணம் காலனே செல்வதாயிருந்தாலும் கடினமாயிருக்கும். இக்கடலைக்கடந்து யா வருஞ் செல்வதோ துர்லபம்; அவ்விலங்கைக் குட்சென்று காணவேண்டுமெ ன்றால் ஒருவரே தான்போகவேண்டும். எல்லாரும்போவது கஷ்டசாத்தியமா யிருக்கும். ஆகையால் ஒருவர் மறைந்துசென்று சானகியாருக்கு உண்மை யைத்தெருட்டி மீளவேண்டும். அப்படியல்லாவிட்டால் என் சொல்லாவது கேட்டுத்தெளிந்து இரகுநாயகனுக் குணர்த்தவேண்டும். மேலும்கழுகுகளோ தங்களைப் பாதுகாப்பாரில்லாமையினால் அவைகள் எல்லாம் மிகவும் மனங் கன்றிச் சேக்கையைவிட்டிரியல் போய்த்திரிதராகின்றன. அதைத் தீர்க்கும் காரியம் எனக்குரித்து, ஆகையால் நான் போகவேண்டும் விடைகொடுக்க வேண்டுமென்று விடை பெற்றுக்கொண்டு தான் கழுகுகளைகாக்குங்கார ணமாக ஆகாயமார்க்கமாகவே சென்றான். வானரவீரரெல்லாம் இவன் பொய்புரையான், நாம் அங்கை நெல்லிக்கனிபோலனைத்து மறிந்துகொண் டோம், உய்யும் சொல்லுதவக்கொண்டு சாலமகிழ்வெய்தினோம். இனி நல்லன வெல்லா மெண்ணிச் செய்துகொள்ள வேண்டுமென்று தத்தமக்குள் பேசிக் கொண்டனர். இதுநிற்க;

சம்பாதிப்படலம்

முற்றிற்று.

---

## மகேந்திரப்படலம்.

வானரவீரர்கள் எல்லாம் அங்கதப்பெருமானையடைந்து சிராமபிரானைத் தொழுது நடந்தவர்த்தமானங்களையெல்லாம் சொல்லுங்கோள், நம்மிற் சமுத்திரத்தைத் தாவிக்கடந்து யார்போகவல்லவரெனத்தம்வலியெல்லாம்சொல்லிக்கொண்டார்கள். நமக்கு இக்கடலைத் தாண்டிச்சென்று காணும்வலியே யிடையாதுதே, என்னசெய்வோமென்றார்கள். இவ்வாறு நீலன் முதலாகிய படைத்தலைவர்கள் சொல்லிக்கொள்கையில் வாலிகுமாரனாகிய அங்கதப்பெருமான் நானே சமுத்திரத்தைத் தாவிக் கடப்பேன், பின்னை மீண்டுவரவலி பெற்றிராமலிருக்கின்றேனென்று சொல்லிவிட்டான். பிறகு சாம்பனென்னும் படைத்தலைவன் வேதமுதலாகிய ஆப்தகலைகளெல்லாம் சொல்லியு முணராப் பரம்பொருளாகிய கள்ளமாமாயப்பிரான் வாமனப்படிவங்கொண்டு காசிபனுக்குப் புத்திரனாயும் ஆகண்டலனுக்குத் திருத்தம்பியாயும் தோன்றி மூவுலகத்தினையு மீரடியாலளந்த காலத்தில் யான் உலகமுழுதையும் பறையறைந்துகொண்டுவர மேருமலையென்னைமோதவிளைத்துக்கால்வருந்தினேன், அதனால் இச்சமுத்திரத்தையுந் தாண்டுமிடுக்கில்லாதவனா யிருக்கின்றேன், எவ்வாறுசானகியாரைக்காண்பேனென்றுசொல்லி முடித்துப் பின்னும்சொல்கிறான், இப்போது நாம் இத்தன்மையான துன்பத்தையனுபவித்துயாரைத்தான் சானகியாரைத்தேடும்படி யனுப்புவோம். ஆயினும் குரங்கு சானகியாரைத் தேடிச் சிறந்ததென்னும் புகழை நிலைநிறுத்த வல்லவன் அனுமனேயாம், அவனே சிராமபிரானாலே கணையாழியைக்கொடுத்தனுப்பப்பட்டமையாலும் எல்லாக்காரியங்களையுஞ்சொல்லாமலேமுடிக்குந் தன்மையினாலும் வேறொருவர் அவனுக்கு ஒப்பாவார் இல்லையென்று அவன் ஆளாண்மையையே வியந்து சொல்லத்தொடங்கினான். ஐயா அனுமானே! பிரமகற்பமுடிந்தகாலத்திலும் அழியாதவனே; சகலகலைகளையும் ஐயந்திரிபறக்கற்று வல்லவனே, யமனும் பயப்படத்தக்க கோபத்தையுடைய தோள்வல்லமை யுடையவனே, ஆலமுண்ட உருத்திரமூர்த்திபோலும் பேராற்றலுடையவனே! பஞ்சபூதங்களாலுமழியாதவனே, எவ்வகையான தெய்வப்படைகளாலும் கொல்லப்படாதவனே, உம்மையொப்பார் உலகத்திலொருவருமில்லாதவனே! ஒருகாற்குப்புற்றாலும் அண்டத்துக்கப்பாலும் குதிக்கத்தகுந்தவனே! எப்படிப்பட்டவைகளையும் சொல்ல வல்லமையுடையவனே! இக்காரியத்துக்குநீயே முதன்மையாகத் துணிந்துவந்தனை, எங்கேயும் செல்லவல்லாய், மீளவும் வலியுடையாய்;வல்லமையுண்டானால் கொல்லவும்வல்லமையுடையாய், தோளாற்றலாற் சிறிதும் குறையாதவனே, நன்றாக அறிந்து துணிந்து தருமமார்க்கங்கெடாத வண்ணம் கெட்டுருளும்படி வாலியைக்கொல்விக்கு மதிநுட்பமுடையவனே, இந்திரன் உன்னை இளம்பருவத்தில் கன்னத்தில் வச்சிரமெறியச் சிறிதேனும் புன்மயிருமிழவாதவனே, முன்னாளிற் சூரியனிடத்தே சகலகலைகளையும் கற்றவனே என்று இன்னனபோன்ற பலவகையாகிய தோத்திரம்சொல்லிப்புகழ்

ந்து நீயே இக்காரியத்திற்குச்சென்று எமக்கெல்லாம் புகழையுண்டாக்கிஉமது தாயைக்கண்டு செய்திசொல்லி வரவேண்டும். அதன்பொருட்டாக இக்கடலேயும் கடக்கவேண்டுமென்றான்.

இவ்வாறு சாம்பன்சொல்ல அனுமான் அகமுமுகமுமலர்ந்து தலைமேற் கைகூப்பிக்கொண்டு தன்குலத்தாருக்கெல்லாம சந்தோடமுண்டாகத்தன்சிந்தைமகிழ்ச்சியாய்ச்சொல்கின்றான். ஐயாசாம்பனே! நான் தங்களுடைய கருணையாலும் சானகிராமனுடைய அருட்பெருக்காலும் இலங்கையையடைந்து அதனை வேரொடுபிடுங்கி இங்கேகொண்டுவாவென்றுசொன்னாலும், என்னோடு போர்செய்ய எதிர்ந்தாரையெல்லாம்கொன்று சானகியாரையேகொண்டுவரக் கட்டளையிட்டாலும், தாங்களே யென்னையொருபொருளாக மதித்தேவினமையால் அக்காரியத்தைச்செய்யாதொழியேன். இந்த நூறுயோசனை தூரமுள்ள கடலென்னுள்ளடியிலடங்க முன்னாள் பகவான் மூவடியாலளந்ததுபோல் இக்கடலைத்தாவிச்சென்று இந்திரன்முதலியதேவர்கள் என்னோடெதிர்த்தாலும் இலங்காநகரத்துள்ள துன்மார்க்கரையெல்லாம் கொன்று களைந்து நினைத்துவந்தகாரியத்தை முடித்துவிடுவேன். நீங்களும் நினையன்மாத்திரத்தில் இவ்வெழுகடலேயும் கடந்து உலகனைத்தையும் வென்று சானகியாரைக்கொண்டுவரவல்லவரோயல்லது வேறல்ல; நீங்களோஎன்னை இப்போதேவி யதைச்செய்யக் கட்டளையிட்டு என்னறியாமைவிளங்கத் துணிக்கத்துணிந்தீர், என்னைப்போலும் பிறவியெடுக்கப் பாக்கியம்செய்தாரிலர். இக்கடல்முழுதும் உலகத்தை மூடிக்கொண்டாலும் அண்டமே யுதிர்ந்துபோனாலும் உங்கள்கிருபையும் எமதிறைவனாகிய இராகவனுடைய கருணையுமிரண்டு சிறகாகவிருப்பதனால் நான்கருடனைப்போலக் கடக்கவல்லேன். நான் வருமளவும் இவ்விடத்திலேதானே இருங்கோள், இலங்கைக்குச்சென்று சானகியாரைக்கண்டு விரைந்து திரும்புகின்றேனென்று விடைபெற்று வானரவீரரெல்லாம் சந்தோடமாக வாழ்த்தெடுப்பவும் தேவர்கள் பூமழைபொழியவும் மகேந்திரமலையின் மேலேறிச்சென்றான்.

மகேந்திரப்படலம்

முற்றிற்று.

---

கிட்கிந்தாகாண்டம்முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீராமஜயம்.

# சுந்தரகாண்டம்.

## கடல்தாவுபடலம்.

அலங்கலிற்றோன்றும்பொய்ம்மையரவெனப்பூதமைந்தும்
விலங்கியவிகாரப்பாட்டின்வேறுபாடுற்றவீக்கம்
கலங்குவதெவராற்கண்டாலவரென்பகைவில்லேந்தி
இலங்கையிற்பொருதாரன்றேமறைகளுக்கிறுதியாவார்.

அப்படி மகேந்திரமலையின்மேல்நின்ற அநுமான் தன்கண்ணுக்குநேராகச் சமீபத்தில் தெய்வலோகம்தோன்றக்கண்டு இதுதானோ இலங்கையென்று நினைத்துஐயப்பட்டுஉடனே இதுஉயரத்திலிருக்கிறபடியினாலே இலங்கைபல்ல தெய்வலோகமென்றும், இதில் சீதாபிராட்டியாரில்லையென்றும் தெரிந்துகொண்டு, பார்வையைத்தாழ்த்திப்பார்க்க அத்தெய்வலோகத்திலும் மிகவும் அதிசயமாகிய மணம்வீசும் சிங்காரவனங்களும் வட்டமாகிய பொன்மதில்களும் வெற்றிக்கொடிகட்டிய வாசல்களும் இரத்னகசிதமாயும் கனகமயமாயும்விளங்கும் மாடமாளிகை கூடகோபுரங்களும் வீதிகளுமுண்டாகித் தகத்தகாயமாயிருக்கின்ற இலங்கையைக்கண்டு மிக்கசந்தோடமாய் அண்டகடாகமும் அட்டதிக்குகளும் குலுங்கும்படி புயங்களைக்கொட்டி அட்டகாசம்செய்து, முடிவில்லாத உன்னதமான விச்சுவரூபத்தையுடைய அநுமான்நின்றபடி இரண்டு காலையும் ஊன்றி மிக்க பராக்கிரமத்துடன் அப்பால் தாண்டுவதற்கு முயன்றான். அப்போது அம்மலை நெறநெறவென்று நெரிந்துகீழேயமுந்தி வயிறுகிழிந்து அதன்குடல்கள் பிதுங்கினவைபோல, அதிலே வெகுகாலமாக வசித்துக்கொண்டிருந்த மலைப்பாம்புகள் வெளிப்பட்டுப் புரண்டுபோகத்தலைப்பட்டன. குகைகளிலே நித்திரைசெய்துகொண்டிருந்த சிங்கங்கள் நெரிபட்டு வாயினால் உதிரங்கக்கிக்கொண்டு மடிந்தன. பறவைக்கூட்டங்களெல்லாம் எழும்பிக் கடலானது காணமடையும்படி இரைச்சலிட்டுக்கொண்டு பறந்து பகலென்பதேதெரியாமல் ஆகாயத்தை மறைத்தன. ஆண்யானைகள் இரண்டுசெவிகளுந்தாவி முதுகிலேமோதுவதினால் கடுங்காற்றுவீச ஆகாயத்தினிடத்திலிருக்கின்ற சந்திரனும் அஞ்சப் பிடியானைகள் நடுநடுங்கி உடலைத்தழுவிக்கொள்ளத் தம்முடைய தும்பிக்கைகளால் மரங்களைப்பேர்த்துச்சுழற்றிக்கொண்டு வீரிட்டோடின.பொன்மயமாகிய சிகரங்கள்பொடிப்பொடியாக அனற்பொறிகள்சிதற

அம்மலையின்முகடு நெரிந்தபோது அங்கே மயிர்முளையாமலும் கண்திறவா
மலுமிருக்கின்ற இளங்குட்டிகளை வாயிலேகௌவிக்கொண்டு புலிகளெல்லாம்
பயந்தோடின. இருந்தாற்போலிருந்து, அம்மலை நெரிகின்ற முழக்கங்காண
வே அதில்வசித்திருந்த வித்தியாதர குமாரர்களெல்லாம் பயந்து கையில்
வாளும்கேடகமும்பிடித்துக்கொண்டு அந்தரமார்க்கத்தில் எழும்பி போர்க்கள
த்திலே பகைவர்கள்காலைத்துணிக்கும்படி கத்தியைக்கொண்டு ஓங்கியபோது
அதைத்தப்பித்துக்கொண்டு அதிகவிசையாய் மேலெழும்பிய வீரர்களைப்போ
லப்போயினர். நாண்மீன்களும் சந்திரசூரியர்களும் மேகங்களும் மேலே
கவிழ்ந்துகொண்டிருந்த அம்மலை அவைகளெல்லாம் ஆகாயத்தில் நிற்க, அனு
மானுடைய சரீரபாரத்தினாலே பூமியிலழுந்துவது, கொடிமரமானது மேலே
காணக் குமிழிகளுண்டாகக் கடலிற் பெரியகப்பல் அமிழ்கின்றதுபோலிருந்
தது. சந்தனமரம் குங்குமமரமுதலானவைகள்கற்கள்நெரிகின்ற சந்துகளிலே
அரைபட்டுச் சுனைநீரில் கரைபட்டு இங்குலிகப்பொடி புட்பத்தின் மகரந்தப்
பொடிகளுடனேகலந்து சிவந்து வெளியிலே அருவியாயோடிவருவது, அம்மலை
கிழிந்து அதனுடைய உதிரம் புறப்படுவதுபோலிருந்தது. அதில் வசித்துக்
கொண்டிருந்த தவசிகளெல்லாம் அம்மலை முன்னாளில் திருப்பாற்கடலில்
கட்டுக்கடைந்த மத்தாகிய மந்தரகிரியைப்போலச் சுழலவே, தாங்கள்செய்
கின்ற தவமுடிந்தும் முடியாமலும் தேகபாசத்தை ஒழியாமலும் மோட்சப்
பிரதேசத்திற்குப் போகின்றவர்களைப்போல ஆகாயமார்க்கத்தி லெழும்பிப்
போயினர். அம்மலைநெக்குவிட்டுப்பிளந்தபோது அதிலுண்டாகியஓசையைக்கே
ட்டுத் தேவமாதர்கள்பயந்துநடுநடுங்கித் தத்தம்நாயகர்களைக் கட்டிக்கொண்ட
னர். அப்படி அவர்களால்தழுவப்பட்ட அத்தேவர்கள் முன்னாளில் கைலாய
மலையை இராவணனெடுத்தமாத்திரத்தில் உமாதேவிபயந்து கட்டிக்கொள்
ளும்படி அதிலிருந்த சிவபெருமானை ஒத்திருந்தனர். பின்னும் அம்மலையில்
பிணங்கி மிக்ககோபமாயிருந்த அநேகத் தெய்வப்பெண்கள் இப்பயத்தினால்
மனத்திடுக்கிட்டு அக்கோபம் நீங்கிப் புருடர்களைத் தழுவிக்கொண்டவர்களாய்
அந்தரமார்க்கத்தில் எழும்பிப்பயந்தீர்ந்து தாங்கள்விட்டுவந்த கிளிகளைக்குறி
த்து இரங்கிக்கிலேசித்தனர். இப்படிப்பட்ட சமயத்தில் தேவர்களும் முற்றத்
துறந்த முனிவர்களும்மற்றும் மும்மையுலகத்திலுமிருக்கின்றஉத்தமபுருடர்க
ளும் வரிசைவரிசையாய் அந்தரத்தில்வந்துநின்று புட்பங்களும் சந்தனமும்
வாசனைப்பொடிகளும் இரத்தினங்களுமாகிய இவைகளையெல்லாம்சொரிந்து
மகானுபாவராகிய அனுமானே! கடவுமையாவென்றுசொல்லி வாழ்த்தினர்.
வீராதிவீரனாகிய அனுமானும் மிக்கசீக்கிரமாகத் தாவிப்போகத் தலைப்பட்ட
னன். அப்போது கூடவந்திருக்கின்ற சாம்பன் அங்கதன் முதலானவர்களெல்
லாம்பார்த்து ஐயா அனுமானே! இக்கடல் குறுமுனியாகிய அகத்தியமுனிவ
ரால் உண்ணும்படி அடங்கியதாகையால் இவ்வற்பமான கடலையா? நாம்
தாண்டுகின்றதென்று இகழ்ச்சியாக மனத்திலெண்ணாமல், போகின்ற காரியம்
பெரிதாகையால் அதைப்பிரதானமாக எண்ணிக்கொண்டு போய்வாவென்று
சொல்லினர். தேவர்களெல்லாம் அனுமான் இப்பொழுது இவ்வடிவமெடுத்

தது அவ்விலங்கைமட்டுமே போவதற்கன்று அதற்கப்புறம் போவதற்காகவும்
காண்கின்றதென்று அதிசயித்துப்பார்க்க, அவ்வனுமான் முன்னே தாழ்ந்து
தன்காலினாலழுத்தவே அம்மலையின்சிகரமும் அதன்மேலிருந்த தன்பாதமும்
பூமிமட்டும் அழுந்தின. வாலைவிசி நீட்டிக்கொண்டு கால்களைமடக்கி மார்பை
யொடுக்கித் தோள்கள் பூரித்துவளரக் கழுத்தைச்சுருக்கிக் கைகளை நீட்டித்
தலையை உயர எடுத்து வாயினால் இராமராமவென்று சொல்லிக்கொண்டே
பார்ப்பவர்களுடைய பார்வைக்கெட்டாமல் அதிகவிசைபாக மேலெழும்பி
னான். உச்சியானது பிரமலோகத்தை அளாவும்படி. அவனெழும்பினவுடனே
அவ்விசையிலே அநேகமரங்களும் குன்றுகளும் யானைமுதலாகிய பலவகை
மிருகங்களும் இது இராமகாரியமென்று அறிந்து தாங்களும் உடன்போக
எழும்பினவைபோல எழும்பின. அவ்வகையாக எழும்பினகுன்றுகள் கற்கள்
மரங்கள் மிருகங்கள் மற்றுமுள்ள சகலசீவராசிகளும் தென்றிசையிற்போய்
அஞ்சனை இளஞ்சிங்கத்துடனே இலங்கைக்குப்போவதற்கு விசைபோதாமல்
நின்றுபோனவைபோல அங்கங்கே விழுந்துவிட்டன. அப்படி அக்கடலினிடத்
திலே மேலுங்கீழுமாகவிழுந்த மிருகங்கள் மரங்கள் கொடிகள் செடிகள் குன்
றுகள் முதலானவைகளும் அவ்விடத்தில் சிராமபிரான்வந்து கோபஞ்செய்வா
னென்று முன்னமே அணைகட்டினதுபோல விளங்கின. அனுமான் பாய்கிற
விசையினாலே அக்கடல் கிழிபட்டுப் பாதாளமட்டும் வெளியாக நாகலோகத்
தின் மாணிக்கபிரகாச முதலானவைகளையுங்கண்டு அனுமான் நமக்கு நாக
லோகமுங்காணும்படி கிடைத்தது என்னபாக்கியஞ்செய்தோமென்று மகிழ்
வடைந்தனன். அப்போது அந்நாகலோகத்தார் முன்னாளில் கருடன்கடலின்நீர்
கிழியச்சிறகைவீசிக்கொண்டுவந்து அமிர்தத்தை எடுத்துப்போயினானே, அவன்
இப்போதும் வருவதுபோலக்காண்கின்றதே! இனிஎப்படிநாம்பிழைக்கப்போகி
ன்றோமென்றுபயந்துநடுநடுங்கிஅப்பால்ஓடிப்போனார்கள். மேலுங்கடல்கிழிந்து
மகாமீன்கள் துடிக்க, சுறுமீன்கள் மிதக்க, பனைமீன்கள் இறக்க யுகாந்தகால
மாருதம்போல அனுமான்போகின்ற வேகத்தைச்சகிக்காமல் அலைகளெழும்பி
இரைத்துக்கொண்டு அனுமானுக்கு முன்னே இலங்கையின்மேற்போய் வீசின.
திக்கயங்கள் நடுநடுங்க வடக்கேயிருந்து தெற்கேபோகின்ற அனுமான் எப்படி
யிருந்தானென்றால் முன்னாளில் சர்ப்பராசனுடன் பிரதிக்கினைசெய்து வாயு
பகவான் பிரபலமாக மோதியடித்து ஒடித்துக்கொண்டுபோன திரிகூடமலை
க்குஒப்பாயிருந்தனன். பின்னும் அவ்வனுமான் பாற்கடலிற்பிறந்த உச்சைசிர
வமென்னும் வெள்ளைப்புரவியும் தெய்வசம்பத்தின் ஆதிபத்தியமும்உண்டான
இந்திரனுடைய ஆயிரங்கண்களுக்கும் எட்டக்கூடாத விசையுடனேபோவது
இவ்வண்டங்களையெல்லாம் கொள்கின்ற 'ஒரு புட்பகவிமானம் இலங்கைக்குப்
போவதுபோலவு மிருந்தது. தேவர் துதிசெய்யவும் முற்றத்துறந்த முனிவர்
கள் வேதவாக்கியங்களைச்சொல்லி ஆசிர்வதிக்கவும் பூலோகத்தார் வணங்க
வும்போகின்ற அனுமான் இராவணனை முன்பு அழுத்தியதுபோல இன்னமும்
அழுத்துவோமென்றுநினைத்து நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானை நீங்
கிப்போகின்ற கைலாயமலைபோலவும் விளங்கினான். பிரமசாரிவேடந்தாங்கி

விவேகத்தில் பிரமனைப்பார்க்கிலும்விசேடப்பட்டு, உலகத்திற்கெல்லாம் ஒரச்சாணிபோல நிலைபெற்றிருந்து தருமார்த்தங்களைப் பூர்த்திசெய்கின்ற அநுமான் பொன்மயமாகிய மகாமேருதன்னை நீங்கித் தென்றிசையிற் போயிருக்கின்ற திரிகூடமாகியபிள்ளையைக்கண்டுவெகுநாளாயிற்றேயென்றுபார்க்கப்புறப்பட்டுவருவதுபோலவும் தோன்றினன். மற்றும் யுகாந்தகாலத்திலே மேகபடலங்களைக்கிழித்து நாண்மீன்கள் உதிரக் கடல்பொங்கிப்பாயத் திக்குகளெல்லாங்குழைய மேருமலையுங்குலுங்க மற்றமலைகளெல்லாம் வேர்பறித்துவிழுந்து அழியப் பிரசண்டவேகமாய் வருகின்ற தம்முடைய பிதாவாகிய வாயுபகவானைப்போலவும் காணப்பட்டனன். பத்துத்தலைகளும் இருபதுகைகளுமுண்டான இராவணன் பஞ்சேந்திரியங்களையும்வென்று செய்த தபோபலமெல்லாம் மாண்டுபோய்விட்டனவென்று அறிந்து கிழக்கிலிருந்து உதயமாகின்ற வழக்கந்தவிர்ந்து விபரீதமாய் வடக்கேயெழுந்து இலங்கையின்மேற்போகின்ற சூரியன்போலவும் பிரகாசித்தனன். மனுகுலத்தில் அவதரித்த சக்கரவர்த்திதிருமகனைத் துணைபற்றிக்கொண்டு, பாவகிருத்தியத்தையுடைய அரக்கர்கள் வசித்துவரும் இலங்கையின்மேற் போகின்ற அறக்கடவுளின் ஆக்கினைசக்கரம்போலவும் விளங்கினன். தன்வெண்மையாகிய தேககாந்தி இருளைநீக்கவும் மேருமலைகாணவும் ஆகாயமார்க்கத்தில் எழும்பிப்போன அஞ்சனபுத்திரன் உலகங்களையெல்லாம் வடவாமுகாக்கினி தகிக்கின்ற ஊழிகாலத்தில் வடதிசையில் உதயமாகிய பூரணசந்திரனைப்போலவும், மேலும் சக்கரதாரனாகிய ஸ்ரீமந்நாராயணனுக்குத் தான் வாகனமாயிருக்கின்ற தன்னுடைய பராக்கிரமத்தைக்காட்டவும அரக்கர்களுடைய குடர்களெல்லாம் சிந்தவும் மலைகளெல்லாம் பின்தொடர்ந்துவரவும் மேகங்கள் ஆகாயத்தில் ஒதுங்கவும் கடல்களெல்லாம் கலங்கவும் தாவிப்பறக்கின்ற கருடனைப்போலவும் காணப்பட்டனன். முன்னாளில் அண்டகடாகத்தையெல்லாம் விஷ்ணுமூர்த்தியின் காலினால் அளந்தான்; இவன் வாலினால் அளக்கின்றானென்றுசொல்லித் தேவர்களெல்லாம் பிரமிக்கப் பாய்ந்துபோகின்ற வாயுபுத்திரனுடைய வால் இருமையையுடைய வேதத்தை ஒத்த அவ்வனுமானாகிய தருமதேவதையைத் துணைபெற்றுக்கொண்டு அற்பச்செய்கையையுடைய அரக்கர்கள் பார்ப்பார்களென்றே அவனுக்குப் பின்புறத்திலே ஒளித்துப்போகின்றஇயமபாசத்தைப் போலிருந்தது. பின்னும் அவ்வால் மகாமேருமலையை முழுதும் சுற்றிக்கொண்டிருந்த ஆதிசேடன் விஷ்ணுமூர்த்தி அனுப்பவந்த கருடனைக்கண்டு மனஞ்சோர்ந்து சுற்றியிருந்த சுற்றுகளை விட்டுப்பெயர்கின்றதுபோலவும் பிரகாசித்தது. அப்படி அநுமான்போகின்ற வேகத்திற்பிறந்த காற்றானதுமோத தேவர்களேறுகின்ற விமானங்களொன்றோடொன்று அடிபட்டு உடைந்து கடலிலேவிழுந்தன. வச்சிரபாணியாகிய இந்திரனுடைய லோகமும் நடுங்குகின்றதே,இப்பொழுது அநுமானுடைய கருத்துத்தானென்னவோ! இவன்வேகம் இலங்கைமட்டும் போவதற்காகவல்லவென்றே பூலோகமெல்லாம் அஞ்சியது. அளவிறந்த யோசனைப்பிரமாணமாகிய தூலசரீரத்தை யுடையவைகளென்று சாத்திரங்களும் பெரியோர்களும் சொல்லுகின்ற திமிங்கிலம் திமிங்கிலகில

மென்கின்ற மீன்களுடனே சமுத்திரங்கலங்க, அனுமானுடைய சரசாரீர அவையவங்களி லிருந்து தோன்றியகாற்றினால் மற்றுள்ள மச்சங்களெல்லாம் இறந்துமிதந்தன. அனுமானுடைய இரண்டுகைகளும் நீண்டு வேகத்துடனே முன்னேபோய்ப் பிரகாசிக்கின்றது இராமலக்குமணர்க ளிருவரும் அவ்வனு மானுக்கு முன்னே இலங்கைக்குப்போவதுபோலவு மிருந்தது. அப்படி அவன் வாயுவைப்போல விசையாய் ஆகாயத்தில் தாவிப்போம்போது கீழ்த்திசைக் குக் காவலாகிய ஐராவதமென்னும் யானை சமுத்திரத்தில்வந்துநின்றதுபோல அக்கடலில் அனேககாலமாய் ஒளித்திருந்த மைநாகபர்வதம் மேலெழுந்துவந் தது. அவ்வகையா யெழுந்த அம்மலை தன்னுடைய ஆயிரஞ் சிகரங்களும் பொன்முடிகளைப்போலவும், ஓயாமல் ஓடுகின்ற அருவிக் கூட்டங்கள் தோளி லணிந்த உத்தரியத்தைப்போலவும் பிரகாசிக்க விஷ்ணுமூர்த்தி துர்ச்சனர்க ளால் வந்த துயரத்தை நீக்கும்படி கடலிலிருந்துஎழுந்ததுபோலவு மிருந்தது. மேலும் அம்மலை முன்னாளில் அமிர்தங்கடைந்த மத்தாகிய மந்திரகிரி பூமியி லழுந்தியதுகண்டு, விஷ்ணுமூர்த்தி ஆமையுருவமெடுத்துத் தாங்கினதினால் அது உயர எழும்பியதுபோலவும் எழும்பியது. பின்னும் இரண்டுபக்கத்தி லும் அதன் சிறகுகள் தழைத்தோங்க வெண்ணிறம் பிரகாசிக்க மேலெழும்பி யது எவ்வகை யிருந்ததென்றால் பாதாளலோகத்திற்போய் அமிழ்தமெடுத்து க்கொண்டு கடலைக்கிழித்துப் புறப்பட்ட பறவைக்கரசனாகிய கருடனுக்கு ஒப்பாயுமிருந்தது. அன்றியும் உலகங்களையெல்லாம் சிருட்டிக்கும் பொருட் டுப் பிரமனை யுண்டாக்கு நிமித்தம் மகாப்பிரளயத்தில் தோன்றிய சுவர்னசா யையான அண்டம்போலவுமிருந்தது. மற்றும் அம்மகாப்பிரளயத்தில் தோ ன்றியபிரமன் இந்தப்பிரளயத்திலிருந்து என்னையுண்டாக்கிய என்பிதாவாகிய அந் நாராயணனைக் கண்டாலல்லது நான்செய்யுங்காரியமொன்றுஞ் செய்கின் றதில்லையென்று அவனைத் தியானஞ்செய்துகொண்டு ஆகாயத்திலே கடனீரி லே மூழ்கியிருந்து தவஞ்செய்து அத்தவமுடிந்தபின்னர் அவன் அதிலிருந்து எழுந்ததுபோலவு மிருந்தது. அல்லாமலும் முற்காலத்தில புட்பமாலையை வெள்ளையானை தன்காலின்கீழிட்டு மிதித்ததைக் குறித்துத் துருவாசமுனி வன் கோபித்துச் சபித்ததினால் கடலிற்போயொளித்த இந்திரனுடைய சம்ப த்துகளெல்லாம் மீண்டுவரும்படி என்றும் அழிவில்லாத ஆதிநாயகனாகிய பக வான் தேவதானவர்களுடனே அக்கடலை மத்தித்தபோது அதிலிருந்துதோன் றிய சந்திரனைப்போலவுமிருந்தது. அம்மலையின் சிகரத்தில் பெண்மீனுடனே உறங்கியிருந்த மகரமீன்கள் அம்மலைமேலெழும்பியபோது சுவாசம்விட்டுஉலா வியோடின. முத்துகளையீன்ற சிப்பிகள் நாண்மீன்கள்சூழச் சந்திரோதய மானதுபோலப் பிரகாசிக்கவும் உப்பரிகையின்மேல் கொடிகளாடுவதுபோல அருவிகள் ஒழுகவும் சுனைகளிலேயிருந்த பனைமீன்கள் திமின்மீன்களுடனே தொடர்ந்து துள்ளின. அறுபகையும் முக்குற்றமும் வெந்துபோகும்படி ஞா னேதயமாகி நிட்டைநீங்கிய பெரியவர்களைப்போலஅநேககாலம் நீருக்குள்ளே கிடந்து வருந்தின நாகங்கள் நீரைவிட்டு வெளியிலேவந்தமையால் வெகு காலமாக அடங்கிக்கொண்டிருந்த சுவாசம்விட்டு மகிழ்வடைந்தன. இப்படி

மிதமற்ற சிங்காரங்களுண்டாகிய அம்மைநாகமலை ஆகாயமட்டும் வளர்ந்து எதிரே நிற்பதை அனுமான் பார்த்து மிகவும் அதிசயப்பட்டுக் கொஞ்சமேனும் அஞ்சாமல் இது என்னவென்று ஐயமடைந்து பின்பு மலையென்றறிந்து அம்மலையை அதிசீக்கிரத்தில் அலட்சியமாய்த் தலைகீழாகத் தள்ளிவிட்டு ஆகாயமார்க்கத்திற் பாயநினைத்தனன். அச்சமயத்தில் அம்மைநாகமலை நடுநடுங்கிப் பயந்து உடனே அதிக அன்புண்டாய் ஒரு மனிதனைப்போல் உருவமெடுத்து அநுமானை நோக்கி ஐயா! இதைக்கேளென்று சொல்லத் தலைப்பட்டது. என்னைப் பகைவனென்று நினைக்கவேண்டாம்; முன்னாளில் இந்திரனுடைய வச்சிராயுதத்தினால்உலகத்திலுள்ளமலைகளின்சிறகையறுத்தான்; அப்போதுஎன்னை வாயுபகவான் இவ்விடத்தில் கொண்டுவந்து சேர்த்துக்காத்தான். நீஅம்மகானுபாவனுடைய குமாரனாகையால் உனக்கு ஏதேனும் உதவி செய்யவேண்டுமென்றே மிகவும் ஆசையுண்டாயிருக்கின்றது, ஆகையால் என்சிகரத்தின்மேலேனும் சிறிதுநேரம்நின்றுவிருந்துண்டுஇளைப்பாறிக்கொண்டுபோ; சமுத்திரராசன் ஸ்ரீராமபிரானுடையஏவலைமேற்கொண்டு வாயுபுத்திரனாகிய அனுமான் தேவர்கள்உய்யும்படிசீதாபிராட்டியைத்தேடிக்கொண்டுவருகின்றான்; நீபோய் அவனைக்காண்; இதைப்பார்க்கினும் பெறத்தக்கபேறுவேறொன்று மில்லையென்று சொன்னான். அதைக்கேட்டு எனக்குநீ பெற்றதாயினும் மிகவும் நல்லையென்று எண்ணிவந்தேன், உன்னாலியன்றதை நீ பெற்றுக்கொள்ளென்று சொல்ல அச்சொல்லை அநுமான்கேட்டு இவன்குற்றமில்லாதவனென்றே நினைத்துத் தாமரைமலருக்குச் சமானமாகிய திருமுகம் பிரகாசிக்கச் சிரித்தனன். சிரித்து உடனே தான்போகின்ற திசையைநோக்கி அம்மலையின் சிகரத்தைக்கண்டு சர்வலோகசரணியனாகிய இரகுநாயகனிடத்திற்கொண்ட பத்திமையினால் நானெவ்வளவும் வருத்தப்படமாட்டேன்; என்னுடைய இட்டத்தை நிறைவேற்றாமல் யாதொன்றும் உண்ணமாட்டேன்; மிகுந்த தேனைப் பொழிகின்ற சாரலையுடைய மைநாகமலையே! நீ இவ்வளவு அன்பைச்செலுத்தியபோதே நானிருந்தேன், விருந்துமுண்டேன், இதன்மேலும் நீ எனக்குச் செய்யத்தக்க உபசாரமுமுண்டோ? அன்பைப்பார்க்கிலும்விசேடமாகியபூசை யாரிடத்திலிருக்கின்றது. இப்போது நான்விரைவாய்ப்போய் இலங்காபுரியைச் சேர்ந்து எங்களாண்டவனாகிய இரகுநாயகனுடைய அடிமைத்தொழிலைசெய்வதைப்பார்க்கிலும் சிறந்தகாரியம் என்ன இருக்கின்றது? அங்கிருந்து திரும்பி வரும்போது விருந்துண்டு போகின்றேனென்று உபசாரமாகச் சொல்லிவிட்டு அநுமான் அதிசீக்கிரமாய் அப்புறம்போனான். அவ்வண்ணமாக அவன் கடன்மேல் உயர்ந்து போவதைப்பாத்துப் பூமியிற்பாதத்தை ஊன்றிநடவாத இளமைப்பருவத்திலேதானே என்னுடைய தேரின்மேற்பாய்ந்த இம்மகாநுபாவன் இவ்வளவுவேகமாய்க் கடலைத்தாண்ட நினைத்தது யாரிடத்திற் போகவோவென்று சூரியனும் ஐயமடைந்தான். அப்படி அதிகவிசையாய்ப்போகின்ற அனுமானைத் தேவர்கள்பார்த்து அதிசயித்துக் களங்கமற்ற மனத்தினையுடைய சுரசையென்பவளை அழைத்துத் திரிலோகத்தாருக்கும் வந்த துன்பத்தை நீக்கும்படி வாயுபுத்திரன் வருகின்றான், நீபோய் அவனுடைய பராக்கிரமத்தைப்

பரிசோதித்து எங்களுக்குத் தெரிவிக்கவேண்டுமென்றுசொல்லி அனுப்புவிக்க, அவ்வண்ணமே செய்கின்றேனென்று சம்மதித்தவளாய் அவள்பெரியவாயினை யுடைய ஒரு வடிவங்கொண்டுவந்து அவன்போகின்ற மார்க்கத்தில் தன் சிரம் அண்டத்தை முட்டும்படி நின்று கொக்கரித்து நான் வாசஞ்செய்யுமிடத்தில் ஒரு அற்பக்குரங்காகிய நீ எப்படி வருவாய்? இப்பொழுது பிரளய காலாக் கினிபோல எரிகின்ற என்பசிப்பிணியைத் தீர்க்கும் பொருட்டாகவே வந்தது போலக் காண்கின்றதே, இவ்வாகாயத்தில் உனக்குப்போவதற்கு வேறேவழியி ல்லை, என்வாய்க்குள்ளேதான்புகுந்துபோவென்றுசொன்னாள். அதை அநுமான் கேட்டுப் பெண்பிள்ளையாகிய நீ பசிவருத்தும்படி நொந்தாயாதலால் உன்னி ட்டப்படியே உண்ணக்கடவாய், என்சரீரத்தை உனக்கு உணவாக நான்கொ டுக்கின்றேன். இத்தருணத்தில் இரகுநாயகனுடைய காரியமாய்ப் போகின் றேன். அதைச்செய்து நான்திரும்பிவரும்போது அப்படியே உண்ணென்று சொல்லி நகைத்தனன். அதற்கு அவ்வரக்கமாதுருவங்கொண்டசுரசைகோபி த்து ஏழுலகத்தாருங் காணும்படி நானுன்சரீரத்தைத்தின்று பசிதணிகின் றேன், பாரென்றுசொன்னாள். அவ்வார்த்தைகேட்டு நல்லது அப்படியே உன் வாய்க்குள்ளே தானே புகுந்துபோகின்றேன், உன்னிடத்தில் வல்லமையுண் டானால் தின்றுவிடென்று சொல்ல, அப்போது அவள் அநேக அண்டங்கள் ஒருமிக்கப்புகுந்தாலும் நிறையாமலிருக்கின்ற தன்பெருவாயைத்திறந்து அனு மானைத் தட்டாமல் விழுங்குபவளாயிருந்தாள். அதுகண்டு அவள் வாய்சிறி யதும் தன் சரீரம் பெரியதுமாக வளர்ந்தனன். அவ்வகையால் வளர்ந்தவன் சுருங்கி ஒருதரம் சுவாசம் விடுகிறதற்குள்ளே அவள் வாயிலே புகுந்து வெளி ப்பட்டான். அதுகண்டு தேவர்கள் எங்களை யாண்டுகொண்டவனாகிய இவ்வ னுமான் மகாசமர்த்தனென்று மகிழ்வடைந்து பூமாரிபொழிந்து வாழ்த்தினர். தோன்றிமறைகின்ற மின்னலைப்போல அதிசீக்கிரத்தில் சரீரம்பருத்துச் சுரு ங்கும்படி திருவடிகள் வாய்க்குள்ளேபுகுந்து வெளிப்பட்டதைக் கண்டு அச் சுரசை தன் சுயவடிவமாய் நின்று இவரால் எக்காரியந்தான் ஆகாதென்று மகிழ்வடைந்து துதிசெய்தனள். அநுமானை அவளை யாசிர்வதித்து அப்பாற் போனான். அத்தருணத்திலே கின்னரர்கள் கீதம்பாடினர்; தேவரம்பையர்கள் நடனமாடினர்; முற்றத்துறந்த முனிவர்கள் வேதகோஷஞ்செய்தார்கள். சகல சிவராசிகளும் தோத்திரஞ்செய்தன, இலங்கையிலிருந்து மந்தாரமலரின் மகரந் தப்பொடிகள் மணக்கின்ற தென்றற்காற்றுவந்து அநுமானுடைய செந்தாமரை மலருக்கு ஒப்பாகியமுகத்தில்விசி வேர்வையுலர்த்தி ஆயாசந்தீர்த்தது; வித்தி யாதரர்கள் தங்கள்கையினால் இசைக்கின்ற வீணையோசை செவியில்வந்து நுழைய அதைக்கேட்டு ஆனந்தப்பட்டுக்கொண்டு அவன்போகும்போது போ கக்கூடாமல் தடைபட்டுத் தான்போகின்ற தென்றிசையைவிட்டு வடதிசை யில்விலங்கயத்தினப்பட்டான். அதுவுங்கூடாமையால் கீழ்த்திசை மேற்றிசை யிலாவது ஒதுங்கிப் போகலாமென்று பார்த்தான். அதுவும் முடியாமையால் ஊர்த்துவமுகத்திலாவது எழும்பிச்செல்லலாமென்றே நினைத்தான். அதுவும் இசையாமையால் அதோமுகத்தில்வலிப்பதுகண்டுஇதென்ன ஆச்சரியமென்று

அநுமான்பிரமித்தனன். அப்பொழுது கடலிற்படுத்துக்கொண்டிருந்து ஆகாயத்தில் எவ்வளவு உயரத்திலானாலும் தனக்கு நேராகச்சஞ்சரிக்கின்ற பலசெந்துக்களையுங் கண்டான், அவற்றின் சாயையைக் கையினாற் பற்றித் தன்வாய்க்கு நேராக இழுத்த மாத்திரத்தில் அச்செந்துக்களெல்லாம் வாயில்வந்துவிழ நாள்தோறும் விழுங்குகின்ற அங்காரதாரையென்னும்அரக்கி அக்கடலினால் வேறொரு கடல உண்டாக்கப்பட்டு எழும்பினதுபோலவும் ஆலகாலவிஷம் எழுந்தது போலவும் இங்கே யாரடா போகிறவனென்று மகாபயங்கரமானவடிவத்துடனே எழும்பினாள். அவ்வண்ணமாக எழும்பினவள் காற்சிலம்புகள்கடலோசைபோல ஒலிக்க வேதமுடிவிலே நடனஞ்செய்கின்ற பரஞ்சுடராகிய விஷ்ணுமூர்த்திக்கு முன்னே முன்னாளிற்கடலிலிருந்துயுத்தத்திற்குபோயெதிர்த்த மதுகைடவர்களைப்போல அநுமானை எதிர்த்துநின்றாள். இரண்டுபிறைபோல் விளங்குகின்ற வக்கிரதந்தங்களையும் யானைத்தோலாகிய போர்வையையுமுடையவளாய்ப் பிரமனால் இவ்வண்டத்திற்கு ஒருஉறைபோலச் சிருட்டிக்கப்பட்ட பெரியவாயைத்திறந்துகொண்டு, தன் கால்கள்கடலைக்கலக்கவும்தலையானது அண்டமுகட்டையளாவவும் பூமிக்கும் ஆகாயத்திற்கும் ஓரேவடிவமாய் அப்படி நிற்பவளை அநுமான் கண்டு, இவள் தருமத்தையும் கருணையையும் அழித்த அரக்கியென்றும் துணிந்துநின்று அவளுடைய பெரியவாய்க்குள்ளேயல்லாமல் ஆகாயத்திலே தான்போவதற்குவழிகிடையாமையால்அவள்வாயிற்புகுந்து வயிற்றைக்கிழித்துக்கொண்டுபோம்படி நினைத்துச் சொல்லுகின்றான். நான் ஓயாமல் வந்தவேகத்தைக் கண்டறியாமல் வாயினாலே ஆகாயமார்க்கத்தை அடைத்துக்கொண்டு இப்படி யிருக்கின்றையே, நீயாரடியென்று கேட்டான். அதற்கு அங்காரதாரை என்னைப் பெண்ணென்று நினையாமல் எதிர்த்தால் தேவர்களானாலும் உண்மையாகவே மாண்டுபோவர். எனது கண்முன்னே எமன் வந்தாலும் கொன்று தின்று விடுவேனென்று சொல்லிப் பின்னும் பெரியதாகத் தன்வாயைத் திறந்தாள். அஞ்சனை மகனே அக்கணமே அவள் வாயில் நுழைந்து வயிற்றிலே புகுந்தான். அப்போது தருமமானது முறையோ முறையோ வென்று அழுது துயரப்பட்டது. தேவர்களும் கிலேசித்தனர். இறந்துபோனவர்போல அவள் வயிற்றுள்ளே புகுந்த சிராமதூதன் ஓரிமைப்போதிலே மறுபடிபிறந்தானென்று சொல்லும்படி சிங்கம்போல் வெளிப்பட்டான். அவ்வரக்கி கோவென்றுகதறும்படி அவள் வயிற்றைப்பீறிக் குடர்களைப்பிடுங்கிக்கொண்டு ஆகாயத்திலெழும்பிய அவ்வநுமான் மலைக்குகையிற் புகுந்து அதற்குள்ளிருக்கின்ற பாம்புகளை வாரிக்கொண்டு மேலேஎழும்பிய கருடனைப்போல விளங்கினான். பின்னும் அசுவத்தாமா மகாபலி வியாசன் அநுமான் விபீஷணன் கிருபன் பரசுராமன் என்கின்ற சிரஞ்சீவிகளெழுவருள்ளே சிறந்த இவ்வநுமான் அவ்வங்காரதாரையினுடைய குடரைப்பிடுங்கிக்கொண்டு உயர எழும்பியது மற்றும் எப்படி யிருந்ததென்றால், பெருங்காற்று வீசக் கயிறு பூமியிலிருக்க வாலுடனே ஆகாயத்தி லெழுந்து பறக்கின்ற காற்றாடியைப்போ லிருந்தது. அதுகண்டு தேவர்கள் மகிழ்ந்திரைத்தார்கள். அசுரர்கள் வருத்தத்தினால் உடல் வெயர்த்தனர், பிரமதேவனும் அதிசயப்பட்டுப்

பூமழைபொழிந்தனன். கைலாயகிரியிலுள்ள சிவபெருமானும்பார்த்துஆநந்தத் தாண்டவஞ்செய்தனன். முற்றத்துறந்த முனிவராயிருக்கின்றவர்கள் ஆசீர்வசனம் பண்ணினார்கள் ; அவ்வாக்கி இறக்கும்படி வாய்முதல் வயிறுவரையில் கிழிக்க அநுமான் பின்பு மகாமேருவுந்தாழும்படி உயர்ந்து மனோவேகத்திலும் அதிவேகமாய் அப்பாற்போகத்தொடங்கி இக்கடல் முன்பு சம்பாதிமுதலானவர்கள் நம்முடனேசொன்ன அளவையுடையதேயன்று அதிலும் அதிக விசாலமுடையது, அதுவல்லாமலும் மத்தியில் மத்தியில் பற்பல இடையூறுகளும் உண்டாகின்றன எவ்வகையாலாவது இலங்கையிற் போய்ச் சேர்ந்தால்தான் இவைகளெல்லாம் நீங்குமென்றும், தீமைகளையெல்லாம் கொடியிற் பொடி செய்வது தருமமே, அப்படிப்பட்ட தருமத்தை நினையாத அரக்கர்கள் செய்கின்ற துன்பங்களெல்லாம் நீங்குவதற்குத் தக்கதாகிய ஏது எங்கிருக்கின்றதென்றும் ஸ்ரீராமநாமபாராயணஞ்செய்தால் எல்லா இடையூறுகளும் நீங்கும். அதற்கு ஒப்பானது வேறொன்றில்லையென்றும் நினைத்து ஸ்ரீராமநாம சங்கீர்த்தனஞ் செய்துகொண்டு பூரணகலசங்கள் வைத்திருக்கின்ற சுவர்ணமயமாகிய இலங்கை மதிலின்மேல் போய்த் தங்காமல் சுவர்க்கத்தின் மார்க்கமாய் விலங்கிச்சென்று அவ்விலங்காபுரிக்கு அருகே பசுமையாகிய சோலை சூழ்ந்திருக்கின்ற உன்னதமாகிய பவள மலையின்மேற்பாய்ந்தான். அநுமான்பாய்ந்த மாத்திரத்தில் கடல்சூழ்ந்த இலங்காபுரியாகிய மலையானது தன்னிலைபெயர்ந்து குலுங்கத்தலைப்பட்டது. அது எப்படியிருந்ததென்றால் பெருங்காற்று மோதக் கடல் நடுவிலிருக்கின்ற கப்பல் அலைவது போலிருந்தது. பூமியில் வேர்விழுந்து ஆகாயமட்டும் உயர்ந்த அப்பவளமலையின் சிகரத்தில் நின்று நான்குபுறத்திலும் நோக்கிச் சுவர்க்கமாகிய மாது அழகு பார்க்க நிலைக்கண்ணாடி வைத்ததுபோலத் தேசோமயமாய்த்தோன்றுகின்ற இலங்கையைச் செவ்வையாகப் பார்த்தான். அவ்வண்ணமாகப் பார்த்து அதிசயப்பட்டுக் கை கொட்டித்தேவர்களுடைய பொன்னகரம் இதற்கொப்பாமென்று சொல்லுவதுந் தக்கதன்றே! அந்நகரமென்ன இவ்விலங்கையினும் சிறந்ததா? எல்லாவுலகங்களையும் ஆள்கின்றவன் யாவனோ அவனே இந்நகரத்திலிருந்து வாழ்கின்றவனாகவேண்டும். ஒருவகை இன்பத்தை மாத்திரந்தருவது இந்நகரமென்று சொல்லக்கூடாது. வேண்டியவைகளை வேண்டியபடியே அடைந்து வெறுப்பில்லாமல் அநுபவிக்கின்ற போக சுகங்கள் முடிவில்லாதனவா யிருக்கும்படி எவ்விடத்தில்காண்கின்றோமோ அதுவே மோட்சமாகும். இப்படியேயிருக்கின்றது வேதத்தின் நிச்சயமாம். இதன் உள்ளிடமோ எழுநூறுயோசனையென்று சொல்லுவர். மும்மையுலகங்களினு மிருக்கின்ற பதார்த்தங்களெல்லாம் இவ்விலங்கைக்குள்ளே அடங்கியிருக்கின்றனவென்றால் சாத்திரக் கேள்வியையுடைய பேரறிவாளர்கள் பார்த்தாலும் அவர்களுடைய பார்வைக்குத்தான் அடங்குமா? இதுஎன்ன அதிசயமென்று நினைத்து மீண்டும் உற்றுப்பார்க்கின்றனன்.

கடல்தாவுபடலம்
முற்றிற்று.

---

## ஊர்தேடுபடலம்.

மேகமண்டலந் தாண்டிச் சந்திரமண்டலமுட்டும் உப்பரிகைகளெல்லாம் பொன்னினாற்செய்து இரத்தினங்கள் பதித்தவைகளும் மின்னலைக்கொண்டு சமைத்தவைகளும் வெயிலைக்கொண்டுஅமைத்தவைகளும் பின்னும் இவைகள் எதைக்கொண்டு செய்தனவென்று அறியப்படாதவைகளும் தேவலோகமும் நாகலோகமும் தமக்குள்ளே அடங்கும்படி மேலுங்கீழும் உயர்ந்தும் தாழ்ந்தும் இளந்தென்றற்காற்று வருகின்ற சாளரங்களை யுடையவைகளுமா யிருக்கின்றன. இவைகளிலுள்ள மாதர்கள் மின்னற்கொடிகளைமடக்கி அடுக்கித் துடைப்பக் கற்றைகளாகப் பிடித்துக்கொண்டு மேல்தளங்களி லிருக்கின்ற பூக்களின் பராகங்களாகிய குப்பையைவிளக்கி ஆகாயகங்கையின்நீரைக் கையினால் அள்ளிச் சாணநீராகத் தெளிக்கின்றனர். புள்ளாங்குழலும் மகாவீணையும் குழைய மிருதுவாகிய தங்கள் மழலைச் சொற்களைக் கிளிகளுக்குப் பயிற்றுகின்ற மாதர்கள் இவ்வுப்பரிகைகளின் பளிங்கினாற் கட்டப்பட்ட சுவர்களிற் பிரதிபலித்துக் காண்கின்ற சாயையையும் தம்முருவத்தையும் வேறுபாடறியாமல் மயங்குவர், இப்படிப்பட்ட உப்பரிகைகளை இந்திரனுடைய மாளிகைக்கு ஒப்பாகச் சொல்வதெப்படி! சொன்னால் அந்தச் சொல்லுக்குங் குற்றமுண்டாமே. இவைகள் கள்ளமாமாயப்பிரான் திருமார்பிலே தரித்திருக்கும் கவுத்துவ மணியினும் மிக்க ஒளியையுடைய நவரத்தினங்கள் அழுத்தித் தெய்வத்தச்சனாலே செய்யப்பட்டிருக்கின்றன. சகல சீவகோடிகளும் ஒருபக்கத்தில் அடங்கியிருக்கத் தக்க விசாலமுண்டானதினால் இந்த நகரமோ இறைவனுடைய திருவயிற்றுக்கே ஒப்பாகும். இதற்குள்ளிருக்கின்ற விருட்சங்களெல்லாம் கற்பகங்கள், வீடுகளெல்லாம் சுவர்ணங்கள், அரக்கியர்களுக்குத் தாதிமார்களெல்லாம் தேவரம்பைகள், அரக்கர்களுக்கு ஏவலாளிகளெல்லாம் தேவர்கள், சூரியனுடைய ஸப்தாஎன்னும்புரவிதவிர மற்ற உலகத்திலுள்ள புரவிகளெல்லாம் இங்கிருக்கின்றன. இராவணனுடையபோரிலேதோற்றுப்போன திக்கயங்களைக் குறித்துச் சொல்வதென்ன? ஐந்துகைகளையுடைய விக்கினேசுவரனாகிய யானையும் சூரியனுடைய தேருமே இந்நகரத்திலில்லை. மற்ற தேவர்களுடைய விமானமுதலாகிய வாகனங்களெல்லாம் அவ்வீதிகளிலே சஞ்சரிக்கின்றன. இப்பட்டணத்தையாள்கின்ற அரசனுக்கு ஏவல்செய்யாததேவர்கள் யாவரிருக்கின்றனர். ஆ! ஆ! இவன் மும்மைப்பெருந்தேவர்களினும் விசேடப்பட்டவனென்றால் இவன் செய்ததவமல்லாமல் வேறொன்று இவனுக்கு இப்படிப்பட்ட சாம்பிராச்சியத்தைக் கொடுக்குமா? பேரிகையின் ஒலியும் யானைகளின் முழக்கமும் கடலோசையும் மாதர்களுடைய பாதச்சிலம்பொலியால் மறைந்துபோகின்றன. மரகதத்தினாலும் மற்றுமுள்ள பலவகை இரத்தினங்களாலும் அழகாகச் செய்திருக்கின்ற குதிரைக் கொட்டாரங்களும் இரதசாலைகளுமே சூரியனும் வெட்கும்படி விளங்குமானால், இந்நகரத்திற்குமுன் சுவர்க்கம் நரகத்திற்கே ஒப்பாகுமென்றன்றோசொல்லவேண்டும். அழகே நிலைபெற்றிருக்கின்ற இப்பட்டணத்தின் ஒளி பாய்வதினால் இதிலிருக்கின்ற அரக்கர்

களுடைய நிறம் கறுத்துக்காணவில்லை. உயரப்போகின்ற சந்திரனுங் களங்க மற்று விளங்குகின்றான். கடலும் பொன்னுருகுகின்ற தொத்திருக்கின்றது. அண்டமுழுமையும் நிறைந்த இருளையோட்டுகின்ற சூரியன் இந்நகரத்திலிருக்கின்ற மாளிகைகளின் ஒளிக்குமுன் தன் ஒளிக்கெதிரோ ஒளிமழுங்கிய மின்மினி யத்தனையும் விளங்கமாட்டான். தேனும் சந்தனமும் கத்தூரியும் கற்பக மலர்களும் யானைமதங்களும் இப்பட்டணத்துமாதர்கள் நீராடுகின்ற நீருடனே கலந்து பெருக்கெடுத்தோடிவந்து கடலினிடத்தில் பாய்கின்றதனால் அதிலிருக்கின்ற மீன்களும் செவ்விதாகவே மணக்கின்றன.

இந்நகரத்தைவிதித்த விச்சுவகர்மாவையே புகழ்வோமா? அல்லது இராவணன் உண்மையாய்ச்செய்த தவத்தையே அதிசயிப்போமா? அல்லது அவனுக்குப் பிரமதேவன்கொடுத்த ஐயப்பாடில்லாத வரத்தையே மதிப்போமா? அறியாத சபலசித்தத்தையுடைய நாம் எவ்வகையில் யாரைத்தான் துதிப்போம்? காடுகளும் சோலைகளும் சுவர்ணத்தினாலும் இரத்னங்களினாலும் செய்யப்பட்டனவென்றாலும், தேனையும் மலர்களையும் கனிகளையுங் கொடுக்கின்றதனால் இதைப்பார்க்கிலும் சுவர்க்கத்தாரும் பூலோகத்தாரும் பெறத்தக்க வரம் வேறென்ன இருக்கின்றது; இந்நகரத்திலுள்ள கோபுரத்தின் உயரத்தை மாமேருகண்டால் வெட்கிப்போமென்பதற்கையமேயில்லை. தசமுகனுடைய ஆணைக்கு அஞ்சிச் சூரியன் இலங்கையின்மேற் போவதில்லையென்று சொல்லுவர். அது உண்மையென்று இம்மதிலைத்தாண்டி அப்புறம் போகமாட்டாமையாலன்றோ ஒதுங்கிப்போகின்றான். மற்றும் தசக்கிரீவன் தேவர்கள் பகைவர்களாகையால் அவர்கள் வரத்தக்க வழியில்லாமல் ஒரு எல்லையை யேற்படுத்துவோமென்று அண்டமுகட்டையுங் கடந்து செல்லும்படி இம்மதிலை உண்டாக்கியதுபோ லிருக்கின்றது. இப்படிப்பட்டமதில் சூழ்ந்திருப்பதனால்இப்பட்டணத்திற்குள்ளே காற்றும் நுழையமாட்டாது. சூரியகிரணமும் பாயாது. எமனுடைய ஆணையுஞ்செல்லமாட்டாது. சர்வசங்காரகாலத்திலே யாவும் அழிந்துபோயினும் அழியாமலிருக்கின்ற தருமமும்புகமாட்டாது. ஆகையால் தேவர்கள் இதற்குள்ளேபோகமாட்டார்களென்பது ஒருபுதுமையன்று, தேவர்களில் பலர் பாடுவார்கள். பலராடுவார்கள். பலர் வாத்தியமுழக்குவர். அவைகளை அரக்கர்களில் பலர் சபைகூடிக் காண்பர் கேட்பார்கள். தேவரம்பையர்களாடுவதையும் பாடுவதையும் பழித்து வித்தியாதர மாதர்களாடுவார்கள், பாடுவார்கள் அவர்களாடலையும் பாடலையும் பழித்து இயக்கியர்களாடுவார்கள் பாடுவார்கள். அவர்களாடல் பாடல்களைப்பழித்து இராக்கதமாதர்களாடுவார்கள் பாடுவார்கள். அவர்களாடவும் பாடவுந் தொடங்கும்பொழுது நாககன்னியர்கள் இலயைதாள சுதிமுதலாகிய நடனத்தொழில்களைச் செய்வார்கள். அரக்கியர்களுக்குத் தெய்வப்பெண்கள் பணிப்பெண்களாய் ஆபரணங்களும் ஆடைகளும் பூமாலைகளும் சந்தனமும் எடுத்துக்கொண்டு எடுத்துக் கொடுத்துக் கொண்டிருப்பர்; பிரமன்சொல்லத் தெய்வச்சனாகிய விச்சுவகர்மா பல காலமாக வருத்தப்பட்டுக் கைதேர்ந்தே பொன்மலையின்மேல் இரத்தினமழை பொழிந்ததுபோல சுவர்ணத்தினாற்செய்து இரத்தினங்களிழைத்து அருமை

யாகப் படைத்தான். வீணையோசையில் வேதகோஷமறைகின்றது. வேதகோஷத்தில் கடலொலி மறைகின்றது உப்பரிகையி னிடங்கள்தோறும் மாதர்கள் வாசனையுண்டாகும்படி ஊட்டுகின்ற அகிற்புகையில் மேகமறைகின்றது. பளிங்கினாற் செய்யப்பட்ட மாளிகைகள்தோறும் தேன் துளிக்கின்ற கற்பகச்சோலைகள்தோறும் யாவரும் கள்ளுண்டு ஆடுகின்றவர்களும் பாடுகின்றவர்களுமாய்க் களிக்கின்றார்களேயன்றி துயரப்படுகின்றவர்களைக்காணோம். அரக்கியர்களுக்குப் பிராணபதமாயிருக்கின்ற அரக்கர்கள் அந்த மாதர்களுடைய அதரபானத்தையுண்டு அவர்களுடைய இனிமையாகிய சொற்களைக்கேட்டு அவர்களுடலைக்கண்டு அவர்களை வணங்கி அதனைத்தீர்ப்பார்கள். இவ்விலங்கைதன்னில் வசிக்கின்ற மாதர்களுடைய சிவந்த வாயினால் கடலினிடத்தில் பவளக்கொடி படர்ந்ததுபோலவும், அவர்களுடைய கண்ணால் குவளைகள் பூத்த தடாகம்போலவும், முகங்களினால் தாமரைக்காடுபோலவும் விளங்குகின்றது. அரக்கர்கள் எழுந்து திரிவதினாலே இந்நாள்வரையில் அண்டமானது கிழிந்துபோகாமலிருக்கின்றது அதிசயமென்றே சொல்லவேண்டும். பிரமாதி பிபீலிகாந்தமாகிய சீவகோடிகளெல்லாம் இவ்வரக்கராசிக்கு நூற்றுக்கு ஒன்றாக உறையிடுவதற்கும் போதாதே. மற்றும் தூலதேகத்தை யுடையவர்களும், அளவில்லாதவரங்களையுடையவர்களும், எவர்களாலும் அறியப்படாத மாயையையுடையவர்களும், உலகத்தையெல்லாங் கொல்லுகின்ற பலமுண்டாகிய மாதர்கூட்டத்தை யுடையவர்களுமா யிருக்கின்றனர். இந்நகரத்தின் தெருக்களில் ஒரு தெருவிலிருந்து மற்றொரு தெருவுக்குப்போவது ஒரு தேசத்திலிருந்து மற்றொருதேசத்திற்குப் போவதுபோலிருக்குமே. வீரகண்டையில்லாத காலும், ஆயுதமில்லாத கையும், அக்கினிப்பொறி பறவாத கண்ணுமுடைய புருடர்களேயில்லை. அவர்களுடைய உச்சியிலுதைத்துச் செம்பஞ்சழியாத பாதமுடைய மாதர்களுமில்லை. இப்பட்டணத்தை யழிக்கிறதைக்குறித்துப் பின்பு பார்த்துக்கொள்வோம். முதல் நம்முடைய வானரசேனைகள் இதில்வந்து பிரவேசிப்பதோ அருமை. ஆயினும் அதுவும்பெரிதன்று. வரினும் அரக்கியர்களும் புருடர்களும் பிணக்கினால் வெறுத்துக் கழற்றியெறிந்த ஆபரணங்களினாலே வீதியிடமெல்லாந் தூர்ந்துபோவதனால், அவ்வானரங்கள் அடிபெயர்த்துச் சஞ்சரிக்கவேமுடியாது. ஆரங்களும் குண்டலங்களும் மற்றுமுள்ள பலவகைப் பூடணங்களும் பூமாலைகளும் சந்தனமும் யானைமதங்களும் குதிரை நுரையுமாகிய இவைகளெல்லாம் ஆற்றுநீரோடு வந்துவிழ, தனக்குள்ளே அடங்கும்படி கொள்ளுகின்ற இச்சமுத்திரத்தைப் போலும் ஆழமுடையது வேறொன்றுமுண்டோ? சக்கரவர்த்தித் திருமகனாரிடத்திற்போய்ச் சொல்லுகின்றகாலத்தில் வில்வீரர்கள்தான் மிகுதியாயிருக்கின்றார்களென்பேனோ? வேல்வீரர்கள்தான் அதிகமாயிருக்கின்றார்க ளென்பேனோ? வாள்வீரர்கள்தான் விஸ்தாரமா யிருக்கின்றார்க ளென்பேனோ? தண்டு பிண்டிபால முதலாகிய பலவித ஆயுதங்களைக்கொண்டு போர்செய்கின்றவர்கள்தான் பிரபலமா யிருக்கின்றார்களென்பேனோ? மற்சண்டைசெய்கின்றவர்கள்தான் அநேகராயிருக்கின்றார்க ளென்பேனோவென்று இப்படியாக

அநுமான் அவ்விலங்கையைப்பார்த்தே யோசித்து இங்கே அரக்கர்கள்வந்து நம்முடனே போர்செய்தாலுஞ் செய்வரென்று குறித்துத் தம்முடைய நால ரூபத்தைச் சுருக்கிக்கொண்டு சிறிய உருவமாய் அம்மலையினிடத்தி லிருந்த னன். அப்போதே சூரியன் மேற்கடலிற்சென்று மறைந்தனன்.

முன்னைப்பிறவிற்செய்த புண்ணியத்தினலே முடிவிலே பாக்கியத்தைப் பெற்றுச் சுயபுத்தியுமில்லாமல், தெரிந்தவர்கள் சொல்லுஞ்சொல்லையுங்கேளா மல, தனக்கு எப்படியும் மரணம்வருமென்கிறதை நினையாமல், சத்தியமாகிய நிலையிலும் நில்லாமலிருக்கின்ற ஒருவனுடைய பாவங்கள் அவனைச்சூழ்ந்து கொள்கிறதுபோல இருள்வந்து எங்குஞ்சூழ்ந்துகொண்டது. பின்னும் சிவ பெருமானுடைய போர்வையாகிய யானைத்தோலைவாங்கிப் பிரமன் அண்டத் திற்கு ஒரு கௌசனையாகப் போர்த்ததுபோலவும், ஆதிசேடன் தன்னுடைய ஆயிரம்வாய்ப்பற்களினும் அநேககாலமாக ஊறிக்கொண்டிருந்த விடத்தை யெல்லாங்கக்க, அது உலகமெல்லாம் நிறைந்ததுபோலவும், மேலாகிய பிரம வமிசத்திலேதோன்றிய இராவணனே கற்பினையுடைய பிராட்டியாரை யெடு த்துவந்து சிறைவைத்த பின்பு அவனுடைய கீர்த்தி துலியமாகிய வெள்ளை நிறம்போய்க் கறுத்து அது புவனமுழுதும் பரவியதுபோலவும், அண்டமுழு தும் அவ்விருள்பரந்துமூடிக்கொண்டது. அப்படி இருள்பரந்தவேளையில் இரா வணனுடைய ஏவுதலினலே அநேகமரக்கர்கள் அவ்விருளின்மார்க்கமாக இந் திரலோகத்திற்குப்போவார்கள். அநேகர்கள் சந்திரமண்டலத்திற்கோடு வார் கள். அநேகர்கள் யமலோகத்திற்குப்போய்விடுவார்கள். தேவர்கள் முன்னே போய்விட்டார்களே. இந்நேரவனையிலும் நாம் போகாமலிருந்தோமே இதைக் குறித்து நீங்கள் தாமதமாயிருந்த தென்னவென்று நம்முடைய அரசன் கோ பிப்பானேயென்று சாலவுநினைத்துச் சித்தர்கள் முத்தாரங்களுந்தலையிற்சூடிய மாலைகளும் உத்தரியமும் சரிந்துவிழும்படி ஓடிவருவார்கள். தெய்வமகளிர்க ளும் வித்தியாதரமாதர்களும் நாகமடந்தையர்களும் இயக்கியர்களும் கிரமக் கிரமமாகப் பணிவிடைசெய்யும்படி மின்னற்கூட்டங்கள் நெருங்கிவருவது போல ஆகாயத்திலிருந்து வருவார்கள். தேவர்களும் அசுரர்களும் நாகலோ கத்தாரும் இயக்கர்களும் வித்தியாதரர்களும் மற்றுமுள்ள யாவரும் பிரதாப இலங்கேசனுடைய குற்றேவல்களைச்செய்ய வானத்திலிருந்து தங்கள் தேக காந்தியினல் இருள் நீங்கும்படி கூடிவருவார்கள். இவையெல்லாம் வாயுபுத்தி ரன் பார்த்துக்கொண்டிருந்தான்.

அச்சமயத்திலே சந்திரோதயமுண்டாயிற்று. அது எப்படியிருந்ததென் ருல், அரிதாகிய தீவினையென்னுங் கோடையானது தகிக்கும்படி உலர்ந்து தீந்துபோகிய தர்மமாகிய முளையானது அநுமானென்கின்ற மழைவந்து உதவிசெய்ய முளைத்தெழுந்ததுபோலிருந்தது. மற்றும் சீராமதூதனகிய அநு மான் வந்தபடியினலே என்னுயகனுகிய தேவேந்திரன் இனிச் சுகப்படுவானெ ன்று மகிழ்ச்சியடைந்து எட்டிப்பார்த்த கீழ்த்திசையாகிய பெண்ணின் முகம் போலவும், எங்கள் பகை இற்றைத்தினத்துடனே தொலைந்ததென்று நினைத்

தெழுந்த இந்திரனுடைய தவளக்குடைபோலவு மிருந்தது. உதயமாகிப் பிரகாசிக்கின்ற சந்திரனாகிய வெள்ளிக்குடத்தினால் பாற்சமுத்திரத்தை மொண்டு வானமானது சொரிந்ததுபோல, துளித்ததுளிகள் விளங்குவனபோல, விண்மீன்கள் பிரகாசிக்க நிலவின்பிரகாசம் ஆகாயம் பூமியெங்கும்பரந்து நிறைந்தது. வானமே காமதேனுவாகியும் சந்திரோதயமே அதன்மடியும் சந்திரகிரணமே அம்முலையிலிருந்து வருந்தாரையாகியும் சந்திரனொளியே தாரையாய்ச்சொரிந்த பாலாகியும் பிரகாசித்தன. அத்தருணத்தில் அனுமான்மேல் தேவர்கள் பூமழை பெய்தார்கள். அம்மலர்கள் இராவணனுக்குப்பயந்து பூமியில் விழாமலும் அப்புறம்போகாமலும் அந்தரத்திலேதானே தங்கி நிற்பதுபோல நட்சத்திரங்கள்பிரகாசித்தன. நிலவினாலே அழிந்த இருளானது பல வடிவமெடுத்து அந்த நிலவின் குஞ்சுகளைக்கடித்து விழுங்குவதுபோல மல்லிகைப்பூக்கள்தோறும் வண்டுகள்மொய்த்துச்சூழ்ந்தன. சந்திரகிரணத்தின் பிரகாசம் லங்காபட்டணமெங்கும் நிறைந்தது. பின்னும் அந்தச் சந்திரபிரகாசம் சிராமபாணத்தின் வேகத்தைப்போல அநுமான் வந்துசேர்ந்ததினால் அந்த சிராகவனுடையகீர்த்தி இலங்கையின் அகழ்அரண் முதலாகிய எவ்விடங்களிலும்போய் நிறைந்ததுபோலவுமிருந்தது. அப்போது அநுமானும் இலங்கைக்குள்ளே எந்தவழியினாற்போகலாமென்று யோசனை செய்து பின்பு ஒருவழியாற்போகும்படி பவளமலையைவிட்டெழுந்து அப்பால் நடந்தனன். அதுகண்டு தேவர்கள் வாழ்த்தினார்கள். பின்பு சமுத்திரமே அகழாக மேலேழுலோகத்திற்கு அப்புறத்திலும் உயர்ந்து மகாபிரளயம்வருங் காலத்திலும் அழியாதிருக்கின்ற சுவர்ணமதிலின் அருகே போய்ச்சேர்ந்தான். சேர்ந்து அம்மதிலின் உன்னதத்தைப்பார்த்துச் சந்திரசூரியர்கள் வஞ்சகனாகிய தசக்கிரீவனுடைய ஆணைக்குப்பயந்து இவ்விலங்கையின்மேல்வருகின்றதில்லையென்றுசொல்லுகின்றார்களே அதுதானேயன்று; இம்மதில்உயர்ந்திருப்பதனால் ஏறி அப்பால்போகக்கூடாமையால்தான் விலகிப்போகின்றார்களென்றும் அன்றியும் இந்தலங்கைமதில் சத்துருக்களுடைய அளவில்லாத சைநியங்களெல்லாம் நடுவேபுகத்தக்க விசாலமுடையதென்போமாயின், அவ்வளவு மாத்திரமேயல்ல; பிரமாண்டத்தின்மத்தியில் எவ்வளவுவிசாலமுண்டோ அவ்வளவு விசாலத்தையும் அதன் உன்னதம் எவ்வளவோ அவ்வளவு உன்னதத்தையுமுடையதென்றுமெண்ணி, அதற்குஅரசனாகிய இராவணனைக்குறித்துச் சாலவும் அதிசயப்பட்டுச் சிங்கமும் மதயானையும் நாணும்படிநடந்து தனியே அப்பட்டணத்திலே புகுந்து பிராட்டியாரைத் தேடும்படி பிரயத்தனப்பட்டு மகாகண்டகனாகிய எமனுடைய வாய்க்கு ஒப்பாகிய அந்தக் கோட்டை வாயிலை எதிரேபார்த்து இவ்வாயில் மகாமேருவைநிறுத்தி நடுவே வெளிசெய்ததுவோ? தேவலோகத்திற்குப்போகும்படி சமைத்தபடிக்கட்டோ? மேலேழுலகமும் நிலைநிற்கிறதற்கு நடுவேநாட்டிவைத்த தூணோ? கடல்நீரெல்லாம் புகுந்துபோவதற்குவிட்ட வழிதானோ? ஏழுலகங்களிலும் வாழ்கின்ற சகல உயிர்களும் இராவணனுடனே வந்து எதிர்த்தால் இதற்குள் ஒன்றின் பின்னேயொன்றாய்ப் புகவேண்டுமென்னும் கிரமம் வேண்டியதில்லை. எக்காலத்தி

லேயே எல்லாம் ஒருமிக்க நுழைந்துபோகத் தக்கதா யிருக்கின்றது. நம்மு டைய வானரவீரர்கள் வந்து புகத்தக்க வழி இதுதானென்று துணிவோமா யின் இங்கே பகைவர்கள் ஏழுசமுத்திரத்திலும் அதிகமாயிருக்கின்றனர். இதற்கப்புத்திலும் கள்ளச்செய்கையையும் மிகுந்த பராக்கிரமத்தையுமுடைய இருநூறுவெள்ளம் அரக்கர்கள் இரண்டுகையிலும் வாளை யுருவிப்பிடித்துக் கொண்டு இந்தவாள்கள் பளபள வென்றும், முள்ளைப்போலுங் கூர்மையாகிய கோரதந்தங்கள் தகதகவென்றும் பிரகாசிக்க ஒவ்வொருவர் ஒவ்வொரு கரிய மலைபோல நின்றவண்ணமாயும், பின்னும் அநேகர் சூலம், மழு, தோமரம், இருப்புலக்கை, வில், அம்பு, கப்பணம், முசுண்டி, கணையம், சக்கரம், வச்சிரம், சுய்கை, குந்தம், பிண்டிபாலம், அங்குசம் கவண் பாசமுதலாகிய பல வகை ஆயுதங்களையும் ஏந்திக்கொண்டு பங்குனிமாதத்திலே மலர்ந்திருக்கின்ற முருக்கங்காடுபோலச் சிவந்தமயிரும் மிகுந்த கோபமுமுடையர்களாயு மிருக் கின்றார்கள். அன்றியும் அநேகஅரசர்கள் வாயிலுக்கெதிரே ஆயுதபாணிகளாய் எமனும்கண்டு நடுங்கும்படி கூட்டமாயிருந்து காவல்காக்கின்றனர். ஆகை யால் எந்தத்தேவர்கள் எந்தஅசுரர்கள் எப்படிப்பட்ட சாமர்த்தியமுடையர்க ளாயினும் இக்கோட்டைவாயிலைக்கடக்கமாட்டுவார்களோ? சத்துருக்களாகிய இவர்களுடைய காவல் இப்படிப்பட்டதாயின் இனித்தாரகமந்திர வாச்சிய னும் நாமும்வந்து யுத்தந்தொடங்கினல் ஏதாய் முடியுமோ? மேலும் அக்கட லைக்கடந்தது பிரயாசமன்று, இவ்வாசலைக் கடக்கிறதுதான் மிகவும் பிரயாச மா யிருக்கின்றது. மனஞ் சிறிது சலனப்பட்டாலும் நாம் எண்ணிவந்த காரி யத்தை முடிக்கக்கூடாது. போர்செய்யத் தொடங்குவோமாயின் இவ் வரக்கர்கள் வெகுநாள் யுத்தஞ்செய்வார்கள். ஆகையால் இவ்வாயிலின் வழி யாலேபோவதற்கு மிக்க கடினமாகும் நம்மைப்போலும் பராக்கிரமசாலிகளா யிருக்கின்றவர்கள் பகைவர்கள் உண்டாக்கிய வழியால் போவது அழகன்று சூரியசந்திரர்களுஞ்சஞ்சரியாத மதிலைத்தாண்டித் தான்உள்ளேபோகவேண்டு மென்றெண்ணி ஒருபக்கத்திற்போயினன். அப்போது அவ்விலங்காபுரியைத் தன் பிராணனைப்போலக் காத்துக்கொண்டிருக்கின்ற இலங்காதேவியென்றும், இலங்கிணியென்றும் சொல்லப்படும் பெயரினையுடையவள் இவ்வநுமானைக் கண்டு நாகம்போற்சீறிக் கண்களில் நெருப்புப்பொறிபறக்க ஓடிவந்தாள். அவ ளெப்படிப்பட்டவளென்றால்எட்டுத்தோளும் நாலுமுகமும் ஸப்தலோகத்தை யுஞ்சூழ்ந்து கவிகின்ற சரீரப்பிரகாசமும் சுழல்கின்ற கண்களும் மும்மையுல கத்தாரையும் உள்ளேவராமல் தடுத்துக்காக்கின்ற மிக்க வாற்றலும்பொறுமை யில்லாமையுமுண்டானவள், யாரோயாயினும் இப்பட்டணத்திற்குள்வருகின்றார் களோவென்று நான்குதிசைகளையும்பார்த்து மேகத்தொனிபோலக் கொக் கரித்துக்கொண் டிருக்கின்றவள். காற்சிலம்புகள் சத்திக்க மின்னலைப்போல ஆபரணங்கள்சொலிக்க வேலாயுதம், வாளாயுதம், சூலாயுதம், பாசம், சங்கு, அம்பு, வில்முதலானவைகளும் கையிலேத ரித்துக்கொண்டு உலாவுகின்றவள் மகமேரு மலையேபோலப் பருத்து உயர்ந்தசரீரமும் அர்த்த சந்திரனைப்போல வளைந்த பற்களுமுடையவள், வாய்களிலே புகையெழும்ப எமனுங்கண்டு

பயப்படும்படி கோபம் அதிகரித்திருக்கின்றவள். பஞ்சவர்னப்பட்டாடையு முடுத்து சுவர்ண உத்தரீயம் போர்த்து முத்தாரந்தரித்திருக்கின்றவள் கருடனைப்போல அதிவேக முடையவள், மந்தாரமாலை பிரகாசிக்கக் கிரீடங்களணிந்து இலங்காபட்டணத்தைத் தன் கண்ணுக்குள்ளே வைத்துக்காத்துக்கொண்டிருக்கின்றவள், அப்படிப்பட்ட இலங்காதேவி ஆடா நில்நில்லென்று அதட்டினாள். அதுகண்டு அநுமான் வாவாவென்றுசொல்லிக்கொண்டே அவளுக்குச்சமீபத்திலேபோயினன். அப்படிவந்தவனைப்பார்த்துப்புத்தியில்லாதவனே அச்சமில்லாமல் தகாதகாரியஞ்செய்தாய்! நீ இலையும் காயும் கனியும் தின்று திரிகின்ற குரங்கானபடியினாலே உன்னுடன் எனக்கு என்னபேச்சு? மதிலின்மேலேறி உன்னுடைய பிராணனைப் போக்கடித்துக்கொள்ளவேண்டாம்; சும்மா ஓடிப்போய்ப் பிழையென்றுசொன்னாள். அவ்வார்த்தையைக்கேட்டு அனுமான் மனத்திற்குள்ளே களித்துப் பின்பு அதிககோபங்கொண்டு தானும் அவளை அதட்டி அழைத்து நான் இந்தப்பட்டணத்தைப்பார்க்கவேவந்தேன்; எளியவனாகிய நான்வந்தால் உனக்கென்ன நஷ்டமென்றுசொன்னான். அதற்கு லங்காதேவி கோபித்து அடா குரங்கே! நான் போகச்சொன்னாலும்போகாமல் எதிருத்தாஞ் சொல்லிக்கொண்டு பயப்படாமல் நிற்கின்றையே நீயார்சொல்? திரிபுராந்தகனான சிவபிரான் முதலானவர்களும் இவ்வூர்க்குள் வரப்பயப்படுவரே! இப்படியிருக்க உன்னாலே பார்க்கின்ற ஊரா இவ்வூரென்றுநகைத்தாள். அவள் நகைத்ததுகண்டு அநுமானும் மனத்துக்குள்ளே நகைத்தனன், அது தெரிந்துகொண்டு அடாகுரங்கே நீயாரனுப்பவந்தாய்? உன் பிராணன்போனாலல்லாமல் நீயோடிப்போகிறதில்லையென்று சொன்னாள். அதற்கு அநுமான் நானித்த வூருக்குள்ளே போய்ப் பார்த்தாலல்லாமற் போகிறதில்லையென்று சொல்லிமுடித்தனன். அவ்வசனத்தைக்கேட்கவே இவன் வானரனல்லன்; வஞ்சகத்தைக்கொண்டுவந்தவனாகவேண்டும். நமக்கு யமனும்திடுக்கிட்டு மூர்ச்சைபோவனே; இவனோவென்றால் அதிக தைரியத்துடனே பிரளயகால ருத்திரனைப்போலநகைக்கின்றனனே; ஆகையால் நீ யாரோவென்று மனங்கலங்கிக் கோபம் அதிகரிக்க இவனை அவசியம் நான்கொல்வேன்; கொல்லாமற்போனால் இவ்வூருக்கே மோசம்வருமென்று எண்ணி எட்டுக்கண்களிலும் நான்குவாயிலும் திக்திக்கென்று அக்கினியானது பொங்கியெழும்ப, அடா நீ மதிலின்மேல் போவாய் போவாயென்று உறுக்கித்தன்கையிலிருந்த சூலாயுதத்தை உக்கிரத்துடனே அநுமான்மேலெறிந்தாள். அச்சூலமானது மின்னலைப்போலத் தகதகாயமாய்ப் பிரகாசித்துக்கொண்டு தனக்கெதிரே வரக்கண்டு அனுமான் அதைக் கையினாற்பிடித்து ஆகாயத்திலே கருடன் நாகத்தைத் துணிப்பது போலத் தேவர்கள் மகிழ்வெய்தவும் அவள்நெஞ்சு திடுக்கிடவும் நொடிக்குள்ளே ஒடித்தெறிந்தான். சூலாயுதம் ஒடிபட்டு நீருய்ப்போனதுகண்டு இலங்காதேவி யுகாந்தகாலாக்கினிபோல மிக்க கோபங்கொண்டு பின்னும் தெய்விகமாகிய பலவகையான ஆயுதங்களையும் பிரயோகஞ்செய்யும்படி முயன்றாள். அதையறிந்த அநுமான் அவள் கையிலிருந்த ஆயுதங்களையெல்லாம் ஒன்றேனுமொழியாமல் சீக்கிரத்திற்பறித்து ஆகாயத்தில் விட்டெறிந்தனன். அதுகண்டு

அநுமான்மேற் பிரயோகஞ்செய்வதற்கு வேறே ஆயுதமில்லாமையினலே இலங்காதேவியானவள் பிரளயகாலமேகம்போலக் கர்ச்சித்துப் பலகைளை யெல்லாமெடுத்தெறிந்து பந்தும் அம்மனையும் ஆடுகின்ற தன்மைகளினலெ நெருப்புப்பொறி சிதறும்படி திருவடிகளை ஓங்கி அடித்தாள். அப்படி அடித்தும் அடியாததற்குமுன்னே அவளுடைய கைகளையெல்லாம் ஒருங்கே தாம் ஒருகையினற் சேர்த்துப் பிடித்துக்கொண்டு இவள் பெண்பிறப்பையுடையவள்; இவளைக்கொன்றல் தோடம் வந்து நேருமாகையாற் கொல்லலாகாதென்றே நினைத்து ஒருகையினல் அவள் மார்பில் ஒரு அறை அறைந்தனன். அவ்வறைபடவே இடிவிழுந்தமலையேபோலத் திடீரென்று பூமியில்விழுந்தாள்; விழுந்துநொந்து வாயினல் உதிரங்கான்றுகொண்டு அவ்வுதிரவெள்ளத்தில் அழுந்தி மூர்ச்சித்து மனஞ்சலித்து முன்னளிற் பிரமன் தனக்குக் கட்டளையிட்டிருந்ததைநினைத்துக்கொண்டு எழுந்திருந்து எல்லாவுலகங்களினுமுள்ள யாவரும் யாவையும் சிரத்தா பத்திவிசுவாசத்துடனே வந்தனஞ்செய்கின்ற திருவடித்தாமரையையுடைய சிராமபிரானுக்கு இணங்கிய தூதனுகிய அநுமானுக்குமுன்னே வந்துநின்று அவனைப்பார்த்து ஐயா மகானுபாவனே! முற்காலத்திற் பிரவஞ்சத்தையெல்லாம் சிருட்டிசெய்த பிரமன் என்னை இவ்விலங்கையைக் காத்துக்கொண்டிருக்கச்சொல்லிக் கட்டளையிட்டனன். என் பெயர் இலங்காதேவி. நான்கிருத்தியம் தப்பி மனந்திகைத்து உம்முடைய விடயத்தில் இவ்வற்பகாரியத்தைச்செய்தேன். நீர் என்னைக்கொல்லாமற் பிழைத்துப்போம்படி கருணைசெய்தீரோயானல் உமக்கு உண்மையைச்சொல்லுகிறேனென்று சொல்லத்தலைப்பட்டனள். அந்நாளிலந்த நான்முகப்பிரமனை நோக்கிச் சுவாமி நான் எத்தனைகாலம் இவ்விலங்கையைக் காத்துக்கொண்டிருப்பேனென்றுகேட்க, அவர் நீ வெகுகாலங் காத்துக்கொண்டிருந்தால் ஒரு குரங்குவந்து உன்னைக்கையினலே தீண்டியடிக்கும். அப்பொழுதே இவ்விலங்கைக்காவலைவிட்டு நம்மிடத்திற்கேவந்துவிடுவாய். பின்பு அப்பட்டணம் அழிந்துபோமென்று சொல்லினர். அவ்வண்ணமேவந்து முடிந்தது. "தருமம் வெல்லும் பாவந்தோற்கும்" என்பதைக்குறித்துச் சொல்லவும்வேண்டுமோ? இனிமேல் நீ நினைத்தகாரியமெல்லாம் யாதொருதடையுமில்லாமன் முடியும். மேலும் உன்னலாகாதகாரியமும் ஒன்றுண்டோ? நீ சுகமாய்ப் பட்டணத்திற்குள்ளேபோய் உன்னுடைய காரியத்தைப் பார்த்துக்கொள்ளென்றுசொல்லி அநுமானை வணங்கி அவள் பிரமலோகமேபோய்ச்சேர்ந்தனள். அப்போது வீராதிவீரனுகிய அநுமான் மகிழ்ச்சியாகப்பார்த்து அப்படிதான் முடியுமென்றெண்ணித் தாரகபிரமமந்திரார்த்தமாகிய சிராமனுடையதிருநாமத்தை மனத்திலே தியானஞ்செய்து துதித்து அவனாவணங்கி அவ்வரக்கர்களுடையஇலங்கைமதிலைத்தாண்டிப் பட்டணத்திற்குள்ளேபோய்ப் பெரியபாற்கடன்முழுதுஞ் சிறிய மோர்த்துளியாகிய பிரைகலந்ததுபோல எங்கும் வியாபித்தாய் இரத்தினங்களினற்செய்யப்பட்ட உன்னதமாகிய உப்பரிகைகளெல்லாம் தேசோமயமாய்ப் பிரகாசித்து இருளைத்தலைகாட்டாமல் ஓட்டிவிட்டுப்பகலைஉண்டாக்குகின்றமையினல் அதைக்கண்டு சூரியோதயமாயிற்றே

வென்று அச்சங்கொண்டனன். உடனே செவ்வையாய்ப்பார்த்துச் சூரியோ தயமானதன்று. இந்நகரத்திலுள்ள மாடமாளிகைகளின் பிரகாசமென்றே தெளிந்து. ஆ ஆ! இவ்விரத்தினகாந்திக்குமுன்னே சூரியன்வந்தால் மின்மினி போலன்றோ தோற்றுவானென்று அதிசயப்பட்டனன். பின்னும் மகாமேரு வுக்கு ஒப்பாகிய சுவர்ணமதிலின் மத்தியிற் குற்றந்தீர்ந்த இரத்தினங்களழுத் திய உப்பரிகைகளின் பிரகாசத்தினால் இருள் நீங்குதலால், இவ்விலங்கையி லிருக்கின்ற அரக்கர்கள் பகற்காலத்திற் சஞ்சரிப்பதுபோல நிசியாகிய நள்ளி ரவுப்போதிலும் சாதாரணமாய்ச் சஞ்சாரஞ்செய்வதனாலே, இவர்களுக்கு அக்காரணத்தைப்பற்றி நிசிசரரென்று பெயருண்டாயிற்றென்றே நினைத்து, இப்படிப்பட்ட பிரகாசத்தினாலே வீதியில் நாம் பகிரங்கமாய் நடப்பதினாற் குற்றம்வருமென்றே தன் சரீரத்தைக் குறுகச்செய்துகொண்டு மாளிகைக ளின்பக்கத்தில் மந்தரகிரியைப்போலவும் சிராமபிரானுடைய கீர்த்தியைப் போலவும் உயர்ந்த தோளிணையுடைய அனுமான் ஒதுங்கி நடக்கத்தொடங்கி னான். பசுக்கள்நெருங்கியதொழுவங்கள்தோறும், யானைகள்கட்டிய கூடங்கள் தோறும், பந்திபந்தியாகிய குதிரைக்கொட்டாரங்கள்தோறும், திருமகள்வசிக் கின்ற வீடுகள்தோறும் பரிமளம் வீசுகின்ற பூஞ்சோலைகள்தோறும் கடலைக் கடந்த பாதத்தினால்தாவிப்பூக்கள்தோறும் தாவிச்செல்கின்ற வண்டேபோலச் சென்றனன். சூரியன் சந்திரன்முதலாகிய நவக்கிரகங்களுக்கும் நட்சத்திரங்க ளுக்கும் ஒப்பாகிய அநேக விரத்தினங்களினால், பத்திபத்தியாக உண்டாக்கப் பட்டிருக்கின்ற சுவர்த்தலங்கள்சொரிகின்ற சோதிச்சாயைகள் தன்திருமேனி யிற்பாய்வதனால் வாயுகுமாரனாகிய அனுமான் கறுத்த நிறத்தையுடையவனாகி யும் வெளுத்த நிறத்தையுடையவனாகியும் சிவப்பு நிறத்தையுடையவனாகியும் காணத்தலைப்பட்டனன். அக்காட்சி எவ்வாறிருந்ததென்றால் காண்பதற்கு அரியவனாகியும் எளியவனாகியும் தன் இதயகமலத்தில் வாசஞ்செய்கின்ற பல வகைவடிவத்தையுடைய அந்தரியாமியுமாகிய சிராமசந்திரனைப்போலவேயிரு ந்தது. எங்குந் தேவகன்னியர்கள் சுவர்ணக்குடங்களில் ஆகாசகங்கையைக் கொண்டுவந்து நீராட்ட அரக்கியர்கள் மயில்களும் அன்னங்களும் நீர்விளை யாடுவதுபோல நீராடல் செய்கின்றதையும், இளந்தளிரையொத்த கைகள் சோவ வீணைமீட்டி இலயைகானசுதி கானப்பிரமாணத்துடனேபாடும்பாடல் கள் மேகங்கர்ச்சிக்கின்றதனால் அந்தப்பிரமாணந் தப்பிப்போகின்றனவென்று வித்தியாதரமாதர்கள் உப்பரிகைகளின்மேல் தவழ்கின்ற மேகத்தின்வாயைத் தங்கள் கைகளினால் மூடுகின்றதையும், பூப்பந்தலிடப்பட்டு இரத்தினதீபங் கள் விளங்குகின்ற பொன்மயமாகிய நடனசாலைகளில் பூப்படுக்கையில் வீற் றிருந்து கந்தர்வமாதர்கள் ஆடுகின்ற நாட்டியத்தைப் பார்க்கின்றவர்களையும் பளிங்கினாற்கட்டிய மேடைகளின்மேலிருந்து பயிருக்குநீர்பாய்ச்சுவதுபோலத் தங்களுக்கு நாயகன்மார்களிடத்தில் காமம் அதிகப்படும்படி கள்ளுண்கிறவர் களையும், செம்பவளத்திற்கு ஒப்பாகிய பாதத்தில் செம்பஞ்சின்குழம்பாற் சித் திரமெழுதிச் சரீரத்தில் மிகுந்த வாசனையையுடைய கலவைச்சாந்து பூசிக் கண்களில் மையிட்டுப் பலவகை ஆபரணங்களும் கற்பகவிருட்சங்கொடுக்க

வாங்கி அணிந்துகொள்கின்றவர்களையும், நாயகன்மார்கள்செய்த குற்றம் தங்கள் உயிரைவருத்த ஊடியமாதர்கள் பெருமூச்செறிந்து இடைதுவளக் காற்சிலம்பு சத்திக்கும்படி உதைக்க மகிழ்ந்து மயிர்க்குச்செறிகின்றவர்களையும், உள்ளேகொண்ட மயக்கத்தினால் கண்சிவந்து வாயிதழ்வெளுத்துப் புருவம் வளைந்துதுடிக்க வெயர்வுண்டாக முகம்வேறுபட்டுக் கள்ளினிடத்திலே காணக்கண்டு சங்களத்தியென்று நினைத்துப் புருடர்களைக் கோபிப்பவர்களையும், நாயகன்மார்களைப்பிரிந்து தனத்தின்மேல் அணிந்த சந்தனந்தீயும்படி தாமரைமலரின்மேல் வேறொரு தாமரைமலர் பூத்தாற்போல முகத்தினிடத்திற் கையைவைத்துகொண்டு அசைவற்றிருந்து பெருமூச்செறிகின்றவர்களையும், நாயகன்மார்கள்மேற் கோபத்தாற் சயனத்தில் உணர்ச்சிநீங்கிக்கிடந்து காமம் அதிகப்படுவதனால் அவர்கள்வரும் வழியைப்பார்த்துத் தாங்கள் அனுப்பினதாதிகள் நகைத்துக்கொண்டுவரக்கண்டு உயிர்வந்து துடித்தெழுகின்றவர்களையும், சகல வாத்தியமுழக்கத்துடனே தங்கள் தங்கள்வீட்டுத் தெய்வங்களைக் கொண்டாடிப் பூக்களால் அருச்சித்துப் பூசிப்பவர்களையும், காமப்பிணக்கினாற் புருடர்களது பக்கத்திற்படுத்துப் பொய்யுறக்கங்கொண்டிருந்து பின்பு அப்பிணக்குநீங்கிச் சையோகஞ்செய்ய நினைத்துக்கொண்டு மெல்லக்கண்ணைத் திறந்துபார்ப்பவர்களையும், அறிவுடனே அந்தக்கரண முதலானவைகளும் நாயகன்மார்களிடத்திற் சேர்ந்திருக்க அவர்கள்மேற் பிணங்கிப்போய்க் கதவைச்சாத்துகிற்பவர்களையும், மேகத்தைப்போலப் பேரிகைமுழங்கத் தேவர்கள்வந்து ஆசிர்வதிக்க முற்றத்துறந்தமுனிவர்கள் சோபனங்கள்கூற அரமகளிர்கள் பல்லாண்டுபாடக் கல்யாணஞ்செய்து மகிழ்கின்றவர்களையும், மற்றும்பலவகைச்செய்கைகளைச்செய்துகொண்டிருக்கிற இயக்கியர் கந்தர்வமாதர் வித்தியாதரமாதர்முதலாகிய அனைவரையும் அனுமான் தெளிவாக்ப்பார்த்துக் கொண்டேநடந்து, அப்பாற் கும்பகர்ணனுடைய மாளிகைக்குப்போயினான். அவ்விடத்தில் ஏழுயோசனை விஸ்தீர்ணம் அகன்று உயர்ந்து நவரத்னகசிதமாய்த் தேவேந்திரனுடைய பட்டாபிஷேக மண்டபமாகிய சுதர்மைபோல அதிக சிங்காரமாகிய ஒரு மண்டபமிருக்கின்றது; அது எட்டுத்திக்கிலும் இருளை நிலைபெறாமல் ஓட்டுகின்றது; அதன் நடுவே ஒரு பஞ்சுமெத்தையின்மேல் நாகராசன் சயனித்துக்கொண்டிருப்பதுபோலவும், சமுத்திரங்கிடப்பதுபோலவும், பாவங்களெல்லாம் திரண்டு ஒருவடிவ மெடுத்ததுபோலவும் கும்பகர்ணன் படுத்துக்கொண்டு சமுத்திரத்திலே மூழ்கியெழுந்து மூவகைப்பட்ட கதிகளுடனே கற்பகக்காட்டிலே சஞ்சரிக்கின்ற இளந்தென்றற்காற்று வந்து முகத்திலே மிருதுவாய்த்தவழவும், தேவகன்னிகைகள் பாதம்வருடவும், அவர்களுடைய முகமாகிய சந்திரனைக்கண்டு சந்திரகாந்தம் கக்குகின்ற நீரானது மேலே துளிக்கவும் நித்திரைபண்ணிக்கொண்டிருந்தனன். அவனுடைய சுவாசமென்னும் வேகத்தையுடைய பெருங்காற்றானது அனுமானையே வாயலின்புறத்திலே தள்ளிக்கொண்டுவந்துநிறுத்தி, மீண்டும் பராக்கிரமமுண்டான அந்தக்கும்பகர்ணனுடைய மூக்குக்குள்ளே யிழுத்துக்கொண்டுபோயிற்று. அதைக்கண்டு அனுமான்பயந்துநடுங்கிச் சீக்கிரமாயங்கிருந்து வெளியிலே

குதித்து ஆச்சரியபட்டுக் கைவிரலைத்தெறித்தான். புழுதிக்கூட்டங்களெழும்பி ஆகாயத்தை அளாவும்படி அவன் மூக்கினின்றும் வெளிப்பட்டுப் பின்னும் அதற்குள்ளே நுழைகின்ற அந்த உசுவாசநிசுவாசம் எப்படியிருந்ததென்றால் உலகங்களையெல்லாம் நாசஞ்செய்கின்ற பிரசண்டமாருதமானது யுகாந்தகாலத்தின்வரவை எதிர்பார்த்துக்கொண்டு சஞ்சரிப்பதை ஒத்திருந்தது. அவன் சந்திரனைத் தன் பகைவர்களிற் சேர்ந்தவனென்றுபிடித்து இருபிளவாக்கித்தின்னும்படி தன் பெரியவாயினிடத்தில் வைத்ததுபோல, அவனுடையமுகத்திற் கோரதந்தங்கள் பிரகாசிக்க, மந்திரத்தினாலே தடைபட்ட நாகம்போலவும், யுகமுடிவைப்பார்த்துக்கொண்டு பொங்கிவராமல் அடங்கியிருக்கின்ற கடல்போலவும் உறங்கிக்கொண்டிருந்தனன். அக்கும்பகர்ணனைப் பார்த்து இவன்இராவணனேயென்று எண்ணி அனுமான் மிக்க கோபமாய்ச் சமீபத்திலேபோய்ப்பார்த்து இவனுக்குப் பத்துத்தலையும் இருபதுதோளும் இல்லாமையினால்இராவணன் அல்லனென்றுகுறித்துக் கோபமாகியவடவாக்கினியை அறிவாகிய கடல்நீரால் தணியச்செய்துகொண்டு, பின்பு இவன்யாரோ தெரியவில்லை ; நல்லது எவனாயிருந்தாலுமிருக்கட்டும் ; இன்னஞ் சிலநாள் வரைக்குந்தானே உயிர்கொண்டிருக்கப்போகின்றனனென்றுமனத்திலெண்ணி, அந்த மாளிகையைவிட்டு அப்பாலிருக்கின்ற மாடங்கள், கூடங்கள், மாளிகைகள், ஆடரங்குகள், சபாமண்டபங்கள், தேவாலயங்கள், வேதிகைகள், வித்தியாசாலைகள்முதலாகிய பலவகையிடங்களையும் ஸ்ரீதாசரதியினுடைய கீர்த்தியே ஒருவடிவெடுத்ததுபோலிருக்கின்ற அனுமான் தேடிக்கொண்டேசென்றான். மேருமுதல் அணுவரையிலுமுள்ள சகல சராசரங்களிலும் நிறைந்திருக்கின்ற பரம்பொருளைப்போல மாணிக்கமயமாகிய வாசல்களுக்குள்ளும், சிறிய சாளரங்களுக்குள்ளும், புட்பங்களுக்குள்ளும், புட்பத்தின் தண்டுகளுக்குள்ளும், காற்றுக்குள்ளும், புகைக்குள்ளும், அததற்குத்தக்கபடி தூலமும் சூக்குமமுமாகிய உருவமெடுத்து நுழைந்து உலகமாதாவைத் தேடிக்கொண்டுபோகின்ற அவ்வனுமானுடைய நிலைமையை யார்தான்தெரித்து சொல்லக்கூடும்;இப்படி எவ்விடங்களினும்போய் எவ்வகைப்பட்ட மாதர்களையும் காணும்பொருட்டுச் சுவர்க்கமர்த்திய பாதாளங்களிலுள்ளவர்களெல்லாம் விரும்பும்படி அவதரித்த புண்ணியசீலனாகிய விபீஷணாழ்வானுடைய திருமாளிகைக்குள்ளே புகுந்தனன். பவளத்தினால் அழகாகக்கட்டியிருக்கின்ற அம்மாளிகையில் பளிங்கு மேடையின்மேல் தேன்துளிக்கின்ற பாரிசாத புட்பப்பந்தலிலே அந்த விபீஷணாழ்வான் படுத்துக்கொண்டிருந்தனன். அவன் படுத்திருந்தது எப்படியிருந்ததென்றால், தருமமானது தனக்குரிய வெளுத்தநிறத்துடனே அவ்வூரிலுள்ள அரக்கர்களுக்குமுன்னே இருக்கமுடியாதென்று அவர்களைப்போலக் கறுத்த வடிவமெடுத்து ஒளித்துக்கொண் டிருந்ததுபோலிருந்தது. அப்படிப்பட்ட விபீஷணாழ்வானைக்கண்டு அவ்விடத்தினின்றும் அவனுடைய விவேகத்தைத் தன்னுடைய விவேகத்தினால் அளவிட்டு, இவன் குற்றமற்ற சற்குணத்தையுடைய பரமோத்தமனென்றே அவனைக்குறித்து மகிழ்ச்சியடைந்து, அப்பால் நடந்துபோய்ச் சுவர்ணச்சாயையாப் பிரகாசிக்கின்ற ஒவ்வொருகோடிமாட

ங்களை ஒவ்வொரு இமைப்பொழுதிற் றேடினான். அவ்விடங்களில் இந்திரசித்தென்பவனாற் சிறைவைக்கப்பட்டிருக்கின்ற தெய்வமாதர், இயக்கியர், கந்தர்வமாதர், கின்னரமாதர், பன்னகமாதர், வித்தியாதரமாதர், கிம்புருடமாதர் முதலாகிய அநேககோடி மாதர்கூட்டங்களினுந் தேடிக்கொண்டேபோய் அவர்களுடைய பலவகையாகிய கிருகங்களையுங்கடந்து முன்னாளில் இந்திரன் சிறையிருந்த இந்திரசித்தினுடைய ஆசாரவாசலைக்கண்டான். அவ்விடத்திலே கைகளில்ஆயுதங்கள்பிரகாசிக்க மிதமற்ற அரக்கர்கள்நின்றபடியே பூர்வகதைகளும் விடுகதைகளும் சொல்லிக்கொண்டு கண்களை இமையால் சாக்கிரதையாய்க்காவலிருந்தார்கள். அவர்களுடையகடினமாகியகாவலைக்கடந்துஉள்ளே போய் அநேக மாதர்கூட்டத்தின் மத்தியில் மஹா உல்லாசமாய்ப் படுத்துக்கொண்டிருக்கின்ற இந்திரசித்தைக்கண்டு முக்கட்பெருமானாகிய சிவபிரானுடைய புத்திரனென்கின்ற சுப்பிரமணியன் தன்னுடைய ஆறுமுகங்களில் ஐந்துமுகங்களையும் பன்னிரண்டுகைகளிற் பத்துக்கைகளையும் மறைத்து ஒரு முகத்துடனும் இரண்டுகையுடனும் வந்திருப்பது போலிருக்கின்ற இவன் அரக்கனோ? அல்லது அச்சுப்பிரமணியன் தானோ? சிங்கத்திற்குச் சமானமாகிய மிக்க பேராற்றலுடையானாகவும் காண்கின்றனன். ஆகையால் யாரோ தெரியவில்லை. இளையபெருமாளும், பெருமாளும்வந்து யுத்தஞ்செய்கின்ற காலத்திலே இவனோ அநேகநாள் இளையாமல் யுத்தஞ்செய்வான். இப்படிப்பட்டவனைத் தனக்குத் துணையாகப் பெற்றிருக்கின்றஇராவணன்மும்மையுலகத்தையும்வெற்றிகொண்டதைஒரு பொருளாகச்சொல்லக்கூடாது. இவனுக்குச் சிவனும் பிரமனும் விஷ்ணுவுமாகிய மும்மைப் பெருந்தேவர்களும் ஒப்பாவார்களென்று சொல்வது விவேகமாவென்று தன்னுடைய கையை அசைத்து இவ்விடத்தில் நான் தாமசமாக இருந்து காலத்தை வீணாகப்போக்குவது நன்மையன்றென்று அவ்விடத்திலுள்ள அநேகமாயிரம் மாளிகைகளையும் வெகு சீக்கிரத்தில்தேடி அவ்விந்திரசித்துவின் ஆண்மனையைவிட்டு நீங்கிப் புகை நுழையாத இடத்திலுங் காமரூபங்கொண்டு நுழையத் தக்க திருவடிகள் அதிகாயன் மாளிகையையும் பின்னும் அவன் தம்பிமார்களுடைய மாளிகைகளையும் மற்றுமுள்ள படைத்தலைவர்கள் அணித்தலைவர்கள் யூகத்தலைவர்களுடைய மாளிகைகளையும் தேடிப்பார்த்து அப்பால் மந்திரி பிரதானிமார்களுடைய மாளிகைகளையும் ஆயிரகோடி சுவர்ணமாளிகைகளையும் சிராமபாணத்தைப்போல அதிவேகமாய்த்திரிந்து தேடி, பின்பு அந்த மூன்று சுற்றுக்கோட்டைக்கும் நடுவேயிருக்கின்ற அகழிக்குநேராகவந்தனன். குழந்தைப்பருவத்திற் சூரியனை மாங்கனியென்றே பிடிக்கும்படி தாவிய அனுமான் அவ்வகழியைக்கண்டு ஏழுகடல்களும் ஒன்றாகச் சேர்ந்திருக்கின்றதுபோலிருக்கின்றதே இவ்வகழி, இதைக் கடப்பதோவரிது. இனி சிராமகாரியத்திற்கு விக்கினம் வந்ததென்று கிலேசித்துப் பின்னும் அதைப்பார்த்து இதை அகழியென்று சொல்வார்களானால், அநேகர்கள்கூடி ஊழிகாலபரியந்தம் தோண்டினாலும் தோண்டமுடியாது. இராவணனுக்குப் பயந்து ஏழுகடல்களும் இந்நகரத்திற்குள்ளே வந்து இப்படிச் சூழ்ந்திருக்கின்றதென்று நினைத்து அவ்வகழிக்கு

அருகே போய் தான் முன்பு கடலைக்கடந்துவந்தவேகத்தைப்பார்க்கிலும் இரு மடங்கு அதிகவிசைகொண்டு தாண்டினபோதும் இதைக் கடக்கக்கூடாதென்றும், மேலிருந்து கால்வகையான மேகங்களும் கீழ்விழுந்து கவியும்படி தூக்கினாற்போலப் பொங்கியெழுகின்ற நீர்ப்பெருக்கையுடையதாய், பிரதாப இலங்கேசனுடைய சேனாசமுத்திரத்தை யொத்திருக்கின்றதே. இவ்வகழியைவாயினாற் சொல்லவுங் கூடுமோவென்றும், இதில் யானைகள் பொழிகின்ற கர்ணமத முதலாகிய மூன்றுவகைப்பட்ட மதங்களும், குதிரைகளின் வாயிலிருந்து ஒழுகுகின்ற நுரைகளும் தேவரம்பையர்கள் நீராடல்செய்கின்ற குங்குமங் கலந்த சலமும், இலங்கையிலிருக்கின்ற மாதர்களுடைய கூந்தலுக்கு ஊட்டிய மயிர்ச்சாந்தும், அகிற்புகையும் தேனும் திவ்வியமாகிய கந்தமும் பரிமளிக்கின்றனவென்றும், பூவைகள் கொய்யடி நாரைகள் அன்றில்கள் புதாக்கள் உள்ளான் அன்னம் நீர்க்கோழி நீர்க்காக்கை சக்கரவாகம் கின்னரம் கொக்கு முதலாகிய பறவைகள் நிறைந்திருக்கின்றனவென்றும், மாதர்கள் அணிகின்ற அகில்சந்தனம் கத்தூரி செம்பஞ்சின்குழம்பு முதலானவைகளும் சேர்ந்திருக்கின்ற இந்த அகழியின் மூழ்கிப்போகின்ற களிற்றியானைகளைப் பிடியானைகள் கண்டு நம்முடைய நாயகன் வேறொரு நாயகியைப் புணர்ந்து வருகின்றானென்று நினைத்துப் பிணங்குகின்றனவென்றும், நீர்த்துறைகள்தோறும் குவிந்திருக்கின்ற தாமரைமலர்கள் சீதாபிராட்டியாருடையகரசரணாதி அவயவங்களுக்கு நட்பாகையால் அப்பிராட்டி சிறையிருப்பதைக் குறித்து முகம் வாடியதுபோ லிருக்கின்றனவென்றும், அல்லாமலும் நீலமுதலாகியஇரத்தினங்களும் முத்துகளும் கரையின்மேலும் சலத்திற்குள்ளும் பலவகையாகப் பிரகாசிப்பது, பாற்கடல்முதலாகிய பலகடல்களும் ஒன்றாகக் கலந்திருப்பதுபோலிருக்கின்றதென்றுங் குறித்து அப்படிப்பட்ட அகழியைக் கடலைக் கடப்பதுபோலவேகடந்து மதிலையுந்தாண்டி உட்புகக்கூடாத காவலையுடைய அந்நகரத்திற்குள்ளே போனான். அப்போது அர்த்தராத்திரி யாய்த்து. அத்தருணத்தில் யமனும் பயந்து ஓடத்தக்க அரக்கர்களுடைய பட்டணத்தில் அநுமான் தானே யொருவனாய் ஒவ்வொன்றும் பன்னிரண்டுயோசனை தூர பிரமாணமாயிருக்கின்ற மூன்றுலட்சந் தெருக்கள் தேடினான். ஆடல் பாடல்கள் அடங்கின. வீணை மத்தள முதலாகிய சகலவாத்திய முழக்கங்களும் அடங்கின. காவற்பறைமாத்திரமே முழங்கத்தலைப்பட்டது. கூடினமாதராடவர்களெல்லாம்உறங்கினார்கள். கதவுகளெல்லாஞ்சாத்தப்பட்டன. பூரணஞானத்தைப்பெற்றஉத்தமர்களெல்லாம் நித்திய நியமாதிகருமங்களை முடித்துக்கொண்டுநித்திரைசெய்தார்கள். யோகிகளும் உறங்கினர். மதயானைகளும் உறங்கின. மயங்கித்திரிகின்ற பித்தர்களும் உறங்கினார்களென்றால் மற்றவர்களைக் குறித்து என்னசொல்லுவது. அந்தச்சமயத்திலே அம்மதிலுக்குள்ளே இரண்டுகோடி அரசவீதிகளைத்தேடிப்பார்த்து அப்பால் ஆகாமியசஞ்சிதபிராரத்தகர்மங்களை ஒழித்த திருவடிகள் தசக்கிரீவனுடைய இருப்பிடத்தைச் சுற்றியிருக்கின்ற அகழையும் மதிலையுங்கடந்து உள்ளேபோய்ப் பிரவேசித்தனன். அங்கே இராவணனை சந்திரனாகச் சந்திரனைச் சூழ்ந்திருக்கின்ற நட்சத்திரங்களைப்போல

அவ்விராவணனைச்சேர்ந்திருக்கின்ற மாதர்களுடையஇரத்தினமயமாகியமாளி கைகளையெல்லாம் தேடத் தலைப்பட்டவராய், களங்க நீங்கிய சந்திரனும் தோற்கும்படி பிரகாசிக்கின்ற முகத்தினையுடைய இயக்கியர்கள் வாசஞ்செய் யும் மாளிகைகள்நெருங்கிய வீதிக்குப்போனான். சிராமதூதனாகிய அனுமான் வச்சிரத்திறவுகோல் நுழைகின்ற துவாரங்கள்தோறும் நுளிமைபோலவும், சிறுதென்றல்போலவும் அதிக நுட்பமாகிய உருவங்கொண்டு நுழைந்து மனம் தெளியும்படி பார்த்தனன். அவ்விடத்திற் சில மாதர்கள் தங்கள் நாயகனாகிய இராவணன்மேல் மிக்கமோகமாய் மனம் அவனிடத்திற்போயிருக்கக் கண்ணி மையாமல் சித்திரம்போ லிருந்தார்கள். சிலர்மன்மத பாணத்திற்குப் பயந் தோ கனவிலாயினும் அவ்விராவணனைச்சேரலாமென்று எண்ணியோ என்ன வோ ஒன்றுந் தெரியவில்லை; அவர்கள் கண்ணைமூடிப் பொய்யுறக்கங் கொண் டிருந்தார்கள். சிலர் கிளிப்பிள்ளைகளையும் நாகணவாய்ப்பறவைகளையும் கடோ ரமாய்ப்பார்த்து, நீங்கள் ஆகின்றகாரியம் ஒன்றுஞ்செய்யவில்லை. என் பிராண சிநேகனை அழைத்து வரவுமில்லை. என்னுடைய சமாசாரத்தையும் அவ னிடத்திற்போய்ச் சொல்லவில்லையென்று கண்ணீர்பெருகத் துன்பப்படுவார் கள். சிலர் தனங்களில் மன்மதபாணம் தைக்கப் பெருமூச்செறிந்து அழுது, இனிச் செய்வதென்ன இருக்கின்றது; இராவணனுடைய உருவத்தைச் சித்தி ரத்திலாயினும் எழுதலாமாவென்று நினைக்கின்றார்கள். சிலர் மகாமேருவை வில்லாகவளைத்து மகாவிஷ்ணுவை அம்பாகத்தொடுத்துத் திரிபுரத்தை எரித்த சிவபிரானுடைய கைலாயமலையை எடுத்த அதிசூரனாகிய தசகண்ட னுடைய தோள்களில் அணிந்த சந்தனக்குழம்பு தோய்ந்த தங்கள் தனத் தைப் பார்த்துச் சந்தோஷிக்கின்றார்கள். சிலர் இலங்கேசனுடைய பிரதா பத்தை வீணையிற்பாடுகின்றார்கள். இந்தவண்ணம் அவ்வியக்கிமார்களிருக் கின்ற ஆயிரகோடி மனைகளையுந்தேடி அவற்றைத்தாண்டி அரக்கியர்களிருக் கின்ற ஆயிரகோடிமாளிகைகளையும் போய்த்தேடத்தலைப்பட்டனன். அநேகர் நெய்விளக்கில்லாமல் இரத்தினசோதியே இருளை நீக்கும்படிப் பிரகாசிக்கின்ற மாடமாளிகைளில் தோழிமார் தாதிமார் முதலாகிய பெண்கள் கூட்டமெல் லாம் நீங்கிப்போகத் தாங்கள் கொண்ட ஆசையும் தாமுமாய் ஒருபக்கத்தி லிருந்து இராவணனிடத்திற் போயிருக்கின்ற தங்கள்மனத்துடனே பிணங்கு கின்றவர்களும், அநேகர் தங்கள் மேனியே ஆகாயமாகவும், முத்தாரமே நட் சத்திரங்களாகவும் இடையே மின்னலாகவும் சிவந்தகூந்தலே செவ்வானமாக வும், நெற்றியேசந்திரனாகவும் தோன்ற அந்திவானத்திற்கு ஒப்பாயிருக்கின்ற வர்களும் அநேகர் உயர்வாகிய உப்பரிகைகளின்மேலிருந்து கண்களின் நிற மாறவும் அளகபாரஞ்சோரவும் வானத்திலிருக்கின்ற நட்சத்திரங்களை வாரி யெடுத்து அம்மனையாகவும் எழாங்காயாகவும் ஆடுகின்றவர்களும் தெய்வமா தர்களின் கூட்டங்கள் சத்தியலோகத்திலிருந்து மொண்டு கொண்டுவந்த நீ ராட்டுகின்ற ஆகாயகங்கைகுளிர்ச்சியாயிருக்கவில்லையென்று அவர்கள்மேற் கோபித்து மேன்மாடங்களின்மேல் ஏறிப்போய்மேகத்தின் வயிற்றைத்தொளை த்து அதிலிருந்து ஒழுகுகின்ற நீரினால் சுத்தநீராடுகின்றவர்களும் அநேகர்

நாகராசர்களைப் பலாத்காரமாகப் பிடித்து அவர்களுடைய சிரோமணிகளையும் வித்தியாதர ராசர்களுடைய கிரீடங்களையும் இரத்தினத் தாழ்வடங்களையும் மற்றுமுள்ள ஆபரணங்களையும் பறித்துப் பந்தயமாகவைத்து நித்திரையில்லாமற் சூதாடுகின்றவர்களும், அநேகர் புதுமையாகிய பூஞ்சேக்கையிற் படுக்கப் பொருமல் அதைவிட்டுக் குளிர்ச்சியாகியபளிக்குமேடையிலே போய்ப்படுத்துக் காமாக்கினியினாலே வெதும்பிப் புழுங்குகின்றவர்களும், அநேகர் சித்தமாதர்கள் வீணைமாட்டிப்பாட நாககன்னியர்கள் மத்தளந்தட்டத் தேவரம்பையர்கள் ஆட அந்நடனம் பார்த்துக்கொண் டிருக்கின்றவர்களும், அநேகர் விரகாக்கினி மனத்தைச்சுடக் கண்ணிலே நீர்பெருக நித்திரையில்லாமலும் இன்னதைச்செய்யலாமென்றும் அதுவல்லாமலும் மகரவீணையும் புள்ளாங்குழலும் தங்கள் கண்டமும் வேற்றுமைதோன்றாமல் அமிர்தமொழுகும்படி பாடுகின்றவர்களும், அநேகர் ஆடையும் மேகலாபரணமும் சோரும்படி குரவைக்கூத்தாடுகின்றவர்களும், அநேகர் கள்ளும் உதிரமுமுண்டு பித்தேறிக் கொண்டாட்டத்தால் நடிக்கின்றவர்களும், அநேகர் கள்ளுண்டமயக்கத்தால் அறிவுதடுமாறக் கண்சுழல என்மேல் தெய்வம்வந்தது பாருங்களென்று பெருமூச்சுவிட்டு இரண்டுகையையும் உச்சிமேற் கூப்பிக்கொண்டு குழறிப்பேசுகின்றவர்களுமா யிருக்கின்றனர். இவ்வகையாயிருக்கின்ற அவ்வரக்கியர்களுடைய நாலுகோடி வீதிகளையுந் தேடிப்பார்த்துக்கொண்டே அப்புறம் சித்தமாதர்களிருக்கின்ற வீதிக்குப்போய் அங்குந்தேடிப் பார்த்துக்கொண்டு பின்பு அநுமானே வித்தியாதரமாதர்களுடைய வீதிக்குப்போனான். இராவணனை வரக்காணாமல்தங்களிடையைப்பார்க்கிலும் மனந்தளர்ந்து நடுங்க உயிரும்நிலை தடுமாற, பாணர்கள் பாடுகின்றபாடலானது பாம்பைப்போலச்செவியிலே வந்து நுழைய வருத்தப்படுகின்றவர்களும்,இவர்கள் இராவணனிடத்திற் பரிவுகொண்டிருக்கின்றவர்களென்கின்ற பகைமையைக்கொண்டு சந்திரன்சொரிகின்ற கிரணங்கள் தனங்களைவெதுப்ப நெருப்பில்வீழ்ந்த இளங்கொடிபோலத் துடிக்கின்றவர்களும் ஒரு கணப்பொழுது அநேக ஊழிகாலங்களாய்த் தோன்ற மனம்வேறுபட்டுக் காமநோயால் வருந்துகின்றவர்களும் தனத்தில் எழுதிய சந்தனக்குறிகள் உயிரை வருத்தக்கண்கள் சிவக்கப்பார்த்துக் கோபித்துப் பெருமூச்சு விடுகின்றவர்களுமாய் அந்தவித்தியாதரமாதர்களிருக்கின்ற பன்னிரண்டுகோடி மாளிகைகளையும்தேடிப்பார்த்துக்கொண்டுபோனான். மும்மையுலகத்திற்கும்நாயகனாகிய பிரதாப இலங்கேசனுடைய பெரிய அரண்மனையை நாடிப்போகிய அநுமானே பூரணசந்திரனும் ஒளிமழுங்கும்படி மிக்க பிரகாசமாய் விளங்குகின்ற முகத்தினையுடைய மயன்மகளாகிய மண்டோதரிவாசஞ்செய்கின்ற அந்தப்புரத்தைக்கண்டனன். கண்டு தன்னுடைய கண்கள்பிரமிக்கச் சித்தம் திடுக்கிட எங்கள்கர்த்தவாகிய சிராகவனுடைய பிராணபதமாயிருக்கின்றசகன்மாதாவாகியசானகியாரை இவ்விராவணன் எடுத்துக்கொண்டு வந்துவைத்திருக்கின்ற இடமிதுதானோ? இங்குள்ள மாணிக்கமயமாகிய சகல மாளிகைகளிலும் இது ஸ்ரீமகாவிஷ்ணுவின் மார்பிலணிந்த கவுத்துவமணிபோலப்பிரகாசிக்கின்றதென்று அதிசயப்பட்டனன். அரம்பை மேனகை திலோ

த்தமை ஊர்வசி முதலாகிய தெய்வப்பெண்கள் இளந்தளிர்போன்ற பாதத்தைவருட, வெண்சாமரைவீச, கரும்பைப்பார்க்கிலும் மிக்க மதுரமாகிய மொழியையுடைய மாதர்கள் யாழ்மீட்டிப்பாடுகின்றபாடலானது காதுக்குள்ளேவந்து நுழைய, மூக்கினிடத்தில்கற்பகப்பூ வாடையானதுசேர்ந்துமணக்க, இப்படிப்பட்ட மிக்க சம்பிரமத்துடனே பூம்பருக்கையின்மேல் மாணிக்க தீபப் பிரகாசமும் மழுங்கச் சொலிக்கின்ற மேனியையுடைய திரிலோக பயங்கரன் மனைவியாகிய மண்டோதரி துயில்கொளக்கண்டு, இவள் அப்பிராட்டியோவென்று நினைத்து ஐயங்கொண்டு மனத்திலிருந்தெழுந்த கோபத்தினால் தம்முடலையும் உயிரையுஞ்சுட மிகவுந்துயரப்பட்டுச் சொல்லுகின்றனர். நான் எடுத்த யாக்கையினால் அடையத்தக்க பயனை இழந்துவிட்டேனே; அதிருக்கட்டும், இவள் அன்பையும் குடிப்பிறப்பையும் தெய்விகமாகிய தன்கற்பையும் இழந்துவிட்டாளேயானால், சக்கரவர்த்தித் திருமகனுடைய கீர்த்தியும் தேஜசும் நானும் இவ்விலங்கையும் அரக்கர்களும் இற்றைத்தினமே மாண்டுபோவது நிச்சயமென்று எண்ணி, மறுபடியும் செவ்வையாகப் பார்த்து அவ்வுலக மாதாவோ மகத்தாகிய சிறந்த உருவத்தையுடையவர். இவளோ அவருடைய திருவுருவத்தின் சதாம்சத்தில் ஓரம்சமும் ஒவ்வாததும் விகாரமுமாகிய உருவத்தை யுடையவளா யிருக்கின்றனள். ஆகையால் இவள் இயக்கமாதோ அசுரமாதோ என்று ஐயமாயிருக்கின்றது. சகலான்மாக்களையும் மோகிப்பிக்கின்ற மன்மதன் இரகுநாயகன்மேல் அன்பினையுடைய பிராட்டியாரிடத்தில் அணுகுவானா? நாம் இப்பொழுது இவளை அச்சானகியாமென்றே நினைத்தது மாபாதகம். உத்தமமாதருக்குரிய இலக்கணங்களும் இவளுக்குச் சிலவுண்டாயிருக்கின்றன. ஆனாலும் இவள்தேகத்தில் தோற்றுகின்ற அவலட்சணங்கள் சிலநாளைக்குள்ளே மகத்தாகிய துன்பத்தை யடைபவளென்று சொல்லுகின்றன. தலைமயிர் அவிழ்ந்து சோர்ந்துவிழ வாய்வெருண்டு ஏதேதோ தீயவசனங்களைப் பிதற்றுகின்றதனால் இவள்நாயகனுக்கும், அவனுள்ளின்ற இந்நகரத்திற்கும் கேடு சமீபத்திருக்கிறதாகவே தோன்றுகின்றதென்று அறிந்துகொண்டு அவ்விடத்தைவிட்டு நீங்கி மகாமேருமலை வந்திருப்பதுபோல மிக்க உன்னதமாயிருக்கின்ற ஒரு விசித்திரமாகிய கிருகத்தில் இராவணனாலும் எடுக்கப்படாத வெள்ளிமலையையொத்த திரண்டதோளினையுடைய அனுமான்போய்ப்பிரவேசித்தனன். அவர்பிரவேசித்த மாத்திரத்தில் பூமியதிர்ந்தது. எல்லாமலைகளும் அசைந்தன. அரக்கியர்களுக்கெல்லாம் அவர்களிடையைப்போல வலப்புறத்துப் புருவமும் கண்ணும் தோளும் துடித்தன. திக்குகள் கம்பிதப்பட்டன. மின்னலுமேகமு மில்லாமல் ஆகாயத்தில் இடியோசை யுண்டாயிற்று. மங்களகரமாக வைத்திருக்கின்ற பூரண கும்பங்களெல்லாம் வெடித்தன. இப்படிப்பட்ட துர்நிமித்தங்கள் உண்டாகவே, அனுமான் தம்முடைய அறிவைக்கொண்டு ஆராய்ந்துபார்த்து விரைவாக இவ்விலங்காபட்டணத்தின் சம்பத்துகளெல்லாம் நாசமாய்ப் போய்விடுமென்றே நினைத்துச் சற்றே மனங்கிலேசித்து உடனே எக்குலத்திலே தோன்றினவர்களா யிருக்கினும் எப்படிப்பட்ட தபோநிட்டர்களாயினும்

யாவருக்கும் நல்வினையும் தீவினையும் சமமாகவே முடிந்திருக்கின்றனவன்றோ! ஆகையால் ஊழ்வினையைப் பார்க்கிலும் வலிமையையுடையது வேறென்ன இருக்கின்றதென்று நவவியாகரண பண்டிதராகையால் தமக்குள்ளே துணிவு கொண்டு, சேனாசமுத்திரம் புடைசூழ்ந்திருக்கின்ற அம்மாளிகைக்குப்பெரிய பாற்கடலில் அநேக அலைகளை வீசிக்கொண்டு ஒருகருங்கடல் கிடப்பதுபோலவும், இளஞ்சூரியர்கள் மலையின்மேல் உதயமானதுபோல இரத்தினமிழைத்த கிரீடங்களும் மற்றுமுள்ள பலவகைப்பூடணங்களும் இருளைநீக்கிப்பிரகாசிக்க, இரணியனைச் சங்கரித்த உக்கிர நரசிங்கமூர்த்தி அநேகமாகிய தலைகளையும் தோள்களையும் பரப்பிக்கொண்டு படுத்திருக்கிறதுபோலவும் உறங்கிக்கொண்டிருக்கிறவனும், ஆயிரந்தேவரம்பைகள் வரிசையாய்நின்று சாமரைகள்போட, அவற்றால் உண்டாகிய காற்றினுடனேகலந்து கற்பகப்பூந்தேன் துளிக்குந்தோறும் தன்மேனி வெதும்பச் சானகியாரை அடிக்கடிநினைத்து நினைத்துப் பெருமூச்செறிந்து தேய்கின்றவனும், கைலாசத்தைக்குலுங்கச்செய்த தோள்களின் பராக்கிரமத்திற்கும் அஞ்சாமல் மன்மதபாணங்கள் மார்பிலே உருவிப் பாய்ந்ததனாலுண்டாகிய பச்சைப்புண்கள், அஷ்டதிக்கயங்களின் கொம்புகள் தைத்த பழந்தழும்புகளின் மத்தியில் மத்தியிலஉதிரங்கசிந்துகொண்டிருக்கக் காமாக்கினியை மூட்டுகின்ற துருத்தியைப்போலமந்தமாருதந்தேகத்திற்பூசிய கலவைச்சந்தனத்தின்மேல் தவழச் சானகியார்மேல் மனமுதலிய அந்தக்கரணங்கள்செல்லப் பாம்புகள் குடிபோன புற்றுப்போலப் பாழாயிருக்கின்ற இதயத்தானத்தை யுடையவனும், நினைத்தபோதெல்லாம் திக்குகள்தோறுஞ்சென்று தேவர்களுடனேபோர்செய்து அவர்களுடைய புகழாகிய அமிர்தத்தைக் கைகளினால் வாரிவாரி உண்டபோது அதுதனக்குத்தெவிட்டித் தன்கடவாய்களின்வழியே ஒழுகியதுபோலத் தாவள்யமாய்ப் பிரகாசிக்கும் கோரதந்தங்களையுடையவனும், வெண்மையாகிய மல்லிகைப்புட்பசயனம் வெந்து பொடியாகப் புழுங்குகின்ற தன்தேகத்தில் சமுத்திரத்திலுண்டாகிய நீர்க்குமிழிபோல வெயர்வுந்தோன்றிப் பூமாலைகளில்மொய்த்திருக்கின்றவண்டுகள் கரிய, அந்தமாலைகளும் தீயும்படி பெருமூச்சு விடுகின்றவனும், இரகுநாயகனுக்குச் சீதாபிராட்டியாரிடத்தில் எப்படி மனஞ்செல்லுகின்றதோ அப்படியே அவரிடத்தில் தன்னெஞ்சு செல்லும்படி பொய்யுறக்கங் கொண்டிருக்கின்றவனும், அச்சானகியார்மேலுண்டான ஆசையாகிய நீரைவார்த்துத் தன்னுயிராகிய பதார்த்தத்தைப் பெருமூச்சாகிய அம்மியிலிட்டு அரைக்கின்றவனும், இடைவிடாமல் சீதாபிராட்டியாரைநினைத்துக்கொண்டிருப்பதனால் அவரெதிர்ப்பட்டதுபோல உருவெளி காணும்போதெல்லாங் கலகலவென்று சிரிக்கின்றவனும், விரகத்தினால் சரீரம் நடுங்குகின்றவனும், சனகர்குலவிளக்காவார்பள்ளியறைக்குள்ளேவந்து புகுந்தாரென்று மயிர்க்குச்செறிகின்றவனும், சூரியனைப்போல விளங்குகின்ற நவரத்ன ஆரங்கள் புரளத்தக்கதாய் மும்மைப்புவனங்களையும்படைத்துக் காத்துச்சங்கரிக்கின்ற பிரமன்மாலுருத்திரனாகிய மும்மைப்பெருந்தேவர்களுடைய ஆயுதங்களும் இந்திரனுடைய வச்சிராயுதமும்பட்டு முனைமடிந்துபோம்படி மிக்கபராக்கிரமத்தைப்பொருந்திய மார்பினையுடையவ

னும், சத்துருக்களாகிய அரசர்கள் தன்கையிலேந்திய வேலாயுதத்திற்குப்பய ந்துநடுங்கி ஓடிவந்துவணங்கும் பொழுதெல்லாம், அவர்களுடைய கிரீடங்கள் பட்டுத் தேய்ந்துதழும்பேறிய பாதத்தை யுடையவனுமாகிய பிரதாப லங்கேச னைக்கண்டார். திருமால் முன்னாள்கொண்ட வாமனவடிவத்தைப் பார்க்கி லும் அறச்சிறிதாகிய வடிவத்தையுடைய அனுமான் அவ்விராவணனுடைய பத்துத்தலைகளையும் இருபது தோள்களையும் தெரியக்கண்ட மாத்திரத்தில் அவருடைய நெஞ்செரிந்தது. கண்கள் காலாக்கினியைப்போலக் கோபாக் கினியைச் சொரிந்தன. அண்டமானது மேலுங்கீழும் வெடித்தது. அப் பொழுது அவர் உலகமாதாவை வஞ்சனைசெய்து கொண்டுவந்த இவன்மேல் இக்கணமே எழும்பிக்குதித்து இவனுடைய மணிமுடிகளைக் காலினால் எற்றி உடைத்தெறிந்து என்னுடைய பராக்கிரமத்தைக் காட்டாமற் போவேனே யாகில், நான் இராகவனுக்கு அடிமையாகவேமாட்டேன். அவ்விராகவனுக்கு ஆட்பட்டிருக்கின்றதென்ன விளையாட்டுக்கா? என் கண்ணினாற்கண்டும் இவ் வரக்கன் உயிரோடிருப்பானா? இவனுடைய இருபது தோள்களையும் மடக்கி அடக்கிப்பிடித்து ஒடித்துப் பத்துத்தலைகளையும் எட்டி உதைத்து நிலத்தில் உருட்டிக்கொன்று, இவ்விலங்கையையும் ஒருமிக்க நிர்மூலமாகச்செய்கிறேன். அப்படிச்செய்தால் அப்பால் ஆவது ஆகட்டுமென்று நினைத்து பற்களை நெற நெறவென்று கடித்து இரண்டுகைகளையும் நெருப்புப்பொறி பறக்கப் பிசைந்து கொண்டே மிகவுக்கிரமாய் எழும்பினர். அவ்வகையாகக் கொல்லும்படி கோபித்து எழும்பிய அநுமான், சற்றேநின்று சிந்தித்து, இவ்வண்ணமாகச் செய்யும்படி இறைவன் நமக்கு ஆக்கினைசெய்யவில்லையே; ஆகையால், ஒன் றைச்செய்ய எத்தினப்பட்டுவந்து வேறொன்றைச் செய்வது அறிவுடைமைக் குத்தக்கதன்று. ஆலோசிக்குமிடத்தில் இதுமிகவுங் குற்றமுடையதாகுமெ ன்று கோபந்தணிந்துநின்றனர். இராவணனைக் கொல்லத்துணிந்த அநுமான் கொல்லாமல் விட்டுவிட்டதற்குக் காரணமென்னவென்று பார்க்கும்பொழுது, ஆலவிடத்தையுண்ட சிவபிரானுக்கு ஒப்பாகிய மகாவலியுடையர்களானாலும், உலகத்தையெல்லாம் முடிக்கத்தக்க உபாயந் தெரிந்திருந்தாலும், யோக்கி யர்கள் இப்படிச்செய்தால் இப்படி முடியுமென்று முன்னேயாராயாமல் யா தொன்றையாவது செய்வார்களா? ஆகையால் காலம்பார்த்துக் கரைகடவாம லிருக்கின்ற சமுத்திரத்தைப்போல அவ்வனுமானும் அதிக்கிரமிக்காமல் அட ங்கி யிருந்ததாகக் காண்கின்றது. பின்னும் அவர் நான் இற்றைத்தினத்தில் கொடிய பாபியாகிய அரக்கனைப்போர்செய்து கொல்லுவேனேயாகில், கோத ண்டதீட்சாகுருவாகிய ஸ்ரீராமபிரானுடைய தேவியாரைச் சிறைவைத்த திரி லோககண்டகனாகிய இராவணனை ஒருகுரங்குவந்து கொன்றுவிட்டுப்போன தென்று உலகத்தார் எளிதாகச் சொல்வார்கள். எம்பெருமானுடையவில் வீரத்திற்கும் இகழ்ச்சி யுண்டாகுமென்று எண்ணி உக்கிரந்தணிந்து, என்தா யாகிய சானகியார் இவனுடனேகூடத் துயில்செய்கின்ற மாதர்களுக்குள்ளே சம்பந்தப்பட்டிருக்கவில்லை, இவனுடைய நிலைமையோ அற்பமாகிய காமத்தி னால் மெலிந்திருக்கின்றதாகக் காண்கின்றது. இதனால் அந்தக் கருணாநிதி

யாகிய சானகியார் கற்பழியாதிருக்கின்றாரென்பது எனக்கு நிச்சயமாகவே தோன்றுகின்றதென்று குறித்துக்கொண்டு, இனியிவ்விடத்திலிருந்து சும்மா ஆலோசித்துக் காலதாமதஞ் செய்வதனால் யாதொரு பயனுமில்லையென்று நினைத்து, அவ்விராவணனுடைய அரண்மனையைவிட்டு அப்புறம்போய்த் தேடுவதற்கு வேறிடமில்லாமையால், அங்குநின்று ஐயோ இந்நகரமுழுமையுந் தேடிப்பார்த்தும் சானகியாளைக்காணேனேயென்று மிகுந்த கிலேசத்துடனே பிரலாபிக்கத் தொடங்கினார்.

## கோச்சகக்கலிப்பா.

கொன்றானோகற்பழியாக்குலமகளைக்கொடுந்தொழிலால்
இன்றானோவப்புறத்தேசேர்த்தானோசிறைசிறியேன்
ஒன்றானுமுணர்கில்லேன்மீண்டினிப்போயென்னுரைக்கேன்
பொன்றாதபொழுதெனக்குக்கொடுந்துயரம் போகாதால். (௧)

கண்டுவருமென்றிருக்குங்காகுத்தன்கவிகுலத்தோன்
கொண்டுவருமென்றிருக்கும்யானிழைத்தகோளிதுவால்
புண்டரிகநயநத்தான்பாலினியான்போவேனோ
விண்டவரோடுடன்வீயாதியான்வாளாவிளிவேனோ. (௨)

கண்ணியநாள்கழிந்தளவாற்கண்டிலமாற்கனங்குழையை
விண்ணடைதுமென்றாயாண்டிருத்திவிளைந்தயான்
எண்ணியதுமுடித்திலேன்யான்முடியாதிருப்பேனோ
புண்ணியமென்றொருபொருளென்னுழைநின்றும்போயதால். (௩)

எழுநூறோசனைசூழ்ந்தெயில்கிடந்தவிவ்விலங்கை
வாழுமாமன்னுயிர்யான்காணாதமற்றில்லை
ஊழியான்பெருந்தேவியொருத்தியையும்யான்காணேன்
ஆழிதாயிடராழியிடையேவீழ்ந்தழிவேனோ. (௪)

வல்லரக்கன்றனைப்பற்றிவாயாறுகுருதிவரக்
கல்லரக்குங்கரதலத்தாற்காட்டென்றுகாண்கேனோ
எல்லரக்குமயினுதிவேலிராவணனுமிவ்வூரும்
மெல்லரக்கினுருகிவிழவெந்தழலால்வேய்கேனோ. (௫)

வானவரோமுதலோராவினவுவனேல்வல்லரக்கன்
தானொருத்தனுளனாகவுரைசெய்யுந்தருக்கிலரால்
ஏனையர்களெங்குளாப்பவெவ்வண்ணந்தெரிகேனோ
ஊனழியநீங்காதவுயிர்சுமந்தவுணர்வில்லேன். (௬)

எருவைக்குமுதலாயசம்பாதியிலங்கையிலத்
திருவைக்கண்டனனென்றானவனுலாயுஞ்சிதைந்ததால்
கருவைக்குநெடுநகரைக்கடலிடையேகரையாதென்
உருவைக்கொண்டின்னமுநானுளனாகியுழல்வேனோ. (௭)

வடித்தாய்பூங்குழலாளைவானறியமண்ணறியப்
பிடித்தானிவ்வடலரக்கனெனுமாற்றம்பிழையாதால்
எடுத்தாழியிலங்கைதனையிருங்கடலினிட்டிவனை
முடித்தாலேயான்முடிதனன்றென்றுமொழிகின்றான். (௮)

கற்பழியாத மிக்க பதிவிரதையாகிய உலகமாதாவை இப்பாவி கொன்றுவிட்டானோ? அல்லது கொடியசெய்கையை யுடையவனாகையால் தின்றுவிட்டானோ? மற்றெவ்வுலகத்திலாகிலும் வைத்திருக்கின்றானோ? அவன் சிறைவைத்த இடத்தை நானொருவகையிலாயினும் அறியேன். இவ்விடத்திலிருந்து இனித்திரும்பிப்போய் யாதுசொல்லப்போகிறேன். இத்துயரம் நான் இறந்தாலன்றி என்னைவிட்டுநீங்காது. இரகுநாயகனோ அநுமான் பிராட்டியாரைக்கண்டு வருவானென்று எண்ணியிருப்பனோ. நமது மகாராசாவோ அவசியம் கொண்டுவருவானென்று நினைத்திருப்பார். நான்வந்து சாதித்தகாரியம் இதுதானோ! இவ்வளவுசெய்யமாட்டாத நான் வெட்கமில்லாமல் புண்டரீகக் கண்ணையுடைய இரகுநாயகனிடத்திற்கு இனிப்பிராணனுடனே போவேனோ? இந்தச்சத்துருக்களை யுத்தஞ்செய்து எப்படியுங்கொன்று இவர்களுடனே கூட இறப்பேனேயல்லாமல் நான்மாத்திரம் தனியே யிறப்பேனோ? நம்முடைய மகாராசாகுறித்த தவணைநாள் கழிந்துபோய்விட்டதே. இன்னமும் எம்பெருமாட்டியாகிய சீதையைக் காணவில்லையாகையால், நாமெல்லாம் மாண்டுபோவோமென்று சொல்லித்துக்கித்த அங்கதன் சாம்பவந்தன் முதலாகிய வானரவீரர்கட்குத் தைரியஞ்சொல்லி இறக்கவேண்டியதில்லையென்று மகேந்திரமலையில் நிறுத்திவிட்டு நான் சம்பாதி சொன்னபிரகாரம் இலங்கையில் போய் விரைவாய்த் தேடிப்பார்த்து வருகிறேனென்று வந்தேனே. அப்படி வந்த நான் எண்ணியகாரியத்தை முடிக்கவில்லையே. ஆகையால் இறவாமலிருப்பேனோ? புண்ணியமென்று சொல்லப்பட்ட ஒருபொருளானது என்னிடத்தைவிட்டு நீங்கிப்போனதுபோல் தோன்றுகின்றது. எழுநூறுயோசனை விஸ்தீர்ணமாகிய இவ்விலங்காபுரியிலிருக்கின்ற சீவகோடிகளுக்குள்ளே நான் காணாதது வேறொன்றில்லை. சகல புவனகர்த்தாவாகிய இரகுநாயகனுடைய தேவியாரொருவர் மாத்திரமே பார்க்கக் கிடைக்கவில்லை. மகா சமுத்திரத்தைக்கடந்தும் இப்போது துக்கசமுத்திரத்திலே விழுந்தழிவேனோ? இத்தோஷியாகிய அரக்கனைப்பிடித்திழுத்து வாயின்வழியே குபீர்குபீரென்று உதிரங் கொப்புளிக்க, பர்வதத்தைத் தும்சஞ்செய்கின்ற என்கையாற் குத்திச் சீதையைக்காட்டடா வென்றுசொல்லி அவன் காண்பிக்க நான் கண்டுகொள்வேனோ? அல்லது அந்த இராவணனும் இவ்வூரும் அரக்கைப்போல உருகிக் கருகிப்போம்படி நெருப்பையிட்டுக் கொளுத்துவேனோ? அப்படி செய்யாமல் தேவர்கள் முதலானவர்களை அவன் சானகியாரை எவ்விடத்தில் சிறைவைத்திருக்கிறானென்று கேட்பேனேயானால் அவர்கள் அவனுக்குப்பயந்து வாய்விட்டுச் சொல்லமாட்டார்கள். அப்படியானால் மற்றவர்களெப்படிச்சொல்லுவார்கள். நானெவ்விதத்தில் அறிந்துகொள்ளுவேன். இன்னமும் பிராணனை விடத்துணியாமல் பூமிக்குச் சுமையாக இச்சரீரத்தைச் சுமந்துகொண்டிருக்கின்ற அறிவில்லாத நான் முன்பு, கழுகுகளுக்கு அரசனாகிய சம்பாதி அவ்விராமபிரான்பத்தினியாரை இராவணன்கொண்டுபோய் இலங்கையிலே சிறைவைக்கக் கண்டேனென்று சொன்னானே அவனுடைய சொல்லும் பொய்த்துப்போய் விட்டதன்றோ. இவ்விலங்காநகரத்தை எடுத்துக் கடலிலிட்டுக்

களைத்துவிடாமல் தேகத்தை வைத்துக்கொண்டு அனுமானின்னமும் உயிரோடிருக்கிறானென்று சொல்லும்படி உழல்வேனா? சுவர்க்கலோகத்தாரும் பூலோகத்தாரும் அறியும்படி அரக்கனாகிய படுபாவியானவன் சானகியாரை எடுத்துக்கொண்டு வந்துவிட்டானென்கின்ற நிந்தனையோ தப்பாது. ஆகையால் இப்பட்டணத்தை எடுத்துக் கடலிலே விட்டெறிந்து அவனையுங் கொன்று அதன்பின்பு நானிறக்கின்றதே உத்தமமாகுமென்று நினைத்து, மீண்டும் எள்ளிலும், அதிலும் சிறியதாகிய அணுவிலும், அணுவுக்கணுவிலும் நீங்காமல் எங்கும் வியாபகமாயிருப்பதுமன்றி, தம்முடைய இதயத்திலுமிருக்கின்ற பரப்பிரமமாகிய இரகுநாயகனைப்போல எங்கும்போய்ப்பார்த்து, அப்பால் ஒருபக்கத்திலே இனிதாகிய தேனையுண்டு வண்டுகள் ரீங்காரஞ்செய்கின்ற ஒரு திவ்வியமாகிய பூஞ்சோலையைக்கண்டனன்.

ஊர்தேடுபடலம்
முற்றிற்று.

---

## காட்சிப்படலம்.

கண்டு, இச்சோலையினிடத்தில் போய்த் தேடிப்பார்ப்பேனாகில் என்னுடைய துக்கம் நீங்கும். இதிலும் காணாமற்போனால் அப்புறம் நினைக்கவேண்டியது ஒன்றுமில்லை. உடனே இவ்விலங்கையையும் நாசமாக்கி நானும் சித்தமாய் மாண்டுபோவேனென்று நிச்சயித்துக்கொண்டு அனுமான் அச்சோலைக்குள்ளே போயருளினான். அப்பொழுது அவர்மேல் தேவர்கள்கூடிப் பூமழை பொழிந்து தோத்திரஞ்செய்து ஆனந்தப்பட்டார்கள். அவர்கள் சரித்திரம் அப்படியிருக்க, முன்பு இராவணன் எடுத்துவந்து அசோகவனத்திலே சிறைவைத்த சானகியார் எப்படியிருந்தாரென்றால், கடோரமாகிய அரக்கியர் அநேகர் தன்னை நெருக்க அந்தச்சோலையில் ஒருசஞ்சிவிமருந்து மலையினிடத்திலே முளைத்து ஒருநாளும் மழையென்பதைக்காணாமல் உலர்ந்திருப்பதுபோலச் சரீரமெலிந்து நித்திரைவந்ததென்று கண்களை மூடுதலும், இமைத்தலுமில்லாமல் வெயிலில் ஏற்றிய விளக்கைப்போலத் தேகத்தின்ஒளிமழுங்கி ஒருபெண்மான் புலிக்கூட்டத்தின் நடுவில் அகப்பட்டுக் கொண்டதுபோல விம்மிவெதும்பிப் பயந்து ஏங்கி இரங்கி இராமபிரானை நினைத்துத்தொழுது சோர்ந்து நடுங்கித் துக்கித்துப் பெருமூச்சுவிட்டு அழுதுகொண்டிருக்கிறதேயன்றி வேறொன்றுமறிகிலர். தங்கண் மழைக்கண்ணென்கின்ற காரணத்திற்கு ஒத்தபடி என்றும் இரண்டு விழிகளிலுமிருந்து மேகதாரையைப்போல ஒழுகாநின்ற பொன்னிறத்தையுடைய மலைகளில் ஒழுகுகின்ற அருவியைப்போல முலையின்வழியே ஆறாய்ப்பெருகி ஓடும்படி நீருண்ட மேகத்தைக்கண்டாலும் கருமையாகிய பொருள்களில் யாதொன்றைக்கண்டாலும் வேதநாயகனாகிய இராமபிரானுடைய திருவுருவத்தை நினைத்துக்கொண்டு புலம்பி உலகத்தில் அன்பினையுடைய நாயகன் நாயகிமாருள் ஒருவரையொருவர் பிரிவதனாலுண்டாகிய துன்பமே உருக்கொண்டதுபோல மிகுந்த பெருந்துயரத்தையடை

வார் செம்பவளம்போலச்சிவந்த திருக்கரத்தையும் திருவடிகளையும் நீலமேகத்திற்கு ஒப்பாகிய திருமேனியையுமுடைய இராமபிரானை நினைக்குந்தோறும் கண்கள்பொழிகின்ற நீரினால் சற்று நனைகின்றதும் தேகத்தின் வெப்பத்தினால் சற்று உலர்கின்றதுமாகிய உடையையுடையவராய்ப் பிரமதேவன் விதித்த விதியைக்கடந்து போவதோ வருத்தமென்று நினைப்பார். சூரியவமிசத்திற்கு உரிய பெருமையையும் அதற்குத் தம்மால்நேர்ந்த பழியையுமே நன்கு பகுத்தறிந்து நம்முடைய நாயகனாகிய இறைவர் வருவார் வருவாரென்கின்ற நிச்சயத்தினால் திசைகளையெல்லாம் ஊடுருவப்பார்ப்பார். பூமியினிடத்திலிருக்கின்ற ஒரு பூரணசந்திரனை முழுமையும் விழுங்கிக் கக்குகின்ற கரும்பாம்பே போலத் தம்முகத்தின் இருபக்கத்தையுந்தழுவி ஒன்றாகத்திரண்டு சடைபற்றிய கூந்தலோடிருந்து, தாம் முன்பு உடுத்த புகைபோல மெல்லிதாகிய ஒரு ஆடையையன்றி வேறொரு ஆடையைக் கண்ணினாலும் பார்க்கமாட்டார். திருப்பாற்கடலிலே தோன்றிய தேவாமிர்தத்தினால் மன்மதன்செய்த சித்திரப்பதுமை புகைசூழப்பட்டிருப்பதுபோல நீராடாமல் மாசுபடிந்திருக்கின்ற திருமேனியையுடையவராய் இளையபெருமாளானவர் மானின்பின்னேயேகிய சுவாமியைக் காணப்போனாரோ, அவர்கண்டாரோ காணவில்லையோவென்றும், கண்டாலும் இவ்விலங்கைசமுத்திரத்தின் மத்தியிலிருக்கின்றதையும் இராவணன்என்னை யெடுத்துக்கொண்டுவந்து விட்டதையும் இராமலட்சுமணர்கள் அறியார்கள்போலிருக்கின்றதென்றும் மனங்குழைந்து புண்ணாகி அப்புண்ணினிடத்தில அனல் நுழைந்ததுபோலப் புகையெழும்படி பெருமூச்செறிவார். என்னை இவ்வரக்கன் எடுத்துவரும்போதுபார்த்த சடாயுவும் இறந்துபோனார். மற்றவர்கள் என்பிராணநாயகருக்கு எப்படி என்னிலைமையை அறியப்படுத்துவார்கள். இச்சன்மத்திலே இரகுநாயகனுடைய திருமுகம் நான்காணக்கிடைக்கின்றதே அருமையாயிருக்கின்றதே யென்று எண்ணிப் பிரலாபிப்பார். உடனே சித்தங்கலங்குவார். மேன்மேலும் கிலேசிப்பார். தம்முடைய தம்பியாகிய இளையபெருமாளை மதியாமல் மகாபாவியாகிய நான் சொன்னவார்த்தையைக்கேள்விப்பட்டு, இவள் சிறிதாவது புத்தியில்லாதவளாயிருக்கின்றாளென்று மனம்வெறுத்து என் நாயகர் என்னை நீக்கிவிட்டாரோ? அல்லது பூர்வசன்மத்தில்செய்த கர்மத்தினாலேதான் இப்படிவந்துநேர்ந்ததோவென்று ஓயாமல் அடிக்கடி சொல்வதனால் வாய் புலர்ந்து அறிவுசோர்ந்து உயிர் பதைப்பாள். இறைவன் நீராடி நித்தியகருமங்களைமுடித்துக்கொண்டு அமுதுசெய்யும்போது, அவருக்குக் காய்கனி கிழங்குமுதலானவற்றை ஆர்பரிமாறுவாரோ வென்றும், அவரிருக்குமிடத்தில் யாரேனும் விருந்துவந்தபோது தம்மடியாளாகிய என்னை நினைப்பாரோ வென்றும் அங்ஙனே சோகிப்பார்; தாமிருந்த இடத்தில் தம்மைச் செல்லரித்தபோதும் அவ்விடத்தைவிட்டு எழுந்திராதாராய், நான் அடைந்த மனோவியாதிக்கு ஒருமருந்தும் உண்டோவென்று சொல்லித்திகைப்பார். கொடிய வஞ்சனையையுடைய அரக்கர்கள் இத்தனைநாள்வரைக்கும் சீதையைச் சும்மாவைக்கமாட்டார்கள்; தின்றுவிடுவார்களாகையால், நாம் செயத்தக்கது இனிமொன்றுமில்லையென்று தேடாமல் விட்டு

விட்டனரோ? தம்முடைய வமிசத்தாருக்கு இயற்கையாயிருக்கின்ற சாது குணத்தையெல்லாம் தம்முடையதாக மேற்கொண்டு, இந்த இராவண னுடனே எதிர்த்து யுத்தஞ்செய்வது என்னவதிசயமென்று கோபத்தைத் தணித்துக்கொண் டிருக்கின்றாரோ! நான் ஏதென்று நினைப்பேனென்று, இரவென்பதும் பகலென்பதுமில்லாமல் என்றும் இவ்வண்ணமாகக் கவலைப் படுவார். பெற்ற தாய்மார்களும் தம்பிமார்களும் மீண்டும்வந்து, சுவாமியை அயோத்திக்கு அழைத்துக்கொண்டு போய்விட்டார்களோ? அவர்கள் அழை த்தபோதும் சிற்றன்னை குறித்துச்சொன்ன பதினான்குவருடகாலமும், அர ணிய வாசஞ்செய்து போவாரேயல்லாமல் அதற்குமுன் போகமாட்டாரே, பின்னையென்ன சம்பவித்ததோவென்று ஒருவரும் படாதநோய்படுவார். பஞ்சவடியில் யுத்தஞ்செய்த கரன் முதலானவர்களைப்போல, இப்போதும் அரக்கர்கள் யுத்தஞ்செய்யும்படி நேர்ந்ததோவென்றுவிம்மி, அக்கரன்முத லானவர்கள் சக்கரவர்த்தித் திருமகனுடனே எதிர்த்து இறந்ததைக்குறித்து முன்பு விசனப்பட்டதுபோல, இப்பொழுது இறைவனுடனே எதிர்த்த அரக் கர்களுடனும் அப்படியே இறப்பார்களே என்று லோகமாதாவாகிய தாம்மிக வருத்தப்படுவார். கைகேசியார் இராமபிரானை நோக்கி இராச்சியமோ பரத னுக்கு உரியதாய்விட்டது. இனியுனக்கு யாதொரு சம்பந்தமுமில்லையென்று சொன்னபொழுது, எள்ளளவாவது வாடாமல் முன்னிலும் மூன்றுபங்கு விசேடமாய்ப் பிரகாசித்த முகாரவிந்தத்தையுடைய இறைவன் சாந்த குணத்தையே தியானஞ்செய்வார். இராச்சிய சாம்பிராச்சியத்தை நீ பெற் றுக்கொள்ளென்று தசரதமகாராசா சொன்னபொழுதும், இச்சம்பத்தையெல் லாம்விட்டு நீ வனத்திற்குப்போவென்று சிறியதாயார் சொன்னபொழுதும், சித்திரத்திலெழுதிய மலர்ந்த செந்தாமரைப் புட்பத்திற்கு ஒப்பாயிருந்த லோகநாதனுடைய திருமுகப்பொலிவை மனத்திலே நினைப்பார். கங்கை யையணிந்த சடாமகுடத்தையுடைய சிவனுடையவில்லை மிதிலையில் ஒருகண மாத்திரத்தில், இரண்டுதுண்டாய் இற்றுவிழும்படிசெய்த புயபராக்கிரமத்தை எண்ணிமெலிவார். கரதூடணதிரிசிரர்களுடனே பதினாலாயிரம் அரக்கப்படை யை மூன்றுநாழிகைக்குள்ளே இறக்கும்படிசெய்த வீரகோதண்டத்தின் பிர தாபத்தைக்குறித்துத்தோத்திரஞ்செய்து சரீரம்வெதும்புவார். கங்காநதியிலே ஓடம்விட்ட எளியவனாகிய குகனென்னும் வேடனைப்பார்த்து, என்தம்பி உன்தம்பி, எனக்கு நீ தோழன், உனக்கு இந்தச்சீதை மைத்துனியென்று இறைவன்சொல்லிய அங்கியோங்கியமாகிய சிநேகச்செய்கையை நினைத்து மதி மயங்குவார். கலியாணம் நடந்தசமயத்தில் தன்பிதாவாகிய சனகமகாராசா கைகளைநீட்டிப் பாதபூசைசெய்ய எத்தனப்பட்டபோது, அதைநீக்கித் தர்ப் பையை மேடைமேல்வைத்துப் பூசிக்கச்செய்த வைதிக நியமத்தை உன்னு வார். பரதன் மணிமுடிதரியாமல் சடைமுடிதரித்துக்கொண்டு வந்ததைக் குறித்துச் சித்திரகூடபர்வதத்தில் இரகுநாயகன் அங்கலாய்த்ததை நினைத்து இரக்கப்படுவார். சகல சம்பத்தையுந்துறந்து வனத்திற்குவருகின்றகாலத்தில் ஒருவைதிக பிராமணன்வந்து கோதானம்கேட்க அவனுக்கு அநேகம் பசுக்

களைத்தானஞ்செய்தும், திர்ப்தியடையாத அவனுடைய பேராசையைக்கண்டு
சுவாமி சிரித்ததை நினைத்தழுவார். அரசர்களை இருபத்தொருதலைமுறைவ
ரைக்கும் கருவறுத்து அவர்களுடைய உதிரநீரிலே ஸ்நானஞ்செய்து, அதைக்
கையினால் அள்ளிப் பிதிர்தருப்பணஞ்செய்த மழுவாயுதத்தையுடைய பரசுரா
மன் கொடுத்தவில்லை வாங்கிவளைத்து, அதன் வழியாக அவருடைய தவத்
தையும் பலத்தையும் கிரகித்துக்கொண்ட மிக்கவீரத்தை எண்ணி உயிர்வாடு
வார். இந்திரகுமாரன் காக்கைவடிவங்கொண்டுவந்து அபசாரப்பட அக்காகா
சுரன்மேல் ஓரோபாணத்தைப் பிரயோகித்து அது அவனுடைய ஒருகண்ணைப்
போக்கடித்த நாள்முதல் உலகத்திலுள்ள மற்றகாக்கைக் கூட்டங்களுக்கெல்
லாம் ஒருகண்ணில்லாமற் போம்படிசெய்த பிரதாபத்தை விசேடமாய் நினைப்
பார் விராதனென்னும் அரக்கன் தன்னையெடுத்துக்கொண்டபோது அவனைச்
சங்கரித்து அவனுடைய அழிக்கப்படாத சாபத்தையும் ஒழித்த அத்தசரத
குமாரனை நினைத்து நினைத்துத் தன்னுயிர்சோர்ந்து அறிவழிந்து சரீரம்நடுங்கு
வார். இப்படி துபரப்பட்டுக்கொண்டிருக்கின்ற அப்பிராட்டியாருடைய பக்கத்
தில் சமீபமாயிருக்கின்ற விபீடணருடைய குமாரத்தியும் திரிசடையென்
னும் பெயரினையுடையவளும் பிராட்டியார்விடயத்தில் மிகுந்த அன்புள்ள
வளும் மேலுந்திருந்திய இனியவார்த்தையை யுடையவளுமாகிய அவள் அந்நே
ரம் நித்திரைசெய்தாள். மற்றகொடிய செய்கையுடைய அரக்கியரும் கள்ளு
ண்டமயக்கத்தினாலே அவ்வர்த்தராத்திரியிலே உறங்கினார்கள். அப்பொழுது
சானகியானவர் சாட்சாது தாயைப்பார்க்கிலும் அதிக வாற்சல்யத்தையுடைய
அத்திரிசடையென்பவளை எழுப்பி அவளைப்பார்த்து அம்மா எனக்கு மாசில்
லாத குணத்தையுடைய சகோதரியைப் போலுமிருக்கின்ற திரிசடையே!
ஒன்றுகேளென்று சொல்லத்தொடங்கினார். இன்றைத்தினம் எனக்கு நன்மை
யே விளையுமோ? அல்லது நான்செய்த பாவத்தினாலே இன்னமுந் தீமையே
விளையுமோ? என்னவோ? ஒன்றுந்தெரியவில்லை. புருவமுங்கண்ணும் வலது
பக்கந் துடித்துக்கொண்டிருந்ததுபோய் இப்போது இடதுபக்கந் துடிக்கின்
றன. விசுவாமித்திரர் பின்னே சுவாமி மிதிலைக்குவந்தபோது இப்படிதான்
இடக்கண்ணும் புருவமுந்துடித்தன. இன்னமொன்று சொல்லமறந்தேன்,
கேளம்மா என்பிராணநாயகர் அரசைத் தம்பிக்குக் கொடுத்துவிட்டு அரணி
யத்திற்குப் புறப்படுகிறபொழுது வலதுபக்கந் துடித்தது; இப்பாவி என்னை
யெடுக்கவந்த நாளிலும் அப்படியே வலந்துடித்தது; இப்பொழுது உண்டாகி
யதைப்பார்த்தால் நன்மைபோலவே காண்கின்றது; இதுவனாயிலும் என்னைப்
பயப்படாதையென்று சொல்லிக்கொண்டு வந்தையே, இந்தச்சகுனம் எதாய்
முடியுமோ சொல்லென்று சானகியார்வருந்திக்கேட்க திரிசடை அம்மா! இம்
மங்கலக்குறி நன்றாயிருக்கின்றது,நன்றாயிருக்கின்றதென்று அன்புடனே சொ
ல்லிப் பின்னுஞ்சொல்லுகின்றாள். என்தாயாகிய சானகியாரே! நீர் எப்படியும்
உம்முடைய நாயகரைச்சேருவீர்; இதற்கு ஐயமேயில்லை; அல்லாமலும் உமது
திருமேனி பசந்து புளகிக்கவும் திருவுள்ளங்குளிரவும் திருச்செவியில் இப்பொ
ழுது தேனுண்டுகளித்து ஒருபொன்வண்டுவந்து மிருதுவாய் ரீங்காரஞ்செய்து

போயிற்று, அதையாராய்ந்து பார்த்தால் உம்முடைய பிராணபதமாயிருக்கின்ற நாயகராகிய இரகுநாயகன் அனுப்புவித்த ஒருதூதனை உமக்கெதிரே வரக் காண்பீர், மேலும் பாதகர்களாகிய இவ்வரக்கர்களுக்கு ஆபத்துவருவது சத்தியம், இன்னமும் என்வாய் மொழியைக்கேளுமென்று திரிசடை சொல்லுகின்றாள். நீர் நித்திரை செய்யாததினாற் கனவுகாணவில்லை. நான்கண்டகனவைச் சொல்லுகிறேன். கேளும் என்கனா அவசியந் தவறாமற் பலிதமாகும், எங்கள் பெரிய தகப்பனாகிய இராவணன் பத்துத்தலைகளிலேயும் எண்ணெயிட்டுக் கொண்டு கழுதைகளையும் பேய்களையுங் கட்டிய தேரின்மேலேறிச் சிவந்த ஆடையைத்தரித்துக்கொண்டு தென்முகமாய்ப்போனான். கூட அவன் பிள்ளைகளும் பந்துசனங்களும் மற்றும் சகலமானவர்களும் அத்தெற்குத்திசையை நோக்கிப்போயினர். அவர்களெல்லாம் திரும்பிவரவில்லை. அதுவுமல்லாமல், இராவணனுடைய ஓமாக்கினியும் அணைந்துபோய்விட்டது. வானத்திலிருந்து வெள்ளிடியிடித்து விழுந்தது. மாளிகைகள் அங்கங்கேவெடித்தன, மதயானை மதம்வற்றிப்போய்ப் பெண்யானைகளுக்கு மதமுண்டாயிற்று. பேரிகைகளெல்லாம் முழக்குகிறவர்களில்லாமல் இடிபோலத் தாமேமுழங்கின, நட்சத்திரங்களுதிர்ந்தன, பகலென்பதில்லாமல் இரவிலேயே நிலைபெற்றிருந்தது. அரக்கர்கள் மார்பில்தரித்திருக்கின்ற கற்பகப்பூமாலைகளெல்லாம் தீந்துபுலால் நாற்றம் வீசிக்கொண்டிருந்தன. இவ்விலங்கையும் இதைச்சூழ்ந்த மதிலுஞ்சுழன்றன; திக்குகளெல்லாம் நெருப்புப் பற்றிக்கொண்டெரிந்தன. சிங்காரத்தோட்டங்களும் பூஞ்சோலைகளும்கரிந்தன, பட்டணமுழுதும் வெறுவெளியாய்விட்டது. மங்கல கலசங்களெல்லாம்விரிந்து சிதறின, விளக்குகளையெல்லாம் இருள்விழுங்கியது தோரணகம்பங்கள் இரண்டு துண்டாகமுறிந்தன; பட்டத்துயானையின் கொம்பு முறிந்தன, வேதமந்திரங்களைச்சொல்லி முற்றத்துறந்தமுனிவர்களால் தாபிக்கப்பட்ட பூரணகும்பங்களி லிருக்கின்ற தீர்த்தம் கள்ளுப்பொங்குவது போலப் பொங்கியது; சந்திரனைப் பிளந்துகொண்டு நட்சத்திரம் புறப்பட்டது, மேகம் உதிரமழைபொழிந்தது. தண்டு சூலம் வாள் வில்முதலாகிய ஆயுதங்கள் வீரர்கள் கையிலெடுத்து யுத்தஞ்செய்யாமல் தமக்குத்தாமே ஒன்றுக்கொன்று போர்செய்தன. இப்பட்டணத்து மாதர்களுடைய தாலிகள் ஒருவரால் வாங்கப்படாமல் தாமே அற்று அவரவர்கள் முலைகளின்மேல் விழுந்தன; இன்னமொரு அதிசயஞ் சொல்லுகிறேன் கேளும், இப்பட்டணத்து அரசன் பெண்சாதியும் மயன்மகளுமாகிய மண்டோதரியின் கூந்தல் பின்புறத்தில் அவிழ்ந்து விழுந்தது, அதன்மேல் அக்கினிபட்டுவெந்தது, இது அவளுக்குத் துயரம்வந்து நேருமென்பதற்கு ஏதுவல்லவா? மற்றும்நான்கண்ட விபரீதகனாக்களை என்ன சொல்வேன்! மிக்கபலமுள்ள இரண்டு சிங்கம் அநேகம் புலிக்கூட்டங்களைக் கண்டு அவைகளுடனே கூடிக்கொண்டுவந்து அளவிறந்த யானைகளிருக்கின்ற ஆரணியத்தில் புகுந்து முழுதும் வளைந்துகொண்டு நெருக்கிப் போர்செய்து சின்னபின்னங்களாகக்கொன்று அவ்யானைப்பிணங்களை மலைமலையாகக்குவித்துத் திரும்பிப்போகும்பொழுது ஒருமயிலையுங் கூட்டிக்கொண்டு போயின; உம்மைப்போலவே ஒருமாது சுவர்ணத்தாம்பாளத்திலே ஆயிரந் திருவிளக்

கினையுடைய ஒருதேர்விளக்கை யேற்றிவைத்து அதையேர்திக்கொண்டு இரா வணன் வீட்டிலிருந்து புறப்பட்டு என்பிதாவாகிய விபீடணன் வீட்டிலேவந்து புகுந்தாள் இவ்வகையாக நான் சொப்பனங்கண்டு கொண்டேயிருக்கும்போது தான் என்னை நீரெழுப்பினீர். மேலும் என்னென்ன காணுமோ முடியக்காண வில்லையென்று சொன்னாள். அதுகேட்டுச் சானகியார் திரிசடைக்குக் கை கூப்பி வந்தனஞ்செய்து அம்மா! அச்சொப்பனத்தின் குறியை இன்னமும் அறியவேண்டும், நீ சீக்கிரமாய் நித்திரைசெய்யென்று சொன்னார். அப்படியிரு க்கின்ற சமயத்தில் இராமதூதனாகிய அனுமான் அச்சோலையில் பிராட்டியார் எழுந்தருளியிருக்கிறதைக் கண்டார். அத்தருணத்தில் முன்பு உறங்கிக்கிடந்த அரக்கியர்களெல்லாம் விழித்துக்கொண்டு கெட்டநித்திரைவந்து நம்மைக்கெடு த்ததென்று எவ்விடங்களிலுமிருந்து எழுந்து அதட்டி வேல் மழு எழு சூல முதலாகிய ஆயுதங்களைக் கையிலெடுத்துக்கொண்டு புறப்பட்டார்கள்; அவர் கள் எப்படிப்பட்டவர்களென்றால் வயிற்றிலே வாயிருக்கின்றவர்களும் நெற்றி யில் கண்ணிருக்கின்றவர்களும் கடோர திருட்டியுடையவர்களும் பல்லுக்குப் பல்நடுவே யாளிகள் யானைகள் பேய்கள் முதலானவைகளும் உறங்கும்படி மலைக்குகைக்கு ஒப்பாகிய வாயுண்டானவர்களும் பத்துக்கையும் ஒருதலையு முடையவர்களும் இருபதுதலையும் இரண்டுகையு முடையவர்களும் மிக்கபயங் கரமாகிய உருவத்தையுடையவர்களும் விகடமாகிய வேடத்தையுடையவர் களும் உடம்பெல்லாம் பர்வதங்கள்போலப் பருத்த பலபலமுலைகள் தொங்கு கின்றவர்களும் ஒற்றைமுலையை யுடையவர்களும் சூலம் வாள் சக்கரம் அங்கு சம் தோமரம் கப்பணம் வேல்முதலாகிய ஆயுதங்களைக் கையில்தரித்துக் கொண்டிருக்கின்றவர்களும் காளகூடவிடமே வடிவுகொண்டதுபோலக் கறுத் திருக்கின்றவர்களும் எமனும் பிரமிக்கத்தக்க பராக்கிரமமுள்ளவர்களும் யானை முகம் குதிரைமுகம் புலிமுகம் கரடிமுகம் யாளிமுகம் பேய்முகம் சிங்கமுகம் நரிமுகம நாய்முகங்க ளுண்டானவர்களும் முதுகிலே முகமிருக்கின்றவர்களும் மூன்று கண்ணுள்ளவர்களும் வாயிலே புகையெழும்புகின்றவர்களும் எண்ணு க்கடங்காத கூட்டமானவர்களும் கண்ணுக்கடங்காத தோற்றத்தையுடைய வர்களும் காலன் பலவுருவங்கொண்டு பெண்ணென்று பெயர்வைத்துக்கொ ண்டு திரிவதுபோ லிருக்கின்றவர்களுமாகிய அவ்வரக்கமாதர்களெல்லாம் எழு ந்து இராமபிரானுடைய திருத்தேவியாரைச் சுற்றிக்கொண்டார்கள்; அப் போது அச் சானகியானவர் ஒன்றும்பேசாமல் அவர்கள் முகத்தைப்பார்த் துப் பயந்தவராயிருக்க சிராமதூதனாகிய திருவடி ஒரு விருட்சத்தின்மேலேறி அதன்கிளையில் மறைவாயிருந்து பார்க்கத் தலைப்பட்டார் அரக்கியர்கள் கையி லே ஆயுதம்பிடித்தவர்களாய் நித்திரை நீங்கிப் பலபேர் கூடியிருக்கின்றார்கள். இவர்களிப்படி கூடியிருப்பதற்கு ஏதுவென்னவென்று உற்றுப்பார்த்துக் கறு த்த மேகக்கூட்டத்தின்மத்தியிற் பிரகாசிக்கின்ற மின்னற்கொடிபோலக் கரிய நிறத்தையுடைய அவ்வரக்கர்களின் நடுவில் உலகமுதல்வராகிய இரகுநாயக னுடைய தேவியாரைக்கண்டு அரக்கிமார்கள் சுற்றிலுங் காவலாயிருக்க அவர் களுக்கு மத்தியில் இருக்கின்றவர்தாம்சீதாபிராட்டியார் போலக்காண்கின்றது.

இவரோ தடாகத்தின் நடுவில் இருக்கின்ற அன்னப்பேடுபோலத் தமது கண்ணினின்றும் ஒழுகுகின்ற சலப்பிரவாகத்தின் மத்தியிலிருக்கின்றார். இத்தேவியாரைத் தேடிவந்தநான் இப்பொழுதுதான் கண்டேன், ஆகையால் தர்மம் போய்த்துப்போய் விட்டதென்று நினைத்தேனே, அது அப்படியாகவில்லை. நானும் இனி இறக்கமாட்டேனென்று சொல்லி ஆனந்தமாகிய தேனையுண்டு உடல்பரவசமாய்த் தெரியாமல் இராமநாம சங்கீர்த்தனம் பாடிக்கொண்டு கூத்தாடினார். அங்கும் இங்குமாய் ஓடினார். எங்கும் உலாவினார் இகழப்படாத இவருடைய திவ்வியரூப சவுந்தரியலக்ஷணங்கள் எங்கள் ஐயனாகிய இராமசந்திரன்சொன்ன அடையாளத்திற்குச்சிறிதாவது வித்தியாசப்பட்டிருக்கவில்லை. கள்ளச்செய்கையையுடைய இராவணனானவன் இராகவனுடைய பிராணனாகிய இவரை யொளித்துவைத்தது எதற்காகவென்றால் திரிலோகத்தாருக்கும் மகத்தாகிய அக்கிரமத்தைச்செய்கின்ற பாவியாகிய அவன் தன்னுயிரை யிழப்பதற்கே இதற்குமையமொன்றுமில்லை; அச்சிராமபிரான் ஸ்ரீவிஷ்ணுவே இந்தச் சீதாபிராட்டியார் தாமரைப் புஷ்பாசனத்தில் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீமகாலட்சுமியே அழுக்கடைந்திருக்கின்ற இரத்தினத்தைப்போலவும் சூரியனுக்கு எதிரே உதயமாகிய சந்திரனைப்போலவும் தேசுடாழியிருக்கின்ற இவருடைய கற்புக்கும் மனவுறுதிக்கும் பின்னமுண்டாகவில்லை;எங்கேயாவது தர்மத்திற்கு அழிவுண்டா சிராமசந்திரனுடைய திருத்தோள்களைத்தான் சொல்வேனா! பதிவிரதாஸ்திரீகளுக்கு முகதிலகமாகிய இந்த உத்தமியினுடைய குணாதிசயத்தையே சொல்வேனா! அந்தச் சனகமகாராசனுடைய வமிசத்தின் பெருமையைத்தான் சொல்வேனா! நான் எதைத்தான் சொல்வேனென்று மிகவும் புகழ்ந்து சந்தோடித்துத்தேவர்களும் பிழைசெய்யவில்லைமுற்றத்துறந்தமுனிவரர்களும்பிழைசெய்யவில்லை, தருமத்திற்குங்குறைவில்லை,இனிநான்செய்கிறதற்கு அருமையாகியகாரியம்என்னஇருக்கின்றது?எம்பிரானாகிய இராமபிரானுக்குச் செய்கிறஎன்னடிமைத்தொழிலும்சிறிதும் பிழைபடவில்லை இந்த லோகநாயகியாருடைய கற்பானது சிறிதுசிதையுமானால் சுவாமிக்குக் கோபம்தோன்றும்; அதனால் சதுர்த்தசபுவனங்களுக்கும் நாசம்வருமென்று நினைத்தேனே அப்படிக் கற்புச்சிதையாமையால் இனி ஒரு சஞ்சலமுமில்லாமலும் உலகங்களெல்லாம் பல்லூழிகாலம்வாழ்ந்திருக்கும் நல்லகுடியிற்பிறந்து இல்லறத்திற்கு உரிய நற்குண நற்செய்கைகளையுடைய பதிவிரதாஸ்திரீகள் தங்கள்மனத்தைப் பலவிடங்களிலும் செல்லவொட்டாமல் நிறுத்துகின்ற தபோமகிமைக்கு முன் பஞ்சாக்கினி மத்தியிலிருந்து பஞ்சேந்திரிய நிக்கிரகஞ்செய்து அன்னபானாதிகளை நீக்கி அகோரதபஞ்செய்கின்றவர்களுடையதபோமகிமைதான் எவ்வளவு? இப்பாக்கியவதி பூமியில்தோன்றினதால் குடிப்பிறப்பும் அதனையுடைய பெண்பிறப்பும் அதற்குரிய நாணமுதலானவைகளும் தவஞ்செய்து சிறப்பினை அடைந்தன. இவ்விடத்தில் இவர் இப்படிப்பட்டமகத்தாகிய அருந்தவசு செய்துகொண்டிருக்கின்ற அதிசயங்களையெல்லாம் ஸ்ரீரகுகுலோத்தமர் தம்முடையதிருக்கண்களால் காண்கிறதற்குத்தவஞ்செய்யாமற்போனாரோ! இங்குள்ள அரக்கியர்களெல்லாம் கிரமந்தப்பிக்கோபிக்கின்றவர்களாயிருக்கின்றார்கள். நல்லவேளை

இந்தப்பிராட்டியா ரொருவரேயல்லாமல் வேறொருவரில்லை; உலககாரணியாகிய சானகியாரைத் தர்மமே காத்ததோ? அல்லது தசமுகனுடைய தீவினையே காத்ததோ? அல்லது இந்தச் சீதாபிராட்டியாருடைய மேன்மையாகிய கற்பே காத்ததோ? அம்மம்மா? இது அருமை அருமை! எவர்தான் இதைச் சகிப்பார்கள், ஒருவகையிலாவது என்னைப்போ லொத்தவர்களாற் சொல்லத் தக்கதாவென்று இப்படியெல்லாம் நினைத்து நினைத்து அதிக சந்தோடசித்தராகி ஆஞ்சநேயர் அம்மாக்கிளையிலே தானே தங்கிப்பார்த்துக் கொண்டிருந்தார்; அந்தச்சமயத்திலே இராவணன் அச்சோலைக்கு வரும்படிப் புறப்பட்டான்.

காட்சிப்படலம்
முற்றிற்று.

## நிந்தனைப்படலம்.

சிகரங்களையுடைய மலைகளெல்லாம் ஓரிடத்திற் சேர்ந்திருப்பதுபோல, வச்சிரத்தாற் செய்யப்பட்ட மகரகுண்டலங்க ளசைந்துகொண்டிருக்கின்ற இருபது தோள்களும் இருபக்கத்திலும் பிரகாசிக்கவும், மாணிக்கமயமாகிய மகுடகாந்தியானது அவ்விராத்திரியைப் பகலாகவும், ஊர்வசி உடைவாளேந்திக்கொண்டுவரவும், மேனகை தாம்பூலமடித்துக்கொண்டுவரவும், திலோத்தமை பாதரட்சை தாங்கிக்கொண்டுவரவும், அரம்பை காளாஞ்சியேந்திவரவும், மற்றும் எட்டுக்கோடி மாதர்கள் கைகளில் நெய்விளக்கு எடுத்துவரவும், யட்சரமாதர்கள் தேவமாதர்கள் விஞ்சையமாதர்கள் பன்னகமாதர்கள், பெரியமலையைச் சூழ்ந்துவருகின்ற மயிற்கூட்டங்கள்போலப் புடைசூழ்ந்துவரவும், பச்சைக்கர்ப்பூரம் கத்தூரி முதலாகிய வாசனைத்திரவியங்கள் சேர்க்கப்பட்ட கலவைச்சந்தனம் கமகமவென்று பரிமளிக்கவும், தேகத்திலணிந்திருக்கின்ற பலவகை இரத்தினாபரணங்களின் சோதியானது இருளைவிழுங்கிப் பிரகாசிக்கவும், கால்களில்தரித்த சிலம்புகள் முழங்கிக்கிண்கிணிகள் ஒலிக்க மேகலாபரணம் சப்திக்க அநேகமாதர்கள் அன்னக்கூட்டங்கள் நடப்பதுபோலநடந்து; மிருதுவாகிய பலவகைமொழிகளைவசனித்துக்கொண்டுவரவும், நீலமலையில் ஒழுகாநின்ற வெண்மையாகிய அருவியாறுபோலத் தனது மார்பினிருபுறத்திலும் வெள்ளைப்பட்டு உத்தரீயம் தொங்கவும், சர்வேசுவரனாகிய ஸ்ரீமந் நாராயணனுடைய திருமார்பைப்போல அம்மார்பினிடத்தில் பொன்னாரம் பிரகாசிக்கவும், மேகத்தின் மத்தியில்தோன்றிய மின்னலைப்போல முப்புரிநூல் விளங்கவும், இருபது தோள்களிலும் அணிந்த வாகுவலயங்களும், கேயூரங்களும், இராக்காலத்தில் ஆகாயத்தில் உதயமாகிய நட்சத்திரங்கள் நவக்கிரகங்களைப்போல மின்னவும், கால்களில் அணிந்திருக்கின்றவீரகண்டைகளின் ஓசையானது பூமிமுழுதும் பரவவும், வக்கிரதந்தங்கள் அர்த்தசந்திரனைப்போல இளநிலாவெறிக்கின்ற முகங்கள் இருளைப்பார்க்கிலும் கருமையாய்ப் பிரகாசிக்கவும், இரத்தின கசிதமாகிய வீரசங்கிலியும் முத்தாரமும்

யுகாந்தகாலத்திலே மகாமேருவில் தொத்திக்கொண்டிருக்கின்ற பல நட்சத்திரங்களும்போல மார்பில் அணிந்த சுவர்ன கவசத்தின்மேல் பிரகாசிக்கவும், சிரமில்தாங்கிய பத்துக்கிரீடங்களும் உதயகிரியின் சிகரங்களில் பன்னிரண்டு சூரியர்களில் இருவரைநீக்கிப் பத்துச்சூரியர்கள்உதயமானதுபோலச் சொலிக்கவும் பெண்கள் பாடுகின்ற பாட்டினுக்கு ஒத்திருக்க புள்ளாங்குழல் கில்லரி தாளம் மிருதங்கம் முதலாகிய பலவகை வாத்தியங்களும், விடத்தைக்கக்குகின்ற நாகங்களும் அமிர்தத்தைக் கக்கும்படி ஆகாசம் பூமியெங்கும் அளாவி முழங்கவும், தேவரம்பைகள் மேகம் வரக்கண்டு நடனம்செய்கின்ற மயில்களைப்போல எதிரே நாட்டியஞ்செய்துகொண்டு வரவும், புட்பத்தால் அலங்கரிக்கப்பட்ட விதானமும், சாமரைகளும், தவளக்குடைகளும், ஆலவட்டங்களும், துசங்களும், மகரதோரணங்களும், மயிற்றேம்பைகளும், மாதர்கள் தாங்கிக்கொண்டு கூட நடந்துவரவும், அந்தக்காலத்தில் மன்மதன்பிரயோகித்த அக்கினிசொலிக்கின்ற பாணங்கள்தொளைத்த வெவ்விதாகிய புண்ணில் வேலானது நுழைந்ததுபோலச் சந்திரகிரணங்கள் பாயவும், இளந்தென்றற் காற்றானது புட்பங்கள்தோறும்போய் வாரிக்கொண்டுவந்து சிந்துகின்ற தேன் துளிகள் உருக்கிய செம்புபோலத்தெறிக்கவும், மாதர்களுடைய கடைக்கண் பார்வைகள் மார்பினிடத்திலும் தோளினிடத்திலும்வந்து பதியவும், பூமாலைகளையும் கந்தத்தையும் கூட்டுவர்க்கத்தையும் பூஷணங்களையும் விலையுயர்ந்த மிருதுவாகிய ஆடைகளையும், இரத்தினங்களையும் மற்றும்வேண்டிய எல்லாப் பொருள்களையும் கற்பகவிருட்சமும் சங்கநிதி பத்மநிதிகளும் பின்தொடர்ந்து கொடுத்துக்கொண்டு வரவும, பாற்கடலின் வெண்மையாகிய அலைகள்கறுத்த பர்வதத்தின்மேல் தாவிவெண்சாமரை இரட்டவும், கருங்கடலில் இருந்து உதித்து உயர எழுந்த களங்கமில்லாத பூரண சந்திரனைப்போலத் தவள பூச்சக்கரக்குடையானது முடியின்மேல பிரகாசிக்கவும், நடக்க அடிபெயர்த்து வைக்குந்தோறும் அவ்விலங்கையாகிய பர்வதமானது கீழழுந்திச் சமுத்திரத்தின் அலைகள் அதன்மேலாக நான்கு திக்கிலும் எழும்பித்தவழவும், பூமியைத் தாங்குகின்ற ஆதிசேடனும் தலைமாறுத்தாங்கவும், பூமிதேவி முதுகு நெளிக்கவும், கேடகம் மழு எழு சூலம் அங்குசம் கப்பணம் வாள் வேல் வில் வச்சிர முதலாகியஎல்லாவாயுதத்தையும் தாடகையைப்பார்க்கிலும் இரண்டுபங்குமிக் கபலத்தையும் கோரத்தையுமுடைய அரக்கமாதர்கள் தாங்கிக்கொண்டு வருவதையும், தளிர் இலை அரும்பு மலர் காய் பழம் கிளை கொம்பு வேர் முதலானவைகளும், இரத்தினங்களினாலும் பொன்னினாலும் சமைந்திருக்கின்ற விருட்சங்களையுடைய அந்தச்சோலையானது, திக்குகள்தோறும்கரிந்துதீயும்படி தன் சுவாசமானது அக்கினியைக் கக்கிக்கொண்டு எழுந்து முன்னேபாயவும், சானகிப்பிராட்டியார் எழுந்தருளியிருக்கின்ற திசையைத் தான் அறிந்திருந்தும் மனம் திகைத்துத் திசைதெரியாமல், பலதலைகளையுடைய பாம்பைப்போலப் பலவிடங்களிலும் உழன்று திரிந்துகொண்டு அசோகமரத்தின்கிளையில் தொத்திக்கொண்டிருக்கின்ற அஞ்சனை குமாரனாகிய அநுமான் செவ்வையாகப்பார்த்து, குணமும் செயலும் இனிமேல் விளையும் விளைவும் இவ்விடத்தில்

தெரியவருமென்று எண்ணி, ஸ்ரீராமசந்திரனுடைய திருநாமத்தைச்சொல்லி க்கொண்டு மறைவாயிருந்தனன். முன்பு அவ்வாறாகவந்த இராவணன் அந்தச் சோலையில்வந்து தன்னுடனே கூடவந்த அரமகளிர்களையும் மற்றுமுள்ள பல வகைமாதர்களையும், வெளியிலேபோய் இருக்கச்சொல்லி ஆக்கினைசெய்து தானொருவனுமாய், தனியேயிருக்கின்ற பெண்விளக்காகிய அந்த லோகமாதா வின் சமீபத்தில்வந்தான். அப்போது பிராட்டியார் அவனைக்கண்டு உயிர் நீங்கினவர்போல நடுநடுங்கி, விழுங்கும்படிவந்த புகைகின்ற கண்களையுடைய பெரும்புலியைக்கண்ட இளமையாகிய பெண்மான்போலப்பயந்து திடுக்கிட்டுக் கரைந்தார். இவ்வண்ணமாக மனங்கூசி உயிர்நிலை கலங்கிய பிராட்டியாரை யும் அவர்மேற்கொண்ட ஆசையினால் பிராணசங்கடப்படுகின்ற மகாபாதக னாகிய இராவணனையும், திருவடி தம்முடைய இரண்டுகண்களும் சான்றாகப் பார்த்து, மனம் ஊசலாடிக்கொண்டிருந்த கிலேசம்நீங்கி மங்களாசாசனஞ் செய்வாராயினார்.

கலிவிருத்தம்.

வாழி சானகி வாழியி ராகவன்
வாழி நான்மறை வாழிய ரந்தணர்
வாழி நல்லற மென்றுற வாழ்த்தினான்
ஊழி தோறும் புதிதுறுஞ் சீர்த்தியான்.

சனகமகாராசாவின் புத்திரியாராகிய இச்சீதாபிராட்டியார் வாழக்கட வர். இவருடைய நாயகராகியும் இரகுகுலதிலகராகியும் விளங்காநின்ற அவ் விராமபிரானும் வாழக்கடவர். அவருடைய நாமரூபகுணங்களைச் சொல்லு கின்ற சதுர்வேதமும் வாழக்கடவன. அவ்வேதத்தை அத்தியயனஞ்செய் கின்ற பிராமணோத்தமர்களும் வாழக்கடவர்கள். அவர்களிடத்தில் நிலைபெற் றிருக்கின்ற தர்மமும் வாழக்கடவதென்று சொல்லிக் கற்பங்கள்தோறும் அழி யாதகீர்த்தியையுடைய அநுமான் வாழ்த்தினவராயிருக்க, இராவணன் பிராட் டியாரைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகிறான். குயிலுக்குச்சமானமாகிய இனிய குரலினையுடைய பெண்கள் சிகாமணி! பெண்கள் பூடணம்! பெண் கட்கரசி! பெண்கள் பாக்கியம்! எங்கள் குலதெய்வமே! என் பிராணதார மாகிய சீதா! என்று அழைத்துக்கொல்லுகின்ற விடத்தை அமிர்தமென்று நினைத்து உண்கின்றவனைப்போல நீ எப்பொழுது என்னிடத்திற் கருணைசெய் வதென்றான்? சிவன்முதலானவர்களுக்கும் அஞ்சாத திடசித்தத்தையுடைய இராவணன் ஆசையும் நாணமும் தன்னைப்பிடிக்கும்படி, கூசிக்கூசிக்கொண்டு பின்னுஞ் சொல்லுகின்றான். இன்றென்றும் நாளையென்றும் வீணாக நாள் போய்விடுகின்றதே? நீ என்னைக் கொன்றபின்னர்தான் கூடவிருக்கின்றை யோ? என்னுடைய அளவில்லாத பாக்கியமாகியஇராசரிக சாம்பிராச்சியத் திற்குத் திலகமா யிருக்கின்றவளே! உன்பொருட்டு மன்மதன் என்னிடத்திற் செய்கின்ற கலகத்தை நீ பார்ப்பதுமல்லாமல், அவனுக்கு நான் தோற்கின்ற என்னுடைய மிக்க ஐசுவரியத்தை இகழ்ந்துவிடுகின்றையே? உன்னாயகனா கிய இராமன் இறந்துபோகாமல் பிழைப்பானா? அல்லவென்று இறவாதிருந்

தாலும் காட்டைக்கடந்து அயோத்தியிற்போய்ச்சேர்ந்து வாழ்வதோ பிரயாசம். அப்படி வாழ்ந்தபோதும் அது சொற்பமாகிய மானுடர்வாழ்வேயல்லாமல் வேறன்றே. அவ்வாழ்வுதானே நீ வாழநினைக்கின்றது. தவஞ்செய்கின்றவர்களும் அதிநுட்பமாகிய சாத்திரப்பொருள்களைத் தெளிந்தவர்களும் பெறும் பிரயோசனம் என்னவென்றால் என்னுடைய வார்த்தையைச் சிரசாக வகிக்கின்ற பிரமன்முதலான தேவர்களுடனே கூடியிருக்கின்ற இன்பந்தானே. உனக்குப் பாதாதிகேசபரியந்தமாகிய அவயவங்களையெல்லாம் அழகாகத் தெரிந்துபடைத்த பிரமன், இடையும் கிருபையும் இல்லாமற்போம்படி செய்துவிட்டான். இளமைப்பருவமானது நாளுக்குநாளென்ன விர்த்தியாகின்றதா? கொஞ்சங்கொஞ்சமாய் மாண்டுபோய்விடுகின்றதே. அப்படிப்பட்ட அருமையாகிய இளமை வேண்டியசுக மனுபவிக்கத்தக்க காலத்தில் வீணாய்ப்போகுமானால், அப்புறம் மனோபீட்டத்தை எப்பொழுதுதான் முடிக்க இருக்கின்றையோ? இளங்கிளிக்கு நிகராகிய சனகராச புத்திரியே! சிறந்த பெண்தன்மையும், உயர்ந்த வடிவிக்கணமும், மாறுபடாத நிடச்சித்தமும் உண்டாயிருக்கின்ற உனக்குத் தாட்சணியமாத்திரம் இல்லாமற்போனதென்ன? என் பிராணன்போனாலும் போகட்டும். உன்முகமாத்திரம் கோணாமலிருக்கவேண்டும். அப்படியல்லாமல் நீ முகங்கோணினால் குணம் அழகு காமமுதலானவைகளும் தங்கிநிற்பதற்கு இனியார் இருப்பிடமாவார்கள்? உன்கணவன் என்னைக் கொல்லும்பொழுது நான் அலறிக் கூவுங்குரலைக்கேட்கவும் நான் இறந்துகிடப்பதைப்பார்க்கவு மிருக்கின்றையோ? ஊழ்வினை எளிதாகவூட்டுகின்ற தர்மப்பயனாகிய நன்மையை இப்படி இகழ்ந்து தள்ளிவிடுகின்றவர்களை நானெங்கும் பார்க்கவில்லை. நீ ஒருத்தி என்னிடத்தில்வந்ததனால் எனக்கு மகத்தாகிய சாம்பிராச்சியமானது, மேன்மேலும் உண்டாயிற்றென்கின்ற கீர்த்தியைவிட்டு இன்னவளாலே, இன்னான் மாண்டுபோய்ப் பாக்கியமும் இழந்துபோனானென்கிற அபகீர்த்தியைச் சம்பாதித்துக்கொள்கின்றையோ? தேவர்களும் அவர்களுடைய தேவிமார்களும் கைகூப்பி அடிவணங்குகின்ற திரிலோகாதிபத்தியம் உன்னிடத்தில் வலியவருகின்றது. அதை நீ விலக்கிவிடுகின்றாயாகையால் உன்னைப்போலும் பேதைமையான பெண்கள் யாரிருக்கின்றனர். மும்மையுலகத்தாரும் ஏவல்செய்யும்படியிருக்கின்ற திரிலோகாதிபதியான என்னை நீ அடிமைகொண்டருளக் கடவாயென்று இராவணேசுவரன் கைகளைகூப்பித் தலைமேல்வைத்துக்கொண்டு எட்டுறுப்புநிலமுறப் பூமியில்விழுந்து தண்டஞ்சமர்ப்பித்தான். சிவக்கக்காய்ச்சிய இருப்புச்சலாகைகளைக் காதில் ஏற்றியதுபோல இந்த வார்த்தைகள்வந்து நுழையாததற்குமுன்னே, சானகியார் செவிகள் தீந்தன. மனஞ்சுழன்றது, கோபமூண்டது, கண்சிவந்தது, அவற்றில் உதிரம் பாயத்தலைப்பட்டது. அப்போது பிராணன்போனாலும் போகின்றதென்று சிறிதாவது அஞ்சாமல் பெண்டன்மைக்கு ஒவ்வாத சொற்களானாலும், இவ்வேளையிற் சொல்லுகிறதே சரியென்று துணிந்து வஞ்சகனாகிய இராவணனுடைய மனம் தேறும்படி, கற்பினால் தம்மனத்தைக் கல்லைப்பார்க்கிலும் மிகவும் உறுதிப்படுத்திக்கொண்டு அவன் முகத்தைப்பாராமற் கீழேகிடக்

கின்ற ஒரு துரும்பைப்பார்த்து, அவனை அத்துரும்பாகவேமதித்து அடா அற்
பமாகிய திரணமே? இப்பொழுது நான் சொல்லுகின்றசொல்லானது என்னைப்
போலும் நல்லகுடிப்பிறப்பினையுடைய பெண்கள் சொல்லத்தக்கதன்று. ஆயி
னும் உன்னைக்குறித்துச்சொல்லுகிறேன் கேட்கக்கடவாயென்று கொடுமை
யாகிய பலசொற்களையும் சீதாபிராட்டியார் சொல்லுகின்றார். மகாமேருவை
உருவவேண்டுமென்றாலும், ஆகாயத்தைப்பிளந்துகொண்டு அதற்கப்புறம்
செல்லவேண்டுமென்றாலும், பதினான்குலோகத்தையும் முடிக்கவேண்டுமென்
றாலும் இராமபாணம் அப்படியேசெய்யத்தக்க பலமுடைத்தாயிருக்கின்றது.
அதை அறிந்திருந்தும் புத்தியில்லாமல் அநுசிதமாகியவார்த்தைகளை உனக்
குச்சரிப்போனபடியெல்லாம் பிதற்றி உன்பத்துத்தலைகளும்அற்றுவிழுவாயா!
என் நாயகருக்கு நீ பயந்துதானே சமயம்பார்த்து ஒருவஞ்சனையாகிய மானை
யேவி அவரை என்னைவிட்டு நீங்கும்படிசெய்து, உன்னுருவத்தை மறைத்து
மாயாசந்நியாசிவடிவங்கொண்டுவந்தனை,பிழைக்கின்றவனானால்விட்டுவிடுவாய்,
உன்குலத்துக்கெல்லாம் விடமாகிய என்னை உன்கண்களும் பார்க்கமாட்டுமோ?
இப்பத்துத்தலைகளும் இருபதுதோள்களும் கோதண்ட தீட்சாகுருவாகிய
என்னாயகர் பலபலபாணங்களைப் பிரயோகித்து விளையாடத்தகுந்த விசித்திர
மாகிய அலட்சியமாயிருக்கு மல்லாமல் வேறென்னசெய்யும். யுத்தத்தில்
எதிர்க்கத்தக்க வலிமையை யுடையவனைப்போலப்போய் அன்றைத்தினம்
சடாயுபலத்துக்கு நிற்கமாட்டாமல் தரையிலேவிழுந்தையே. அந்த ஒருபற
வைக்குத்தோற்றும் சிவனுடைய கைவாளினாலே யன்றோவென்றாய். அல்ல
வென்றால் அந்நாளே இறந்துபோவாய்; நீசெய்த தவமும் அதனாற்பெற்ற வர
மும் தீர்க்காயுளுமாகிய இவைகளெல்லாம் உனக்குக் கூற்றுவனாலே அபாயம்
வந்து நேராமலிருப்பதைக்குறித்தே யல்லாமல், என் நாயகனுடைய கைப்
பாணத்தினாலே இறவாமலிருப்பதைக்குறித்து ஏதாவது தவஞ்செய்ததும்
வரம்பெற்றதுமுண்டோ! நீ பெற்றிருக்கின்ற அவ்வாளையும் நாளையும் பராக்
கிரமத்தையும் மற்றுமுள்ள சகலத்தையும் உனக்குக்கொடுத்த பிரமாதிதேவர்
களுடைய வரங்களெல்லாம் இரகுநாயகர் தமது கோதண்டத்தை வளைத்து
நாணேற்றி ஒரு அஸ்திரத்தை மாத்திரம்அநுசந்தானஞ்செய்து பிரயோகித்
தாலுடனே உன்னைவிட்டு விலகி எதார்த்தமாகவே அழிந்துபோகும். நன்றா
ய்ப் பிரகாசிக்கின்ற தீபச்சுடருக்குமுன் இருள்விலகிப்போகாமல் நிற்பதுமுண
டா! நீ கைலாயகிரியை எடுத்தநாளில் காற்பெருவிரல் நுனியால் உன்னை
அழுத்திவென்ற திரிபுராந்தகனாகிய சிவனுடைய கைவில்லை என் பிராண
நாயகராகிய இராகவர் வளைத்தபோது அது அவர்பலத்திற்குப் பொறுக்காமல்
ஒடிந்துவிழுந்த சத்தங்கேட்கவில்லையா! மலையை எடுத்தேன் அஷ்டதிக்கசங்
களை வென்றேனென்று சொல்லுகின்ற நீ எங்கள் இளையபெருமாள் கையி
லே வில்லெடுத்துக்கொண்டு நிற்க அங்கேபோய் அவரை வெல்லத்தக்க நிர்
வாகமில்லாமல் நானுமொருவீரனென்று இன்னமும் தலையெடுத்துக்கொண்டு
பெண்டுகள் காலில்விழுந்து கெஞ்சிக்கொண்டு திரிகின்றையோ? அறிவில்
லாதவனே! நீ ஒளித்துக்கொண்டிருக்கின்ற இடமாத்திரம் இன்னதென்று எங்

கள் சிராமபிரானுக்குத் தெரிந்தால், அப்போதே இந்தச் சமுத்திரமும் இலங்கையும் அழியும், உன்பிராணனும் நாசமாம். அம்மட்டிலே தானேபோமா? ஊழியுந் தீர்ந்துபோகும்; நீயொருவன் இப்படிப்பட்ட வஞ்சனை செய்ததனால் சிராமசந்திரனுடைய கோபத்தால், இராட்சசருடனே மாத்திரம் முடிந்துபோகாமல் இந்த லோகாலோகங்களுக்கெல்லாம் என்ன அழிவு வருகின்றதோவென்று தருமதேவதை சான்றாக நான் அஞ்சிப்பார்க்கிறேன். இவ்விராமலட்சுமணர்கள் மனிதர்தானேயென்று உன்மனத்திலே நினைத்தையேயானால், முன்னாளில் உன்னைச்சிறையில்வைத்த கார்த்தவீரியனும் ஒரு மனிதன் அன்றோ. இவர்கள் இருவர்தானே. இவர்களுக்கு வேறொருஉபபலமுமில்லையென்று அலட்சியஞ் செய்வாயானால், சகலபுவனங்களையும் சகலாத்துமாக்களையும் சங்கரிக்கின்ற ஊழிநாதன் ஒருவனன்றோ. ஆதலால் அவர்களுக்கும் உனக்கும்யுத்தம் நடக்கும்போது என்சொல்மெய்யோ? பொய்யோ? பார்த்துக்கொள். இரணியன் இரணியாக்கனென்னும் அசுரேந்திரர்கள் அதிகபராக்கிரம சாலிகளாயும் உன்னிலும் மேலாகிய சம்பத்தையுடையவர்களாயும் வெகுகாலம் வாழ்ந்திருந்தனரே. அவர்களும் தருமந்தப்பி நடந்தார்கள். ஆயினும் இப்படிப் பரதாரத்தை இச்சிக்கவில்லை. அகங்காரத்தாலேயே மாண்டுபோயினர். மண்ணுலகத்தாரும் சுவர்க்கலோகவாசிகளும் நடுங்கும்படி, வாழ்கின்ற கொடும்பாவி! உன்னுடைய அற்பமாகிய துர்க்கிருத்தியத்தை விலக்காமல் உனக்குப் பயந்திருக்கின்ற பிரமன் விஷ்ணு உருத்திரர்களைப்போல எங்கள் இரகுநாயகனையும் நீ நினைக்தையோ? ஐம்புலன்களும் செல்கின்ற வழியிற் செல்லாமல் தருமத்தின் நிலையில் நின்றுவினையைக் கடந்தவர் பிரமன் முதலாகிய தேவர்களா! அல்லது அசுரர்களா! எல்லாவுலகத்தாரும் ஏவல் செய்யும்படி இம்மகாசம்பத்து உனக்குக் கிடைத்திருக்கின்றது புண்ணியத்தினாலேயா! அல்லது பாவத்தினாலேயா! அறிந்துபார். இப்படிப்பட்ட பெரிதாகிய செல்வத்தை உனக்குக்கொடுத்த அம்மகேசுவரனும் தருமமார்க்கத்தில் நின்றல்லவோ! அப்படிப்பட்ட இட்டகாமியத்தை அனுபவிக்கின்றான். நீ மாத்திரம் தருமந்தப்பிநடந்து ஒப்பற்ற செல்வத்தையும் இழந்து பந்துசனங்களுடனே நிருமூலமா யழிந்துபோம்படி ஏன் எத்தனப்படுகின்றாய்! அடா! அறிவில்லாதவனே! போர்க்களத்தில் புறங்கொடுத்தோடாத மகாபலிட்டர்களானாலும், தருமந் தவறினவர்களும் சிவகாருண்ய மில்லாதவர்களுமன்றோ பிறந்து இறந்து உழல்கின்றவர்கள்? அவ்வாறாகிய சனன மரணத்தை நீக்கினவர்கள் அகங்காரமமகாரத்தைக்கெடுத்துக் காமம்வெகுளி மயக்கத்தைக் கடந்தவர்களேயல்லாமல் வேறேயார்? அகத்தியர் முதலாகிய முற்றத்துறந்த முனிவர்களெல்லாங்கூடிப் புருடோத்தமராகிய சிராமரிடத்தில்வந்து அரக்கர்கள் செய்யும் உபத்திரவத்தைப் பொறாமல் தவமுதலாகிய வைதிக கருமங்களையெல்லா மிழந்தோம் தேவரீர் அவர்களைச்சங்காரஞ் செய்தருளும். உம்முடைய பாணத்தினால் அவர்கள்சத்தியமாய் மாண்டுபோவார்கள். ஐயா! தசரதகுமாரரே எங்களைக் காத்தருளுமென்று முறையிட்டுக்கொண்டார்கள். அச்சமயத்தில் நான் அவர்பக்கத்திலிருந்து கேட்டேன்.

நீயோ அதற்கேற்றபடி நடந்துவருகிறாய். உன்னையும், உன்னுடைய பராக்கிரமத்தையும், நீ பெற்றிருக்கின்ற தீர்க்காயுளையும், சேனாபலத்தையும் முனிவர்கள் சொல்லக்கேட்டும் எங்கள் ஸ்ரீராமபிரான் எவ்வளவும் இலட்சியஞ் செய்யாமல் உன் தங்கையின் [மூக்கையும்,] உன் தம்பிமார்களாகிய கரன் முதலானவர்களுடைய நாசாறுதி அவயவங்களையும் சின்னாபின்னப்படுத்திய செய்தியை நீ கேள்விப்படவில்லையோ? உன்னுடைய இருபதுகைகளையும் சேர்த்துப்பிடித்து உன்பத்துவாயின் வழியாகக் குபீர் குபீரென்று உதிரங்கக்கும்படிக்குத்தி, உன்னை அருஞ்சிறையில்வைத்த ஆயிரங்கைகளையுடைய கார்த்தவீரியார்ச்சுனனுடைய வைரமாகியதோள்களையும் மழுவாயுதத்தால்தறித்தெறிந்த பரசுராமரானவர், என்நாயகருக்குத் தோற்றுப்போன செய்தியை நீ யறிவாயோ! மேல்வருங்கதியை யறியாத நீசனே! கடிக்கின்ற விஷப்பல்லுள்ள சர்ப்பமும் மந்திர உச்சாடனம் பண்ணக்கேட்டுத் தடைபடுகின்றதே. யுக்தாயுக்தந்தெரியாமல் களித்துத்துள்ளுகின்ற உன்னை, இதுதகும் இதுதகாதென்று அதற்கேற்ற ஏதுக்களுடனும் திருட்டாந்தங்களுடனும் புத்திசொல்லி இடிக்கின்றவர்களில்லைபோலும். நீ நினைத்ததையே சரிசரியென்று சொல்லி உன்னை முடித்துவிடத் தக்கவர்கள் மாத்திரமிருக்கின்றனர். இப்படியாயின் இனி உனக்கு நாசம்வருமேயல்லது வேறொன்று சம்பவிக்குமாவென்றனர். இவ்வகைப்பட்ட தருமமார்க்கமாயிருக்கின்ற பலபலவார்த்தைகளையும் கர்னகடோரமாக அத்துரும்பைப் பார்த்தவண்ணமாய்ப் பிராட்டியார் சொல்லவே, மேகத்தின் வயிற்றைக் கிழித்துக்கொண்டெழுந்த மின்னலைப்போலவே, இருபது கண்களிலும் நெருப்புப்பொறிகள் எழும்பவாய்களெல்லாம் புகைய ஆட்டி ஆர்ப்பரித்துக்காமத்திலும் கோபமிகுந்தவனாய் அதிகாரணத்தைக்கொண்டு இவளைப்பிளந்துநின்று விடுகின்றேனென்று எழுந்துவந்தான். ஆசையுங் கோபமும் முன்னும் பின்னுந் தள்ளச் சானகியாருக்குச் சமீபத்தில்வந்தவனை அநுமான்பார்த்து, என்னை அடிமைகொண்ட நாயகனுடைய தேவியாரை என்னெதிரே இப்படியெல்லாம் பேசியநீசனாகிய இராவணன் தீண்டுவதற்குமுன்னே, இவனுடைய பத்துத்தலைகளையும் உதைத்து உருட்டிவிட்டுப் பின்பு எக்காரியமும் பார்த்துக்கொள்ளலாமென்று நினைத்தும்பின்னும் இவ்விராவணனோ தனியேயிருக்கின்றானாகையால் எளிதாக இவன்தலைகளை யுடைத்துத்தள்ளி இலங்கையையும் எடுத்துக் கடலிலே தலைகீழாக எறிந்துவிட்டு, பிராட்டியாரை எடுத்துக்கொண்டு ஸ்ரீராமபிரானிடத்திற்குப்போவதே காரியமென்று துணிந்து அதிக கோபாவேசத்துடனே கையைப்பிசைந்து கொண்டிருந்தார். அண்டங்களை எல்லாம் அழிக்கும்படி மூண்டெழுந்த யுகாந்தகாலாக்கினியைப்போல முதிர்ந்து கோபத்துடனே கிட்டிவந்த இராவணன், அக்கோபாக்கினியைக் காமமென்கிற வெள்ளமானது அவிக்க, (உலகமாதாவாகிய சீதைக்கு எதிரே சும்மாநின்று சிலவார்த்தை சொல்லுகிறான். நானுன்னைக் கொல்லுகின்றேனென்று சொன்னேனே அது இருக்கவே யிருக்கட்டும். உலகத்திலே எனக்கு ஒருவிடயம் சாத்தியப்படுவதென்றும் சாத்தியப்படாதென்று முண்டா? தோற்பதும் வெல்வதும் எனக்கு விளையாட்டுச்செய்கையா யிருக்

ன்றது. உன்னுடைய உயிருக்கு ஒப்பாகிய நாயகனை நான் கொன்றால் நீ இற
ந்துபோவாய். அதுகண்டால் நானுமிறந்துவிடுவேன், அச்சங்கடத்தை எண்
ணித்தான் அன்று நானுன்னை வஞ்சனைசெய்து எடுத்துவந்தது. அல்ல
வென்று யுத்தஞ்செய்யத் தலைப்பட்டால் யார்தான் எனக்குநேர் நிற்கவல்ல
வர்கள்? மானனது வந்ததென்று அறிந்து அதைப்பிடிக்கத் தொடர்ந்துபோன
மானிடர் என்னுஞ்ஞாதிகாரத்தை அறிந்தால் இந்தவழியும்வருவார்களா? முன்
னுளில் யாரோ என்னை வென்றார்களென்று சொன்னையே! அவர்களு மிருக்
கட்டும். சகலமானவர்களுக்கும் மேலானவர்களும் யாவராலும் இறவாதவர்
களுமாயிருக்கின்றவர்களு மிருக்கட்டும். அந்நாள் முதற்கொண்டு இந்திரன்
பணிவிடைசெய்ய மூன்றுலகத்தையும் நானொருவனே ஆள்கின்றேன். இதை
விடவேறேகாரணஞ் சொல்லவேண்டுமா? எல்லாரையும் நான் வெல்வதுவும்
பிடித்துவந்து ஏவல்கொள்ளுவதுமேயல்லாமல் என்னை ஏவல்கொள்ளுகின்ற
வர்களும் பின்னும் என்னை வெல்லுகின்றவர்களு மிருக்கிறார்களா? மும்மூர்த்தி
களையும் மற்ற தேவர்களையும் பராக்கிரமம் அழியச்செய்த என்னுடைய பிர
தாபத்திற்கு உன்னாலே பழிவரும்படி, பயனில்லாத்தவத்தைச் செய்துகொண்
டிருக்கின்ற சொற்பமனிசர்களை நானொருபயனாக எண்ணிக் கொல்லப்போகின்
றேனோ! இதோ அழைத்து ஏவல்கொள்ளுகிறேன். அந்தச்சாமர்த்தியத்தை
யும்பார். அற்பபலத்தையும் அற்பச் செய்கையையுமுடைய அற்பவீரர்கள்
மேல் எனக்குக்கோபம் தோன்றுவதேயில்லை. ஆயினும் இற்றைத்தினமே
போய் அவ்விராமலட்சுமணர்கள் இருவரையும் ஒருகையினாற் பிடித்துக்
கொண்டுவந்து உன்முன்னேவிடுகின்றேன் பார்; அவர்கள் மனிசர்களானாலும்
ஸ்திரீ ரத்தினமாகிய உன்னை எனக்குக்கொடுத்த உபகாரத்தை ஆலோசித்
துப்பார்த்தால் அவர்களைப் பிராண இமிசை செய்யக்கூடாது, அப்படியன்று,
அவசியம் கொல்லவேண்டுமென்று உனக்கும் இட்டமிருந்தால் இப்பொழுதே
கொல்லுகின்றேன். மேலும் அயோத்திக்குப்போய் அங்கிருக்கின்ற பரதன்
முதலான யாவரையுங்கொன்று, மிதிலைக்குப்போய் அவ்விடத்திலுள்ள சன
கன் முதலானவர்களையும் கருவறுத்துவிட்டு விரைவில்வந்து உன்னுடைய
உயிரையும் மாய்க்கின்றேன். என்பிரதாபத்தை நீ என்ன அறிவாய். கொஞ்ச
வயதுண்டானவ ளாகையால் அறியாமற் சொன்னாயென்று, காலாக்கினி சொ
ரூபமாய்க் கோபித்து, எரிகின்ற தன்கைவாளைப்பார்த்து உன்பிராணனைப்
போக்கடிப்பதற்கு வெகுநாள் செல்லாது; இன்னம் இரண்டுமாதம்போனால்
அப்புறம் உனக்கே தெரியவருகின்றதென்று அதட்டிப்பேசி, அச்சீதாபிராட்
டியாருடைய திவ்ய சுந்தரமாகிய திருவுருவத்தைக் கண்ணிலேகண்டபடி மன
த்திலே பதித்துவைத்துக்கொண்டு, அவ்விடத்தைவிட்டு நீங்கிக்காவலிருக்கி
ன்றஅரக்கியர்களைஇரகசியமாக அழைத்துப்பூங்கொடிபோலும் இளமையுடை
யளாகிய சானகியை, ஒருவகையினாற் பயப்படும்படி செய்தாவது அல்லது
அவளுக்குப் புத்திவரும்படித் தெரியப்படுத்தியாவது வசியஞ்செய்து என்னி
டத்தில் மனம்பிரமிக்கும்படிச் செய்தீர்களானால்தான் பிழைத்தீர்கள். இல்
லாவிட்டால் கொன்றுவிடுவேனென்று சொல்லிவிட்டுத் தன்மாளிகைபோய்ச்

சேர்ந்தான். பின்பு கேதுவென்னும் பாம்பு விழுங்கிக்கொண்ற சந்திரனைப்போலிருந்த சீதாபிராட்டியாரைப் பொல்லாத அரக்கிமார்கள் சூழ்ந்துகொண்டு ஆர்ப்பரித்து அதட்டிக்கோபித்துத் தங்கள் மனத்தில் தோற்றினபடியெல்லாம் பேசத்தலைப்பட்டார்கள். சிலர்சூலம்வேல் முதலாகிய ஆயுதங்களை மேலே எறிந்துகொண்டு கொல்லுங்கள் கொல்லுங்களென்றும், இவளுடைய சரீரத்தைக் கண்டதுண்டமாக்கி வயிறுரத் தின்னுங்கள் தின்னுங்களென்றும் முழங்கினார்கள். இந்தப்பிரதாபலங்கேசுவரன் சதுர்முகப் பிரமாவுக்குக் கொள்பேரன். புலத்திய பிரமனுக்குப்பேரன். விசிரவசபிரமாவுக்குப் புத்திரன், மேலும், சகத்திரவேதங்களும் அறிந்தவன், ஞானுதிகன், சத்தியசந்தனன், வினையைக் கடந்தவன்,இவனென்ன சாமானியனா! இப்படிப்பட்டவன் உன்னிடத்தில் ஆசை வைத்தானே, இவ்விந்தையை என்ன சொல்லலாம். இது ஒன்றேயல்லாமல் மற்றப்படி இவனிடத்தில் என்னகுற்றமிருக்கின்ற தென்றார்கள். சிலர் அடி பெண்களுக்குள்ளே கொடியவளாயிருக்கின்றவளே! பொறுமையாக யோசித்துப்பாராமல், புண்ணிலே கோலிட்டாற்போலக் கர்னகடோரமான வசனத்தைச்சொல்லி நீ முதலற்றுப்போவது மல்லாமல், உலகத்திலுள்ளமானிட வருக்கமுழுமையும்மாய்ந்து போகத்தக்க மனவருத்தத்தையு முண்டாக்கினையே! நாங்கள் சொல்லுகின்ற உண்மைவார்த்தையைத் தான் தீர்க்கமாக எண்ணிப்பாரென்று சொன்னார்கள்.சிலர் அடி கன்னெஞ்சையுடைய அறிவில்லாதவளே! நீ பிறந்தகுலத்திற்கும் புகுந்த குலத்திற்கும் கடுநெருப்பை வாரியிறைக்க ஏற்பட்டாயன்றோ? நீயும் இக்கணமே மாண்டாய். இனியொரு போதும் வாழமாட்டாய். நாங்கள் உனக்கு உறுதிப்படச் சொன்னோமென்று கூசலிட்டார்கள். இப்படி கொல்லத் துணிந்தவர்களுடைய செய்கையில் யாதொன்றுங் குறைவில்லாத கொடுமையை யுடையவர்களாய், அவ்வரக்கிமார்களெல்லாம் வெருட்டுவதையும் இராவணன் அவர்களை இவ்வண்ணஞ்செய்யும்படி ஏவினதையும் அறிந்து, பிராட்டியார் கண்களிற் சலம்பெருகக் கிலேசித்துத் துக்கத்தினால் நகைத்து மனங்கலங்கினார். அத்தருணத்தில் திரிசடையென்பவள் பிராட்டியாரைப்பார்த்து அம்மா! ஏன் அங்கலாய்க்கின்றீர். முன்னே நீர் தயிரியமாயிருமென்று சொல்லிப்பின்பு அரக்கியர்களைநோக்கி நீங்கள் இவ்வுத்தமியை அறியாமல் வீணாக அபசாரப்பட்டால் மகத்தாகிய தோஷம் வருமென்று சொன்னாள். அதுகேட்டுத்தாயே நல்லதென்று அவர்களெல்லாம் அடங்கினார்கள். பிராட்டியாரும் பிராணன் நிலைத்திருந்தனர்.

நிந்தனைப்படலம்
முற்றிற்று.

---

## உருக்காட்டுப்படலம்.

---

அப்போது மரத்தின்மேல் நின்று பார்த்துக்கொண் டிருக்கிற அநுமான் இதுதான் காண்கிறதற்குத் தகுந்தசமயமென்று அறிந்து அவ்வரக்கியர்களுக்கெல்லாம் உறக்கம் வரும்படி ஒரு மந்திரத்தை உச்சரித்தனர்; அதனால அவர்

களெல்லாம் பிரேதம்போல உறங்கிவிட்டார்கள். எப்பொழுதும் நித்திரைசெய்தறியாத அரக்கிமார்களும் நித்திரைசெய்வதுகண்டு துக்கத்தைப் பொறாமல் உய்கின்ற மார்க்கத்தையுங் காணாமல் மனந்தளர்ந்து அஞ்சி நெடுநாளாய் வருந்துகின்ற பிராட்டியார் சுவாமியினிடத்தில் தமக்குண்டாகிய அன்பினால் பிரலாபிக்கத் தொடங்கினார்.

கவி.

கருமேக நெடுங் கடல் காரனையான்
தருமே தனியே னெனதா ருயிர்தான்
உருமே றுறழ்வெஞ் சிலைநா ணொலிதான்
வருமே புணையாய் வலியார் வலியே.

கல்லா மதியே கதிர்வா ணிலவே
செல்லா விரவே சிறுகா விருளே
எல்லா மெனையே முனிவீர் நினையா
வில்லா ளனையா தும்விளித் திலிரோ.

தழல்வீ சியுலாய் வருவா டைதழீஇ
அழல்வீ சொனதா வியறிந் திலிரோ
நிழல்வீ ணையனா ருடனே நெடுநாள்
உழல்வீர் கொடியீ ருணையா டிலிரோ.

வாரா தொழியா னெனும்வன் மையினால்
ஓரா யிரகோடி யிடர்க் குடைவேன்
நீரா வொருநாள் வலிசே வகனே
நாரா யணனே தனிநா யகனே.

தருவொன் றியகா னடைவாய் தவிர்நீ
வருவன் சிலநா ளினின்மா நகர்வாய்
இருவென் றனையின் னருடா னிதுவேல்
ஒருவென் றனியா வினையுன் னுதியோ.

பேறும் முணர்வே யுயிரோ பெருநாள்
நாணின் றுழல்வீர் தனிநா யகனைக்
காணுந் துணையுங் கழிவீ ரலிர்நான்
பூணும் பழியோ பொருந் துவதோ.

முடியா முடிமன் னன்முடிந் திடவும்
படியே மூநெடுந் துயர்பா விடவும்
மடியா நெறிவந் துவனம் புகுதும்
கொடியார் வருமென் றுகுலா வுவதோ.

என்பன.

ஆ! ஆ! தடுக்கப்படாத வலிமையுடைய என்விதியே! கார்மேகத்திற்கும் கருங்கடலுக்கும் ஒப்பாகிய கறுத்தமேனியையுடைய என் பிராணநாயகர் தம்மைப்பிரிந்து தனியேயிருக்கின்ற என்னுடைய பிராணனைத் தருவாரா? பிரளயகால இடியோசைக்கு ஒப்பாகிய அவருடைய உக்கிரகோதண்டத்தின்

குணத்தொனியும் இவ்விலங்கையிலுள்ளவர்கள் கேட்கவருமா? நீசொல்லென்றும் அழிவில்லாத சந்திரனே! பிரகாசமாகிய சந்திரிகையே! தொலையாத இரவே! குறையாத இருளே! நீங்களெல்லாம் ஒருவந்தமாகக் கூடிக்கொண்டு என்னைமாத்திரம் உபத்திரவப்படுத்துகிறீர்களே இதைச்சிறிதேனும் நினையாத அக்கோதண்டராமனை இப்படிச் செய்யமாட்டீர்களாவென்றும் ஓ! பூங்கொடிகளே? நெருப்பைவாரி இறைக்கும்படி எங்குஞ்சஞ்சரித்துவருகின்ற வாடைக்காற்றுடனே சேர்ந்து, என்னைச் சீறுகின்றீர்களா? என்னுயிர் நிலையை நீங்கள் அறியமாட்டீர்களா? சிராமபிரானுடனே அரணியத்தில் நெடுங்காலமா யுழல்கின்றீர்களே! அவருக்கு நீங்களாவது சொல்லமாட்டீர்களா வென்றும்; நம்முடைய பிராணபதமா யிருக்கின்றவர் வராமற் போகமாட்டாரென்கின்ற நிச்சயத்தினு லன்றோ? அநேக கோடி துன்பத்திற்கும் சலியாம லிருகின்றேனென்றும்; அழிவில்லாத மஹாபராக்கிரமத்தையுடைய வீரசிகாமணியே? ஸ்ரீமந்நாராயணனே! சமானுதிகமில்லாத பரமபுருஷனே! விருட்சங்கள் நெருங்கிய காட்டினிடத்தில் உம்முடனே வரும்படி நான் எத்தினப்பட்டபோது நீ வந்தால்வருத்தப்படுவாய் வரவேண்டாம் நான்போய்ச் சிலநாளில் வருகின்றேன் நகரத்தினிடத்தில் தானே யிருக்கக்கடவாயென்று நியமித்தனையே, உம்முடைய கிருபை இப்படி இருக்குமானுல் இப்போது நீர் தனித்திருந்து தமியளாகிய என்னுடைய உயிரை வருத்தலாமாவென்றும்; நான் கைவிடாதிருக்கின்ற என்னுடைய அறிவே! என்னுயிரோ! வெகுநாளாக நீங்கள் அஞ்சியுழல்கின்றீர்க ளாகையால் என் நாயகனைக்காண்கின்ற வளவும் என்னைவிட்டு நீங்கமாட்டீர்கள்போலக் காண்கின்றதே? நான் அடையும் பழியை நீங்களும் அடையவேண்டுமோ வென்றும்; இறவாத தம்முடைய பிதாவாகிய சக்கரவர்த்தி இறக்கவும் தாய்மார் தம்பிமார் முதலானவர்களும் ஏழுலகத்தாரும் துயரப்படவும் இவற்றைக்குறித்துஎவ்வளவும் இரக்கப்படாமல் என்னை அழைத்துக்கொண்டு வனத்தில்வந்து புகுந்த பாதகர் இன்னமும் வருவார்வருவாரென்று நினைத்து நான் குலாவிக்கொண்டிருக்கின்றதா வென்றும்; இப்படிப் பல பல வகையாக எண்ணி எண்ணி உயிர்நடுங்கியிருந்து பிரலாபித்துச் சானகி என்னுயி ரிருக்கிறவரையிலும் துன்பம் இடைவிடாமல் நேர்ந்துகொண்டிருக்கும்,இம்மட்டிலேநான்இறந்து விடுவேனேயாயின் துன்பம் நீங்கிக்கீர்த்திகிடைக்குமென்று அதற்குத்தக்க யோசனைசெய்கின்றாள்.

கவி.

பொறையிருந் தாற்றியென் னுயிரும் போற்றினேன்
அறையிருங் கழலவற் காணு மாசையால்
நிறையிரும் பல்பக லிருதர் நீணகர்
சிறையிருந் தேனையப் புனிதன் றீண்டுமோ.

அற்புத னரக்கர்தம் வருக்க மாசற
விற்பணி கொண்டருஞ் சிறையின் மீட்டநாள்
இற்புகத் தக்கிலை யென்னின் யானுடைக்
கற்பினை யெப்பரி சிழைத்துக் காட்டுகேன். என்பது.

விரகண்டை அணிந்த இரகுநாயகனைக் காணவேண்டுமென்கின்ற ஆசையினாலே பலவகைவருத்தத்தையும் பொறுத்துக்கொண்டு என்னுயிரைவிட்டு விடாதிருந்தேன், இப்படிநெடுநாளாகஇவ்வரக்கருடைய நகரத்திலேசிறை இருந்தஎன்னை அம்மனுகுலோத்தமராகிய துல்லியர் தொடுவாரா? என்னைப் பரபுருஷர் இச்சித்தாரென்றறிந்தும் பலபேருஞ்சொன்ன பழிச்சொற்களெல்லாம் காதிலே விழக்கேட்டும் இவ்வுயிரை வைத்துக்கொண்டு எத்தனைக்காலமாயிருக்கிறேன்? என்னைப்பார்க்கிலும் கடினசித்தத்தையுடையஅரக்கியர்கள் வேறேயார்? நீங்காத பழியைச்சுமந்துகொண்டு இருக்கின்ற என்னுடைய குடிப்பிறப்பும் நாணமும் நன்றாயிருக்கின்றதே. கதைகளிலே சொல்லப்பட்டிருக்கின்ற கற்புடைய மாதர்களுக்குள் மனைவாழ்க்கையை நீங்கிப் பிராணனோடிருக்கின்றவர்கள் நானல்லாமல்யாரிருக்கின்றார்கள்? அந்நியருடைய கிருகத்தை அடைந்தபெண்ணை விரும்புவது யோக்கியமல்லவென்றுஎன்பிராணநாயகர் என்னைக்கைவிட்டவராகி வேறொரு மாதரைச்சேர்ந்து சுகித்திருக்க நான் வீண்பொழுதுபோக்கி அதர்மத்தைச்செய்து வேறெந்த உபாயத்தைக்கொண்டு அதைப்பொறுப்பேன்;எப்பொழுது நான்இந்தப்பெரும்பழிக்கு ஆளானேனோ? அப்பொழுதே நான் பிராணத்தியாகம் பண்ணிக்கொள்ளவேண்டும். அப்படிச்செய்யாமல் உலகத்தார் அளவிடப்படாத நிந்தைகூற நான் துப்பழிந்து உயிர்கொண்டிருப்பது மோட்ச சாம்பிராச்சியத்தை அடைவதற்கா? என்னாயகனும் என்கொழுந்தனும் மனத்திலே அன்பில்லாதவர்களாய்ப் பொல்லாதபழியைச் சுமந்தாலுஞ் சுமக்கட்டும், நான்கீர்த்திபெற்ற நல்லகுடியிற்பிறந்தேனே என்பழியைத் துடைக்கின்றவர்கள் என்னைவிட யாரிருக்கிறார்கள். வஞ்சனையாய்வந்த மானின்பின்னே என் நாயகனைப்போக்கிப் பின்பு எனக்குக் காவலாயிருந்த என்மைத்துனப் பிள்ளையையும் அவர்பின்போவென்று அனுப்பிவிட்டு காளகூடவிடத்திற்கு ஒப்பாகிய அரக்கன்வீட்டில் வந்திருக்கின்ற நான் பிராணனுடனிருந்தால் உலகம் அங்கீகரிக்குமா! சுத்தவீரர்களாகிய இரகுநாயகனும் இளையபெருமாளும் தங்களுக்குவந்த குற்றத்தை நீக்கிக்கொள்ளும்பொருட்டுப் போர்செய்து சத்துருக்களை வென்றாலும் வெல்லட்டும்,அல்லவென்று இறந்துபோனாலும்போகட்டும், நான்கிருகதர்மந்தப்பி நடந்தபின்பு சொல்லுகின்ற என்பழி அவர்களைச்சுற்றுமோ! கவரிமானுக்குச் சமானமாகிய மானமுடைய பதிவிரதைகளுக்குளஎதிரோ பேதைமையையுடைய நான்புருஷோத்தமனாகிய தன்னாயகனைப்பிரிந்து கள்ளர்நகரத்தில் வாசமாயிருந்தவளிவளென்று அவர்கள் ஏசும்படிக்கேட்டுக் கொண்டிருப்பேனா! என்பிராணநாயகர்வந்து அரக்கர்வருக்கத்தையெல்லாம் பற்றறக்கொன்று என்சிறைமீட்டகாலத்திலும் நீ வீட்டிற்குள்ளே நுழைவதற்கு யோக்கியமானவளல்லளென்று சொன்னால் அப்போது என்கற்பை எவ்விதத்தில் பரீட்சைகொடுத்து நிலைநிறுத்துவேன்,ஆகையால் இறந்துபோவதே தருமநெறியென்று நினைத்துப் பின்னும் என்னைச்சாவாமல் காத்துக்கொண்டிருக்கின்ற அரக்கிமாரும் என் அதிர்ஷ்டத்தினால் உறங்கிவிட்டார்கள், இதுதான் சமயம்; இதைவிட வேறுசமயங் கிடைக்கமாட்டாதென்று சானகியார் எழுந்து ஒருகுருக்கத்திப்

புதரினிடத்திற் போய்ச்சேர்ந்தார். அதைகண்டு அநுமான் பிராட்டியாருடைய கருத்தையுங் குறித்தறிந்துகொண்டு நடுநடுங்கி இப்படிச் செய்யவேண்டாமென்று இக்கணம்போய்க் கையைப்பிடித்துக்கொண்டு தடைசெய்யலாமென்று பார்த்தால் பதிவிரதா சிரோமணியாயிருக்கின்றவளைத் தீண்டக்கூடாதேயென்றுமனங்கூசினவராய் இராமஇராமவென்று எதிரேஓடிவந்து அம்மா! லோககாரணி! லோகபரிபூரணி! லோகநாயகி! லோகமாதா! லோகோத்தமி! அடியேன் தேவர் தேவராகிய உமதுபிராணநாயகருடைய தூதனென்று திருவடியில் விழுந்து சேவித்துச் சொல்லுகின்றார். தாயே! சிராமபிரானுடைய ஆணையைச் சிரமேற்கொண்டு வந்தவன் நான். என்னைப்போல் அனேக வானர வீரர்கள் தேவரீரைக்குறித்து உலகமெல்லாம்போய்த்தேடுகின்றார்கள். அடியேன்செய்த தபோபலத்தினாலே உம்முடைய பாதாரவிந்தத்தைவந்துதரிசித்தேன். தேவரீர் இருக்கின்றதைச்சர்வலோகநாயகனாகிய இராகவபிரான் அறியார். இதற்குச்சான்று என்னவென்றால் இன்னம் இராக்கதக்கூட்டங்கள் மாளாமல் சீவனுடன்இருக்கின்றவைகளே இதுதான், இதுதவிரவேறுசான்றும் வேண்டுமா! திருவுள்ளத்தில் ஐயப்படவேண்டாம். அடையாளங்கொண்டுவந்திருக்கிறேன், அதுவும் பார்த்துக்கொள்ளும். அதுதவிரச் சிராமபிரான்திருப்பவளந்திறந்துசாதித்தருளிய திருவாய்மொழியுமிருக்கின்றது. அதைக்கரதலாமலகமாகச் சொல்லுகிறேன், அதையுங் கேட்டறிந்துகொள்ளும். மனத்தில் வேறேயோசனைசெய்யவேண்டாமென்று இப்படி சொல்லித் தாழ்ந்துவணங்கி மெலிந்து குழைந்துநிற்கின்ற அநுமானைப்பார்த்தருளி,முன்புவந்த இராக்கதனேவென்று கோபங்கொண்டு பின்பு இரக்கமுற்று இவன் இராக்கதனல்லன். நல்லொழுக்கத்தில் நின்று ஐம்பொறிகளையும் வென்ற சர்வோத்தமனாக வேண்டும், அல்லவென்றால் தேவனாகவேண்டும். மேலும் அறிவிலும் வார்த்தையிலும் பார்த்தால் பரிசுத்தனாகவும் குற்றமற்றவனாகவும் காண்கின்றான். ஆயினும் அரக்கன்தானாகட்டும், தேவன்தானாகட்டும், அல்லனென்று இப்பொழுது கொண்டிருக்கின்ற உருவத்தின்படியே வானரச்சிரேஷ்டன்தானாகட்டும். இத்தருணத்தில்சொல்லிக்கொண்டுவந்த வார்த்தையானது கொடுமையாகச் சொன்னதாயிருந்தாலும் இருக்கட்டும், அல்லதென்று உண்மையாக இரக்கமாய்ச் சொன்னதாயிருந்தாலும் இருக்கட்டும். எம்பெருமானுடைய திருநாமத்தைச் சொல்லி என்மனத்தையுமுருக்கி இச்சமயத்திலே நல்லதெளிவைக்கொடுத்தானேஇதைப்பார்க்கிலும் உயிருக்குவேறுதவிஎன்னசெய்யவேண்டும்! அல்லவென்றால் மற்றென்னதானிருக்கின்றதென்றுநினைத்துப் பிராட்டியார் கருணையுடனேபார்த்துப் பின்னும் என்னுள்ள மிரங்குகின்றது. இவன்மனத்திலே கள்ளமில்லாதான். வஞ்சமார்க்கத்தை யுடையானல்லன், அந்தரங்கமான வார்த்தையுடனே கண்களில் நீர்பெருகப் புலம்புகின்றான். ஆகையால் இவனைக் கேட்கலாமென்று எண்ணி நீ ஆரப்பாவென்றுகேட்க, அந்தத்திருமொழியைச் சிரத்திலேதாங்கிக்கொண்டு கைகூப்பித் தண்டஞ்சமர்ப்பித்துத் தாயே! தேவரீரை இரகுநாயகன்பிரிந்தபின்பு சம்பாதித்த சினேகனும், சூரியனுடைய குமாரனும், வானரகுலத்திற்கெல்லாந் தலைவனும், மிகவும் நல்லவனுமாகிய

சுக்கிரீவனென்கின்ற நாமத்தையுடையவனிருக்கின்றான். அவனுக்குத் தமையன் வாலியென்பவன். அவன் முன்னாளிலே இவ்விராவணனை வால்முனையிலே கட்டிக்கொண்டு எட்டுத்திக்குகளிலும் எழும்பிப்பாய்ந்து வெற்றிகொண்டவன். தேவர்கள் வேண்டிக்கொள்ள மந்தரமலையாகிய மத்தில்வாசுகியைக் கயிறாகச்சுற்றி அமிர்தமுண்டாகும்படிக் கடலைக்கடைந்த புயபலபராக்கிரமமுடையவன்; அப்படிப்பட்டவாலியை உம்முடையநாயகர் ஒரு அம்பினாலே பிராணனைவாங்கி, அவனுடைய இராசரிகத்தை அவன்தம்பியாகிய சுக்கிரீவனுக்குக்கொடுத்து அவனைத்தோழனாக்கிக்கொண்டனர். அந்தச்சுக்கிரீவனே எங்களுக்கு அரசனாயிருக்கின்றவன். அவனிடத்திலிருக்கின்ற மந்திரிமார்களில் நாயேன் ஒருமந்திரி, நான் வாயுகுமாரன், என்பேர் அநுமானென்பது. எங்கள் அரசனிடத்தில் எழுபதுவெள்ளஞ் சேனாவீரர்களிருக்கின்றார்கள். அவர்களில் ஒவ்வொருவரோ இவ்வுலகத்தையெல்லாம் பேர்த்தெடுக்கவேண்டுமென்றாலும் எடுப்பார்கள். சமுத்திரத்தையுந் தாண்டுவார்கள். அப்படிப்பட்டவர்களெல்லாம்கூட்டமாகக்கூடியிருக்கின்றார்கள். உம்முடைய பிராணநாயகர் எதைக்குறித்து ஆஜ்ஞாபித்தாலும் அதைக்குறிப்பினால்தெரிந்துகொண்டு அக்கணமேதவறாமல்செய்வார்கள். அநேகவானரங்கள் ஏழுசமுத்திரமும், அச்சமுத்திரஞ்சூழ்ந்த ஏழுவகைப்பட்ட தீவாயிருக்கின்ற பூமியும், நாகலோகமும், தெய்வலோகமுமாகிய இந்த அண்டமெல்லாந்தேடியும் உம்மைக்காணாவிட்டால் இந்த அண்டத்துக்கு அப்பாலும்போய்த் தேடும்படிப் புறப்பட்டுப்போயிருக்கின்றார்கள். இராவணன் உம்மையெடுத்துக்கொண்டுவருகிறபோது நீர்வஸ்திரத்தில் கட்டிப்பூமியில் எறிந்த ஆபரணக்குறிப்பினாலே சிராமபிரான் என்னை அழைத்துத் தனியேவைத்துக்கொண்டு சொல்லவேண்டியவைகளெல்லாஞ் சொல்லித் தென்றிசைக்குப்போய் வாவென்று ஆஜ்ஞாபித்தனர். அவருடைய கருணைக்கு விக்கினம்வருமா ! அன்று நீர் கழற்றிஎறிந்த ஆபரணங்களை எங்கள் மகாராசாவானவர் சுவாமி சந்நிதியிற்கொண்டுவந்து வைத்தபோது அவருக்கு உண்டாகியதுக்கம் என்னால் அறிந்துசொல்லக்கூடுமா ! தேவரீரேயல்லாமல் இராமசந்திரனுக்கு உயிர்நிலைவேறுண்டா! அந்தத்திருவாபரணந்தான் இந்நாள்வரைக்கும் உம்முடைய மாங்கல்யசூத்திரத்தைக் காத்தது. அது அப்படியிருக்கட்டும். வாலியினுடைய குமாரனும், எங்களுக்கெல்லாம் இளவரசுமாகிய அங்கதப்பெருமானென்பவன் இரண்டுவெள்ளஞ் சேனையுடனே தெற்குத்திசையில் தேடுவதற்குப்புறப்பட்டுவந்திருக்கின்றான். அவன் இலங்கைக்குப்போய்வாவென்றுசொல்லி என்னை அனுப்பினானென்று, நிந்தையை நீங்கிய திருவடி விண்ணப்பஞ்செய்து அன்புடனே மனமுருகுகின்றார். இப்படி அவர்சொன்ன வார்த்தைகளைக் கேட்டமாத்திரத்தில், மகத்தாகிய பிரமானந்தம் பொங்கியெழும்பப் பிராட்டியார் பெருமூச்செறிவது தவிர்ந்து, இளைத்திருந்த சரீரம் மிகவும் பூரித்து நான் உச்சீவிப்பதற்குக் காலம் வந்ததோவென்று கண்களில் அருவிபோல ஆனந்தபாஷ்பம் ஒழுக, அப்பா ! அவ்விரகுகுலோத்தமனுடைய திருமேனி எந்தப்படியிருக்கும் சொல்லென்று அருளிச்செய்தார். அவ்வார்த்தையைக்கேட்டு அநுமான்கழிபெருமகிழ்ச்சியு

டனே, அம்மா! சிராகவபிரானுடைய திவ்விய சுந்தரம் இப்படி யிருக்குமெ ன்று உவமானமெடுத்துக்காட்ட ஒருவராலுமாகாது. ஆயினும் நாயேன் அறி ந்தமாத்திரம் சொல்லிக்கொண்டுவருகிறேன். அவற்றில் ஏதாவது தவறுவந் தாலும் உமது திருவுள்ளத்தில் ஆயாசப்படாமல் அவருடையதிருமேனியைத் தேவரீர் அறிந்திருக்கிறவாறானபடியினாலே மனத்தினாற் சரியாகப் பாவனைசெ ய்து அங்கீகரித்துக்கொள்ளுமென்று சுவாமியினுடைய திருவழகைப் பாதாதி கேச பரியந்தஞ் சொல்லத்தொடங்கினர். சிராமபிரானுடைய திருவடிக ளிரண்டுஞ் செந்தாமரைப்புட்பங்களென்று தேவர்கள் துதிசெய்கிறபடியினா லே அந்தக்கமலத்தை விடத்தான் வேறேஉபமானஞ் சொல்லுகிறதற்கு என் னவஸ்து விருக்கின்றது அப்படிப்பட்ட திருவடியின் காந்திக்குமுன் பவள நிறத்தைக் கருங்குவளையைப்போலக் கறுப்பென்றே சொல்லவேண்டும். அத் திருவடிகளின் விரலழகுக்கு உவமானஞ் சொல்லுவதற்குக் கற்பகத்தின் அரும்பும் செம்பவளமும் எவ்வளவு? அவைகளிருக்கட்டும். இளஞ்சூரிய கிர ணங்களை ஒருவேளை ஒக்குமென்று சொன்னாலுஞ் சொல்லலாம், அவ்விரல் நகங்களுக்குச்சிறியவைகளும் பெரியவைகளுமாய்க்களங்கமில்லாமல் பத்துச் சந்திரர் உண்டாயிருந்தால் அவர்களை ஒப்பிடலாம்; அப்படித்தானில்லையே, இனிப் பிரகாசமுண்டாகிய வச்சிரத்தைச் சொல்லுவோமென்றால், அதில் திரட்சியுண்டாயிருக்கவில்லை, ஆகையால் நகத்தின் திருவழகுக்கு உவமான மறிந்து சொல்லமாட்டேன், அந்தத்திருவடி பூமியிலேபொருந்தாமல் அரணி யத்தில் நடந்து வருந்தியதானாலும் சாமுத்திரிகா சாத்திரத்திற் சொல்லப் பட்ட இலக்கணத்திற்குள் அடங்காமல் அதிலும் அதிக இலக்கணத்துடனே பிரகாசிக்கின்றதும் புவனமெல்லாம் கவிந்துகொண்டிருக்கின்றது மாகையால் அதனுடைய மகிமை ஒருவராலுஞ்சொல்லிமுடியாது. கணைக்காலுக்கு உவ மானம் அம்பறாத்தூணியென்றுசொல்லலாம்; சொன்னால் அதுதான்சரியாமா? திருத்தொடைகளுக்கு மதயானையின் தும்பிக்கையை ஒப்பாகச்சொல்லுவோ மென்றால் அதை அவைகள் வெட்கிப்போம்படிசெய்து அதிலும் அதிகமும் அழகாய்ப் பட்சிராசனுடைய கழுத்தைப்போல் ஜொலித்துக்கொண்டு இவ் வுலகத்தில் வேறே உவமானமில்லையென்று சொல்லும்படியிருக்கின்றன. அவ ருடைய திருவுந்திக்கமலத்திற்கு வலமாகச் சுழித்தோடுகின்ற கங்காநதியின் நீர்ச்சுழியை உவமானமாகச் சொன்னாலும் சரியாகமாட்டாது, ஆகையால் மகிழமலர்போல் விளங்குகின்றதென்று சொன்னால் சொல்லலாம்; அதைவிட வேறென்ன உவமைதானிருக்கின்றது. மரகதமலையானது அஞ்சும்படி அகன் றுயர்ந்து பிரகாசிக்கின்ற திருமார்பை, சிமகாலட்சுமிவிட்டுப் பிரியாதி ருக்கும்படித் தவஞ்செய்யாளானால் அவளைவிட்டுத் தரித்திரமுடையவர்கள் யாரிருக்கின்றார்கள்? கமலமென்று வண்டுகள்சுற்றும்படி முழங்கால் அளவும் நீண்ட திருக்கைகளுக்கு, ஐராவதத்தினுடைய தும்பிக்கையானது சிறிது உவமையாகுமென்று சொல்லலாம். அதுதவிர வேறொன்று உவமையாகுமா? பகற்காலத்திலே தாமரைமலர்களைக் கண்டதுபோலத் தோன்றுகின்ற அக் கைகளின் நகங்கள், முற்காலத்திலே இரணியனுடைய வச்சிர சரீரத்தைப்

ளிக்தபடியினலே இப்பொழுது அவைகள் கூர்மழுங்கியிருக்கின்றன. அந்த அழகியமணவாளருடைய திருத்தோள்களுக்கு உவமானமாக மால்வரையைச் சொல்லுவோமென்றால் அது திரண்டிருக்கவேண்டும், பிரகாசமுண்டாயிருக்கவேண்டும், விசயலட்சுமி வாசமாயிருக்கவேண்டும், வில்நாரி புரண்டுகொண்டிருக்கவேண்டும், கீர்த்திபொருந்தியிருக்கவேண்டும், ஒன்றைப்போல இரண்டு சேர்ந்திருக்கவேண்டும் இப்படியெல்லா மில்லாததினலே அப்புயங்களுக்கு மலை உவமானமாகமாட்டாது. திருக்கழுத்திற்குச் சமுத்திரத்திலுண்டாகிய சங்கத்தையும் கன்னிக்கமுகையும் தெரியாதவர்கள் உவமானமாகச் சொல்லுவார்கள். சேடசாயியாகிய திருமறுமார்பன் இடக்கரத்தில் ஏந்துகின்ற பாஞ்சசன்னியமிருக்க அவைகளையெல்லாம் உவமிக்க எனக்குச் சம்மதமா யிருக்கவில்லை. எம்பெருமானுடைய திருமுகத்திற்குச் செங்கமலத்தை உவமானஞ் சொல்லலாமென்றால் திருக்கண்களுக்கு உவமானமாகிய பொருள் வேறென்னசொல்லுவேன்? பூரணசந்திரனைச் சொல்லலாகாதாவென்று தேவரீர் அருளிச்செய்வீரானல், அச்சந்திரன் தன்பிரகாசத்துடனே உருவமும் நாளுக்குநாள் மெலிந்து தேய்ந்துபோவதனல் திவ்வியமாகிய பிரகாசத்துடனேகூடிய அத்திருமுகமண்டலத்திற்குச் சமானமாகத்தக்கதா? திருவாயின் அழகுக்குச் சிவந்தநிறத்தையுடைய தாமரையே ஒப்பாகுமென்றால் அதுநாணப்படும், அப்படியிருக்க, குளிர்ச்சிபொருந்தி அமிர்தமூறுகின்றமிருதுவாகியஇன்சொல்லுங் குறுநகையுமில்லாமலிருக்கின்ற பவளமா? அதற்கு உவமை சொல்லத்தக்கது? தகாததாயினும் பெரியோர்களாலே அந்தச்செவ்வாய் திருப்பவளமென்றுசொல்லப்பட்டிருக்கின்றது. கேளுமம்மா சானகியாரே! சுவாமியின்வரிசையாகிய தந்தங்கள் முத்துகளோ நிலவின் துளிர்களோ? அமிர்தத்தின் துளிகளோ தர்மத்தின் முளைகளோ? மெய்ம்மையின் அரும்புகளோ அல்லது மற்றெவைகளோ? அவற்றின் திருவழகுக்கு உவமானம் என்னவென்றுசொல்லுவேன்? கிருபாநிதியாகிய சீராமபிரானுடைய மேல்வாய் அதரத்தைச் சேர்ந்திருக்கின்ற திருமூக்கு இந்திரநீலக்கொழுந்தும் மரகதரத்ன காந்தியும்போலப்பசந்த மேனியை யுடையதாய், இந்திரகோபத்தைக் கவ்விய பச்சோந்தியைப்போலப் பிரகாசிக்கின்றதென்று சொல்லுவோமென்றால் அதுவும் உவமையாகமாட்டாது. அக்கரதூடண திரிசிரர்களுடைய யுத்தத்திலே அநேக அரக்கவக்தங்களும், பலவகைப்பட்ட பேய்களும், தேவர்களும், முனிவர்களும், தர்மமும், வேதமும், இனி அரக்கர்குலம் கட்டழிந்துபோமென்று சந்தோஷித்துக் குதித்துக் கூத்தாடவும், சுவாமியினுடைய பிரசண்ட உத்தண்ட கோதண்டமானது வளையவும் அன்றுவளைந்த அவருடைய திருப்புருவத்திற்கு உவமானம் நீரே பார்த்துக்கொள்ளும். நெற்றியின் திருவழகுக்கு உவமானஞ்சொல்லவேண்டு மென்றால்பிறையைத்தான் சொல்லவேண்டும். அதுவும் நடுவே மறுவும் வளர்வதும் தேய்வதும் பாம்பின்வாயில் அகப்படுவதும் உதயமாவதும் அத்தமிப்பதும் இல்லாமல் பகற்காலத்திலும் பிரகாசிக்கின்றதாய் இருளின்கீழ் எந்நாளும் சேர்ந்திருக்குமானல் அவருடைய திருநெற்றிக்கு உவமையாகும். கேசமானது நீண்டு, குழன்று, நெய்தோய்ந்து, இருண்டு, நெறி

த்து, நெருங்கி நீலவர்ணமாய்முறுக்குற்றுச்சரிந்து, கடைசுருண்டு, அகிற்புகை யுடனே மற்றுமுள்ள வாசனைகளை யூட்டவும் புட்பமாலைகளைச் சூட்டவும் வேண்டுவதில்லை யென்னும்படி, இயற்கையாய்த் தெய்வமணம் வீசிக்கொண்டு இப்போது சடையாயு மிருக்கின்றதென்றால் அதைமேகத்திற்குச் சமானமா மென்று சொல்வது இழிவல்லவோ? பிதாவானவர் பட்டாபிஷேகம் பண் ணிக்கொண்டு பாக்கியத்தையும் இராச்சியத்தையும் பெற்றிருந்து இராசரிகஞ் செய்யென்று சொன்னபோதும், சிறியதாயார் இராச்சியத்தைவிட்டு அரணி யத்திற்குப் போவென்று சொல்லப்புறப்பட்டு வந்தபோதும் ஒருதன்மையாய் நடந்த அச்சிராமபிரானுடைய நடையை இடபத்தின் இழிவாகிய நடைக்குச் சமானமாயிருக்கின்றதென்று சொன்னால், அப்படி எந்நாளும் ஒருதன்மையா கிய நடையில்லாத இடபத்தை உவமானமாகச் சொல்லுகிறவர்கள் என்னு டைய நடையைத்தானே சொல்லலாகாதாவென்று, மதயானை மனம்வருந்து மே, ஆகையால் இரண்டையுஞ் சொல்லக்கூடாதம்மாவென்று இவ்வண்ண மாக அனுமான்சொல்ல, அவற்றையெல்லாம் கர்ணாமிர்தமாகக் கேட்டுக்கொ ண்டுவந்த பிராட்டியார் அக்கினியிலிட்டமெழுகேபோல உருகித்தம்மை அறி யாமல் பரவசப்பட்டு மனங்கரைந்தார். அப்படி உருகுகின்ற சீதாபிராட்டியை மாருதி பூமியில்விழுந்து எட்டுறுப்பு நிலமுறச்சேவித்துக்கொண்டு என்தாயே! சர்வலோக சரணியனாகிய உம்முடைய பிராணநாயகர்சொல்லிய சிலகுறிக ளும் அடையாளச்சொற்களுமிருக்கின்றன; அவற்றையுஞ் சொல்லுகின்றேன், கேளுமம்மா உலகமாதாவே! என்று சொல்லுகின்றார்.

கவி.

நடத்தலரி தாகுநெறி நாள்கள்சில தாயர்க்
கடுத்தபணி செய்திவ ணிருத்தியென வச்சொற்
குடுத்ததுகி லோடுமுயி ருக்கவுட லோடும்
எடுத்தமுனி வோடுமெய னின்றது மிசைப்பாய்.

*  *  *  *

இருந்துபசி யாவிட ருழந்தவர்க ளெய்தும்
அருந்துமமு தாகிய தறத்தவனை யன்மும்
விருந்துமென லாகியது வீயுமுயிர் மீளும்
மருந்துமென லாகியது வாழ்மணி யாழி.  என்பன.

இரகுநாயகன் தேவரீரைநோக்கி வழிநடக்கிறதோ உனக்குப்பிரயாசம். சிலநாள்மாத்திரம் எனக்குத்தாய்மார்களாகிய உங்கள் மாமிமார்களுக்கு உரிய பணிவிடைகளைச் செய்துகொண்டு நீ இவ்விடத்தில்தானே யிருவென்று சொ ன்னவுடனே, நீர் உடுத்த ஆடையோடும் உயிர் பதைக்கின்ற தேகத்தோடும் மிகுந்தகோபத்தோடும் திருமாளிகையை விட்டுப் பிரயாண சந்நாகமாய் அப் பால்வந்து நின்றீராம். அதையும் சொல்லென்றும் அதுவுமல்லாமல்மகுடாதி பதியாகிய தசரத சக்கரவர்த்தியினுடைய ஆணையைச் சிரமாகவகித்துத்தாம் பெற்ற பரிபூரணமாகிய சம்பத்துகளையெல்லாம் விட்டுநீங்கி, வனத்திற்குவரும் போது பட்டணத்துமதிலையும் கோட்டைவாசலையும் தாண்டி வெளிப்படாத தற்கு முன்னேதானே காடு எங்கேயென்று கேட்டீராம்? அதையுஞ் சொல்

லென்றும் உங்களைத் தேரின்மேல் ஏற்றிக்கொண்டுவந்து வழிவிட்ட சுமந்திரருடனே செய்தி சொல்லி அனுப்பும்போது நீர் அவரைப்பார்த்து என்தங்கைமார்களுடனே உங்கள் தமக்கையாகிய சிதையானவள் ஸ்ரீ ரகுநாயகன் திருவாய்மலர்ந்தருளுகின்ற வசனசாதுரியத்தால், மனோதுக்கமெல்லாந் தணியப்பட்டாளென்றும் தான்வளர்த்த கிளிப்பிள்ளைக்கும் நாகணவாய்ப்பறவைக்கும் சொற்கள் கற்பித்து அவைகள் இளைத்துப்போகாமல் சாக்கிரதையாகக் காப்பாற்றச் சொன்னாளென்றும் சொல்லச் சொன்னீராம்; அதையுஞ் சொல்லென்றும் மற்றுஞ் சொல்லவேண்டியது என்ன இருக்கின்றதென்றும் சொல்லித்தமது திருநாமத்தைப் பதித்திருக்கின்றதும், எழுதப்படாத சித்திரவேலையையுடையதும் அழகும் பிரகாசமுமுள்ளதுமாகிய,ஒருதிருவாழியை எடுத்து இதை நீ சானகிகையிற் கொடுவென்று கொடுத்தாரென்று இரண்டு கைகளாலும் ஏந்திக்கொண்டு காண்பித்தார். அந்தக்கணையாழியைப் பிராட்டியார் கண்டார், கண்டபொழுது ஸ்திரீ ரத்னமாயிருக்கின்ற சானகியாருக்கு உண்டாகிய சந்தோஷத்தை என்னசொல்லுவேன்! மானிடராய்ப்பிறந்தும் மோக்ஷம் பெறவேண்டிய முயற்சியில்லாமல் இறந்தவர்கள் அதைச் சர்வேசுரனுடைய விநோதக கருணையால் அடைந்தார்களென்பதாகச் சொல்லுவேனா? ஒருபொருளைவைத்து மறந்துபோய்க்காணாமல் துக்கித்தவர்கள் மறுபடி அப்பொருளை நினைத்தெடுத்தார்க ளென்பதாகச் சொல்லுவேனா? தேகத்தைவிட்டு நீங்கிப்போன உயிரானது மீளவும் அத்தேகத்தில்தானே வந்து புகுந்ததென்பதாகச் சொல்லுவேனா? இப்பிராட்டியாருடைய செய்கையை அறிவதெப்படி? நாகமானது தானிழந்த தனது மாணிக்கத்தைத் தன் கண்ணுக்கு எதிரேயிருக்கக்கண்டது போலவும், தம்முடைய கையைவிட்டு நீங்கிய பிதிரார்ச்சிதமானதிரவியம் கிடைக்கப்பெற்றவர்கள்போலவும், பிள்ளைக்கு ஏக்கற்றிருந்த மலடி பிள்ளையைப்பெற்றதுபோலவும், கண்ணில்லாமலிருந்த ஆன்மா கண் பெற்றதுபோலவும் அமரிமிதானந்தத்துடனே அதைவாங்கி ஸ்தனங்களினிடத்தில் வைத்துச் சிரத்தின்மேல் தாங்கிக் கண்களில் ஒற்றிக்கொண்டு, தோள்கள் பூரித்து மெலிந்து குளிர்ந்து வெதும்பி ஏங்கிப்பெருமூச்செறிந்தார். அதை இன்னதென்று ஒருவரால் தெரிந்து சொல்லக்கூடுமோ? அத்திருவாழியை மூக்கினிடத்தில் வைத்து மோப்பார். திருமுலைகளின்மேல் சேர்த்துமுயங்குவார். கண்ணீரைத் துடைத்துக்கொண்டு மறுபடியும் கண்களில் நீர்ததும்ப நெடுநேரம் உற்றுப்பார்ப்பார். அதனுடனே பேசலாமென்றும் நினைப்பார். ஒன்றுஞ் சொல்லாதிருப்பார். மகிழ்ச்சியினாற் சரீரம் புளகித்து மயிர்க்குச் செறியப்படுவார். அதைவிழுங்குவோமென்றும் இச்சிப்பார். அந்த மோதிரத்தின் பிரகாசத்தினால், மின்னலுக்கு ஒப்பாகிய பிராட்டியாருடைய திருமேனிமுழுதும் மாற்றுயர்ந்த பொன்னிறமாய் ஒளிசெய்யத்தலைப்பட்டது அதனால் அந்தக் கணையாழியானது, தீண்டின மாத்திரத்தில் சகல வஸ்துகளையும் பொன்னாகச்செய்யும் ஸ்பரிச வேதியென்கின்ற தெய்விகமாகிய ரத்னந்தானோ? மற்றும் சானகியாருக்கு, அநேகநாள் பசியாயிருந்தவர்களுக்குத் தேவாமிர்தங் கிடைத்ததுபோலவும், தருமசிந்தை யுள்ளவர்க,

ளிடத்தில்வந்த விருந்தினர்போலவும், பிராணன் போகின்ற சமயத்திலே கிடைத்த சஞ்சீவிமருந்து போலவு மிருந்தது. மாணிக்கமயமாகிய அத்திரு வாழியானது இவ்வாருக உயிரை உருக்குதலால் அச்சகன்மாதாகண்ணீர் முத்துப்போல் தனங்களின்மேல்அளிக்க, பவளம்போலப்பிரகாசிக்கின்ற திரு வாயிலிருந்து உற்பத்தியாகியசொற்கள் குழற அநுமானே! என்பிராணனைக் கொடுத்தாய், ஆதலால் நீ பரமோத்தமனென்று சொல்லிப் பின்னுஞ் சில வார்த்தை சொல்லுகின்ருர்.

## கவி.

மும்மையா முலகந்தந்த முதல்வற்கு முதல்வ முற்றும்
செம்மையா லுயிர்தந்தாய்க்குச் செயலென்ரு லெளியதுண்டே
அம்மையா யத்தனுய வப்பனே யருளின் வாழ்வே
இம்மையே மறுமைதானு நல்கினை யிசையோ டென்ருள்.

* * * *

பாழியாம் பணைத்தோள்வீர துணையிலேன் பரிவு தீர்த்த
வாழியாய் வள்ளலேயான் மறுவிலா மனத்தே னென்னின்
ஊழியோர் பகலா யோது மாண்டெலா முலக மேழும்
ஏழும்வீ வுற்ற ஞான்று மின்றென விருத்தி யென்ருள்.

சுவர்க்கமர்த்திய பாதாளமாகிய மும்மையுலகத்திலுமுள்ள சகல உயிர்க ளையும் சிருட்டித்த முதல்வனுக்கும் முதல்வனுனவனே! என்சரீரத்தைவிட்டு நீங்கிப்போய்விடுகின்ற உயிரைக்கொடுத்த உனக்குக் கைம்மாறு நானென்ன செய்யப் போகின்றேன்? என்ருல் செய்வதற்கு எளிதாயிருக்கின்றதா? என க்குத் தாயும் தந்தையுமாகிய அப்பனே! கிருபைக்கு வாழ்வானவனே! இம் மையு மறுமையும் புகழுடன்தந்த வலியதோளையுடைய வீரனே! ஒருதுணையு மில்லாதேன் துன்பத்தைத் தீர்த்தவனே! நான்குற்றமில்லாத மனமுடையே னென்ருல் ஊழியையோர் பகலாகக்கொண்டோதும் வருஷங்கள் எல்லாம் பதினன்குலகமும் அழியும் வரையும் இன்றுபோல இருக்கவேண்டுமென்ருள். பின்னுஞ் சொல்லுவார் மேலாகிய குணத்தையுடையானே! இரகுநாயகனும் இளையபெருமாளும் எவ்வாறடைந்தனர். எவ்வாறுன்னையடைந்தனர், அடி யேன் செய்கை யார்சொல்லவறிந்ததென்றனர், அதற்கு அனுமானும் சொல லத்தொடங்குவார்; மானுருக்கொண்டு துன்பஞ்செய்தான் மழைபோலும் கருநிறத்தையுடைய மாரீசனென்பவன்; அவனே இராமபாணம்பட பூமியில் விழுந்தருணத்தில் அழைத்துக்கூவியபேரொலி யும்மை மயக்குங்காரணமாக வே அரக்கன்சொல்ல, அதைக்கண்ணுற்ற இராகவனும் இக்குரல் இளையவன் கேளாதொழிகவெனச் சாபமளித்தருளினன், பின்னே விதியின் மெய்மை கைகூடியது, பொய்க்குரலென்றுபோலாம் மெய்மை பின்னே தருமென்று நினைக்குமென்னும்கோதண்டதீட்சாகுருவோ இளையவன்வரவைக்கண்டான். கண்டபின்பு இளையபெருமாளுடையமுகத்தினல் நடந்ததையறிந்துகொண்ட இரகுநாயகன் பின்னும் நடந்த செய்தியையனைத்தும்கேட்டான். வண்டுறை சாலையையடைந்து உமது திருவுருக்காணுமல் உயிருண்டோ இல்லையோவென் னுந்தன்மையனுய்த் துன்பத்தால்மிகத்துன்பமுற்றிருந்தான். உலகமாதாவே!

உன்னையெங்குந்தேடி இப்பொழிலகத்துக்கண்டேன், இதுவரையும் நீதிலனாக வேயிருக்கின்றான், தேகத்திற்குடியிருக்கின்ற உயிரோபோகப் பொய்யுயிர்கொண்டிருக்கின்ற இறைவன் நெஞ்சினின்று மகலாதிருக்கின்றாய்; அழிவுண்டாமோ! இங்கே நீரிருக்கின்றீர், இராகவபிரான் ஆண்டெக்தவுயிரைவிடும், அந்த நிலையினின்ற இராகவபிரான் அங்கிருந்தும் உலகமாதாவே! உன்னைத்தேடத் துணிந்து மலைவனம் வனாந்தாமுதலியவைகளைக்கடந்து தேடியுயிரில்லாமல் கடக்கும் யந்திரப்பாடிவமேபோலத் தன்னுயிரைப் புகழின்பொருட்டுவிற்ற சடாயுவைக்கண்டான்.

அவ்வாறுகண்டு அவன்மேனியைநோக்கி மிகத்துயரமடைந்து நீயடைந்தகாரணமென்னவென, இரகுநாயகனுக்கு மின்னை இராவணன்செய்த வஞ்சனையைச்சொல்லச்சொல்ல உலகம் வெந்ததென்று சொல்லும்படி கோபத்தீயெழுந்ததும் நான் இவ்வுலகத்தை என்னம்பாற் சுட்டெரிப்பேனென்று தன் கைவில்லை நோக்கியபோது அப்பா இரகுநந்தனா! அற்பனாகிய இராவணன் சிறுமையைச்செய்ய நீயுலகமுழுதையும் சுட்டெரிக்க வெண்ணலாமா? நீ கொண்ட கோபந்தணியென்று சடாயு தேற்றுவதினாற் கோபந்தணிந்து அவன் எவ்வழிசென்றான், எங்கிருப்பவன், அவன் ஊர்முதலியனயாவை? நீர் சொல்லுமென்றுசொல்ல, அதைச்சொல்லத்தொடங்கியகாலத்தில் உயிர்நீங்கவே, இருவரும்மிகத்துயாமடைந்தனர். பின்னர்அச்சடாயுவை யீமத்தேற்றிச் செய்யத்தக்ககடன்மை முழுதுஞ்செய்து நாம் அவன்சென்றவழிநாடித் தொடர்வோமென்று மலைவனம்வனாந்தா முதலியவைகளைக்கடந்துசென்றார்கள். அவ்வாறு மின்னைத்தேடியுங்காணமல் கண்ணீர்ப்பெருக்கெடுத்தோடுவதனால் நிலத்தைச்சேறுசெய்ய நெருப்பைக்கண்ட மெழுகேபோல இரகுவீரன் உருகுமெய்யையுடையானாய் இவ்வாறு பிரலாபிக்கத்தொடங்கினான்.

கன்மத்தை யுலகத்தில் யார்தான் கடப்பார்கள். பொன்மொய்த்த தோளையுடைய இராகவபிரான் மையல்கொண்டு புலன்கள்வேறாகி ஊமத்த மலரைப் பாம்பினையலணிந்த நம்பனாகிய பரமசிவனேபோல உன்மத்தனாய்த் தன்னைச்சிறிது மறியாதவனாயினன். பின்னும் மேகம்போல்பவனாகிய இரகுநாயகன் போதாயினபோது உன்பால் தண்ணீராயாடுவதுபொய்யோ? சீதையாகிய பவளக்கொடிபோல்பவளைத்தேடி யென்னிடத்தே நீயே தரவேண்டும், நீதாராமற்போவையேயானால் நெருப்பாய்விடுவாயென்று கோதாவிரியாற்றைப் பார்த்துக்கோபித்தான். மலையைப்பார்த்துக் குன்றே விரைந்துபோகின்றாய்; கோமளக்கொம்பேபோன்ற என்மனைவியைக்காட்டு, நீகாட்டாவிட்டால் இங்கென்னம்பொன்றேபோதும், உன்னுடைய குலமுள்ளனவனைத்தும் எரிந்து கரிந்து பொரிந்துபோகவென்றுஞ் சொல்லிக்கொள்வான். பொன்மானுருக்கொண்டு சிலமாயைகளைச்செய்யவல்லவா! என்மான்போன்ற சானகிபிரிந்தனள், இப்போதென்று சொல்லிக்கொண்டுங்கள் இனத்தை என்வில்லால் மாய்க்கின்றேனென்று மான்களைக் கோபிப்பான். இவ்வாறு தன்பெருமை தானறியாத்தன்மையனாகிய சிராமபிரான் துன்பத்திலாழ்ந்துவருந்த அதைக் கண்ட தம்பிசொல்லித்தேற்று மருந்தாகியமொழியினால் வருத்தந்தணிவான்.

அவ்வாறு தணியப்பெறுபவனுகிய சிராமபிரான் அந்தஇளையபெருமாளுடனே கூடிக்கொண்டு புறப்பட்டுச் சூரியனுல்உற்பத்தியாகிய எங்கள் சுக்கிரீவமஹாராஜனிருந்த இரிசியமுக பர்வதத்திற்குவந்தார். வந்தவிடத்தில் தேவர்கள் உஜ்ஜீவிக்கும்படி ஸ்ரீராமலட்சுமணர்களுக்கும் சுக்கிரீவமஹாராஜனுக்கும் சிநேகமுண்டாயிற்று. அத்தருணத்தில் தங்களுக்குச்சம்பவித்த ஆபத்தையும் அதுகாரணமாகத் தாங்கள் அவனைத்தேடிவந்ததையும் ஒன்றொழியாமற் சொல்லி மனம்புண்ணுககோம்படி வருத்தப்படுமளவில் உம்முடைய திருவாபரணங்களை நாங்கள்காட்ட வேதத்தினுலும் ஞானத்தினுலும் காணப்படாத பரப்பிரமமாகிய இராகவர் அவைகளைக்கண்டு சரீரஸ்மரணையில்லாமல் மூர்ச்சித்திருந்தார்.

அவ்வாறு மூர்ச்சித்திருந்துபின்புதெளிந்து அவ்விரிசியமுகபர்வதத்திற்கு அப்புறத்திலுள்ள கிஷ்கிந்தா பர்வதத்திலிருக்கின்றவனும் இந்த இராவணனை முன்னுளில் தன்வாலிலேகட்டிக்கொண்டு மலைகளையும் கடல்களையும் தாவினவனும் சுக்ரீவனுக்குத் தமையனும் பகைவனுமாகிய வாலியென்பவனை ஒருபாணத்தினுலே பிராணனைவாங்கித் தம்மிடத்தில் அதிக இஷ்டத்தையுடையவனுகிய அவன் தம்பியினது துயரத்தையாற்றி அவனுக்கு இராச்சியபட்டாபிஷேகஞ்செய்வித்து அவனைச்சேனைகளைச் சேகரித்துக்கொண்டுவரும்படி ஆக்கியாபித்து அனுப்பிவிட்டு அவனச்சேனைகளைக் கூட்டிக்கொண்டு வருகின்றவனையும் எதிர்பார்த்துக்கொண்டு அப்பொழுது மாரிகாலமானபடியினுல் ஆறுமாதபரியந்தம் மதங்கபர்வதத்திலிருந்தார். பின்புவந்துசேர்ந்த வானரச்சேனைகளைச் சுக்ரீவனுடைய ஆக்கினையினுலே எட்டுத்திக்குகளிலும் அவைகளுக்கு அப்புறத்திலும்போய் உம்மைத்தேடும்படி அனுப்பி அடியேனைத் தென்திசைக்குப் போய்வாவென்று அனுப்ப வந்தேனென்று பூதபௌஷிய வர்த்தமானமாகிய திரிகால அதிசயங்களையும் அறியத்தக்க திவ்விய ஞானியாகிய ஆஞ்சநேயர் மகத்தாகிய அன்புடனே இரண்டுகால்களையுஞ் சேரவைத்துக் கைகட்டி வாய்புதைத்துக்கொண்டு நின்று நைச்சியமாக விண்ணப்பஞ்செய்தனர். அவைகளைக்கேட்டுச் சிதாபிராட்டியார் சாத்விகப்பிரமமாகிய ஸ்ரீராமர் படும் உபத்திரவங்களையெல்லாம் நினைத்துநினைத்து எலும்பும் உருகிக்கரைய இரங்கி ஏங்கித்துக்கமும் சந்தோஷமும் மாறிமாறித்தோன்றுகின்ற உள்ளத்தையுடையவராய்க் கண்ணீர்தாரைதாரையாகப் பெருகப் பூரணகிருபையுடனே பார்த்து அப்பாகுழந்தாய் அநுமானே! நீவந்த மார்க்கத்தின்மத்தியிலே சமுத்திரமிருக்கின்றதே? அதை எப்படிக்கடந்துவந்தாய் சொல்லென்று கேட்டருளத்தாயே தேவரீருக்கு நாயகராகிய ஸ்ரீராமச்சந்திரருடைய பொன்னடியைத் தியானிக்கின்றவர்கள் ஒழியாத மூலப்பிரகிருதியாகிய பெரியமாயா சமுத்திரத்தைக்கடந்து பரமபதக்ஷேத்திரத்தைச் சேர்கின்றதுபோலத் தாசனுகிய நானும் அவர்திருவடியை ஸ்மரணைசெய்துகொண்டு என்காலினுலே தான் இக்கடலைக்கடந்துவந்து உம்முடைய சரணுரவிந்தத்தை அடைந்தேனென்று அநுமான் சொன்னுர். அதுகேட்டுச் சிதாபிராட்டியார் ஆச்சரியப்பட்டுக் கேளப்பா! இவ்வளவு சொற்பமாகிய சரீரத்தையுடைய நீ அவ்

வளவு பெரிதாகிய சாகரத்தைக் கடந்துவந்தது தபோபலத்தினாலேயோ! அல்லது அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராப்தி, பிரகாமியம், ஈசத்துவம், வசித்துவமென்கின்ற அஷ்டமாசித்திகளாலேயோ! சொல்லக்கடவாயென்று புன்சிரிப்புடனேகேட்க ஜகதீசுவரியே! என்னுடைய சொற்பமாகிய உருவத்தைப் பார்த்தருளுமென்று இரண்டுகைகளையுங் குவித்து அஞ்சலிபண்ணி நின்றபடியே, அண்டமுகட்டைமுட்டுகின்ற சிரமும்திசைகளெல்லாம் நிறைந்ததோள்களும் பஞ்சமாபூதங்களுஞ்சேர்ந்து ஒருவடிவெடுத்ததுபோலச் சரீரகாத்திரமுமாய் மகாமேருவில் வளர்ந்தோங்கிய விருக்ஷசாலங்கள்தோறும் மொய்த்துக்கொண்டிருக்கின்றமின்மினிக்கூட்டங்கள்போல்தமதுதிருமேனியின்உரோமங்கள்தோறும் நக்ஷத்திரங்கள் தொத்திக்கொண்டிருக்கவும் கண்ணுக்கும் அறிவுக்கும் எட்டப்படாத காட்சியுடனே சந்திரமண்டல சூரியமண்டலங்களுக்குப் பிரதியாய் இரண்டுகாதிலும் மகாகுண்டலங்கள் பிரகாசிக்கவும் அதியுன்னதமாக வளர்ந்தார். அதற்குமுன் இதுமிகவும் அற்பமாகிய ஒருகுரங்கென்று அலக்ஷியமாக நினைத்த பிராட்டியாரும் அப்படி விசுவரூபங்கொண்ட அந்த ஆஞ்சனேயனை உற்றுப்பார்த்து இந்த அநுமானுடைய உயர்வுக்குத்தமது திரிவிக்கிரம சொரூபத்தின் உயர்வும் ஒரு இலக்ஷியமாகத்தக்கதன்றென்று, உலகங்களையெல்லாம் அளந்த மகாவிஷ்ணுவும் வெட்கப்படுவாரென்று எண்ணினார். அப்பொழுது அஷ்டதிக்குகளிலும் எல்லா உலகங்களிலும் உள்ள சகல ஆத்மாக்களும் அவரது திருமேனியைக்கண்டன, அவரும் தம்முடையநேத்திரத்தினால் சுவர்க்காதிலோகங்களிலுண்டாகிய சகலதேவர்களையும் பார்த்தார் இவ்வண்ணமாக எழுந்துஉயர்ந்த பரமோத்தமனாகிய அநுமானுடையஇரண்டு பாதங்களும் அழுந்துவதினால் நிலம்புதைந்து இலங்கைக்குள்ளே சமுத்திரம் வந்துவிழுந்தது அலைவீசத் தலைப்பட்டதனால் கடலிலிருந்த மீன்களெல்லாம் அந்த இலங்காபட்டணத்திலே நெளிந்துபுரண்டன மறுவில்லாத கற்புடைய ஸ்திரீரத்னமாகிய சானகியார் அந்த மாருதியினுடைய தாமரைப்புஷ்பத்திற்கு ஒப்பாகியபாதத்தின் உயரத்தையுங்காணாதவராய் அதிசயித்து இனிராக்கதவர்க்கம் நிர்மூலமாய்ப் போய்விடுமென்று திருவுள்ளத்திற்குறித்துக்கொண்டு அநுமானைநோக்கி அப்பா! என்கண்மணியாகிய ஆஞ்சனேயனே! எனக்குப்பார்க்கப் பயமாயிருக்கின்றது. உலகத்திலும் உன்னுடைய விசுவரூபத்தை முழுதும் பார்க்கத்தக்கவர் யாவருமில்லை, ஆகையாலிதைச் சுருக்கிக்கொண்டு முன்பு உனக்குள்ள வடிவமே கொண்டிருவென்றுசொல்லி இரகுநாயகருடையதிருத்தோள்களைத்தழுவியதுபோலஆனந்தபரவசப்பட்டார். அப்படிப்பிராட்டியார் நியமித்தமாத்திரத்தில்என்தாயே புத்திபுத்தியென்று சொல்லி அண்டத்திற்கு மேலும் உயர்ந்த அநுமானே அந்த விசுவரூபத்தையடக்கிக் கண்ணுக்கு அடங்கத்தக்க முன்னைய உருவத்துடனே எதிரே நின்று நமஸ்காரஞ்செய்தார். அவனைப்பார்த்தருளிப் பின்னும் பிராட்டியார்சொல்லுகின்றார்.

இடந்தாயுலகைமலையோடுமெடுத்தாய்விசும்பையிவைசுமக்கும்
படந்தாழரவையொருகரத்தாற்பறித்தாயெனினும்பயனின்றால்
நடந்தாயிடையேயென்றாலுநாணேனினக்குநளிர்கடலைக்
கடந்தாயென்றாலென்னாகுங்காற்றுமன்னகடமையாய்.

* * * * *

மாண்டேனெனினும்பழுதன்றேயின்றேமாயச்சிறைநின்று
மீண்டேனென்னையொறுத்தாரைக்குலங்களோடும்வேரறுத்தேன்
பூண்டேனெங்கோன்பொலன்கழலும் புகழேயன்றிப்புன்பழியும்
தீண்டேனென்றுமனமகிழ்ந்தாடிருவின்முகத்துத்திருவன்னாள்.

என்பன.

பிரசண்டமாருதத்திற்கு ஒப்பானவேகத்தையுடைய அதிவீரனாகிய அநுமானே! உன்சாமர்த்தியத்தைப்பார்த்தால் நீ இந்தப்பூமியைப்பேர்த்தாலும்சப்தகுலபர்வதங்களுடனே ஆகாசத்தைஎடுத்தாலும், இவற்றைச் சுமந்துகொண்டிருக்கின்றஆதிசேஷனை ஒருகையினாற்பறித்தாலும் ஒருபிரயோசனமுமில்லை; அல்லாமலும் கடலின்மத்தியிலே நடந்தாயானாலும் அதுவுனக்கு நாணுதலாகவேயிருக்கும் அப்படியிருக்க நீ இக்கடலைக்கடந்தாயென்று சொல்லுகின்றது சிறுமையேயல்லாமல் எவ்வளவுபெருமையாகும்? சக்கரத்தைக் கையிலேதாங்கிய அப்பரமபுருஷருடைய கிருபையையும் கீர்த்தியையும் அழிவில்லாமல் பல்லூழிகாலம் நிலைநிற்கும்படிச்செய்வதற்கு நீ ஒருவனே யுண்டாயிருக்கின்றாயாகையால் உன்பெருமைக்குத் தக்கபடி இந்தப் பகையாளியினுடைய இலங்கையானது ஏழுசமுத்திரத்திற்கும் அப்புறத்திலிராமல் இவ்வளவு சமீபத்திலிருக்கின்றது இழிவன்றோ? உனக்கு அறிவும் சொருபமும் பராக்கிரமமும் ஐம்புலன்களை அடக்குந்தன்மையும் செய்யுங்காரியமும் தெளிவும் தெளிந்தஒழுக்கமும் நினைவும் நீதியுமாகிய இவையெல்லாம் ஒன்றுக்கொன்று குறைவில்லாமலிருக்கின்றன. ஆதலால்இனிப்பிரமாமுதலாகிய மேலானவர்களெல்லாம்இப்படிப்பட்டகுணங்களில் ஒன்றுமில்லாதவர்களென்றன்றோ சொல்லப்படுவார்களென்றும் மின்னலுக் கொப்பாகிய கோரப்பற்களையும் பலத்தையுமுடைய இராக்கதக்கூட்டம்மிகுதியாயிருக்கின்றதைப்பார்த்தும் என்பிராணநாயகருக்குத் தம்பியாகிய இலட்சுமணர் ஒருவரேயல்லாமல் வேறுதுணையில்லாத பிழையைப்பார்த்து எண்ணியெண்ணி மனந்தளர்ந்த நான் இந்தமகாபுருஷன் என்னாயகருக்கு உபபலமாயிருக்கின்றதனால் பயமென்ன? இராக்கதர்கள் என்னத்திற்காவார்களென்று தைரியங்கொண்டு இப்பொழுதுதான் அந்தச் சந்தேகம் ஒழிந்து உயிர்பெற்றேனென்றும் இனி நான்மாண்டாலும்பழுதில்லை, இன்றே இந்தமாயச்சிறையில் நின்றும்நீங்கினேன். எனக்கு இப்படிப்பட்ட துக்கத்தைக்கொடுத்த சத்துருக்களுடையகுலத்தையும் நலத்தையும்வேரறுத்தேன். என்பிராணநாதருடையதிருவடியையுஞ்சேவித்தேன்இனிஎனக்குக் கீர்த்தியேயல்லாமல் பழிப்புண்டாகாதென்றுஞ் சொல்லிஸ்ரீமகாலட்சுமியின் திருமுன்னர் திருமகளுக்குச்சமானமாகிய சீதாபிராட்டியார் சந்தோஷித்தார். அத்தருணத்திலே பிராட்டியாருடைய திருவடியைவணங்கிக் கேளுமம்மா! அருந்ததிக்கு ஒப்பாகிய கற்புக்கரசே! அடியேன் ஒருஅதிசயமானவனா? நான் எவ்வளவு? ஸ்ரீராமருக்கு இந்தக்கடலிலே கிடக்கின்ற மணலைப்போல அநேகவானரசேனாவீரர்களிருக்கின்றார்கள். சுவாமியின் திருவடித்தொண்டு செய்கின்ற படைத்தலைவர்கள் எண்ணிறந்தவர்க ளிருக்கின்றார்கள். அப்படைத்தலை

வர்களுக்குள்ளே நான் ஒரு படைத்தலைவனாய்வந்தேன். அழைத்தருளுக்கு ஏனென்பேன். ஏவியபணிவிடைகளைச்செய்வேன், முன்சொன்ன வானர சைநியமே? ஒருவிதத்தினால் எழுபதுவெள்ளமாகும் அவற்றுக்குள்ளே ஒவ்வொரு குரங்கு ஒவ்வொருகை அள்ளிக்குடிக்கிறதற்குத்தான் இந்தச்சமுத்திர சலம்போதுமா? கள்ளச்செய்கையையுடைய அரக்கர்களது லங்கையை அவைகள் காணாதபடியினாலே இதுவரைக்கும் அழியாமலிருக்கின்றது இப்பொழுது அறிந்தபடியால் இனிநிற்குமா? நிற்கமாட்டாது; வாலியினுடைய தம்பி சுக்ரீவ மஹாராஜனும் அவன்புத்திரனாகிய அங்கதகுமாரனும் மயிந்தன், துமிந்தன், குமுதன், நீலன் ரிஷபன், குமுதாட்சன், பனசன், சரபன் ஜாம்பன், துர்மருஷணன், காம்பன், கயவன்,கவயாட்சன், சங்கன், வினதன், துமிந்தன், நளன், ஸ்ரம்பன், தூமன், ததிமுகன்சதவலி, என்றுசொல்லப்பட்ட வானரப்படைத் தலைவர்களும் இந்தவுலகத்துடனே எவ்வகைப்பட்ட உலகங்களையும் எடுக்கத் தக்க மகாபலவந்தர்களாயிருக்கின்றவர்கள். மேலும்இராமபாணத்தைப்போல உதவிசெய்கின்றவர்கள், அந்த வானரவீரர்களையெல்லாம் பார்த்தால் இந்த இராக்கதக்கூட்டம் அவர்கள்தொகைக்கு உறையிடுகிறதற்கும் போதாது; அப்படி எண்ணத்தொலையாத வானரசேனையிருக்கின்றதம்மாவென்று இப்படி விசதமாக ஆஞ்சனேயர்சொன்னார்.

உருக்காட்டுப்படலம்
முற்றிற்று.

---

## சூடாமணிப்படலம்.

---

மறுபடியும் அந்த அநுமானானவர் ஸ்ரீமகாலட்சுமிக்குச் சமானமாகிய இந்தப்பிராட்டியார் வெகுவாகத் துன்பப்படுகின்றார். இவருக்குத்துணையுமில்லை. சகலாண்டங்களுக்கும் தனிநாயகமாகிய எங்கள் இராமபிரானுடைய உயிருக்குறைப்பாயிருக்கின்ற இவரைநான்பார்த்தும் இங்கேதனியேவிட்டுப்போகின்றது நன்மையன்று, சுவாமியினிடத்திற்கொண்டுபோகிறதே யுக்தமென்று தமக்குள்ளேயோசித்து லோகோத்தமியாகிய சானகியாரைநோக்கி, அம்மா நாயேன் ஒரு விண்ணப்பஞ்செய்துகொள்ளுகிறேன். அதைத்தேவரீர் கோபமில்லாமல்கேட்டருளவேண்டும். இந்த இராக்கதன் உம்மைக் கொன்றுவிடுவானேயானால் அப்புறம் இவனைக்கொல்லுகிறது காரியமன்று இவ்வளவு பிராணனுடனேவைத்திருக்கின்ற இந்தச்சமயத்தில்தானே உம்மைக்கொண்டு போய்ச் சுவாமிசந்நிதியில்காட்டி, அவர்திருவடிக்குத் தண்டன்சமர்ப்பிக்கலாமென்று என்மனத்திலே தோன்றுகின்றது. ஆகையால் அதிக மிருதுவாகிய உரோமங்கள்நெருங்கி அமிசதூளிகாமஞ்சம்போலிருக்கின்ற அடியேனுடைய தோளின்மேல் எழுந்தருளுவீராகில், தேவரீரை ஏந்திக்கொண்டு மத்தியிலெங்குந்தங்காமல் ஒரு இமைப்பொழுதுக்குள்ளே ஸ்ரீராகவர் எழுந்தருளியிருக்கின்ற மலையின்மேல்தாவிக் குதிக்கின்றேன். அதையறிந்து இராக்கதர்கள் இடையிலேவந்து தடுத்தாலும் அவர்களெல்லாமுறிந்து அதமாய்ப்போம்படி எதிர்த்து யுத்தஞ்செய்து சங்கரித்து என்கோபத்தை முடித்துக்கொள்ளுகி

றேன். நான் ஒருநாளும் ஒருவர்கையிலுஞ்சாகாதவன். கேளுமம்மாதாயே! நாயேன் இவ்விடத்திற்குவந்து நீரிருக்கின்ற இருப்பைக்கண்டும் சுவாமியினிடத்தில் வெறுங்கையுடனே போகமாட்டேன். இலங்கையுடனே உம்மைக் கொண்டுபோகவேண்டுமென்று நீர் சொன்னாலும் அப்படியே அடியோடே பயித்தெடுத்து, என்னுடைய உள்ளங்கையில் வைத்துக்கொண்டு எதிரேவந்து தடுத்தவர்களைக்கொன்று குவித்துவிட்டுப்போய் ஸ்ரீராம சந்திரனுக்குப் பாத காணிக்கையாகவைக்கின்றேன். இது எனக்கு ஒருபொருளன்று. நீரேசொல்லும். சுந்தரத்திருத்தோளனாகிய எம்பெருமான் பக்கலிற்போய் என்தாயாரும் உம்முடைய தேவியாருமாகிய தேவாமிர்தத்தை ஒத்த சீதையானவர் சதிகாரராகிய இராக்கதர்களுடைய பட்டணத்தில் சிறைவைக்கப்பட்டு, மிகுந்த துயரத்துடனே அந்த அருஞ்சிறை நீங்காதிருக்கின்முரென்று சொல்வேனேயானல் அப்பால் என்னடிமைத்திறம் என்னுகும்? பிரபலமாகிய யுத்தஞ் செய்து என்தோளிலே புண்படாமற்போய்ச் சுவாமிசந்நிதியில் சத்துருக்களுடைய பராக்கிரமத்தையே விஸ்தரித்து எடுத்துச்சொல்வேனு? அல்லது பிராட்டியாரைக் கொண்டுவரவில்லை என்பிராணனுக்குமாத்திரம் அபாயமில்லாமல் வந்தேனென்பேனு? அல்லது சானகியாரை நான்காணவேயில்லையென்பேனு? அப்படிவேண்டியதில்லை. ஒருகணப்பொழுதில் இராக்கதக்காவலையுடைய இந்த இலங்கையைமுழுமையும் எரித்து நீறுக்கி, இராக்கதகுலத்தையெல்லாங் கொன்றுகருவறுத்து ஜயம்பெற்றுக்கொண்டு சீக்கிரத்தில்போவென்று நீர் ஆக்கியாபித்தாலும் அந்தப்படிச்செய்கின்றேன். அன்றென்றுஉம்மை நான்கொண்டுபோய் இரகுநாயகரிடத்தில் சேர்த்தேனேயாகில் அவருடைய சித்தசாஞ்சலியம் நீங்கித் தெளிவுண்டாய், தேவரீருடன் அவரிவ்விடத்திற்கு வந்து அளவற்ற இராக்கதவமிசங்களை நாசமாகச் சங்காரஞ்செய்து பின்பு உலகத்திற்குச் சம்பவித்திருக்கின்றதுன்பத்தைநிவாரணஞ்செய்கின்றது, நன்மையாகக்காண்கின்றது. ஆகையால் இனிவேறே சொல்லத்தக்கதில்லை. நானிந்த பேறுபெறும்படிக்கிருபைசெய்து கிலேசப்படாமல், அடியேனுடையதோளின்மேல் ஆரோகணித்தருளுமென்று சொல்லித் திருவடியில் சாஷ்டாங்கமாக விழுந்து சேவித்தார். இவ்வாறுகத் தகுதியான நல்வசனங்களை அன்புடனே வசனித்துத் தாய்ப்பசுவைக்கண்ட இளங்கன்றைப்போலக் களிக்கின்ற அனுமானைப்பார்த்து இவனலே ஆகாதகாரியம் ஒன்றுமில்லை. தான்சொன்னபடியே செய்யத்தக்கவனென்று திருவுள்ளத்திலெண்ணிப் பிராட்டியார் சொல்லுகின்றூர்.

கேளப்பா ஆஞ்சநேயனே! நீயுன்னுடைய சாமர்த்தியத்திற்குத்தக்க யோசனையேசெய்தாய். அது உனக்கு அரியதன்று, அப்படிச்செய்யவே செய்வாய், அதற்குச்சந்தேகமேயில்லை. ஆயினும் இது உரிய செய்கையன்றென்று மிகுந்த பேதைமையான என்பெண்புத்திக்குத்தக்கதாக ஒருயோசனை எனக்குத்தோன்றுகின்றது. அது என்னவென்றுல், நீ என்னை எடுத்துக்கொண்டுபோகிறபோது சமுத்திரத்தின் நடுவிலே இந்தக்கொடிய இராக்கதர்கள் வந்து சுற்றிக்கொண்டு, வில்லைவளைத்துப் பாணப்பிரயோகஞ்செய்து

போராடினால் அத்தருணத்தில் என்னையே பாதுகாப்பையா? அவர்களுடன் யுத்தமேசெய்வையா? ஒருவருந்துணையில்லாமல் தனிமையாயிருக்கின்ற நீ மிகவும் பிரமிக்கும்படிவருமே. அதுவுமல்லாமல் வேறொன்றிருக்கின்றது. ஸ்ரீராகவருடைய விஜயகோதண்டத்தின் பிரதாபத்திற்கும் மாசுண்டாகும். ஆதலால் அதனால்வருகின்ற நன்மையென்ன? அவர்கள்தான் நாய்போல வஞ்சித்து ஒருவருமறியாமல் என்னைக்கொண்டுவந்துவிட்டார்கள். நீங்களும் அப்படி நினைக்கலாமா? யுத்தத்திலே சுவாமியின் வில்வீரத்தைத் தேவர்களெல்லாம் காண என்வடிவத்தைக்கண்ட பாவியாகிய இராவணனுடையகண்களைக் காகங்கள் கொத்திக்கொத்தித்தின்னும்படி, என்கண்ணினாலே கண்டபோதல்லாமல் காணுயிருள்ளவளாவேனா? நாணமில்லாத ராட்சதிகளுடைய தாலிகளெல்லாம் சூர்ப்பநகியின் மூக்கறுபட்டதுபோல அறுபட்டபோதல்லது எனக்குரிய நாணமும் பெருமையை யுடையதாகுமா இலங்கையென்கின்ற பொன்மலையானது பகைவர்களுடைய அஸ்திமலையாகாமற்போனால், என்னுடைய குடிப்பிறப்பையும் ஒழுக்கத்தையும் கற்பையும் நான் பிறருக்கு எப்படி நிலைக்கக்காட்டுவேன்? அல்லாமலும் இந்த ஓரிலங்கையை மாத்திரமன்று; அளவிறந்த அண்டங்களையெல்லாம் என்னுடையவாய்ச்சொல் ஒன்றினாலேயே பற்பமாய்ப்போய்படி எரிப்பேன். அவ்வண்ணமாகச்செய்வது இரகுநாயகருடைய வில்லாண்மைக்குப்பழுதென்று பொறுத்துக்கொண்டிருக்கின்றேன். அப்பா என்புத்திரனாகிய ஆஞ்சநேயனே! இன்னமொருவார்த்தையுண்டு. அதுவுங்கேள்! வீரசிகாமணியாகிய ஸ்ரீராமபத்திரர் ஒருவர்மாத்திரம் தமது திருக்கரத்தால் தீண்டலாமேயல்லாமல், நீ பஞ்சேந்திர நிக்கிரகஞ்செய்திருக்கும் ஆண்வடிவங்கொண்டிருக்கிறதினால் என்னைத்தொடக்கூடுமோ? புத்தியீனனாகிய இராவணன் என்னைத்தீண்டுவானேயானால் இத்தனைநாள் உயிரோடுங்கூடிவாழ்வானா? அவன் இவளைத்தீண்டினால் ஒருநொடிப்பொழுதிற்குமுன் நாம் மாண்டுபோய் விடுவோமென்றன்றோ பூமியோடும் பேர்த்து எடுத்துக்கொண்டுவந்தான். இதுவுமல்லாமல் ஜகத்திரக்ஷகனுடைய திருவுந்திக்கமலத்தில் உற்பவித்த பிரமதேவன் பூர்வகாலத்தில் இந்த மகாபாதகனைக்குறித்தே, நீ உன்னிடத்தில் மனோரம்மியப்படாத ஸ்திரீகளைத்தொட்டால் உன்சிரம் சகஸ்திரபத்தலாக வெடிக்கக்கடவதென்று சாபமிட்டிருக்கின்றான். அதுவன்றோ நானிறந்துபோகாமலிருக்கும்படி என்பிராணனைக்காத்தது. அவன் என்னையெடுத்துவந்ததைக்குறித்து நான் துக்கப்படுகிற சமயத்தில் அவ்விதமாகிய பிரமசாபம் அவனுக்கு உண்டென்று, சத்தியசந்தனாகிய விபீஷணாழ்வான் புத்திரி திரிசடையென்பவள் என்னிடத்தில்அன்பினால் எனக்குஇரகசியமாகச் சொல்லி, அம்மா நீ யாதொன்றுக்கும் அஞ்சாதேயென்று எனக்குத்தயிரியத்தையுண்டாக்கி வியசனத்தைநீக்கினாள். இராவணன் அப்படிச் சாபசம்பந்தனாயிருக்கின்றவனாகையால் அதிக்கிரமிப்பானேயானால் மரணமடைவானென்றும், தர்மந்தவறமாட்டானென்றும், என்னாயகருடைய புஜபராக்கிரமசக்தியைத்திடமாக எண்ணியும், இவையல்லாமலும் என்கற்பின் பரிசுத்தத்தைக் காட்டவுமே இவ்வளவுகாலவளாக்கும் இரகுகுலோத்தமனைப்பிரிந்து தனியே

யிருந்தும், இந்தச்சரீரத்தைவைத்துக்கொண்டிருக்கின்றேன். மேலும் இருந்த விடத்தைவிட்டு நான் அப்புறம் பெயரவேயில்லை. அதற்குத்திருஷ்டாந்தம் என்னவென்றால், முன்னாளில் எனக்கு இருப்பிடமாக இளையபெருமாளால் சமைக்கப்பட்ட பர்னசாலை வஞ்சகனாகிய இராவணனால், தண்டகாரணியத்தி லிருந்து நிலத்துடனே பேர்த்தெடுத்துக்கொண்டுவந்து இவ்விடத்தில் வைக் கப்பட்டிருக்கின்றது. இதை உன்னுடைய கருணாசுரந்தகண்களினால் செவ் வையாகப்பார். இந்த நீர் நிறைந்த தாமரைப்பொய்கையானது கோதண்ட தீட்சா குருவாய் விளங்காநின்ற சுவாமியினுடைய மரகதத்திருமேனியைப் போலிருக்கின்றதாகையால் இவ்விடத்திற்குச் சோர்ந்துபோகின்ற என்பிரா ணனை இரட்சித்துக்கொள்கின்ற நிமித்தமாகவருவேன். இதுதவிர இருப்பிட த்தை ஒருபொழுதும் நீங்குகிறதேயில்லை. ஆகையினாலே நீ யென்னைக் கொண்டுபோகிறது காரியமன்று. ஐயா! வேதநாயகனாகிய ஸ்ரீராமச்சந்திர ரிடத்திற்கு திரும்பிப்போய்ச்சேர்வது காரியமென்றுலோகமாதாவாகிய பிரா ட்டியார்சொல்ல, அந்த மகாதுல்லியராகிய ஆஞ்சனேயர் இந்த ஜகத்காரண ராகிய ஸ்ரீராகவருடைய தேவியார் கொண்டவிரதம், நன்றாயிருக்கின்றதெ ன்று நினைத்துச் சந்தேகமும் வருத்தமும் நீங்கினவராய் மனமகிழ்ச்சிகூர்ந்து ஆனந்தபரவசமாய்த் துதிசெய்து, என்தாயே தேவரீர் திருவுள்ளம் அப்படி யானால் இராவணனால் இந்தவுலகம் அந்தகாரப்பட்டிருக்கின்றதே அது நிவா ரணமாகும். இனிச்சிலநாள் மாத்திரம் நீர் வருத்தப்படாமல் இவ்விடத்தில் தானே யெழுந்தருளியிரும்.

அவ்விடத்தில் பிரமைகொண்டிருக்கின்ற ஸ்வாமிக்கு அடியேன்போய்ச் சொல்லத்தக்கவார்த்தைகள் என்ன? அவற்றையும் அருளிச்செய்யுமென்று சாஷ்டாங்கமாகச்சேவித்தார். அத்தருணத்தில்பிராட்டியார் சொல்லுகின்றார். நீதிமானாகிய அநுமானே! தமியேனாகிய நான் உன்னைப்பார்த்ததனால் இன் னம் ஒருமாதபரியந்தம் உயிரோடிருப்பேன். அதற்குமேல்அந்தஇராமச்சந்திர ருடைய திருவடிசாட்சியாகப் பிராணனைவைத்துக்கொண்ருடிக்கிறதில்லை. இதை நீ உறுதியாக மனத்திலேகொள். ஆரங்கள் பிரகாசிக்கின்ற திருமார்பை யுடைய இரகுகுலோத்தமருக்கு நான்பத்தினியல்லேனென்றிருந்தாலுமிருக் கட்டும். அவருடைய இதயத்தில் இரக்கமும் அன்புமில்லாமலிருக்கும்படிக் காத்துக்கொள்ள நீ யவரை வேண்டிக்கொள். யாவரும் துதிசெய்யத்தக்க பராக்கிமசாலியாகிய இளையபெருமாளுக்கு உம்முடையதமையனார் ஆக்கினை ப்படி என்னை நீர்காத்திருந்தவராகையால் மத்தியிலே எனக்குச் சம்பவித்த இந்தக்கொடியசிறையை மீட்கின்றகடன் உம்முடையதுதானென்று நான் சொன்னதாக ஒருவார்த்தைசொல்லு, மேலும், நான்கொண்டவிரதம் ஒரு மாதத்தில் முடிந்துபோம். அதற்குள்ளே ஸ்வாமியானவர் இங்கேஎழுந்தருளா விட்டால் அவர்கையினாலே கங்கையில் எனக்குச்செய்யவேண்டிய உரிமைக் கடனைச்செய்துவிடச்சொல்லு. சிரேஷ்டமாகிய எங்கள்மாமிமார் மூவருக் கும் உங்கள் மருமகளாகிய சீதையானவள் அவ்விடத்திலேதானே இறந்து போகின்றாள். உங்களுக்கு நமஸ்காரஞ்செய்தாளென்று இந்தச்சொல்லை ஒரு

வேளை தர்மஸ்வரூபியாகிய என்னுயகர் என்னிடத்தில் கிருபையில்லாமல் சொல்லுகிறதற்கு மறந்துபோனாலும் நீ மறவாமற்சொல்லு. கல்யாணகுண பிராமரானவர் என்னைவந்து பாணிக்கிரகணஞ்செய்த அன்றைத்தினம் இந்த சன்மத்தில் நான் உன்னைவிட்டு மற்றொருஸ்திரீயைத்தொடும்படி மனத்தினு லும் நினைக்கிறதேயில்லையென்று எனக்கு வரங்கொடுத்திருந்தார். அதையும் அவர் திருச்செவியிற்கேட்கும்படிச்சொல்லு. தான் இவ்விடத்திலிருந்து இந் தத்துயரத்தினல் மாண்டுபோனாலும் புநர்ச்சன்மமெடுத்துவந்தாவது உம்மு டையதிருமேனியைத்தழுவத்தக்கமகத்தாகியஒருவரம்வேண்டித்தொழுதுநிற் கின்றுளென்றுசொல்லு. அவர்பட்டாபிஷேகஞ்செய்துகொண்டேவரத்நசிங்கா தனத்தில்எழுந்தருளியிருந்து இராசரீகஞ்செய்கின்றதிருவழகையும், சத்திரசா மரங்களுடனே பட்டத்து யானையின்மேலாக வீதியிற் பவனிவருகின்ற திருக் கோலத்தையும், கண்களிக்கும்படித் தரிசிக்கப் பிராப்தியில்லாத நான் பல பலவார்த்தைகளைச்சொல்லியும்என்னபயன்? என் விதிச்செயலிப்படியுமிருந்த தன்றோவென்று நினைக்கின்றேன். இன்னமொன்று கேளப்பா. ஆஞ்சநேயா! தம்மைப்பிரிந்ததைக்குறித்து உலகத்தார் பிரலாபிப்பதற்காவும், தாய்மார்கள் படுகின்ற துக்கத்திற்காகவும், பரதாழ்வான் முதலாகிய தம்பிமார்கள் அடை ந்த வருத்தத்திற்காகவும், அவ்விடத்திற்குப் போவாரேயல்லாமல் என் னைக்குறித்து இவ்விடத்திற்கு எப்படிவரப்போகிறார். மிதிலையிலிருக்கின்ற எங்கள் மாதாபிதாமுதலாகிய பந்துசநங்களுக்கெல்லாம்என்வந்தனைசொல்லு. வானரசேனதிபதியாகியசுக்ரீவனை உன்னுடையதோழராகிய இரகுநாயகனைக் கைவிடாமல் பாதுகாத்து அயோத்திக்கு அழைத்துக்கொண்டுபோய்ப் பட் டாபிஷேகஞ் செய்விக்கச்சொல்லு என்று இவ்வண்ணமாகக் கண்களிலே நீர் பெருகிப் பாயும்படித் துக்கத்துடனேசொல்லினர். இப்படிச் சொல்லிக்கொ ண்டுவந்த பிராட்டியாரைப்பார்த்து, அம்மா! இன்னமும் தேவரீருடையவிய சனம் நீங்கவில்லையேயென்று ஆஞ்சநேயர் பின்னும் பலபல ஏதுக்களை யுடைய இனிமையுண்டாகிய நல்லவசனங்களைத் தெளியும்படிச் சொல்லத் தொடங்கினர்.

என்தாயே! தேவரீரும் இவ்விடத்தில் இறந்துபோவீர். அப்பால் மெய் தளர்ந்திருக்கின்ற ஸ்ரீராமச்சந்திரரும் இறவாமல் பிராணனுடன் அயோத்திக் குப் போய்மகுடாபிஷேகம் பண்ணிக்கொள்வார். கற்புக்கு உற்பத்தி ஸ்தான மாகிய உம்மைச்சிறைவைத்த பாவியும் ஜீவனுட னிருப்பான். வில்வீரர்களா கிய ஸ்ரீராமலக்ஷ்மணர்களும் தங்கள் புசபராக்கிரமம் பொய்த்துப்போவார் கள். இது மிகவும் ஆச்சரியமா யிருக்கின்றது. இதற்குச்சமானமாவதேது? உம்முடைய விஷயத்தில் அபசாரப்பட்ட பாபாத்மாக்களைக் கொல்லாமல் நானும்என்னுடனே கூடவந்த எல்லாவானரவீரர்களும் பிராணனுடனேமதங் காச்சிரமத்திற்குப்போகவும், அப்பால் அங்கெழுந்தருளியிருக்கின்ற சுவா மியும் தமக்கு உயிர்த்துணையாகிய உம்மைவிட்டு அவ்விடத்தைநீங்கிக்கையி லேபிடித்த வில்லுடனே நகரத்தைநாடிப் போகவும் வேண்டாமா? அதிருக் கட்டும். துக்கசாகரத்தில்மூழ்கி அவதிப்பட்டுக் கொண்டிருந்த எங்களுக்

குப் பரிபூரணமாகிய சம்பத்தினைக்கொடுத்த அந்த ஸ்ரீராகவருக்கு, தேவரீரை மீட்டுக்கொண்டு போய்க் கொடாமற்போனால் எங்களைப்பார்க்கிலும் யோக்கியராவார் ஆரிருக்கின்றார்கள்? சன்மார்க்கத்தையுடைய ரிஷிபீசுவரர்களை யெல்லாம் கொன்றுதின்றமகாபாதகர்களாகிய இராக்கதர்களுடையவுடல்களை இரணகளத்தில் பேய்கள் தின்னும்படிச்சங்கரித்தாலல்லாமல், இராச்சியத்திற்குப்போகிறதில்லையென்றுவாக்குப்பிரதானம் பண்ணியிருக்கின்றமஹாநுபாவருக்கு இந்தவார்த்தையென்ன ஒவ்வாதா? பலவீனர்களாகிய சத்துருக்களால் சிறைவைக்கப்பட்ட தேவரீரை நாங்கள் மீட்டுக்கொள்ளாமற் போவோமேயானால், உலகத்தில் சகலசாஸ்திரங்களையும் தேர்ந்த பண்டிதர்களேயல்லாமல் பாமரர்கள்தானுவது இந்தவார்த்தையைச்செவிகொடுத்துக் கேட்பார்களா? கற்புடையவளும் சத்தியத் தவறுதவளுமாகிய மனையாளானவள், வஞ்சகர்களாகிய இராக்கதர்களால் தீண்டப்படாததற்குமுன்னே மாண்டுபோய் விட்டாளென்று, கொண்ட புருஷன் தனக்குத்தானே மனத்திலே சித்தப்படுத்திக்கொண்டு அவளைவந்துபாராமல் திரும்பிப்போய்விடுவானானால் அப்புறம் அப்புருஷனுடையவீரம் நன்றாய்ப்பிரசித்தப்படமாட்டாதா? லோகோத்தமியாகிய நீர் துக்கத்தினால் உம்முடைய பிராணனை மாய்த்துக்கொள்வீரோ யாகில், அதற்காகஎங்கள் ஐயனாகியஇரகுநாயகர்,இராக்கதவமிசத்துடனே சகலாண்ட சராசரங்களையும் சுட்டு நீறுக்கினாலும் அந்த அபவாதம் தீராதன்றோ? நம்முடைய கோதண்டராமனை எதீசுரர் முதலானவர்களும் லோககர்த்தாவாகிய நீரோ இப்படிச்செய்வது சற்காரியமன்றென்று சொன்னாலும், தேவரீர் பிராணனைவிட்டபின் அவர்சத்தியத்தைப் பார்ப்பாரா? திரிலோகங்களையும் முன்னே மாய்ந்துபோம்படிச்செய்யாரா? சுவாமிக்குப் பிறக்கும் உக்கிர கோபமானது கொடியவனாகிய இராவணனுடைய உயிரை மாத்திரம் நாசஞ்செய்வதினாலேயா? தணியும், பூலோகத்தையுஞ் சுவர்க்க லோகத்தையும் நாசஞ்செய்வதினாலேயா? தணியும். பூலோகத்தையும் சுவர்க்க லோகத்தையும் நாசஞ்செய்யாமல்விடுமா? கேளுமம்மா பரமேசுவரி! இராமபத்திரருடைய அஸ்திரமானது சப்தசமுத்திரங்களையும் பதினாலுலோகங்களையும் யுகாந்தகாலாக்கினியைப்போல நொடிப்பொழுதிலே கவளிகரிக்கமாட்டாதா? இரகுபதியானவர் இப்பொழுதே தேவர்களுடைய சத்துருக்களை நிர்மூலஞ்செய்தார். பெரியோர்களுடைய ஆபத்துக்களை நீக்கினார், எப்போதும் தர்மத்தைத் தலையெடுக்கும்படிச்செய்வார்.

பிரபலமாகிய கீர்த்தியைச் சம்பாதித்தாரென்றே நினைத்துக்கொள்ளும். யாவரும் வெறுக்கத்தக்கஇந்தக்கண்டகர்களுடைய இரத்தப்பிரவாகத்தில்பேய்க்குலங்கள் மூழ்கிக்குளிக்குந்தோறும்,இராக்கதர்களுக்குப்பயந்து ஒளிக்கின்ற தேவர்கள் கண்டு மனங்களிக்கின்றதைநீர்பார்ப்பீர். பிரளயகால இடியைப் போலச்சக்கரவர்த்திதிருமகனுடைய பாணமானது புறப்பட்டு இராக்கதர்களுடைய சரீரத்தைப்பிளக்க, அந்தப்புண்ணிலிருந்து ஒழுகாநின்ற உதிரசமுத்திரமானது பெருகிவந்துவிழுவதினால் ஏழுசமுத்திரங்களும் ஒன்றாய்த்திரண்டு இரைகின்றதையும், இராக்கதஸ்திரீகள் கர்ப்பம் நிறைந்த வயிற்றைப்பிசைந்து

கொண்டு அழுது அக்கித்துக் கண்களிலிருந்து தாரைதாரையாக நீரொழுகும்படி, வாலியினாலும் தாண்டப்படாத மலைபோல அறுத்தெரிகின்ற தலைக்குப் பைகளையும், ஆகாசத்தைத் தீண்டுகின்ற ஸ்தூலதேகத்தையுடைய பேய்க் கூட்டங்களும் நீண்ட சிறகுகளையுடைய பறவைச்சாதிகளும் இராக்கதர்களுடைய உதிரக்கடலில்மூழ்கி, அவர்கள் பெண்சாதிமார்களுடைய கண்ணீராகிய ஆற்றில் குளிப்பதையும், மிருதங்கம் வீணை முதலாகிய வாத்தியங்கள் முழங்க, அரம்பாஸ்திரீகள் நாட்டியஞ்செய்கின்ற இந்தநாடகசாலைகளில் ஸ்ரீராகவனுடைய பிரதாபத்தைப்பாடிக்கொண்டு, வானரங்கள் வரிசைவரிசையாக ஆடுகின்றதையும், இராவணன்முதலானவர்களுடைய சரீரத்திலிருந்து ஒழுகுகின்ற இரத்த ஆறானது பிணமலைகளைப்புரட்டி யிழுத்துக்கொண்டுபோய்ச் சமுத்திரத்தைத் தூர்ப்பதையும்,தேவரீருடைய மாசற்ற திருமேனியைப்பார்த்த தசக்கிரீவனுடைய கண்களை, அவன் தலைகளின்மேல் தாவிக் காக்கைகள் கூரியமூக்கினால் கொத்திக்கொத்தித் தின்பதையும் நீரே பார்க்கப்போகிறீர். ஆகையால் இன்னமும் பலபலவார்த்தைகள் சொல்லவேண்டியதென்ன? ஒரு மாதவரைக்குங்கூட நீர் துயரப்பட்டுக்கொண்டு இவ்விடத்திலிருக்கவேண்டுவதில்லை. அடியேன்போய்ச் சுவாமிதிருவடியைத் தரிசிக்கிறதுதான் தாமதம். அப்பால் அவர் ஒருபொழுதாவது பொறுத்திருப்பாரா? அவருக்கு உயிருண்டென்கின்ற சொல்மாத்திரந்தான் உண்டு. அரணியத்திலே அவருடைய திருமேனியைத் தீண்டித் தீயாதபுட்பங்களும் தளிர்களுமில்லை. அவர் சரீர உஷ்ணத்தினாலே பொரியெழுந்து வேகாதசோலைகளுமில்லை. மேகம் கர்ச்சித்தாலும் இடியிடித்துவிழுந்தாலும் பாம்புகடித்தாலும் அவருக்குத்தெரியாது. நீர் பிரிந்ததனால் மத்துக்கொண்டு கடையப்பட்ட தயிர்போல உயிர்தளர்ந்து கரைந்து ஐம்புலன்களும் வேறுபட்டுப் பித்துபிடித்தும்மயங்கி, நாள்தோறும் அடிக்கடி எவ்வளவோ வேதனைப்படுகின்றார்.

இப்படிப்பட்ட நிலைமையையுடைய அந்தப்புருஷோத்தமர் வாராமலுமிருப்பாரென்று நினைப்பீராகில் நான் சொன்னவற்றையெல்லாம் இப்போது தானே உம்முடைய உள்ளங்கை நெல்லிக்கனியைப்போலக் காண்பிக்கிறேன் பாரும். அதற்கு மாறுபட்டிருந்தால் அப்பொழுது பொய்யென்று நினைத்துக் கொள்ளும். ஸ்ரீராமரும் வானராதிபதியாகிய சுக்ரீவனும் உம்முடைய செய்தியைக்கேட்டு சந்தோஷிப்பதற்கு முன்னமே வானரங்கள்வந்து சமுத்திரத்தைத்தூர்த்து இலங்கையைச்சுற்றிக்கொண்டு ஆர்ப்பரிக்கின்றதைத்தேவரீர்கேட்டுச் சந்தோஷிக்கப்போகின்றீர். எண்ணப்படாத வானரசேனைகள் நாளைத்தினம் இந்த நகரத்திற்குவந்தபோது அதற்குநடுவே கருடன்மேல் ஆரோகணித்துவருகின்ற ஸ்ரீமந்நாராயணனைப்போல அடியேனுடையதோள்களின்மேல் இரகுநாயகர் எழுந்தருளிவரும்படிக்காண்பீர். உதயகிரியில் தோன்றுகின்ற இளஞ்சூரியனைப்போல அங்கதகுமாரனுடைய தோளின்மேல் இளையபெருமாளும் எழுந்தருளிவரக்காண்பீர். இனிமேல் துயரத்தையும் சங்கையையும் விட்டுவிடும். இப்போது குறித்துச்சொல்லிய சிலதினத்திற்குள்ளேவந்து உம்முடைய சிறையைமீட்காவிட்டால் பழியும் பாவமும் சம

பாதித்துக்கொள்ளுகிறதற்கு அந்த ஸ்ரீராமரோ இராவணனும் இராவணனே ஸ்ரீராமரும் என்றுஉமது திருவுளத்தில்எண்ணிக்கொள்ளுமென்றுஇவ்வண்ணம் சாகோபசாகையாக ஆஞ்சனேயர் எடுத்துச்சொல்லியபோது அந்தவார்த்தைகளெல்லாம் குற்றமற்றவைகளா யிருக்கக்கேட்டுப் பிராட்டியார் மனத்திலே அபரிமிதமாகிய மகிழ்ச்சிகூர்ந்து உஜ்ஜீவித்தவராய் மெய்தான், இவன் சீக்கிரத்தில்போய்ச்சேர்கிறதே உத்தமமென்றுகருதி அநுமானைப்பார்த்துச் சிலவார்த்தைசொல்லுகின்றார். ஐயா, மாருதியே நீ துரிதமாகப்போய்வா யாதொரு தீங்கும் உன்னை யணுகமாட்டாது. இனிநான் வேறொன்றுஞ்சொல்லுகிறதே யில்லை. உனக்குத்தெரியாததைக்குறித்து நானே சிறிதுசொல்லப்போகிறேன். என்பிராணநாயகருக்கு முன்பு நடந்தவைகளாகிய சிலஅடையாளங்களைச் சொல்லுகிறேன். பூர்வத்தில் ஒருமாயமாகிய காகமானதுவந்து என்சரீரத்தைத் தனது கூர்மையாகிய நகத்தினாலே கிழித்ததுகண்டு சுவாமியானவர் ஒரு சொற்பமாகிய புல்லைப்பிரயோகிக்க அதுவே அஸ்திரமாகித்துரத்த அதற்கஞ்சி அந்தக்காக்கைவடிவாய்வந்த இந்திரகுமாரனாகிய சயந்தனானவன் பிரமனிடத்திலும் சிவனிடத்திலும் மற்றதிக்குப்பாலகரிடத்திலும்போய்ச் சரணமடைய, அவர்களெல்லாம் இராமபாணத்திற்குப்பயந்து அபயஸ்தங்கொடாமல் அவனைப்பார்த்து ஐயையோ! இனி உனக்கு எங்களாண்டவனாகிய ஸ்ரீராமபிரானுடைய திருவடியல்லது வேறுகதியில்லை. மேலும் அவரோ சரணாகதவாச்சல்யர். ஆகையால், நீபோய் அவ்விடத்தில்தானே சரணாகதஞ்செய்யென்றுசொல்ல,அவன் அங்கிருந்துநடுநடுங்கி இராகவா! அபயம் இராமச்சந்திரா! அபயம் தாசரதி! அபயம் சீதாசமேதா! அபயம்கோதண்டபாணி! அபயம் அபயமென்று பூமியில்வந்துவிழுந்து தண்டன்சமர்ப்பித்த உடனே சுவாமி திருவுளமகிழ்ந்து அவன் பிராணனைவாங்கும்படி விட்டபாணம் அவனுடைய இரண்டு கண்களிலும் ஒருகண்ணைக்கிரகித்துக்கொண்டுபோம்படிக்கிருபைசெய்ய அது அப்படியே கிரகித்துக்கொண்டு தம்முடைய அம்புப்புட்டிலில்வந்துசேர்ந்தது. அப்பொழுது ஸ்ரீராமபத்திரர் நீ சரணாகதஞ்செய்ததனால் உன்குற்றத்தைப் பொறுத்தருளினோம். இன்றுமுதல் உன்னைப்போலிருக்கின்ற காக்கைக்கூட்டங்களின் இருகண்ணுக்கு ஒருமணியுலாவக்கடவதென்று சொன்னார். பின்பு காகாசுரன்வருத்தம்நீங்கிய ஸ்ரீரகுநாயகனைவணங்கிவிடைபெற்றுக்கொண்டு சுவர்க்கலோகத்திற்குப்போனான். தேவர்கள் சுவாமியின்காருண்யத்தைக்குறித்துப் புஷ்பவருஷம்வருஷித்தார்கள், அந்தச்செய்தியைச்சொல்லு, அயோத்தியிலிருந்த பொழுது சுவாமியை நோக்கிநான்வளர்த்த என்னுயிர்க்கொப்பாகிய இளங்கிளிக்கு என்ன பெயரிடுகின்றதென்று கேட்க, அவர்கைகையாகிய என் தாய்பெயரைவைத்திடென்றுசொன்னார். அதையும்அவரிடத்தில்சொல்லென்று சொல்லி பிராட்டியார் இனிஇவ்வளவுவிசேஷமாகிய அடையாளம்வேறொன்றுமில்லையென்று யோசித்து நிச்சயம் பண்ணிக்கொண்டு காந்தியினால் மேலேழுலோகங்களையும் கீழேழுலோகங்களையும் ஜயித்த சூடாமணியென்னும் இரத்தினத்தைத்தமது திருவாடையில்வைத்திருந்துதாமரைப்புட்பத்திற்குச் சமானமாகிய திருக்கரங்களாலெடுத்தார். எடுத்தமாத்திரத்தில் நவவியாகரணபண

டியாகிய ஆஞ்சநேயர் இது என்னவென்று பிரமித்துத் தேகம்பூரித்து அதிசயித்தார், அப்பொழுது சப்ததீவிலும் நிறைந்த இருளெல்லாம் சிதைந்து ஒழியது இராக்கதர்கள் இப்பொழுது சூரியனானவன் கொஞ்சமாவது மனங்கூசாமல் லங்கைக்குவந்தது ஏதென்று சந்தேகித்தார்கள் அந்தரத்தில் சூரியன்வருகிறதில்லாமையால் எப்பொழுது சூரியனை வரக்காண்போமென்று துக்கமுற்றிருந்த சக்கரவாகப்பட்சிகளெல்லாம் களிகூர்ந்தன. தாமரைகள்மலர்ந்தன, சூரியகாந்தக்கற்கள் தீயைச்சொரிந்தன அந்த ரத்னகிரணம் பிராட்டியாருடைய திருமேனிமுழுதுஞ் சிவக்கும்படிச்செய்து ஸ்ரீராமசந்திரனுடைய திருவடிகளைப் போலும் ஜொலிக்கத்தலைப்பட்டது. அப்படிப்பட்ட திவ்வியமாகிய சூடாமணியைக்காட்ட ஆஞ்சநேயர் கண்டார். பின்பு அவரைநோக்கி அப்பா அநுமானே! என்கண்மணிக்கு ஒப்பாகிய இந்தச்சூடாமணியை இதுவரையில் என் வஸ்திரத்தில் வைத்துக்கொண்டிருந்தேன், இதுவே தசரதாத்மஜனுக்குப்பெரிய அடையாளம் தேடிவந்து என்பிராணனை இரட்சித்த மஹாநுபாவா! நீ இதை வாங்கிக்கொள்ளென்று கொடுக்க வாயுகுமாரர்தொழுது அதை இரண்டுகையினாலும்வாங்கி அந்தக்ஷணமே வஸ்திரத்தில் சுற்றிப்பதனம் பண்ணிவைத்துக்கொண்டு கண்களில்நீர்பாயும்படி ஜானகியாரைமூன்றுதரம் பிரதட்சணம்வந்து சாஷ்டாங்கமாகச் சேவித்து அடியேன் போய்வருகின்றேனென்று சொல்லி அந்தப்பிராட்டியாரும் தம்மையும் புகழ்ந்துவாழ்த்த அப்பால் நடந்தார்.

சூடாமணிப்படலம்
முற்றிற்று.

---

## வனபங்கப்படலம்.

அப்படி ஜானகியாரிடத்தில் நியமனம்பெற்றுக்கொண்டு வடதிசையை நோக்கிச் செல்லும்படி உத்தேசித்து அதிசீக்கிரமாக நடந்து எதிரே தோன்றிய அசோகவனத்தில் பாய்ந்துபோகின்ற அநுமானானவர் நான் இலங்கைக்குவந்து பிராட்டியாரைக்கண்டு அவரிடத்தில் மாத்திரம் சிலசமாச்சாரங்களைக் குறித்துப் பேசிவிட்டுப்போகிறது பிரதாபமன்று மிகவும் சொற்பமாகும் என்னுடைய வீரத்திற்குத்தக்க ஒருபிரபலமானகாரியத்தைச்செய்து போகவேண்டுமென்று தமக்குள்ளே ஆலோசிக்கத்தொடங்கினர். கொடிய பாபிஷ்டர்களாகிய இராக்கதர்களையெல்லாம்கொலைசெய்து இந்த இலங்காபட்டணத்தையும் வேருடனேகளைந்தெடுத்துச் சமுத்திரத்தில்அழுந்தும்படி எறிந்துவிட்டு லோகநாயகியாகிய வைதேகியை என்னையனுகிய சக்கரவர்த்தித் திருமகன் திருவடியிற்கொண்டுபோய்ச் சேர்க்காவிட்டால் நான் எவ்விதத்தில் அந்தவிஜயராகவருக்குஅடிமையாவேன் சுவாமித்துரோகியாகிய இராவணனை இறுக்கிப்பிடித்து என்னுடைய நீண்டவாலினால் அவன் பத்துத்தலைகளையும் இருபதுதோள்களையும் சேர்த்துக்கட்டி இம்சித்துச் சிறைவைக்கவுமில்லை. அப்படியன்றென்றாலும் அவனைநேரேயாவது ஜயித்தேனா? அதுவும் செய்யவில்லையே இப்படியானால் ஒருவர்மற்றொருவருக்கு அடிமையென்பதுதகுமா? என்கண்ணிற்கண்ட இராக்கதக்கூட்டங்களைச் சின்னபின்னம்பட அடித்து இலங்காதிபதியினுடைய

கணகளுக்குமுன்னே அவன்பெண்சாதியாகிய மண்டோதரியைத்தலைமயிரைப் பிடித்து இழுத்துவந்து சிறைவைத்தாலுந்தான் என்புஜபலத்திற்குப் பழுதுண்டாகுமா? கிராதகர்களாகிய அரக்கர்களுக்கு என்னுண்மையையெல்லாங்காட்டி அவர்களைத் திசைகள்தோறும் ஓட்டித்துரத்தித் துஞ்சஞ்செய்வதே பிரதானகாரியம் இனியெண்ணத்தக்கது மற்றொன்றுமில்லை. ஆதலால், அவர்களைச் சண்டைக்கு இழுக்கவேண்டுமே? அதற்குத்தக்க உபாயம் என்னவென்றும் நினைக்கின்றார்.

நான் இந்தச்சோலையை ஒருநொடிப்பொழுதில் அதஞ்செய்கிறேன். அப்படிச்செய்தால் அந்த ஆர்ப்பாட்டத்தைக் கேட்டமாத்திரத்தில் மிகுந்தகோபத்தோடும் ராட்சதர்கள் என்னுடன்வந்து எதிர்ப்பார்கள். எதிர்த்தபொழுது அவர்களைச் சந்ததியறக்கொன்று உயிர்குடிப்பேன், என்னோடு போர்செய்ய வருகின்றவர்களையெல்லாம் மறுபடி உயிரோடே போகவொட்டாமல் கொன்றால் அந்தஇராவணனும் எனக்குமுன்னேவந்து எதிர்ப்பான். எதிர்த்தால் அவனுடைய பத்துத்தலைகளையும் குழிந்துபோம்படிக் குட்டிஉதைத்து என்மனத்திலே பொங்குகின்றகோபமுஞ் சிறிதாறிச் சந்தோஷமாய்ப்போவேன். ஆகையால் இவ்விதமாகச்செய்வதே நல்லதந்திரமென்று திர்க்காலோசனை செய்து சூரியசந்திரர் உதயமாகின்ற உதயகிரிக்கும் அஸ்தமனகிரிக்குஞ்சமானமாக நீண்டதோள்களையுடையவராய்த் தமது விசுவரூபத்தைக்கொண்டு உலகமுழுதும் ஒரு கொம்பிலேதாங்கிய ஆதிவராகத்தைப்போல்ஓங்கியுயர்ந்து அந்த வனத்தையெல்லாம் தம்முடைய பாதத்தைக்கொண்டு துகைத்தார். துகைத்தபொழுது அதிலிருந்த விருக்ஷங்கள் முடிந்தும், பிளந்தும், முறிந்தும், நெரிந்தும், மடிந்தும், பொடிந்தும், மறிந்தும், பொரிந்தும், இடிந்தும், சிதைந்தும், எரிந்தும், கரிந்தும், ஒடிந்தும், ஒசிந்தும், உதிர்ந்தும், பிதிர்ந்தும்போயின. சிலவிருக்ஷங்கள் வேரோடேசாய்ந்தன. சிலவிருக்ஷங்கள் சமூலமும் வெந்துவிழுந்தன. சிலவிருக்ஷங்கள் மேகமண்டலத்தைமோதிவிழுந்தன. சிலவிருக்ஷங்கள் காற்றில் அடிபட்டுக் கடலிலேபோய்விழுந்தன. சிலவிருக்ஷங்கள் சுவர்க்கத்தில்போய்விழுந்தன. சிலவிருக்ஷங்கள் அஷ்டகஜங்களுக்கெதிரே அவைகள் உண்கின்ற வுணவாகப்போய்விழுந்தன. சில விருக்ஷங்கள் கேசரமார்க்கமாகப்போய்த் தேவர்களுடைய கற்பகச்சோலையை மடித்தன. அநேகமரங்கள்போய் விழுகின்றதினால் சமுத்திரத்தில் அலைகள் மிகவும் பொங்கிப்புரண்டன. அநேகமரங்கள் இலங்கையில்விழுகின்றதினால் அங்குள்ள உப்பரிகைகள் இடிந்து உதிர்ந்தன. அநேகமரங்கள் சப்தகுலபர்வதங்களிற் போய்விழுந்து சிறுபொடியாயின. அநேகமரங்கள் தங்களுக்குச் சமீபத்தில் வந்துவிழுகிறதினால் விஞ்சயலோகத்திலும் யக்ஷலோகத்திலும் தேவலோகத்திலுமுள்ள ஸ்திரீகள் அவற்றிற் பூப்பறிக்கத்தலைப்பட்டார்கள். அநேகஞ் சுவர்ணவிருக்ஷங்களும், இரத்னவிருக்ஷங்களும், மின்னல்கள் சஞ்சரிக்கிறதுபோலவும், சூரியகிரணம் பாய்கிறதுபோலவும், நாலுதிசைகளிலும் விசையாயெழும்பின. அநேகவிருக்ஷங்கள் ஊழிகாலத்து நக்ஷத்திரங்கள் உதிர்வதுபோல ஒன்றோடொன்றுமோதி உதிர்ந்தன. ஆஞ்சநேயர் மரக்

இலைகளைமுறித்துச் சமுத்திரத்திலெறிய அக்கிளைகளிலிருந்தபட்சிகளையும், வண்டுகளையும், மலர்களையும், அரும்புகளையும் தேனையும், தளிர்களையும், காய்களையும், மீன்கள் விழுங்கிக்களித்துத் துள்ளிக்கொண்டிருக்கின்ற தருணத்தில், பலமரங்கள்வந்து மேலேவிழ அவைகள் நெரிந்துதுடித்தன. நாநாவித புஷ்பங்களாலும் நிறையப்பட்டுப் புலால்நாற்றமில்லாமல் எட்டுத்திக்கிலும் நல்லவாசனையை வீசுதலால் கடலானது தேவர்கள் தங்கள்தேவிமார்களுடனே ஸ்நானஞ்செய்கின்ற திவ்வியதடாகத்தைப்போல விளங்கியது. அவ்வனத்திலிருக்கின்ற இரத்நமேடைகளை இடித்தும், மரங்களை ஒடித்தும், ஒன்றின்பின்னே ஒன்றாக எறிவதனால் முழுதுந்தூர்ந்து முன்பு உள்ளேயிறங்கக்கூடாத ஆழத்தையுடையதாய் அநுமான் அருமையாகத் தாண்டிப்போம்படியிருந்த அந்தச்சமுத்திரம் இரண்டுகாலினாலும் எளிதாகநடந்து போகலாமென்று சொல்லத்தக்கதாகியது. ஆகாசத்தில் எறிந்தமரங்கள்வந்து மேலேவிழுந்து ராக்ஷதர்கள் வாசஞ்செய்கின்ற ரத்நகசிதமாகிய மாடமாளிகை கூடகோபுரங்களெல்லாம் இடியினால் சின்னபின்னமாகிய பர்வதங்களைப்போலச்சிதைந்து பொடிப்பொடியாயின. நீருண்டமேகங்கள்நெருங்கியிருக்கின்றதுபோல இராவணனுக்கு ஆகாசத்திலும் ஒருசோலையுண்டென்றுசொல்லும்படி அநுமானவர் அளவிறந்த மரங்களைப்பிடுங்கி மேலேயெறிந்தார். தேன்துளிக்கப் பலவிதப்பறவைகளும் மணிகள்போல் ஒலிக்கப் புஷ்பங்கள்நிறையப்பூத்த விருக்ஷங்கள் ஆகாசமார்க்கமாயெழும்பிப்போய் அவ்விடத்தில் சஞ்சரிக்கின்ற புஷ்பகவிமானம்போலப் பிரகாசித்தன. பலகிளைகள் தழைத்திருக்கின்ற மரங்கள் அந்தரத்திலிருந்து சமுத்திரத்தில்விழுகின்றது நீருண்ணமேகங்கள் இறங்குகின்றதைப்போலிருந்தது. மத்தியில் புண்ணியவர்ஜிதமாய்ப் பூமியில்வந்து பிறந்த தேவர்கள் ஞானத்தையடைந்து தங்கள் சுதேசமாகிய சுவர்க்கத்தைச் சேர்ந்ததுபோலப் பூர்வத்தில் இராவணனால்கொண்டுவந்து இலங்கையில் நாட்டப்பட்டபஞ்சதருக்கள் அநுமான்பிடுங்கி எறிதலால்முன்னிருந்ததேவலோகத்தில் தானேபோய்ச்சேர்ந்தன. மற்றும் வாயுகுமாரரானவர் மாணிக்கக்கற்பதித்த இடங்களைக்குழிசெய்து மண்டபங்களை இடித்தெறிந்து வாவிகளைத் தூர்த்துச் சுவர்த்தலங்களை அழித்துக்கட்டுமலைகளைப்பேர்த்து வேங்கைமரங்களைச்சிதைத்து மராமரங்களை வேருடனேபறித்துக் கற்பகமரங்களைப் பூவுடனே ஒடித்து நிலத்தில்தேய்த்துச் சண்பகமலர்ச்சாலைகளை அதஞ்செய்து பழுத்தமாமரங்களை முறித்துத்தள்ளினார். ஆஞ்சநேயருடையபாதம்படுதலால் சந்தனமரங்களும் பூமரங்களும் பிளந்து துணிந்து எரிந்து கரிந்தன. மல்லிகை முல்லை முதலாகிய கொடிவகைகள் செடிவகைகள் சகலமும் தூள்தூளாயின. மயில்கள் குயில்கள் கிளிகள் வண்டுகள் முதலானவைகளும் நெருங்கி நசுங்கி மடிந்தன. பட்சிகள் இரைகின்ற ஓசையும் மரங்கள் ஒடிகின்ற ஓசையும் அநுமான் அடிக்கடி கர்ச்சிக்கின்ற ஓசையுங்கூடி ஏககோஷமாய் இந்தஅண்டகடாகத்தைத்தாண்டி அப்பாலும் வியாபித்தது. காடுபோல அடர்ந்து நெருங்கியமரங்களை அசைத்தெடுத்து அநுமான் வீசுதலால் யானைச்சாலைகள், புரவிச்சாலைகள் இரதசாலைகளும்அவைகளிலுள்ள யானைகள், புரவிகள், தேர்

களும், ஆடாங்குகளும், அன்னசத்திரங்களும், தண்ணீர்ப்பந்தல்களும்,பிதை ந்துநொறுங்கின. வலதுகையில் பிலசிலபெரியமரங்களையும் இடதுகையில் சிலசில கட்டுமலைகளையும் பேர்த்தெடுத்து எறிந்தார். மரம்போய்விழுந்தத னால் லங்கையைச்சூழ்ந்த பொன்மதில்கள் இடிந்து நெருப்பெழுந்தன. மலை போய்விழுந்ததினால் மேல்மாடங்கள்நெரிந்து நீரெழுந்தன. அதனால் இலங்கை யிலிருந்தவர்களெல்லாம் பயந்தோடினார்கள். இந்தப்படி வாயுகுமாரர் சின்ன பின்னஞ்செய்யும்போது இலங்கேசுவரனானவன் நான்சீதையினால் விரகதாபப் பட்ட தருணத்தில் நீயென்சரீரத்தைத் தகித்தாய், இப்பொழுது தேவர்களு க்குமுன்னே ஒரு குரங்குவந்து சோலையை அழிக்கும்படிப் பார்த்துக்கொண் டிருந்தாயென்று கோபிப்பானே? இதற்கென்னசெய்வதென்று பயந்து ஒளித் ததுபோலச் சந்திரன் அஸ்தமித்தான்.

அந்தவனத்திலே குற்றமற்ற நவரத்தினங்களாலும் அபரஞ்சியாலும் சூரியகாந்த சந்திரகாந்தத்தினாலும் நிர்மிக்கப்பட்டிருக்கின்ற பலபல மரங் களையும் என்னையனுகிய அநுமான் தன்கைகளால் அள்ளிஅள்ளித் திக்குகள் தோறும்விச அவைகள் சாஜ்வல்யமாகிய சுடரெறிப்பதனால் உலகமுழுதும் இருள்நீங்கிப் பிரகாசித்தது; நானாவிதமான மிருகங்களும் மனம்நடுங் கிக் கண்கலக்கங்கொண்டன, பலபேதமான பறவைகளில் சில குதறிக் கொண்டுபோய்க் கடலில்விழுந்தன, சில பதறிப்பதைத்தன சிலமேலேபறந் தன,சிலகீழேவிழுந்து சிறகுகளைஉதறின, சிலசிறகுகளை ஒடுக்கிக்கொண்டு இற ந்தன, காக்கைகள் தெய்விகமாகிய மரங்கள்தோறும் கட்டியிருக்கின்ற கூட்டு டனே ஆஞ்சநேயர் கிருபையினால் சுவர்க்கம்போய்ச்சேர்ந்தன,இராக்கதர்களா லே காவல்செய்யப்பட்ட சோலையிலிருந்த சகலவிருக்ஷங்களும் அழிந்துபோ யும் பிராட்டியார் எழுந்தருளியிருக்கின்ற ஒருவிருக்ஷமாத்திரம் அழியா மல் பரலோக பூலோக பாதாளலோகங்களெல்லாம் நாசமாய்விடுகின்ற மகாப் பிரளயகாலத்தில் ஸ்ரீமந்நாராயணன் திருக்கண்வளர்ந்தருளாநின்ற ஆல்போல் விளங்கியிருந்தது. மிகுந்த பிரகாசத்தையுடைய சூடாமணியாகிய ஜீவரத்தி னத்தைத் தன்பிராணனுக்குச் சமானமாகிய சக்கரவர்த்தித் திருமகனுக்கு அடையாளமாகக் கொடுக்கச்சொல்லி அநுமான்கையில் கொடுத்துவிட்டத னால் ஐயோ! சீதையானவர் வறுமையை அடைந்தாளென்று அவருக்குத்தாய் வீடாகியசமுத்திரம் ஒருசிகாமணியை அனுப்புவித்ததுபோலச் சூரியன் உதய மானான்.

அந்தச்சோலையை முழுதும்பற்றறத் தொலைத்துவிட்டுத் தனியேநிற்கின்ற ஆஞ்சநேயர் சதுர்த்தசபுவனங்களையும் அளந்த திருவிக்கிரமனைப்போலவும் கடலின் நடுவில்நின்ற மந்தரகிரியைப்போலவும் யுகாந்தகாலருத்திரனைப்போல வும் பிரகாசித்தார். இவ்விதமாயிருக்கின்ற சமயத்தில் அநுமான் முன்புசெய்த மந்திரோச்சாடனத்தால் பிரக்ஞையில்லாமல் சவம்போல் உறங்கிக்கிடந்த இராக்கதிகளெல்லாம் நித்திரைமாறி விழித்தெழுந்து வடமேருபர்வதம்போல விஸ்வரூபத்துடனே நிற்கின்ற சுத்தாத்மாவாகிய வாயுகுமாரனைப்பார்த்து அம் மம்மா இது எப்படிப்பட்ட சொரூபம் என்றும்,இந்தமகாபுருஷன் ஆரென்றும்,

மாத்தாயெ பிரியடைந்து ஜானகியானைநோக்கி நீ இவனுடைய பூர்வோத்தரம் அறிவையா சொல்லென்றார்கள். அதுகேட்டுப் பிராட்டியார் துர்ச்சனர்கள் செய்த துர்க்கிர்த்தியங்களையெல்லாம் அப்படிப்பட்ட துர்ச்சனர்கள் அறிவார்களேயல்லாமல் சற்சனர்களறிவார்களா? தண்டகாரணியத்தி லிருக்கும்போது மாயமானானது வர அந்த மானைப்பார்த்து எங்கள் இளையபெருமாளானவர் இது இராக்கதர்கள்செய்த மாயமாகும், உள்ளபடி மானன்றென்றுசொல்லியும் கேளாமல் மெய்யென்றுமயங்கிய நான்இதை எப்படி யறிவேனென்றுசொல்ல, அந்த இராக்கதஸ்திரீகள்வயிற்றிலடித்துககொண்டு மிகவும் அகமுற்றவர்களால் பூமியும் வனமும் மலையுங்கடலும் நிலைகுலையும்படி ஓடத்தலைப்பட்டார்கள். அவ்விடத்தில், இராவணனுடைய ஆக்கினையைக்கொண்டுபிர்மதேவர்சுவர்ணத்தினால் சிருஷ்டிசெய்ததும் கண்ணுக்கடங்காததும் காற்றுமோதப்படாததும் ஆகாசபரியந்தம்நீண்ட அநேகந் தூண்களையுடையதும் நவரத்னங்கள் பதிக்கப்பட்டதும் இராக்காலத்திலும் இருள்விலகும்படி ஜொலிக்கத்தக்கதும் மகாமேரு பர்வதமும்வெட்கி வெதும்பிமனம்புண்படும்படி உயர்ந்ததும் இந்தப்பூமியுந் தாங்கக்கூடாத பாரத்தையுடையதும் வித்வஜனர்களாலும் புகழ்தற்கு அமைதியாயிருக்கின்றதுவுமாகியஒருமண்டபமிருந்தது அதைத்தம்முடைய தாதையாகிய வாயுவையொத்த பராக்கிரமமிருந்த ஆஞ்சனேயர் கண்டு அவர் பூர்வத்தில் தசக்கிரீவனானவன் வெள்ளிமயமாகிய கைலாசகிரியைப்பேர்த்தெடுத்த சமாசாரங் கேள்விப்பட்டவராகையால் அவனுடைய புஜபலத்திற்குப் பின்னமுண்டாகும்படி அதற்குப்பிரதியாகத் தாம் பொன்மயமாகிய மேருகிரியை யெடுத்ததுபோல அந்த யாகமண்டபத்தை அடியோடே பறித்தெடுத்து இலங்கையின்மேல் விட்டெறிந்தார். அதுபோய்விழுந்து அநேக மாடகூடங்கள் இடிந்து நகர்ந்து பொடிப்பொடியாய் அவற்றிலிருந்து அனற்பொறியெழுந்து பக்கங்களிலிருந்த சகலவஸ்துக்களையுஞ்சுட்டெரித்தன. அதனால்எத்தனையோ இராக்கதர்களிறந்தார்கள்; வெகுபேர் விரமழிந்தார்கள்; ஆர்தானானாலும் பிறருக்குக் கேடுநினைத்தால் பிழைப்பார்களா? அச்சமயத்தில் அந்தப் பூங்காவனத்தைக்காக்கின்ற காவலாளர்களாகிய தேவர்கள் பிரமித்துத் திடுக்குற்றெழுந்துபார்த்து பதறி உடுத்த வஸ்திரத்துடனே சிறுநீர்விட்டுக்கொண்டு நெஞ்சிலேபயமாகிய நெருப்பிடப்பட்டவர்களாய் நிறம்வேறுபட்டு நடுநடுங்கிக் காலிடறும்படி ஓடி உக்கிரசிங்கத்திற்குச் சமானமாகிய இராவணன்சமீபத்திற் போய் அவனுடையபாதத்தில் சாஷ்டாங்கமாக விழுந்துவணங்கிக் கேளுமையா! எங்களாண்டவனாகிய பிரதாபலங்கேசுவரா! இனிநாங்கள் காவல்செய்கிறதற்கு முடியாது ஏனென்றால் பர்வதத்திற்கு ஒப்பாகிய தோள்களையுடைய ஒருகுரங்குவந்து சிங்காரச்சோலையை அழித்தது, அதுசொல்வதற்கு எளிதாயிருக்கின்றதன்று; காலினாலும், கையினாலும், வாலினாலும், தோளினாலும், உதைத்தும், பறித்தும், சுற்றியும், முட்டியும், ஒரு புல் புதர் தூசுமுதலானவையும் இல்லாமற்போம்படிப் பொடிப்பொடியாக்கி அந்தச்சோலையிலிருந்த யாகமண்டபத்தையும்பேர்த்தெறிந்து சிறிதிடமாத்திரம்தவிர இலங்காபட்டணமுழுமையும் நாசமாக்கிவிட்டதென்று சொன்னார்கள். அதுகேட்டமாத்திரத்

தில் ராவணனுனவன் அற்பஜந்துவாகிய ஒருகுரங்கானது நம்முடைய சுவர்ண கசிதமாகிய கற்பகவிருக்ஷமுதலிய பலஜாதிவிருக்ஷங்களும் நெருங்கிய பூங்காவனத்தைப்பொடிபடும்படி நிர்மூலமாக்கிஇராக்ஷதர்களால்காவல்செய்யப்பட்ட கல்யாண உப்பரிகையென்கிற யாகமண்டபத்தையும்பேர்த்தெறிந்து, அதனால் இலங்காபுரியையும் அழித்ததாம்; ஆ! ஆ! இராக்ஷதர்களுடைய வீரப்பிரதாபம் நன்றாயிருக்கின்றது. இந்தச்சொல் மூடர்களுஞ் சொல்லமாட்டார்களேயென்று குலுங்கக்குலுங்க நகைத்தான். மறுபடியும் அந்தச்சோலையைக்காக்கின்ற தேவர்கள் இராவணேசுவரனைப்பார்த்துச் சுவாமி! ஆகாயம் பூமியெங்கும்நிறைந்த அதனுடைய தூலத்தைச்சுமக்கின்ற சத்தியையுடைய இந்தப்பூமியையல்லவோ புலவர்களெல்லாம் துதிசெய்யவேண்டியது. அந்தக் குரங்கு பிரமா விஷ்ணு ருத்திரனென்கின்ற மும்மூர்த்திகளில் ஒருவனென்று சொன்னாலும் நிகராகமாட்டாது. அதைப்பின்பு தேவரீரேபார்க்கப்போகின்றீரென்றார்கள். அத்தருணத்தில் பூமண்டலங்கிழியவும், கடல் பலதிசைகளிலும் மோழைபோகவும், அஷ்டகஜங்களும் திக்குப்பாலகர்களும்பயந்து ஓட்டமெடுக்கவும், இராக்ஷதஸ்திரிகளுடைய கர்ப்பங்கள் கலங்கிவிழவும், அண்டகடாகமும் வெடிபட்டதென்றுசொல்லும்படி அநுமானனவர் அட்டகாசஞ் செய்து ஆர்ப்பரித்தார்.

வனபங்கப்படலம்
முற்றிற்று.

---

## கிங்கரர்வதைப்படலம்.

---

அவ்விதமாக ஆஞ்சநேயர் கர்ஜித்தமுழக்கமானது எழுந்து மலைக்குகையில் விழுந்த இடியோசைபோலவும், முன்னாளில் மிதிலையிலே சிவனுடைய வில்லொடிந்து பிறந்த சப்தம்போலவும், தசக்கிரீவனுடைய மாணிக்கக்கிரீடங்களணிந்த பத்துத்தலைகளும் குலுங்கும்படி, இருபதுகாதிலும்வந்துநுழைந்தது. அப்போது இராவணனுக்குக்கொஞ்சம் நகைப்புத்தோன்றச் சகிக்கக்கூடாமல், மகாபராக்கிரமசாலிகளாகிய அநேகராக்ஷதகிங்கரர்களைக்கூவி அந்தக்குரங்கு ஓடிப்போகாததற்குமுன் சீக்கிரத்தில் ஆகாயமார்க்கத்தையும் கவிந்துபோய்க் கட்டிவளைத்து, அதைக்கொல்லாமல் இலகுவாய்ப்பிடித்துக் கொண்டுவாருங்களோடாவென்று ஆஜ்ஞாபித்தான். அந்தக்ஷணமே சூலாயுதம், வாளாயுதம், வேலாயுதம், தண்டாயுதம், தோமராயுதம், முசலம், பிண்டிபாலம், சக்கரம், முசுண்டி, குலிசம், பாசம், மழு, கழு, குந்தம், வில், அம்பு, இவை முதலாகிய ஆயுதவர்க்கங்களைக் கையிலேதாங்கிக்கொண்டு காளகூட விஷத்தைப்போலச் சரீரங்கறுத்துத்தோன்ற, உலகத்தை அழிக்கும்படி ஊழிகாலத்தில் விசையாய்ப் பொங்கி எழுந்துவருகின்ற சமுத்திரத்தைப்போல அதிவேகமாக நடக்கின்றவர்களும், யுத்தங்கிடைத்ததென்றுசொல்லக்கேட்ட மாத்திரத்தில அந்தச்சொல் கள்ளுண்டதைப்பார்க்கிலும் அதிகமாகிய களிப்

பிணையுண்டாக்கச் சந்தோஷிக்கின்ற சிந்தையையுடையார்களும், காடுபோல நெருங்கிச்சூழ்ந்து சமுத்திரத்தைப்போலக் கோஷிக்கின்றவர்களும், ஆகாயத்தைப்பார்க்கிலும் பரந்தகீர்த்தியையும், மலைபோலப்பருத்து உயர்ந்த தோள்களையுமுடையார்களும், தேவதானவர்களாகிய இருவகைப்பட்டபகைவர்களையும் அநாயாசமாக ஜயித்த வீரவிக்கிரமத்தையுடைய நாம், இப்பொழுது ஒரு சிறிய குரங்கினுடனேயா போர்செய்து ஜயம்பெறுகிறதென்றுநினைத்து, அந்த சிந்தைக்காக மிகுந்த நாணங்கொண்டு அது தங்களைவருத்த வருந்துகின்றவர்களும், அரையில் உடைவாளும், மார்பில் வச்சிரகவசமும், காலில் வீரகண்டையும் தரித்தவர்களும், எட்டுத்திக்கிலும்போய் முட்டுகின்ற தோள்களையுடையார்களும் மேகத்தைத்தாவிப்பிடிக்கின்ற கைகளையுடையார்களும் அண்டத்தை அளாவுகின்ற தலைகளையுடையார்களும் காலடிகளால் மலைகளையிடறுகின்றவர்களும், மேகம் குமிறுவதுபோலவும், பேரிகை முழங்குவதுபோலவும் வசனிக்கின்றவர்களும், தேவர்கள் பிரயோகித்த தெய்விகமாகிய ஆயுதங்கள்பட்ட புண்ணும், அசுரர்கள் பிரயோகித்தஆயுதங்கள் பட்ட வடுவும் புஜங்களில் பிரகாசிக்க வருகின்றவர்களும், ஆண்யானைகளையும் பெண்யானைகளையும் வாரித்தின்கின்ற பிலத்தை யொத்த வாயில் பிறைபோல விளங்குகின்ற வக்கிரதந்தங்களும், கொதிக்கின்ற கண்களுமுடையார்களும் ஒருவரையொருவர் இப்பொழுது படையெடுத்துப் போகின்றது, என்னவென்றுகேட்க, அவர் சொன்னசொல் இன்னதென்று தங்களுக்குத்தெரியாமல் கேட்டவர்க்கு எதிருத்தரமாக என்னவென்று வினவுகின்றவர்களும் தமக்குமுன்னே போகின்றவர்களுடைய முதுகைத் தமதுகோபாக்கினி தீக்கும்படி முனைகின்றவர்களும், ஒருகுரங்கல்லவா அசோகவனத்தையும் யாகமண்டபத்தையும் அழித்தது நம்முடைய பராக்கிரமம் நன்றாயிருக்கின்றது. இனி இதைவிட வேறுபழியுமுண்டோவென்று சொல்லிக்கொண்டு கோபாவேசத்துடேன மனோவேகத்தைப்பார்க்கிலும் முடுகிவருகின்றவர்களும், ரணபேரியின் ஓசையும், வில்நாரியின் வீரகண்டையின் ஓசையும், சங்கோசையும், அதட்டிக்கனைக்கின்ற ஓசையும், ஒன்றாகச்சேர்ந்து ஊழிகாலத்துக்கடலோசையையும், சப்தமேகங்களின் ஓசையையும் அடக்கும்படி தாங்கள்போவதற்குத்தெருவின் இடம்போதாதென்று ஆகாசமார்க்கமாயெழும்பிப் போகின்றவர்களும், புருவமும் கைவில்லும் வளையும்படிப் புகையெழத்தக்கதாகப் பெருமூச்சுவிடுகின்றவர்களும், ஒருவருக்கொருவர் முந்திக் கிரமமில்லாமற் கோபிக்கின்றவர்களும், நடக்க வழி கிடையாமையால் இவ்விலங்கை விசாலமாயிருக்கவில்லையென்று முன்னே போகின்றவர்களை இதோ நாங்களும் வருகின்றோம் நில்லுங்கோளென்று அழைக்கின்றவர்களும், உறையிலிருக்கின்ற வாளையுருவிக் கையிலேபிடித்து அது பளபளவென்று பிரகாசிக்கத்தக்கதாக அசைக்கின்றவர்களும், வாயுதட்டைமடித்து மீசைமுறுக்கித் தோள்கொட்டித் தொடைதட்டிக்கொண்டு கற்கள் நொறுங்கும்படித் துகைத்து வாயிலுள்ளபற்களை நெறநெறவென்னும்படிக் கடிக்கின்றவர்களும், மலைநிற்பதுபோல நிற்கின்றவர்களும், அநேகவித ஆயுத பரீக்ஷைபண்ணியிருக்கின்றவர்களும், யுத்தத்திலே சிறந்த பெயர்பெற்றிருக்

கின்றவர்களும், பூமிளெியச் சஞ்சரிக்கின்றவர்களும், வரத்தில் மிகுந்தவர்களும், போரையே ஆபரணமாக அணிந்திருக்கின்றவர்களும், தேவர்களைத் தோற்கும்படி வென்றவர்களும், அசுரர்களைக் கொன்றுதின்றவர்களும், பன்னகர்கள் உயுத்தத்திலே முதுகிட்டுப் போகப்பார்த்துச் சிரித்துப் பரிகாசஞ்செய்தவர்களும், அளகாபுரியைக் கொள்ளையிட்டுக் குபேரனுடைய கீர்த்தியை அழித்தவர்களும், தோள்கள் தினவெடுத்தாற் போர்செய்து அதைத்தீர்த்துக் கொள்ளவேண்டுமென்று நாள்தோறும் தேவலோகமுதலாகிய சகலலோகங்களிலும்போய்த் திரிபவர்களும், அஷ்டகிரிகளையும் காலினாலே இடறுங்கோளென்றாலும், கடல்நீரைக் குடியுங்கோளென்றாலும், சூரியனைக் கீழே தள்ளுங்கோளென்றாலும், மேகங்களைப் பிழியுங்கோளென்றாலும், ஆதிசேஷனை இழுத்துநிலத்தில்மோதுங்கோளென்றாலும், பூமியையெடுங்கோளென்றாலும், அந்தவார்த்தை வாயிலிருக்கும்போதுதானே முடிக்கத்தக்கவர்களுமாகிய அந்தக் கிங்கரர்கள், கால்களிலிருந்து எழும்புகின்ற தூளிகள்போய்த் தேவர்களுடைய கண்களை மறைக்கப் புலிக்கூட்டங்கள் போலவும், சிங்கக்குழாங்கள் போலவும் ஆலாலவிஷம்போலவும் அதிகவுக்கிரமாய்ச்சரவேகத்தைக்கொண்டு கரியமலைகள் உருப்பெற்றுவருவதுபோலவந்தார்கள். கண்கள் அக்கினிப்பொறியைக்கக்க, சுவாசம்புகைய, வேல்கள்மின்ன இடிபோலக் கர்ஜித்து நாலுதிக்கிலும் ஓடி, பிரசண்டமாருதமானது மோதுதலால் நக்ஷத்திரங்கள் உதிர்வதுபோலச் செடிகொடிமரங்களெல்லாம் சிறுதுகளாயுதிர்ந்து, மேகசஞ்சாரமில்லாத ஆகாசம்போல உருவழிந்திருக்கின்ற அந்தச்சோலையைச் சுற்றிவளைத்தார்கள். இவ்விதமாய்வந்து வளைத்தவர்களுடைய ஊதுகொம்புகளின் சப்தத்தையும், தவளச்சங்குகளின் ஓசையையும், பேரிகைமுழக்கத்தையும், வீரகர்ஜனையையும் கேட்டுச் சூரியனும் பயந்துபோம்படி அண்டமுகடுபெரியந்தம் வளர்ந்து கைலாயபர்வதம்போல நிற்கின்ற அநுமானானவர் அவர்கள் வருவதைக்கண்டு போர்செய்ய வருகின்றார்களென்பதைக்குறித்துத் தமது மனோபீஷ்டஞ் சித்தித்ததென்று மிகவுஞ் சந்தோஷப்பட்டார். அந்த ராக்ஷசர்கள் அநுமானைப்பார்த்து, இவன்தான் இவன்தானென்றும், இதுதான் இதுதானென்றும் சொல்லிக்கொண்டே வாயுவைப்பார்க்கிலும் விசையாக எதிரோடிநடந்து பகலானது இருண்டு இரவாக மாறும்படி அனைவரும் நெருங்கி சுவர்க்கமர்த்திய பாதாளமென்னும் திரிலோகங்களும் கிடுகிடாய்க்க ஆயுதவர்க்கங்களைப் பிரயோகித்தார்கள். சம்வர்த்தம், ஆவர்த்தம், புஷ்கலாவர்த்தம், சங்காரிதம், துரோணம், காளமுகி, நீலவருணமென்கின்ற எழுவகைப்பட்ட மேகங்களும்; இலவணம், இக்ஷு, சுரா, சர்ப்பி, ததி, க்ஷீரம், சுத்தோதகமென்கிற எழுசமுத்திரங்களும் அஞ்சும்படிப் பேரிகையை முழக்கினார்கள். மலைமுழையைப்போலத் தங்கள் வாயைத்திறந்து அதிலிருந்து புகை தவழும்படிக்கோபித்தார்கள். ஆதிசேஷனுடைய பிடரொடியும்படி அடிபெயர்த்துவைத்து மூங்கிற்காட்டில் அக்கினிகலந்ததுபோல ஒன்றாகக்கலந்தார்கள். தர்மமூர்த்தியாகிய மாருதியானவர், யுத்தசன்னத்தராய்வந்த இராக்ஷதர்களை அறிந்து, தமக்கு அருகில்

முறிந்துகிடக்கின்ற ஒரு பெரியமரத்தையெடுத்து இது இந்தச்சமயத்தில் நம
க்குக் கிடைக்கப்படாத துணையாகக்கிடைத்ததென்று அதிகமனக்களிப்போடு
கையில் தாங்கிக்கொண்டு முற்காலத்தில் பாற்சமுத்திரத்தைக்கடைந்த மந்தா
கிரியைப்போல அவ்விராக்ஷத சேனை சமுத்திரத்தின் மத்தியில் குபீரென்று
எழும்பிக்குதித்து, கையிற்கொண்ட மரத்தால் மலைகள் பிளக்கும்படி இடியிடி
த்து விழுகிறதுபோல மோதிமோதி யடித்தார். அத்தருணத்தில் எதிர்த்த
இராக்கதக் கூட்டங்களில் அநேகர் பருத்தபர்வதத்திலிருந்து அருவியாறுகள்
ஒழுகுவதுபோலத் தோள்களில்நின்று உதிரவெள்ளமொழுக ஒருவரையொ
ருவர் சேர்த்துக்கட்டிக் கொண்டவர்களும் தலைகள்பிளந்து உருள்கின்றவர்க
ளும், பறைக்குச்சமானமாகிய கண்கள் பறியுண்டவர்களும், விழுந்து தரை
யுடனே தரையாய்ப்படிந்தவர்களும், கோரதந்தங்களிழந்தவர்களும், பிடரும்
தலையும் பிளந்தவர்களும், உயிர்நீங்க உடல் சிதைந்தவர்களும், குடல்சரிந்த
வர்களும், ஆயுதங்களையெறிந்து சரீரமுறிந்து மறிந்தவர்களும், ஆயுதத்துட
னே ஆயுதந்தாக்குதலால் அக்கினிப்பொறியெழுந்து மயிர்கள் தீந்தவர்களும்
தொடைகளும் முதுகும் துணிந்தவர்களும், அஸ்திரசஸ்திரங்கள் ஒடிந்தும்
தோள்கள் அறுந்தும் விழுந்தவர்களும், வயிறு பிறுண்டவர்களும், மலைகள்
சாய்கிறதுபோலக் கால்சாய்ந்தவர்களு மானார்கள். பின்னும் போர்செய்ய
இருட்கூட்டத்தைப்போல நெருங்கிவந்தவர்கள் உடனே புழுதியில் விழுந்து
புரண்டு பிராணனை யிழந்தார்கள். வில்லையும் அம்பையும் தண்டாயுதத்தை
யும் ஏந்திவந்தவர்கள் அநுமான் உதைத்த உதையினால் மார்புநெரிந்து இரத்
தங் கக்கினார்கள். பக்கங்கள்தோறு மிருக்கின்ற மலைகளை வேரோடே பறி
த்து மோதுதலால் அநேகர் குபேரனுடைய அளகாபுரியிற் போய்விழுந்தார்
கள். அநுமான் வாரியிறைக்க அநேகர் உலகமுழுது மறையும்படி இறை
பட்டார்கள். கரகர வென்று சுழற்றி எறிய அநேகர் சுழன்றுகொண்டே
ஆகாசத்திற்போய் அங்கிருந்து சமுத்திரத்தில் விழுந்தார்கள். சரீரம் சின்ன
பின்னப்பட்டு அநேகர்மூலைக்குமூலை ஓடினார்கள், கைகொண்டமட்டும் அள்ளி
யள்ளி எட்டுத்திக்கிலும் எறியப்பட்டு அநேகர் தேகத்துடனே இவ்வுலகத்
தைத்துறந்தார்கள், சிலபேரைப்பிடித்துக் கைகளையும் கால்களையும் பிட்டு
எறிந்ததனால் அவர்கள் சிறகறுபட்டுக் கிடக்கின்ற பர்வதங்களைப்போல நிலத்
திற் கிடந்தார்கள். சிலபேரை வாலினாற் சுற்றியெடுத்து வீசுதலால் அவர்கள்
பம்பரத்தைப்போல அந்தரத்திற் சுழன்றார்கள். பலராக்ஷதர்களுக்கு வாள்க
ளும், விற்களும், மழுக்களும், சூலங்களும் இற்று அவற்றைப் பிடித்தகைக
ளும், தோள்களும் இற்றன. பலராக்ஷதர்களுக்கு நக்ஷத்திரங்கள் உதிர்வது
போலப் பற்கள் பலபலவென்று தெறித்தன. பலராக்ஷதர்களுக்குத் தலைகளு
டைந்து மூளைகள்தெறித்தன. பலராக்ஷதர்களுக்குக் கவசங்களும், வீரகண்
டைகளும், சிலம்புகளும், பொன்னரிமாலைகளும், அநேகவிதமாகிய ரத்ன
ஆரங்களும், குண்டலங்களும் தெறித்தன. பலராக்ஷதர்களுடைய ஐம்பொறி
களும் கலங்கும்படி தோல்களும் எலும்புகளும் உதிர்ந்தன. பலராக்ஷதர்களு
டைய முற்கரம், முசுண்டி, சக்கரம், கப்பணமென்னும் ஆயுதவர்க்கங்கள்

உதிர்ந்தன. இராக்ஷதர்களுடைய உயிர்பிரிந்துபோம்படி உடல்பிளந்து உதிர்ந்தன. அவர்கள் தலையில் அணிந்த ரத்னமகுடங்களும் உடைந்து உதிர்ந்தன. ஆஞ்சநேயருடைய கால்களினுற் பலபேர்மடிந்தார்கள். கைகளினுற் பலபேர் மடிந்தார்கள். தோள்களினுற்பலபேர்மடிந்தார்கள். தொடைகளினுற் பலபேர் மடிந்தார்கள். கண்களின் கோபாக்கினியினுற் பலபேர்மடிந்தார்கள். கைக்குத்துகளாற் பலபேர் மடிந்தார்கள். தங்கள் தங்கள் வாள்களினுலேயே பலபேர் மடிந்தார்கள். மரங்களினுலேபலபேர்மடிந்தார்கள். சிலபேரை ஓடி மேல்விழுந்து அமுக்கிக்கொன்ருர். சிலபேரை அவர்கள் தேகத்தில் சூக்ஷுமரூபங்கொண்டு நுழைந்து பருத்துக்கொன்ருர். சிலபேரை அவரவர்கள் தேர்க்கொடிக்கம்பத்தினுல் ஜாடிக்கொன்ருர். சிலபேரைப் பிணமலைகள்தோறும் போய்த் தேடிக்கொன்ருர். மற்றும் அவ்விராக்ஷத சைநியத்தின் நடுவே புகுந்து காற்ருடியைப்போல நான்கு மூலைகளிலும் சுழன்றுதிரிந்தார். சிலரந்த ஆஞ்சநேயரால் இழுக்கப்பட்டிறந்தார்கள். சிலர் இடிக்கப்பட்டிறந்தார்கள். சிலர் எடுத்தெறியப்பட்டிறந்தார்கள். சிலர்கைகளால் இறுக்கிப்பிடிக்கப்பட்டிறந்தார்கள். சிலர் அவர் கொக்கரித்ததனுல் இறந்தார்கள். சிலர் அவர் அடித்ததனுல் மாண்டார்கள். சிலர் அவர் உக்கிரதிருஷ்டியாகக் கண்ணைவிழித்ததனுல் மாண்டார்கள். சிலர் அவர் கொல்லுவாரொன்கின்ற பயத்தினுல் மாண்டார்கள். பின்னும் திருவடிகளானவர் தம்மை முட்டினவர்களை முட்டியும், கிட்டினவர்களைக்கிட்டியும், கட்டினவர்களைக்கட்டியும்தட்டினவர்களைத் தட்டியும், சமயுத்தஞ்செய்துகொன்ருர். அவர்இராக்ஷதர்கள் தம்மைநினையாமல் மறந்தாலுங் கொல்லுவார். மறவாமல் நினைந்தாலுங்கொல்லுவார். பூமியிலிராமல் ஆகாயத்தில்பறந்துபோனுலும் கொல்லுவார். எதிரேநில்லாமல் அப்புறத்தில்ஓடினுலுங்கொல்லுவார். இராக்ஷதர்களுடைய ஆயுதங்களை அவை வருகின்ற வழிகள்தோறும் கையினுற்பிடித்துப் பிசைந்து பிசைந்தெறிவார். நிணமும், மூளையும், சேறும்வண்டலும்போலிரத்தத்துடனேகலந்து லங்கைத் தெருவெல்லாம் நிறைந்து பிரவாகமாகிக் கோட்டை வாயில்களினுலே ஓடத்தலைப்பட்டது எப்படியிருந்ததென்ருல் அவ்விலங்கையானது அநுமானுடைய புஜபராக்கிரமத்தால் அலைச்சற்பட்டுத் தன்வாய்களால் ரத்தங்கக்குகிறதுபோலிருந்தது. வேதத்தையொத்த அநுமானவர் காலைக்கொண்டும், கையைக்கொண்டும்,வாலைக்கொண்டும், அநேகராக்ஷதர்களைச்சேர்த்துக்கட்டிமாத்துடனேமோதுதலால்அவர்கள்ஆலையிலிட்டகரும்பேபோலநசுங்குவார்கள். அவர்களுடைய ரத்தம்அந்தக்கருப்பஞ்சாறுபோலவழிந்து சமுத்திரமென்கின்றகூனிலேபோய்ப்பாயும். இராக்ஷதர்களை எடுத்தெறிவதனுல் அநேகமாளிகைகளும், மண்டபங்களும், கோபுரங்களும், இடிந்து, நகர்ந்தன. மதயானைகளும், பிடியானைகளும், குதிரைகளும், அங்கங்கேதானே உதைத்துக்கொண்டு இறந்தன. ஆஞ்சநேயர் தூக்கியெறிந்தவிசையில் அநேகர்தங்கள் வீட்டிலேதானே போய் விழுந்ததனுல் தங்கள் வீடுகளைத் தாங்களே இடித்து நகர்த்தினவரானுர்கள். அநேகர்தங்கள் கால்களால் தங்கள் மனையாட்டிமார்களைத் தாங்களேகொன்ருர்கள். அநேகர் தங்களாயுதங்களால் தங்கள்மக்களைத் தாங்களேகொன்ருர்

கள். அநேகர் தங்களாயுதங்களால் தங்கள் மக்களைத் தாங்களேயடித்தார்கள். அஞ்சாதேவி புத்திரரானவர் இராக்ஷதஸ்திரீகள்படுந்துயரத்திற்காக இறக்கப்பட்டு உங்கள் வீட்டைநோக்கிப் போங்கோளென்று சிலராக்ஷதரை அனுப்பிவிட்டார். நவமாகக்கூடிய நாயகிமார்கள்கையில் அவர்கள்உயிரைக்கொடுத்ததுபோலச் சில ராக்ஷதரைக்கொடுத்தார். தங்களைப்பிரிந்து யுத்தத்திற்குவந்ததைக்குறித்து வாடின ஸ்திரீகளுக்காக அவர்கள் மாளிகையிற்போய்ச்சேரும்படி சில ராக்ஷதரைப்போக்கினர். விருக்ஷங்கள்தோறும் தெற்றிகள்தோறும், நாற்சந்திகள்தோறும், கடல்கள்தோறும், கோட்டையிடங்கள்தோறும், தோப்புகள்தோறும், தெருக்கள்தோறும், மடுக்கள் வாவிகள்தோறும், ஏரிகள் ஓடைகள்தோறும், அந்தத் தேசமுழுமையும் இராக்ஷதப்பிணமயமாம்படி செய்தார். அவர்களுடைய உயிர்களையெல்லாம் பிடித்துப்பிடித்து நமனும் கையுஞ்சலித்துக் காலுமோய்ந்தான். மாருதியும்ஜாடுகிறதோ தவிர்கிறதில்லை. நக்ஷத்திரமண்டலத்திலும், மேகமண்டலத்திலும், சுவர்க்கத்திலும் மற்றுமுள்ள பலவிதமாகிய பதவிகளிலும், இராக்ஷதர்களுடைய உயிர்கள்போய் நிறைந்தன. இவ்விதமாகிய உயுத்தம் நடக்கின்றசமயத்தில் மறுபடியும் இராக்ஷதர்கள் மோகங்கொண்டவர்களைப்போலக் கோபாவேசமாய்வந்து ஆகாயமுழுமையும் எட்டுத்திக்குகளும் மேகங்கள் கவிந்துகொண்டதுபோலக் கவிந்துகொண்டார்கள். அவர்களுக்கு மத்தியில் வாயுகுமாரர் மேகத்தின் நடுவிலிருக்கின்ற சூரியனைப்போலப் பிரகாசித்தார். இரைகின்றதனாலும், அலைகின்றதனாலும், பெருத்திருப்பதனாலும், கறுத்துக்காண்பதனாலும், வேல், வாள்முதலாகிய ஆயுதங்கள்மகரமச்சங்கள்போலவிளங்குதலாலும், இராக்ஷதர்கள்கலங்கிய கடல்போலிருந்தார்கள். அநுமானனவர் அந்தக் கடலைக்கடைந்த மந்தரகிரிபோலிருந்தார். ஆஞ்சநேயருடைய கையினாலும், மெய்யினாலும், காலினாலும், வாலினாலும், மணிமுடிகள் நெரிந்து சிதைந்துமடிந்த இராக்ஷதர்களோ தேவர்கள்நடுங்கும்படி கருடன் அமிர்தகடத்தைக் கிரகித்துக்கொண்டு போனகாலத்தில் அவனால் சின்னபின்னப்பட்ட சர்ப்பராஜர்களைப்போலானார்கள். பவனகுமாரரோ? அந்தக் கருடனைப்போலானார். தசைமுதலானவைகளும் அற்றுச் சிதறும்படித் துகைத்துக்கொன்றும் குறைவுபடாமலிருக்கின்ற அரக்கர்கள் யானைக்கூட்டத்தையொத்தார்கள். அநுமானனவர் அந்த யானைகளுக்குச் சத்துருவாகிய சிங்கத்தையொத்தார். அம்புகொண்டு எய்ததும், கதைகொண்டு அடித்ததும், சூலங்கொண்டு எறிந்ததும், வாள்கொண்டு அறுத்ததும், கோல்கொண்டு குத்தியதும், சுரிகைகொண்டு தோண்டியதும், வேல்கொண்டு தொளைத்ததும், குடாரங்கொண்டு பிளந்ததும், சக்கரங்கொண்டு கொய்ததும், பாசங்கொண்டு சுற்றியதும், குறடுகொண்டு பற்றியதும், சலாகைகொண்டு குடைந்ததுமாகிய பலவிதகாயங்களும், அநுமானுடைய புஜத்திலுண்டாயின. விசாலமாகிய சமுத்திரங்களும் மழைபெய்யும் பருவத்தையுடைய மேகக்கூட்டங்களும் அஞ்சும்படி பிரபலமான போர்செய்கின்ற இராக்ஷதர்களுடையசண்டையின் ஆரவாரத்தைப்பார்க்கிலும் ஐயனாகிய அநுமானைப் புகழ்கின்ற தேவர்களுடைய ஸ்துதிமுழக்கமே அன்றைப்போரில்

அதிகரித்தது. கொடிய கோபத்தையுடைய நிசாசரர்கள் முறைமுறையாக விசையுடனே பிரயோகித்த எத்தனையோகோடி ஆயுதங்கள் பட்டபுண்களும் தேவர்களும் அவர்கள் பத்தினிமார்களும் முனீசுவரர்களும் மழைபோலச் சொரிந்த புஷ்பங்களும் வாயுபுத்திருடையதோளில் வேற்றுமை தெரியாமல் விளங்கியிருந்தன. கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்காகிய, அஷ்டதிக்குகளும் சக்கரம்போலச் சுழல்வதினாலும்; ஆகாசத்தில் உயர்ந் தெழும்புவதினாலும் அங்கிருந்து மலைவருவதுபோலப் பூமியிற்பாய்வதினாலும் கால் ஒடிந்து கையறுந்து தோள்முறிந்து தொடைநெரிந்து வயிறுகிழிந்து குடர்கள்சரிந்துதலைபிளந்து உடல் நசுங்கிராக்ஷசர்களெல்லாம் இறந்தார்களேயல்லாமல் அநுமானுடைய சரீரம் சிறிதாவதுவெயர்க்கவுமில்லை அவர்பெருமூச்செறியவுமில்லை. மனஞ்சலிக்கவுமில்லை. இராவணன் அனுப்புவிக்கும்படி விஷமுண்டவர்களைப்போல மயங்கி அநுமான்மேல் யுத்தஞ்செய்யவந்தஇராக்ஷதர்களெல்லாம், இவ்வாறுபோராடி மடிந்தார்களே யல்லது அவர்களில் ஒருவராகிலும் பயந்து ஓடவேயில்லை யாகையால், அரக்கரைப்பார்க்கிலும் சுத்தவீரர்கள் ஆரிருக்கின்றார்கள் ? அந்தக் கிங்கரர்களெல்லாம் ஒருக்ஷணப்பொழுதில் மடிந்துபோகவே அதுகண்டு சிங்காரவனத்தின் காவலாளர்கள் நடுக்கத்துடனே புறப்பட்டுக் கைகாலெழாமல் பயமானதுகழுத்தைப்பிடித்துத் தள்ளப்பிணமலைகளின்மேல் விழுந்துதமொறி எழுந்து சீக்கிரமாக ஓடி இராவணனிடத்திலேபோய்ப் பயத்தினாலே சொல்லுகிறதற்கு நாவெழாமல் விம்மிவிம்மி, அநுமானாலே இராக்ஷதர்கள் மடிந்ததைக் கையினாலே காட்டிக்காட்டித் திக்குகளை வெறிக்கவெறிக்கப்பார்த்துச் சஞ்சலப்பட்டார்கள். அவர்கள் படுகின்றவருத்தமே தனக்குச்சொல்லும்படி இராவணன் அறிந்துகொண்டென்னடாபேய்ப்பயல்களே; நான் அனுப்பின இராக்ஷதர்களெல்லாம் இறந்துபோனார்களோ? அல்லவென்று என்னுடைய ஆஜ்ஞையைக்கடந்து துறந்துபோனார்களோ? அல்லவென்று யுத்தஞ்செய்து வெகுநாளானபடியினாலே அதைமறந்துபோய்த் திரும்பிவந்து விட்டார்களோ? நீங்களேன் ஓடிவந்தீர்களென்று தன்பத்துவாய்களும் நெருப்பைக் கக்கும்படிக் கேட்க, சுவாமீ! அப்படிக்கெல்லாம் வந்ததுஒன்றுமில்லை. தாங்கள் அனுப்பிய கிங்கரர்களெல்லாம் அந்தக்குரங்கினாலே யுத்தகளத்தில் பராக்கிரம மழிந்து, அஞ்சாமல் பொய்ச்சாக்ஷி சொன்னவர்களுடைய குலம்போல நிர்மூலமாக மடிந்துபோனார்களென்று சொன்னார்கள். அதுகேட்டுத் தன்பக்கத்திலிருந்து ஏவல்செய்கின்ற அஷ்டதிக்குப் பாலகர்களாகிய தேவர்களைப்பார்த்துமனத்திலே நாணங்கொண்டு, இதுவென்ன நீங்கள் அறியவில்லையாவென்று மூன்றுலகங்களையும் விழுங்கத்தக்கதாகக் கோபாக்கினியானது மூண்டெழச்சொன்னான். அதற்கு அவர்களொன்றும் பேசாமற்பயந்திருந்தார்கள். மறுபடியும் வந்துசொன்னவர்களைப்பார்த்து, அந்தக்குரங்குநம்முடைய இராக்ஷதர்களைக் கொன்றதென்கின்ற வார்த்தை நீங்கள்காதினாலே கேட்டதா? அல்லது கண்ணினாலேகண்டதா? சொல்லுங்கோளென்று கேட்க, ஐயா! நாங்கள் ஒரு பக்கத்திலிருந்து பார்த்தோம். சமுத்திரம்போலச் சுற்றி வளைந்துகொண்ட

நம்முடைய சேனைகளையெல்லாம் அந்தவானரம் மண்டலாகாரமாகச் சுழன்று சுழன்று ஒருமாத்தாலே அடித்துமடித்தது. இன்னமும் அம்முயற்சியை ஒழித்ததல்லவென்று சொன்னார்கள்.

கிங்கரர்வதைப்படலம்.
முற்றிற்று.

## ஜம்புமாலிவதைப்படலம்.

அப்போதுகைகூப்பிக்கொண்டு எதிரேநிற்கின்றமலைக்கு ஒப்பாகியதோள்களையுடைய அதிவீரனாகிய ஜம்புமாலி யென்பவனைப்பார்த்து, நீயிந்த க்ஷணமே யானைகுதிரை முதலாகிய சேனைகளுடனே போய்வளைத்து அந்தக்குரங்கின் மதத்தையடக்கி, அதைப்பிடித்துக் கயிற்றினாலே கட்டிக்கொண்டுவந்து என்முன்பாகவிட்டு என்னுடைய கோபத்தையாற்றென்று சொன்னான். அந்த வார்த்தைகேட்டு மிகவும் மகிழ்ச்சியாய்ச் சேவித்துக்கொண்டு கணக்கிடப்படாமல் திரண்டஇவ்வளவுஇராக்ஷத வீரர்களுக்குமுன்என்னையொரு பொருளாகமதித்து, நீ இந்தக்காரியத்தை முடிக்கவேண்டுமென்று ஏவத்தக்க பாக்கியம் நான்பெற்றேனே இனி என்னைப்பார்க்கிலும் உயர்ந்தவர்கள் ஆரிருக்கின்றார்களென்றுசொல்லி, அவ்விலங்காதிபதியாகிய இராவணனுடைய கோபந்தானே நடந்துபோகிறதுபோலத் தன்னுடைய சேனைகளுடனேயும், தனக்கு இராஜாவாகியஇராவணன்கூட்டிய சேனைகளுடனேயும்தன்பிதாவும் இராவணனுடைய முதல்மந்திரியுமாகிய பிரகஸ்தனென்பவன் அனுப்பிய சேனைகளுடனேயும், மற்ற இராக்ஷதசிரேஷ்டர்கள் விட்ட சேனைகளுடனேயும்,நமக்கு யுத்தம்வாய்த்ததென்கிற சந்தோஷத்தைக்கொண்டு, ஜம்புமாலி புறப்பட்டான், இடிபோலுங்குரலினையும், சிவந்தகண்களையும், தாவள்யமாகியதந்தங்களையும், வீரபட்டங்கட்டிய நெற்றியையுமுடைய மலைபோலப்பருத்த யானைக்கூட்டங்களும், மேகமண்டலமட்டும் உயர்ந்த சக்கரங்களையும், தட்டுமொட்டுகளையும் முத்துச்சரங்கள்தூக்கிய கொடிச் சீலைகளையு் முடைய ரதக்கூட்டங்களும் காற்றைப்பிடித்துக் கட்டிக்கால்கள் முதலாகிய பலவுறுப்புகளும் ஏற்படுத்தி உயிருங்கொடுத்து எமனை மேலேயேற்றியதற்கு ஒப்பாயிருக்கின்ற புரவிக் கூட்டங்களும், சுழல்கின்ற விழிகளையுடைய புலிகளுக்குச்சமானமாகிய பதாதிக் கூட்டங்களும் நெருங்கவும், தோமரம், உலக்கை, கட்கம், கோடாரி, வச்சிரம், அங்குசம், சக்தி, சக்கரம், வில், அஸ்திரம், கதை, எறியீட்டி, இரும்பிற்செய்த நெருஞ்சில்முள், காலபாசம், வளைதடி, கவண்கல், வேல், பெருஞ்சவளம், எழு, கழு முதலாகிய அநேகவித ஆயுதங்கள் பிரகாசிக்கவும், பலபேதமாகிய சித்திரக்கொடிகள் ஆகாயத்தையளாவிக் காடுபோல அடர்ந்து வரவும், முரசங்கள், சங்கங்கள், எக்காளங்கள் முதலாகிய வாத்தியங்கள் சப்திக்கின்ற சப்தமும், தேர்வண்டில்கள் கடகடவென்று ஒலிக்கின்ற ஒலியும், குதிரைகள் கனைக்கின்ற ஓசையும், யானைகள் முழங்குகின்ற முழக்கமும்,வில்லின்குணத்தொனியும், சகலஜீவராசிகளின் செவிகளும் செவிடுபடும்படி அண்டமுகடுமட்டும்போய்த் தேவர்கள் ஒருவர்க்கொருவர் பேசுகின்றவார்த்

னதயை விவரந்தெரியாமல் மயக்கவும், அந்தச்சேனை நடக்கும்போது சுவர்ண மயமாகிய இலங்கையிலிருந்து தூசுகளெழுந்துபோய்ப்படிகிறபடியினாலே மலைகளெல்லாம் மகமேருபோலவும், நகரங்களெல்லாம் சுவர்க்கலோகம்போலவும், பிரகாசிக்கவுந் தலைப்பட்டன. பாவியாகிய ஜம்புமாலியினுடைய ரதத்தின் புறத்தில் வந்த தேர்கள் ஒருபதினாயிரம் யானைகள் இருபதினாயிரம் குதிரைகள் நாற்பதினாயிரம். பதாதிகள் எண்பதினாயிரம், அந்தத் தேர்களில்வருகின்ற வீரர்கள் பிரமவம்சத்தில் பிறந்தவர்கள். தநுர்வேதத்தைக் கரைகண்டவர்கள். சமஸ்த மந்திரதந்திரங்களு மறிந்தவர்கள். அபரிமிதமாகிய வரம்பெற்றவர்கள். மிகவும் குரூரமானவர்கள். மகாபராக்கிரம சாலிகள். வச்சிரஸ்தம்பத்திற்கு ஒப்பாகிய தோளினிடத்தில் வில்லைத் தாங்கினவர்கள். முதுகின் புறத்தில் அம்பறாத்தூணி தூக்கினவர்கள். மார்பில் வெற்றிமாலையும் கவசமுந் தரித்தவர்கள். யானைமேல் வருகின்ற வீரர்கள். நிருதியின் வம்சத்திற் பிறந்தவர்கள். ஐராவதமென்னும் வெள்ளையானையை ஏறி நடத்துகின்ற தேவேந்திரனுக்குச் சமானமாகிய அழகினையுடையவர்கள். பலவகை ஆயுதபரீக்ஷையும் அங்குச பரீக்ஷையுந் தேர்ந்திருக்கின்றவர்கள். நெருப்பைக்கக்குகின்ற கண்களும் சூரியனைப்போலப் பிரகாசிக்கின்ற சரீரமுமுடையவர்கள். அசுவத்தின் மேல் வருகின்ற வீரர்கள், பதினெண்வகைப்பட்ட சாரிகையுந் தெரிந்தவர்கள். ஆயுதபரீக்ஷகளெல்லாம் அறிந்தவர்கள். யுத்தத்ில்முனைந்து இரதவீரர்கள் கஜவீரர்களுடைய சிரத்தின்மேலும் தாவிச்செல்லும்படிப் புரவியைநடத்தத்தக்கவர்கள். இப்படிப்பட்ட சேனைகளெல்லாம் சூழும்படி அந்தஜம்புமாலியென்பவன் தேவர்களும் பயந்துநடுங்க, அளவில்லாத ஆயுதங்களை யேந்திக்கொண்டு கண்களில் நெருப்புப்பறக்க, மார்பிலணிந்த கவசமும் கோரதந்தங்களும் பிரகாசிக்க வந்தான். அப்போது நந்தவனத்திலிருந்த ஸ்ரீராமதூதரானவர் ஏனோ இன்னம் இராக்ஷதர்கள் வரவில்லையென்று அவர்கள் வரும்வழியைப்பார்த்து சோலையின் வாயிலில் சந்திரன் முதலாகிய கிரகங்களும் நக்ஷத்திரங்களும் மேலே தவழும்படி, இந்திரதநுசுபோலத் தோன்றுகின்றதோரண கம்பத்தின் மேலேறி, அந்தக்கம்பத்தில் பதித்திருக்கின்ற நவரத்தினங்களும் பொன்னும், ஆகாயத்தில் நிறைந்த இருளைநீக்கிப் பிரகாசிக்கச் சமுத்திரத்தின் நடுவிலே உதயமாகிய சூரியனுக்குச் சமானமாய் எழுந்தருளியிருந்தார் அப்படியிருந்தவர் இடியுடனே மேகங்கள்சிந்தவும், கடலோசையடங்கவும் அஷ்டகஜங்கள் உயிரையும் விஷத்தையுங்கக்கவும், இராக்ஷதர்களுடைய நெஞ்சில் பயம்ஜனிக்கவும், தேவர்கள்நடுங்கவும், ஸ்ரீராமசந்திரனுடைய வில்லின்குணத்தொனியைப்போல கர்ஜித்து அஷ்டதிக்கிலுமுள்ள ஐராவதம், புண்டரிகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புஷ்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீபமென்கின்ற யானைகள் மதமடங்கி அசைவற்றிருக்கவும், தென்திசையிலிருக்கின்ற யமனும் மனந்திடுக்கிடவும், ஆகாசத்தில் நின்றும் நக்ஷத்திரங்கள் பூவுதிர்வது போல வுதிரவும், பூமியும் அஷ்டகுல பர்வதங்களும் பிளக்கவும் சமுத்திரங் கலங்கவும் தோள்களைக்கொட்டினார். அத்தருணத்தில் நிருதர்களெல்லாம் சமுத்திரத்தைப்போல ஆர்ப்பரித்து நான்குதிசையிலும் இரத்தப்பிரவாகம் ஓட.

மத்தியில் மத்தியில் பிணமலைகள் தங்களைத் தடுப்பதனால் வருவதற்குச் செவ்வையாகிய வழியைக்காணாமல், எந்தவழியால் போவோமென்று சொல்லிக்கொண்டு தங்கள் தங்கள் இனத்தாருடைய சரீரத்தின்மேல் காலிடறிமேல் விழத்தலைப்பட்டார்கள். ஜம்புமாலியானவன் அவ்விடத்தில் அந்தச்சேனை வெவ்வேறாக அணிவகுத்து இருபக்கங்களிலும் முன்னும் பின்னும், கிரமம் கிரமமாக முடுகிப்போம்படி. ஏவித் தானும் தன்சேனை நடத்தினன். அது கண்டு தோரண கம்பத்தின்மேலிருந்த ஆஞ்சநேயர் தம்முடைய அபீஷ்டம் சித்தித்ததென்றறிந்து தோள்கள்பூரித்து, திருவாழி திருச்சங்கத்தை ஏந்திய ஸ்ரீமந்நாராயணருடைய திருமண்குறியானது தீபச்சுடர்போலப் பிரகாசிக்கின்ற தமது நெற்றியே முன்னணியாகவும், தேகத்தில் மொய்த்திருக்கின்ற ரோமங்களே நடுவணியாகவும், வாலே பின்னணியாகவும், கைகளிலும் கால்களிலுமுள்ள நகங்களே வேல்கள்வாள்களாகவும் தாமும்அவர்களுக்கு எதிரே யுத்தசன்னத்தராய் நின்றார். அதுகண்டு, இராக்ஷதர்கள் கோபச்செருக்குற்றவர்களாய் அவர்மேல் சூரியனைப்போல ஒளிவீசுகின்ற அநேகவித ஆயுதங்களை மழைபொழிவதுபோலப் பிரயோகஞ் செய்தார்கள். கறுத்த சமுத்திரத்திற்குச் சமானமாகிய அந்தராக்ஷதவீரர்கள் பிரயோகித்த ஆயுதங்களையெல்லாம் தமது சரீரத்தில் ஒன்றுவதுபடவொட்டாமல், கைகளால்பிடித்து ஒடித்துத் தூள்தூளாகும்படிப் பிசைந்து கடலிலெறிந்துவிட்டு, ரோமத்துவாரங்கள்தோறும் அனற்பொறிசிதறும்படி, வடவாமுகாக்கினியைப்போலக் கோபித்துத் தோரணகம்பத்தைவிட்டுப் பூமியிலே குதித்துப் பார்க்கும்போது ஒரு மழுவாயுதங்கிடந்தது. அதையெடுத்துக்கொண்டுஇராக்ஷதக்கூட்டத்தில்பிரவேசித்து அவர் தோரணகம்பத்தின் மேலிருக்கின்றாரென்றும், அதிலிருந்து எழுந்தாரென்றும், நிலத்திலிறங்கினாரென்றும், மறுபடி ஏறினாரென்றும், நான்குபக்கங்களிலும் திரிகின்றாரென்றும், சண்டைசெய்கின்றாரென்றும், அறியாதவர்களாய் எங்கும்விரிந்து குவிந்து விலங்கிக்கலந்து பொருந்திநெருங்கிய அரக்கர்களெல்லாம், உயுத்தகளத்தில் சின்னபின்னப்படும்படி ஜாடினார். அவர்கள் எறிகின்ற சக்கரமுதலானவற்றையும், எய்கின்ற அஸ்திரமுதலானவற்றையும், வல்லிடிபோல மேல்வருகின்ற தண்டமுதலானவற்றையும் இடதுகையினாற்பற்றிச் சிதைத்தார். யானைகள் மாயவும், தேர்களழியவும், குதிரைகள் நெரியவும் வலதுகையினால் குத்திக்குமைத்தார் மற்றும் வாயுபுத்திரர் அந்த மழுவாயுதத்தைக்கொண்டுமோதுதலால் அநேகம்யானைகள் கொம்புகள்நெரிந்து தும்பிக்கைதுணிந்து கால்முறிந்து வால்சிதைந்து செவியறுந்து, தொனியடங்கி மதம் வறண்டு மத்தகம்பிளந்து கோபந்தணிந்து மடிந்தன, அநேக ரதங்கள் அச்சொடிந்து, மச்சழிந்து சகடுபிளந்து முகடுகுலைந்து மேற்பார்தகர்ந்து கீழ்ப்பார் நெரிந்து ஏர்க்கால்முறிந்து குத்துக்கால்துணிந்து தட்டுச்சிதைந்து சுற்றுப்பெயர்ந்து குடைசாய்ந்து கொடிவீழ்ந்து புரவிகள்மடிந்து வலவர்களிறந்து சின்னபின்னமாயின. அநேகங்குதிரைகள் இடுப்பொடிந்தும் மண்மேலுருண்டும் நெஞ்சுலர்ந்தும் வாய்புலர்ந்தும் வாலறுந்தும் கண்குழிந்தும் அஸ்திகள்நெரிந்தும் கால்மடங்கியும் கழுத்துத்துவண்டும் வயிறுபீறுண்டும்மாண்டன. அநே

கங் காலாள்கள்பயந்து பிரமித்துத் திட்டென்றுவிழுந்து பொட்டென்றெழுந்து அடியுண்டு பிடியுண்டு ஐம்பொறிகலங்கி அறிவுதடுமாறி உருண்டு சுருண்டு பிராணனோடு தரையிலேதானே உழைத்துக்கொண்டு புழுதியிற்புரண்டார்கள். மற்றும் யானைகளைவாரி யானைகளின்மேல் மோதினார். தேர்களைத்தூக்கித் தேர்களின்மேற்புடைத்தார். குதிரைகளையெடுத்துக் குதிரைகளின்மேலெறிந்தார். பதாதிகளையள்ளிப் பதாதிகளின்மேலிறைத்தார். மூளையும் உதிரமும் ஒன்றாகக்கலந்து குழம்பிச்சேறாக அந்தச்சேற்றில் யானைகள்விழுந்து அழுந்தவும், இராக்ஷதவீரர்களுடையதலைகளும் தோள்களும் அறுபட்டுவிழவும், மிதித்தார். மல்வீரர்களையும், மற்றவீரர்களையும் பிடித்து அவர்களுடைய கோர தந்தங்களும், கைகளும், விற்களும், வேல்களும் போருக்கு அழைக்கின்ற சொற்களும், உயிரும், நீர்த்தூளியாம்படி நிலத்திலிட்டுத் துகைத்தார். நான்குதிக்கிலும் நெருங்கியிருக்கின்றதேர்கள்தோறும், யானைகள்தோறும், புரவிகள்தோறும், பதாதிகள்தோறும் நடந்து நடந்து அநேக சைநியங்களைமடித்தார். யுகாந்தகால இடியிடித்து விழுந்தாற்போல அநுமானானவர் உயர எழும்பிக் குதிரைகளின்முதுகிலே குதிப்பார். குதிரைகளின் முதுகிலிருந்து நிருதர்களுடைய மார்பிலேகுதிப்பார். ராக்ஷசர்களுடைய மார்பிலிருந்து ரதங்களின்மேற்குதிப்பார். இரதங்களின்மேலிருந்து மதயானைகளின் மேற்குதிப்பார். இருவினைகளையுங்கடந்த முக்தாத்மாக்களுடைய அறிவைப்போல ஒரு தன்மைப்பட்டிருப்பார். ஸ்தனமுதலாகிய அவயவங்களைச் சகலருக்கும் பொருளுக்கு விலைகூறுகின்ற வேசையர்களுடைய மனத்தைப்போலப் பல தன்மையராகக் காணப்படுவார். காற்றாடியைப்போலச் சுழன்று சுழன்று திரிவார். ஸ்ரீமந்நாராயணனுடைய தாசபூதர்கள் அவனுடைய குணாதிசயத்தைப் பெறுவார்களென்கின்ற வேதப்பிரமாணத்தைப் பிரத்தியக்ஷப் படுத்துகின்றவரைப்போல ஸ்ரீரகுநாயகருக்கு அடிமையாகிய ஆஞ்சநேயர் பூமியிலும், ஆகாயத்திலும், எட்டுத்திக்கிலும் பார்த்தவர்களுடைய கண்ணிலும் நினைத்தவர்களுடைய மனத்திலும், எங்கெங்கும் தாமாய்க் கலந்திருந்தார். தேர்களை அவற்றிற்கட்டிய கொடி குடை முதலாகியபலவகை யுறுப்புகளுடனும்பூட்டியபுரவிகளுடனும் மேலிருக்கின்ற இரதிகர்களுடனும், நடத்துகின்ற சாரதிகளுடனும், ஒருகையினாலெடுத்து அடித்து நிலத்திலிட்டு அரைத்தார். மதயானைகளை அவற்றின்மேல்வைத்த அம்பாரிகளுடனும் அவற்றில் உட்கார்ந்திருக்கின்ற வீரர்களுடனும், அவற்றைச்செலுத்துகின்ற பாகர்களுடனும் ஒருகையினாற்பிடித்துப் பிசைந்து உயிர்சோரும்படிப் பிழிந்தார். கருத்தநிறத்தையும், வக்கிரதந்தங்களையும், எரியெழும்படி விழிக்கின்ற கண்களையும், கைகளிற்சூலத்தையும், பாசத்தையு முடையவர்களாய்க் கோரபிகோரத்துடனே எமனைப்போலவந்த இராக்ஷதர்களையெல்லாம் உருத்திரமூர்த்தியைப் போலத் தனித்தனி உதைத்து உதைத்துக் கொன்றார், சக்கரங்கள், தோமரங்கள், உலக்கைகள், தண்டுகள், வேல்கள், வாள்களும், குடைகள், கொடிகள், ஆலவட்டங்கள், சாமரங்களும், தேர்கள், யானைகள், குதிரைகள், பதாதிகளும் சின்னபின்னப்பட்டு இரத்த ஆற்றின் அலைகள் புரட்டி யுருட்டும்

படிப் போய்ச் சமுத்திரத்தில் விழுந்தன. அநுமான் கையிலிருக்கின்ற இருப்புலக்கையின் அடிபட்டு இராக்ஷதர்களுடைய தலைகள் எழும்பி அண்டத்தையெட்டி மலைகளைமுட்டித் திசைகளைக்கிட்டி ஒன்றோடொன்று ஒட்டித் தட்டுமுட்டாடின. இப்படியாகக் கூடவந்த யானைக்கூட்டங்களெல்லாம் ஒரு உக்கிர சிங்கத்தினாற் கொல்லப்பட்டு இறக்கும்படித் தனித்துநிற்கின்ற மதயானையைப்போல ஜம்புமாலியென்பவன் தன்னைச் சூழ்ந்துவந்த சேனைகளெல்லாம் அநுமானாலே இம்சிக்கப்பட்டு மாண்டுபோகத் தான்மாத்திரம் தனியேநின்று, எமனைப்போலக் கண்கள் அக்கினியைச்சொரிய அதிக கோபாவேசங்கொண்டு அவ்விரணகளத்தில் மடிந்த யானைகள், குதிரைகள் ராக்ஷசர்களுடைய ரக்தநதியில் மூழ்கி, நிணச்சேற்றில் தன் தேர்வண்டில் அழுந்தி அப்புறம் பெயரமாட்டாமல்நின்ற நிலையை அறிந்து அதைவிட்டுவிலகிப் போவதற்கும் வேறொரு வெளியிடங்கிடையாமல், எங்கும் அலைந்து தடுமாறி மஹா பிரயாசத்துடனே ரதத்தை நடத்திக்கொண்டுவந்தான். அப்படி வந்த ஜம்புமாலியைப்பார்த்து, ஸ்ரீராமதூதரானவர் ஒருவார்த்தை சொல்லுகின்றார். அடா இராக்ஷதா என் கையிலேந்தியஆயுதமும் ஒன்றே நீ ஏறியதேரும் ஒன்றேயாகையால் நீ மிகவும் இளைத்தவனாயிருக்கின்றாய். இவ்விதமாக இளைத்த எளியவருடன் சண்டைசெய்து பிராணனை வாங்குகிறது நீதியல்ல. கூடவந்தவர்களையும் இரக்ஷிக்கத்தக்கசக்தியுனக்கில்லாமல்பின்னிட்டுநின்றாய். எதிர்த்தால் எப்படியும் இந்தக்ஷணமே யிறந்துபோவையல்லாமல் வேறென்ன செய்வாய், ஆதலால் வேண்டாம்.சும்மா தப்பிப்போய்விடென்று சொன்னார். அதுகேட்ட ஜம்புமாலியானவன் அப்படியா உன்னுடையவீரம் நல்லதுதான் நல்லதுதானென்று நெருப்பெழும்படிநகைத்து, இப்பொழுது உன்னை ஜயிக்கமாட்டாமல் உன்னாலே இறந்துபோன இந்தச்சோம்பேறிகளைப்போலவா என்னையும் நினைத்துக்கொண்டாயென்றுசொல்லி, தன்னுடைய பலம்பொருந்திய வில்லிலே நாணைபற்றி ஒளிவீசுகின்ற பாணங்களை ஒன்று பத்து நூறு ஆயிரம் பதினாயிரம் லட்சம் கோடியாகப்பூட்டிப் பிரயோகஞ்செய்தான், அப்படிப் பிரயோகித்த ஜம்புமாலியை ஆஞ்சநேயர்பார்த்து அடா துஷ்டா! நீ சும்மா வீராதே இன்னமும் பாணங்களைப் பிரயோகஞ் செய்கையிலே வில்லம்புமுதலாகிய ஆயுதங்களை யுடையவனாயிருக்கிறவன் நிராயுதனை ஜெயிப்பது அருமையா? அருமையல்ல வென்றுசொல்லி நகைத்துக் காற்றினால் பல திசைகளிலும் சிதறிப்போகின்ற மேகத்தைப்போலச் சிதறிப்போம்படி, அவனால் எய்யப்பட்ட பாணங்களையெல்லாம் தமதுகையிற்கொண்ட இருப்புலக்கையினால் சின்னபின்னப்படுத்தினார். ஜம்புமாலிதன்னால்பிரயோகிக்கப்பட்டு முன்னும்பின்னுமாகப்போகிய அஸ்திரங்கள் அநுமானுடைய தேகத்திற்படாமல் முறிந்து விழுந்ததுகண்டு,அதிககோபதாபங்கொண்டு தன்னுடைய இரதத்தை அநுமான்மேல் செலுத்தும்படி எத்தனப்பட்டுப் போகிறதற்குவழிதுறைகாணாதவனாய்த் திகைத்துமுன்னிருந்த இடத்தில்தானேயிருந்தது, அக்கினியைக் கக்குகின்ற ஒரு அர்த்தசந்திர பாணத்தைவிட்டு ஸ்ரீராமதூதருடைய கையிலிருந்த அந்த இருப்புலக்கையைக் கண்டதுண்ட மாக்கினான். இருப்புலக்கை

யானது பொடிபட்டதுகண்டு எங்களாண்டவனுகிய ஆஞ்சநேயர் சற்றே மன ஞ்சலித்து, மற்றும் அவன் எய்கின்ற பாணங்களையெல்லாம் ஒருமிக்கக் கையி னுல்பிடித்து மடக்கி ஒடித்து நொறுக்கி எறிந்துவிட்டுத் தேவர்கள்பார்த்துச் சந்தோஷித்துஆர்ப்பரிக்கும்படி, அவனுடைய தேரின்மேல்பாய்ந்து காவடத் தையுடைய அந்த ஜம்புமாலியின் கையிலில்லை எட்டிப்பறித்து அவன் கழுத்தி லேமாட்டி விசையாகத்திருப்பி முறுக்கி இழுத்தார். இழுத்தமாத்திரத்தில் பெரியமலையற்று மறிந்து விழுவதுபோல அவன் தலையற்று மண்மேல்விழுந் தது. உடனே அவனுடையதேரும், சாரதியும், புரவியும் முறிந்து, நெரிந்து, சிதைந்து குழம்பாகும்படி, சரேலென்று எழும்பிக்குதித்து மிதித்துத் துகை த்துவிட்டு மறுபடியும் அந்த உன்னதமாகிய தோரண ஸ்தம்பத்தின்மேல்வ ந்து ஏறிக்கொண்டார். அவரைப் பழித்துக்கொண்டுவந்து போர்செய்து மாய் ந்த இராக்ஷதர்களைக்கண்டு தேவர்களெல்லாம் பயந்து ஒடிப்போனுர்கள். தங் களைப் பிரிந்ததனுல் துக்கப்பட்டுக்கொண் டிருக்கின்ற மனையாட்டிமார்களா கிய அரக்கிமார்கள் காணும்படி, அவர்கள்நாயகன்மார்களுடைய பிணமாகிய உடல்களை உதிர ஆறுனது இழுத்துக்கொண்டுபோய் வீடுகள்தோறும் எறிய, லங்கையிலுள்ளவர்களெல்லாம் அஞ்சியோடினுர்கள். இறந்த இராக்ஷதர்களுக் காக ராக்ஷச ஸ்திரீகள் அங்கங்கே அழத் தொடங்கினுர்கள். இப்போது இந்த அநுமானுலே இராக்ஷதர்களுடைய பல மழிந்ததென்று தர்மதேவதை சந்தோஷித்தது. அச்சமயத்தில் அந்தப் பூங்காவனத்தைக் காக்கின்ற தேவர்கள், இராவணன் சமுகத்திற்குச் சீக்கிரமாகப்போய்ப் பயத்தினுல் வாய்விட்டு ஒன்றுஞ் சொல்லமாட்டாமல் விக்கிவிக்கித்தேம்பி அழுது கொண்டு நின்றுர்கள். அதுகண்டு இலங்கேசுவரன் நகைத்துப்பயப்படாதே சொல்லுங்கோளென்று சொல்லச்சுவாமீ! நம்முடைய குலத்தாரெல்லாம் மாண்டுபோனுர்கள். அவர்களுடனேகூட ஜம்புமாலியும் இறந்துபோனுன், அந்த ஒருகுரங்குதான் அத்தனைபேர்களையும் மாய்த்துவிட்டதென்று சொன் னுர்கள். இந்தச்சொல் சொல்லும்பொழுதே கோபாக்கினியானது திக்திக் கென்று எரிந்து ஓங்கி யெழும்படி, இந்தச்செய்தியை நினைக்கநினைக்கக் கண் களிலிருந்து இரத்தம் குமிழியிட்டுப்பாய, அப்படிப்பட்ட குரங்கைச் சீக்கிரத் தில் நானேபோய்ப் பிடித்துவருகிறேனென்றுசொன்னுன். அதுகேட்டு விரு பாக்ஷன், யூபாக்ஷன், துர்த்தரஷன், பிரகஸ்தன், பாசகர்னனென்கின்ற பஞ்ச சேனுபதிகள் திடுக்கென்றெழுந்து கைகட்டிவாய்புதைத்துக்கொண்டுசொல்லு கின்றுர்கள்.

ஜம்புமாலிவதைப்படலம்
முற்றிற்று.

---

## பஞ்சசேனுபதிகள்வதைப்படலம்.

---

கேளுமையா திரிலோகபயங்கரரா யிருக்கின்ற பிரதாப இலங்கேசுவரரே! சிலந்திப் பூச்சியைப் பிடித்துத் தின்கின்ற சொற்பமாகிய ஒரு குரங்கின் மேல் தேவரீர், படையெடுத்துப் போவீரேயாமாகில், பூர்வம் நீர்செய்தயுத்த

த்தில் உம்முடைய நேத்திரத்திலிருந்து மூண்டெழுந்த கோபாக்கினியினாலே மதம் வற்றிக்கிடக்கின்ற திக்கஜங்களுக்கு மதமுண்டாகும். மேலும் மகத்தாகிய பராக்கிரமத்தையுடைய கருடனானவன், ஒருசிறிய மசகத்தைலக்ஷியம் பண்ணிக்கொண்டு அதன்மேல் யுத்தத்திற்குப் போவதுபோல, நீரிந்தக்குரங்கை ஒரு பொருளாக மதித்துக்கொண்டு யுத்தத்திற்குப்போனால், இரவும் பகலும் உமமுடைய புஜபலத்தை நினைத்துத்துக்கப்பட்டுக்கொண்டிருக்கின்ற கைலாசபர்வதத்திற்கும் துக்கநிவாரணமாகும். அதனால் உமக்குமஹாசாம்பிராஜ்யம்வருகின்றதென்ன? சிறிதாவது இழிவாகிய செய்கையைச்செய்பவர்களாயிருந்தவர்களெல்லாம், பெறுகின்றபேறு யாதொன்றையுங் கண்ணிலுங் காணாமல் காதிலுங்கேளாமலே போய்விட்டார்கள். மேலும் இதற்குச்சமானமாகிய இழிவு வேறென்ன இருக்கின்றது? ஆகையால் நீரந்தக் குரங்கின்மேல் போர்செய்யப்போவதனால், உம்முடைய பெருமை யிவ்வளவென்று தெரியாமல் நடுங்குகின்ற திரிமூர்த்திகளுடைய முகங்களிலும் சிரிப்புண்டாகும். அதுவுமல்லாமல் பார்க்கிறவர்கள் கேட்கிறவர்களுக்கு வேறே யும்மிடத்தில் பலசாலிகளில்லை யென்பதாகவுந் தோன்றும். முன்பு வீரமில்லாத பலவீனர்களையனுப்பினீர். போனதுபோகட்டும். இனியாவது நன்மையைப்பெறவேண்டுமென்று குறித்தீரோயாகில், எங்களுக்குச் செலவுகொடுத்தனுப்பும்; அப்பொழுது எங்கள் சாமர்த்தியம் தெரியவருமென்றுசொல்லிக் கைகளையெடுத்து அஞ்சலிசெய்தார்கள். அதற்கு இராவணன் சம்மதித்தான். அத்தருணத்தில் திரிலோகாதிபத்தியமுந் தங்கள்வசமாகப் பெற்றவர்கள்போலப் பஞ்சசேனாபதிகளும் சந்தோஷித்தார்களாய், நெற்றியிலணிந்த திலகமானது நிலத்திற்பொருந்தும்படித் தாழக்குனிந்து பின்னும் பின்னும் பலதாஞ்சேவித்துக்கொண்டு இராவணனுடைய சபாமண்டபத்தைவிட்டு வெளியிலேவந்து, எண்ணிக்கையில்லாத இரதகஜதுரகபதாதிகள் சீக்கிரத்தில்வந்து சேரவேண்டுமென்றுசொல்லி யானையின்மேல் பேரிகையறைவித்தார்கள். அந்தக்ஷணமே நால்வகைச்சேனைகளும் சமுத்திரம்போலவந்து எங்கும்பரந்து நிறைந்தன. மேககர்ஜிதம்போல இரணமுரசுமுதலாகிய சகலவிதவாத்தியங்களும் முழங்கின நானாவிதமான ஆயுதங்களும் மின்னல்போல நெருங்கிவர, வெள்ளைக்கொடிகள் மேகத்தின்வயிற்றைத் தொளைத்துக்கொண்டுபோய் அநுமானாலே கோபிக்கப்பட்டு இறந்துபோன சத்துருக்களுடைய கீர்த்தியானது பரந்ததுபோலவும், சண்டமாருதமென்கின்ற காற்றானது மோதும்படி ஆகாசகங்கையின் அலைகளெழுந்து புரண்டதுபோலவும் வானமுழுது மறையப்பரந்து அசைய, இராட்சதர்களெல்லாம் வீரகண்டைகட்டி, மார்க்கவசம்பூண்டு, அரைக்கச்சையிறுக்கி, பலவிதமாகிய அஸ்திரங்களைநிறைத்த அம்புப்புட்டிலை முதுகின்புறத்தில்சாத்தி வில்லேந்திப் போர்க்கோலங்கொண்டு தேர்கள், யானைகள், புரவிகள்முதலாகிய வாகனங்களை அலங்காரஞ்செய்து அவற்றின்மேலேறிப் பிரயாணப்பட்டார்கள். அந்தச் சேனையிலிருக்கின்ற யானைகளின் மதங்கள் பெருகிப் பூமியிற்பாய்தலால் அநேக ஆறுகளுண்டாயின. அவற்றில் சக்கரங்கள் அமிழத்தேர்களோடுதலால் அந்த ஆறுகள்வற்றிச் சேறாகின. அதில்

குளம்புகள்பதியக் குதிரைகளோடுதலால் அந்தச் சேறுபுலர்ந்து நீறுகியது. அதில் குதிரைகளின் வாய்நுரை வழிந்துவிழுதலால் அந்த நீறுநனைந்து வேருகியது. தேர்களின் முழக்கமும், குதிரைகளின் முழக்கமும், யானைகளின் முழக்கமும், வீரகண்டைகளின் முழக்கமும், புரவிகளுடைய கிண்கிணிமாலைகளின் முழக்கமும், பிரளயகால சமுத்திரமுழக்கத்திலும் மூன்றுமடங்கு அதிகமாய் முழங்கின. தேர்கள் ஐம்பதினுயிரமும், யானைகள் ஐம்பதினுயிரமும், குதிரைகள் நூருயிரமும், பதாதிகள் இருநூருயிரமும் சூழத் தலைப்பட்டன. ராவணனுனவன் மேன்மேலும் அழைத்தனுப்புந்தோறும் திரண்டசேனுப்பிரவாகம்வந்து சஞ்சரிப்பதற்கு இடமில்லாமல் நெருங்குதலால், அந்தச் சேனுவீரர்களுடைய ஆயுதங்களோடே ஆயுதங்கள்பட் டிழைந்து மேகக் கூட்டங்களுந் தீந்துபோம்படி நெருப்புப்பொறிகள் எழுந்தன. யானைகளின் பக்கங்களில் தொங்கவிட்டிருக்கின்ற மணிகள் மேகங்களினிடத்திலிருந்து இடியிடிக்கிறதுபோல மிகவும் ஒலிக்கத்தலைப்பட்டன. இவ்வாருகப் பிரயாணப்பட்ட சேனைகளிலுள்ள அரக்கர்களை அவர்கள்கொண்ட பெண்சாதிமார்களும், அவர்கள் வயிற்றிற்பிறந்த புத்திரிமார்களும் அவர்களைப்பெற்றெடுத்த தாய்மார்களும், அவர்களுக்கு மற்றுமுண்டாகிய உறவின்முறையார் சகலமானவர்களும், ஓடிவந்து தடுத்து, முன்பு அக்குரங்கின் முன்னே போனவர்களில் ஒருவராவது உயிர்தப்பிமீண்டுவரவேயில்லை. அப்படியிருக்க இப்போது நீங்களும், போகிறபடியினுலே நாங்களும் உங்களுடனேகூட வருகிறேமென்று இரங்கிப் புலம்பியழுதார்கள். அந்தச் சேனுசமுத்திரத்தின் நடுவே பஞ்சமகா பூதங்களைப்போலவும், ஐந்துதேரின்மேல் ஐந்து சூரியர்கள் வருகிறதுபோலவும், பஞ்சசேனுதிபதிகள் பேரி, பூரி, எக்காளம், பேய்க்காளம், சல்லரி எல்லரி தடாரி, தம்பட்டம். தாளம் மத்தள முதலாகிய பலவாத்தியங்களும் முழங்கக் கோபாக்கினிப் பொறிசிந்த இடிமுழக்கம்போல வில்லைக் குணத்தொனி யெழுப்பிக்கொண்டு வந்தார்கள். அவர்கள் எப்படிப்பட்டவர்களென்ருல், முனிவாகளுக்கும் தேவர்களுக்கும் சார்வகாலமும் பஞ்சேந்திரியங்களைப்போலச் சத்துருத்துவத்தைக்கொண்டு உபத்திரவஞ்செய்கின்றவர்கள். யுத்தஞ்செய்கின்ற சமயத்தில் இந்திரனுடைய வச்சிராயுதமும், வருணனுடைய பாசமும், எமனுடைய தண்டமும். சிவனுடைய சூலமுமென்னப்பட்ட தெய்விகமாகிய ஆயுதங்களெல்லாம் ஒரு ஊசி நுழையத்தடுக்க சொற்பமாகிய வடுவுஞ் செய்யமாட்டாத புஜபலத்தையுடையவர்கள். சூரபத்மனைச் சங்கரித்த சுப்பிரமணியரானவர் ஏறுகின்றவாகனமாகிய மயிலின்கலாபத்திலுள்ள இறகையும், சகலலோகங்களையுஞ் சிருஷ்டித்த பிரமதேவர் ஏறுகின்ற வாகனமாகிய அன்னத்தின்சிறகிலுள்ள இறகையும் பறித்து மத்தியில் மத்தியில்வைத்து முறுக்கித் தொடுத்துத் தலையிலும் நெற்றியிலும், விருதுகளாகக் கட்டிக்கொண்டிருக்கின்றவர்கள். பூர்வத்தில் குபேரனுடனே சண்டைசெய்து அவன் புறங்கொடுத்துப்போக, அவனுடைய பட்டணத்திலிருந்து கொள்ளையிட்டுக் கொண்டுவந்த நானுவிதபூஷணங்களையும் பூண்டிருக்கின்றவர்கள், போரிலேதோற்ற இந்திரனுனவன் பயத்தினுல்

ஐராவதத்தை விசையாகநடத்திக்கொண்டு போனதுகண்டு, அதன்வால்முனையைப் பின்புறத்திலிருந்து பிடித்துக்கொண்டு அடா இந்திரா! நீ நடத்தத்தக்க சாமர்த்தியமுடையவனானால் எதோ நடத்தடா பார்ப்போமென்றுசொல்லி யிழுத்துவந்த பராக்கிரமமுடையவர்கள். பிரமாவினுடைய சொல்லினால் எமனானவன் உம்முடைய ஆஜ்ஞையைக்கடந்து நடக்கின்றானென்று சொல்லக்கேட்டு, ராவணனுக்குக் கோபமுண்டெழுந்ததுகண்டு, அந்தயமனை அதிவேகமாகப்போய் இறுகக்கட்டிக்கொண்டுவந்து இராவணன்முன்னேவிட்டு அவன் கோபத்தைத் தணித்தவர்கள். கைலை, இமயம், மந்தரம், விந்தியம், நிஷதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமாதனமாகிய அஷ்டகிரிகளையும்நகைக்கின்ற விசாலமான மார்பினையும், உயர்ந்தெழுகின்ற கடலலைகளை நகைக்கின்ற பெரிய தோள்களையும், எமனுடைய கொலைத்தொழிலை நகைக்கின்ற கடோரமாகிய கொலைத்தொழிலையும், கொல்லனானவன் துருத்திகொண்டு ஊதுகின்ற உலைக்களத்தை நகைக்கின்ற அக்கினியைக்கக்குங் கண்களையுமுடையவர்கள். யுகாந்தகாலாக்கினியானது ஜுவாலாமாலையா யெரிந்துகொண்டுவந்தாலும், யுகாந்தகால மாருதமானது மோதியடித்தாலும், யுகாந்தகால சமுத்திரம் பொங்கிப் புரண்டெழுந்தாலும், எவ்வளவும் உபத்திரவமென்பதேயில்லாமல் நிர்ப்பயராய்த் திக்குகள்தோறுஞ் சஞ்சரிக்கின்றவர்கள். இப்படிப்பட்ட தன்மையையுடைய அப்பஞ்சசேனாதிபதிகள், தங்களைச் சூழ்ந்துவந்த சேனைகளுடனே அநுமான் ஏறியிருக்கின்ற தோரணஸ்தம்பத்தின் சமீபத்தில்போய் சுற்றிமொய்த்துக்கொண்டு சேனைகளை அணிவகுத்து யூகங்கட்டினார்கள். ஸ்ரீராமதூதராகிய ஆஞ்சநேயரும் அவர்களுடைய நிலைமையைத் தமது கண்ணினாற்கண்டார். அப்படிப்பார்த்த திருவடிகளாகிய அநுமானை அந்தநிசாசரர்கள் தலையை ஏறெடுத்துப்பார்த்து ஆ! ஆ! இதைப்பார்த்தால் மிகவும் அற்பமாகிய குரங்காகக்காண்கின்றது! இதுதேவர்களுடையகீர்த்தியை வேருடனே நாசமாமபடிசெய்த மகாபலிஷ்டர்களாகிய ராக்ஷசேந்திரர்களை யுத்தத்திலே வென்று நிர்மூலமாகக்கொன்று அவர்களுடைய கீர்த்தியையுங் கிடைத்ததே யென்றுசொல்லி அதிசயமுற்றுச் சந்தேகப்பட்டார்கள். அந்தச்சமயத்திலே அஞ்சநாதேவி புத்திரரானவர் தேவேந்திரனுடைய பட்டணமாகிய அமராவதியின் வாசலிலிருந்து கொண்டுவந்து இராவணனுடைய சிங்காரத்தோட்டத்திலிடத்தில் காட்டியிருக்கின்ற தோரண ஸ்தம்பத்திலிருந்தபடியே யிருந்து அண்டமுகட்டையுந் தாண்டியப்புறத்திலும் ஊடுருவும்படிப் பெருத்து உயர்ந்த விசுவரூபங்கொண்டார். அவ்வண்ணமாக விசுவரூபங்கொண்ட ஆஞ்சநேயனைக்கண்டு இராக்ஷதர்கள் ஆச்சரியப்பட்டுமகத்தாகியஉக்கிரகோபங்கொண்டு விற்களைவளைத்து அபரிமிதமாகிய அஸ்திர சஸ்திரங்களைப் பிரயோகஞ் செய்தார்கள். இடம்புரிச்சங்கம், வலம்புரிச்சங்கம், தவளச்சங்கம், இரட்டைச்சங்கம், வெற்றிச்சங்கங்கள் ஒலித்தன. இரணபேரி, மங்களபேரி, ஜயபேரி, வெண்கலபேரிகள் முழங்கின. மற்றும் அந்த ராக்ஷதவீரர்கள் அனற்பொறிகளைச் சிதறிப் புகைந்தெழுகின்ற எண்ணிறந்த ஆயுதங்களைக்கொண்டு எய்தார்கள், எறிந்தார், கொய்தார், குத்தினார், வெட்டினார், கட்டினார், எற்றி

னூர், சுற்றினூர். அவைகளெல்லாம் என்னையனுகிய அநுமானுடைய உரோமங்கள் நெருங்கிய சரீரத்திலுண்டாகிய தினவு தீரும்படி சொறிந்ததுபோல இதமாயிருந்ததனுல் அவருக்கு நித்திரைவந்தது. அதுகண்டு ராக்ஷசர்கள் அம்மம்மா? இந்தக்குரங்கு நம்முடைய ஆயுதங்களையெல்லாம் கொஞ்சமாவது லக்ஷியஞ்செய்யவில்லையென்று மனஞ்செருக்கி நெருக்கிப்பின்னும் தோமரம், எறிசக்கரம், பிண்டிபாலம், மழு, எழுமுதலாகிய கோடாகோடி ஆயுதங்களை ஓயாமல் மழைபோலப் பொழிந்ததுகண்டு அநுமானனவர் மற்றுமுள்ள ராக்ஷசர்களெல்லாம் வந்துமாயும்படி இவர்களை எல்லாம் அதிசீக்கிரத்தில் எற்றிக் கொல்லுவோமென்று சித்தப்படுத்திக்கொண்டு ஒரு ஆயுதமும் இந்தச்சமயத்தில் கிடைக்கவில்லையேயென்று நினைக்கும்போது ராக்ஷசவீரனொருவன் தம்மேல் எறிந்த எழுத்தடியை எழும்பிப்பிடித்துக்கொண்டு அதனுல் அநேக யானைகளையும், குதிரைகளையும், தேர்களையும் ராக்ஷசவீரர்களையும் அடித்தடித்துத் தும்சஞ்செய்து கொன்றூர். அப்பால் மதயானைகளினுடைய கொம்புகளைமுறித்து அவற்றையே கையில் ஆயுதமாக ஏந்திக்கொண்டு மோதிமோதிப் பலதேர்களை உடைத்தெறிந்தார். அந்தத்தேர்வண்டிலைக் கழற்றியெடுத்து உருட்டி யுருட்டி வெகுவீரர்களைக்கொன்றூர். அந்தவீரர்களுடைய கைவாளை எட்டிப்பறித்து ஓங்கிவெட்டிவெட்டி மிதமற்ற குதிரைகளைக்கொன்றூர். இரண்டுகையிலும் இரண்டுரதங்களை வாரியெடுத்து எதிரேவருகின்ற இரண்டு மதயானைகளை மோதிக்கொன்றூர். இரண்டு யானைகளைத்தூக்கியெடுத்து இரண்டு பக்கத்திலும்வருகின்ற குதிரைகளையெற்றிக் கொன்றூர். ஒருமலையைப் பிடுங்கியெறிந்து ஆயிரந் தேர்களை மைபோலே அரைத்துவிட்டார். ஒருமரத்தினுல் ஆயிரம் யானைகளை ஒருக்ஷணப்பொழுதிலே மடித்துவிட்டார். பின்னும் யானைப்படைகளை விசையாயோடி உதைப்பார். தேர்ப்படைகளை உருவழியும்படி கலக்குவார். புரவிப்படைகளை இடிப்பொடியும்படி மிதிப்பார். பதாதிப் படைகளைப் பூமியிலிட்டுத் தேய்ப்பார். அநேகராக்ஷசர்களை இருப்புலக்கையால் அடித்து மண்ணிலே உருட்டித்தள்ளுவார். அநேகருடைய தலைகளின் மேற்போய்க் குதித்துப் பல்லினூற்கடித்துக் கையினூற்குத்துவார். தேர்களையும் யானைகளையும் எடுத்துப்பந்துபோல அஷ்டதிக்குகளிலும் ஆகாசத்திலும் விட்டெறிவார். குதிரைகளையும், நிருதர்களையும் அவர்களுடைய ஆயுதங்களுடனே கையினூற்பிடித்து மாப்பிசைகிறதுபோலப் பிசைந்தெறிவார். நீண்ட தும்பிக்கையையுடைய மதயானைகளைக் கையிலெடுத்து எறிய, அவைகள் கடலிலே அமிழ்கின்ற கப்பலைப்போல ரக்தப்பிரவாகத்தில் விழுந்து அழுந்தின. அநுமான் தேர்களைவாரிச் சமுத்திரத்திலெறிய அவைகள் அக்கடலிலிருந்து உதயமாகின்ற சூரியனுடைய ரதம்போலவிழுந்து அழுந்திமேலே கிளம்பின. அளவிறந்த குதிரைகளை எடுத்தெறிய அவைகள் ஆகாசத்தில் போய்முட்டி வாயினுல் ரத்தங்கக்கிக்கொண்டு சமுத்திரத்தில்வந்து விழுந்து அங்குள்ள வடவாமுகாக்கினியைப்போல மேலே மிதக்கத்தலைப்பட்டன. ராக்ஷசர்களை வாலினூலே சுற்றி வரிந்துகட்டி வீசுதலால் அவர்கள்வந்து சமுத்திரத்திலேவிழுந்து மந்தரகிரியை வாசுகியென்னும் பாம்பினூற்கட்டி அதி

விட்டுக் கடையும்போது அதுசுழன்றதுபோலச் சுழன்றார்கள். சுத்தவீரரா கிய ஆஞ்சநேயர் எடுத்துவீசுதலால் சமுத்திரத்திற்போய் விழுந்தயானைகள் தேர்கள் குதிரைகளை ரக்தநதியானது இழுத்துக்கொண்டோட, அவை லங் கையிலேபோய்ப் புகுந்தன. அர்த்தசந்திரனுக்குச் சமானமாகிய வக்கிர தந்தங்களையும் பிலத்துவாரத்திற்கு ஒப்பாகிய ஆழ்ந்தவாயினையும், அக்கினிப் பொறியையும், உதிரத்தையும் கக்குகின்ற நேத்திரங்களையும், கைகளில் ஆயு தங்களையுமுடைய ராக்ஷசப்பிணங்கள் அநுமானேறியிருக்கின்ற மகாதோரண ஸ்தம்பத்தையும் மறைக்கும்படி ஆகாசபரியந்தம் மலைபோலக் குவிந்தன. ஆஞ்சநேயருக்கு மலைகளும் மரங்களும் இருப்புலக்கையுமே ஆயுதங்களா யிருக்கின்றன. மேலும் அவருடைய கைகளுங்கால்களும், வாலு மிருக்கின் றன. அவர் கொல்லுகிறதற்குப் பலவகை ஏதுக்களு மிருக்கின்றன. அவ ராலே கொல்லப் படுகிறதற்கு அநேகர் சத்துருக்களாயு மிருக்கின்றார்கள். ஆகையால், இப்போது யுத்தத்திற்கு வந்த ராக்ஷசர்களெல்லாம் இறந்து போவார்களே யல்லாமல் ஒருவராவது தப்பி உயிரோடுபோவார்களா? சிவன் கையிலேதாங்குகிற மழுவாயுதத்தைப்போல உதிரந்தோய்ந்து விளங்காநின்ற எழுஸ்தம்பத்தால்அங்குவந்தராக்ஷசக்கூட்டம் சமூலமும்ரணகளத்தில்அதமா கும்படி ஆஞ்சநேயர் கொன்றுதொலைத்தார். அப்படி யந்த ராக்ஷசவர்க்கங்கள் நாசமானதைக்கண்டு தேவர்கள் சந்தோஷித்தார்கள். லங்காபட்டணமானது அல்லோல கல்லோலப்பட்டது. இறந்தவர்களைக்குறித்து அழுகின்ற குரலோ சையானது சமுத்திரகோஷமும் தாழும்படியாக அதிகரித்தெழுந்தது.

அந்தச் சமயத்தில் பஞ்சசேனாபதிகள் ரத்தநதியானது இழுக்குதலால் கால்வழுக்கித் தேர்ச்சக் கரங்கள் அதில் அழுந்த, மிகவும் வருத்தத்துடனே தேரைவிட்டுக்கொண்டுவந்து ஏக ஆர்ப்பாடமாகக் கொக்கரித்து ஒவ்வொருத் தர் ஆயிரமாயிரம் பாணங்களைப்பிரயோகித்து அஞ்சனாதேவியின் புத்திரசிகா மணியாகிய அநுமானுடைய சரீரத்தை மறைத்தார்கள். அவர்கள் பிரயோ கித்த பாணங்களெல்லாம் தமது திருமேனியில்வந்து தாக்காமல் சீக்கிரத்தில் தும்சப்பட்டுப் போம்படி கையினால் பிடித்து ஒடித்துப் பொடியாக்கிவிட்டு, உடனே அந்தப் பஞ்சசேனாதிபதிகளில் ஒருவனுடைய தேரைப்போய் உதை த்து அழித்துச் சின்னாபின்னப்படுத்தினார். தானேறிய தேரழிகிறதற்கு முன்னமே அதிலிருந்த வீரனானவன் ஆகாசத்தில் எழும்பிப்போய் அங்கிருந் தபடிப் பாணங்களைப் பொழிந்து போர்செய்தான். அதுகண்ட அநுமானான வர் எழுவாயுதத்தை யெடுத்து அவன்மேல்மோதினார். அந்தஅடியை அவன் வில்லிலே தாங்கினான். அதுபொறாமல் வில்முறிந்தது. ராக்ஷசன் ஒடிந்த வில்லை அநுமான்மேல் விட்டெறிந்துபோய் ஒருமலையைப்பேர்த்தெடுத்து வீசி னான். அதுகண்டு ஆஞ்சநேயர் அந்த எழுவாயுதத்தினாலேதானே யடித்து மலையைத்தூளாக்கி அவனையுங்கொன்றார். அவன்மாளவே மற்ற நான்கு பேரும் பிரளய காலாக்கினிபோலக் கோபங்கொண்டு, வில்லுகளை நெறநெற வென்று ஒலிக்கும்படி வளைத்துப்பாணங்களை அபரிமிதமாகப் பொழிந்தார்

கள். அவர்களுடைய கண்கள் புகைந்தன. அநுமானுடைய தோள்களில் உதிரம்பெருகிப் பாய்ந்தது. அப்போது அவர்மனங்கொதித்து அந்த ராக்ஷசர்களுடைய வல்லமையை அறிந்து ஒருமலையைப் பிடுங்கியெடுத்து அவர்கள்மேல் எறிந்தார். அவர்கள் அம்புகளினால் அந்தமலையையும் பொடிப்பொடியாகச் செய்துவிட்டு, மறுபடியும் அவர்மேல் அநேகபாணங்களை மாலைபோலவே ஒன்றின்பின்னே யொன்றாகத்தொடுத்து எய்தார்கள். அவை வந்து மார்பிலே தைத்து உருவ அதிசீக்கிரமாகச் சமீபத்திலோடி அந்நால்வரிலொருவனை அவனுடைய தேரோடெடுத்து ஆகாசத்தில் சுழற்றியெறிந்தார். அந்த ரதமானது எழும்பி வாயுமண்டலம், வருணமண்டலம், சூரியமண்டலம், சந்திரமண்டலம், நக்ஷத்திரமண்டலங்க ளெல்லாந்தாண்டி ஆகாச முழுமையும் போய் அங்கிருந்து வேகமோய்ந்து விழுகிறதற்குமுன் அதிலிருந்த வீரன் பூமியிற்பாய்ந்தான். அவன் பாய்ந்ததுகண்டு அவன்மேல் வீரர்களுக்குளெல்லாம் அதிவீரராகிய அநுமானனவர், மதயானையின்மேல் ஆண்சிங்கமானது பாய்கிறதுபோல விசைகொண்டு பாய்ந்துகுதித்து அவனுடைய பர்வதத்திற்குச் சமானமாகிய சரீரத்தின் அஸ்தி மாம்சமுதலாயினவையுங் குழம்பிப்போம்படி மிதித்துத் துவைத்துவிட்டார். அதுகண்டு மற்றமூவரும் கோபமூண்டெரியும்படி தேர்களை மனோவேகமாக நடத்திக்கொண்டுவந்து அடா இனி நீ எங்கேபோவாயென்று எதிர்த்து நின்று அஸ்திரங்களைப் புங்காநுபுங்கமாகப் பிரயோகம்பண்ணித் திரிமூர்த்திகள் போர்செய்வதுபோல வேண்டியபடிக்கெல்லாம் யுத்தஞ்செய்யத் தலைப்பட்டார்கள். அப்படி உயுத்தம்பண்ணத் தொடங்கிய மூவரில் இருவருடைய தேர்களைத் திரண்டுயர்ந்த தோள்களையுடைய அஞ்சநாதேவி குமாரரானவர் தேவர்களும் பார்த்துப்பயப்படும்படி இரண்டுகைகளினாலும் கழங்குபோல அலக்ஷியமாக எடுத்துக்கொண்டு மேலெழும்பினார். எழும்பியவேகத்தில் அந்தத்தேர்களில் கட்டியிருந்த புரவிகள்மடிந்தன. சாரதிகளும் விழுந்து இறந்தார்கள், அதுகண்டு அந்த ரதிகர்களிருவரும் தேரைவிட்டுக் கிளம்பி ஆகாசமார்க்கத்திற் போனார்கள். போவதற்கு முன் அவர்களை யப்பாலே போகவொட்டாமல் அநுமானனவர் வெகுசீக்கிரமாக ஓடித்தொடர்ந்து எதிர்த்தார். அந்தச்சமயத்தில் அவர்கள் அஸ்திரங்களைப் பிரயோகிக்க எத்தினப்பட்டார்கள். அதற்குள்ளே அவர்களுடைய கைவில்லைப்பிடித்து மளுக்கென்று முறியச்செய்தார். பின்பு அவர்கள் பாணங்களைப்பூட்டி யெய்கிறதற்கு வில்லில்லாமையால், அந்தஸ்தலத்தில்நின்றபடி அநுமானுடனே மல்லுயுத்தஞ்செய்யத் தலைப்பட்டார்கள். வெண்மையாகிய கோரப்பற்களையும், கறுத்துநீண்ட சரீரத்தையும், ஆவென்றுதிறந்த பிளவாகிய பெருவாயையு முடைய தன்மையால், அந்த அரக்கர்களிருவரும் ராகுகேதுக்களுக்கு ஒப்பாயும், அநுமானனவர்ராகுகேதுக்களால் மறைக்கப்பட்ட சூரியனுக்கு ஒப்பாயுமிருந்து போர்செய்யும்போது, வாலைக்கொண்டு அவர்களிருவரையும்வரிந்துகட்டி, இறுக்கி அவர்களுடையகால்களையும், தோள்களையும் மளமளவென்றொடியும்படிஒடித்தார். உடனேசூரியனைநீங்கிய அந்த ராகுவும் கேதுவும்போல இருவரு மாண்டுவிழுந்தார்கள். ஆஞ்சநேயர் கிரக்ணம்

விட்ட சூரியனைப்போலப் பிரகாசித்தார். அவ்விதமாக விளங்கியிருந்த வாயு குமாரர் மற்றொருசேனாபதிமாத்திரம் தனித்துநின்றதுகண்டு, மலையின் மேல் தாவிக்குதிக்கின்ற சிங்கத்தைப்போல அவன் தலையின்மேல் தாவிக்குதித்தார். அந்தக்ஷணமே அவன்தன்தேருடனே பூமியில் ஆழ்ந்து புதைந்து உருத்தெரியாமல் மடிந்துபோனான்.

கவி.

வஞ்சமுங் களவும்வெஃகி வழியலா வழிமேலோடி
நஞ்சினுங் கொடியராகி நவைசெயற் குரியரோர்
வெஞ்சின வரக்கரைவ ரொருவனே வெல்லப்பட்ட
அஞ்செனும் புலன்களொத்தா ரவனுநல் லறிவுபோன்றான்.

வஞ்சனையையும், களவையும்விரும்பித் துன்மார்க்கத்தில் பிரவேசித்துக் காளகூட விஷத்தைப் பார்க்கிலும் மிகவுங் கொடியவர்களும், குற்றத்தைச் செய்கிறதற்கு மனங் கூசாதவர்களுமாகிய, அந்தராக்ஷசர்களைந்துபேர்களும் அநுமானொருவராலே கொல்லப்பட்டு, ஒரு அறிவினாலே வெல்லப்பட்ட ஐம்புலங்களைப்போலானார்கள். அநுமானானவரோவென்றால், பஞ்சசேனாபதிகளையுங் கொன்றதனால் ஐம்புலன்களையும்வென்ற அறிவையொத்திருந்தார் அந்தப்போரில் எதிர்த்தராக்ஷசர்களின் உயிர்கொண்டுமீண்டவ ரொருவருமில்லை யென்பதையும், எமனும்நடுங்கத்தக்க பஞ்சசேனாபதிகளும் கைகொட்டிக் கொக்கரித்துக்கொண்டு முடுகிப்போயிறந்ததையும் லங்கையிலுள்ளவர்கள் எல்லாருங்கண்டார்கள். அத்தருணத்திலே நம்மை யெவ்விதத்துங் குரங்கானதுகொல்லுமென்று மனமறுகி ஏங்கித்துக்கிக்கின்றராக்ஷசஸ்திரீகளைப்பார்த்து, கோபித்துக் கடுஞ்சொற்சொல்லி வைதுவிட்டுச் சில ராக்ஷசர்களோடிவந்து ஊழித்தீயைப்போல எழுவகைப்பட்ட உலகங்களும் எரியும்படி உக்கிரதிருஷ்டியாகப்பார்த்துக்கொண்டு, கோபமே ஒருவடிவெடுத்ததுபோலிருந்த ராவணேசுவரனுடைய செவித்தொளைகள்வெந்து தீயும்படிச்சொல்லத் தலைப்பட்டார்கள். கேளுமையா! விசிரவசுபிரம புத்திரராகிய ராவணேசுவரரே! இங்கிருந்துபோன சேனாசமுத்திரம்அடங்கலும் மடிந்துபோய்விட்டது. அதுகண்டு சண்டைசெய்யப்போய்ப் பஞ்ச சேனாபதிகளும் மாண்டுபோனார்கள். நாங்கள் மாத்திரம் யுத்தஞ்செய்யாம லிருந்ததனால் இறவாமல் மீண்டுவந்தோம். தேவர்கள் முதலானவர்களையும் ஜயித்த அவ்வீராதிவீரர்களையும் அதிசீக்கிரத்தில் மாயும்படிப் பொடிசெய்துவிட்டு, மற்றுஞ் சண்டைசெய்கிறவர்களிடையாமையால் அந்தக்குரங்கு சோம்பி யிருக்கின்றதென்று சொன்னார்கள்.

பஞ்சசேனாபதிகள்வதைப்படலம்.
முற்றிற்று.

---

## அக்ஷதுமாரன்வதைப்படலம்.

அவ்வார்த்தைகேட்கவே ராவணனானவன் கோபமாகியகடுநெருப்பானது மூண்டெழும்படிப் பெருமூச்சிவிட்டு மார்பிலணிந்த புஷ்பமாலைகளும், அவற்றில் பரிமளிக்கின்றதேனையுண்ணும்படி வந்துமொய்க்கின்ற வண்டுகளுந்தீந்து

கருகும்படிச் செவ்வரக்குஊட்டியதுபோலக்கண்கள்சிவக்கதானேபிரயாணப் பட்டுப்போய்ப் பிடித்துவரும்படித் ததாயத்தமானன். அப்படி எத்தனப் பட்ட பிதாவைப்பார்த்து, கனிஷ்டபுத்திரனுகிய அக்ஷனென்பவன் எழுந்து அவனுடைய உபையபாதங்களையும் வணங்கிச்சுவாமி! இந்தப்பணிவிடை யை அடியேனுக்குக் கடாக்ஷித்தருளுமென்றுசொல்லிப் பின்னுஞ்சொல்லுகி ன்றுன். சோமசூரியாக்கினியாகிய முச்சுடர்களையும் மூன்றுநேத்திரமாக வுடைய கைலாசபதியேறுகின்ற வாகனமாகிய ரிஷபமுமல்ல. பரலோக பூலோக பாதாளலோகமாகிய திரிலோகங்களையும் திருவடியினுல் அளவிட்ட திரிவிக்கிரம சொரூபனுன ஸ்ரீமந்நாராயணனுடைய வாகனமாகிய கருடனு மல்ல. அந்தப்பரமபுருஷன் திருக்கண்வளர்ந்தருளாகின்ற சயனமாகிய ஆதி சேஷனுமல்ல. அஷ்டதிக்கஜங்களுமல்ல. ஒருசிறியகுரங்கின்மேலேயா? மகா பிரதபசாலியாராகிய தேவரீர்படையெடுத்துப்போகிறது. இந்த ஊழியத்தை அடியேனுக்கு ஆஞ்ஞாபித்துநீரிவ்விடத்தில்தானேசுகமாயிருந்தருளும். முன் னுளில் அமரர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், கிருதர், கிம்பு ருஷர், கந்தர்வர், யக்ஷர், விஞ்சையர், பூதர், பைசாசர், முனிவர், உரகர், ஆகா சவாசிகள் போகபூமியர்களாகிய பதினெண்தேவகணங்களுக்கும் அதிபதியா கிய இந்திரன்மேல் கோபங்கொண்டு அவனைப் பிடித்துக்கொண்டுவந்து கொடு வென்றுசொல்லி, அடியேன் பக்கத்திலிருக்கும்போதுதானே எனனையனுப்பா மல் எங்கள்தமையனை யனுப்புவித்தீரே அது என்மனத்திலே குறையாயிருக் கின்றது. அந்தக்குறை திரும்படி ஒருகுரங்கையாவது பிடித்துவர உத்தரவு கொடுத்தருளும். திரிநேத்திரதாரியாகியசிவனே வஞ்சனையை மனத்திலெ ண்ணி இவ்விடத்தில் ஒருசொற்பமாகிய பழியைவிளைக்கும்படிக் கற்பிதம்பண் ணிக்கொண்டுகுரங்குருவமெடுத்துவந்தானுனலும், நொடிப்பொழுதுக்குள்ளே ஜயித்து எளிதிலே பிடித்துக்கொண்டுவந்து உம்மிடத்தில் கொடுக்கிறேன். பூர்வகாலத்தில் வச்சிரஸ்தம்பத்தில் உற்பத்தியாகி இரணியேசுவரனைச் சங்க ரித்த உக்கிரநரசிங்கமானுலும், ஒருகொம்பினுலே பூமியைபபேர்த்தெடுத்த ஆதிபுருஷவராகமானுலும் நான்போய் யுத்தஞ்செய்யுங்கால் இந்த அண்டத் தைக்கடந்து அப்பால்போனபோது தொடர்ந்துபோய்ப்பிடித்துவந்து உமக் கெதிரேவிடுகிறேன் அப்படிச்செய்யாமல்போனேனுகில் அப்பொழுது என் னைச் சிரச்சேதம் செய்யுமையாவென்று இவ்வாறுசொல்லி, கிருபைசெய்து உத்தரவுகொடுத்தருளுமென்றுன். இவ்வாறுகேட்டுநிற்கின்ற இளையகுமாரனு கிய அக்ஷனைப்பார்த்து மகிழ்ச்சிகூர்ந்து தந்தையாகியராவணன் அப்பா! அப்ப டியே தேரேறிச் சேனைகளையுங் கூட்டிக்கொண்டு போவென்று சொன்னுன். அவன்சொற்படியே உயுத்தத்திற்கு ஏற்ற அலங்காரஞ் செய்துகொண்டு புறப்பட்டு, முற்காலத்தில் யுத்தத்திலே தேவேந்திரனுனவன் பயந்து, விட்டு விட்டோடிய ரதமொன்று இருநூறுபுரவிகட்டப்பட்டது. அதையலங்கரித்து அதன்மேலேறினுன்.

அப்போது நிசாசரர்கள் ஆசீர்வாதஞ் செய்தார்கள். பேரிகைமுழ ங்கியது. பிரளயகால சமுத்திரம்போலச் சேனைகள்வந்துகூடின. சமுத்தி

ரத்திலுள்ள மகரங்களை யெண்ணக்கூடுமாகில் அங்குவந்துகூடிய யானை களை யெண்ணலாம். அந்தச் சமுத்திரத்தில் மற்றுஞ் சஞ்சரிக்கின்ற பல மச்சங்களையும் எண்ணக்கூடுமாகில் தேர்களையெண்ணலாம். கடற்கரை மணல்களை யெண்ணக்கூடுமாகில் காலாள்களை யெண்ணலாம். கடலின் அலை களை யெண்ணக்கூடுமாகில் குதிரைகளை யெண்ணலாம். அப்படி எண்ணி முடியாத சதுரங்கசேனைகளும் நெருங்க ராக்ஷசேந்திரர்களுடைய குமாரர் களும், அக்ஷகுமாரனுடைய உயிர்வேறும் அவர்கள் வேறுமாகாமல் அதிக அந்நியோந்நியமாயிருக்கின்ற தோழன்மார்களுமாகிய பன்னீராயிரம் பேர்கள், ரதாரூடர்களாய் யுகமுடிவுக்காலத்தில் சகலத்தையுந் தகிக்கின்ற காலாக்கினி யின் சிகைகளைப்போல வந்துசூழவும், மந்திரிகளுடைய குமாரர்கள் லக்ஷம் பேர்கள், பிரதானிகளுடைய குமாரர்கள் லக்ஷம்பேர்கள், படைத்தலைவர்க ளுடைய குமாரர்கள் லக்ஷம்பேர்கள், தன் பிதாவாகிய ராவணனுக்குத் தெய்வப்பெண்கள் வயிற்றிற்பிறந்த குமாரர்கள் லக்ஷம்பேர்கள் ஆகிய இந்த நாலுலட்சம்பேர்களும் தேரேறிக்கொண்டுவரவும், பெருஞ்சவளம், வல்லுலக் கை, திரிசூலம், எரிமழு, வச்சிரவாள், வச்சிரதண்டம், வெற்றிவில், உக்கிர வேல், அங்குசம். எறிபாசம், ஈட்டி, கட்கம், எழுத்தடி, எழுமுளை, வளைதடி, குந்தம், கப்பணம், காலசக்கரம், முதலாகிய அநேகவித ஆயுதங்களும் ஜோதி மின்னல்களெல்லாம் ஓரிடத்திற்கூடியதுபோலத் தகதகவென்று ஒளிவீசவும் புழுதிகளெழும்பி எங்கும் பரவுதலால் பொன்மயமாகிய சுவர்க்கமுதலான சகலலோகங்களும் மண்மயமாகிய பூலோகம்போலாகவும். காகங்களும், கழுகு களும், பேய்களும், எமனும், அரக்கர்கள் நெடுங்காலஞ்செய்த பாவமுமெல் லாத் தொடர்ந்துவரவும், பார்க்கின்ற ஸ்திரீகளுடைய பார்வையும், மனமும், வண்டும் மொய்த்துச்சுற்றவும், மாண்டுபோன ராக்ஷசர்களை நினைத்துக்கொ ண்டு அவர்களுக்குரிய நாயகிமார்கள் அழுகின்ற குரலோசையும் கடலோசை யும், நால்வகைச்சேனைகளினோசையும், இடக்கை, உடுக்கை, உறுமி, தம் பட்டம், பம்பை, பேரிகை, மத்தளம், முரசு, முருடு, முழவுமுதலாகிய பல விதவாத்தியகளின் ஓசையும், இடியோசையைப்போல எழுந்து ஒருவரோ டொருவர் வசனிக்கின்ற வசனத்தை அவர்களுக்குக் கேட்கவொட்டாமல் அடக்கவும், ராக்ஷசர்கள் கையில்பிடிக்கின்ற ஆயுதங்களின் பிரகாசத்தை அவர்களுடைய கருத்ததேகத்தின் ஒளியானது விழுங்குதலாலும, அவர்கள் கைகளில் தரித்திருக்கின்ற நீலமணிக் கடகத்தின் ஒளியை அவர்களுடைய கோரதந்தத்தின் வெண்மையாகிய ஒளியானது அடக்குதலாலும், அங்குள்ள சகல உயிர்களுக்கும் இரவென்றும், பகலென்றும் தோன்றாமல் அறிவுதடு மாறவும், ரதங்களிற்கட்டிய குதிரைகள் உறங்குகின்றதும், அந்த நிசாசரர்க ளுடைய இடதுதோளும், இடதுகண்ணும் துடிக்கின்றதும், மேகங்கள் எவ்வி டத்திலும் ரக்தமழையைப்பொழிகின்றதும், வெள்ளைமேகத்திலிருந்து இடி இடிக்கின்றதும், காக்கைக்கூட்டங்கள் சப்திக்கின்றதுமாகிய துர்ச்சகுனங்கள் காணவும், தனக்குச்சொந்தமாகிய ஒருவெள்ளஞ்சேனைகள் சூழவும், அது கண்டு, சப்தமருத்துக்கள், அஷ்டதிக்குப்பாலகர்கள், அஷ்டவசுக்கள் முத

லாகிய தேவர்களெல்லாம் பயமடையவும், காலன் இனி என்ன அநர்த்தம் விளையுமோவென்று எண்ணி மனம்மெலியவும், பேய்கள், பூதங்கள், டாகினி, மோகினிகளெல்லாம் கண்களை உருட்டி விழித்துக்கொக்கரித்துப் புஜங்கொட்டவும், அதிக உக்கிரகாடின்னியமாக வருகின்ற அந்த அக்ஷகுமாரனை வாயு புத்திராகிய திருவடிகளானவர் கண்டு இதோமகாபிரபல பிரதாப சம்பிரமத்துடனேநமக்கெதிரே வருகின்ற ராக்ஷசவீரன் ராவணனுடைய புதல்வனாகிய இந்திரஜித்தென்பவன்தானோ? அல்லது அந்தராவணனோவென்று மனத்திலே மிகுந்தசந்தோஷங்கொண்டு, அவ்வானரசிங்கமாகிய ஆஞ்சநேயர், இவன்வந்ததனால் நம்முடையஎண்ணம் நிறைவேறியதென்று நினைத்துத்தமது உன்னதமாகியதோளைப்பார்த்துப்பரமபுருஷா, பக்தவச்சலா, ஜகத்ரக்ஷகா, சர்வந்தரியாமி, ஜானகி மனோகரா, தாரகபரப்பிரஹ்மமேயென்று ஸ்ரீரகுநாயகனை ஸ்துதிசெய்துஅவரெழுந்தருளியிருக்கின்ற திக்குநோக்கித்தண்டஞ்சமர்ப்பித்து யோசிக்கின்றார். இவன் இப்போது நான்நினைத்த ராவணன் இந்திரஜித்துவென்கின்ற அந்த இருவரில் ஒருவனாயிருந்தால் பூர்வம்நான்செய்த புண்ணியபலன் எப்படியும் லப்தமாகும். எங்கள்சுவாமியாகிய ஸ்ரீராமபத்திரரும்தபோபலத்தையுடையவராவார். அவரிடத்திலிருந்துவந்த நானுமிருக்கிறேன். எமனும் ததாயத்தமாகக் காத்துக்கொண்டிருக்கின்றான். எண்ணியகாரியத்தையும் சீக்கிரத்தில் தடையில்லாமல் இனி முடிப்பேனென்று இவ்விதமாக யோசித்துப் பின்னும் அவன் சமீபத்தில் வரவரச் செவ்வையாகப்பார்த்து இந்தச் சேனையில் வருகின்ற நாயகனுடைய வடிவத்தைப்பார்த்தால் தோஷமற்றதாகக் காண்கின்றது. ஆகிலும்இவனுக்குப்பத்துத்தலைகளில்லாமையால் ராவணனுமல்லன் இந்திரஜித்துவுமல்லன் அந்தப்பாலசுப்பிரமணியனுமல்லன். இவனோ நீலபர்வதம்போ லிருக்கிறானென்றும் நினைத்துக்கொண்டிருந்தனர். இந்திரதநுசுபோலிருக்கின்ற தோரணகம்பத்தின் மேலிராநின்ற அநுமானை, அந்த அக்ஷகுமாரன்பார்த்து அடடா! இந்தக்குரங்குதானா இத்தனைராக்ஷசக்கூட்டங்களையும்கொன்றதென்று சொல்லிக்குலுக்கென்றுநகைத்தான். அதைக்கண்டு, அவனுடைய ரதசாரதிசொல்லுகின்றான். கேளுமையா பிரதாபசூரனாகிய அக்ஷகுமாரனே! இதுதானாவென்று நீர் அலக்ஷியமாக இகழ்ந்துசொல்லலாமா? உலகத்தில் எத்தனையோ விசித்திரமுண்டா யிருகின்றன. முன்னாளிலே நம்முடைய ராஜாவுடனே எதிர்த்த வாலியும்ஒருகுரங்குதானல்லவோ! அவனைப் பார்க்கிலும் சாக்ஷிவேறேவேண்டுமோ? ஆகையால், எச்சரிக்கையாகவே பார்த்து நடக்கவேண்டுமென்றுசொன்னான். அந்த வார்த்தைகேட்டுச் சாரதியை நோக்கி இப்போது இவ்விடத்திற்குவந்து இப்படிப்பட்ட துஷ்கிர்த்தியஞ்செய்த இந்தத் துஷ்டக்குரங்கு, திரிவிதலோகங்களில் எங்கேபோனாலும் இதன் பின்னேவிடாது தொடர்ந்து, தேடிக்கொண்டுபோய் ஜயித்து, இனிக் குரங்கென்பதே உலகத்திலில்லாமற்போம்படிக் கருவறுத்துவிடுகிறேன் பாரென்று அக்ஷகுமாரன்சொன்னான்.

அப்போது ராக்ஷசசேனையானது பொங்கியெழுந்து ஆர்ப்பரித்து அட்டகாசஞ்செய்து அஞ்சனாபுத்திரராகிய அநுமானை நெருக்கிச் சுற்றி

மறைத்து, சோனுமேகமானது இடைவிடாமல் அமோகமாக மழையைச் சொரிந்தாற்போலப் பலவித ஆயுதங்களையும் பிரயோகித்தது. அதனல் விண்ணுஞ்சலித்தது. மண்ணுஞ்சலித்தது. வீராதிவீராகிய ஆஞ்சநேயர் தனியே அந்தச்சேனைக்குநடுவே பிரவேசித்தார். நிருதர்கள் எய்கின்றவையும், எறிகின்றவையுமாகிய அஸ்திரசஸ்திரங்களெல்லாம் அவர் திருமேனியின்மேற்பட்டு முறிந்தன. யானைகள்வந்து அநுமானைமுட்டி விழுந்து இறந்தன. தேர்கள் தலைகீழாக மறுந்து விழுந்து சிதைந்தன. குதிரைகள் எலும்புகள் நெரிந்து மடிந்தன. அவரெடுத்து எறிதலால் ராக்ஷசர்களுடைய சரீரங்கள் லங்கையின்மார்க்கமாகப் போய்விழுந்தன. உலர்ந்த வைக்கோற் போரில் நெருப்புக்கலந்ததுபோல வாயுகுமாரரானவர் புகுந்து கொல்லுகின்ற ராக்ஷசர்களுக்கோ முடிவில்லை. அவர்களுயிரும் எமபுரம்போய்ச் சேர்வதோ ஒழிவில்லை. ஆகையால், அந்த யமனுக்கு ஆயிரங்கோடி தூதர்கள் தானிருக்கின்றார்களோ தெரியவில்லை? போர்க்களத்தில் வந்தவர்களையும், வருகின்றவர்களையும், வருமவர்களையும் அநுமானனவர் ஓடி யோடிவளைத்துத் தமக்கு முன்னுண்டாயிருக்கின்ற பராக்கிரமத்திலும் மூன்றுபங்கு அதிக பராக்கிரமமுடையாராய், ஊழிகாலத்தில் அதிதீக்ஷணியமாக உதயமாகின்ற சூரியனைப்போல உக்கிரமாய் ஜாடத்தலைப்பட்டார். அந்த ராக்ஷசர்கள் சூரியகிரணோஷ்ணத்தினல் சுருண்டு கருகிமடிகின்ற கிருமிகளைப்போல மடிந்தார்கள். யானைகள் பிளவுண்டு, தேர்கள் நெரியுண்டு, குதிரைகள் சிதைவுண்டு, பதாதிகள் உதையுண்டு, உதிரம் ஆறாய்ப்பெருகவும், பிணம் சேறாய்க்குழையவும், கடல்சூழ்ந்த லங்கையானது காலனுற் கொள்ளையிடப் பட்டதென்னும்படி ஐம்புலன்களையும்வென்ற ஆஞ்சநேயர் கொன்றுகுவித்தார். தங்கள் கண்ணுக்கெதிரே இறக்கின்றவர்களிறக்க அதைப் பார்த்தபடியே அவர்கள்பக்கத்தில் உபபலமில்லாமல் உயிர்நடுங்கி நிற்கின்றவர்களில் சிலா சிலர் தேர்களும் தேர்ப்புரவிகளும், தேர்ச்சாரதிகளும், தேர்வீரர்களுமே மிகுதியும் அழிந்ததென்றார்கள். சிலர் சிலர் யானைகளும், யானைப்பாகர்களும், யானைவீரர்களுமே மிகுதியும் மாண்டதென்றார்கள். சிலர் சிலர் புரவிகளும், புரவிரௌத்தர்களும், புரவிவீரர்களுமே மிகுதியும் இறந்ததென்றார்கள். சிலர் சிலர் பதாதிகளே மிகுதியும் மாய்ந்ததென்றார்கள். சமுத்திரத்திற்கு ஒப்பாகிய சேனைகளையுடைய மகாபலிஷ்டர்களாகிய ராக்ஷசர்களோ ஆய்ச்சியர்கள் கடைகின்றதயிரைப்போலானார்கள். அவர்களைத் துவஞ்செய்கின்ற ஆஞ்சநேயரோ அந்தத்தயிரைக் கலக்குகின்ற மத்தைப்போலானர். அந்தப்போர்க்களமோ சப்தலோகத்திற்கும் ஒப்பாயிருந்தது. அதிலே பிரவேசித்த சேனவீரர்களோ யுகாந்தகாலவெள்ளத்தை யொத்திருந்தார்கள். அவர்கள் மத்தியிலிருந்து யுத்தஞ்செய்கின்ற இந்த வாயுகுமாராகிய ஆஞ்சநேயரோ யுகாந்தகாலாக்கினியை ஒத்திருந்தார். மற்றும் அக்ஷகுமாரனுடனே கூட வந்த ரத கஜ துரக பதாதிகளாகிய கூட்டங்களையெல்லாம் படுசூர்ணமாம்படி அநுமானனவர் சங்கரித்தலால், அவர்களில் அநேகர் கால்வேறு, கைவேறு, தோள்வேறு, தொடைவேறு, தலைவேறு, உடல்வேறானர்கள். இறவாமல்

தப்பிப்பிழைத்த சிலபேர்மாத்திரம் உதிரமானது ஆறுபோலப் பெருகிவழியும்படிப்பயந்து நடுங்கிப் பின்னிட்டார்கள். பலதிசைகளிலும் பிணமலைகள் குவிந்தன. அந்தத்தருணத்திலேதனியேநின்ற இந்திரஜித்துவின் தம்பியாகிய அக்ஷனனவன் கண்களெரியும்படிப்பார்த்து, ஒருதேரோடே மலையைப்போல அபாரமாகிய தன்வில்லைச் சக்கராகாரமாகவளைத்து, நாணேற்றிக் கூர்மையாகிய அம்புகளைத்தொடுத்துப் பிரயோகஞ்செய்துகொண்டே அவருக்கு நேரேபோனான். அவன் அப்படிவரவே ஆஞ்சநேயரும் அவனைச்சந்தித்தார். இருவரும் ஒருவரையொருவர் சந்தித்தபோது தேவர்கள்கண்டு இனி அநுமானுடைய ஸ்திதி ஏதாகுமோவென்று சஞ்சலப்பட்டு, இவர்களிருவருடைய சாகசத்தையும் பார்க்கிறதற்கு நாம் இமையாத கண்களைப்பெற்றிருக்கின்றதும், அதிர்ஷ்டந்தானென்றுநினைத்து விலகாமல் யாவரும்எதிரெதிராகநெருங்கிக் காணத் தலைப்பட்டார்கள். அந்தச்சமயத்திலே அக்ஷகுமாரன் வாயினால் நெருப்பைக்கக்குகின்ற பதினான்குபாணத்தை ஆய்ந்தெடுத்து அநுமான்மேல் எய்தான். அவைவந்து தம்மேற்படவொட்டாமல் அவர் கையிலிருந்த எழுவாயுதத்தினால் அடித்துப் பொடிப்பொடியாயுதிரும்படி செய்தார். அதுகண்டு பின்னும் உக்கிரமாகிய பல அஸ்திரங்களைப்பிரயோகித்து அந்த எழுவாயுதத்தைத் துண்டித்துப் பூமியிலேவிழத்தள்ளி, மறுபடியும் அநேகபாணங்களை வில்லிலேதொடுத்து நெறநெறவென்னும்படி சந்தத்தாரையாகப்பொழிந்தான். ஆஞ்சநேயர் அவைகளையெல்லாம் வேறொரு ஆயுதமுமில்லாமையால் தம்முடையகையையே ஆயுதமாகநீட்டி விலக்கிக்கொண்டு சரேலென்றுபோய் அக்ஷகுமாரனுடைய தேரின்மேல் குபீரென்று எழும்பிக்குதித்தார். குதித்தமாத்திரத்தில் அந்தத்தேர் பூமியிலழுந்தியது. அதை நடத்துகின்ற சாரதியைக் கொன்றார். அதில் கட்டியிருந்த இருநூறு புரவிகளும் மடிந்தன. அக்ஷகுமாரன் விற்குதை நிமிராதிருக்கும்படி எய்கின்ற பாணங்களில் சில பாணங்கள் அநுமானுடைய மார்பிலே தைத்தருவின. சில பாணங்கள் தோளிலே புதைந்து மறைந்தன. சிலபாணங்கள் முகத்தை மறைத்தன. அதனாற் கொஞ்சமாவது சலியாமலும் மெலியாமலும் அவன்கையிலிருந்த வில்லை ஒரு கையினால்தாவிப் பறித்துக்கொண்டு அவனுக்கு எதிரேநின்றார். அவன் அந்தவில்லைத் தன் இரண்டுகையினாலும் விடாமற் பிடித்திழுத்தான். இவரும் பிடித்தபிடிவிடாமல் உறுதியாகவலித்தார். இந்தப்போராட்டத்தில் அது மளுக்கென்றுமுறிந்தது. அதைக்கண்டு அவன் அரையிலிருந்த உடைவாளையுருவிவெட்டினான். ஸ்ரீராமதூதர் கண்களில்நின்று கோபாக்கினிப் பொறிபறக்க அந்த உடைவாளை ஒருகையினாலே தட்டிப்பறித்து ஒடித்துத் தூளாக்கிவிட்டார். அதுஒடிந்து கீழேவிழுதற்குமுன் அவன் வலுமையானதோள்களொன்றோடொன்றுதாக்கும்படி மல்லுத்தஞ்செய்ய எத்தனப்பட்டு, விசையாயெழும்பி அநுமானைக் கைகளினால் இறுகக் கட்டிப்பிடித்தான். பிடித்தவுடனே அவனுடைய கையிலிருந்து நழுவி, தம்முடைய சரீரத்திலிருக்கின்ற ரோமங்கள் வேல்களைப்போல அவன்சரீரத்தில் தைக்கவும், தமது வாலானதுநீண்டு அவனுடலை அசைக்கவும் திருப்பவுமொட்டாமல்சுற்றியிறுக்

கொள்ளவும் தர்மும் அவனை நெருக்கிப்பிடித்தார். அப்படிப் பிடித்துக் கொண்டு வாள்போலக் கூர்மையாயிருக்கின்ற அவனுடைய பற்களுதிரும்படிக் கன்னத்தில் அறைந்து, மேகத்தினிடத்திலிருந்து மின்னல்கள் வழுவி விழுகின்றதுபோலக் குண்டலமுதலாகிய ஆபரணங்கள் தெறித்துவிழவும் குடல்சரிந்து தொங்கவும், அவனுடைய பிடரியில் தமது கையைக்கொண்டு கபீர்கபீரென்னும்படிக் குத்தியும் அவனுயிர் போகாததுகண்டு அவனைக் கீழே தள்ளி மேலேகுதித்தேறி, ஏழுலகங்களும் அழிகின்ற ஊழிகாலத்திலும் அழியாதகீர்த்தியையுடைய மாருதியானவர் பிரவாகமாகப் பெருகியோடுகின்ற உதிரமே நீராகவும், பூமியே அம்மிக்கல்லாகவும், அவனுடைய மாம்சாதிகளே அரிசியாகவுங்கொண்டு தமது வைரமாகிய கையினாலே சுவர்க்கலோகத்தாரும் பூலோகத்தாருங் காணத்தக்கதாக மாவாய்ப்போம்படி அரைத்துத் தேய்த்துவிட்டார். அதுகண்டு சிலராக்ஷசர்கள் நடுங்கிக் கிலிபிடித்து ரக்தவெள்ளத்திலேபோய் முழுகிக்கிடந்தார்கள். சிலராக்ஷசர்கள் பேய்கள் தின்கின்ற பழைய பிணக் குப்பல்களினிடத்திற்போ யொளித்துக் கொண்டிருந்தார்கள். சிலராக்ஷசர்கள் பயப்பிராந்திகொண்டு திசைதெரியாமல் மறுகினார்கள். சிலராக்ஷசர்கள் ஓடமாட்டாமல் நின்றுவிட்டார்கள். சிலராக்ஷசர்கள் கையிலேந்திய ஆயுதங்களை எறிந்துவிட்டுக் கண்டதிசைகளில் விசையாய்க் கால்சாய்ந்துபோனார்கள். சிலர் மீனுருவங்கொண்டு சமுத்திரத்தில் ஓடிவிழுந்தார்கள். சிலர் பசுவாகத் தம்முடைய உருமாறி வழிதோறும் புல் மேய்ந்துகொண்டிருந்தார்கள். சிலர் மாம்சத்தைப்பக்ஷிக்கின்ற பருந்துகள் கழுகுகளின் வடிவுகொண்டு ஆகாசத்திற்பறந்தார்கள். சிலர் வைதிக பிராமணர்கள்போல உருவெடுத்து நின்றார்கள். சிலர் ஸ்திரீரூபங்கொண்டு தலைமயிரை வகிர்ந்துகொண்டிருந்தார்கள். சிலர் அநுமானைநோக்கி எங்கள் ஐயனே நாங்கள் உம்முடைய அடைக்கலமென்றார்கள். சிலர் நாங்களுமக்குப் பகையாளிகளல்லோம், இதோ நிற்கின்றார்களே இவர்கள்தாமென்று எதிரேயிருக்கின்றவர்களைக் காட்டினார்கள். சிலர் தங்களுடைய மனையாட்டிமார்களும் பிள்ளைகளும் மற்றுமுண்டாகிய சுற்றத்தார்களும் யுத்தகளத்தில்வந்து பந்துத்துவம் பாராட்டித் தங்களைத் தழுவிக்கொள்ள, நாங்கள் உங்களுடைய உறவின்முறையாரல்லோம் பூர்வம் தேவர்களாயிருந்து உங்கள்வீட்டில்வந்துபிறந்தோமென்று சொல்லிவிட்டு உடனே ஸ்ரீராமநாதராற் கொல்லப்பட்டு வீரசுவர்க்கத்திற்குப்போனார்கள். சிலர் ஆஞ்சநேயர் தங்களைக் கொல்லவரும்போது நாங்கள் ராக்ஷசர்களல்லேம், மானிடர்களென்று சொன்னார்கள். சிலர் வண்டுகளாகிச் சோலைகளினிடத்திற் பறந்துபோனார்கள். சிலர் இன்னது செய்யலாமென்று ஒன்றுந் தமக்குத்தோன்றாமல் திப்பிரமைகொண்டு நின்றவிடத்திலேயே நின்றார்கள். சிலர் அநுமானுக்குத் தாங்கள் ராக்ஷசர்களென்று தெரியாமலிருக்கும்படி மூன்றாம்பிறையையொத்த வக்கிரதந்தங்களை ஓடித்தெறிந்துவிட்டும், அக்கினிக்கொழுந்துபோற்சிவந்த செம்பட்டமயிர்களை அரிந்து வீசிவிட்டும் ஜாடையாய் நழுவிப்போனார்கள். லங்காபட்டணத்திலுள்ள ராக்ஷசஸ்திரீகள் காதிலிருக்கின்ற குண்டலங்கள் கழலவும், ஸ்தனங்களில்பூசிய சந்தனகுங்குமங்கள்

கண்ணீராற்கரைந்து ஒழுகவும், கூந்தலானது அதில் மொய்த்திருக்கின்ற வண்டுகளெழுந்து அலையும்படி அவிழ்ந்துவிழுந்து குதிகாலைவருடவும், மேனு தடுஆகாயத்தைப்பொருந்தும்படி வாயைத்திறந்து தூக்கித்தலால் அவர்கள் அழுதவோசையானது அண்டத்தையளாவியது. நாயகன்மார்களுடைய கால் மாட்டில்விழுந்து அழுது சோர்ந்துகிடக்கின்ற ராக்ஷசிகளுடைய சிவந்த கூந்தலுடனே, அந்த ராக்ஷசர்களுடைய சரீரத்திலின்றும் பெருகிய உதிரமானது இடங்கள்தோறும் வேற்றுமைதெரியாமற் பரவியிருந்தது. போர்க்களத்தில்இறந்த ராக்ஷசர்கள்மேல் அவர்கள் பெண்சாதிமார்கள்விழுந்து உயிரொன்றும் உடலிரண்டுமா யிருக்கிறதனுலோ? உசுவாச நிசுவாசமில்லாமலும் கண்களை யிமையாமலும் அசைவற்றுக்கிடந்தார்கள். சிலராக்ஷசஸ்திரீகள் உயிரைத்தேடிக்கொண்டுபோகின்ற உடலைப்போல எங்கும் ஓடித்தேடி, இறந்தவர்களுடைய சரீரக்குப்பைகளின் நடுவிலே குற்றுயிரோடுகிடக்கின்ற தங்கள் நாயகன்மார்களைக்கண்டு, சுவர்க்கத்திலிருக்கின்ற தேவதாஸ்திரீகள் பிணங்கும்படி தழுவிக்கொண்டார்கள். வாளுக்கொப்பாகிய கண்களையுடைய ஒரு ராட்சதஸ்திரீயானவள் ரணகளத்தில் எழுந்துநின்று ஆடுகின்ற கவந்தத்தைக்கண்டு, என்னுடைய பிராணநாயகனே நீ காட்டவேண்டுமென்று கைகூப்பிக்கொண்டு பிரலாபித்தாள். பூங்கொம்புக்குச்சமானமாகிய சரீரத்தையுடைய ஒருபெண்ணானவள், உயுத்தகளத்தில்கூத்தாடுகின்ற தன்புருஷனுடைய உடற்குறையுடனே அவன் தலையையெடுத்துச் சேர்த்துப்பார்த்து எங்கள் கோமானே! நீநடனஞ்செய்து மிகவும் இளைப்படைந்தாயாகையால் இனியாவது சும்மா இருவென்று கைகளால் உடலிறுகும்படி அணைத்துக்கொண்டாள். அப்படிப்பட்டதருணத்தில் அவ்விடத்திலிருந்து காவலாளர்களாகிய தேவர்கள் பயந்து ஓடி ராவணனுடனே நடந்தசமாசாரத்தைச் சொன்னுர்கள். அந்தச்சமயத்தில் மயன் குமாரத்தியாகிய மண்டோதரியென்பவள் தன் பிள்ளை யிறந்துபோன செய்திகேட்டு, சேற்கண்டைகள் விரும்புகின்ற கண்களிரண்டும் மலையருவிபோல ஜலத்தைக்கக்கவும், கார்மேகம் விரும்புகின்ற அளகபாரமானது அவிழ்ந்துவிழுந்து புழுதியிலேபுரளவும், வயிற்றில் அறைந்துகொண்டு அதிகவருத்தத்துடனே தன்நாயகனுகிய ராவணேசுவரனுடைய பாதத்தில் வந்துவிழுந்து கோவென்று கதறிஅழுதாள். அந்தப் பட்டணத்திலிருந்த ஸ்திரீகள்முதலாகிய சகலமானவர்களும் தங்கள் ராஜாவாகிய ராவணனுடைய பாதத்தில்விழுந்து அழுதார்கள். அவ்வனத்தைக்காக்கின்ற தேவர்களுக்கு இவைகளெல்லாம் உள்ளுக்குள்ளே சந்துஷ்டியாயிருந்தபோதிலும், லங்காதிபதிக்குப் பயந்தவர்களானபடியினலே தாங்களும் ஒப்புக்குவிழுந்தழுதார்கள்.

அக்ஷகுமாரன்வதைப்படலம்

முற்றிற்று.

---

## பாசப்படலம்.

அவ்விடத்தில் அந்த வார்த்தைகேட்ட பிரதாபலங்கேசுவரன் தன்னுடைய கண்களிலெல்லாம்நெருப்புச்சிதற, எவ்வகைப்பட்டவுலகங்களும் நிலைகுலையும்படி அதிக கோபங்கொண்டான். அப்போது தன்தம்பி மாண்டானென்கின்ற சொல்வந்து நெஞ்சைச் சுடும்படிக்கேட்டு, இந்திரனை ஜயித்துக் கீர்த்திபெற்றதனால் இந்திரஜித்துவென்று பேர்படைத்த மேகநாதனனவன் அதிக வெப்பமுண்டாகப் பெருமூச்செறிந்து திரிபுரதகனஞ்செய்யும்படி மகமேருவை வில்லாகவளைத்த ருத்திரமூர்த்தியைப்போல மகத்தாகிய உக்கிரங்கொண்டு, அந்தக்ஷணமே அண்டகடாகத்தின் முடிவைக் காட்டுகின்ற அதியுன்னதமாகிய ஆயிரத்திருநூறுபேய்கள்பூண்ட தேரின்மேலேறினன். எட்டுத்திக்குகளுங்கிழிய அண்டமும் பிளக்க விருதுகூறி வீராவேசத்துடனே தும்பைமாலையும் அணிந்தான். வீரகண்டைகள் ஒலிக்கத் தலைப்பட்டன. இடியும் பயந்தோடும்படி ரணபேரிமுழங்கியது. தேவேந்திரனனவன் உயிர் நடுங்கி உடல்புழுங்கி வெயர்க்கும்படி இந்திரஜித்து வருகின்றதனால் யுத்தம் பிரபலப்பட்டது. இனி மோசம்வந்துவிட்டதென்று பிரஹ்மருத்திராதியர்களாகிய திரிமூர்த்திகளும் ஊக்கமழிந்தார்கள். தம்பியை நினைக்கும்போதெல்லாம் அவனுக்குக் கண்களில் ஜலந் தாரைதாரையாகத் ததும்பத் தலைப்பட்டது. அவன் தன் கைவில்லைப்பார்த்து வாயைமடித்து க்ஷாத்திரமிகுந்து கலகலவென்று நகைத்தான். மரக்கிளைகளிலே சஞ்சரிக்கின்ற எளிதாகிய குரங்கினாலே தேய்ந்துபோனது என் தம்பியா? என்தந்தையாகிய பிரதாபலங்கேசுவரனுடைய கீர்த்தியல்லவா? என்றுஞ்சொன்னான். அந்தச்சொல் சொல்லும்பொழுதே நெடியவேற்படைகளும், கொடியவிற்படைகளும், மலையையும் இருகூறாகச்செய்கின்ற வாட்படைகளும்வந்து நெருங்கின. அவைகளின்தொகை எவ்வளவென்றால், என்னாற்சொல்லக்கூடாது. இரண்டுபக்கத்திலும் மதத்தைப்பொழிந்துநிலத்தைச்சேறுசெய்கின்ற யானைப்படைகள்பன்னீராயிரமும், தேர்ப்படைகள் பன்னீராயிரமும், மிதமில்லாத புரவிப்படைகளும் சேர்ந்தன. மற்றும் பலவகையாயுதங்களையுடைய ராக்ஷசேந்திரர்கள் எத்தனையோபேர்கள் கூடவர, தன் பிதாவிருக்கின்ற ஆஸ்தானமண்டபத்திற்குவந்து ராவணனுடைய இரண்டுபாதத்திலும்விழுந்துசேவித்து, மாண்டுபோன தம்பியைக்குறித்து அலறியழுதான். அழுகின்ற ஜேஷ்டபுத்திரனைத் தசக்கிரீவனனவன் அவனிரண்டுகையையும்பற்றியெடுத்துத் தன்மார்புடனேதழுவிக்கொண்டு தானும் பிரலாபித்துச்சோகப்பட்டான். அப்போது ஸ்திரீகளெல்லாம் வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டுவந்து கோவென்று கூசவிட்டழுதார்கள். அதுகண்டு இந்திரசித்து அவர்களையெல்லாம் அதட்டி விலக்கிவிட்டுத் தன்பிதாவின் முகத்தைப்பார்த்துச் சொல்லுகின்றான். கேளுமையா! நீர் உறுதியொன்றும்பாராமல் சும்மாவிருந்து துயரப்படுகின்றீர். குரங்கினுடைய பலத்தைச் செவ்வையாக யோசித்தறிந்திருந்தும் நீங்கள்போய் அதனுடனே யுத்தஞ்செய்யுங்கோளென்றுசொல்லி, அணிபணியாகச் சேனைகளை அதன்மே

லேவி நீர் தாமே ராக்ஷசக்கூட்டத்தையெல்லாம் அசியாயமாகக்கொன்றீர். கிங்கரர்களும் ஜம்புமாலியும் பஞ்சசேனாபதிகளுமென்கின்ற இந்த ராக்ஷசவீரர் களையும், இவர்களுடனே கூடப்போன சேனைகளையும் ஒருவராவது மீண்டு வரவொட்டாமல் கொன்றதானால் அந்தக்குரங்கை யென்னவென்று நினைக்க வேண்டியது. சிவன், பிரமன், விஷ்ணு வென்றுதான்சொன்னாலும் சரியாமா? அஷ்டதிக்குகளையும்வென்றீர். திரிபுராந்தகனாகிய திரியம்பகனுடைய கைலாசத்தையும் திரிலோகங்களையும் ஜயித்தீர். இப்படிப்பட்ட மகாபிரதாப சாலியாகிய நீர் அக்ஷகுமாரனையுங்கொல்லும்படி ஒருகுரங்கை லக்ஷியம்பண்ணிக்கொண்டு, ஆடவிட்டு நாடகம்பார்க்கிறதுபோல அதற்கு இவ்வளவுதூரம் இடங்கொடுத்துவிட்டீர். அது இருக்கட்டும். அக்ஷகுமாரனைக்கொன்றதென் கின்ற அபகீர்த்தியானது இனியந்தக்குரங்கைக்கொன்றாலுந்தான் நீங்குமா? ஆபினும் சீக்கிரத்திலே நானேபோ யந்தக்குரங்கைப் பிடித்துக்கொண்டுவந்து கொடுக்கிறேன். நீரொன்றுக்கும் அஞ்சவேண்டாம் துக்கப்படாமலிருமென்று சொல்லிவிட்டு, மேகநாதனனவன் உயுத்தத்திற்குப் பிரயாணப்பட்டு அதிரதம், மகாரதம், சமரதம், அர்த்தரதமாகிய நால்வகை ரதங்களும், ராஜமதங்கம், பத்திரமதங்கம், மிருகமதங்கமாகிய மூவகை யானைகளும், மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, விருஷபகதி, வானரகதியாகிய பஞ்சகதிகளையுடைய புரவிகளும், வாள்வீரர், வேல்வீரர், வில்வீரர்முதலான பதாதிகளுமாகிய சதுரங்கபலமுடனேகூடிய ராக்ஷசசேனைகள் யுகாந்தகால சமுத்திரம்போலச் சூழும்படி, அவைகளின்நடுவே நிற்கின்ற மகாமேருவுக்குச் சமானமாகிய தேரின்மேலாக வீராதிவீரனாகிய இந்திரஜித்துபோனான். போய் அநுமான் போர்செய்த போர்க்களத்தைப்பார்த்துத் தான் திக்குகளையும் சகல லோகங்களையும் வென்றவனாயிருந்தும், அநுமானுடைய போர்ப்பிரதாபத்தைக்குறித்து நன்றாயிருக்கின்றதென்று சந்தோஷப்பட்டான். அதுகண்டு இவன் சந்தோஷப்படுகிறானே இது என்ன பிரமாதத்தை விளைக்குமோவென்று சகல மானவர்களும் நடுங்கினார்கள். இந்திரஜித்துவோ அம்மம்மா! எங்கேபார்த்தாலும் பிணங்களே அநேகமலைகளும், ரக்தமேகடல்களும், நிணமே நதிகளும், ஆயுதங்களே காடுகளும்போலச் சூழும்படி இந்தரணகளமானது வேறொரு உலகம்போலத் தோன்றுகின்றதேயென்று நினைத்து ஆச்சரியப்பட்டு, அவன் எக்காலத்திலும் துக்கமென்பது அணுகாதிருக்கின்ற தன்மனத்தில் கொஞ்ச விசனமடைந்து, சமுத்திரத்தைப்போல அளவிடப்படாதவர்களும். மகா பராக்கிரமத்தையுடையவர்களும், சமானாதிகமில்லாதவர்களுமாகிய ராக்ஷசர்களெல்லாம் இறந்தார்களே! இத்தனைபேர்களையுங்கொன்றது ஒருகுரங்குதானே இனியந்தச்சீதைக்கு நாயகனாகிய ராமன்வந்து எதிர்த்து யுத்தஞ்செய்தால் நாம் எந்தச்சேனையைக்கொண்டு வெல்லுகின்றதென்றுஞ் சொன்னான். அப்படிச் சொல்லிக்கொண்டே அவன் போகின்ற வழிமுழுதும் கண்ணுக்குச் சமானமானவர்களும், பிராணனுக்கு ஒப்பானவர்களும், யுத்தகளத்திலே உள்ளங்கைப்பொருளைப்போலக் காக்கின்றவர்களுமாகிய எண்ணிறந்த ராக்ஷசர்கள் இறந்துகிடக்கின்றதைக்கண்டு, அங்கங்கேநின்று வாயுதட்டை மடித்து

ரௌத்திராகாரமாய் ஆறாதபுண்ணினிடத்திலே கோலிட்டாற்போல அபிமானத்தினாலே மனம் கொந்துபுழுங்க, பின்னும் அரணியத்திலே எங்கள் அத்தைக்குவந்த அவமானமும் கரன்முதலானவர்கள் பட்டபாடும், என்னைத் தமையனாகப்படைத்த என் தம்பி அக்ஷன் இறந்துபோனதும் இரண்டுமனிதர்களாலும் ஒருகுரங்கினாலுமல்லவா நடந்த காரியம் ஆ! ஆ! என்னுடைய விரப்பிரதாபம் அழகாயிருக்கின்றதென்று நினைத்து அநேகம் பிணக்குன்றுகளையிடறி ரத்தநதியை நிணச்சேற்றைக்கடந்து அதிக பிரயாசமாக ரதத்தை நடத்திக்கொண்டு போகையில், நிலத்திலே தேய்ப்புண்டு அரைபட்டுக் கிடக்கின்ற தன்தம்பியின் சரீரத்தைப்பார்த்தான்.

உடனே நெருப்பிலேகாய்ச்சப்பட்ட செம்பைப்போலத்தன் கண்கள்சிவந்துமனங்கறுக்கும்படி, சுப்பிரமணியராலேகொல்லப்பட்ட தாருகாசுரனுடைய சரீரத்திலிருந்துபெருகிய உதிரத்தைப்போல எங்குந்தோய்ந்திருக்கின்ற உதிரப்பிரவாகத்தில், நரசிங்கப்பெருமானுடைய கைந்நகங்களினால் அளையப்பட்ட இரணியாசுரனுடைய உடற்குழம்பைப்போல அந்த உடலானது கோரமாய்க்கிடக்கக்கண்டு எழியதேரில்நின்றும் மெய்சோர்ந்து கையிலேதாங்கியவில்லையும் நழுவவிட்டு, விழிகளிலிருந்து உதிரமும் நீரும்நெருப்புங் குபீர்குபீரென்று சிதறப்பெருமூச்செறிந்து அடாதம்பி! உன்பிதாவினுடையஉக்கிரமாகிய ஆஜ்ஞையைக்குறித்துப்பார்த்தானேயானால்உன்னை எமனுங்கொண்டுபோகமாட்டான் மற்றலோகத்தாரும்உன்னை ஒளித்துவைக்கிறதற்குப் பயப்படுவார்களே ஐயா! எங்களைநீங்கி நீயெந்தலோகத்திற்குப்போய்ச் சேர்ந்தாயோவென்று சொல்லிச்சொல்லி மனஞ்சகிக்காமல் அறிவழிந்து பிரலாபிக்கும்போது, கோபமானது ஜனித்து மேலிட்டு ஆணிக்கு எதிராணி கடாவினதுபோல இந்தத்துக்கத்தை வெளிப்படவொட்டாமல் அடக்கியது. இந்தப்பிரகாரமாய் நிகழ்கின்ற சமயத்தில் சூரியனுடைய ரதத்திற்கு ஒப்பாகிய ரதத்தின்மேலிருக்கின்ற இந்திரஜித்தை, முப்புரங்களை எரிக்கும்படி முடுகிச்சென்ற கைலாசநாதனைக் கண்டதுபோல அநுமானானவர் கண்டார். கண்டு இவன்தான் இந்திரஜித்தென்பவன், முன்பு சிலவீரர்களை நாம் ஜயித்தோமே அதுதானே ஒரு அதிசயமல்ல. இவனை யிவன்செய்த தீவினையே நமக்கெதிரேவரும்படிச் சீக்கிரத்தில் அழைத்துக்கொண்டு வந்துவிட்டது. இனிவெல்வது தோற்பதாகிய இந்த இரண்டில் ஏதாவதொன்று உண்டாகு மானாலுங்கீர்த்தியே. துள்ளுகாளையாகிய இவன்மாத்திரம் நம்முடையகையிற் பட்டானானால் அது அந்தராவணன்மாண்டதற்குச்சரியாகும். பின்பாவது நாமறியாமற்கெட்டோமென்று அழியாத கற்பினையுடைய லோகமாதாவாகிய பிராட்டியாரையும்விட்டுவிடுவான். ராக்ஷசர்களுடையமதமும் அடங்கும்; இதனால்வரும் பிரயோசனம் இதுஒன்றுதானா? இந்திரனும் தன்வருத்தம் நீங்கிச் சுகப்படுவான். இப்பொழுதே லங்காபட்டணமுங் கட்டுக்காவலழிந்துபோம். நானே ராவணனையும் வேரோடேவென்றவனாவேனென்று இவ்விதமாக எண்ணுகின்றதருணத்தில், ராக்ஷசர்களும், யானைகளும், தேர்களும், குதிரைகளும், மூன்றுதரம் மூன்றுலோகத்தையும்

ஜயித்துவந்த மேகநாதனுக்கு முன்னேவந்து கற்கண்டை எறும்புமொய்த்தது போல, தோரணகம்பத்தின்மேலிருந்த ஆஞ்சநேயனை நாற்புறத்திலுஞ் சுற்றி வளைத்துக்கொண்டு உடைவாள்போலவும், எறிவேல்போலவும், சக்கரம்போலவும், தோமரம்போலவும், மழுப்போலவும், கொழுப்போலவும், சூரிபோலவும் கட்டாரிபோலவும், ஈட்டிபோலவும், எழுத்தாணிபோலவும், ஊசிபோலவும், உலக்கைபோலவும், கட்டைப்பாரைபோலவும், கதிர்க்கம்பிபோலவும், சலாகைபோலவும், சங்கிலிபோலவும், நானாவிதரூபத்தையுடைய பாணங்களையும், வாளாயுதம்,வேலாயுதம், சூலாயுதம், காலாயுதம், சக்கராயுதம், வச்சிராயுதம், தண்டாயுதம், தோமராயுதம், எறிதடி, வளைதடி, குறுந்தடி, பருந்தடி, இருப்புலக்கை, வல்லுலக்கை, குந்தம், கோடாரி, பாசம், அங்குசம், கவண், கப்பணமுதலாகிய அநேகவித ஆயுதங்களையும்கொண்டு, பிரளயகால மேகங்கள் சப்தசமுத்திர ஜலத்தையும் உண்டு சூல்கொண்டுகறுத்துமின்னிக் குமிறி இடித்து, யானைத்துதிக்கைபோலப் பருந்தாரைகளாக மழைபொழிவதுபோல அமோகமாகப் பிரயோகஞ்செய்தார்கள்.

அதுகண்டு ஆஞ்சநேயரும் வந்தீர்களா வாருங்கோளென்று அழைத்துத் தோரணஸ்தம்பத்தைவிட்டுக் கீழேகுதித்து, பிரமாண்டபரியந்தம் வளர்ந்து உயர்ந்து கிளைத்துத்தழைக்கின்ற ஒருமராமரத்தை வேருடனேபிடுங்கியெடுத்துக்கரகரவென்று சுழற்றிக்கொண்டு உக்கிரமாகியகோபத்துடன் அந்தச்சேனைக்குள் பிரவேசித்தார். அவருடையகாலினால் சிலயானைகள்உதையுண்டன. சிலயானைகள்உருண்டன. சிலயானைகள்மிதியுண்டன. சிலயானைகள்விழுந்தன. சிலயானைகள் மண்ணிற்புதையுண்டன. சிலயானைகள் புரண்டன. சிலயானைகள் வதையுண்டன. சிலயானைகள்மறிந்தன. பலதேர்கள்முடிந்தன. பலதேர்கள்முறிந்தன. பலதேர்களிடிந்தன. பலதேர்களிற்றன. பலதேர்கள்அச்சொடிந்தன. பலதேர்கள் மச்சழிந்தன. பலதேர்கள் பொடிப்பொடியா யுதிர்ந்தன. பலதேர்கள் பூமியிற்படிந்தன. பலதேர்கள் கொடிகுடைமுதலானவைகளும் பறிந்தன. அநேகங்குதிரைகள் தலைநெரிந்தன. அநேகங்குதிரைகள் கண்மணிசிதைந்தன. அநேகங்குதிரைகள்கால்முறிந்தன. அநேகங்குதிரைகள் முதுகுங்கோணின. அநேகங்குதிரைகள் மார்பொடிந்தன. அநேகங்குதிரைகள் உதிரங்கக்கின. அநேகங்குதிரைகள் குளம்புகள்பிளந்தன. அநேகங்குதிரைகள் கழுத்தற்றன. எத்தனையோராக்ஷசர்கள் அநுமான்கையிற்பிடியுண்டார்கள். எத்தனையோ ராக்ஷசர்கள் சரீரம் பிளப்புண்டார்கள். எத்தனையோராக்ஷசர்கள் தோளொடியுண்டார்கள். எத்தனையோராக்ஷசர்கள் தலையுடைபட்டார்கள். எத்தனையோ ராக்ஷசர்கள் தேகமுழுதுங் கடியுண்டார்கள். எத்தனையோ ராக்ஷசர்கள் கழுத்தறுபட்டார்கள். எத்தனையோராக்ஷசர்கள் அடியுண்டார்கள். எத்தனையோ ராக்ஷசர்கள் பயப்பிராந்திகொண்டார்கள். ராக்ஷசவீரர்கள் விற்களை வட்டமாகவளைத்துத் தூணியிலிருந்து ஆராய்ந்தெடுத்து அநுசந்தானம்பண்ணித் தைலதாராவிச்சின்னமாகப் பிரயோகஞ்செய்தஅஸ்திரங்களும், மற்றும் பலவிதமாகிய ஆயுதங்களும் வாயுகுமாரர்மேல்வந்துபட்டும், அவருக்கு ஒருப

த்திரவமும் செய்யாமல் பொடிப்பொடியாய்ப்பொறியெழுந்து திக்குகள் தோறுந் தெறித்துச்சிதறின. அது எப்படியிருந்ததென்றால், கொல்லனானவன் காய்ந்த இரும்பைப் பணையின்மேல்வைத்துச் சம்மட்டிகொண்டு அடிக்க அது அந்தப்பணையைச்சுடாமல், சிதைவுபட்டு அதன்துரு எங்குந் தெறித்துப்பறக்கிறதுபோலிருந்தது. அதுகண்டு இந்திரஜித்தானவன் நெருப்பைக்கக்குகின்ற அநேக பாணங்களை அவர்மேல் சந்தத்தாரையாகப் பிரயோகஞ்செய்தான். அவைவந்து ஆஞ்சநேயர் திருமேனியிற் பட்டமாத்திரத்தில் அவருடைய கோபாக்கினியினாலே சிலவெந்தும், சிலபுகைந்தும், சில எரிந்தும், சிலகரிந்தும், சிலநீறாகியும் போயின. அதைப்பார்த்துத் தேவர்களுடைய முகதேஜசு அழிந்து கண்ணொளிமயங்கியது. அநுமானாலே தன்னுடனேகூடவந்த தேர்களும் யானைகளும் புரவிகளும் காலாள்களுமாகிய சகலசேனைகளுமிறந்து போகவே, வேறுதுணையில்லாமல் தனித்துநின்ற பருத்ததோள்களையுடைய வீராதிவீரனாகிய இந்திரஜித்து நகைப்புங்கோபமும் அதிகரிக்கும்படி, வாயுவேக மனோவேகமாகத் தேரைச்செலுத்திக்கொண்டு அடா எந்நேரமாக வுன்னைக்குறித்து நான் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறது? இவர்களை யெல்லாங் கொன்றும் என் தோளின்தினவு தீரவில்லையே யாகையால், மகராஜனே! வந்த நீ சீக்கிரமாய்வரப்போகாதா இனியாவது வாவாவென்று தன்னையழைக்கின்ற அநுமானுக்குச் சமீபத்தில்வந்தான்.

கவி.

புரந்தரன்றலை பொதிரொறிந்திடப் புயல்வானில்
பரந்தபல்லுரு மேற்றினம் வெறித்துயிர்பதைப்ப
நிரந்தரந்தலை நெடுநிலஞ் சுமந்தபேருரகன்
சிரந்துளங்கிட வரக்கன்வெஞ்சிலையைநாண்டெறித்தான்.

ஆண்டநாயகன் றாதனு மயனுடையண்டம்
கீண்டதாமெனக் கிரியுக நெடுநிலங் கிழிய
நீண்டமாதிரம்வெடிபட வவனெடுஞ் சிலையில்
பூண்டநாணிறத் தன்னெழிற் றோள்களைப்புடைத்தான்.

நல்லைநல்லையிஞ் ஞாலத்துணின்னொக்க நல்லார்
இல்லையில்லையா லெறுழ்வலிக் கியாரொமிகல
வல்லை வல்லையின் முருகுநீபடைத்துளவாழ்நாட்
கெல்லை யெல்லை யென் றிந்திரசித்துவுமிசைத்தான்.

நாளுக்கெல்லையு நிருதராயுலகத்தை நலியும்
கோளுக்கெல்லையுங் கொடுந்தொழிற்கெல்லையுங் கொடியீர்
வாளுக்கெல்லையும் வந்தனவகைகொண்டு வந்தேன்
தோளுக்கெல்லையொன் றில்லையென்றநுமனுஞ்சொன்னான்.

அப்படி வந்துசேர்ந்து சுவர்க்காதிபதியாகிய தேவேந்திரனுடைய சிரசு அதிர்ந்து நடுங்கவும், மேகத்தினிடத்திலுண்டாகிய இடிகளும் திகைத்து உயிர்பதைக்கவும், சார்வகாலமும் பூமியைத் தாங்குகின்ற ஆதிசேஷனுடைய சகஸ்திரபணாமுடிகளும் அசையவும், அந்த இந்திரஜித்தானவன்தன்னுடைய

வில்லைக் குணத்தொனிசெய்தான். அதுகண்டு என்னைத் தன் தாசானுதாச னாக ஆண்டுகொண்ட ஸ்ரீராமபிரானுடைய தூதராகிய ஆஞ்சநேயரும் பிரஹ்ம மாண்டம்பிளக்கவும், அதுபோல அஷ்டகுலகிரிகளும் பொடிப்பொடியாயுதிர வும், பூமிகிழியவும், திக்குகள்வெடிக்கவும், இந்திரஜித்துவின் வில்லிலேபூட்டிய நாரியறுபடவும், தம்முடைய தோள்களைக்கொட்டி அட்டகாசஞ்செய்தார். அதுகண்டு சித்தம்பிரமித்து நீயே நல்லவன்! நல்லவன்! இந்த வுலகத்திலே உனக்குச் சமானமாகச் சொல்லுகிறதற்கு நல்லவர்கள் யாருமில்லை! இல்லை! பராக்கிரமத்தைக்கொண்டு சகலமானவர்களுடனேயும் யுத்தஞ்செய்கிறதற்கு நீயே சமர்த்தன்! சமர்த்தன்! நீபெற்றிருக்கின்ற பூரணாயுஷியத்திற்கு இப்பொ ழுதே முடிவுவந்தது வந்ததென்று இந்திரஜித்துசொன்னான். அப்படி யவன் சொன்ன உல்லங்கனமாகிய வார்த்தையைக்கேட்டு அடா நான் உங்களுடைய அடங்காத ஆண்மைக்கு முடிவும், பொல்லாதவர்களாகிய நீங்கள் பிரஹ்மாதி தேவர்களைநோக்கித் தவஞ்செய்து பெற்ற வாள் முதலாகிய ஆயுதங்களுக்கு முடிவும்வந்து சம்பவிக்கத்தக்க வுபாயத்தைத் தேடிவந்திருக்கின்றேன். என்னுடைய புஜபராக்கிரமத்துக்கு ஒருபோதும் முடிவே யில்லையென்று வாயுபுத்திரருஞ் சொன்னார். அப்போது மேகநாதன் இந்த எண்ணத்தைக் கெடுக்கிறேனென்று சொல்லி அநுமானுடைய திருமேனியில் உதிரமொழுக வும், அதைப்பார்த்துத் தேவர்கள் உடல்பதைக்கவும், வச்சிராயுதத்திலும் அதிக வலிமையையுடைய பாணங்களை வில்லிலே பூட்டிப் பிரயோகித்து அவர்சிரசிலும் மார்பிலும் அழுத்தினான். அழுத்தவே ஆஞ்சநேயர் கோப மூண்டு ஆகாசம் குறுகியிருக்கின்றதேயென்று நினைத்துத்தாமுங் குறுகிய வுருவத்துடனிராமல், அதிலும் பெரியவுருவமெடுக்க வேண்டுமென்று, சிறிய தாயினுடையவாய்மொழியைச் சிரசின்மேற்கொண்டு ராஜ்யத்தைத்தம்பிக்குக் கொடுத்துத் தபோமார்க்கத்தில் நிற்கின்ற, தம்முடைய நாயகனாகிய ஸ்ரீராமச் சந்திரனுடைய கீர்த்தியைப்போல நீண்டு உயர்ந்த விசுவரூபங்கொண்டார். அப்படி விசுவரூபங்கொண்டு நின்ற அநுமானை இந்திரஜித்துபார்த்து அவரு டைய பாதிச்சரீரமாத்திரந் தெரியக்கண்டானேயல்லாமல் முழுதுந் தன்கண் ணுக்குத் தெரியும்படிக் காணாமையால் மனந்திகைத்தவன்போல ஆச்சரியப் பட்டான். சுத்தவீரராகிய ஆஞ்சநேயர் தம்முடைய நீண்டகைகளை எதிரே நீட்டி அவன் எய்த அஸ்திரங்களெல்லாம் தம்மேல்வந்துபடாமல் திரும்பிப் போய்விழும்படி தட்டி வீசிவிட்டு, அவனுடைய ரதத்திற்கட்டியிருந்த பேய் களாகிய புரவிகளும் சாரதிகளும் மண்ணிலேவிழுந்து மாயும்படி அறைந்தார். அறைந்த அறையினால் தேரழிந்தது, உடனே யுகாந்தகால மாருதத்திற்குச் சமானமாகியவேகத்தையுடைய குதிரைகள்கட்டிய ஒருதேர்வந்து உதவியது. இந்திரஜித்து அதன்மேற்பாய்ந்தேறி மேன்மேலும் பாணங்களைப் பிரயோ கஞ்செய்து அந்தப் பாணங்களினாலேயே ஆஞ்சநேயருடைய திருமேனியை மறைத்தான். அவனெய்த பாணங்களெல்லாம் அவர் மார்பில்வந்து புதைந் தன. புதைந்தமாத்திரத்தில் ரோமங்கள் உதிர்வதுபோல அந்தப்பாணங்கள் அத்தனையும் பலபலவென்று உதிரும்படி உதறிவிட்டு அவன் தேரின்மேலே

ழும்பிக்குதித்து, உலகமுழுமையும் ஜயங்கொண்ட அவனுடைய அபாரமாகிய வில்லைத்தமதுகையா லெட்டிப்பறித்து மடமடவென்றுமுறியும்படி ஒடித்தெறிந்தார். அந்தவில்முறிந்த ஓசைபோயடங்குகிறதற்கு முன், பூர்வகாலத்தில் வச்சிராயுதத்தினால் மலைகளின் சிறகுகளைக்கண்டித்த இந்திரனானவன், போரிலே தனக்குப்பயந்து எறிந்துவிட்டுப்போன பிரசண்டதநுசு ஒன்றிருந்தது. அதை மகா உக்கிரத்துடனே எடுத்து நிறுத்தி யிழுத்து வளைத்து நாரிபூட்டி விரலால் முறிக்கித்தெறித்து வடித்துக்கூரிட்டுக் கடைந்து தைலதௌதம் பண்ணி விஷம்பூசி யிருக்கின்றவையாகிய நூறு நூறு பாணங்களை, ஒவ்வொருகோவையாகக்கோத்துச் சரசரவென்று மழைபொழிகிறதுபோல இறைத்து பொழிந்தான். அவைவந்து சுறீல்சுறீலென்று அநுமானுடைய சரீரத்தில் தைத்துப் பலவிதகாயங்களைச் செய்ய ஸ்ரீராமதூதரானவர் சற்றுநேரம் ஆயாசங்கொண்டிருந்தார். அதுகண்டு தேவர்கள் அறிவழிந்து துக்கப்பட்டார்கள். பின்பு மாருதியானவர் சோகம் நீங்கி ஒருபெரிய மராமரத்தை யெடுத்துச் சுழற்றிக்கொண்டே அவனுக்கெதிரேநடந்து, அவன்விடுகிற பாணங்களையெல்லாம் விசிறியடித்துத் தூள்தூளாக்கித் தள்ளிவிட்டுப்போய் அந்த மரத்தினாலே அவனுடையதலையின்மேல் ஓங்கி அடித்தார். அந்த அடிபடவே தேவர்களையெல்லாந் தூரத்தியடித்த இந்திரஜித்துத் தன்கிரீடம் உடைந்து விழும்படித் தலைபிளந்து மலையருவிபோல ரத்தம்பெருகிப்பாய, மெய்தளர்ந்து மனங்கலங்கிப் பிரமைகொண்டிருந்தான். அவ்வண்ணமாயிருந்து தெளிவுவந்தமாத்திரத்தில் பற்கடித்து மீசைபடபடவென்று துடிக்க அதிககோபாவேசங்கொண்டு, தேவர்களும் அசுரர்களும் முனிவர்களும் திகைக்கப்பர்வதம் போல எதிரே நிற்கின்ற அநுமானுடைய மார்புங்கலங்கத் தோளுங்குலுங்க, ஒன்றைப்போல மகா கடோரமாகிய ஆயிரம்பாணங்களை வில்லிலேபூட்டி றிவ்றிவ்வென்று போய்த்தைக்கும்படி யெய்தான். அவனெய்த பாணங்கள்வந்து மார்பிலும் தோளிலும்பதியவே மாருதியானவர் மனங்கசந்து மிகவுங்கொதித்துச் சாவேகத்தைப்பார்க்கிலும் அதிகவேகத்தைக்கொண்டு பாய்ந்து அவன் தேரையொரு சுண்டைக்காயைப்போல எளிதாக எடுத்து, ஆகாசத்திற்போம்படி எறிந்து கர்ஜித்துக்கொக்கரித்தார். அப்படி அநுமானெறிந்த விசையினால் அளவிறந்த புஜபலத்தையுடைய சத்துருவாகிய இந்திரசித்துக்கண்ணின் மேலிமையானது கிழ்மையுடனே வந்து தட்டுதற்குமுன்பாக, தேருடனே ஆகாசம் எவ்வளவு உயரமோ அவ்வுயரத்திற்குமேலும்போய் அங்கிருந்து பூமியில்வந்துவிழுந்தான். அவன் விழுந்தது விழாததற்கு முன்னே தேரைவிட்டு ஆகாசத்தி லெழும்பினான். அப்போது அவனுடைய சேனையிலிருந்த நவரத்னமயமாகிய சேமத்தேர்களையெல்லாம் ஒருஉழுந்து உருள்கின்ற பொழுதுக்குள்ளே ஆஞ்சநேயர்உதைத்து, அச்சுவேறு ஆணிவேறாகும்படிசிதைத்துவிட்டார்.

பின்பு ஏறுகிறதற்குத் தேரில்லாமலும் எதிரேநின்று போராடுகிறதற்குப் பலமில்லாமலும் சங்கடப்பட்டு அவன் வேறொன்றுஞ்செய்யக் கூடாமையினாலே தனக்கு அவமானம்வந்து சம்பவித்ததேயென்றுநினைத்து விஷசர்ப்பம்

போலச் சீறி அதிககோபங்கொண்டு அங்குமிங்கும் உழன்று இனி ஏதுசெய்கி றது நம்மிடத்தில் பிரஹ்மபாசமொன்றுதானேயிருக்கின்றது. அதுவும்இப்படிப் பட்ட ஆபத்துக்காலத்தில் உதவாமல் மற்றென்னதான் செய்ய விருக்கிறது. அதையாவது பிரயோகஞ் செய்வோமென்று உத்தேசித்து, அதற்குப் புஷ்பம் சந்தனம் தீபம் தூபமுதலானவையுங்கொடுத்துச் சோடசவுபசாரத்துடனே மானஸ்யமாகப் பூஜித்து, தேவர், மானிடர், நாகர், மிருகம், பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, ஸ்தாவரமென்கின்ற எழுவகைத்தோற்றங்களையும் உண்டாக்கிய சதுர்முகபிரஹ்மாவினுடைய வரப்பிரசாதத்தினாற்பெற்ற அந்தப் பிரமபாசத் தைக்கையிலெடுத்து, வெற்றிவில்லிலேதொடுத்துஅநுமானுடையதோளுக்குச் சரியாக லக்கும்பார்த்து மண்ணும்நடுங்க, விண்ணும்நடுங்க, திக்குகளும்நடுங்க, மேருவும்நடுங்க, அதைக் காதளவு இழுத்து அபிமந்திரித்து விட்டுவிட்டான். விட்டவுடனே தடுக்கப்படாத அந்தப் பிரஹ்மபாசமானது அக்கினியைக் கக்குகின்ற கோபக்கண்களையுடைய நாகக்கூட்டங்களுக்கு ராஜாவாகிய ஆதி சேஷனுடைய உருவத்தைக்கொண்டு, பன்னகவைரியாகிய கருடனும் திடுக் கிட்டுநடுங்கும்படி விஷஜுவாலையுடனே பிரசண்டவேகமாய்வந்து, ஆஞ்சநேய ருடையதோள்களை இறுக்கிநெருக்கி ஒடுக்கிவளைத்துச்சுற்றிக்கட்டியது. அந்தப் பாசமானது மகா திடம்பொருந்திய தமது சரீரத்தைக்கட்டி யுபத்திரவப்படுத் தவே வாயுகுமாரர் தம்பின்னே தொடர்ந்துவந்த தர்மதேவதை கண்ணீர்விடும் படி, தேகஸ்மரணையில்லாமல் சுவர்ன்னமயமாகிய தோரணஸ்தம்பத்துடனே கற்பாந்தகாலத்தில் ஆதித்தியாதி கிரகங்களுடனே சந்திரன் சாய்ந்ததுபோலச் சாய்ந்தார். இவ்விதமாகச் சோர்வுற்றுச் சாய்ந்தவர் கொஞ்சம் பிரக்கியை யுண்டாய் இதுநம்மை வருத்தவேண்டிய காரணமென்னவென்று யோசித்து பிரமனுடைய வரப்பிரசாதமாய் இவனுக்குவந்த பிரமபாசமாக வேண்டுமெ ன்று நிச்சயித்தறிந்து மற்ற அஸ்திரசஸ்திரங்களைப்போல இதை அவமதித்து நடக்கிறது நமக்கு யுக்தமல்லவென்று நினைத்து ஸ்ரீராமபத்திரனை மனத்திலே தியானித்துக்கொண்டு கண்களைமூடினபடியே அசைவற்றிருந்தார். அப்போது மேகநாதனென்பவன் இந்தமட்டிலே குரங்கினுடைய வலிகுன்றி ஓட்டம் ஆட்ட மெல்லாம் அடங்கிவிட்டதென்று சமீபத்தில்வந்தான். வந்தபோது அதற்கு முன்பயந்தோடிப்போய் அங்கங்கேபதுங்கிச் சமயம்பார்த்திருந்த ராக்ஷசர்கள் கொக்கரித்து ஓடிவந்து சுற்றிக்கொண்டு அநுமானுடைய சரீரத்தைச் சுற்றி யிறுக்கிக்கொண்டிருக்கிற சர்ப்பரூபமாகிய பிரமபாசத்தின் வாலையுந்தலையை யும் பிடித்திழுத்தார்கள். அந்தச்செய்திகேட்டுக் குரங்கினுடைய பலமழிந்த தென்று லங்காபட்டணத்தி லுள்ளவர்களெல்லாம் ஒருகூட்டமாகக்கூடிவந்து கைகொட்டிக் கூத்தாடியிரைச்சலிட்டார்கள். அதனால் அந்தலங்கையானது சமுத்திரத்தையொத்திருந்தது. அநுமானைக்கட்டிய பாசமோ மந்தரகிரியிற் சுற்றிய வாசுகியென்னும பாம்பையொத்திருந்தது. இராக்கதர்களே அமிர்தங் கடைந்த தேவர்களையொத்திருந்தார்கள். ஆஞ்சநேயரோ மகத்தாகிய பர்வதத் தையொத்திருந்தார். கறுத்தபாம்புருவமாகிய பாசமானது தமதுபொன்னொ த்த மேனியைக்கட்ட, தர்மதேவதைக் கொருதுணையாயிருக்கின்ற அநுமா

ருனவர், பூர்வத்தில் வாயுமோதியடித்தது கண்டு வாசுகி தன்னுடலைக்கொண்டு சுற்றும்படிச் சலனமில்லாமலிருந்த மகாமேருவைப் போலவுமிருந்தார். அந்தரத்தினும் மேகமண்டலத்திலும் அஷ்டதிக்குகளிலும் ராக்ஷசர்களும் ராக்ஷசிகளும் பின்னும்வந்துமொய்த்துகொண்டு மழைபோல ஆரவாரித்தார்கள். அவர்களுக்கு அப்பொழுது உண்டாகிய சந்தோஷத்திற்கு ஒருமுடிவேயில்லை. அதைக்குறித்துச் சொல்லுமிடத்தில் இந்த மேகநாதனெனவன் தேவேந்திரனைப்பிடித்துக் கட்டிக்கொண்டு வந்தபோது லங்காபுரியானது எப்படிச் சந்தோஷித்ததோ அப்படியேயன்றுஞ் சந்தோஷித்ததென்று சொல்லலாம்.

பாசப்படலம்
முற்றிற்று.

---

## பிணிவீட்டுப்படலம்.

சகலமானவர்களும் இந்தக் குரங்கு கெட்டது இதை எய்யுங்கோள், பிளவுங்கோள், வெட்டுங்கோள், பீறுங்கோள், அரியுங்கோள், குடலைக்கூறுகூறுக்குங்கோள், மண்ணிலிட்டுத் தேயுங்கோள், தின்னுங்கோள், இது பிழைத்ததே யாமாகில் நம்முடைய பிராணனை மாய்த்துவிடுமென்று சொல்லிக்கொண்டு ஓடிவருகின்றார்கள். சிலபேர்கள் இது இந்த ஆயுதங்களினாலெல்லாஞ் சாகத்தக்கதா? இதைக்கடலிலே கொண்டுபோய் அமிழ்த்தி வச்சிராயுதத்தையெடுத்து உச்சியில்வைத்து அழுத்துங்கோள், அப்படியல்லவென்றால், நெருப்பை மூட்டி அதிலே தள்ளிவிடுங்கோளென்று கோபிக்கின்றார்கள். அநேகம் நிசாசரப்பெண்களும் புருஷர்களும் ஓடிவந்துபார்த்துப் பாம்பைப்போல மனங்கொதித்து, இந்தத் துஷ்டப்பையலை இவ்வளவு காலதாமசமாக உயிருடனே வைத்துக்கொண டிருக்கிறதாவென்று சொல்லிக் கொலைசெய்யப் பிரயத்தினப்படுகின்றார்கள். அநேகம்பேர்கள் பாவிக்குரங்கே நீ எங்கள் தகப்பனையும், எங்கள் தம்பியையும், எங்கள் தமையனையும், எங்கள் பிள்ளைகளையுங் கொன்று உன்வாயிலேபோட்டுத் தண்ணீர்வார்த்துக்கொண்டையே! அவர்களை எங்களுக்குக்கொடுத்துவிட்டு அப்புறம்போ அதற்குமுன் உங்களப்பாணை போகக்கூடாதென்று குறுக்கேநின்று தடைசெய்கின்றார்கள். அநேகம்பேர்கள் இவன் சுவர்க்கத்திலிருக்கின்ற இந்திராதிதேவர்கள் ஆஜ்ஞாபிக்க வந்தவனாகவேண்டுமென்று கொல்லுகிறதற்கு அஞ்சுகின்றார்கள். அநேக ராக்ஷசஸ்திரிகள் வயிற்றில் அறைந்துகொண்டுவந்து மலைபோலச்சலியாத பலத்தினையுடைய எங்கள் பிராணநாயகர்களை இதுவரையில் நாங்கள்பிரியாமலிருந்தோம் இந்தக்கொலைப்பாதகனால் இன்றுடனேபிரிந்தோம் ஆகையால்அதைக்குறித்து இனித்துக்கிக்கிறதேயில்லை. இவன் சிரசு அற்றுப் பூமியில்விழ அதன்மேல் நாங்களேறியிருந்து அதை எங்கள் காலினால் மிதித்தாலல்லது தாலிவாங்குகிறதேயில்லையென்று சொல்லுகின்றார்கள். அநுமானை யிழுத்துக்கொண்டுஎதிரே வரும்போது லங்கையிலுள்ளவர்கள் கண்டு சந்தோஷத்தினால் அண்டகடாக

மட்டும் அளாவும்படி ஆர்ப்பரிக்கின்ற சப்தத்தைக்கேட்டுக் கண்டதுண்டமாக மாண்டுபோன தங்கள் நாயகன் மார்களுக்காக அழுதுகொண்டிருந்த ஸ்திரீகளுந் துக்கம் நீங்கிச் சந்தோஷித்தார்கள்.

அநுமானனவர் நிருதவீரர்களையும் யானைகளையும் தேர்களையும் குதிரைகளையும் தாம் எடுத்தெறிந்ததனுல் இடிவிழுந்து சிதைந்துகிடக்கிறமலைகளைப் போல, உப்பரிகைகளெல்லாம் இடிந்து பொடிப்பொடியாய்க் கிடக்கின்றதை இலங்காபுரி வீதியில் கண்டுகொண்டேபோனுர். ராக்ஷச ஸ்திரீகள் அநுமானுடைய தோளிற்கட்டிய கயிற்றைக்காணுமல் ஐயோ! அந்தக் குரங்கு இங்கும் வந்துவிட்டதே என்ன செய்வோமென்று வயிற்றிலடித்துக்கொண்டு ஓடுகிறதைக்கண்டு அநேகர் மயங்கினுர்கள். அநுமான் கோஷிப்பதனுல் அநேகர் பேசப்பயந்து வாயைத்திறவாமல் அடங்கியிருந்தார்கள். சிலர் ஆஞ்சநேயர் செய்த யுத்தசமாசாரத்தைக் குறித்துப்பேசத் தலைப்பட்டார்கள். சிலர் அவருடைய ஸ்தூலகாத்திரத்தைப் பார்க்கப் பார்க்கப் பயப்பிராந்தி யதிகரித்ததனுல் பதைபதைத்து ஊரின் புறத்தில் வலசைவாங்கிப் போனுர்கள். சிலர் அக்கினிச்சுவாலை வீசுகின்ற விஷப்பல்லையுடைய நாகபாசங்கட்டிய கட்டை ஒரு புஷ்பமாலையைக்கொண்டு கட்டியதுபோல லேசாகஎண்ணி, இந்தக்குரங்கினுடைய முகமானது வாடாமல் அதிக தேஜசுடனே யிருக்கின்றது ஆகையால், நீங்கள் செய்வதை பயன்படும்படிச் செவ்வையாய் ஆலோசித்துச்செய்யுங்கோள். திடீரென்று நம்முடைய ராசாவினிடத்திலே கொண்டுபோய் விடுவது நன்மையல்ல வென்ருர்கள். சிலர் இது இத்தனை யெளிதாய்வருகிறது இந்த நாகபாசத்திற்குப்பயந்தல்ல என்ன நிமித்தமோ வேண்டுமென்றே அகப்பட்டுக்கொண்டது ஆயினும், இதனெண்ணம் வேருயிருக்கலாமென்று நினைத்துஅநுமானைப்பார்த்து ஓய் மகாபுருஷனே! எங்களைச் சந்தோஷசித்தமாய்ப்பாரும் கோபிக்கவேண்டாமென்று தண்டமிட்டார்கள். பலர் மகா பலிஷ்டர்களாகிய அரக்கர்களுடைய செருக்கையழிக்கும்படி எமனுனவன் தன்னுடைய உருவத்தை மறைத்து, வானரத்தின் உருவத்தைக்கொண்டு போர்செய்ய வந்தானே? என்ருர்கள். பலர் கைலாசமலையி லெழுந்தருளியிராநின்ற மழுவாளியானவர் சீதாபிராட்டியினுடைய கற்பின்மகிமையால், ஒரு குரங்குவடிவெடுத்து இந்த லங்கையை அழிக்கவந்தாரோ யல்லாமல் இது சுபாவமாகிய குரங்கல்லவென்ருர்கள். பலர் க்ஷீரசாகரத்தில் திருக்கண்வளர்ந்தருளாநின்ற ஸ்ரீமகாவிஷ்ணுவும் மூலதாமரையில் உற்பத்தியாகி உலகங்களைச்சிருஷ்டித்த பிரஹ்மாவும், நம்மைப்பகைத்துத் தங்களுக்குரிய சுயரூபத்தைமாற்றி இந்த ஒருகுரங்கின் வடிவத்தைக்கொண்டு பூமியில்வந்தார்களென்ருர்கள். கும்புகும்பாய் ஸ்திரீகளும்புருஷர்களும் நிலாமுற்றந்தோறும், சுவர்னமயமாகிய மாளிகைகள் தோறும், சாளரங்கள் தோறும், வாசல்கள்தோறும் கூடிநின்று பார்க்கத்தலைப்பட்டார்கள். தேவதாஸ்திரீகளும், விஞ்சையஸ்திரீகளும், நாகஸ்திரீகளும், சித்தஸ்திரீகளும், யக்ஷஸ்திரீகளுமாகிய அளவிறந்தபேர்கள் அணியணியாக எங்குநெருங்கிச்சூழ்ந்தார்கள். ராக்ஷசர்களும் ராக்ஷசி

களும் தவிர மற்றவர்களெல்லாம் சீதாபிராட்டியாருடைய துக்கத்தைப் பார்த்தோ? அலலது இரக்கத்தினலேயோ? அல்லது தர்மம் இளைத்துப் போய்விட்டதென்றே? பகிரங்கமாகக் கண்ணீர்விட் டழுதார்கள். கருடனைப்பார்க்கிலும் மூன்றுபங்கு விசேஷமாகிய பலத்தினையுடைய கிங்கரர்கள் ஐம்பதினாயிரம்பேர்கள் அநுமானைக்கட்டிய பாசத்தை இறுகப்பிடித்து இழுத்துக்கொண்டுபோனார்கள். அவர்கள் இழுத்துக்கொண்டுபோம்பொழுது பராக்கிரமச் செய்கையையுடைய ஆஞ்சநேயர் அவர்களைப் பேதித்துக்கொண்டு அப்புறம் மீண்டுபோகாமலும், இதுசெய்யவேண்டுமென்னும் விருப்புவெறுப்பில்லாமலும் லங்காதிபதியாகிய ராவணனைக்காண்கிறதே யுக்தமென்று மனத்திலே நினைத்து அவர்களுடனே கூடப்போனார். என்பிதாவாகிய வாயுபகவானுடைய கிருபையினாலும் ஸ்ரீராமபிரானுடைய திருவடித்தியானபலத்தினாலும், தேவர்கள் பூர்வம் எனக்குக்கொடுத்திருக்கின்ற வரத்தினாலும் இந்தப் பிரமபாசத்தைக் கண்டதுண்டமாகச் செய்வேன் ஆயினும், அப்படிச்செய்யாமலிருக்கிறதே சர்வோத்தமமென்றும், வக்கிரதந்தங்களையுடைய ராட்சசாதிபதியினிடத்திற்போய், அவனும் அவன் சமுகத்திலிருக்கின்ற மந்திரிமார் பிரதானிமார்களும் மற்றுமுள்ள பெரியோர்களும் அறியும்படி, எதார்த்தமாக இனிவினையும் விளைவைச்சொன்னல் ஒருவேளை மனந்தளர்ந்து பிராட்டியாரை என்வசமாகக்கொடுத்து விடவுங்கூடுமென்றும், அல்லாமலும் அவனுக்கு உபபலமாயிருக்கின்றவர்க ளின்னாரென்பதுந் தெரியலாமென்றும், அவர்களுடைய அபிப்பிராயத்தையுமறியலாமென்றும், ராவணனுடைய ஸ்திதியையும் மனக்கருத்தையும் அவன் முகக்குறிப்பே தூதாகசொல்லவுந் தெளியலாமென்றும், மேலும் வாலிமாண்டதும், மராமரம்பட்டபாடும், சுவாமிக்கு அநுகூலமாயிருக்கின்ற வானரசைநியத்தின்பலமும் மிகுதியும், சுக்கிரீபனுடைய ஆண்மையும் பெருமையும், அவன் புத்திரனாகிய அங்கதப்பெருமானுடைய பராக்கிரமமும் நம்மாலேசொல்லக் கேள்விப்பட்டால் ராவணனுடைய மனத்தில் உறுத்துமாகையால், அந்த ராக்ஷசேந்திரனுக்குச் சமீபத்திற்போய் ஆண்மையையும் நீதியையும் அவன்மனத்திலே கொள்ளும்படி நிறுத்தி, அதற்குச் சம்மதியாமற்போனல் அப்புறம் அவனிடத்தில் இன்னம் இறவாமலிருக்கின்ற சேனைகளில் பாதிக்கு மேற்படக்கொன்று குவித்துவிட்டு, மெதுவாய்ப்போய்விடுகிறதே காரியமென்றும் தீர்க்கமா யாலோசித்துச் சித்தப்படுத்திக்கொண்டதுமல்லாமல் தம்முடைய புஜபலத்தின் சத்துவமொன்றையுங் காட்டாம லடக்கிக்கொண்டும்போனார். இந்திரஜித்துவும் சேனசமுத்திரமானது நாற்புறத்திலும் மொய்த்துச் சுற்றிக்கொண்டுவர ஒரு ரிஷபமானது கட்டுப்பட்டு வருகிறது போலக்கட்டுப்பட்டு வருகின்ற அதிவீரனுகிய அநுமானை ஏகசக்கரத்தையுடைய ராவணேசுவரன் இருக்கின்ற அரண்மனைக்குக் கொண்டுபோனன். அப்போது தூதர்களோடி ராவணனைச் சேவித்துச் சுவாமி தேவரீருடைய ஜேஷ்டபுத்திரர் யுத்தஞ்செய்து பிரமபாசத்தைவிட அதில் அந்தக் குரங்கு அகப்பட்டுக் கட்டுப்பட்டதென்று சொன்னர்கள். அந்த வார்த்தை கேட்கவே மனத்திலதிக சந்தோஷமாய்ச் சூரியன் நீங்கிய ஆகாசம்போலத் தன்

மார்பின் பிரகாசமாறி இருள்சூழும்படி, அதிலணிந்திருந்த கோடிசூரிய பிரகாசமாகிய ரத்னகாரத்தைக் கழற்றி அந்தச்செய்தி சொன்னவர்களுக்குக் கொடுத்தான். பின்னும் அளவில்லாத மகிழ்ச்சியினால் தன் தோள்கள் பூரித்து அவர்களைத் தன்கண்கள் மலரப்பார்த்து, சீக்கிரத்தில் நீங்கள்போய் அந்தக்குரங்கைக் கொல்லாமற் கொண்டுவர நான் சொன்னதாகச் சொல்லுங்கோளென்று சொல்லியனுப்பினான். அந்தச்சொல்லைத் தூதர்கள் ஓடிவந்து இந்திரஜித்து அறியும்படிச்சொன்னார்கள்.

அச்செய்தி இப்படி நடந்துகொண் டிருக்கும்போது ஆஞ்சநேயர் அசோகவனத்தை யழித்தாரென்றும், மிதமற்ற ராக்ஷசர்களை மாயும்படிக் கொன்றாரென்றும், அப்போதுக் கப்போது கேள்விப்பட்டுச் சந்தோஷித்துக்கொண்டிருந்த பிராட்டியார், அநுமான் இந்திரஜித்துவின் கையிற் சிக்கிப் பாசத்தாற்கட்டுண்டு இழுத்துக்கொண்டு போகப்பட்ட சமாசாரங்கேட்டு உயிர்சோரும்படி நிலத்தில்விழுந்து மாணிக்கப்பிரதிமையானது புகைசூழப் பட்டதுபோல மிருதுவாகிவிளங்குகின்ற திருமேனியிற் புழுதிபடியப் பாபாத்துமனாகிய வேடன் கையில் தன்குஞ்சு பிடிபட்டுப்போகக் கண்டு, தாயாகிய அன்னப்பேடு துக்கிப்பதுபோல மகத்தாகிய வருத்தத்துடனே பிரலாபிக்கத் தொடங்கினார். அப்பனே! என்கண்மணியாகிய ஆஞ்சநேயா! அநுமானே! அடுக்கடுக்கா யிராநின்ற அண்டங்களெல்லாம் ஊடுருவவளர்ந்து அவ்வண்டங்கள் முழுமையும், உன்னுடைய உருவத்தில் மறையும்படி ஓங்கி நின்றாய் வேதம்வேதாங்கம் சாஸ்திரம் புராணம் ஆகமமுதலான வற்றையும் சாங்கோபாங்கமாகக் கற்றுணர்ந்தாய். இப்படிப்பட்ட மகிமையையுடையநீஒரு கள்ளனாகிய ராக்ஷசனாற்பிடியுண்டுபாசத்தாற்கட்டுண்டையே இதுதானோ தர்மநீதியென்பது. புஜபலபராக்கிரமத்தையுடைய நீ என்னைத் துக்கத்தில் நின்றும் ஈடேற்றும்படி சமுத்திரத்தைக்கடந்து இந்தலங்கைக்கு வந்து, இங்குள்ள ராக்ஷசர்களுடைய சரீரங்களைச் சின்னாபின்னப்படுத்தியும் உனக்கு ஒருதுன்பமில்லாமல் ஜீவித்திருந்தாய், இப்போதுமுன்னிருந்தவருத்தத்திலும்அதிகவருத்தத்தைஎனக்குஉண்டாக்கினாய் ஸ்ரீ நாயகருடையதிருவாழியைக்கொண்டுவந்து காட்டி நீஎன்பிராணனை இரட்சித்தபடியினாலே, கற்பாந்தகாலபரியந்தம் இறவாமல் சிரஞ்சீவியாயிருக்கும்படி உனக்கு நான் வரங் கொடுத்தேன். அதுவே என்றைக்குமழியாது, அதிருக்கட்டும் இன்னமொன்றுண்டு என்னவென்றால், பர்வதத்திற்கு ஒப்பாகிய உன்புஜபலத்தைக் காட்டப்போய் உடனே பெரிதாகிய அபகீர்த்தியை விளைத்தாய். மேலும் நீ என்னைக்கண்டு கொண்டுபோய் என்பிராணநாயகராகிய அந்தபுருஷோத்தமரிடத்திற்சொல்லி நானிருக்குமிடத்தை யவருக்குக்காட்டி அவரை யழைத்துவர, அவர்வந்து இந்தக்கொடிய பாபிஷ்டர்களாகிய ராவணாதி ராக்ஷசர்களை யுத்தத்தில் சங்காரஞ்செய்து என்னைச் சிறைமீட்டுக்கொண்டு போவாரென்று நினைத்திருந்தேன். அக்காரியத்திற்குந் தடைசெய்தாயென்று இவ்விதமாகச் சொல்லிச்சொல்லித் தன்னுயிர் தேயும்படி இளங்கன்றைப் பறிகொடுத்த தாய்ப்பசு

வைப்போல, உடல்தளர்ந்து மதிமயங்கினர். தீயையுஞ்சுடுகின்ற கற்பினை யுடைய சானகியார் உடல்தளர்ந்து மதிமயங்கிய அந்தச்சமயத்திலே மகாத்மா வாகிய அநுமனைக் கட்டிக்கொண்டுபோகிய இந்திரஜித்து அருமையாகிய தபோபலத்தினல் திரிலோகங்களையும் தன்வசமாக்கிக்கொண்டு, தானே ஏகசக்கரமாக அரசாட்சிசெய்கின்ற பிரதாபலங்கேசுவரன் வீற்றிருக்கின்ற சபாமண்டபம்போய்ச்சேர்ந்தான்.

அத்தருணத்தில் அந்த ராவணேசுவரன் எப்படி யிருக்கின்றானென் றால் பரலோகம், பூலோகம், பாதாள லோகமாகிய மூன்றுலோகத்திற் கும், வேறொரு பூரணசந்திரன் குறைவில்லாமல் தழைத்து உதயமாகி யது போலவும், முன்னாளில் தான் பூமியினின்றும் ஆகாசத்தில் உய ரத்தூக்கிய வெள்ளிமலையைப் போலவும், முத்துச்சரங்கள் தொங்கவிட் டிருக்கின்ற வெற்றிக்குடையானது சிரசின்மேல் குளிர்ந்த நிழலைப் பரப் பித் தாவள்யமாய்ப் பிரகாசிக்கவும், கருடத்துவஜத்தையுடைய ஸ்ரீமகா விஷ்ணுவின் சக்கரமும், சிவனுடைய மழுவும், இந்திரனுடைய வச்சிராயுத மும், வந்துதாக்கிய வடுக்களும், மதனலீலாசம்பிரமத்தில் ஸ்திரீகள் தங்க ளுடைய வாள்போலுங் கூர்மையாகிய விரல்நகங்களினல் செய்யும்வடுக் களும் தோள்களிற்பிரகாசிக்கவும், தலைகளிலுள்ள சிவந்த மயிர்க்கற்றைகளே அக்கினிக்கொழுந்தாய், கோபத்தினல் பெருமூச்சுவிடுந்தோறும் வாய்களிலும் மூக்குகளிலும் இருந்து கொண்டல்கொண்டலாய்ப் புகையெழும்பத் தென் திசையிலும் ஒருவடவாமுகாக்கினியை வைத்ததுபோலப் பிரகாசிக்கவும், பத்துக்கிரீடங்களிலும் பதித்திருக்கின்ற மரகத ரத்னகிரணகாந்தியும், மாணிக் கத்தின்சோதியும், நரகங்களிலுள்ள இருளையும் ஓட்டும்படிப் பிரகாசித்தலால், ஆதிசேஷனனவன் தன்பணாமுடிகளைத் திசைகள்தோறும் பரப்பிக்கொண்டு அரசிருக்கிறதுபோலவும், பலவித ரத்னபரணங்களும், பீதாம்பரமும், இருபது தோள்களிலும் அணிந்த புஜகிருதிகளும் பிரகாசிக்க, மகாமேருவையே சுவர் ணமகுடமாகத் தரித்துக்கொண்டு கருங்கடலானது திரண்டு எழுந்து உட்கார் ந்திருப்பதுபோலவும், இருளானது கரசரணாதி அவயவங்களோடு உருப்பட் டுச் சந்திரனாகிய வெண்பட்டுக்குடைநீழலில் நட்சத்திரங்களாகிய முத்தாரத் தைப்பூண்டு அந்திவானமாகிய செம்பட்டாடையை உடுத்து வீற்றிருப்பது போலவும், ஔதாரியத்திற்கும், வேதமுதலாகிய சகலகலைகளுக்கும், சௌரி யத்திற்கும் வாசஸ்தானமாகிய தன்முகங்களில் விளங்குகின்ற கண்களால் எட்டுத்திசைகளையும் பார்க்குந்தோறும் அந்தந்தத் திசைகளிலிருக்கின்ற திக் கஜங்களுக்கும், இந்திரன் முதல் ஈசானன்வரையிலுள்ள திக்குப்பாலகர்களுக் கும், பிரம விஷ்ணுக்களுக்கும், மகத்தாகிய பயம் ஜனிக்கவும், சர்வேசுவர னாகிய ஸ்ரீராமச்சந்திரனுடைய தேவியாரைத் தான் கண்டபின்பு நாகலோக முதல் சத்தியலோக பரியந்தமாகிய சகலவிடங்களிலுமுள்ள ஸ்திரீகளின் இச்சை இல்லாதிருக்கிறபடியினாலே அவர்களெல்லாம் புருஷபாவகமாய்த்

தன்னை நீங்காமற்சூழ்ந்திருக்கவும், வானரங்களும், ஸ்ரீராகவனும், இளையபெரு மாளும், தன்னால் மிகவும் அற்பமாக எண்ணப்பட்ட மனிதர்களும், முனிவர் களுமாகிய சிலர் தவிர மற்றதேவர்கள்முதலாகிய யாவரும் ராக்ஷசக்கூட்டங்க ளோடுந் தன்னைமொய்த்துச் சுற்றிப் பயபக்தியுடனே பணிவிடைசெய்யவும், ஒருபக்கத்தில் யாழும், கைத்தாளமும், சல்லரியென்னும் வாத்தியமும், குற டென்னும் வாத்தியமும் முழங்கத் தேவஸ்திரீகள் தன்னுடைய செவிகள் தோறும்கேட்கும்படி அமிர்தஞ்சொரிவதுபோலப் பாடல்களைப்பாடவும், மற் றொருபக்கத்தில் தாளவோசை மிருதங்கவோசையுடனே தொந்தப்படும்படி காலடிகளை மெல்லமெல்லவைத்து மிதித்து, அபிநயங்காட்டுகின்ற கையுடனே பார்வையும் மனமுந்தொடர்ந்துசெல்ல அருமையாகிய தவத்தையுடைய முனிவர்களும், பார்த்தால் பூரணமாகிய மோக்ஷானந்தத்திலும் விரக்தி தோன்றும்படி நடனஞ்செய்கின்ற மேநகையென்கின்ற தேவதாசியின்மேல் தனக்குக் குறுநகையுண்டாகவும், தன்னிடத்தில் பிணங்கியிருக்கின்ற ஸ்திரீ களின் முகத்தழகாகிய தேனைத் தன்பத்துமுகத்தில் ஒருமுகமானது உண்ண வும், தன்னைப்புணர்ந்தபெண்களின் முகத்திலுண்டாகிய சந்தோஷமென்னும் மதுவை ஒருமுகமானது பானம்பண்ணவும், பாடுகின்ற மதங்கியர்கள் முகத் தில் தோன்றிய பலவித ராகமாகிய அமிர்தத்தை ஒருமுகமானது குடிக்கவும், பரதநாட்டியஞ்செய்கின்ற கூத்தியர்களுடைய முகத்தில் காணுகின்ற அபிநய மாகிய சர்க்கரைப்பாகை ஒருமுகமானது பருகவும், தேவர்களுடனே கூடியிரு ந்து ஒருமுகமானது அரசியல் செலுத்தவும், மந்திரிமார் பந்துக்கள் சிநேகிதர் களாகிய முத்திறத்தார்களுடன் ஒருமுகமானது ஆலோசனைசெய்யவும், பாப கீர்த்தியத்தையுடைய தனது ஜாதிக்குரியகுணத்தை ஒருமுகமானது விடாது அநுசரிக்கவும்ஜானகியாருடைய உருவெளியை ஒருமுகமானதுகண்டுகொண் டிருக்கவும், சீதாபிராட்டியாருடைய கற்பாகிய கடலை யென்றைத் தினத்திற் கடந்தேறலாமென்று ஒருமுகமானதுநினைக்கவும் களபகஸ்தூரிகளை அணிந்த ஸ்தனங்களையுடைய மங்கையர்கள் தனக்கெதிரேயேந்துகின்ற கண்ணாடியில் ஒருமுகமானதுஅழகுபார்க்கவும், தன்னாலனுகப்படாத புதருக்குளிருக்கின்ற தேனைப்போயுண்ணுகிறதற்குப் பசிகொண்டலைகின்ற வண்டைப்போல ஜனக ராஜ புத்திரியின்மேல் தன்மனமானது சுழன்று செல்லுதலால்தங்களிடத்தில் சரசவிளையாட்டுகளைச்செய்யவில்லையென்றுசகிக்காமல்மனம்வெதும்பி, உடல் புழுங்கிக்கண்களில்ஜலம்பெருகத் துக்கிக்கின்ற ஸ்திரீகளுடைய கண்களாகிய கூரியவேல்கள்வந்து தோள்கள்தோறும் தைத்துருவவும், பரிமளபுஷ்பத்தின் மகரந்தப்பொடிகளைத்திமிர்ந்துகொண்டு தேனையுண்டுஸ்திரீகளுடைய ஸ்தனங் களில்அப்பியசீதளசந்தனக் குழம்பிலேமூழ்கித்தோய்ந்த இளந்தென்றலானது விஷத்தைப்போலஅடிக்கடிவந்து தன்சரீரத்தில் மன்மதபாணம்பட்ட புண் ணில்நுழையவும்,ஸ்திரீகளுடைய செவ்வரிபரந்தகண்கள்சூரியனைக்கண்ட தா மரையைப்போலத் தன்னைக்கண்டு மலர்ந்தபடியிருக்கவும், தேவதானவர்க ளுடைய கைகள் சந்திரனைக்கண்ட தாமரையைப்போலத்தன்முன் குவிந்த படியிருக்கவும் இப்படிப்பட்ட அநேகவித சம்பிரமத்துடனேயிருந்தான்.

அந்தப் பிரதாபலங்கேசுவரனை ஆஞ்சநேயர் கண்டார். காணவேபத்துத் தலை நாகத்தைக்கண்ட கருடனைப்போல மனங்கொதித்துத் தமது தோளினிடத்தில் இறுகக்கட்டியபாசத்தை அறுத்துவிட்டு ஆலாலவிஷத்தைப்போல இவன் மேற்பாய்ந்து கொல்லுவேனென்று ஆக்குரோஷமாய்ப் பெருமூச்செறிந்து ராத்திரி இவன் நித்திரைசெய்து கொண்டிருக்கக் கண்டபொழுது கொல்லுகிறது தர்மமல்லவென்று விட்டுவிட்டேன். இப்போது சபையிலே ரத்ன சிங்காதனத்திலிருக்கக் கண்டேன். ஆகையாலினிப் பலவித யோசனை செய்யவேண்டியதென்ன? இவன்மேல் சீக்கிரத்திலெழும்பிப்பாய்ந்து இவனுடைய பத்துத்தலைகளையும் உதைத்துச் சிதைத்துத்தள்ளிவிட்டு, ஜகன்மாதாவாகிய பிராட்டியாரை மீட்டுக்கொண்டுபோகிறதே காரியமென்று ததாயத்தமானார். அதிவீரதீரசூர பிரதாபசாலியாகிய ரகுநாயகனுடைய பிராணபதமாயிருக்கின்ற தேவியாரை எடுத்துவந்து சிறைவைக்கும்படிப் பார்த்துக்கொண்டிருந்த தேவர்கள் அசுரர்கள் முதலாகிய சகலருடைய கண்களுக்கும் முன்பாக இந்தப்பாபகாரியாகிய ராவணனுடைய மாணிக்ககிரீடத்தையணிந்த தலைகளைச் சின்னபின்னமாகும்படிப் பறித்தெறியாமற் போவேனேயானால் இனிமேல் நான்செய்யத்தக்க சேவகந்தான் என்னவிருக்கின்றது! இந்தப்படிமுடித்தால் உலகத்தாரென்னசொல்வார்களென்றால், பிராட்டியாரைத் தேடிக்காணவந்த ஒருகுரங்கானது ராவணேசுவரனுடைய பக்கத்திலிருந்து போகிப்பதற்குரிய நாயகிமார்களெல்லாம் பிரமித்து உள்ளே ஓடியொளிக்க அவன்சிரசுகளைத்திருகித் திக்குகள்தோறும் உருட்டி ஜயம்பெற்று ஆர்ப்பரிக்கின்றது. அம்மம்மா இது கொடிது கொடிதென்று சொல்லுவார்கள். அப்படிச் சொல்லுஞ் சொல்லென்ன எளிதாகக்கிடைக்கின்றதா? இந்தராக்ஷசேந்திரனைப் பிரத்தியக்ஷமாகக்கண்டுசிலசொற்களைச் சொல்லிவிட்டு இந்தஉயிரைச்சுமந்துகொண்டு திரும்பிப்போனால் அவசியம்அபகீர்த்திகிடைக்கும். அப்படிச்செய்யாமல் மேல்நினைத்தபடிச்செய்தால் நான்ஜயிக்காமற்போனாலும் இறந்தாலும் கீர்த்தி உண்டாகுமென்று நிச்சயப்படுத்திக்கொண்டு தோளினிடத்திற்கட்டிய பிரமபாசமானது இற்றுப் பொடிப்பொடியாய்ப்போம்படி பர்வதத்தின்மேல் தாவிப்பாய்கின்ற ஆண்சிங்கத்தைப்போல, இவன்மேலெழும்பிக் குதிக்கலாமென்று யோசித்தார். அப்படி யோசித்த ஆஞ்சநேயர் பொறுத்துநின்று உடனே வேறொருயோசனைசெய்தார். எப்படியென்றால் சர்வசங்காரகாலத்தின் இருளெல்லாந்திரண்டதற்கு ஒப்பாயிருக்கின்ற கறுத்த நிறத்தையுடைய இந்த ராவணனோ மகாபலவான், ஒருவராலே கொல்லுந்தரமுடையவனுமல்லன், வெல்லுந்தர முடையவனுமல்லன், இவனுடைய புஜபலமோ ஸ்ரீராமச்சந்திரனால் வெல்லப்படுமேயல்லாமல் பிறரால் வெல்லத்தக்கதா? இவனுக்கு என்னை ஜயிக்கிறதும் அருமையாகும். அல்லவென்று யுத்தஞ்செய்ய ஏற்பட்டால் தோற்புக்கெலிப்பில்லாமலே வெகுகாலம் வீணாகக்கழிந்துபோம். அதனால் போர்செய்யத் தொடங்குவது யுக்தமல்ல, அல்லாமலும் ஊழி முதல்வனாகிய ஸ்ரீராமச்சந்திரன் சப்தலோகத்தாரும் துன்பம் நீங்கி யின்பத்தையடைய அந்தத் திரிலோகபயங்கரனாகிய ராவணனுடைய இருபது

தோள்களையும் பத்துத்தலைகளையும், அஸ்திரத்தினால் அறுத்துத்தள்ளிப்புழுதி யிற்புரளும்படி செய்கின்றது என்னுடைய கடனென்று முன்பு குறித்துச் சொல்லிய வார்த்தையுமிருக்கின்றது. மேலும் நாம்சண்டைக்கு ஆரம்பித்துக் கொண்டு அதிலே வீண்பொழுதுபோக்கினால் பிராட்டியார் நம்முடனே இவ் விடத்தில் இன்னம் ஒருமாதபரியந்தந்தான் நான் பிராணனுடனிருப்பேனெ ன்று ஸ்ரீராமபத்திருடைய திருவடிசாக்ஷியாகச் சொல்லியிருக்கின்றதனால் அவர் எதார்த்தமாக இறந்துபோவார். ஆகையால் யுத்தஞ்செய்கிறது நன்மை யேயல்ல, நாம் தூதனாகவே பேசுகிறது யோக்கியமென்று நினைத்து, வேதநா யகனாகிய சக்கரவர்த்தி திருமகனுக்குத் துணைவராகிய ஆஞ்சநேயர் அந்த ரா வணனுக்குச் சமீபத்திற்போனார். ஸ்திரீகள் கூட்டத்தில் நடுவிலிருந்த தன் பிதாவாகிய தசக்கிரீவனுக்கு அநுமானைக்காட்டி இந்திரஜித்து சொல்லுகின் றான். ஐயா! உலகங்களெத்தனையுண்டோ அத்தனையும் ஜயித்த இரணியே சுரனைச் சங்கரித்த நரசிங்கப்பெருமானைப்போலவும், சங்காரகர்த்தாவாகிய சிவனைப்போலவும், மகாசேவகனாயிருக்கின்றவன் இந்தக் குரங்குருவத்தை யுடையவனென்றுசொல்லி இரண்டு கைகளையுங்கூப்பி நமஸ்காரஞ்செய்தான். அப்பொழுது கண்களிலும் வாய்களிலும் நெருப்புப்பொறிகள் குப் குப் திக் திக்கென்று எழுந்து பறந்து பக்கத்திலிருக்கின்றவர்கள் விழுந்து அவர்கள் சரீ ரத்திலிருக்கின்ற மயிர்கள் சுறுசுறுவென்று தீயும்படிப்பார்த்து, புகையெழும் பும்படிப் பெருமூச்செறிந்து மகத்தாகிய கோபத்துடனே தேவர்கள் அசுரர் கள் முதலாகிய சத்துருக்களெல்லாம் பயப்பிராந்திகொண்டு மனந்திடுக்கிடும் படி அதட்டி, எமனைப்போல உக்கிரமாகவுறுக்கி நீயென்ன நிமித்தமாக இங் கேவந்தாய்? அந்த மகாவிஷ்ணுவோ? தேவேந்திரனோ? கைலாசநாதனோ? பிரஹ்மதேவனோ? பூமியைத் தாங்குகின்ற சகஸ்திர பணாமகுடங்களை யுடைய ஆதிசேஷனோ? காலனோ? வேலனோ? யமனோ? திக்குப்பாலகர்களி லொருவனோ? அல்லது ரிஷியீசுவரர்கள் யாகத்தில் உற்பத்தியாகும்படி செய்து தங்களாஜ்ஞையின்படி முடித்துவர அனுப்புவித்த பெரும்பூதமோ? பிரஹ்மா வானவன் லங்காபட்டணமுழுமையும் அழித்துவிடென்று புதிதாகச் சிருஷ்டி த்துவிடுத்த யந்திரதேவதையோ? நாமரூபங்களை மறைத்துக்கொண்டுவந்தை யேநீயார்? இவ்விடத்திற்கு வந்தகாரணமென்ன? ஆருன்னையனுப்பினவர்கள்? எங்களுக்குத் தெரியத்தக்கதாக உள்ளதைச்சொல்லென்று தேவர்களுடைய கீர்த்தியை வேரோடுவிழுங்கிய ராவணன்கேட்டான். அதற்கு ஆஞ்சநேயர் பிரதியுத்தரஞ் சொல்லுகின்றார்.

இப்பொழுது நீ குறித்துச் சொன்னவர்களெல்லா மல்லன். அந்தச்சொ ற்ப பலமுள்ளவர்கள் ஏவும்படி வந்தவனுமல்லவன். புண்டரீகாக்ஷனாகிய ஒருகோதண்ட தீக்ஷாகுருவினுடைய தூதன் நான். அவராரென்று அறியக் கேட்பையே யாமாகில் முனிவர்களும், தேவர்களும், மும்மூர்த்திகளும், மற்றுமுண்டாகிய யாவரும், எவைகளும் நினைப்பதற்கும் அருமையாகிய பெரியகாரியங்களை முடிக்கின்ற நிமித்தம் வந்திருக்கின்றவர். உங்களுடைய

பலத்தையும், பூர்வத்தில் நீங்கள்செய்த தவத்தையும் சேனைகளையும், ஆயு தங்களையும், தேவர்கள்கொடுத்த வரங்களையும், எண்ணத்தையும், வாழ்வை யும், பின்னுமுங்களுக்குரிய துர்க்குணம் துர்க்கிரியை முதலாகிய சகலத் தையும் ஒரேபாணத்தினாலே வேருடனேகளையும்படி உத்தேசித்திருக்கின்ற வர். தேவர்களுமல்லர். மற்றவர்களுமல்லர். திக்கஜங்களுமல்லர். திக்குப் பாலர்களுமல்லர். கைலாசபர்வதமுமல்ல. திரிமூர்த்திகளுமல்லர். முனிவர் களுமல்லர். பூலோகபுரந்தரனாகிய தசரதசக்கரவர்த்திகுமாரர். ஞானமும், சா ஸ்திரக்கேள்வியும், உண்மையாகிய மஹாதவமும் அழியாதவரங்களும், மற்று முண்டாகிய சகலமும் அவரெப்படி நினைக்கின்றாரோ அப்படியெல்லாம் சித் திக்கும். இதற்குச்சாக்ஷி என்னவென்றால், வேதங்களும், தர்மதேவதையுமே சொல்லும். அவாது காரணத்தைக்கேட்பையாகில் முடிவில்லாத வேதசாகை களும் நிச்சயித்துச் சொல்லக்கூடாத அறிவுக்கறிவாயுமிருக்கின்றவர். பூர்வத் தில் முதலைவாயில் அகப்பட்டுச் சகலாத்துமாக்களுக்கும் அடைக்கலஸ்தான மாகிய ஆதிமூலமேயென்றழைத்த கஜேந்திராழ்வானை ரக்ஷிக்கும்படிவந்தவ ரே இப்பொழுது தேவர்களை ரக்ஷிக்கின்ற நிமித்தமாய் வந்திருக்கின்றார். ஆதிமத்தியாந்தரஹிதமாய்ப் பூதபௌஷிய வர்த்தமானமாகிய திரிவிதகாலங் களையும், கணிதங்களையும், கடந்துநிற்கின்ற அந்தச் சர்வகாரணரானவர் கையி லே வில்லையேந்திக்கொண்டு சூலமுஞ்சங்குசக்கரமும் கமண்டலமுங்கைவிட்டு வடபத்திரத்தையும், மூலதாமரையையும், வெள்ளிமலையையுந்துறந்து அயோத் தியாபுரியில் வந்தவதரித்தார். மேலும் தர்மத்தை நிலைநிறுத்தி வேதஞ் சொல்லுகின்ற நீதிகளையெல்லாம் அறிந்து உலகத்தார் நடக்கும்படிச் சன் மார்க்கத்திலே அவர்களைச்செலுத்தி, துர்ச்சனர்களைச் சங்கரித்துச் சற்ச னர்களுடைய துக்கத்தைநீக்கி ரக்ஷிக்கின்ற நிமித்தமாகவந்தார். தம்முடைய பொன்னடியை ஸ்துதிசெய்கின்றவர்களுடைய பிறவிப்பிணியைநீக்குகின்ற பர மௌஷதமாயிருக்கின்றவர் அவரே வேறில்லை. அப்படிப்பட்டவருக்குத் தொ ண்டுசெய்வேன். என்பெயர் அநுமானென்பது. நான் சீதாபிராட்டியாரைத் தேடிக்கொண்டு நான்குதிக்கிலும் போயிருக்கின்ற வானராதிபதிகளில் தென் றிசைக்குவந்த வானரசேனைகளுக்குராஜனாகிய வாலிகுமாரனென்கிறஅங்கதப் பெருமானுடைய தூதனாய்த் தனியே இந்தலங்கைக்குவந்தேனென்று சொன் னார். இவ்வண்ணமாக அநுமான்சொன்னசொல்லை லங்காநிபதியாகிய ராவண ன்கேட்டு மேகத்தின்மத்தியில் மின்னல் பிரகாசிக்கிறதுபோல நகைத்து, வா லிபுத்திரன் அனுப்பும்படிவந்த தூதனே அந்தவாலி சுகமாயிருக்கிறானா? அவ னுடைய ராஜரிகம் செவ்வையாக நடந்துவருகின்றதா வென்றுகேட்டான். அதைக்குறித்து ஸ்ரீராமதூதராகிய ஆஞ்சநேயர்சிரித்து, ராக்ஷசா நீபயப்படா தே அந்தவாலியானவன் பூமியிலில்லை அன்றே சுவர்க்கம்போனான். அவன் திரும்பிவரமாட்டான். அவனுடையவாலும்போய்விட்டது. என்நாயகராகிய ஸ்ரீராமருடைய ஒருபாணத்தினாலேதான் அவனிறந்தது. இப்போது எங்களு க்குச் சூரியகுமாரனாகிய சுக்கிரீபன் ராஜாவா யிருக்கின்றானென்று சொன் னார். அதுகேட்டு என்னநிமித்தமாக வாலியை ராமனென்பவன் கொன்றான்.

அந்தராமன் எங்கேயிருக்கின்றான், அவன்பெண்சாதியை அங்கதனானவன் தேடவேண்டியகாரணமென்ன சொல்லென்று ராவணன்கேட்க, வாயுகுமாரர் சொல்லுகின்றார். ஸ்ரீரகுநாயகர் தம்முடைய திருத்தேவியாரைத் தேடிக்கொண்டுவந்தார். அந்தப் புருஷோத்தமரை எங்கள் சுக்கிரீபமகாராஜன் பிராணப்தமாகச் சிநேகித்து எனக்குச் சம்பவித்திருக்கின்ற துக்கத்தை நிவர்த்தி செய்யவேண்டுமென்று முறையிட்டுக்கொண்டான். அப்பொழுது சித்திரக்காரரால் எழுதப்படாத திவ்வியமாகிய ரூபசவுந்திரியத்தையுடைய ஸ்ரீராமச்சந்திரர் வாலியைக்கொன்று, அவனால் அபகரிக்கபட்டிருந்த சுக்கிரீபனுடைய பெண்சாதியாகிய உருமை யென்பவளையும், ராசரிகமாகிய மகாசம்பத்தையும் அவனுக்கு மீட்டுக்கொடுத்து, அவனுடனேகூட அவ்விடத்தில் ஆறுமாதமிருந்து வானரசைனியங்களை வரவழைத்துப்பின்பு அவர் ஜானகிபிராட்டியாரைப் போய்த் தேடவேணடுமென்று ஆஜ்ஞாபித்தலைப்பெற்று, சுக்கிரீபமகாராஜன் எங்களுக்கு உத்தரவுசெய்ய, நாங்கள் அந்தலோகமாதாவைத்தேடிக்கொண்டு புறப்பட்டோம். இதுதான் நடந்த சமாசாரமென்று மாருதியானவர்சொல்ல, ராவணன் சொல்லுகின்றான்.

உங்கள் குலத்திற்கு அதிபதியும் தனக்கு ஒருவருஞ் சமானமில்லாதவனுமாகிய சிலாக்கியனாயிருந்த வாலியை ஒரு பாணத்தினாலேகொன்ற மனிதர்களுக்கு அடிமைப்பட்டு, அவர்கள் ஏவிய பணிவிடையைச் செய்துகொண் டிருக்கின்றீர்களே இப்படி யிருப்பீர்களாகில் உங்களுடைய கீர்த்தி அழிந்துபோம். உலகமும் மாசடையும். தன்தமயனைக் கொல்லும்படி செய்து அவனைக்கொன்ற ராமன் விஷயத்தில் அதிக அன்புகொண்டிருக்கின்ற உங்கள் ராஜனாகிய சுக்கிரீபன் அநுப்பும்படி எனக்கு என்ன சமாசாரந் தெரிவிக்கவந்தது. தூதுவந்த நீ யுத்தஞ்செய்ய வேண்டியதென்ன, ஒருவேளை உன்னை நாங்கள் கொல்லுவோமென்று பயப்படுவாய் கொல்லவில்லை மனத்திலே அச்சமில்லாமற்சொல்லென்று, இவ்விதமாக ராவணன் சொன்னசொற்களை ஆலோசித்துப்பார்த்து, பொதுமையாயிருக்கின்ற சிலநீதிகளை யிவனுக்கு நாம் போதித்தால் ஏற்றிருக்குமென்று சற்குணத்தையுடைய ஆஞ்சநேயர் சொல்லுகின்றார். உன்வாழ்வை வீணாகக் கெடுத்துவிட்டாய். சிறிதாவது ராஜதர்மமும் பார்க்கவில்லை. பாபத்தையேசெய்ய ஏற்பட்டாய் ஆகையால் உனக்கு முடிவுவந்துவிட்டது. ஆகிலும், இன்னமொரு உறுதி சொல்லுகிறேன்கேள். அதனால் நெடுங்காலம் உயிர் நிலைபெற்றுவாழ்வாய். அழியாத மகத்தாகியகற்பினால் அக்கினியைப்போலும் பரிசுத்தத்தையுடைய சீதாபிராட்டியாரைத் துன்பப்படுத்தியதால், நீங்கள் ஐம்பொறிகளையும் அடக்கிச்செய்த உங்களுடைய முடிவில்லாத மகாதபங்களெல்லாம் மாண்டுபோகும்படி நேர்ந்தது. தீமையானது நன்மையை யழிக்கமாட்டாதென்கிற உண்மையைக் கைவிட்டாய். லோகநாயகியாகிய வைதேகியின் திருவழகினிமித்தம் உனக்குண்டாகிய காமவியாதியினால், நீ அகோரதபசு செய்துபெற்ற அகண்டைசுவரியத்தையும் முன்பின்பாராமல் இழந்துவிடுகின்றாய், வகைகெட்ட

காமச்செருக்கினால் தம்மைத்தாம்மறந்து மதிமயக்கங்கொண்டு, தர்மந் தவறினவர்கள் இம்மையில் தங்கள் செல்வத்தையிழந்து துர்மரணத்தையுற்று மறுமையில் ரௌரவாதி நரகத்தையடைந்து, பின்னும் பிறழ்ந்து உழல்கின்றதேயல்லாமல், அவர்களில் ஆர்தான் நிலைபெற்று வாழ்ந்தார்கள். ஸ்திரீகள் மேற் காமங்கொண்டு இறந்தவர்கள் மிதமில்லாதவர்கள். சன்மார்க்கத்தையுடைய பெரியோர்கள் பொருளும், ஸ்திரியின்பமுமாகிய இந்த இரண்டையும் அபேக்ஷிக்கிறதைப்பார்க்கிலும் வேறே நரகவாதனையுண்டென்றும், தானமும், சிவகாருணியமும், காமமில்லாமையுமாகிய இவற்றைப்பார்க்கிலும் வேறே மோட்சசுகம் உண்டென்றும் நினையார்கள். துரிச்சையினால் பரதாரத்தை விரும்பி எக்காலமும் யாவரும் நகைக்கக்கண்டும், நாணமில்லாமல் உழல்கின்றவன் தன்னுடற் பசையற்றுப் பழிக்கு உடன்படுவான். அப்படிப்பட்டவனுடைய ஆண்மையும் நசித்துப்போமேயல்லாமல் விர்த்தியாகமாட்டாது. சமுத்திரஞ்சூழ்ந்த உலகத்தையாண்டு அரசுசெய்தவர்களுக்குள் உன்னைவிட நீதியுடையவர்களும் சதுர்வேதபண்டிதர்களும் ஆரிருக்கின்றார்கள். ஆ! ஆ! நன்றாயிருந்தது. அப்படிப்பட்ட நீ இப்பொழுது தர்மப்பிரமாணத்தைக் கடக்கின்றையோ? ஒருவன் தன்னிடத்தில் விருப்பமில்லாத ஒருத்தியை அபேக்ஷித்துவேண்டி, கூடாதென்று அவளால் தடுக்கப்பட்டால் உடனே பிராணத்தியாகம் பண்ணிக்கொள்ளவேண்டும். அப்படிச்செய்யாமல் வாழ்கின்ற வாழ்வைப்பார்க்கிலும் சிறந்த முகத்தின்நடுவே அழகாக நீண்டுயர்ந்த மூக்கறுப்புண்பதுவே அழகென்று சொல்லப்படும். உலகத்தைப்பொடிசெய்கின்ற வலுவைப்பெற்றவையாய் இப்பொழுதிருக்கின்ற இந்த இருபது புஜங்களும், பத்துத்தலைகளுமேயல்லாமல் இன்னமும் அநேக புஜங்களும், அநேக சிரசுகளும் உனக் குண்டாயிருந்தாலும் அவையெல்லாம் ஊரைப்பற்றி யெரிக்கின்ற கடு நெருப்பின்மேலிட்ட பலபல வஸ்திரங்களும், அந்தநெருப்பை மீறவொட்டாமல் அடக்கி ஊரை ரட்சிக்கமாட்டா. அதுபோலவே உனக்குவருங் கேட்டை நீக்கிப் பிரயோசனப்படமாட்டா. மேலும் முப்புரங்களும் அக்கினித்தத்தமாம்படி கோபித்த உமாபதியானவர் கொடுத்தவரமுதலானவையும் பயன் படாமல் அழிந்துபோமென்று எண்ணவேண்டுமேயல்லாமல், வேதநெறிதவறாத ஸ்ரீராமச்சந்திரனுடைய பாணங்கள் உன்னைக்கொல்லாமல் விடுமென்று நினைக்கக்கூடுமோ? கூடாதே ஆகையால் நீ யழிவில்லாத மானமழியக் குறைவில்லாத நல்ல சம்பத்தையும் எளிதிலே கெடுத்துக்கொண்டு ராமபாணத்தினால் வருந்துவையா? உலகத்திலே பிறந்தவர்களும், இனிப்பிறவாத மோட்ச சாம்பிராச்சியத்தை யடைந்தவர்களும், தேவர்களும், அந்தத் தேவர்களுக்கும் தேவர்களாகிய பிரஹ்மருத்திராதியர்களும், மற்றுமுள்ளயாவரும் சத்தியமாக ஸ்ரீராமபிரானைத் தியானஞ்செய்யாமல் மறந்திருக்கிறதேயில்லை. ஆகையால் நீ வருந்தித் தவஞ்செய்து அருமையாகப்பெற்ற செல்வம் நிலைபெறவும், அபரிமிதமாகிய சுற்றத்தார் சுகப்படவும், நீயும் அந்தக் கோதண்டபாணியின் அம்புக்கு இலக்காகாமல் உயிரோடு வாழ்ந்திருக்கவும் நினைத்தால், அந்த ஜகன்மாதாவாகிய ராமபத்தினியை விட்டுவிடும்படி எங்கள் சூரியகுமாரனாகிய

சுக்கிரீப மஹாராஜன் உனக்குச் சொல்லச்சொன்னுரென்று ஆஞ்சநேயர் சொன்னர். சொன்னவுடனே ஜயமென்பதொன்றையேயல்லாமல் வேறொன்றையும் நினையாத ராவணேசுவரனுனவன், குன்றுகளில் சஞ்சரிக்கின்ற ஒரு புன்குரங்கல்லவா இந்த நீதிகளை எனக்குச்சொல்லியது. நல்லது! நல்லது! இனி குரங்கின்புத்தியைக்கேட்டுத்தான் நான் பிழைக்கவேண்டுமென்றுசொல்லிக் கனக்கநகைத்து அடா! அந்தச் சுக்கிரீபனுகிய குரங்குசொன்ன மநுநீதிக்கிரமமும், ராமலட்சுமணர்களாகிய சொற்ப மநுஷருடைய வீரப்பிரதாபமும் அப்படியிருக்கட்டும், எப்படிப்பட்டவர்களாலும் கடக்கக்கூடாத காவலையுடைய இந்த லங்காபுரத்தில் தூதாகவந்த நீ ராட்சசர்களைக்கொன்றையே அதென்ன சொல்லடாவென்று அதிக கோபத்துடனேகேட்க, அநுமானுனவர் இவன் மரியாதைதவறிப் பேசுகின்றதனுல் நாம் மாத்திரம் மரியாதையுடனேபேசவேண்டுவதென்னென்று தசக்கிரீபனைப்பார்த்து அடா! கேளடா! உன்னை யெனக்குநேரே காட்டுகின்றவர் ஒருவருமில்லாமையால் பூங்காவை அழித்தேன். அப்படியழிக்கின்ற என்கருத்தை யறியாதவர்களாய் மூர்க்கர்களாகிய ராட்சசர்கள் என்னைக்கொல்லவந்தார்கள். அதுகண்டு என்னைக்கொல்லவந்தவர்களை நான்கொன்றேன். பின்பு வேண்டுமென்றே இந்திரஜித்து பிரஹ்மபாசத்திற் கட்டுண்டவனுய் அடங்கி உன்னைக்கண்டு பேசவந்தேனடாவென்று சொன்னவுடனே, இருபதுகண்களிலுமிருந்து அனற்பொறிபறக்கப் பத்துவாய்களிலுமுள்ள பற்களைக்கடித்து அகோரமாகிய கோபத்தையுடையவனுய்க் கொலைசெய்வோரைப்பார்த்து இந்தத் துஷ்டக்குரங்கைச் சின்னு பின்னமாம்படிக் கொல்லுங்கோளென்று சொன்னுன். தக்ஷணமே அவர்கள் கூட்டமாகத் திரண்டுவந்தார்கள். அப்போது நீதிபராகியவிபீஷணுழ்வானுனவர் அக்கொலையாளரைப்பார்த்து நில்லுங்கோள் நில்லுங்கோளென்று மறுத்தவராய்ச் சீக்கிரத்தில் எழுந்துநின்று இரண்டுகைகளையுங் குவித்துத் தமக்குத் தமையனுகிய ராவணேசுவரனுக்குத் தண்டமிட்டு அவனைப்பிரார்த்தித்து நீர் கோபிப்பது முறைமையல்லவென்று அநேகமாகிய சத்திய வசனங்களைச் சொல்லத்தொடங்கினர்.

திரிலோகங்களையும் சிருஷ்டித்த பிரமதேவனிடத்திலும், சிவனிடத்திலும், மிகுந்த பக்திசெய்கின்ற தபோமார்க்கத்தையறிந்து, தேவேந்திரனே ஏவல்செய்யும்படி ராஜரிகம்செய்கின்ற பிரதாபலங்கேசுவரனே! தூதாகவந்தேனென்று சொல்லக்கேட்டுங் கொல்லுகிறதா! வேதங்களிற் பூரணபாண்டித்தியமுடையவனே! பூலோகத்திலும், தேவலோகத்திலும், சத்தியலோகத்திலும், பாதாளலோகத்திலும் இருக்கின்ற அரசர்களுக்குள் ஸ்திரீகளைக்கொலைசெய்தவர்களிருந்தாலு மிருக்கலாம். தூதர்களைக்கொன்றவர்கள் ஆராகிலுமுண்டா? உண்மையாக உலகங்களைச் சம்ரக்ஷணைசெய்கின்ற அரசனுகிய நீ நம்முடைய சத்துருக்களால் அனுப்பப்பட்ட தூதனைக்கொல்லுதல் மகத்தாகிய குற்றமாகும். மேலும் பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரன் முதலாக நம்முடனே எதிர்த்துச் சண்டைசெய்யச்சக்தியில்லாமற் பயந்திருக்கின்ற தேவர்களுக்கெல்லாம் சிரிப்

புக்கு இடமாகும். நம்முடைய தங்கையாகிய சூர்ப்பநகை மூக்கையுங்காதையும் அறுத்துக்கொல்லாமல், இவ்விடத்தில் நடந்த சங்கதிகளையெல்லாம் போய்ச்சொல்லென்று உண்மையை யறியத்தக்க விரர்களாகிய ராமலட்சுமணர்கள் அனுப்பினார்களே அது எதுக்காக? தங்கள் புஜபராக்கிரமத்தை நமக்கு அறிவிக்கும்பொருட்டல்லவோ? இவனை உயிருடனேவிடாமல் கொல்லுவையேயானால் இவன் வந்து நம்மிடத்திற்கண்ட நமது பிரதாபத்தை நீ அவர்களுக்குத் தெரியப்படுத்துகிறதற்கு, பயந்தவனாய் விடுகின்றாயென்று இப்படி இணக்கமாகவும், நயமாகவுஞ்சொல்லக்கேட்டு, ராவணேசுவரன் இது மெய்தான்தம்பி! நீ நல்ல சொல்சொன்னாய், நமக்குத் துஷ்க்கிர்த்தியத்தைச் செய்தாலும் இவனைக் கொல்லுகிறது குற்றந்தான் இருக்கட்டும். சீக்கிரமாகப்போய் இந்தச்செய்தியைச்சொல்லி அந்தமனிதர்களை யழைத்துக்கொண்டு வாவென்று இந்தக்குரங்கினுடைய வாலானது முதலற்றுப்போம்படி முழுதுஞ் சீலைகளைச்சுற்றி நெய்யிலேதோய்த்து நெருப்பிலே கொளுத்திப் பட்டணத்தைச்சுற்றி இழுத்துக்கொண்டுபோய் இந்த எல்லையிலிருக்கவொட்டாமல் அப்பாலே தூரத்திலே துரத்திவிடுங்கோளென்று சொன்னான். அந்தவார்த்தை சொல்லக் கேட்டமாத்திரத்தில் ராக்ஷசர்கள் அநேகர் அப்படியேசெய்கிறோமென்று இரைந்துகொண்டு புறப்பட்டார்கள். அத்தருணத்தில் இந்திரஜித்தானவன் இதைக்கட்டிய பிரமபாசத்துடனேகொளுத்துகிறது தோஷம் யுக்தமல்ல, இனிக் கயிறுகளைக்கொண்டுவந்து கட்டுங்கோளென்றுசொல்லி அனுமானுடைய தோள்களைச் சுற்றி இறுக்கிக்கொண்டிருந்த பிரஹ்மாவின் வரப்பிரசாதத்தால் பெற்ற பாசத்தின் கட்டவிழ்த்துவிட்டான். உடனே ராக்ஷச விரர்கள் நாலுதிக்கிலும் ஓடி நாட்டிலுள்ளகயிறுகள், நகரத்திலுள்ள கயிறுகள், விட்டிலுள்ள உஞ்சற்கயிறுகள், தேர்வடக்கயிறுகள், குதிரைகட்டுங் கயிறுகள், யானைக்கழுத்திலிறுக்கிய கயிறுகள், யானைச்சங்கிலிகள், அணைக்கயிறுகள், தாம்புக்கயிறுகள், கப்பற்கயிறுகள், மேகநாதன் முதலானவர்கள் எமன்முதலாகிய பலதேவர்களையுஞ்செயித்து அவர்களிடத்திலிருந்து பறித்துவந்த எமபாச முதலாகிய கயிறுகள், அசுரர்களுடனே யுத்தஞ்செய்து அவர்களிடத்தில்பறித்த கயிறுகள், தங்கள் தங்கள் பெண்சாதிமார்களுடைய கழுத்திற்கட்டிய தாலிக்கயிறுகள் மாத்திரந்தவிர மற்றகயிறுகள் ஏதேதுண்டோ? அவற்றையெல்லாக் தேடிக்கொண்டுவந்து மலைபோலக்குவித்து ஆஞ்சநேயரை இறுக்கிக்கட்டினார்கள். அதுகண்டு நாம் தெய்விகமாகிய பாசத்தை அலக்ஷியம்பண்ணி அறுத்துச் சிதைத்துத் தர்மந்தப்பலாகாதென்று ஆஜ்ஞைக்கல்லவோ அஞ்சியிருந்தோம். அவ்வண்ணமே நெறிதவறாதிருக்கும்படி சத்துருக்களே அதை விடுவித்து நம்முடையபக்ஷத்தில் மிகவும் உதவிசெய்தார்கள். இனிநாம் ஜயித்தோம்இவர்கள்நம்முடைய வாலைச்சுடும்படிநினைத்தநினைவு ஏதாயிற்றென்றால் நம்மைநோக்கி இந்தலங்கையை நீசுட்டெரித்துவிடென்று துணிவுகொண்டு ஏவினதேயாகுமென்று பொதுவாக நிச்சயம்பண்ணிக்கொண்டு, பலதிசையையும்பார்த்துத் தோஷாகிதராகிய அவ்வாஞ்சநேயர் வெகுவாய்ச்சந்தோஷித்துச் சொற்பமாகிய கயிறுகளைக்கொண்டுகட்டி யிழுப்பதைச் சகிக்கத்தக்கசக்தியில்

லாதவனைபோலச் சரீரம்நடுங்கியும்,கொடியவர்களாகிய ராக்ஷசர்கள்பக்கத்தி லிருந்து உபத்திரவஞ்செய்ய, அதை நீக்கிக்கொள்ளத்தக்க உபாயதந்திரத் தை யறிந்திருந்தும் அப்படிச் செய்யவேண்டுமென்னும் நினைவில்லாமலும் என்னையராகிய ஆஞ்சநேயர் மெய்ஞ்ஞானத்தை யறிந்தும் அறியாதவன்போ லிருந்து பிரபஞ்சமாயையாகிய பொய்யை மெய்போலக்கொண்டு நடிக்கின்ற யோகிபோல அவர்கள்செய்யும் மாயைகளை யெல்லாம் வேடிக்கையாகப் பார்த்துக்கொண்டு அவர்களுடனே கூடப்போனர். ராஜாவின் அரண்மனை ஆசாரவாசலைக்கடந்து சீக்கிரத்தில் வெளியிலே கொண்டுவந்து ஒருபுறத்தில் நிறுத்திச் சாந்தமில்லாத மூர்க்கர்களாகிய அந்த ராக்ஷசவீரர்கள் நாற்புறமும் நெருங்கிநின்று, நீண்டு உயர்ந்த அவருடைய வாலில் ராஜராஜர்களுடைய கிரீ டத்தின்மேற் கட்டுகின்ற பரிவட்டச்சீலைகளையும் அவர்களேறுகின்ற ரதங்க ளின்மேலும் மாடமாளிகை கூடகோபுரங்களின்மேலும் பறக்கின்ற கொடிச் சீலைகளையும், சபாமண்டபமுதலானவற்றின் முகப்புகளில் தொங்கவிட்டிருக் கின்ற திரைச்சீலைகளையும், தேர்ச்சீலைகளையும், மற்றும் பலவகைப்பட்ட பட் டுச்சீலைகளையும், நெருங்கச்சுற்றி நெய்யும் எண்ணெயும் ஜாடிஜாடியாகக் கொ ண்டுவந்து கொப்பறைகளில் நிறையவார்த்து முழுதுந்தோய்த்து நுனியில் நெருப்பிட்டுக்கொளுத்தி அண்டகடாகமுங் கலங்கும்படிக் கைகொட்டிநகைத் தார்கள். பின்பு தோள்களிலும், தொடைகளிலும், கால்களிலும், கைகளி லும், கழுத்திலும், இடுப்பிலும் கட்டிய மிதமில்லாத உரம்பெற்ற கயிறுகளைப் பக்கந்தோறும் இருகூறாய், நூறாயிரம்பேர்கள் இறுகப்பிடித்துக்கொண்டு போகத்தொடங்கினர்கள். ஆயுதபாணிகளாக இரண்டு பக்கத்திலுங் காவல் வீரர்கள் கணக்கற்றபேர்கள் சமுத்திரம் புரண்டுவருவதுபோலத் திரண்டுவரத் தலைப்பட்டார்கள். மேலும் அவர்களைச்சூழ்ந்து போகின்றவர்கள் நான்கு திக்கிலும் இடமில்லாதபடிக்கு நெருங்கி நிறைந்திருப்பதனல் புறத்திலிருந்து பார்க்கின்றவர்களுக்கு என்னதெரியவரும்? மகா சிங்காரமாகிய நகரத்தையும் பரிமளிக்கின்ற சோலையையும் அழித்து, எதிர்த்த அக்ஷகுமாரன் முதலாகிய ராக்ஷசவீரர்களையும், சின்னபின்னப்படக்கொன்று, சீதையுடனுங் கண்டுபேசி ராமலட்சுமணர்களாகிய அந்த மனிதர்களுடைய வில்லாண்மையை நம்மு டைய ராஜாவாகிய ராவணனிடத்தில் சொல்லும்படிவந்த குரங்குக்குச் சம்பவித்ததைப்பார்க்க,வாருங்கோள் வாருங்கோளென்று தெருக்கள்தோறும் வாசல்கள்தோறும் சகலமானவர்களும்அறியக்கூவி யழைத்தார்கள். பின்னும் இந்தச்செய்தியை அண்டத்திற்கு அப்புறத்தி லுள்ளவர்களுக்கும், அறிவிக் கின்றவர்களைப்போலக் கோவென்று இரைந்து அநுமானை முன்னும் பின்னு மாக இழுத்து, வீதிகளிலே பேரிகைகளை வரிசையாகவைத்து அடித்து, இடி இடித்தாற்போலப் பெருங்கூச்சலிட்டு எந்தப்பக்கத்திலும் ஓடியோடி ஜானகி யாரிடத்திலும்போய்ச் சமாசாரஞ் சொன்னர்கள். அதுகேட்ட பிராட்டி யாரும் உயிர்பதைத்து உடல்வெயர்த்து வாயுலர்ந்து விம்மிவிம்மி மண்மேல் விழுந்து அழுது பெருமூச்செறிந்து சொல்லுகின்றூர். ஐயா! அக்கினிதேவ னே! தாய்க்குச் சமானமாகிய காருண்ணியத்தையுடைய ஆஞ்சநேயன் உன்

கேகன் புத்திரனாகவேண்டுமே! அப்படிப்பட்டவனைப் பெருமையில்லாத நாய்க்குச்சமானமாகிய ராக்ஷசர்கள் இம்சிக்கும்படிக் கண்டால் உதவிசெய்யாமலிருக்கலாமோ? நான் கற்பிலே பரிசுத்தை என்பது நீ உலகத்திற்கெல்லாம் உண்மையாகிய சாக்ஷியாயிருக்கின்றவனுகையால் உனக்கே தெரியவரும். உன்னைக்குறித்து வந்தனஞ்செய்கின்றேன். அவனைச்சுடவேண்டாம் சுடவேண்டாமென்று இவ்விதமாக அருளிச்செய்தமாத்திரத்தில் அக்கினிதேவன் திடுக்கிட்டு மனங்கூசிப் பிராட்டியார் திருவுளக்கருத்தின்படியே அநுமானுக்குக் கொஞ்சமாகிலும் சுடுகையென்பதில்லாமல், குளிர்ச்சியாயிருக்கும்படிக்குத் தன்கடுமையை அடக்கிக்கொண்டான். அப்பொழுது புறத்திலுள்ள மயிர்கள் சிலிர்க்கும்படிக்கு வாயுகுமாரனுடைய வால் அஸ்திவாரைக்குங் குளிர்ந்தது. ஜானகியாருடைய நேமனத்தால் அக்கினி உஷ்ணிக்காமல் குளிர்ந்த அதிசயத்தைக்குறித்து மற்றும் நாம் விஸ்தரித்துச்சொல்வதென்ன? சமுத்திரத்திலுள்ள வடவாமுகாக்கினியுங் குளிர்ந்தது. பூமியில் கல் மரமுதலானவற்றிலுள்ள அக்கினியும் குளிர்ந்தது. சுவர்க்கத்திலுள்ள அக்கினியுங் குளிர்ந்தது. ரிஷிகளாற் பாதுகாக்கப்பட்ட காருகபத்தியம், ஆகவனீயம், தக்ஷணுக்கினி என்கின்ற மூன்றுவகையாகிய வேதாக்கினியுங் குளிர்ந்தன. முப்புரத்தையெரித்த பார்வதிபாகனுடைய நெற்றிக்கண்ணின் அக்கினியுங் குளிர்ந்தது. உலகத்தையளந்த வாமனனுடைய வலதுகையிலுள்ள அக்கினியும் குளிர்ந்தது. எக்கியகுண்டங்களெல்லாங் குளிர்ந்தன. மேகத்திலுண்டாகின்ற இடிகளுங்குளிர்ந்தன. இருளையோட்டுகின்ற பிரகாசத்தையுடைய சூரியமண்டலமுங் குளிர்ந்தது. பாதாளத்திலுள்ள அக்கினிப்பிரபையாகிய நாகவட்டமுங் குளிர்ந்தது. அத்தருணத்தில் அன்புநீங்காத சிந்தையையுடைய ஆஞ்சநேயரும் தவளமலைபோலப் பிரகாசிக்கின்ற அதியுன்னதமாகிய தமது திருமேனியின் நாற்புறத்திலும் இடைவிடாதுசூழ்ந்து அக்கினியானது சுவாலாமாலையாய்க் கொழுந்துவிட்டெரிந்தாலும் தம்மைச் சுடாமலும், தமக்கு ஒன்றும் உபத்திரவஞ் செய்யாமலுமிருந்த ஆச்சரியத்தை நினைத்துப் பார்த்து இது கிருபாநிதியாகிய பிராட்டியாருடைய கற்பின் மகிமையாலும், அவர்திருவருளாலும், அவர்செய்த மங்களாஸாசனத்தினாலுமே நம்மை வருத்தாமலிருக்கின்றதென்று தமது புத்திகோசாத்தால் தெளிந்து பரமானந்த சாகரத்தில் மூழ்கினர். அன்றையராத்திரி மைதிலியாகிய சீதையைத் தேடித் திரிந்தபொழுது அந்தப்பட்டணமுழுதையும் தமது அறிவினாற்குறித் தறியாவிட்டாலும் ஐம்பொறிகளும் முன்புசெல்ல அவற்றைத்தொடர்ந்து மறைந்து சென்று விஷயத்தை அறிகின்ற அறிவைப்போல அநுமானனவர் கல்விப்பயிற்சி இல்லாத ராக்ஷசர்கள் தமக்குமுன்னேநடந்து காட்டும்படி இந்தக்குரங்கு நாற்புறத்திலுஞ் ஜாடைட்டாகப் பார்த்துக்கொண்டு போகின்றதென்று தம்முடைய அபிப்பிராயம் அவர்களுக்குத் தோன்றாமலிருக்க உபாயமாக ஒன்றாவது தவறாமல் அவ்விடத்திலுள்ள சகல விசித்திரமும் தெரியும்படிப் பார்த்துக்கொண்டு போனர். இவ்வண்ணமாக லங்கையின் ஆபாலகோபாலமுங் ண்டுகொண்டேபோனர்.

அவ்வாறுபோன ஆஞ்சநேயர் இவர்களைவிட்டு நழுவுதற்குச் சமயமிது வேயென்று நிச்சயித்து, தம்மை யிரண்டுபக்கத்திலும் இரண்டுலக்ஷங்கைக ளால் உறுதியாகப் பிடித்துக்கொண்டிருந்த நூறுயிரம்பேர்களும் கயிறுகளும் கூடஎழும்ப மாருதியானவர் ஆகாசமார்க்கத்தில் எழும்பினர். அந்தக்கயிறு களைவிடாமல் பிடித்துக்கொண் டிருந்தவர்களுடைய கைகள் எழுத்தடிக ளைப்போலத் தொங்கும்படி அவரெழும்பியபோது, தோள்கள் பிய்ந்துபோய் ராக்ஷசர்கள் கீழேவிழுந்து உயிர்மாய்ந்தார்கள். தமது திருமேனியிற்சுற்றிய கயிறுகளுடனே பூமியிலிருந்து மேலேகிளம்பிய வாயுகுமாரரானவர் சர்ப்பக் கூட்டங்களை வாரிக்கொண்டு வானத்தில் எழும்பிய கருடனைப்போல அந்த ரத்திற் பிரகாசித்தார். கமலன்முதலாகிய சத்துருக்கள் மூவரும் அரசாண்டு கொண்டிருந்த மூன்றுபுரங்களையும் தகித்த காரணத்தால் திரிபுராந்தகனெ ன்று பெயர்பெற்ற சங்கரனும், அவனுக்கு உபபலமாயிருந்த பலபொருள் களும் நாணிப்போகப் பாதகர்களாகிய ராவணுதி ராக்ஷசர்களுக்கு வாசஸ் தானமாயிருக்கின்ற இந்த லங்கையானது பற்றியெரியும்படி ஸ்ரீராமபிரானை ஸ்தோத்திரஞ்செய்து இதைக் கொளுத்திவிடுவோமென்று நினைத்து அந்தச் சுவர்ணமயமான நகரத்தின்மேல் தமது வாலைநீட்டினர். சுற்றிலும் சமுத்திர பரியந்தம் லங்காபுரியை எத்தப்புறங்களிலும் ஒருக்ஷணப்பொழுதில்பற்றியெரி க்கத் தலைப்பட்டதனுல் அந்தவாலானது, பவளமலையைப்போலச் சிவந்த மேனியையுடைய கைலாசபதியானவர் மகமேருவை வில்லாகவளைத்துத் திரி புரதகனஞ்செய்யும்படிப் பிரயோகித்த பாணத்தைப்போலவிளங்கியது. தாவ ள்யமாகிய வெள்ளியைக்கொண்டும் பசுமையாகிய பொன்னைக்கொண்டும் பிர காசமாகிய பலவித ரத்னங்களைக்கொண்டும் தெய்வத்தச்சனுகிய விசுவகர்மா அநேகநாள், கைபழகி அருமையாகச்செய்த உன்னதமாகிய வீடுகள்தோறும் மலைகளின்மேல் ஊழிகாலத்து இடியானது அக்கினிமயமாயிடித்துவிழுவதைப் போல, கிரமக்கிரமமாகத் திடீர்திடீரென்று தாவித்தாவிக் குதித்துத் தகித் தார். நீலநிறத்தையுடைய நிசாசரர்கள் உலகத்தில் பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சகலமானவர்களும், அக்கினிஷ்டோமம், அத்தியக்கினிஷ்டோமம், உக்தீயம், சோடசி, வாசபேயம், அதிராத்திரம், அப்தோரியாமம், அக்கினி யாதேயம், அக்கினிகோத்திரம், தரிசபூரணமாசம், சாதுர்மாசியம், நிருடபசு பந்தம், ஆக்கிரயணம், சௌத்திராமணி, அஷ்டகை, பார்வணம், சிரார்த்தம், சிராவணி, ஆக்கிரசாயணி, சைத்திரீ, ஆசுவயுசி யென்கின்றயாகங்கள், எக்கிய ங்கள், கிருதுக்கள், ஓமங்கள் செய்யவொட்டாமல் தடுத்தபடியினுலே எங்கும் ஆகுதி கிடையாமல் நெடுங்காலமாய்ப் பசியுடனேயிருந்த அக்கினிதேவனானவன், அநுமானுடையவாலை ஆதாரவாகப்பற்றிக்கொண்டு விஷத்தையுண்ட பிரளயகால ருத்திரன் அக்காலத்திலே ஊட்டத் தான் சகலபுவனங்களையும் அழியும்படி உண்பதுபோலச் சீக்கிரத்தில் தகித்து உண்டான்.

பிணிவீட்டுப்படலம்

முற்றிற்று.

---

## ஊர்சுடுபடலம்.

கடுமையாகிய அக்கினியானது காவலையுடைய மாளிகைகள்தோறும் கட்டியகொடிகளைப் பற்றிப்போய் மேற்கட்டிகளைக்கொளுத்தி, நீண்டதூண்களைத் தாவியெரித்து, உயர்ந்த சுவர்களைச் சுற்றுமுற்றுஞ்சுட்டு நீறாக்கியது. அநுமான் அந்தக் கோட்டைவாசலிவிட்ட தீயானது அதற்குள்ளிருந்த வீடுகளெல்லாம் நாசமாம்படி அவ்விதமாகப்பற்றியெரிக்க, எங்கேபார்த்தாலும் எரிகிறபடியினாலே, அப்பட்டணத்திலுள்ளவர்கள் சகலரும் பயப்பிராந்திகொண்டு ஊசலாடுகிறவர்கள்போல அங்குமிங்கும், ஓடியோடியலைந்து அழுகுரலுடனே ஒருவரையொருவர் கூப்பிடத்தலைப்பட்டார்கள். ரத்நத்தாற்கட்டிய கிருகங்களெல்லாம் நெருப்பைப்போல ஜோதிமயமாகிய கிரணங்களை வீசுதலால் அவை தீப்பட்டு எரிகின்றனவென்றும் இல்லையென்றும் அறியாமல், வளையலைக் கையிலணிந்த ஸ்திரீகள் அறிவுதடுமாறித் திரிந்தார்கள். ஆகாசவெளிமுழுதும் மறையும்படிப் புகையெழும்பி எங்கும்பரவிச் சூழ்ந்துகொண்டதனால் காட்டில்சஞ்சரிக்கின்ற மயில்போலுஞ் சாயலையுடைய ஸ்திரீகள், தாங்கள் போனதிசைதெரியாமலும் தங்கள் நாயகன்மார்களைக் காணாமலும் திகைத்துப் புலம்பினார்கள். ராக்ஷசவீரர்களுடைய சிகையின்மேலும் அவர்கள் ஸ்திரீகளுடைய கூந்தலின்மேலும் கொழுமையாகிய நெருப்புவிழுந்து பற்றி எரிகின்றதை ஒருவர்க்கொருவர்காட்டக் கண்ணினாற்கண்டும் செம்பட்டமயிராகையால் தீப்பட்டதும் படாததும் தெரியாமல் மயங்கினார்கள். வாமனரூபமாய்ப்போய்ப் பலிச்சக்கவர்த்தியானவன் உலகங்களைத் தானமாகக்கொடுக்க, ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் தமது திருவடியினால் அளந்துகொள்ளும்படி அண்டமுகடுவரைக்கும் வளர்ந்தெழுந்து உயர்ந்த திரிவிக்கிரம சொரூபம்போல, புகையானது எழுந்து மேலேபோய், எங்குங் கவிந்து நெருப்பானது மேல்விழுந்து சரீரமுழுமையும் தகித்தலினால் வெந்துகறுத்த தோலுரிந்தயானைகளெல்லாம், கீழ்த்திசையிலிருக்கின்ற இந்திரனுடைய ஐராவதமென்னும் வெள்ளையானைக்கு ஒப்பாயிருந்தன. பனிசூழ்ந்ததுபோலப் புகையுந்தீயும் வீடுகளெங்குஞ் சுற்றிக்கொண்டதினால் எருமைகள் மேகங்களைப்போலப் போய்த் தடாகங்களில்விழ, அவற்றிலிருக்கின்ற அன்னங்கள் விலகிப்போவதுபோல ஸ்திரீகள் ஒதுங்கிச் சென்றார்கள். பெரியபெரிய அக்கினிப்பொறிகள்எழும்பிப் போய் இடிக்கூட்டங்களைப்போல விழுகிறதினால் சமுத்திரம்வெதும்பி அதிலுள்ள திமிங்கலமுதலாகிய மீன்கூட்டங்கள், வெந்துபுலர்ந்து துடித்து உயிர்சோர்ந்தன. தணலானது உள்ளேபுகுந்து பற்றியெரிப்பதனால் சுவர்னமதில்கள் உருகியோடிக் கடலுக்குள்ளேபாய்ந்து இறுகித் துண்டுதுண்டாய்த் திரண்டனவானால் பர்வதங்களைப்போல வரிசையாயுயர்ந்திருக்கின்றஉப்பரிகைகளும் பூஞ்சோலைகளும் எவ்விதத்தில்வேகாமலிருக்கும். அந்தலங்கை ஆதியந்தமும் பொன்னாயிருப்பதனால்தரையும்வெந்து உருகியது. கல்லைப்பார்க்கிலும் மிகவும் கடினமாய்த்தடித்த புகையானதுபோய்த் தேவலோகத்தைச் சுற்றிக்கொள்ளுதலால் அந்தலோகமும் இருள்சூழப்பட்டது. ரதங்களெல்லாம் சக்கரமுத

லாகிய பலபலவுறுப்புகளுடனே உருகிக்குழைந்து ஏகவுருவாகின. நல்லவர்களாயிருக்கின்றர்வகள் பொல்லாதவர்களிருக்குமிடத்திற்குப்போனால் அந்தப் பொல்லாதவர்கள் சுபாவமாகச்செய்யும் பொல்லாங்கையும் சகவாசதோஷத்தினால் இந்த நல்லவர்களுஞ் செய்வார்களல்லவா? அதுபோலப் புனிதமாகிய அக்கினியும் சாம்பரிமாயையையுடைய ராக்ஷசர்கள் உண்ணும்படி ஜாடிகளில் நிறைத்திருக்கின்ற கள்ளையுண்ணத்தலைப்பட்டது. லங்கையிற்பற்றியெரிகின்ற நெருப்பானது தாவிப்பாயச் சமுத்திரம்வெந்து கொல்லன் உலைக்களத்திலிருந்து எழும்புவதுபோல, அதிலிருந்து அனற்கொழுந்து குபீர்குபீரென்று எழும்புதலால் கடல்நீரை உண்கின்ற மேகங்களுங் கொதித்தன. சில ராக்ஷசர்களுடைய சரீரத்தை நெருப்புச்சுடுதலினால் வருத்தமுற்று அந்த உஷ்ணஞ் சகிக்கமாட்டாமல் தண்ணீரைத் தேடிக்கொண்டு ஓடியோடி, காட்டிலேயோடுகின்ற ஆற்றுநீரென்று நினைத்துக்கானற்சலத்திலேபோய்விழுந்தார்கள். தேனைச்சொரிகின்ற சோலைகளெல்லாம் தீப்பட்டெரிய அங்குள்ளபுஷ்பங்களில் மொய்த்துக்கொண்டிருந்த வண்டுகள் எழும்பிப்பறந்து நாலுபக்கங்களிலும் தாவிப்படர்கின்ற அந்த அக்கினிஜுவாலையைக்கண்டு, சிவந்த தாமரைப்புஷ்பக் காடென்று எண்ணி அதிலேபோய்விழுந்து கரிந்து மடிந்தன. வில்லைவென்ற புருவத்தையுடைய கற்புள்ள சிலஸ்திரீகள் குரங்குகொல்லும்படி நம்முடைய நாயகன்மார்களிறந்துபோனார்கள். நாம வாசஞ்செய்கின்ற வீட்டுக்குள்ளும் அக்கினி பிரவேசித்தது ஆதலால் நமக்கென்ன வாழ்விருக்கின்றது இனி வீட்டு வாசற்படிகடந்து அப்புறம்போவதும் தர்மமல்லவென்று தாம் தாமிருந்தவிடங்களிலேதானே யிருந்து வெந்துதீய்ந்துமாய்ந்துபோனார்கள். புஷ்பங்கள் பொரிந்து இலைகள்தீய்ந்து, கிளைகள்சுருண்டு, வேர்கள்கரிந்து, மரங்கள், செடிகள், கொடிகளெல்லாம் சாம்பலாகச் சோலைகளெரிந்தன. மேகங்கள் முழுகும்படி, ஓங்கியெழுந்த அக்கினிக்கொழுந்துபோய்ப் பொன்னுலகமுழுதுஞ் சுட்டெரிக்க, அது வெந்துருகி அங்கிருந்து ஆகாசமெல்லாம் பொன்வேர்விழ்த்தது போலச் சுவர்னதாரைகள் மாறுமல் ஒழுகத் தலைப்பட்டன. லங்கையிலிருந்து நெருப்புப்பொங்கி மேலே எழுந்துபோய் ஜுவாலையானது சந்திரனுடைய சரீரத்தில்தாக்க அது உருகிச்சிதறிய அமிர்தபிந்துக்கள், மேலேதுளித்தலால் மாண்டுகிடந்த ராக்ஷசர்களிலுஞ் சிலர் உயிர்பெற்றெழுந்தார்கள். சூரியனுக்கு நேராயெழுந்துபாய்ந்த அக்கினிஜுவாலையினாலே அதன்பக்கத்திற் சுற்றியிருந்த மேகங்கள்முழுமையும் எரிந்து கருகிப்போக, நடுவிலிருந்த அந்தச் சூரியன் அந்நெருப்பிலுருகித் திரண்ட பொன்னுருண்டையைப் போலிருந்தது. கால்களிற்பூட்டிய தளைக்கயிறுகளைக் கொளுத்திப் பின்புறத்திலுள்ள வால்களைக்கொளுத்தி முகத்தினிடத்தில் மொய்த்துக்கொண் டிருக்கின்ற பிடர்மயிர்களையுங் கொளுத்துதலால் வளைந்த குளம்பினையுடைய குதிரைகள் பதைத்துவிழுந்தன. எமனையும் எடுத்து விழுங்குகின்றகொடிய இராக்கதர்கள் அநேகர் அக்கினிமுழுதும் பற்றிக்கொண்டு வருவதுகண்டு அதற்குத் தப்பிப் போகும்படி ஆகாசமார்க்கத்திலெழும்ப, அவ்விடத்திலும் புகைவந்து சுற்றிக் கொள்ளுதலால் ஆழமாகிய தடாகஜலத்தில்விழுந்து அமிழ்ந்தவர்களைப்போ

லக் கண்களைமூடிக்கொண்டு சுவாசம்விடக்கூடாமல், மறுபடியும் அந்தநெருப்பிலேதானே விழுந்து முடிந்துபோனார்கள். அநேக ஸ்திரீகள் அரையிலுடுத்த பட்டாடையிலேபற்றிய நெருப்பு, மார்பிலேதரித்த உத்தரீயத்திற்பற்றித் தலைமயிரிலும் பற்றிக்கொள்ள மயங்கித் தியங்கி மடிந்துபோனார்கள். இலவம்பஞ்சுக்குள்ளும் சில முத்துகளுண்டென்று சொல்லும்படி பிரகாசிக்கின்ற சிவந்தவாயினையும் அதற்குள் இருக்கின்ற வெண்மையாகிய பற்களையுமுடைய ராக்ஷசஸ்திரீகள் தங்கள் நாயகன் மார்களிடத்திற் பிணங்கிய பிணக்குத் தீர்ந்து கூடுகிறதற்கு முன்னே வஸ்திரம்வெந்து கடலிலேபோய்விழும்படி ஓடினார்கள். கூடுகளுடனே பசுங்கிளிகள் துடிக்க அதைக்கண்டு கண்களிலிருந்து அருவிபோல ஜலம்பெருகி ஸ்தனத்தினிடத்தில்வழிய, மதயானைக்கிணையாகிய புருஷர்களைப்போய்க் கட்டிக்கொள்ளவேண்டுமென்று வருகின்ற அவசரத்தால் மேகத்தில்மறைகின்ற மின்னலைப்போல அநேகம் பெண்கள்புகையிலே மறைந்துபோனார்கள். பர்வதங்களைப்போல உன்னதமாகிய உப்பரிகைகள் அக்கினியில் வெந்துபோக அவற்றிலிருந்த ஸ்திரீகள் தாங்களணிந்த சுவர்ணாபரணங்களும் ரத்னாபரணங்களும் பிரகாசிக்கும்படி ஆகாசத்திலெழும்பிப்போம்பொழுது புகைகள்வந்து சூழ்ந்துகொள்ள, மேனிகறுத்துக் கலங்கித் திரைக்குள்ளே காண்கின்ற சித்திரப் பிரதிமைகளைப்போலத் தோன்றத் தலைப்பட்டார்கள். யுகமுடிவிலே கடுமையாகிய காலாக்கினியினால் சமுத்திரம் வேகிறதுபோல நந்தனவனங்கள் தீப்பட்டு அவற்றிலுள்ள, அகில்விருக்ஷங்கள், சந்தனவிருக்ஷங்கள் முதலாகிய அநேக வாசனைமரங்கள் உலகமெல்லாம் பரிமளிக்கும்படி வெந்தன. அக்கினியானது உலகமுழுதும் விழுங்கும்படி எட்டுத் திக்குகளிலுந் தாவிப் படர்கின்றதனால் அந்தஜ்வாலையில், கற்பகக்காட்டில் வெந்தனவும் வேகாதனவுமாகிய தளிர்கள், இலைகள் மலர்கள் முதலானவையும், வேற்றுமை தெரியாம லிருந்தன. எங்கும் புகைமூடிக்கொள்ளுதலால் மேகங்கள் சமுத்திரஜலத்தைப் பானம்பண்ணப் போகிறதற்கும் பானம்பண்ணி வருகிறதற்கும் வழிகிடையாமல் தடுமாறின. அஷ்டதிசைகளிலும் வெண்மையாகிய புகைமூடிக் கவிக்கின்றதனால் சிவனுடைய வாசஸ்தலமாகிய வெள்ளிமலையும், மற்றமலைகளும் பிரஹ்மாவினுடைய வாகனமாகிய அன்னப்பறவையும், காக்கைகளும், நாராயணனுடைய சயனஸ்தானமாகிய திருப்பாற்கடலும், மற்றகடல்களும் கீழ்த்திசை யானையும், மற்ற யானைகளும், ஒத்து வேறுபாடு தெரியவேயில்லை. சரீரங்கள் வெந்து கரிந்து சிந்தும்படி அக்கினிஜ்வாலையானது மேலேதாவத் தோலுரிந்தவர்களாய் ராக்ஷசஸ்திரீகளும் புருஷர்களும் ஓடிப்போய்க் கடலிலே விழுந்தபோது அவர்களுடைய செம்பட்டமயிராகிய கூந்தலுஞ் சிகையும் அக்கினிக்கொழுந்துபோல எங்கும் நெருங்குதலால் அந்தச் சமுத்திரமும் பற்றி யெரிகிறதுபோலிருந்தது. ஒருபிள்ளையை இடுப்பின்மேல் வைத்துக்கொண்டு ஒருபிள்ளையைக் கையிலே பிடித்துக்கொண்டு மற்றொருபிள்ளை பின்னே அழுதுகொண்டுவரத் தலைமயிர் பற்றியெரிய, ராக்ஷசஸ்திரீகள் கதறிக்கொண்டேயோடிச் சமுத்திரத்தில் விழுந்தார்கள். ஆயுதசாலைகள் வெந்து அவற்றிலுள்ள விற்க

ளும் வேல்களும் குந்தங்களுமுதலான ஆயுதங்களெல்லாம் உருகிப் பலபல சிற்றுண்டைகளாய்விட்டன. யானைகள் உடல்வேகக் காலிற்பூட்டிய சங்கிலியையும் கழுத்திலிறுக்கிய கயிற்றையும் அறுத்துச் சிதறிவிட்டுக் கட்டுத்தறியைப் பெயர்த்துக்கொண்டு செவிகளை அசையவொட்டாமல் நிறுத்தி, வாலை முதுகின்மேல் வளைத்து முறுக்கித் தும்பிக்கையைத் தலையின்மேல் உயர எடுத்து வீரிட்டுக்கொண்டோடின. ஆகாசத்தில் கொண்டல்கொண்டலா யெழும்பிப்பாய்கின்ற புகைக்கூட்டத்தினால் பலசாதிப்பட்சிகளும் மேலே எழுந்து பறக்கப்பயந்து சமுத்திரத்திலேவிழுந்து அமிழ்ந்து, மனத்தில் சிறிதுந் தயையில்லாத வஞ்சகரிடத்தில் அடைக்கலம் புகுந்தவர்களைப்போல அந்தக் கடலிலுள்ள மீன்கூட்டங்கள் விழுங்கும்படி இறந்தன. யுகாந்தகாலத்திலே பிரளயாக்கினியானது தோன்றிச் சப்த சமுத்திரஜலத்தையும் வற்றும்படி உண்டு புவனமாதியந்தமுஞ் சஞ்சரித்துத் தடவிக்கொண்டு, விருக்ஷஜாலங்களையெல்லாந் தகித்துப் பர்வதங்களையெல்லாஞ் சுட்டுப் பின்பு மகாமேருவைப் போய்ப் பற்றியெரிக்கிறதுபோல, லங்கையாகிய ஊரையெல்லாஞ்சுட்டு நீறாக்கிய தீயானதுகண்டு ராவணேசுவரனுடைய அரண்மனையிலும்போய்ப் பற்றியது.

அதிற்பற்றியதுகண்டு அவ்விடத்திலிருந்த தேவஸ்திரீகளும், நாகஸ்திரீகளும், விஞ்சைய ஸ்திரீகளும் மற்றும் பலபலஸ்திரீகளும், பூர்வத்தில் இந்த ராவணன்போய்த் தேவலோகத்தைக் கொள்ளையடிக்குமளவில் அந்தத்தேவர்கள் எப்படி அலைந்து தடுமாறினர்களோ ? அப்படியே மனமறுகிக் கதறி எழுந்து ஓடி ஒருவர்போனதிசையை ஒருவரறியாமல் அங்கங்கே திகைத்து நின்று தடுமாறினர்கள். கஸ்தூரி, கதம்பம், சந்தனம், அகில்முதலாகிய வாசனைதிரவியங்களும், கற்பக புஷ்பங்களும், வெந்துபுகைந்து அந்தப்புகை திக்குகள்தோறும் பரவ அங்கங்கேயுள்ள ஸ்திரீகளுடைய தலைமயிரெல்லாம் பரிமளம் வீசத்தொடங்கின. அதியுஷ்ணத்தையுடைய அக்கினிபோய்ப் பற்றுதலால் யாவரும் நெருங்கப்படாத உக்கிரகோபத்தையும் ஆண்மையையுமுடைய ராவணன் வாசஞ்செய்கின்ற ஏழுநிலையுப்பரிகையும், ஊழித் தீயானது தகிக்கும்படி ஏழுலகங்களும் வேகிறதுபோல வெந்தன. லங்காபதியினுடைய நெடியமலைபோல ஓங்கி உயர்ந்தபெரியநிலைகளையுடைய அரண்மனையானது குற்றமற்ற ஆயிரத்தெட்டு மாற்றுத்தங்கத்தால் கட்டப்பட்டதாகையால் அதுமுழுதும் அக்கினிதத்தமாயுருகிக் குழைந்து ஒருபிண்டமாய்த் தெற்குத்திசைக்கும் ஒருமகாமேருவுண்டா யிருக்கின்றதென்று சொல்லும்படி நின்றது. இந்தத்தருணத்தில் தசக்கிரீவன் அவனுடையஸ்திரீகளும், மக்களும், ஒக்கலும், மற்றுமுள்ள பந்துவர்க்கங்களுமாகிய சகலருடனேயும், நவரத்னமயமாய்ப் பிரகாசிக்கின்ற புஷ்பகவிமானத்தின்மேலேறி ஆகாசமார்க்கத்தில் தப்பிப்போய் விட்டான். பின்னும் நினைக்குமாத்திரத்தில் அரக்கர்களும் அவர்களுடைய பிள்ளைகள் பெண்சாதிகள் அனைவரும் ஏதேச்சையாயோடிப் போனர்களாகையால், அந்தநெருப்பை அவிக்கத்தக்க பிரயத்தினஞ் செய்வாரொருவரும் இல்லாமல் லங்காபட்டணமானது சமூலமும்வெந்து போய்விட்

டஅ. அப்பொழுது ராவணனானவன் ராக்ஷசர்களைக் கோபாக்கினி ஜொலிக்கப்பார்த்து அடடா! பதினாலுலோகங்களும் பற்றியெரியத்தக்க ஊழிகாலந்தான் வந்ததோ? வேறுகாரணம் ஏதாவதுண்டோ? நம்முடைய லங்கையை நெருப்புத் தகிக்கவேண்டிய நிமித்தமென்னவென்று அதட்டிக்கேட்டான். அந்தச்சமயத்தில் தங்கள் புத்திரமித்திர களத்திராதி பந்துஜனங்களையும் வஸ்திர ஆபரண வாகன தனதானியாதி பாக்கியங்களையும் அக்கினிக்கு இரையாகக் கொடுத்துவிட்டு இனியெப்படி ஜீவிப்போமென்று அழுதுகொண்டு வந்து எதிரேநிற்கின்ற ராக்ஷசர்கள் கைகளைக்கூப்பித் தண்டமிட்டு ஐயா! கடலைத்தாண்டி இவ்விடத்திற்கு வந்தகுரங்கு சமுத்திரத்தின் நீளத்திலும் அதிக நீளமாகிய அதன்வாலிலே நாம் கொளுத்திவிட்ட நெருப்பைக்கொண்டு சுட்டதென்று சொன்னார்கள். அதுகேட்டுமிருந்த கோபத்துடனே கொதித்து ஆ! ஆ! ஒருகுரங்கு தன்சாமர்த்தியத்தினால் இந்நகரத்தைக் கொளுத்துவதும், அதன்வாலிலிருந்த அக்கினியானது கொழுத்துப்போய் எரிப்பதும், இதனாலே லங்காதீபமானது முழுதும்வெந்து பொடியாவதும், இதைக்கண்டு தேவர்கள் கைகொட்டிச் சிரிப்பதுமாய் முடிந்ததல்லவா! இப்படியாகுமானால் ரணசூரனும் பிரதாபலங்கேசுவரனுமா யிருக்கின்ற என்னுடைய பராக்கிரமம் நன்றாகும் நன்றாகுமென்று கலகலவென்றுநகைத்து, குரங்குதான்தெரியாமற் கொளுத்தினாலும் அக்கினியெப்படி எரிக்கலாம்? அவனுக்கென்ன தெரியாதா இந்தலங்கையைக்கொஞ்சமாவது பயமில்லாமல் எரித்த அந்தத்துஷ்டனாகிய அக்கினியைக் கண்டவர்கள் முன்னே கைப்பிடியாகப்பிடித்து இழுத்துவாருங்கோளென்றும், கலகஞ்செய்யக்கற்றுக்கொண்ட குரங்கையும் பிடித்தபிடியோடே கொண்டுவாருங்கோளென்றும், தேவரைவென்ற ராவணன் மிதமற்றகோபத்துடனே பற்களைகடித்துச்சொன்னான். சொன்னமாத்திரத்தில் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தராக்ஷசவீரர்கள் சுவாமி! அப்படியே செய்கின்றோமென்று ரதாரூடர்களாய் ஆஞ்சநேயரைத்தேடிக்கொண்டுஅதிவேகமாய்ப்போனார்கள். அவர்களுக்குப்பின்னே கடலிலும்அதிகமாகிய வில்லையும் வாளையும் வேலையும் ஈட்டியையுமுடைய சேனைகள்சூழப்போர்க்கோலங்கொண்டு, போர்குறித்துத் தும்பைமாலைசூடி, ஸப்தவீரர்கள் புறப்பட்டார்கள். அவர்கள் அனைவரும் ஆகாசம் பூமியாதியந்தமும் ஓடிவளைத்து மொய்த்துச்சுற்றி இரைச்சலிட்டுக் கொண்டுபோகிறபொழுது அநுமான் ஒருபக்கத்தில் இருக்கக் கண்ணினாற் கண்டார்கள். கண்டவுடனே பிடியுங்கோள்பிடியுங்கோள் அடியுங்கோள்அடியுங்கோள் கட்டுங்கோள் கட்டுங்கோள் வெட்டுங்கோள் வெட்டுங்கோள் வளையுங்கோள் வளையுங்கோளென்று கோபத்தோடு நானாவிதமான ஆயுதவர்க்கங்களைப் பிரயோகஞ்செய்து எதிர்த்ததை சகலவேதசாஸ்திரங்களையுங் கற்றுணர்ந்த பண்டித சிரேஷ்டராகிய மாருதியானவர்கண்டு ஒருவரும் ஓடிப்போகவொட்டாமல் தசதிசையிலும் வாலைநீட்டி ஒருமிக்கவளைத்து இழுத்து அநேகரை வலதுகாலைக்கொண்டு உதைத்து, இடது காலைக்கொண்டு எற்றி, வலது கையைக்கொண்டு குத்தி, இடதுகையைக்கொண்டு மோதி, இரண்டுதோளினாலும் இறுக்கி, |இரண்டுதொடையினாலும் நெருக்கி, முழங்காலினால் முட்டி,

முழங்கையினுல் இடித்து, அக்குளிவிட்டு அரக்கினர். பின்னும் பிரஹ்மாண்ட பரியந்தமுயர்ந்த ஒருமராமரத்தை வாலினுல் வளைத்துப்பற்றிப் பறித்து எடுத்து மோதியடித்தார். அடிக்கவே ஆயுதங்களெல்லாம் பொடிப்பொடியாகத் தோள்துணிந்து, தாள்தறிந்து, தொண்டைகிழிந்து, மண்டைபிளந்து, மெய்சிதைந்து, கையொடிந்து, விழிபிதுங்கி, செவியறுந்து, ஆவியும் ஆயுசும் முடிந்து பாவிகள் பாதமித்தார்கள். இவ்விதமாக ஆஞ்சநேயர் கொல்லும்படி இறந்தவர்களுடைய சரீரத்திலிருந்து பெருகியரத்த ஜலமானது சேருய் இலங்கையைச்சுட்ட நெருப்பும் ஆறும்படிப் பெரிய ஆருய் ஓடியது. முன்னின்று போராடினவர்கள் இறந்துபோனதுகண்டு பின்னின்ற வீராதி வீரர்களெல்லாம் எதிரேறிச் சண்டைசெய்தார்கள். அப்பொழுது அதிசீக்கிரத்தில் வாயுகுமாரர் எமனைப்பார்க்கிலும் மூன்றுபங்கு அதிகமாகக்கொன்ருர். அதனுல் கருமேகத்துக்கு ஒப்பாகிய நிறத்தையும் புஜபலத்தையுமுடைய ஐம்பதினுயிரம் ராக்ஷஸவீரர்கள் மடிந்தார்கள். மற்றவர்களெல்லாம் அவருக்குமுன் நிற்கமாட்டாமல் சமுத்திரத்தில் ஓடிவிழுந்தார்கள். அத்தருணத்தில் சப்தவீரர்கள் இந்தக்குரங்கு எத்தனையோராக்ஷசர்களைத் தன்வாலை நீட்டிவளைத்தது. அந்த வாலில் அகப்பட்டு அநேகர்மாண்டார்கள். சிலபேர் கடலுக்குள் ஓடிவிழுந்து முடிந்தார்கள். அம்மம்மா! இதுவென்ன ஆச்சரியம்! இப்படியானுல் கண்டவர்கள் கேட்டவர்களுக்கெல்லாம் ஏச்சல்லவோ? பேச்சல்லவோ வென்றெண்ணிக் கோபக்குரோதர்களாய்த் தேர்களை வேகமாய் நடத்திப்போய்ச் சுற்றிக்கொண்டு விற்களை வளைத்து, வாசாமகோசரமாகப் பாணங்களைப் பிரயோகித்துத் தங்கள் வீரதீரத்தைக்காட்டிப் பிரபலமாகிய யுத்தஞ்செய்தார்கள். மாருதியானவர் அவர்கள் விட்டபாணங்களையெல்லாம் லக்ஷியம்பண்ணுமல் அந்தஏழுபேர்களையும் ஏககாலத்திற் கொல்லவேணுமென்று உத்தேசித்துத்தமது கையைக்கொண்டு ஓரே அறைகொடுத்தார். அந்த அறையுடனே தேர்கள் குதிரைகள் சாரதிகளும் சிதைந்து வில்லும்முறிந்து எழுவீரர்களும் ஒருமிக்க மாய்ந்துபோனுர்கள். பின்பு ஊர்முழுதும் அழிந்துபோய்விட்டதோ வென்று பார்த்துவந்த விஞ்சையர்கள் சகலத்தையுஞ் சுட்டெரித்த அக்கினியானது சீதாபிராட்டியாரிருக்கின்ற சோலையைமாத்திரம் தகிக்கவில்லையே; அது அந்தக் குணசீதியாகிய ஜானகியாருடைய கற்பின்மகிமையினு லல்லவா? வேகாதிருந்ததென்று சொன்னுர்கள். அவர்கள் சொன்னசொல்லைக்கேட்டு ஆஞ்சநேயர் அதிசயித்துச் சந்தோஷித்து நான் பிழைத்தேன் நான் பிழைத்தேனென்று ஆனந்தித்து, இவிடத்திற்குப்போய், லோகமாதாவின் திருவடிகளைச் சேவித்துநின்ருர். பிராட்டியாரானவர் சிசுவைக்கண்ட தாயைப்போல அநுமானைப்பார்த்து அதற்குமுன்னே நம்முடையபுத்திரனை அக்கினிதகித்துவிடுமே என்னசெய்வதென்று, மனந்தளர்ந்து துக்கத்தினுல் முகம்வெயர்த்து நெருப்பிலேவிழுந்த புழுப்போலப் பதைத்துப்பற்றியெரிந்த திருமேனி குளிர்ந்து அதிக மகிழ்ச்சியானுர். அந்தச்சமயத்தில் அஞ்சநாகுமாரர் முன்னமே தானே சகலமும்பேசி முடிந்தபடியால் இனியென்னவார்த்தை இருக்கிறதென்று நினைத்துத்தாயே! நாயேன் போய்வருகிறேனென்று தண்டம் சமர்ப்பித்

துத் திரும்பினார். அவர் அப்புறம்போனவுடனே ஸ்ரீராமதூதர் போய்விட்டபடியினால் கள்ளர்களாகிய ராக்ஷசர்கள் கண்டால் நம்முடைய நகரத்தைச் சுட்டெரித்தது இந்த அக்கினிதானேயென்று, நம்மைப் பிடித்துப்போய்த் தண்டிப்பார்களென்று அக்கினிதேவன் அவர்கள் கண்ணுக்குத்தோற்றாமல் ஒளித்துப்போனான்.

ஊர்சுடுபடலம்
முற்றிற்று.

---

## திருவடிதொழுதபடலம்.

---

அதிசீக்கிரமாகப்போய்ச் சேரவேண்டுமென்கின்ற நினைவைக்கொண்டு எங்களையாகிய ஆஞ்சநேயர், அங்கே வொருபக்கத்திலிருந்த பர்வதத்தின் சிகரத்திலே அஸ்தமனபர்வதத்தை அடைந்த சூரியனைப்போலப்போயேறி அந்த இடத்திலிருந்து, உலகங்களையெல்லாம் விழுங்குவதுபோல நீண்டுவளர்ந்து ஸ்ரீராமபிரானுடைய திருவடித்தாமரையை மனத்திலே தியானித்து, திக்குநோக்கித் தண்டம் சமர்ப்பித்து ஆகாசமார்க்கத்தில் எழும்பிப் பாய்ந்து போனார். போய்த் தம்முடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்த மேனா தேவியின்பிள்ளையாகிய மைநாகபர்வதத்தின்மேல் குதித்தார். அந்த மைநாக பர்வதம் அவருக்கு உபசாரஞ்செய்து என்னசமாசாரமென்று விசாரிக்க, அதனுடனே நடந்தகாரியத்தைச் சொல்லிவிட்டு, அங்கிருந்து எழும்பித் திக்கஜத்துக்குச் சமானமாகிய ஆஞ்சநேயர், அங்கதன், ஜாம்புவந்தர்முதலாகிய வானரவீரர்களிருந்த மகேந்திர பர்வதத்தின்மேல் ஒருகணப்பொழுதிலேவந்துகுதித்தார். தூரத்திலே போயிருந்த தாய்ப்பறவையானது வருகிறவழியைப் பார்த்துக்கொண்டிருந்த அப்பறவைக்குஞ்சுகள் அதுவரக்கண்டதுபோல லங்கைக்குப்போன அநுமானானவர் எப்பொழுது வருவார்வருவாரென்று வழிபார்த்துக்கொண்டிருந்த அந்தவானரவீரர்கள் இவரை நேரிலேகண்டவுடனேபோன காரியம் முடிந்ததென்று, சரீரம்புளகிக்க மயிர்க்குச்செறிய அதிகமகிழ்ச்சியையடைந்து அவர்களில் சிலபேர் அழுதார்கள். சிலபேர் எதிரேநின்று ஆரவாரஞ்செய்தார்கள். சிலபேர் சமீபத்திற்போய் அன்புடனேதொழுது கொண்டார்கள். சிலபேர் துள்ளிக்கூத்தாடினார்கள். சிலபேர் அவரை எடுத்துவிழுங்குகிறவர்களைப்போல ஆசையினால் மொய்த்துக்கொண்டார்கள். சிலபேர் தழுவி அணைத்துக்கொண்டார்கள். சிலபேர் தூக்கியெடுத்துக்கொண்டு எங்குந்திரிந்தார்கள். சிலபேர் ஐயா! வாயுகுமாரரே நீர்போய்வந்த செய்தியை உமது வாயைத்திறந்து சொல்லாமலே உம்முடைய முகாரவிந்தமே எங்களுக்குத் தெரியச்சொல்லியது. ஆகையால், மகத்தாகிய சந்தோஷமுண்டாகியது. வெகுதூரம்போய் இளைப்புடனேவந்தீரே உமக்கு அந்த இளைப்புத்தீரும்படித் தேனும் கிழங்குகளும் கனிகளும் காய்களும் துளிர்களும் நாங்கள் நல்லருசியுடையனவாக அருமையாய்த் தேடிக்கொண்டுவந்து வைத்திருக்கிறோம். அவற்றைச் சாப்பிடுமென்று அவருக்குமுன்பாக வரிசையாய்க் கொண்டுவந்து வைத்து

உபசரித்தார்கள். பின்பு அநுமானுடைய கால்களிலும், கைகளிலும் மார்பிலும், தோளிலும், தலையிலும், வாள்களும், வேல்களும், அம்புகளும் பட்டபுண்கள் சிருஷ்டிகாலந்தொடங்கி உலகத்தில் இதுவரையிலுல் கழிந்துபோன நாள்களைப்போல, அளவிறந்தனவாக நிறைந்திருக்கக் கண்ணினாற் பார்த்துப்பார்த்துத் தங்கள் பிராணன் சிந்திப்போம்படி மனங்குழைந்து பெருமூச்சுவிட்டார்கள். அப்பொழுது மாருதியானவர் தங்கள் இளவரசாகிய அங்கதனை முன்புவணங்கிப்பின்பு கரடிகளுக்கு ராஜாவாகியஜாம்பவந்தனைச் சேவித்துக்கொண்டு, மற்றுமுள்ளவர்களுக்கெல்லாம் அவரவர்களுக்கு ஏற்றபடிச்செய்ய வேண்டியமரியாதைகளைச்செய்து அவ்விடத்தில்உட்கார்ந்து, லோகநாயகராகிய ஸ்ரீராமச்சந்திரருடைய திருத்தேவியாராகிய ஜானகியார் உங்களுக்கெல்லாம் ஆசீர்வாதம் சொன்னாரென்றுசொன்னார். இப்படிச் சொன்னமாத்திரத்தில் அனைவருமெழுந்திருந்து சிரசின்மேற் கைகளை அஞ்சலிபண்ணிக்கொண்டு தரைமட்டுந்தாழ்ந்து திக்குநோக்கி வணங்கிநின்று கண்களில் ஆனந்தபாஷ்பம்பெருகமனத்திலே மகா சந்தோஷத்தையுடையவர்களாய் அநுமானை நோக்கி இங்கிருந்து நீர்புறப்பட்டு லங்கையைநாடிப் போனதுமுதல் அங்கிருந்துவந்து சேர்ந்ததுவரைக்கும் என்னஎன்ன அதிசயம் நடந்தனவோ! அவற்றையெல்லாம் ஒன்றாவதுவிடாமல் நாங்கள் கேட்கும்படிச் சொல்லவேண்டுமென்றார்கள். அப்பொழுது அவர் பிராட்டியாருடைய திருவடிகளை நெஞ்சிலேஸ்மரித்துத்தொழுது அந்த ஸ்ரீராமபத்தினியாருடைய மகிமைபொருந்திய திருவுளக்கருத்தை நன்றாய்த் தெரியச்சொல்லி, பின்பு தாம் அங்கிருந்து சுவாமிக்கு அடையாளமாகச் சூடாமணியை அவர்கொடுக்கும்படி வாங்கிவந்ததையுஞ் சொன்னாரேயல்லாமல், மகாபலிஷ்டர்களான பஞ்சசேனாதிபதிகளுடனேயும் அக்ஷகுமாரன் முதலாகிய வெகுராக்ஷசர்களுடனேயும் போர்செய்து அவர்களையெல்லாம் கொன்றுவென்ற சமாசாரத்தையும், லங்காபட்டணத்தை எரித்து நீறாக்கிய சமாசாரத்தையுமாத்திரஞ் சொல்லவில்லை. ஏன் சொல்லவில்லையென்றால், இந்த இரண்டுகாரியமும் தம்முடைய ஜயப்பிரதாபத்தைக் குறிப்பதுபற்றி அதைச்சொன்னால் தற்புகழ்ச்சியாய் முடியுமென்று நினைத்துச் சொல்ல வெட்கப்பட்டுக்கொண்டு, அது நீங்கலாக மற்றவற்றையெல்லாம் ஒன்றாவது ஒளியாமற்சொன்னார். அந்தச்செய்தியைக்கேட்டு அதிக சந்தோஷமுற்று அங்கதன் ஜாம்பவந்தன் முதலானவர்கள் வாயுபுத்திரனை ஊடுருவப்பார்த்து, இவர் லங்கையிலுள்ள ராக்ஷசர்களுடனே எதிர்த்துப் பின்னிடாமல் உக்கிரமாய்ப் போர்செய்ததை, இவருடைய தேகமாதியந்தமுமிருக்கின்ற காயங்களே சொல்லவும், அவர்களை ஜயித்த சமாசாரத்தை இவர் அவர்களால் சிறைசெய்யப்படாமல் திரும்பிவந்ததே சொல்லவும், அந்த லங்கையைக் கொளுத்தியசெய்தியை அந்தத்திசையில் ஓங்கிக் கறுத்தெழுகின்ற புகையேசொல்லவும், ஜானகியானவர் இறக்கவுமில்லை மற்ற எந்தஇடத்திலும்போகவுமில்லை ராவணனுடைய நகரத்தில்தானேஇருக்கிறாளென்பதை இவர்தென்திசையை நோக்கித்தண்டம் சமர்ப்பித்துக்கொண்டு வருவதேசொல்லவும், சத்துருக்கள் சாமானியர்களல்லர் அவர்களெல்லாம்அதிவீரபராக்கிர

மர்களென்பதை ஜகன்மாதாவானவர் இன்னம் நிறைமீளா திருப்பதேசொல்லவும், பிரகடமாக அறிந்து இனிச் செய்யவேண்டுவதென்ன சொல்லுமையா அநுமானேயென்று கேட்டார்கள். இனி எவ்ற்றையும் சிறிதும் எண்ணவேண்டுவதேயில்லை. சீக்கிரமாய் ஸ்ரீராமபத்திரருடைய சந்நிதானத்திற்குப் போய் அவருடைய திருத்தேவியாரைக்கண்ட சுபச்செய்தியைச்சொல்லி, அவர் மனக்கிலேசத்தை அகற்றுவதே உத்தமமென்று ஆஞ்சநேயர் சொல்ல, அப்படியே செய்வோமென்று சகலரும் சம்மதித்து அந்தக்ஷணமே பிரயாணப்பட்டு நடந்தார்கள். அவ்வாறு மகிழ்ச்சியுடனே ரகுநாயகன் தனுகோதண்டத்திற் பூட்டியெய்தபாணத்தைப்போல அதிவேகமாய் ஆகாசத்திலே தாவிப்பாய்ந்துபோய்ச் சூரியன் உச்சியில்வருகின்ற சமயத்தில் மதுவனத்தில்வந்துசேர்ந்து அதிலேதங்கினார்கள்.

அந்தவனத்தில் நெருங்கிய மாக்கொம்புகளிலெல்லாம் அபரிமிதமாகத் தேன்கூடு கட்டியிருக்கக்கண்டு அந்தத்தேனை யுண்ணவேண்டுமென்று ஆசைகொண்டு வானரவீரர்கள் வைதேகியைத்தேடிவந்து வெகுநாளாய்விட்டதென்று எங்கள் மனத்துக்குச் சஞ்சலமுண்டான படியினாலே நாங்களெல்லாம் உணவில்லாமல், இதுவரையிலும் வெகுவாய் வருத்தப்பட்டோம். இப்பொழுது எங்களுக்கு உணவைக்கொடுத்தருளுமென்று அங்கதப்பெருமானிடத்திற் சொல்லிக்கொள்ளுவோம் வாருங்கோளென்று உடனே எழுந்துபோனார்கள். அவர்களில் அநுமானானவர் அங்கதப்பெருமானுக்குச் சமீபத்திற்போய் அவனைக் கைகூப்பிப்பணிந்து தேன்பொருந்திய பூமாலையையணிந்த எங்கள் ராஜசேகரரே கேளும். உம்முடைய வானரசேனை உணவில்லாமல் மிகவும் பசியும் இளைப்புங்கொண்டு ஆயாசமாய் வருத்தப்படுகின்றது ஆகலால், அதற்கு இப்பொழுது இந்தச்சோலையிற்கட்டிய கூடுகளிலிருந்து ஒழுகுகின்றதேனையுண்ணும்படி உத்தரவுகொடுக்கவேண்டுமென்றார். அவன் அப்படியே செய்யலாமென்றுசொல்ல, அதுகேட்டு ஆஞ்சநேயர் வானரங்களைக் கண்காட்டச்சமுத்திரம்நடுங்கும்படிமிகவும் இரைச்சலிட்டுக்கொண்டுபோய், தேன்கூடுகள்தொங்குகின்ற அந்தச்செழுமையான வனத்திற்குள்ளே இந்தக் குரங்குகளெல்லாம் பிரவேசித்துத்தேனையுண்ணும்படி வண்டுகள்வந்துமொய்ப்பதுபோல, எங்கும் மொய்த்துச் சுற்றித்தொடர்ந்து ஒன்றன்முன்னேயொன்றுபாய்ந்து மரக்கிளைகளை ஒடித்துத் தேன்கூடுகளை அழித்து அவற்றிலுள்ள தேனைக்குடித்துக் களிகூரத்தலைப்பட்டன. வானரவீரர்களில் ஒருவர்வாயைத்திறந்து உண்ணப்போகின்ற தேனை அந்தச்சமயத்தில்மற்றொருவர்வந்து எளிதாக உண்டுவிட்டுப்போவார். ஒருவர் பிரயாசப்பட்டுக் கையினால் அழித்தெடுத்ததேனை ஒருவர் பிரயாசமில்லாமல்வந்து அபகரித்துக்கொண்டு ஓடிப்போவார். ஒருவருடனேயொருவர் உடலும் உடலும் நெருங்கும்படிக் கட்டித்தழுவித் தேனுண்டமயக்கத்தால் தரையில்விழுவார். ஒருவர்மேலொருவர் ஓடிப்போயேறிக்கொண்டு அதிசந்தோஷத்தையடைவார். இந்தப்பிரகாரம் மட்டிலாத மதுவைக்கொள்ளையிட்டுக் குடித்துக்களித்துச் சம்பிரமமாய்க் கூத்தாடும்போது அந்தவனத்திற்குக் காவலாயிருந்த வானரர்கள் கண்களைத்தீப்பறக்க விழித்துச் சீறியெ

ழுந்து அவர்களை எதிரிட்டுச் சூரியகுமாரனாகிய சுக்கிரீப மகாராஜாவினுடைய ஆஜ்ஞையைத்தடுத்து நீங்களெல்லாம் என்னநினைத்து என்னசெய்தீர்கள். உங்களுயிருக்கு முடிவுவந்துவிட்டது. இந்தச்சமாசாரத்தை எங்கள் எஜமானறிந்தால் எங்கள்மேல் கோபஞ்செய்வானே நாங்களென்னசெய்வோமென்று சொல்லிவிட்டுப்போய், தங்களுக்கு அதிபதியாகிய ததிமுகனென்ற வானரனுடனே நம்முடைய வனத்தைக் குரங்கின் சேனைகள்வந்து இப்பொழுது அழித்துவிட்டன; அந்தச் சத்துருக்களுடைய செய்கைக்குப் பிரதிபாகச் செய்யத்தக்கது இனி எங்களாலில்லையென்று முறையிட்டுக்கொண்டார்கள். அதுகேட்டு அந்தத்ததிமுகன் மதுவனத்தை அழித்தவர்கள் ஆர்? அவர்களைக் காட்டுங்கோள் பார்ப்போமென்று புறப்பட்டான். அவர்கள் ஐயா! வாலிகுமாரன்முதலான வானரர்கூட்டம்வந்து நிழலுக்குத்தங்கியது. பின்பு அங்கதனுடைய ஏவலினாலே அந்தக் குரங்கின்சேனை மரக்கிளைகளிற்பாய்ந்து தேன்கூடுகளையெல்லாம் நிர்மூலமாக்கியதுகண்டு நாங்கள்போய் அதனைத் தடுத்தோம்! எங்களைப் பேசப்படாத வம்புவார்த்தை பேசி இடக்குப்பண்ணிக் கைகளைக்கொண்டு ஓங்கியடித்ததனால்மிகவும் எங்களுடம்பு நொந்தோம் ஆண்டவனேயென்றுசொல்லவே, ததிமுகன் அடடா தன் தந்தையாகிய வாலி நாசமாய்ப்போனதை அவன் பிள்ளையாகிய இந்த அங்கதனென்ன அறியாதவன்போலிருக்கிறானென்றுசொல்லி, நெருப்பைப்போலப்பொங்கி, அவ்விடம்விட்டு எழுந்து இரண்டுகோடி வானரங்கள் கல்லென்று ஆர்ப்பரித்து நெருங்கிச்சூழ்ந்துவரும்படி மதுவனத்திற்குள்ளேவந்து நுழைந்தான். அங்கே மதுவையுண்டு கொண்டிருக்கின்ற வானரசேனையானது பயந்து எழுந்து ஸ்ரீகோதண்டதீக்ஷா குருவைவாழ்த்திக்கொண்டே ஓடிப்போய் வாலிபுத்திரனுடைய பாதத்தில்விழுந்தது. அப்பொழுது ததிமுகன் அங்கதனைப்பார்த்துச் சொல்லுகின்றான். கேளாய் அங்கதனே! தேவேந்திரனானவன் வாலிக்குக்கொடுத்த உசிதமாகிய இந்த மதுவனமானது தேவர்களுங் கண்களைவிழித்துப் பார்க்கிறதற்கு அரிதாக என்னாலே காவல்செய்யப்பட்டிருக்கின்றது. இப்படிப்பட்டஎன்னுடைய ஆஞ்ஞையை நீ அசட்டைபண்ணினாய் இதற்கு உடையானாகிய சுக்கிரீபமஹாராஜனோ லேசானவனல்லன். அவனுடைய பராக்கிரமத்தைச் செவ்வையாயாலோசித்துப்பார்? ஓகோ! உன்னுடையவாழ்வு இன்றைத்தினத்துடனே முதலற்றுப்போய்விட்டது. இப்படிப்பட்ட திவ்வியமானவனத்தை நீ வானரங்களை ஏவி அழித்துவிட்டாயல்லவா? என்று கொதித்துக் கொக்கரித்து அந்தக்ஷணமே ஒருபெரிய கருங்கற்பாறையை அடியோடே பேர்த்தெடுத்து அங்கதன்மேல் விசையாக விட்டெறிந்தான். அதைப் புறங்கையினாலே தட்டிவிட்டு வாலிகுமாரன் கோபித்தெழுந்து ததிமுகனைக் கெட்டியாய்ப்பிடித்துத் தன் கைவிரலை முடக்கிக்கொண்டு கொம்கொம்மென்பதாகக் குத்தி, வாயின்வழியே இரத்தஞ்சோரும்படிப் பிரமிக்கப்பின்னும் அடித்து, இந்தச்செய்தியைப் போய்ச் சுக்கிரீபனுக்குச் சொல்லென்று அவனைத்துரத்திவிட்டு, கோபாக்கினி ஜொலிக்கும்படி அவனுடைய சேனைகளைப் பற்றிக்கட்டி அனற்பொறிபறக்க நன்றாய்க் குத்திக் குமையுங்கோளென்று

தன்சேனைவீரர்களுக்கு உத்தரவுசெய்தான். அந்த உத்தரவு வாயிலிருந்து வெளிப்படுகிறதற்குள்ளே வானரவீரர்கள் அவர்களை ஓடிப்போய்ப் பிடித்து வந்து காட்டிலேபடர்ந்திருக்கின்ற கொடிகளை அறுத்துத் தோளழுந்தக்கட்டி முன்பக்கத்திலும் பின்பக்கத்திலும் இருப்புலக்கையினால் இடிப்பதுபோல இடியும் அஞ்சியோடும்படிப் பலம்பொருந்திய கைகளால் இடித்தார்கள். அது பொறுக்கமாட்டாமல் சோலைக்காவலாளர்கள் முதலாகிய வானரர்கள் சரீரம் துடித்துக்களைத்து விழுந்ததுகண்டு நீங்களும் போய்ச்சொல்லுங்கோளென்று அங்கதன்சொல்ல, அதிபயத்துடனே அவர்களும் எழுந்து அலறிக்கொண்டே ஓடினார்கள். பின்னும் ஜலத்திலேமூழ்கி விளையாடுகிறவர்களைப் போலக் கூடுகளிலுள்ள தேனையன்றிக் கனிகளிலுள்ளதேனையும், புஷ்பங்களிலுள்ள தேனையும் நிறையக்குடித்து அவற்றிலேதானே மூழ்கிவிளையாடித் தங்கள்தங்கள்தலைவர்களுக்கும் அந்தத்தேனையும்கனிகளையும்கிழங்குகள் சாகங்களையும், கொண்டுபோய்க்கொடுத்து, அவர்களையும் உண்ணும்படிச்செய்ய யாவரும்உண்டுதேக்கி வருத்தமாறிச் சூரியனுடைய வெயிலின் உஷ்ணந்தணிந்த வுடனே போகலாமென்று பொழுதைப் பார்த்துக்கொண்டு மதுவனத்திற்கு அடுத்த உபவனத்தில் இருந்தார்கள்.

அவர்கள் அப்படியிருக்க; சூலாயுதத்தை ஏந்திய சங்கரனாலும் முடிப்பதற்கு அரிதாகிய பெருங்காரியத்தைமுடித்து, ஸ்ரீராமதூதராகிய சாதுரியத்தையுடைய ஆஞ்சநேயர்மீண்டு வந்ததுவரையில் அந்தத்தென்றிசையில் நடந்தசரித்திரங்களையெல்லாம் நாம் அறிந்தமாத்திரஞ்சொன்னோம். சுவாமி விஷயமாயிவ்விடத்தில் நடந்தவற்றையெல்லாம் இனிச்சொல்லத் தொடங்கினோம். சுக்கிரீபனானவன் அநுமான்முதலாகிய வானரசைநியங்களைச்சீதாபிராட்டியாரைத் தேடிவாருங்கோளென்று நான்கு திக்கி னிடங்களிலும், அனுப்புவித்து ரிசியமுகபர்வதத்திலிருந்து ஸ்ரீராமபிரானை இனிமையாகிய நல்ல சொற்களினாலே தேற்ற அந்த ஸ்ரீகோதண்டபாணியானவர், அடிக்கடிச் சோர்ந்து சோர்ந்து அப்படி மூர்ச்சிக்குந்தோறும் அநேகமாயிரம் உயிருடையவர்போலத் தெளிவுவந்து உயிர்த்தெழுந்திருப்பார். மறுபடியும் சீதாபிராட்டியாரை நான்குதிக்கிலும்தேடப்போன வானரவீரர்களில்வடக்கு கிழக்குமேற்காகிய மூன்றுதிக்கிலும்போனவர்கள் நாங்கள் காணவில்லையென்று வந்துசொன்னசொல்லால, உடலுக்குள்ளே உயிருண்டு இல்லையென்னும்படிச் சோகிப்பார். பின்னும் தெற்குத்திசைக்குப் போயிருக்கின்றவர் ஆஞ்சநேயரல்லராவென்று அவரைத்தமது திருவுள்ளத்திலே நினைத்துக்கொண்டு சூரியகுமாரனாகிய சுக்கிரீபனைப்பார்த்து அப்பா! சுக்கிரீபா! நாம்செய்த எத்தனங்களெல்லாம் அநுகூலமாகவில்லை. அபகீர்த்திக்கிடமாயிற்று. நாம் குறித்துச்சொல்லிய நாள்களெல்லாங் கழிந்துபோய்விட்டன. மூன்று திக்கிலுந் தேடப்போனவர்களோ வந்துசேர்ந்தார்கள். தென்றிசையை நோக்கித் தேடப்போனவாகள் மாத்திரம் இதுவரையிலும் மீண்டு இவ்விடத்திற்கு வரவேயில்லை. ஆகையால் அவர்கள் இறந்துதான் போனார்களோ? அல்லது அவர்களுக்கு மற்றென்ன ஆபத்துத்தான் சம்பவித்ததோ? அல்லது ஒருவேளை

சீதை மாண்டுபோய், இவள் மாண்டுபோன சமாசாரத்தை மீண்டுபோய் அவர்களுக்கு எப்படிச்சொல்லுகிறது? இதைவிட நாமும் மடிந்துபோகிறதே நல்லதென்று துக்கத்தினாலே தாங்களும் பிராணத்தியாகம் பண்ணிக்கொண்டார்களோ? அல்லது இன்னமுந் தேடிக்கொண்டே திரிகிறார்களோ? அல்லது இராக்கதரைக்கண்டு கோபமதிகரிக்கச் சண்டைசெய்து அவர்கள்செய்த வஞ்சனையாகிய மாயையினால் மாய்ந்து வீரசுவர்க்கமடைந்தார்களோ? அல்லது எக்காலமும் மீளாத அருஞ்சிறையில் அகப்பட்டுக்கொண்டார்களோ? அல்லது நமக்கு நியமித்துச்சொன்ன தவணைநாளுக்குள்ளே சுக்கிரீவன்முதலானவர்க ளிருக்குமிடத்தில் நாம்போய்ச் செய்திசொல்லுகிறதற்கில்லையே ஆதலால், அங்கேபோக லச்சையாயிருக்கிறதென்று நினைத்து இன்பதுன்பங்களைத்துறந்து தபசுதான் செய்கிறார்களோ? அல்லது இவையெல்லாமல்லாமல் அந்த அநுமான் முதலானவர்களுக்கு வேறே என்ன சம்பவித்ததோ? நீ சொல்லென்று, இப்படி அநேகவிதத்திற்சொல்லிச் சுவாமியானவர் விசனப்படுவார்.

அப்படியிருக்கிற தருணத்தில், ததிமுகனென்பவன் தன்பின்னே அடித்துத் துரத்தப்பட்ட இரண்டுகோடி வானரர்களும், அழுது கூச்சலிட்டுக்கொண்டுவரச் சுக்கிரீவமகாராஜனுக்கு முன்பாக, தலையிலிருந்து ஒழுகிப்பாய்கின்ற உதிரத்துடனேவந்து இரண்டுகைகளையுங்கூப்பி வணங்கி எழுந்துநின்று ஐயா! இன்றைத்தினத்துடனே நம்முடைய மதுவனமழிந்ததென்று சொன்னமாத்திரத்தில், ரக்தம் ஒழுகுகின்ற அவன்முகத்தைப்பார்த்து அப்படிச் செய்தவர்கள் ஆர் சொல்லென்று சூரியகுமாரன்கேட்க, நீலனென்பவனும், குமுதனென்பவனும், மலைபோலுயர்ந்த தேகத்தையுடைய ஜாம்பனென்பவனும், சமுத்திரம்புரண்டுவந்து மூடிக்கொண்டதுபோல வெகுவானரசேனைகளும் மேலிட்டுவந்து, நமது மதுவனத்தை அழித்தன. இப்படிச் செய்யவேண்டாமென்றுபோய்த்தடுக்க, சேனைகளை அடித்துத்துரத்தி வாலிகுமாரனாகிய அங்கதன் உம்மையும் இகழ்ந்துபேசினான். அவனுக்கு இஷ்டமானபடிக்கெல்லாஞ் சொன்னசொல் எங்களுக்குச் சகிக்காமல் செவிதீய்ந்து முகம்புதைந்து மனம்வெதும்பி இமைப்பொழுதுக்குள்ளே, ஒருகருங்கற்பாறையைப் பேர்த்தெடுத்து வாலிபுத்திரனுடைய சீரஞ்சிதையும்படிஎறிந்தோம். அதைப் புறங்கையால் தடுத்துவிட்டு, மூங்கிற்காடு பற்றியெரிந்தாற்போலக் கோபத்தாலெரிந்து என்னைப்பிடித்து உயிர்பதைக்கும்படிக் குத்திக் குமைந்து நீ யெவ்விடத்திற்போய்ச் சொல்லிக்கொள்ள வேண்டுமோ? அவ்விடத்திற் சொல்லிக்கொள்ளென்று அனுப்பிவிட்டானென்று ததிமுகன் சொன்னான். கேட்டவுடனே சுக்கிரீபமகாராஜன் அதிக ஆனந்தத்தோடு எழுந்துநின்று சேஷசாயியாகிய சாக்ஷாது ஸ்ரீராமனைச்சேவித்துச் சுவாமி! அங்கதன் முதலானவர்களுக்கு இப்பொழுது உண்டாகிய கோபமானது என்தாயாகிய ஜானகி, மகிமைபொருந்திய கற்பழியாதிருக்கிறாளென்று நமக்குத் தெரியச்சொல்லியது. க்ஷேமமாயிருக்கும்படிப் பிராட்டியாரை அவர்கள் பிரத்தியக்ஷமாகக் கண்டார்கள். அந்தச் சந்தோஷத்தினாலேதான் மதுவனத்தை யழித்து அதிலுள்ள

தேனைக்குடித்து விளையாடினார்கள். ஆகையால் தேவர்பெருமானாகிய ஸ்ரீரகு நாயகனே! இனித் தேவரீர்சந்தேகித்துக் துக்கப்படவேண்டுவ தில்லையென்று விண்ணப்பஞ்செய்ய, அதைத் திருச்செவி சாத்தியருளிய எங்கள் தந்தையாகிய ஸ்ரீராமபத்திரர், தெற்குத்திசைக்குப்போனவர்கள் வந்தார்கள். இனி அவர்களென்னசெய்தி சொல்லுவார்களோ எல்லாம் அறியலாமென்று தமது திருவுளத்திற் குறித்துக்கொண்டு இருந்தார். சுக்கிரீபன் அடிபட்டுச் சரீரம் நொந்துவந்த ததிமுகனுடைய முகத்தைப்பார்த்து, அவ்விடத்தில் வந்திருக்கிறவர்கள் ஆரார் சொல்லென்றுகேட்க, அநுமான், அங்கதன், மயிந்தன், ஜாம்பவந்தர் முதலாகப் பதினேழு வானரசிரேஷ்டர்கள். கடலும் நாணும்படி, அதிலும் அதிகமாக ஒலிக்கின்ற சேனைகளையுடையவர்களாய் வந்திருக்கின்றார்களென்றுசொல்ல, அச்சமயத்தில் வானராதிபதி ஒருபோதும் ஆஜ்ஞை தவறாதவனாயிருந்தும் அவனுக்குச்சுவாமிகாரியம் அநுகூலப்பட்டதுவே விசேஷமாகையால் அவர்கள் தன் பிராணனுக்கு ஒப்பாகிய மதுவனத்தை அழித்தார்களென்று கேள்விப்பட்டும், அதைக்குறித்து எள்ளளவும் க்ஷாத்திரமில்லாமல் மறுபடியும் அவனைநோக்கிப் புஜபலத்திலுயர்ந்த ததிமுகனே! உனக்கு நான்சொல்லத்தக்கது ஒன்றிருக்கின்றது. என்னவென்றால், அங்கதனனவன் அயோக்கியர்களுக்குரிய அற்பமாகிய செய்கையையுடையவனல்லன். சக்கரவர்த்தித் திருமகனுடைய ஆஜ்ஞையைச் சிரசின்மேல்கொண்டு அவனும், மற்றவானரர்களும் சமுத்திரஞ்சூழ்ந்த பூமி அதிபர்தமும்போய்த்தேடிச் சீதாபிராட்டியாரைக் கொண்டுபோன சத்துருக்களுடனே சண்டைசெய்து ஜயித்து, வீராவேசத்தோடே வந்திருக்கிறார்கள். ஆகையால் அவர்களைக்குறித்து நாமிப்பொழுது என்னசொல்லுகிறது. இது சமயமுமல்ல. அல்லாமலும் உனக்கென்ன தெரியவில்லையா? வாலிகுமாரன் சாமானியனா? இளவரசாயிருக்கிறவனாகையால் அவன் நாம் கேட்டகேள்விக்குத் தாழ்ந்து உத்தரவுசொல்லுகிறது அருமை; இப்படிக்கெல்லாம் தர்மசங்கடமாயிருக்கிறபடியால், நீ யொன்றும் யோசிக்கவேண்டா; உனக்கு உறுதியைச் சம்பாதித்துக்கொள்ளவேண்டுமென்று மனமிருந்தால் அவனிடத்திற்போய் இப்பொழுதே சரணமடையென்று சுக்கிரீபன்சொல்லவே, அதற்குத் ததிமுகன் ஒன்றுஞ்சொல்லாமல் வாயை மூடிக்கொண்டு அவனுக்குத் தலைவணங்கித் தண்டமிட்டு மனமெலிந்து சரீரமொடுங்கி அங்கிருந்துபுறப்பட்டு, தன் சேனைகளுடனே திரும்பி அந்த உபவனத்திற்குவந்தான். அவனை வாலிகுமாரன்கண்டு அதிககோபம் உதிக்கும்படி ஓடிப்போய்விட்டவன் மறுபடியும் வந்தபடியினாலே, இவனைச் சித்தமாய்க் கொன்றுவிடுவோமென்று நினைத்தான். அச்சமயத்தில் ததிமுகனனவன் ஐயா! நான் உம்முடைய அடிமையாகையால் என்னைரட்சிப்பது உமதுகடனே யாகுமென்று கைகுவித்துப் பணிந்து எதிரேநின்று, வாளைக்கொண்டு உமது மார்பைப் பிளந்ததுபோல மனவாக்குக் காயங்களினாலே நான்செய்த குற்றங்களையெல்லாம் பொறுத்துக்கொள்ள வேண்டுமென்றுசொல்லி, அங்கதப்பெருமானுடைய காலில்விழுந்தான். விழுந்தபொழுது கோபந்தணிந்து ததிமுகன் கையைப்பிடித்துத்தூக்கி மார்பிறுகத்தழுவிக்கொண்டு, நான் உம்முடைய

விஷயத்தில்செய்த குற்றங்களை நீரும் பொறுத்துக்கொள்ள வேண்டுமென்று விசேஷமாகச்சொன்னான். பின்பு அநுமானைநோக்கி அன்று எங்களுக்குச் சுக்கிரீபமகாராஜா சொன்னநாள் கழிந்துபோனதைக்குறித்து நாங்களிறந்து போம்படி யத்தினப்பட்டதையறிந்து, எங்களை இவ்விடத்திலே யிருக்கச் செய்து லங்கைக்குப்போய்வந்து எங்களுடைய கலக்கத்தை நீக்கி ரக்ஷித்ததுபோல, இப்பொழுது புண்டரீகாக்ஷராகிய ஸ்ரீராமச்சந்திரருடைய துக்கத்தையும் ஆற்றும்படி நீர் முன்னாகப்போமையா ஆஞ்சநேயரேயென்று அங்கதமகாராஜன் சொல்ல, அவனைவணங்கி இதுவே என்பாக்கியமென்று போனார். அவர் போனபின்பு சூரியனுடைய கிரணோஷ்ணந்தணிந்தவுடனே அங்கதன் முதலானவர்கள் மகாபராக்கிரமத்தையுடைய ஆஜ்ஞாசக்கிரத்தைச் செலுத்துகின்ற நம்முடைய சுக்கிரீபமகாராசாவும், நாம் அவர்விஷயத்திற்செய்த அபசாரத்தைக்குறித்து நம்மேல் அவருக்கு உண்டாகிய கோபமாறினர். சூரியனுந் தனது வெப்பமாறினான். ஆகையால் யாவரும் இனி யவரிடத்திற்குப்போவதே நலமென்றுநினைத்து முன்பு தாங்கள் அந்த வானராதிபதியின் சோலையை அழித்து, அதற்குக் காவலாயிருந்தவர்களையும் அடித்துத் துரத்தினதைப் பற்றி அவரென்ன ஆஜ்ஞைசெய்வாரோவென்று, நடுநடுங்கிப் பயப்பட்டிருந்த வருத்தம் நீங்கினவர்களாயெழுந்து நடக்கத் தலைப்பட்டார்கள். இப்பால் ஸ்ரீராமபத்திரர் சூரியபுத்திரனைப்பார்த்து இப்பொழுது தென்றிசையிலிருந்து வருகின்ற வானரவீரர்கள் ஜானகியை மெய்யாய்க்கண்டோமென்று சொல்லுவார்களோ! அவ்விடத்தில் இல்லையென்றேசொல்லுவார்களோ! எனக்கு ஒன்றுந்தோற்றவில்லை அப்பா நீசொல்லென்றுகேட்டார். இப்படிச் சொல்லிக்கொண்டிருக்கும்போதே ஸ்ரீராமதூதராகிய ஆஞ்சநேயரும் சூரியனனவன் தெற்குத்திசையில் உதயமானதுபோல, தமது திவ்வியசொரூபமானது பிரகாசிக்கும்படிக் காணப்பட்டார். அவரைக்கண்டு சுக்கிரீபன் இதோ அநுமான்வந்தானென்று சொல்ல, சுவாமியானவர் இதயத்தில் அதிகமாகிய அன்பு உதிக்கும்படிப் பார்த்தருளினர். அப்படிவந்த ஆஞ்சநேயர் சுவாமியினுடைய பொன்னடியைத்தொழாமல் தாமரையாசனத்தைவிட்டு நீங்கி லங்காதீபத்தில் எழுந்தருளியிருக்கின்ற பிராட்டியாரைச் சிரசின்மேற் கைகளைக்கூப்பித் தென்றிசையை நோக்கிச் சேவித்துக்கொண்டே, சமீபத்தில்வந்து பூமியில் கரசரணாதி அவயவங்கள் தோயும்படித்தாழ்ந்து மகத்தாகிய பயபக்தியுடனே சாஷ்டாங்கமாகத் தண்டம் சமர்ப்பித்தார். அந்தமகாபலிஷ்டராகிய வாயுகுமாரருடைய செய்கைகளையும் முகக்குறிமுதலானவற்றையும் நன்றாகப்பார்த்து, வண்டின்கூட்டத்தையும் கருமணலையும் ஒத்த அளகபாரத்தையுடைய ஜானகி க்ஷேமமாய் இருக்கின்றார். இந்தஅநுமான் அவளைக்கண்டதும்உண்டு, அவளுடைய பதிவிரதா தர்மமும் சிதையவில்லையென்று, சகலத்தையும் குறிப்பினலறியத்தக்க திறத்தையுடைய சீதாபதியானவர் தெரிந்துகொண்டார். இவ்வாயுபுத்திரனுடைய குறிகுணங்களே பிரமாணமாகுமென்று அவற்றினால் தமது அதிசூட்சுமமாகிய பேறறிவைக்கொண்டு, நடந்தகாரியங்களையெல்லாம் அறிந்துகொண்டமாத்திரத்தில் தோள்கள்பூரித்தன. கண்களினின்றும் ஜலம்

பெருமின. நீங்குதற்கருமையாகிய துக்கமும்நீங்கியது. கொடியளவில்ஆசையா னது அதிகரித்தது. அப்பொழுது மாருதியானவர் சுவாமியைநோக்கித்தேவர் பெருமானாகிய கோதண்டபாணி! கண்டேன்கண்டேன் கற்பின்பூஷணத்தைக் கண்டேன். கருணாநிதியைக் கண்டேன். குணாத்னத்தைக்கண்டேன், ஜகன் மாதாவைக்கண்டேன்·ஜானகியமிர்தத்தைதென்சமுத்திரத்தின்மத்தியிலுள்ள லங்காபுரியில் எழுந்தருளியிருக்க அடியேன் கண்ணாரக்கண்டேன், இனித்தேவ ரீர் திருவுளத்திற்சந்தேகங்கொள்ளவேண்டுவதில்லை. நெடுநாளாகக்கொண்டிரு ந்த துயரத்தையும் கைபற விட்டுவிடுமென்றுசொல்லி, மறுபடியும் ரகுநந்தன னைப்பார்த்துச் சீதாபிராட்டியானவர் உம்முடைய மகிமைத்திருத்தேவியென் கின்ற உரிமைக்கும்,உம்மைப்பெற்றபிதாவாகிய தசரதசக்கரவர்த்தியினுடைய முதன்மைச்செல்வ மருமகளென்கின்ற பெருமைக்கும், ஜனகமகாராசாவி னுடைய அருமைத் திருமகளென்கின்ற ஒருமைக்கும் தக்கவர். எனக்குச் சாக்ஷாதுதெய்வமாய் விளங்கியிருக்கின்றவர் ஐயா, இன்னமும் அந்த மிருது பாஷியினுடைய குணநிசயத்தை நாயே னறிந்தமாத்திரஞ் சொல்லுகிறேன் சற்றேதிருச்செவிசாத்தியருளும்,களங்கமற்றபொன்னுக்குச்சமானம்,அந்தபொ ன்னேயல்லாமல்வேறில்லை அதுபோலமிகவும் பொறுமையையுடைய எம்பிரா ட்டியார்க்குச் சமானம் அவரேயல்லாமல் வேறில்லையென்கிற நன்மையைத் தான் கைக்கொண்டார். அவருக்குப் பிராணநாயகராக வாய்த்த உமக்குச் சமானம் உம்மையல்லாமல் வேறிலலை என்கிற மேன்மையை உமக்குக்கொடு த்தார். எனக்குச்சமானம் என்னையல்லாமல் வேறில்லை என்கின்ற கீர்த்தியை எனக்குத்தந்தார். மேலும் கீர்த்திக்குத்தாமொருவரே உரியவராயிருக்கின்ற என் அன்னையானவர் தேவரீருடையகுலத்தைத் தேவரீருக்கு உரித்தாக்கி,தம் முடைய குலத்தைத் தமக்குரித்தாக்கிக்கொண்டு தம்மை இப்படிப்பிரித்தெ டுத்துக்கொண்டுபோய்த் தமக்குக் கிலேசத்தைக்கொடுத்த ராவணனிராக்ஷசர் குலத்தை எமனுக்கு உரித்தாகக்கொடுத்துத் தேவர்கள்குலத்தை அவர்களு க்குஉரித்தாகவாழ்வித்துஎன்குலத்தை எனக்குக்கடாக்ஷித்தருளினர்.இதைப் பார்க்கிலும் அவர்வேறென்ன உதவிசெய்யவேண்டும், வில்லைத்தாங்கிய உன் னத புசத்தையுடைய ஸ்ரீரகுவீரரே அந்த லங்காதீபத்திலே தபசு செய்து கொண்டிருக்கின்ற சானகிபோலை நான்காணவேயில்லை. பின்னை யென்னதான் நீகண்டாயென்று கேட்பீரானல் குடிப்பிறப்பென்பதொன்றும் பெருமை யென்றதொன்றும் கற்பென்பதொன்றும்ஆகியஇம்மூன்றும் சந்தோஷித்து நட னஞ்செய்திருக்கக்கண்டேன். அந்த அகிலநாயகியாருடைய கண்ணினிடத்தி லும் நீரிருக்கின்றீர். கருத்தினிடத்திலும் நீரிருக்கின்றீர். வாக்கினிடத்திலும் நீரிருக்கின்றீர். ஸ்தனத்தினிடத்திலும் நீரிருக்கின்றீர், மன்மதனெய்த புஷ்ப பாணத்தைத்த ஆறுதபுண்ணினிடத்திலும் நீரிருக்கின்றீர். இப்படிக்கெல்லா மிருக்கும்போதே உம்மைவிட்டு அந்தமகராசியானவர் பிரிந்தாரென்று நீர் சொல்லுகிறதும் அந்தப்பாக்கியசாலியாரைவிட்டு நீர்பிரிந்தீரென்று அவர்சொ ல்லுகிறதும் என்னகாரணமையா இது ஒவ்வாதுஒவ்வாது, தவமானதுசெய்த தவமாய்விளங்குகின்ற வைதேகியாரென்ற சீதையானவர் லங்கையென்னும்

நகரத்தில் ஒருபக்கத்தில், சூரியன் உதயமாகின்ற காலமும் அஸ்தமிக்கின்ற காலமும்தெரியாமலிருக்கும்படிப் பூமிதொட்டு ஆகாசபரியந்தம் செழுமையாய் உயர்ந்து நெருங்கிவளர்ந்துநிறைந்து சூழ்ந்துசுவர்ணமயமாயும்,நவரத்னகசிதமாயும் பிரகாசிக்கின்ற அழகாகிய ஒருசோலைக்குள் தேவரீருடையதிருத்தம்பியாராகிய இளையபெருமாள் சிரமப்பட்டு, தர்ப்பைப்புல் முதலானவற்றைக்கொண்டு விநோதமாகக்கட்டிய பர்னசாலையின்நவிடல் எழுந்தருளியிருகின்றார்.

பிரபஞ்சங்களையெல்லாம் சிருஷ்டித்த பிரஹ்மதேவன் பூர்வகாலத்தில் உன்னிடத்தில் இஷ்டமில்லாதவள் எவளையாவது நீ பலாத்காரமாய்த் தொடுவையேயானால் உன்சிரசு சகஸ்திரபத்தலாக வெடிக்கப்பட்டு நீ உயிர்மாய்ந்து போவாயென்று தனக்குக் கொடுத்த சாபத்தை நினைத்து ராவணனனவன், விசேஷமாகிய மகத்துவத்தைப்பெற்ற கற்புக்கரசியென்னும் பிராட்டியாருடைய புண்ணியமே ஒருவடிவெடுத்ததுபோல விளங்குகின்ற அருமைத் திருமேனியை, கொடுமையைச் செய்கின்ற தன் முருட்டுக்கைகளால் தீண்டுகிறதற்கு அஞ்சினவனாய், மண்ணினுடனே பெயர்த்தெடுத்துக் கொண்டுபோனான். அவன் எதார்த்தமாகத் தீண்டவேயில்லையென்பதற்கு, அண்டகடாகம் பிளந்துபோகாமலிருப்பதும், ஆதிசேஷனுடைய தலை கிழிந்துபோகாமலிருப்பதும், சமுத்திரம்பொங்கி வாராமலிருப்பதும், வேதம் இறந்துபோகாமலிருப்பதுமே, சாட்சியாகப் பார்த்துக்கொள்ளும். அவன் தொட்டிருந்தால் இவையெல்லாம் இன்னமும் நிலைகுலையாமலிருக்குமா? அப்பொழுதே நாசமாய்ப் போய்விடாவா? பெண்ணாய்ப் பிறந்தவர்களுக்குள்ளே உம்மைக்காணாமையால் சோகத்தை யடைந்திருக்கின்ற அந்தப்பிராட்டியார் ஒருவர் கற்பழியா திருக்கின்றதனால், இந்திராணி சரசுவதி முதலாகிய தேவஸ்திரீகளும் முன்னிலும் இப்பொழுது அதிகச் சிறப்பினையுடையவர்களானார்கள். சிவனுடைய வாமபாகத்திலிருக்கின்ற பார்வதியும் இனி அவனது சிரசிலிருக்கத்தக்க ஆதிக்கத்தை யுடையவளானாள். ஸ்ரீமகாவிஷ்ணுவினுடைய திருமார்பில் எழுந்தருளியிருக்கின்ற மகாலட்சுமியும் இனியந்தப்பகவானுடைய சகஸ்திர சிரசுகளிலும் இருக்கத்தக்க சுவாதீனத்தை யுடையவளானாள். லங்கைமுழுமையுந்தேடித் தசக்கிரீவனுடைய அரண்மனைக்குள்ளேபோய் அங்கிருக்கின்ற ஸ்திரீகளையெல்லாம் ஆராய்ந்து பார்த்துக்கொண்டு அப்புறம்போய், இளந் தென்றல் உலாவும்படி அசைவுற்றுத் தெய்விகமாகிய பரிமளம்வீசுகின்ற புஷ்பச்சோலைக்குள்ளேபுகுந்து பார்க்குமளவில் அவ்விடத்தில் தெய்வப்பெண்போல எழுந்தருளியிருக்கின்ற ஜானகியாரை அவர் உம்மைவிட்டுப் பிரிந்ததைக்குறித்துத் திருவுளமெலியும்படி அழுது புலம்புதலால், பெருகிப் பாய்கின்ற கண்ணீராகிய கடல் நடுவே கண்டேன். அங்கே எண்ணிக்கையில்லாத கோர ரூபத்தையுடைய ராக்ஷசஸ்திரீகளும் விகாரமாகிய பேய்க்கூட்டங்களும் சுற்றிலும் காவலாயிருந்து, யாவரும் பயப்பிராந்தி கொள்ளும்படி செருக்குற்றுச்செய்கின்ற உபத்திரவத்தைக்கண்டு திருமேனிநடுங்கிப் பதைக்கத் துக்கமென்பதுவே ஒருபெண் வடிவுகொண்டு சிறையிருப்பதுபோ விருக்கின்றார். மேன்மையான கற்புடைய பெண்ணரசியாகிய அந்தப்பிராட்டியார்

உம்மிடத்தில் மாறாது வைத்திருக்கின்ற ஆசையைக்குறித்து யோசிக்கும்போது, பார்க்கின்றவர்களுடைய கண்களுக்கு வெறுப்பில்லாமல் இன்னமும் பார்க்கவேண்டுமென்று விருப்பங்கொள்ளத்தக்க கட்டழகுடையவராகிய நீரொருவர்மாத்திரமே, உலகத்தில் புருஷர்களாய்ப்பிறந்தவர்களுக்குள்ளே மகா பாக்கியத்தைப் பெற்றவரா யிருக்கின்றீர். முன்பு தங்கள் நேத்திரங்களால் தரிசியாதவர்களா யிருந்தாலும் அந்த லங்கைக்குத் தலைவனாகிய ராவணனுக்குரிய ராக்ஷசஸ்திரீகளும், அங்குள்ள பலவித தேவஸ்திரீகளும் பிராட்டியாருடைய திவ்விய திருமேனியையும் கற்பையும் கண்டவுடனே அவளை லோகநாயகியென்று நிச்சயம்பண்ணிக்கொண்டு அவருடைய சுவாசமும், பிராணனும் க்ஷணந்தோறும் அகத்திலும் புறத்திலும் போவதும் மீள்வதுமாயிருப்பது கண்டு சகிக்காமல் ஐயோ! இந்த ஜகதீசுவரிக்கு இப்படிப்பட்ட விபத்துச் சம்பவித்ததேயென்று தங்கள் பிராணன் போவதும் வருவதுமாய் ஊசலாடும்படிக்குத் துக்கிக்கின்றார்கள். அடியேன் சீதாதேவியாரைக்கண்டு சேவித்துக்கொள்ளத்தக்க சமயம் பார்த்துக்கொண்டிருக்கும்போது, வெற்றிமாலையை அணிந்த வேலாயுதத்தைக் கையிலேந்திய பாதகனாகிய ராவணனானவன், அந்த இடத்திற்குவந்து என் தாயினுடைய திருவடிக்கமலத்தில் தண்டாகாரமாய் விழுந்துசேவித்து நேரிலேநின்று இருபதுகைகளையும் விரித்துக்கொண்டு, தன்குறையைச்சொல்லி இரக்கமாயிரந்தான். அதற்குப்பிராட்டியார் கடோரமானசொற்களால் அவனை நிந்திக்க, அந்தத்துராத்மா கோபித்துக்கொண்டு கொலைசெய்ய எத்தனப்பட்டான். அத்தருணத்தில் ஜானகியாருடைய கற்பும், தேவரீருடைய கடாட்சமும், தர்மமுமென்று சொல்லப்பட்ட இவை மூன்றும்தொடர்ந்து நின்றுகாக்க, அவன் ராக்ஷசிகளைப்பார்த்து நீங்கள்சொல்லிச் சம்மதப்படுத்துங்கோளென்று அவர்களைக் கண்காட்டி ஏவிவிட்டுப்போனான். அவர்களனைவரும் என்னாலே ஜபிக்கப்பட்ட மந்திரத்தினால் உறக்கங்கொண்டுவிட்டார்கள். அவ்வேளையில் என்னம்மையானவர், தன்பிராணனைப் போக்கடித்துக் கொள்ளும்படி நிச்சயித்துக்கொண்டு ஒருகொடியைக்கொய்தெடுத்து மரக்கிளையிலே சுற்றிமுடிந்து, அதைக்கழுத்திலேமாட்டிக்கொள்ளப் போகிற சமயத்தில் இதேது பழிவருகிறதென்று நாயேன்பயந்து சீக்கிரத்திற் போய்த்தடுத்துத் திருவடியிலே சாஷ்டாங்கமாய்ச்சேவித்து, ராமராமவென்று தேவரீர் திருநாமத்தை ஸ்மரித்தேன். அப்போது வஞ்சனைக்குத்தாயகமாகிய ராக்ஷசர்களுடைய மாயச்செய்கை இதுவென்று மனத்திலே குறித்துக்கொண்டு அடியேனைநோக்கி, எளியவளாகிய நானிறக்குஞ்சமயத்தில் தாரக பிரமமந்திரமாகிய ஸ்ரீராமநாமத்தைச்சொல்லி எனக்குமோக்ஷத்தைக்கொடுத்தாயேயென்று, கண்ணீர்பெருகித் திருமுலைகளினிடத்தில் விழும்படி ஆனந்தித்துச்சொன்னார். அப்போது தேவரீர் தெளிவாக என்னிடஞ்சொல்லியிருந்த அடையாளங்களையெல்லாம் நான்சொல்லிப் பின்னும் உம்முடைய தேவியின் திருவுளத்தில், மாறுபாடில்லாம லிருக்கச் செய்யவேண்டுமென்று நினைத்து உமது திருவாழியையும் எடுத்துக்காட்டத் தன் திருக்கண்களாற் கண்டார், அந்நேரத்தில் அந்த மோதிரமானது சீதாபிராட்டியாருக்கு நிரியாண

காலத்தில் உயிரைக்கொடுக்கின்ற சஞ்சீவிமருந்தைப்போலு மிருந்தது. கேளு மையா மகதைசுவரியத்தையுடைய ஸ்ரீராமச்சந்திரரே ? ஜானகியாரிடத்தில் ஒருக்ஷணப்பொழுதுக்குள்ளே இரண்டு அதிசயத்தைக்கண்டேன். அவையெ ன்னவென்றால், தேவரீருடைய பிரகாசம்பொருந்திய ரத்னமழுத்திய திரு வாழியைத் தமது திருமுலையினிடத்தில் ஊன்றும்படி வைத்தணைத்துக்கொ ண்டார். உடனே அவர் உம்மிடத்தில்வைத்த அவாவினாலுண்டாகிய காமாக் கினியால் அதுவெந்து நீராயுருகியது. மற்றும் அவருக்குத் தேவரீருடைய அடையாளத்தைக் காணப்பெற்றோமென்பதாகிய சந்தோஷமும் உள்ளத்தி லுதிக்க அந்தக்குளிர்ச்சியினால், அப்பொழுதே ஆறிஇறுகி முன்னிருந்தபடியே யாய்விட்டது. அடியேன் கொடுக்கும்படி அவர் திருக்கரத்தையேந்தி அன் புடனே வாங்கிய திருவாழியை அது பாபிஷ்டர்களாகிய ராக்ஷசர்களுடைய ஆகுசமான நகரத்தினிடத்திற் கொண்டுவரப்பட்டதேயென்று, ஆயிரங்கலசம் நிறையத் தெய்விகமாகிய கங்காதீர்த்தத்தைக்கொண்டு திருமஞ்சனஞ்செய் ததுபோலத் தமது கண்ணீரினாற்கழுவி, ஏக்கற்றவரா யிருந்தாரேயல்லாமல் திருவாயைத் திறந்து அவர் ஒருவார்த்தையுஞ் சொல்லவில்லை. இளைத்திருந்த திருமேனி பூரித்ததேயல்லாமல் கண்கள் இமைக்கவே யில்லை. அன்றியும் அடிக்கடிப் பெருமூச் செறிந்துகொண்டிருந்தார். அதுகண்டு பிராட்டியாரு க்கு உம்மைவிட்டு அவர்பிரிந்தபின்பு நடந்தசெய்திகளையெல்லாம் சொல்லுங் கிரமப்படியே தெரியச்சொல்லித் தாயே! நீர் எழுந்தருளியிருக்கின்ற ஸ்தா னம் இன்னதென்று தெரியாமையால் இதுவரையிலும் தாமசப்பட்டதென் றுஞ்சொல்லி, தேவரீர் படுகின்ற வருத்தத்தையுந்தெரியும்படி விண்ணப்பஞ் செய்தேன். அதைக்கேட்டுச்சோகமாறித் தமது பிராணன் நிலைக்கப்பெற்றார். அப்பால் இவ்விடத்திலுள்ள சமாசாரங்களையெல்லாம் சம்மதமாகக் கேட்ட ருளினார். அவ்விடத்தில் நடந்த சமாசாரங்களையும் அடிமைக்குத் தெளியும் படித் திருவாய்மலர்ந்தருளினர். மேலும் நான் இன்னம் ஒருமாதமட்டுந் தான் உயிருடனேயிருப்பேன். இதற்குள்ளே சுவாமிக்கு இங்கே விசயம்பண் ணுகிறதற்குத் திருவுள மில்லாவிட்டால் அவசியம் பிராணத்தியாகம் பண் ணிக்கொள்ளுவேன் என்று தேவரீர் எழுந்தருளியிருக்கின்ற திக்கைநோக் கித் தண்டம் சமர்ப்பித்தார். பின்பு தமது பொன்னுடையில் வைத்திருந்த மணிராஜமாகிய விலையில்லாத சூடாமணியை யெடுத்துச் சந்தோஷமாக என் கையிற்கொடுத்தார். இதோ உம்முடைய தாமரைமலருக் கொப்பாகிய கங்க ளாரக் கண்டருளுமையா வென்று வேத சாஸ்திரங்களெல்லாம் எந்தமட்டும் அழியாமலிருக்குமோ அந்தமட்டமழியாத கீர்த்திபுடனே நித்தியத்துவத்தைப் பெற்றிருக்கின்ற ஆஞ்சநேயர் சுவாமிகையிற்கொடுத்தார். அந்தச் சூடாமணி யை ஸ்ரீராமர் தம்முடைய திருக்கையில் வாங்கினமாத்திரத்தில் நாள்தோறும் அவர்திருமேனி வேறுபடக் காமமானது பொங்கி எழுந்தோங்கச் சரீரம்வெ தும்பித் திருவுளமெலியும்படி சம்பவித்திருந்த துக்கத்தைவிட்டுவிட்டார். அம் மை கொடுத்தனுப்பிய சூடாமணியானது கையில்வரப் பெற்றபோது சுவா மிக்கு எப்படியிருந்ததென்றால், பூர்வம் மிதிலாபுரியில் ஓமாக்கினிக்கு முன்

பாகத் தமது கையினால் அந்த ஜானகியாருடைய திருக்காதத்தைப்பிடித்த போது எவ்வளவு சந்தோஷமாயிருந்ததோ அவ்வளவு சந்தோஷமா யிருந் தது. அன்றியும் ரோமங்கள் சிலிர்த்தன. ஆநந்தக்கண்ணீர் பெருகியது. மார் புந் தோளுந் துடித்தன. வெயர்வு துளித்துளியாகத் தோன்றியது. அழகு பொருந்திய வாயிதழ்ப்பதைத்தது. ஆவியானது வருவதும் போவதுமாய்த் திருமேனிபுளகித்தது. அந்தக்குணங்களை அறியத்தக்கவர்கள் ஆரிருக்கின்று ர்கள். அச்சமயத்தில் இரண்டுவெள்ளம் வானரசேனையுடனே அங்கதன் முத லானவர்கள் வந்து ஸ்ரீராமபத்திரனையும் சுக்கிரீபமகாராசனையும் வணங்கிப் போனகாரியம் முடிந்ததைக்குறித்து உண்டாகிய சந்தோஷத்தினால் பூரண சந்திரனைப்போலப்பிரகாசிக்கின்ற முகதேஜஸையுடையவர்களாயிருந்தார்கள். அப்பொழுது சுக்கிரீபர் எழுந்திருந்து சுவாமியைச்சேவித்து, கேளுமையா ரகுநாயகரே! பிராட்டியாரானவர் முன்போல எவ்விடத்தி லிருக்கின்றாரோ வென்று நினைக்கும்படி அருமையாயிருக்கவில்லை. இப்பொழுது காம் காணு கிறதற்கு மிகவுஞ் சுலபமாயிருக்கிறதென்று அநுமான் முதலானவர்கள்வந்து சொல்லியும், காலதாமசமாக இனி இவ்விடத்தி லிருக்கவேண்டிய தென்ன வென்றுசொன்னார். அப்படிச் சொன்னமாத்திரத்தில் சுவாமியானவர் அதி சீக்கிரமாக எழுந்து பிரயத்தினப்பட்டு, நம்முடைய சைநியங்களை லங்கை யைநோக்கிப் பிரயாணப்படும்படி உத்தரவுசெய்யப்பாவென்றார். அவர் அப் படியே உத்தரவுசெய்தார். வானரசைநியம் இந்தக்ஷணமே புறப்படக்கடவ தென்று யாவருக்குந் தெரியும்படிப் பிரயாணபேரி யடிக்கப்பட்டது. அடித்த வுடனே சமுத்திரமானது பொங்கியெழுந்து பூமியில்வந்ததுபோலக் குரங்கின் சேனையானது ஆர்ப்பரித்துக்கொண்டு ரிசியமுக பர்வதத்தை விட்டெழுந்து தெற்குத்திசையைநோக்கிநடந்தது. அப்பொழுது ஸ்ரீராமபிரானனவர் இந்தச் சேனை நாட்டைவிட்டு நாட்டின்வழியேநடந்தால் உலகத்தார் பயந்து பிரமிப் பார்கள். மேலும் இவற்றுக்கெல்லாம் உணவுகிடைக்கின்றதோ பிரயாசமா யிருக்குமென்று நினைத்து இலைகள், துளிர்கள், மலர்கள், காய்கள், கனிகள், கிழங்குகளும், தேன்முதலானவையும், விசேஷமாகக் கிடைக்கத்தக்க வனங் கள் மலைகளின் வழியாய்ப் போகவேண்டுமென்று ஆஜ்ஞாபித்தார். சைநியமா னது நாடுநகரங்களின்மார்க்கமாகப் போகாமல் சுவாமிசொன்ன மார்க்கமாக வேபோயிற்று. அதன்பின்னே வீரதீரத்தையுடைய ஸ்ரீராமரும் லட்சமண ப்பெருமாளும் சுக்கிரீபமகாராஜன் முதலானவர்கள் சூழ்ந்துவர, அநுமான் தென்சமுத்திரத்தின் மத்தியில் மகாமேருசிகரத்தின்மேல் லங்காபட்டண மிருக்கின்ற சிங்காரத்தையும் அங்கே பொல்லாதராக்ஷசர்கள் வெகு ஜாக்கி ரதையுடனே காவலாயிருக்கின்றதையும் கோட்டை கொத்தளங்களின் பல த்தையும் தலைவனுகிய ராவணனுடைய பராக்கிரமத்தையும் உக்கிரமாகிய சேனைகளின் அளவில்லாமையையும் சொல்லிக்கொண்டு தொடரக்கேட்டுக் கொண்டே பிரயாசமில்லாமல் வேடிக்கையாக வழிநடந்தார்கள். அப்படி யே வெகுதூரம் வாநரசேனாதிபதியாகிய சுக்கிரீபனுடனே ஸ்ரீராமலட்சுமணர் கள்போக அவர்களுடனே கூடிக்கொண்டுபோகின்ற வானரசேனாவீரர்கள் பவளமலையி னிடத்திற்போய் ஒரு பகல்முழுதும் தங்கியிருந்து பின்பு புறப் பட்டுப் பன்னிரண்டுகோளிற்போய்த் தென்சமுத்திரத்தைக் கண்டார்கள்.

திருவடிதொழுதபடலம்
முற்றிற்று.

---

**சுந்தரகாண்டம் முற்றுப்பெற்றது.**

---